

# ரமண பெரிய புராணம்

## 75 அணுக்க தொண்டர்களின் பயணம்



பாகம் - 2



**வே. கணேசன்**

ரமண பெரிய புராணம்

2

# ரமண
# பெரிய புராணம்
## பாகம் 2

ஆங்கில மூலம்: வே. கணேசன்
தமிழாக்கம்: திருமதி. அகிலா
ஆழ்ந்த மேற்பார்வை: திரு. கே. வி. சுப்ரமண்யம்

# ஸமர்ப்பணம்

பல ரூபங்களில் வந்து நம் அனைவரையும் அனுக்ரஹிக்கும்
பகவான் ஸ்ரீ ரமண மஹர்ஷிக்கு  நமஸ்காரங்கள்



# பொருளடக்கம்

# முன்னுரை

அருணாசல க்ஷேத்திரத்தில் கருணைக் கடலான ஸ்ரீ ரமண பகவான் வாழ்ந்த காலத்திலேயே, அவரது ஸ்வானுபூதியின் மணம் உலகெங்கும் பரவியது. ஆன்மீக வேட்கை கொண்ட பக்தர்கள் உலகின் பல பகுதிகளிலிருந்தும் அவரை நாடி வந்து அந்த திவ்ய ஸந்நிதியின் விசேஷத்தை அனுபவித்தனர்.

அவ்வாறு பகவான் ஸ்ரீ ரமணரை அணுகி, ஆத்மதேவன் பதத்தில் அனிசம் ரமிக்கும் பேறு பெற்ற அணுக்கத் தொண்டர்கள் பலருடன் நேரிடையாகக் கலந்து பழகும் அரிய வாய்ப்பைப் பெற்றவர் ஸ்ரீ கணேசன் அண்ணா. அன்னவர் பகவான் ஸ்ரீ ரமண மஹர்ஷி அவதரித்த திருக்குலத்தில் பிறக்கும் பெரும் பேறு பெற்றவர்.

ஸ்ரீ கணேசன் அண்ணா தனது வாழ்க்கை முழுவதும், ஸ்ரீ ரமண பகவானையும் அவரது அடியார்களையும் குறித்த விஷயங்கள் பற்றி பேசியும், எழுதியும் எப்போதும் பகவானின் சிந்தனையிலேயே வாழ்பவர். முப்பத்தேழு வருடங்கள் ஸ்ரீ ரமணாச்ரமப் பணியில் தன்னை அர்ப்பணித்துக் கொண்டவர். பகவான் ஸ்ரீ ரமணரின் அடியார்களை ஆச்ரமத்தில் தங்கச் செய்து பரம பக்தியோடு அவர்களுக்கு சேவை செய்தவர்.

அவர்களிடமிருந்து பகவானின் வாழ்க்கை பற்றிய பல விலைமதிப்பற்ற குறிப்புகளையும், அவர்கள் பகவானுடன் ஸத்ஸங்கத்தில் உணர்ந்து அனுபவித்த பல நுணுக்கமான விஷயங்களையும் சேகரித்தார். அவ்வாறு அன்னாரால் சேகரிக்கப்பட்ட அடியார்களின் அனுபவத்தொகுப்பு ‘‘ரமண பெரிய புராணம்’’ என்ற தலைப்பில் ஆங்கிலத்தில் ஏழு வருடங்களுக்கு முன் வெளியிடப்பட்டது. இது அவருடைய தபஸின் பலனாக நமக்குக் கிடைத்த பெரிய பொக்கிஷம்.

ஸ்ரீ ரமண பகவானின் அணுக்கத் தொண்டர்கள் 75 பேரின் அத்யாத்ம வாழ்க்கையை நம் கண் முன் கொண்டு வரும் இந்நூல், இதே போன்று ஆன்மீக பாதையில் செல்ல விழையும் ஸாதகர்களுக்கு மேலும் ஊக்கம் அளிப்பதாக இருக்கிறது.

ஸ்ரீமதி அகிலா அம்மா (திருச்சி) அவர்கள், பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் பரம பக்தை. திருச்சி ஸ்ரீராமகிருஷ்ணா சாரதா சமிதி மூலம் ஆன்மீக தொண்டாற்றுபவர். அவர்கள் மிகுந்த சிரத்தையுடனும், பக்தியுடனும் தமிழ் வாசகர்களுக்கு பயன்படும் வகையில் தூய தமிழில் இந்நூலை மொழிபெயர்த்துள்ளார்.

ஆங்கில பதிப்பில் உள்ளது போன்றே, பகவானின் திவ்ய ஸந்நிதியை பக்தர்கள் வந்தடைந்த காலக்கிரமத்தின் அடிப்படையில் தொகுக்கப்பட்டுள்ளது.

இதில், பகவானுடைய உபதேசங்கள், பாடல்கள் மற்றும் பகவான் மீது பக்தர்கள் பாடிய பாடல்கள் என்று பல புதிய விஷயங்கள் சேர்க்கப்பட்டுள்ளன. இந்நூலில் இடம் பெற்றுள்ள அடியார்களின் அனுபவப் பிழிவு இதைப் படிக்கும் அனைத்து ஸாதகர்களுக்கும் மானிட வாழ்வின் மகத்தான லட்சியமான ஆன்மானுபவத்தை அனுக்ரஹிக்கும் என்பதில் ஐயமில்லை.

# முகவுரை



பகவான் ஸ்ரீ ரமண மஹர்ஷிக்குச் சொந்தப் பெயர் என்று எதுவும் கிடையாது என்று கூறுவதுண்டு. இருந்தும், அவருக்கு ஒரு பெயர் இருந்தது. அவர் அதை, ஒருமுறை அன்று, மூன்று முறை வெளிப்படுத்தியுள்ளார். முதல் முறை - எழுத்துக்களால் ஆன மணமாலையாகிய "அக்ஷரமணமாலை"யில் அதை வெளிப்படுத்தி உள்ளார். அதன் கடைசி செய்யுளில்,

"மாலை அளித்து அருணாசல ரமண என்
மாலை அணிந்து அருள் அருணாசலா"

என்று கூறியுள்ளார்.

சில நாட்களுக்குப் பிறகு, விரூபாக்ஷ குகையில் ஒரு பக்தர், பகவான் உண்மையில் யார் என்று தெரிந்து கொள்ள விரும்பியபோது, இரண்டாவது முறையாக வெளிப்படுத்தினார். அந்த பக்தர், காகிதத்தில், "ஹே ரமணா! நீங்கள் யார்? தெய்வங்களில் சிறந்த ஹரியா, அல்லது ரிஷியா, அல்லது தேவலோகத்தைச் சேர்ந்தவரா? நீங்கள் யார்?" என எழுதி, பகவான் வெளியில் சென்றிருந்த சமயத்தில் அவரது கல்படுக்கையில் வைத்துச் சென்றுவிட்டார். பகவான் திரும்பி வந்தபோது, கல்படுக்கையில் இருந்த காகிதக் குறிப்பைப் படித்துவிட்டு, அதன் பின்பக்கத்தில், பின்வருமாறு எழுதினார்,

''அரியாதி இதர சீவர அக வாரிச குகையில்
அறிவாய் ரமி பரமாத்துமன் அருணாசல ரமணன்
பரிவால் உளம் உருகா நல பரன் ஆர்ந்திடு குகை ஆர்ந்து
அறிவாம் விழி திறவாய் நிசம் அறிவாய் அது வெளியாம்''

(பகவான் ஸ்ரீஹரியில் இருந்து மிக அற்பமான ஜீவன் வரை, ஸகல உயிர்களின் இதயத்தாமரை என்னும் குகையில் ஆத்ம சொரூபமாய் இன்ப நிலையில் மகிழ்ந்து கொண்டிருக்கும் பரமாத்மாவே, அருணாசல ரமணனாகும். அன்பு நிறைந்த பக்தியினால் நெஞ்சுருகி, பக்தியோடு இதயக்குகையில் ஆழ்ந்து மூழ்கினால், அகக்கண் திறக்கும். உண்மையான, பூரணமான, இரண்டற்ற (அத்வைத) நிலையை அப்போது உணர்வீர்கள்)

மூத்த பக்தரான முருகனார் மீது விஸ்வநாதஸ்வாமி ஒரு பாடல் இயற்ற விரும்பியபோது, மூன்றாவது முறையாக வெளிப்படுத்தினார். விஸ்வநாதஸ்வாமி, முழுமையாகத் தமிழில் பாடல் இயற்ற முடியாத நிலையில், ''முகவாபுரி முருகன்'' என்ற இரு சொற்களை மட்டும் எழுதி, பகவான் அமரும் இடத்தில் வைத்துவிட்டு, மெதுவாக வெளியே சென்றுவிட்டார். பகவான் திரும்பி வந்து,

அகத்தாமரை மலர் மீதுறை அருணாசல ரமணன்
நகைத்தான் உற விழித்தான் அறச்செகுத்தானெனதுயிரை
மிகத்தான் அருள் சுரந்தானென முகவாபுரி முருகன்
செகத்தாருய வகுத்தான் முறை திருவாசக நிகரே.

(எல்லோருடைய இதயத் தாமரையிலும் உறையும் அருணாசல ரமணனின் ஒரு பார்வையால் முகவாபுரி முருகனின் பூர்வ வாசனைகள் அனைத்தும் அழிந்தன)

என எழுதி, அந்தச் செய்யுளை முடித்திருந்தார். அது, பல நூற்றாண்டுகளுக்கு முன் மாணிக்கவாசகர் எழுதிய திருவாசகத்துக்கு ஒப்புவமையாகும் வகையில் பல்லாயிரக்கணக்கான செய்யுட்கள், அவரிடமிருந்து தாமாகவே எழும்ப வழி வகுத்தது.

அப்படியானால் பகவான் அருணாசல ரமணன் இவ்வுலகிற்கு வந்த காரணம்தான் என்ன? தனது 'நவமணி மாலை' என்ற பாடலில் பகவான் அதை வெளிப்படுத்துகிறார். ''ஒவ்வொருவரின் இதயத்திலும் உள்ள 'நான்' என்னும் உண்மை உணர்வே 'தான்' என்பதை உலகிற்கு உணர்த்தி, ஒவ்வொருவரும் தங்களை உடம்பு எனக் கருதும் பொய்யான அறிவை, அபிமானத்தை அழிக்குமாறு கட்டளையிட்டான்,'' என உரைத்துள்ளார்.

புனிதமான மலையாகத் தோன்றும், எல்லையற்ற ஞானாக்னியான அருணாசல சிவன், நமது மொழியிலேயே பேசி உணர்த்துவதற்காக, ரமணராக அவதரித்துள்ளான். மலையின் மொழியோ மௌனம். அந்த மொழியில் பேசினால் யாரால்தான் புரிந்துகொள்ள முடியும்?

ஒருமுறை இந்தக் கருத்தைப் பகவானின் மூத்த பக்தரான ஸ்ரீ N.R.கிருஷ்ணமூர்த்தி அய்யரோடு பகிர்ந்துகொண்டேன். அவர் ஒரு பௌதிக பேராசிரியர் விஞ்ஞானியும்கூட. அவர், "என்ன அற்புதமான கருத்து! அது உண்மையே. அருணாசலமேதான் ரமணராக வந்துள்ளது; ஆனால் கணேசன்! அதோடு இன்னொரு வாக்கியத்தையும் சேர்த்துக் கொள்ளுங்கள்," எனக் கூறிவிட்டு, "பகவான், அருணாசலம் என்பது உண்மையே; அவருடைய பக்தர்களோ, புனித அருணாசலத்தோடு முழுமையாகப் பிணைந்துள்ள பெரிய பாறைகளும் கற்களுமே."

இக்கருத்து என்னை மெய்சிலிர்க்க வைத்தது. மேலும் தொடர்ந்து, " அவதாரங்கள் தோன்றும்போது பரிவாரங்களோடுதான் வருவார்கள். அதுபோல், பகவான் அவதரித்தபோது பணிவிடை செய்வதற்காக நாமும் வந்துள்ளோம். நம் பணி முடிந்துவிட்டால் மீண்டும் மூலத்திடம் போய்ச் சேர்ந்துவிடுவோம்," என்றும் கூறினார்.

உலகம் முழுவதும் தனது செய்தியைப் பரப்புமாறு அருணாசலம் கட்டளை இட்டிருந்தபோதும், 54 வருடம் அருணாசலத்தை விட்டு ஒரு அடி கூட பகவான் அகலவில்லை. காரணம் – அவர் அசைய வேண்டிய அவசியம் வரவில்லை என்பதுதான். உலகமே அவரை நாடி வந்தது.

முதலில் வந்தவர் ஃப்ராங்க் ஹம்ஃப்ரீஸ் எனும் மேலை நாட்டவர். தொடர்ந்து, காவ்யகண்ட கணபதி முனி, பால் ப்ரண்டன், முருகனார், ஆர்தர் ஆஸ்போர்ன் முதலியோர் வந்தனர். குருவின் செய்திகளைப் பதிவு செய்வதொன்றே அவர்களது குறிக்கோளாக இருந்தது. உடன் வந்த பரிவாரங்கள் மட்டும் இல்லாதிருந்தால், பெரிய குருமார்களான புத்தரும், இயேசுநாதரும் கூடப் பெயரளவிலேயே இருந்திருப்பார்கள். பெரிய குருமார்களின் பக்தர்கள், அவர்களின் உபதேசங்களையும், சாதாரணமாக ஆன்மீக ஸாதகர்களுக்கு எழக்கூடிய கேள்விகளுக்கு அவர்கள் அளித்த விடைகளையும், பின்வரும் சந்ததிகள் பயன்பெறும் விதத்தில் காப்பாற்றி வைத்தனர். இந்தப் புனித கைங்கர்யத்தை நிறைவேற்றவே குருமார்களுடன் பரிவாரங்களும் வருகின்றனர்.

தனது பக்த பரிவாரங்களோடு வந்த சிறந்த குருமார்களுக்கு, ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரையும் எடுத்துக்காட்டாகக் கூறலாம். சீடர்கள் யாரும் இன்னும் குருவை வந்தடையாத நிலையில், தெய்வீக ஆனந்தக் களிப்பில், உன்மத்தராக இருந்த சமயங்களில், கங்கைக் கரையில் நின்று, "அம்மா! நீ அனுப்புவதாகச் சொன்னக் குழந்தைகள் எல்லாம் எங்கே? இன்னும் அவர்கள் வரவில்லையே!" என்று கூச்சலிட்டுக் கதறுவார். இறுதியில், பதினெட்டுச் சீடர்களை அன்னை பராசக்தி அனுப்பி வைத்தாள். வாழ்க்கையின் இறுதியில் புற்றுநோயால் உடலை உகுக்க வேண்டிய தருணம் வந்தபோது, "நான் மீண்டும் பிறப்பேன். அடுத்தப் பிறவியில் ஒரு பிக்ஷைக்காரனாகப் பிறந்து, மக்கள் துயரைத் துடைப்பேன்," என்று கூறினார். இதற்கு அவரது பத்தினி புனித அன்னை சாரதா தேவியார், "ஒருவேளை நான் வராமலிருக்கக்கூடும்," என பதிலுரைத்தார். அதற்கு ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர், "இவ்விஷயத்தில் உனக்கு எந்த சுதந்திரமும் இல்லை. நான் பிறந்தால் எனது பரிவாரங்களும் உடன் வந்தே ஆகவேண்டும்," என்று கூறினார். அதற்கு உதாரணமாக குளத்தில் இருக்கும் களைச்செடியைக் கூறினார். குளத்தில் வளரும் ஒருவிதமான களையை வேருடன் பிடுங்கி எடுக்கும்போது, அதைச் சுற்றி இருக்கும் எல்லா களைச்செடிகளையும் இழுத்துக்கொண்டு வரும். அந்தக் களைச் செடியை உதாரணமாகக் கூறினார்.

ரமண பகவானுக்கு அநேக பக்தர்கள் இருந்தனர். சிலர் பிரபலமடைந்தனர். சிலர் அவ்வாறு பிரபலமடையவில்லை. இந்த பக்தர்களுக்கும், பகவானுக்கும் இடையே உலக ரீதியிலும் ஆன்மீக ரீதியிலும் நிலவிய உறவு எந்த ஒரு புத்தகத்திலும் பதிவு செய்யப்படவில்லை. Talks with Ramana Maharshi, Letters from Sri Ramanasramam, Day by Day with Bhagavan போன்ற புத்தகங்களில், பகவான் ஸாதகர்களுக்கு அளித்த விடைகளே முக்கியமாக இடம் பெறுகின்றன. எனினும் பகவானின் வாழ்க்கை பற்றிய சில விலைமதிப்பற்றக் குறிப்புக்கள், பக்தர்கள் நினைவில் பதிக்கப் பெற்றிருந்தன. பகவானுடன் ஸத்ஸங்கத்தில் ஈடுபட்டபோது, அவர்கள் உணர்ந்து அனுபவித்த பல நுணுக்கமான விஷயங்களைப் பதிவு செய்ய வேண்டும் என்ற ஆவல் தீவிரமாக எழவே, 1956ஆம் ஆண்டு முதல், மூத்த பக்தர்களிடம் தொடர்ந்து கேள்வி கேட்க ஆரம்பித்தேன்.

"பகவானோடு நீங்கள், பரஸ்பரம் எவ்வாறு பழகினீர்கள்? அவர் உங்களுடன் எப்படிப் பழகினார்? அவருடன் உங்களுக்கு எப்படிப்பட்ட உறவு நிலவியது?" என்ற எனது கேள்விகளுக்கு, "நாங்கள் மிகவும் சாதாரணமானவர்கள். எங்களுக்கு அனைத்தும் பகவான்தான். அவரைப் பற்றிக் கேளுங்கள்; அதற்கு நாங்கள் விடையளிக்கிறோம்," என்று கூறுவர்.

1960ஆம் ஆண்டு முதல், நான் ரமணாச்ரமத்திலேயே நிரந்தரமாக வாழ்ந்து வந்தேன். ஆச்ரமத்தில் எனக்குக் கொடுக்கப்பட்ட கடமைகளை நிறைவேற்றக் கடுமையாக உழைத்தேன். ஆயினும் எனக்கு முழுமையான மகிழ்ச்சி ஏற்படவில்லை; எதனால் என்பதும் விளங்கவில்லை. ஆச்ரமத்தில், எனது நலனை விரும்பிய பெரியோர்களிடமிருந்து அறிவுரைகள் பல பெற்றேன். என்றாலும் திருப்தி ஏற்படவில்லை. எனது ஆசிரியர் T.K.சுந்தரேச அய்யர், "எங்கள் அறிவுரைகளால் திருப்தி ஏற்படாதபோது, பலராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஞானி ஒருவரின் வழிகாட்டுதலைப் பெறுவது நல்லது," என்று கூறி, என்னைக் கேரளத்தில்

காஞ்சங்காடு ஆனந்தாச்ரமத்திலிருந்த ஸ்வாமி ராம்தாஸிடம் அனுப்பினார். ஸ்வாமி அவர்கள், தனது ஆன்மீக வாரிசான அன்னை கிருஷ்ணாபாய் என்னும், இறைவனை உணர்ந்த ஞானியிடம் அனுப்பினார்.

“எனது குருநாதருக்கு நான் எவ்வாறு சேவை செய்ய வேண்டும்? நான் செய்ய வேண்டிய ஆன்மீக ஸாதனை யாது?,” என அவரிடம் வினவினேன். “பகவானுடைய பழைய பக்தர்கள் அனைவரும் ஆச்ரமத்தைவிட்டு வெளியே சென்றுவிட்டனர். அவர்களை மீண்டும் ஆச்ரமத்திற்கு அழைத்து வந்து, அவர்களைக் கவனித்துக்கொள். அவர்களது இறுதிக்காலம் வரை அவர்களுக்குத் தேவையான சேவைகளைச் செய். இந்தச் சேவையே உனது ஸாதனை,” என்று அவர் கூறியதும் நான் அதிர்ச்சியுற்றேன். நான் கிழக்கு மற்றும் மேற்கத்திய ஆன்மீக தத்துவங்களை நுணுக்கமாகப் படித்திருந்தேன். ஒருவர் தன் குருவின் சீடர்களுக்குப் பணிவிடை செய்வதை ஸாதனையாக, அவைகளில் எங்கும் கூறப்படவில்லை.

அன்னை கிருஷ்ணாபாய் தொடர்ந்து, “இன்னொரு முக்கியமான விஷயம். பகவான் ரமணரின் உறவினர் என்ற நிலையில் உனக்கு ஏற்கனவே முக்தி கிடைத்துவிட்டதெனப் பலரும் கூறுவர். இந்து சாஸ்திரங்களின்படி, இறைவனை உணர்ந்த ஞானி ஒருவனின் உறவினர்களும் முக்தி பெற்றவர்களே என்பார்கள். ஞானி தோன்றிய பரம்பரையில், அவருக்கு முன்பு வந்த ஏழு தலைமுறையினரும், அவருக்கு பின்னர் வந்த ஏழு தலைமுறையினரும் கர்மத்திலிருந்து விடுபடுவார்கள் என்றெல்லாம் சொல்வார்கள். இவை ஒன்றையும் நம்பாதே. உன் ஆன்மீகப் பசிக்கு நீதான் உணவைத் தேடி உண்ணவேண்டும். கடவுள் எவ்வித பாரபட்சமும் இல்லாதவர். உனக்கு முக்தி வேண்டுமானால் எல்லோரையும் போல் நீயும் கடுமையாக உழைக்கவேண்டும். பகவான் ரமணரின் உபதேசங்களைப் பின்பற்று. 'நான் யார்?' என்ற ஆத்ம விசாரத்தைப் பழகு,” என்றும் கூறினார். என் முன்னே நின்ற முக்கியத்துவம் வாய்ந்த பணியை நினைத்து, உணர்ச்சிவசப்பட்டு நான் அழுதுகொண்டே, “அம்மா! நான் கிளம்பிப் போய்விடுவேன். நீங்களோ வெகுதூரத்தில் இருக்கிறீர்கள்,” என்று கூறினேன். “பப்பா உன்னை என்னிடம் ஒப்படைத்துள்ளார். நான் உன்னை வழிநடத்துகிறேன்,” என்று அன்னை உறுதிமொழி அளித்தார். “நூற்றுக்கணக்கான மைல்களுக்கு அப்பாலுள்ள நீங்கள், என்னை எவ்வாறு வழிநடத்த முடியும்?” என்ற எண்ணம் மனதில் எழுந்ததால், பெரிய கேள்விக்குறியோடு, பேச்சின்றி அவர் முகத்தைப் பார்த்தேன். அவர் சிரித்தபடி, “அதைப்பற்றி நீ கவலைப்படாதே. ஒவ்வொரு க்ஷணமும் உன்னோடு இருந்து உன்னை வழிநடத்துவேன்,” என்று ஆறுதல் மொழிகள் கூறினார். இன்றும்கூட அவர் எனக்கு வழிகாட்டுவதை என்னால் உணரமுடிகிறது.

ஆச்ரமத்திற்குத் திரும்பி வந்த பின்னர், அன்னை கிருஷ்ணாபாய் அவர்களின் அறிவுரைகளின்படி மனப்பூர்வமாகச் செயல்படத் துவங்கினேன். பழைய பக்தர்களைத் தேடிக் கண்டுபிடித்து, அவர்களை ஆச்ரமத்திற்கு மீண்டும் அழைத்து வருவதிலும், அவர்களுக்குப் பணிவிடைகள் செய்வதிலும், பகவானுடைய உபதேசங்களைக் கடைப்பிடிப்பதிலும் மும்முரமாக ஈடுபட்டேன். ஆரம்பத்தில் முழுமையாக வெற்றி கிடைத்ததென்றோ, என் பணியை நான் முழுமையாகப் புரிந்து கொண்டேன் என்றோ கூறமுடியாது. என்றாலும் நான் பணியைக் கைவிடவில்லை. பழைய பக்தர்களுக்குச் சேவை செய்வதே எனது ஸாதனை என, அன்னை எனக்கு அறிவுறுத்தியது ஏன்? என்பது ஒரு கேள்விக்குறியாகவே இருந்தது. என் மனதில் மின்னல்போல் பதில் பளிச்சிட்டது.

பகவானைப் பற்றிய நினைவுகளையும், அவர்களுடன் பகவான் கொண்டிருந்த உறவையும் பதிவு செய்யுமாறு அவர் என்னைப் பணித்துள்ளார் என்பதைப் புரிந்துகொண்டேன். இதுவரை செய்யப்படாத காரியம் அது. ஆர்வத்துடன் இப்பணியில் என்னை ஈடுபடுத்திக்கொண்டேன். தங்குதடையின்றி, தங்களது நினைவுகளைப் பகிர்ந்துகொண்ட மூத்த பக்தர்களை எனது சிரம் தாழ்த்தி வணங்குகின்றேன். நான் செய்த இப்பதிவுகள் பெரும்பாலும், அவ்வப்போது ஆச்ரம வெளியீடுகளாகவும், ஆச்ரமப் பிரசுரமான “மௌண்டன் பாத்” பத்திரிக்கையில் தொடர்ந்தும் வெளியிடப்பட்டன. பகவானைப் பற்றிய, தங்களது அற்புதமான நினைவுகளை என்னுடன் பகிர்ந்து கொள்ள முன்வந்த பெரும்பாறைகளாக (Boulders) விளங்கிய குஞ்சு ஸ்வாமி, அண்ணாமலை ஸ்வாமி, ராமஸ்வாமி பிள்ளை, தேவராஜ முதலியார், சூரி நாகம்மா, மேஜர் சாட்விக் போன்றவர்களுக்கும், மற்றவர்களுக்கும் நான் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறேன்.

எடுத்துக்காட்டாக, ராமஸ்வாமிப் பிள்ளை என்னைப் பார்த்தபோதெல்லாம் பகவான் சம்பந்தப்பட்ட ஏதாவது ஒரு நிகழ்ச்சியைப் பற்றிக் கூற ஆரம்பித்துவிடுவார். ஒருமுறை தென்னைமரம் ஒன்றைச் சுட்டிக்காட்டி, “நான் அதன்கீழ் நின்றுகொண்டு, இரும்புத் துரட்டி பொருத்தப்பட்ட நீளமான கம்பை உபயோகித்துத் தேங்காய்களைப் பறித்துக் கொண்டிருந்தேன். மலைக்குப் போகும் வழியில் என்னைப் பார்த்த பகவான், “மூங்கிலால் ஆன துரட்டியை ஏன் பயன்படுத்தக் கூடாது? உலோகத்தால் ஆன துரட்டி, மரத்தைப் புண்படுத்துமே! அது ஏற்கனவே தனது காய்களை எந்த எதிர்பார்ப்புமின்றி உனக்கு அளித்துக் கொண்டிருக்கிறது,”என்று கூறியதாகச் சொன்ன பிள்ளை மேலும் தொடர்ந்தார்.

“மிகவும் கெட்டிக்காரன் என என்னையே மெச்சிக் கொண்ட நான், உண்மையில் தவறிழைத்துவிட்டேன். பகவானோ ஆன்மீக அறிவுரையை - அது உலக நடைமுறைக்கு ஒவ்வாததாக இருக்கலாம் என்றாலும் அளித்துச் சென்றார். நான் நிறையத் தேங்காய்களைப் பறிக்க வேண்டிய நிலையில் இருந்ததால், மூங்கில் துரட்டி உடைந்துபோகக் கூடும் என்று தொடர்ந்து இரும்புத் துரட்டியையே

உபயோகித்தேன். பகவான் மலையிலிருந்து இறங்கி வரும்போதும் நான் தொடர்ந்து பணியில் ஈடுபட்டிருந்தேன். திடீரென்று ஒரு தேங்காய் என் மூக்கின் மேல் விழவும் இரத்தம் கொட்ட ஆரம்பித்தது. பகவான் என் அருகே வந்து நின்றுகொண்டு, 'என் சொற்களை நீ நம்பவில்லை. உன் தவறான செயல்கள் உன்னை எவ்வாறு துன்புறுத்தும் என்பதை இப்போதாவது புரிந்துகொண்டாயா?' என்று மென்மையாக என்னைக் கடிந்து கொண்டார்,'' என்று பிள்ளை கூறினார்.

அவரிடமிருந்தும், மற்ற பக்தர்களிடமிருந்தும், மூழ்கடிக்கும் அளவு பெருவெள்ளமாக நினைவலைகள் பொங்கி வந்தன. அவற்றிற்கு எழுத்து வடிவம் தரவேண்டுமென அவர்களிடம் பணிந்து வேண்டிக் கொண்டேன்.

''பகவானைப் பற்றிய உங்கள் நினைவுகளையும், உங்களுக்கும் மற்றுமுள்ள பழைய பக்தர்களுக்கும், பகவானுக்குமிடையே நிகழ்ந்த எல்லா விஷயங்களையும் என்னுடன் பகிர்ந்து கொள்ள வேண்டுமெனக் கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன். நீங்கள் கூறுவதனைத்தும் பகவானிடமிருந்து நேரடியாக வந்ததாக இருக்கும்,'' என்று உரைத்தபோது அவர்களும் பெருந்தன்மையோடு எனக்குத் தக்கவாறு பதிலளித்தனர்.

ரமணாச்ரமத்தில் நான் இருந்த முப்பத்தேழு ஆண்டுகளில் எனக்குப் பேரானந்தத்தையும் அறிவையும் தந்தது, பகவானுடைய மூத்த பக்தர்களின் தொடர்பு என்றே கூறவேண்டும். என் ஆனந்தத்தை மற்ற ஸாதகர்களோடு பகிர்ந்துகொள்ள வேண்டும் என்ற பேராவல் பல்லாண்டுகளாக இதயத்தில் அடங்கிக் கிடந்தது. ஒவ்வொரு பக்தருக்கும் இந்த லீலையில் தனிப்பட்ட பங்கு ஒன்று இருந்ததே, இப்புத்தகம் வெளிவர அடிப்படைக் காரணம் எனலாம். அருணாசல ரமணரின் பக்தர்கள் - 'மலையின் சிறிதும், பெரிதுமான பாறைகள்' - எவ்வாறு இயற்கையாக, அழகாக அவரது பணியில் இணைந்தனர் என்பதை வெளிப்படுத்துவதே இந்த புத்தகத்தின் குறிக்கோள்.

பகவானுடைய மூத்த பக்தர்களைப் பற்றிய ஸத்ஸங்கங்களுக்கு ஏற்பாடு செய்த, ஆஷ்பெரோவில், உள்ள 'அஹம் retreat மைய'த்திற்கும், அருணாசலத்திலுள்ள 'அஹம்'ஆச்ரமத்திற்கும் நான் மீளாக்கடன் பட்டுள்ளேன். நெருங்கிய நண்பர்களால் ஒலிப்பதிவு செய்யப்பட்ட குறுந்தகடுகளில் இருந்தே இப்புத்தகம் பெரும்பாலும் தொகுக்கப்பட்டுள்ளது. அவர்களுக்கும் எனது ஆழ்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

வார்த்தைகள் அனைத்தும் உதிர்ந்து போகட்டும்.
அவற்றின் ஸாரமான உண்மை உணர்வு மட்டும்,
எல்லோர் இதயத்திலும் மலரட்டும் என்பதே,
என் பணிவான வேண்டுகோள்.
இறைவனருள் எப்போதும் உள்ளது.

வே. கணேசன்




**பழைய ஹாலில் பகவான்**

# 40 மேஜர் சாட்விக்



ரமண மஹர்ஷியிடம் வந்த முதல் மேல்நாட்டவர் ஃப்ராங் ஹம்ஃப்ரீஸ் (Frank Humphreys). 1911-ம் ஆண்டில் மலை மீது சென்று, விரூபாக்ஷ குகைக்கு வெளியே ஒரு பாறை மீது அமர்ந்திருந்த பகவானைப் பார்த்தபோது அவரிடமிருந்து வெளிவந்த வார்த்தைகள், "அந்த மனித சரீரத்திலிருந்து, இறைவன் அபாரமாக ஒளி வீசிக் கொண்டிருக்கிறான்," என்பதாகும். இரண்டாவதாக 1930-ல் மேல்நாட்டைச் சேர்ந்த பால் பிரண்டன் என்பவர் பகவானிடம் வந்தார். அவர் பகவானை ஆன்மீக வழிகாட்டியான ஒரு குருவாகப் பார்த்தார். பகவானுடைய நேரடி உபதேசமான ஆத்ம விசாரத்தை, வெளிக்கொணர்ந்து, அது குறித்து பல புத்தகங்கள் எழுதி, அவற்றின் மூலம் ஆன்மீக உலகம் முழுவதும் அவற்றைப் பரப்பினார். பால் பிரண்டனின் புத்தகத்தைப் படித்த மேலைநாட்டவர் ஒருவர், மூன்றாவதாக பகவானிடம் வந்து சேர்ந்தார்.

கடவுள், குரு, மனிதன் - என்ற முக்கோணம் என்றும் உண்டு. ஃப்ராங் ஹம்ஃப்ரீஸ் பகவானைக் கடவுளாகப் பார்த்தார் என்றால் பால் பிரண்டன் அவரைக் குருவாகக் கண்டார். அப்போதும் மேற்கூறிய முக்கோணம் நிறைவு பெறாததால் அதே இங்கிலாந்தைச் சேர்ந்த 'ஆலன் சாட்விக்' (Allan W. Chadwick) என்பவர் வந்து, அதிசயங்களுக்கெல்லாம் மகுடம் வைத்தது போன்று, பகவானை மிக இயற்கையான, நிறைவான மனிதராகக் கண்டார். பகவானைக் கண்டபின் அவர் தனது நாட்டுக்குத் திரும்பிச் செல்லவில்லை. 'சாட்விக்' என்ற அவரது பெயரை அன்போடு மாற்றி 'ஸாத்விக்' என்றே பகவானின் மூத்த பக்தர்கள் அவரை அழைத்தனர். ஸம்ஸ்க்ருதத்தில் 'ஸாத்விக்' என்றால் தூய்மையான அல்லது உலக ஆசைகள், பற்றுக்கள் இவற்றிலிருந்து விடுபட்டவர் என்று பொருள். (இந்த ஸாத்விக மனிதர் முதல் உலக மஹாயுத்தத்தில் பங்கேற்று, ஆங்கிலேயப் படையில் 'மேஜர்' என்ற முறையில் எதிரிகள் பலரைக் கொன்றவர் என்பது உண்மை.)

ரமணாச்ரமத்தில் A. W. சாட்விக், 'மேஜர் சாட்விக்' என்றே அறியப்பட்டார். பிரண்டனின் புத்தகத்தைப் படித்த பின், 1935-ல் இவர் அருணாசலத்திற்கு வந்தார் என்றாலும் பகவானைப் பார்ப்பதற்குப் பதினோரு ஆண்டுகளுக்கு முன்னரே தனக்கென ஒருவழியை வகுத்துக் கொண்டு, அதன்படி தினமும் கடுமையாகத் தியானப் பயிற்சி செய்து வந்தார். "இறைவனே உலகைப் படைத்துள்ளார் என்பதால் அதை அவர் தன்னிடமிருந்தே தோற்றுவித்திருக்க வேண்டும். அவ்வாறின்றி வேறு ஏதோ ஒன்றிலிருந்து உலகம் படைக்கப்பட்டதென்றால் அவர், மறுக்க முடியாத, அனைத்து சக்திகளுக்கும் இருப்பிடமான கடவுளாக இருக்க முடியாது, என்று எனக்குள் நானே விவாதித்துக் கொண்டதோடு, அதனால் 'கடவுளைத் தேடுபவனே தான் கடவுள்' என்று தீர்மானித்தேன். ஆகவே, நான் தனி மனிதன் என்ற எண்ணத்தை வேரோடு அறுத்துவிட்டு, மூலமான தூய இறைவனிடம் நிலைத்து நிற்பதையே எனது தியான முறையாக வைத்துக் கொண்டிருந்தேன். நினைப்பதை முற்றிலும் நிறுத்தி, இருப்பாக மட்டும் இருக்க வேண்டுமென எண்ணினேன்" என்பதாக சாட்விக் கூறியுள்ளார். என்ன தீர்க்க தரிசனம் பாருங்கள்! பகவானிடம் வருமுன்னரே எண்ணங்களை அறவே விலக்கி 'இருப்பாக' இருப்பதற்கு முயற்சி செய்துள்ளார்!

'A Search In Secret India' ('அறியப்படாத இந்தியாவில் ஒரு தேடல்') என்ற தனது புத்தகத்தில் ரமண மஹர்ஷியின் போட்டோ ஒன்றைப் பிரசுரித்திருந்ததோடு, மூன்று அத்தியாயங்களில் அவரைப் பற்றிய விவரங்களைப் பால் பிரண்டன் எழுதியிருந்தார். முக்கியமாக பகவானுடைய படமும் இந்த மூன்று அத்தியாயங்களும் மேஜர் சாட்விக்கை வெகுவாகக் கவர்ந்தன. ஸ்பெயினில் இருந்து சற்றுத் தொலைவிலிருந்த 'மயோகா (Majorca)' என்னுமிடத்தில் அப்போது வசித்து வந்த சாட்விக்கிற்கு 'அருணாசலமே தனது வீடு' என்றும், இந்த 'மஹர்ஷியே தனது ஆன்மீக குரு' என்றும் தோன்றவே, மயோகாவில் தான் செய்து முடிக்க வேண்டிய பணிகளையெல்லாம் முடித்துவிட்டு அங்கிருந்த தனது வீட்டையும், உடைமைகளையும் விற்று விட்டார். பின்னர், தான் மிகவும் நேசித்த தன் சகோதரிகளுடன் சிறிது காலம் கழிக்கும் பொருட்டு இங்கிலாந்திற்குச் சென்றார். அதன் பிறகு, அங்கிருந்த தனது வீட்டையும் கொடுத்துவிட்டு இந்தியாவிற்குப் பயணமான அவர், மீண்டும் தனது நாட்டுக்குத் திரும்பவேயில்லை. தான் தேர்ந்தெடுத்த குருவின் பாதாரவிந்தங்களில் அருணாசலத்தில் வாழ முற்பட்ட முதல் மேல்நாட்டவர் சாட்விக்தான். நான் அவருடன் பழகியதால் உணர்ந்து கொண்ட ஒரு முக்கிய விஷயம் என்னவென்றால் அவர் எடுத்த முடிவிற்கும், செயலுக்குமிடையே இடைவெளி என்பதே இருக்கவில்லை என்பதுதான். நம்மைப் போன்ற ஸாதகர்கள் அனைவருமே கருத்தில் கொள்ள வேண்டியது இது. அந்த மூன்று அத்தியாயங்களைப் படித்த பிறகு அவருக்கு எவ்வித சந்தேகமோ, தயக்கமோ இருக்கவில்லை. பகவானே தனது குரு என்றும் அருணசலமே தனக்குச் சொந்தமான இடமென்றும் நிச்சயமாக உணர்ந்து கொண்ட பின்னர், அடுத்தபடியாக அவர் மற்ற அனைத்தையும் துறக்க முற்பட்டார். தன் பிறப்பிடமான இங்கிலாந்திற்குச் சென்று தனது சகோதரிகளின் ஆசையைப் பூர்த்தி செய்த பின் அருணாசலத்திற்கு வந்தவர் பின்னர் இங்கிலாந்திற்குத் திரும்பவேயில்லை.

சாட்விக் நீண்ட பயணத்திற்குப் பின், அருணாசலத்திற்கு வந்து உயிரோடு வாழ்ந்து கொண்டிருந்த தனது குருவான பகவான் முன் முதன்முதலாக நின்றபோது கடவுள், குரு, பூரணமான மனிதர், இவர்கள் அனைவரும் ஒரே உருவில் இருப்பதாக உணர்ந்தார். அந்த சந்திப்பு எவ்வாறிருந்தது என அவரிடம் வினவியபோது "பகவானது ஸாந்நித்தியத்தில் பேரமைதியையும் அருளையும் ஒருங்கே நான் உணர்ந்தேன். முதன்முறையாக பார்ப்பது போலவோ அல்லது பழைய நட்பைப் புதுப்பிப்பதாகக் கூடத் தோன்றாமல் நான் அவரை எப்போதுமே அறிந்திருந்தேன் என்ற உணர்வுதான் எனக்கு இருந்தது. இது என்றுமே இருந்திருக்கிறது என்ற போதும் அந்த நிமிடம் வரை நான் அதை உணரவில்லை. இப்போது அதை உறுதியாக உணர்கிறேன்," எனக் கூறினார்.

சாட்விக் தன்னுடையவை அனைத்தையும் துறந்து விட்டு இறைபணியில் தன்னை அர்ப்பணித்துக் கொண்டார். தனது நண்பர்கள், உறவினர்கள், உடன் பணியாற்றிய அதிகாரிகள் முதலியவர்களோடு இருந்த உறவை முற்றிலுமாக அறுத்தெறிந்து முன்பின் தெரியாத இடத்தில் ஒரு ஸாதுவாக மாறினார். இத்தகைய திடமான தீர்மானம், துறவு, இவற்றுடன் கூடிய தெளிவான அணுகுமுறை — இவை ஸாதகர்களாகிய நம் அனைவருக்கும் இன்றியமையாதது. அருணாசலம் மற்றும் பகவான் ரமணர், என்னும் மெய்ப்பொருளை நாம் நேராகக் காண்கிறோம். அருணாசலம் என்பது மலையுமன்று; பகவான் ரமணர் மனிதரும் இல்லை. இவை இரண்டுமே, அந்த ஒரே மெய்ப்பொருளேயாகும் —'இருப்பு' (I AM) என்று இதையே இந்து சாஸ்திரங்கள் எடுத்துரைக்கின்றன; அதைத்தான் இறைவன் மோஸஸ்ஸிடம் உறுதிபடக் கூறினார்.

பகவானது ஸன்னிதி விசேஷத்தினால், சாட்விக் நிரந்தரமாக அருணாசலத்தில் தங்க முடிவெடுத்தார். தனது தீர்மானத்தில் அவருக்கு எள்ளளவுகூட சந்தேகம் இருக்கவில்லை. தன் முடிவு

சரியா, தவறா என்ற கேள்வியே அவருக்கு எழும்பாததோடு அதை ஒருபோதும் அவர் மாற்றிக் கொள்ளவுமில்லை. இத்தகைய சிறந்த சீடர் பூரண சரணாகதி அடையும் போது குருவின் அனுக்ரஹம் எத்தகையதாக இருந்திருக்கும்? குரு, சீடனின் முழுப் பொறுப்பையும் ஏற்றுக் கொள்கிறார். சாட்விக்கிடம் பகவான் காட்டிய அக்கறை விநோதமானது என்று மற்ற பக்தர்கள் கருதினர். "அவர் தனது உடைமைகள் அனைத்தையும் துறந்து இங்கு வந்துள்ளார். நாம் தான் அவரைக் கவனித்துக் கொள்ள வேண்டும். அவருக்குக் காரசாரமான உணவு கொடுக்காமல் ஸாத்விகமான உணவு தனியாகத் தயாரிக்கப்பட வேண்டும்," என்று பகவான் ஆச்ரம நிர்வாகத்தினரிடம் தெரிவித்தார். மேல் நாட்டவரைத் 'துரை' என்றழைக்கும் வழக்கம் தமிழ் நாட்டில் இருந்ததால், சாட்விக்கும் அவ்வாறே அழைக்கப்பட்டார். ரமணாச்ரமத்தில் வெளிநாட்டவருக்கெனத் தனியாகத் தயாரிக்கப்படும் காய்கறி உணவு, சூப் இவற்றை 'துரை கூட்டு' மற்றும் 'துரை ரசம்' என்று கூறும் வழக்கம் இன்றும் உள்ளது. இதை 1935-ல் சாட்விக்கின் பொருட்டு பகவானே ஏற்பாடு செய்தார். இந்த ஸாத்விக உணவிற்கு நாம் மேஜர் சாட்விக்கிற்கு நன்றி கூற வேண்டும்.

ரமணாச்ரமத்தில் காலைச் சிற்றுண்டிக்கு, அன்று போல் இன்றும் இட்லி, மிளகாய்ப் பொடி, எண்ணெய் இவையே அளிக்கப்படுகின்றன. மிளகாய்ப்பொடி மிகவும் காரமாக இருக்குமாதலால் சாட்விக் அதை வெடிமருந்து என்றழைப்பது வழக்கம். அதனால் அவருக்குப் பிரத்தியேகமாக இட்லியுடன் நெய்யும் சர்க்கரையும் பரிமாறும்படி பகவான் கூறுவார். வெளிநாட்டவருக்கு இந்தச் சலுகை இப்போதும் உள்ளது. காரமான ரசம், சட்னி இவற்றைச் சாட்விக்கினால் உண்ண முடியாதென்பதால் இரவில் அவருக்குப் பால் பழம் இவற்றை அளிக்க ஏற்பாடு செய்தார். பகவான் அவரிடம் தனிப்பட்ட விதத்தில் அக்கறை காட்டுவதை சர்வாதிகாரி சின்னஸ்வாமி உட்பட அனைவருமே கவனித்தனர். இதன் விளைவாக ஆச்ரம சரித்திரத்திலேயே முதல் முறையாக ஆச்ரம வளாகத்திற்குள், தனக்கென தனி அறையைக் கட்டிக் கொள்ள அவருக்கு அனுமதியும்



**ஸ்ரீ பகவான் (தலை மறைந்திருக்கிறது) சாட்விக் குடில் கிருஹப்ரவேசத்தின் போது S. S. கோஹென் (இடது கையால் கண்களை மூடிக்கொண்டு) மற்றும் பால் பிரண்டன்**

வழங்கப்பட்டது. பல ஆண்டுகளுக்குப் பின்னர்தான், யோகி ராமய்யாவிற்கும் அவரது சீடரான பலராம ரெட்டியாருக்கும் (N. பலராம ரெட்டியார் அல்ல), பின்னர் தேவராஜ முதலியாருக்கும் சாட்விக்கின் அறைக்கு அருகிலேயே தனிப்பட்ட அறைகள் கட்டிக்கொள்ள அனுமதி அளிக்கப்பட்டது.

அவரது அறையின் கட்டுமானப் பணி நடந்து கொண்டிருந்தபோது, ஆச்ரம பண்டக சாலையை அடுத்திருந்த ஓட்டுக் கட்டடத்தில் அவர் தங்கியிருந்தார். பகவான் காலையில் நடக்கச்செல்லும் வழியில் ஒரு நண்பனைப் போன்று, இந்தக் கட்டடத்தினுள் சென்று, சாட்விக்கின் மேசையை அணுகி அவரது 'மணிபர்ஸை' எடுத்து அதிலிருந்து போட்டோக்கள், அடையாள அட்டைகள் மற்றும் அதிலிருக்கும் அனைத்தையும் வெளியே எடுப்பார். பின்னர், ஒரு மூலையில் நாற்காலியில் அமர்ந்து புத்தகம் படித்துக் கொண்டிருக்கும் சாட்விக்கிடம் அவற்றை ஒவ்வொன்றாகக் காட்டி 'இது என்ன? இது என்ன?' என்று கேட்குமளவுக்கு அவரோடு நெருங்கிப் பழகினார். சாட்விக் தனது புதிய குடிலுக்குச் சென்ற பின்னரும் பகவான் அவ்வப்போது அவரைச் சென்று பார்ப்பார். தினமும் மதிய உணவிற்குப் பின் பலாக்கொத்தில் இருந்த ஒரு குளத்தைச் சுற்றி பகவான் நடப்பது வழக்கம். சாட்விக்கினுடைய அறைக்கும் குளத்திற்கும் இடையே இருந்த வேலியில் ஒரு சிறிய கதவு இருந்ததால் சில சமயங்களில் அதைத் திறந்து கொண்டு பகவான் சாட்விக்கின் அறைக்குச் செல்வதுண்டு.

சாட்விக்கின் சரீரத் தேவைகளை விசேஷ கவனத்தோடு பார்த்துக் கொண்ட பகவான் ஆன்மீகத்திலும் அவருக்கு வழிகாட்டி வந்தார். சாட்விக் அருணாசலத்திற்கு வந்த முதல் நாளே பகவான் அவரிடம் ஸஹஜமாகப் பழகினார். அதனால் நீண்ட பயணத்திற்குப் பின், மிகுந்த களைப்போடு வந்திருந்த அவருக்குத் தனது சொந்த வீட்டிலிருப்பதைப் போன்ற உணர்வே இருந்தது. தான் வேறு ஒரு இடத்திற்கு வந்திருப்பதாகவே தோன்றவில்லை. மதிய ஓய்விற்குப்பின் அவர் வந்தபோது தொண்டரிடம் 'நான் யார்' என்ற புத்தகப் பிரதி ஒன்றை எடுத்து வருமாறு கூறி, அதை பகவான் சாட்விக்கிடம் கொடுத்தார். அதை கொடுத்தது மட்டுமின்றி "இதைப் படித்துப் பயிற்சி செய்யுங்கள்" என்றும் கூறினார். இந்த ஆன்மீகப் பரிசின் மூலம் பகவான் அவர் மீது பிரத்தியேகமான ஆன்மீக அருளைப் பொழியத் துவங்கினார். சில நாட்களுக்குள் மீண்டும் அவரை வரவழைத்து B. V. நரஸிம்ம ஸ்வாமி எழுதிய ரமண பகவானின் வரலாற்றைக் கூறும் 'Self Realization' என்ற ஆங்கிலப் புத்தகத்தை அவரிடம் கொடுத்து மீண்டும் முன் மாதிரியே 'இதைப் படித்துப் பயிற்சி செய்யுங்கள்' என்று கூறினார். இந்த இரு புத்தகங்களையும் படித்து அவற்றின் அடிப்படையிலேயே தனது ஆன்மீக ஸாதனைகளை அமைத்துக் கொண்டதாக சாட்விக் என்னிடம் கூறினார்.

சாட்விக்கின் முழு கவனமும் பகவானையும் அவரது உபதேசங்களையும் சுற்றியே இருந்தது. உண்மையான சீடனின் பொறுப்பை சாட்விக் உணர்ந்திருந்தார். இவ்வாறு, ஆழ்ந்த கவனத்துடன் விசாரம் செய்தல், பகவானுடைய உபதேசங்களைப் புரிந்து கொண்டு அவற்றை வாழ்க்கையில் கடைப்பிடித்தல், பகவானுடைய ஸன்னிதி மகிமையை அனுபவிப்பது, இவற்றுக்கு அவர் அதிக முக்கியத்துவம் கொடுத்தார். திட்டமிட்டு செயல்படும் தன்மையுடைய அவர், தனது அறையில் தியானம் பழகுவார். அல்லது சில சமயங்களில் அருணாசலத்தைத் தியானிப்பார் அல்லது சிறிது ஓய்வு தேவைப்பட்டால், ஆன்மீக புத்தகங்களைப் படிப்பார். மற்ற சமயங்களில் எல்லாம் தனது குருவான பகவான் ரமணரின் முன் அமர்ந்திருப்பார்.



**சாட்விக் – தியானத்திற்குப் பயன்படுத்திய 'பெல்ட்'**

“நீங்கள் எதற்காக பகவானின் முன்னிலையில் எப்போதும் அமர்ந்திருந்தீர்கள்?” என்று நான் கேட்ட போது “இங்கு இறைவனும் குருவும் மனித உருவில் அமர்ந்திருப்பதாக உணர்ந்தேன். அவருடைய அருகிலும் ஸாந்நித்தியத்திலும் இருக்கும் வாய்ப்பு கிடைத்திருக்கும் போது அதை நழுவ விடுவேனா? எவ்வளவோ தொலைவிலிருந்து வந்து என்னுடைய நேரத்தை வீணடிப்பதற்கு நான் என்ன முட்டாளா?” என்று பதிலளித்தார். சாட்விக் ரமணாச்ரமத்தில் நிரந்தரமாகத் தங்கியவர் என்பதுடன் தனது நேரத்தில் ஒரு நிமிடத்தைக் கூட வீண் செய்யாதவர். மற்ற மேலை நாட்டவர்கள் வந்த போதும் கூட அவரது ஈர்ப்போ, கவனமோ வேறு இடங்களுக்குத் திசை திரும்பவில்லை. கோடைக்காலங்களில் வெளி-நாட்டவர்கள் பாண்டிச்சேரி, பெங்களூரு, ஊட்டி போன்ற குளிர்ச்சியான ஊர்களுக்குச் செல்வது வழக்கம். “என் குரு இங்கே இருக்கிறார்!” என்பதை நான் எப்போதும் உணர்ந்திருந்ததால் நான் அவரைவிட்டு வெளியே அதிகமாகச் சென்றதில்லை,” என்று பகவானைப் பற்றி சாட்விக் கூறும் போதெல்லாம் நான் மிகவும் நெகிழ்ந்து போவேன்.

சாட்விக் ஆஜானுபாகுவான தோற்றமுள்ளவர். அழகாகவும் உயரமாகவும் ஒழுக்க சீலராகவும் இருந்த அவர், புன்னகை பூத்த முகத்துடன் எல்லோரிடமும் நட்போடு பழகுவார். தனது ஸாதனைகளில் மிகுந்த கவனத்தோடு இருப்பவர் என்றாலும் ஆச்ரம நிர்வாகத்திற்கு மிகவும் உதவியாக இருந்தார். அதன் அங்கமாகவும் கூட அவர் செயல் பட்டிருக்கிறார். பகவானுடைய மஹா ஸமாதிக்குப் பின் பல வழக்குகள், பணப் பற்றாக்குறை, உட்பூசல்கள் இவற்றை ஆச்ரம நிர்வாகம் எதிர் கொள்ள நேர்ந்த போதெல்லாம் சாட்விக் உறுதுணையாக நின்றிருக்கிறார். பால் பிரண்டன், ஃப்ராங்க் ஹம்ஃப்ரீஸ் இவர்களைப் போன்றில்லாமல் பக்தர்களோடும் விருந்தினர்களோடும் பகவான் நிகழ்த்திய ஸம்பாஷணைகளை எல்லாம் மிக விரிவாகக் கேட்டிருக்கிறார். ‘Talks With Ramana Maharshi’ மற்றும் ‘Day By Day With Bhagavan’ போன்ற புத்தகங்களை பகவான் கூடவே இருந்து சாட்விக் சரிபார்த்திருக்கிறார். ‘Talks With Ramana Maharshi’ என்ற புத்தகத்திற்கு அவர் எழுதிய அழகான அறிமுகவுரையில் ‘இவை பகவானிடம் மட்டுமே காட்டப்பட்டன என்று கருத வேண்டாம். கேள்விகளைக் கேட்டவர்களிடமும் இவை காட்டப்பட்டு அவர்களது கேள்வி தவறின்றி புத்தகத்தில் கொடுக்கப்பட்டுள்ளதா என்றும் உறுதி செய்யப்பட்டுள்ளது. அதன் பின்னர் நோட்டுப் புத்தகத்தில் எழுதிய அவற்றைப் பகவானும் சரிபார்த்துள்ளார்’ என்று குறிப்பிட்டுள்ளார். அதனால் பால் பிரண்டன், கப்பலின் பாய்மரமாகச் செயல்பட்டு பகவானது உபதேசங்களை உலகில் பரப்பினார் என்று கூறும் அதே நேரத்தில், பதிவு செய்யப்பட்ட ஒவ்வொரு வார்த்தையையும் சரிபார்த்து அவற்றின் நம்பகத் தன்மைக்கு பகவானே சான்று வழங்கியுள்ளார் என்பதற்கு, நங்கூரம் போல் ஸாக்ஷியாக சாட்விக்கே இருந்திருக்கிறார்.

ஸ்ரீ ரமணாச்ரமத்தில் நிகழ்ந்த சம்பவங்களில், சாட்விக்குடன் ஏதோ ஒரு வகையில் தொடர்புள்ள சிலவற்றில் நானும்கூட சம்பந்தப்பட்டிருந்தேன். அவற்றை இங்கு எடுத்துரைக்கிறேன். நான் பட்டப்படிப்பை 1956-ல் முடித்த பிறகு, எனது தந்தை நான் மேலும் படிக்க வேண்டுமெனக் கூறினார். குடும்பத் தேவையைக் கருத்தில் கொண்டு வேலை பார்த்துப் பணம் சம்பாதிக்க எண்ணிய நான் மறுப்புத் தெரிவித்து 1956 முதல் 1958 வரை திருவண்ணாமலையில் இருந்தவாறே வேலை தேடிக் கொண்டிருந்தேன். மேஜர் சாட்விக்கும் ஸ்ரீமதி தலயார்க்கானும் கூட இந்தத் தேடலில் எனக்கு உதவி செய்தனர். என்றாலும் இறைவன் எனக்கு வகுத்திருந்த திட்டம் வேறு விதமாக இருந்தது.

அந்த இரண்டு வருடங்களும் திருவண்ணாமலையில் தங்கியிருந்த சாட்விக், ஆர்தர் ஆஸ்போர்ன், முருகனார், கோஹென், தேவராஜ முதலியார் இவர்களோடும் ஆச்ரமத்திற்கு வழக்கமாக வந்து கொண்டிருந்த பேராசிரியர் G. V. சுப்பராமய்யா போன்ற மற்றும் பல பக்தர்களோடும் நெருங்கிப் பழகும் வாய்ப்பை நான் பெற்றேன். அவர்களிடமிருந்த ஏதோ ஒன்று என்னை அவர்களிடம் ஈர்த்ததுடன், அவர்கள் மீது அபரிமிதமான பிரமிப்பையும், அதிசயத்தையும், நாட்டத்தையும் ஏற்படுத்தியது. “பகவானுடன் நீங்கள் என்ன பேசினீர்கள்? அவருக்கும் உங்களுக்குமிடையே இருந்த உறவு எத்தகையது?” என்ற கேள்விகளைக் கேட்டு அவர்களை நச்சரிப்பது என் வழக்கமாக இருந்தது. சில சமயங்களில் அவர்கள் கருணைகூர்ந்து எனக்காக நேரத்தை ஒதுக்கி, விஷயங்களைப் பகிர்ந்து கொள்வார்கள். என் உற்சாகம் கட்டுக்கடங்காமல் போகும் போது விலை மதிக்க முடியாத ரத்தினங்களான அவர்களது அனுபவங்கள், அவர்களோடு மறைந்து போகக் கூடாதே என்ற ஆதங்கத்தில் அவற்றை எழுதி வைக்குமாறு வேண்டிக் கொள்வேன். ஆனால் பலரும் “அதற்கு நான் தகுதியுள்ளவனா? எனக்கு என்ன சொல்லத் தெரியும்?” என்று கூறி மறுத்துவிடுவர். ஆனால் நான் “உங்களைப் பற்றி யார் கவலைப்படப் போகிறார்கள்? பகவான் உங்களிடம் என்ன கூறினார் என்பதையும் உங்களிடையே இருந்த உறவு பற்றியும் மட்டுமே அறிந்து கொள்ள விரும்புகிறேன். எதிர்கால ஸந்ததியினர் பயனடையும் வண்ணம் இந்த விசேஷமான நினைவுகளைப் பாதுகாக்க வேண்டியது உங்கள் கடமையல்லவா? தயவு செய்து அவற்றை எழுதி வையுங்கள்,” என்று கெஞ்சிக் கேட்டுக் கொள்வேன்.

என்னை ஊக்குவித்தவர் சாட்விக் மட்டுமே என்பதால் நான் அவருக்கு நன்றிக் கடன்பட்டுள்ளேன். ஆச்ரமத்தில் கூட்டமில்லாத போதும், ஆச்ரமப் பணிகள் அதிகமில்லாத சமயங்களிலும் என்னை அவரருகில் அமரச்செய்து மெய்சிலிர்க்க வைக்கும் நிகழ்ச்சி எதையாவது கூறுவார். என்னிடம் பகிர்ந்து கொண்ட பின்னர், தன் அறைக்குச் சென்று, அந்த நிகழ்ச்சியை ஒரு நோட்டுப் புத்தகத்தில் சாட்விக் எழுதி வைக்கும் விஷயம் எனக்குத் தெரியாது. 1958-ல் தத்துவ சாஸ்திரத்தில் இரண்டு வருட மேல் படிப்பிற்காக நான் திருவண்ணாமலையிலிருந்து வெளியில் சென்று விட்டேன். நான் வெளியூருக்குப் புறப்படுமுன் “நன்றி கணேசன்! எனது நினைவுகளை எல்லாம் நான் ஒரு நோட்டுப் புத்தகத்தில் குறித்து வைத்து விட்டேன்,” என்று சாட்விக் என்னிடம் கூறினார். படிப்பை முடித்துச் சில மாதங்கள் வேலை பார்த்த பின் 1960-ல் ரமணாச்ரமத்திற்குத் திரும்பினேன். திரும்பி வந்தவுடன் முதல் வேலையாகச் சாட்விக்கின் அறைக்குச் சென்று “உங்களது பிரஸாதத்தை — நீங்கள் எல்லாவற்றையும் எழுதிவைத்திருக்கும் நோட்டை எனக்குத் தாருங்கள்,” என்று கேட்டுக் கொண்டேன். பகவானைப் பற்றிய நினைவுகளை உள்ளடக்கிப் பிரசுரிக்கப்பட்ட முதல் புத்தகம் சாட்விக்கின் நோட்டிலிருந்து அச்சிடப்பட்டவையே. இந்தப் புத்தகம் வெளியிடப்பட்ட பின் சாட்விக் எனக்கு எழுதிய நன்றிக் கடிதத்தில் “ஆசிரியரின் விருப்பப்படி தனியொரு மனிதருக்குப் புத்தகத்தை அர்ப்பணிக்கும் வழக்கம் நமது ரமணாச்ரமத்தில் இல்லை. வெளியிடப்படும் அனைத்து

புத்தகங்களும் ‘ரமணார்ப்பணமஸ்து’ என்று பகவானுடைய திருப்பாதங்களிலேயே அர்ப்பணிக்கப்படுகின்றன. அப்படி இல்லாமல் ஒரு தனி மனிதருக்கு அர்ப்பணிக்கும் வழக்கம் இருந்திருந்தால் என் அன்புக்குரிய கணேசா! புத்தகத்தை உனக்கே நான் அர்ப்பணித்திருப்பேன்!” என்று எழுதியிருந்தார்.

இதற்குள் மூத்த பக்தர்களுடன் நான் மிக நெருக்கமாக இருந்ததால், G. V. சுப்பராமய்யா என் விருப்பத்திற்கிணங்கித் தனது நினைவுகளைத் தன் தாய்மொழியான தெலுங்கில் எழுதுவதாகக் கூறினார். “நீங்கள் தெலுங்கில் மட்டும் எழுதினால் என்ன பிரயோஜனம்? நீங்கள் ஆங்கிலப் பேராசிரியர்தானே? அதனால் ஆங்கிலத்திலும் அதை மொழிபெயர்த்துக் கொடுங்கள்,” என்று கேட்டுக் கொண்டேன். இதுவே நினைவுகள் அடங்கிய இரண்டாவது புத்தகம். அதைச் சுப்பராமய்யா வெளியில் ஒரு நிறுவனம் மூலம் பிரசுரித்தார். நான் அவரிடம் கெஞ்சிக் கேட்டுக் கொண்டதால், பின்னர் வந்த பதிப்புக்கள் ரமணாச்ரமத்தின் மூலமே வெளியிடப்பட்டன. இதைத் தொடர்ந்து மடை திறந்த வெள்ளம் போன்று பகவானைப் பற்றிய நினைவுகளடங்கிய பல புத்தகங்கள் வெளியாயின. T. K. சுந்தரேசய்யரின் ‘At the Feet of Bhagavan’, தேவராஜ முதலியாரின் ‘My Recollections of Bhagavan Sri Ramana’, சூரிநாகம்மாவின் ‘My Life at Sri Ramanasramam’ இவையும் குஞ்சு ஸ்வாமி, பலராம ரெட்டியார், கனகம்மாள் இவர்கள் எழுதிய புத்தகங்களும் வெளியிடப்பட்டன. மூத்த பக்தர்கள் சமைத்த இந்த ஆன்மீக உணவை, பசியோடிருந்த அத்யாத்ம ஸாதகர்களுக்கு வழங்கும் கரண்டியாக நான் செயல்பட முடிந்தது எனது பாக்கியம். பகவானுடைய அருளாலேயே இவையனைத்தும் நடந்தன என்பதில் சந்தேகமேதும் இல்லை!

புத்தர், இயேசுநாதர், ஸ்ரீ ராமகிருஷ்ணர் இவர்களது உபதேசங்களை அவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சீடர்கள் குறித்து வைக்காமல் போயிருந்தால், நாம் அவர்களைப் பற்றி எவ்வாறு அறிந்திருக்க முடியும்? இன்று பகவானைப் பற்றிய நினைவுகள் நம்மிடம் உள்ளதென்றால் அதற்கான முதல் நன்றி சாட்விக்கையே சேரும். பிறகு, எனது இடைவிடா வேண்டுகோளுக்குச் செவிசாய்த்த மற்ற பக்தர்களுக்கும் மனமார்ந்த நன்றிகள் சேரும். நினைவுகளை உள்ளடக்கிய இப்புத்தகங்கள் ஸத்குருவிற்கும், அவரைச் சரணடைந்த சீடர்களுக்கும் இடையே இருந்த உறவைத் தெளிவாகக் காட்டுகின்றன. அவற்றில் இடம் பெற்றுள்ள உண்மை நிகழ்வுகள், உபதேசங்களை நமக்கு வெகு அருகில் கொண்டு வருவதால் அவை விலைமதிக்க முடியாதவை. வாய்மொழியாக வந்த உபதேசங்களை வாழ்க்கையில் ஒருவர் கடைப்பிடிப்பது எவ்வாறு? வார்த்தைகளாக வெளி வந்த உபதேசங்களை நடைமுறைக்குக் கொண்டு வர, நமக்கு ஊக்கம் தரக்கூடிய விஷயங்கள் மிகவும் தேவையாக உள்ளன. அவ்வாறு இல்லாதிருந்தால் ஒரே ஒரு பகவத் கீதையோ, பைபிளோ, குர்-ஆனோ மட்டுமே போதுமானதாக இருந்திருக்கும். அதனால் தான் மூத்த பக்தர்களின் நினைவுகளும், அவர்கள் பகவானுடன் வாழ்ந்த விதமும், பகவான் தனது பவித்ரமான வாழ்க்கையின் மூலம் மெய்ப்பொருளை அவர்களுக்கு எவ்வாறு உணர்த்தினார் போன்ற விஷயங்கள் நமக்கு மிகவும் முக்கியமானவையாக உள்ளன.

சாட்விக் தனது குருவிடம் கொண்டிருந்த உறவு தனிப்பட்டதாகும். “நீங்கள் நேரில் பார்த்தபோதும் அவருடன் பழகியபோதும் பகவான் எப்படி இருந்தார்?” அவரிடம் விசேஷமாக, உங்களைக் கவரும் விதத்தில் இருந்தது என்ன?” என்று நான் அவரிடம் கேட்டபோது பின்னர் தனது நினைவுகளில் என்ன எழுதினாரோ அவற்றையே கூறினார். “தெய்வீக ஒளியின் பிரகாசத்தால் பகவான் அழகுடன் ஜ்வலித்தார். அவருடையது போன்ற மென்மையான கைகளை நான் இதுவரைக் கண்டதில்லை. கைகளாலேயே அவரால் பேச முடியும் என்று சொல்லுமளவுக்கு அவர் தனது கைகள்



**மலையில் பகவானுடன்**

மூலம் தன்னை வெளிப்படுத்திக் கொள்வார். சீரான முக அமைப்பு உடையவர். அவரது அதிசயிக்கத்தக்க கண்கள் புகழ் பெற்றவை. எடுப்பான நெற்றியையுடையவர். அவரது உயரமான உச்சந்தலையைப் போன்று நான் பார்த்ததே இல்லை. இப்படிப்பட்ட உயரமான உச்சந்தலையை இந்தியாவில் 'ஞானத்தின் இருப்பிடம் (Dome of Wisdom)' என்று கூறுவதுண்டு. அவ்வாறு சொல்வது நம் பகவான் விஷயத்தில் மிகவும் பொருத்தமானதே! சீரான உடல் அமைப்புடன் இருந்த பகவான் சராசரியான உயரம்தான் என்றாலும் அவரது தோற்றம் மிகவும் வசீகரமாக இருந்ததால் பார்ப்பவர்கள் அவரை நல்ல உயரம் என்றே கூறுவார்கள். நல்ல நகைச்சுவையுடன் பேசக்கூடிய அவரது முகத்தில் எப்போதும் புன்னகை தவழும். நகைச்சுவையோடு கூடிய பல கதைகளை அவரால் கூற முடியும் என்பதுடன் அருமையாக நடிக்கவும் முடியும். எந்தக் கதையைக் கூறினாலும் அதன் கதாநாயகனைப் போல் நடித்துக் காட்டியே கூறுவார். பலரும் தங்கள் குடும்பக் கதைகளை அவருடன் பகிர்ந்து கொள்ளும் போது மகிழ்ச்சியோடு கூறப்பட்டால் பகவானும் அவர்களோடு சேர்ந்து சிரிப்பார்; துயரக் கதைகளாக இருந்தால் அவரும் கண்ணீர் சிந்துவார். இவ்வாறு, பிறரது உணர்ச்சிகளை எப்போதும் பிரதிபலித்தவாறே இருப்பார். சாதாரணமாகத் தனது குரலை உயர்த்திப் பேச மாட்டார். சில சமயங்களில் கோபிப்பதாகத் தோன்றினாலும் கோபத்தின் சுவடு அவரது அமைதியின் மீது பதியாது. அது போன்ற சமயங்களில் உடனே அவரிடம் பேசினால் கூட மிகவும் அமைதியாகப் பதிலளிப்பதுடன், கலக்கமற்றுமிருப்பார். விடாமல் பேசுவதோ, தேவையில்லாமல் பேசுவதோ அவருடைய சுபாவமன்று. அவரது அமைதியான தோற்றம் நாம் முட்டாள்தனமாக, அர்த்தமின்றி 'சள சள'-வென எத்துணை பேசுகிறோம் என்பதைத் தெளிவாகக் காட்டும். பகவான் எல்லாவிதத்திலும் எளிமையையே உசிதமென எண்ணினார். அதனால் தரையில் அமர்வதையே விரும்பினார். ஆனால் சோபாவில் அமரும்படி வற்புறுத்தப்பட்டதால், ஒரு நாளில் பெரும்பான்மையான நேரத்தை அவர் சோபாவிலேயே கழித்தார். தனக்கென விசேஷ சலுகைகள் அளிப்பதை அவர் ஒரு போதும் அனுமதித்ததில்லை. ஒரு நாளைக்குச் சில முறையேனும் மலை மீதேறிச் சுற்றுவது அவருக்குப் பிடித்த ஒன்று. பகவானுக்கு எதன்மீதாவது பற்று இருந்ததென்று கூற

வேண்டுமானால் மலைமீது இருந்தது என்று கூறலாம். அவர் மலையை மிகவும் நேசித்தார்; அதையே கடவுள் என்றும் அவர் கூறுவதுண்டு,'' என்று சாட்விக் கூறியுள்ளார்.

சாட்விக் பகவானுடன் நெருங்கிப் பழகினார். அவரைக் கலந்தாலோசிக்காமல் சிறியதோ அல்லது பெரியதோ எந்தக் காரியத்தையும் சாட்விக் மேற்கொள்ள மாட்டார். பகவான் தன் ஒப்புதலையோ, மறுப்பையோ வார்த்தைகள் மூலம் வெளிப்படுத்த மாட்டார் என்றாலும் அவரது முகபாவத்திலிருந்து அவரது பதில் என்னவென்பதை மூத்த பக்தர்கள் புரிந்து கொண்டு விடுவார்கள். தனக்கு உடன்பாடு இருக்குமானால் பகவான் தனது தலை அசைவின் மூலம் தெரிவிப்பார். இல்லையென்றால் அவருக்கே உரிய கம்பீரமான மௌனத்தில் ஆழ்ந்து விடுவார். ஒரு முறை சாட்விக் கடுமையான பல் வலியால் துன்புற்றார். அந்த நாட்களில் அருகிலிருந்த பாண்டிச்சேரியில் தான் நல்ல பல் மருத்துவர்கள் இருந்தனர். "பகவானே! பல் வலியால் மிகவும் அவதிப்படுகிறேன். நான் பாண்டிச்சேரிக்குச் சென்று சிகிச்சை பெற்று வரட்டுமா?'' என்று சாட்விக் கேட்ட போது கம்பீரமான தனது மௌனத்தால் பகவான் மறுப்பை வெளிப்படுத்தியதால் அவர் போகவில்லை. மூன்று தினங்களில் பல்வலி மாயமாய் மறைந்தது. "ஒருவர் குருவின் விருப்பத்திற்கு இசைந்தே செயல்பட வேண்டும். அவருடைய பதிலை 'சரி' அல்லது 'இல்லை' என்று வார்த்தைகளால் தெரியப்படுத்த வேண்டும் என்பதில்லை; குறிப்பால் கூட வெளிப்படுத்தலாம்; அவருடைய பதில் மறுப்பாக இருந்தாலும், அதை ஏற்றுக் கொண்டாலே போதும்; அதனால் நன்மையே விளையும்,'' என்று சாட்விக் உணர்த்தினார்.

தியானம் செய்வது, ஆன்மீகப் புத்தகங்களைப் படிப்பது, பகவான் முன் நீண்ட நேரம் அமர்ந்திருப்பது போன்ற ஸாதனைகளை சாட்விக் நிஷ்டையுடன் செய்தார் என்று ஏற்கனவே பார்த்தோம். ஆறடி, இரண்டு அங்குல உயரம் இருந்த அவரால் நீண்ட நேரம் தரையில் சம்மணமிட்டு அமர்வது கடினம் என்பதால் கஷ்டப்படுவார். இதைக் கண்ணுற்ற பகவான், தியானம் செய்யும் போது அணிந்து கொள்ளும் ஒரு வித 'பெல்ட்டை' (Belt) அணியுமாறு ஆலோசனை கூறினார். தனது நினைவுகளை எழுதும் போது, தரையில் அமர்ந்து கால் முட்டிகளைச் செங்குத்தாக வைத்தவாறு, உடலைச் சுற்றி அணியப்பட்ட, நூலால் ஆன பெல்ட்டைத் தான் அணிந்ததாகவும் அதனால் சுவரில் சாயாமலும் கால்களை நீட்டாமலும் தன்னால் உட்கார முடிந்தது என்றும் பல மணி நேரம் சிரமமின்றி தரையில் அமர முடிந்தது என்றும் கூறியுள்ளார். அப்போதிருந்து, பழைய ஹாலின் ஒரு மூலையில் தியான 'பெல்ட்' அணிந்தவாறு சாட்விக் அமர்ந்திருப்பார். பகவான்தான் இந்த யுக்தியைத் தனக்குக் கற்றுத் தந்ததாக என்னிடம் அவர் கூறியபோது "இது பகவானது யுக்தி என்று நீங்கள் ஏன் உங்கள் புத்தகத்தில் எழுதவில்லை?'' என்று நான் கேட்டேன். "அதை எழுதவேண்டாமென பகவான் கூறியதால்தான் எழுதவில்லை,'' என அவர் பதில் உரைத்தார். "பெல்டை பகவான் அளித்ததைக் குறிப்பால் உணர்த்தியிருக்கலாம்!'' என நான் கேட்டுவிட்டுப் பின்னர், "அவ்வாறு செய்திருந்தால் நீங்கள் பகவானது கட்டளையை மீறியதாகவும் ஆகாது. நாங்களும் குறிப்பால் அறிந்து கொண்டிருப்போம்,'' என்று கூறினேன். அதற்கு அவர், இதைப் பற்றிய சிறு குறிப்பை அதில் எழுதியுள்ளதாகக் கூறினார். சாட்விக்கின் நினைவுகளை ஆழமாகப் படித்தபோது அதேபோன்ற 'பெல்ட்'-ஐத் தன் தந்தை உபயோகித்திருந்த விபரத்தை பகவான் சாட்விக்குடன் பகிர்ந்து கொண்டார் என்னும் விஷயம் வெளிப்பட்டது. பகவானுடைய தந்தை எப்போதாவதுதான் அந்த 'பெல்ட்'-ஐ அணிவார் என்ற போதும், சாட்விக் தரையில் உட்காரக் கஷ்டப்பட்டதால் அதைப் பற்றிய நினைவு வந்ததால், அவருக்கு ஆலோசனை வழங்கியுள்ளார். தனது பக்தர்களின் லௌகீக, ஆன்மீகத் தேவைகளைப் பகவான் எத்துணை அக்கறையுடன் பூர்த்தி செய்துள்ளார்!

சாட்விக் அவருடைய புத்தகத்தில் எழுதாத ஒரு சம்பவத்தை S. S. கோஹென் என்னிடம் கூறினார். ஆச்ரம அலுவலகத்தில் ஆங்கிலக் கடிதப் போக்கு வரவுகளைக் கவனித்து வந்த நபருக்கு எங்கோ போக வேண்டிய அவசியம் ஏற்பட்டது. உதவிக்கு ஆள் இல்லாத போது என்ன செய்வதென்று புரியாமல் எனது பாட்டனார் சின்னஸ்வாமி, சாட்விக்கை அழைத்து அலுவலகத்திற்கு வந்து ஆங்கிலக் கடிதப் போக்கு வரவுகளைக் கவனித்துக் கொள்ளுமாறு கேட்டுக் கொண்டார். சாட்விக் மறுப்புத் தெரிவித்து விட்டுத் தன் அறைக்குத் திரும்பிச் சென்று விட்டார். என்றாலும் அவருடைய மனசாட்சி அவரை உறுத்தத் தொடங்கியது. எல்லோருமே, அதிலும் முக்கியமாக சின்னஸ்வாமி எனக்குப் பல உதவிகளைச் செய்துள்ளார். அவர் என்னிடம் சிறு உதவியை நாடிய போது நான் மறுத்து விட்டேன்,'' என்று மாலையில் அறைக்கு வந்த கோஹெனிடம் தனது இக்கட்டான நிலையையும் குழப்பத்தையும் சாட்விக் எடுத்துரைத்தார். பகவானிடம் சென்று அவரது அறிவுரையைக் கேட்குமாறு கோஹென் ஆலோசனைக் கூறி பகவானிடம் அழைத்துச் சென்றார். சாட்விக்கின் பிரச்சனையைப் பற்றிக் கேட்ட பகவான் சிறிது நேரம் மௌனமாக இருந்தார். பிறகு கோஹெனைப் பார்த்து ''தியானத்தில் ஈடுபடுவதால் சாட்விக் எனக்கு அதிகப் படியாகவே தொண்டு செய்கிறார்,'' என்று கூறிவிட்டார்.



**சாட்விக் தனது குடிலின் கீழ்**

தியானத்தில் முன்னேறிச் செல்லும் பல ஸாதகர்கள், சொல்ல முடியாத கடுமையான பயத்தை அனுபவிக்கின்றனர். சாட்விக்கிற்கும் இது போன்ற நிலை ஏற்பட்ட போது பகவானிடம் சென்று அதைப்பற்றிக் கூறினார். "'பயம்' என்பது உங்களுக்கு ஏற்படுவது இல்லை; உங்களுடைய அஹங்காரமே அதைத் தோற்றுவிக்கிறது என்பதால், அஹங்காரம்தான் அந்த பயத்தை எதிர்கொள்ள வேண்டும்; நீங்களல்ல. 'யாருக்கு இந்த பயம் வருகிறது?' என்று நீங்கள் கேட்டுக் கொண்டால் அது தானாகவே விலகிவிடும். பலவிதமான தடைகளை, அதுவும் முக்கியமாக தியானத்தில் எழுப்புவது அஹங்காரத்தினுடைய வேலை. எத்தகைய தடங்கலாக இருந்தாலும் உடனே 'நான் யார்?' என்ற கேள்வியை எழுப்புங்கள். 'யாருக்கு இந்தக் கஷ்டம் வந்துள்ளது?', 'இந்த கஷ்டப்படுபவன் யார்?' என்ற வினாக்களை எழுப்பும் போது, மறுகணமே அது தானாக மறைந்து விடும். 'நான் யார்?' என்ற கேள்வியை எழுப்பும் போது அதற்கான பதிலை எதிர்பார்க்காமல், மௌனத்தின் மீது கவனத்தைத் திருப்பினால் அதுவே அஹங்காரத்தை உடனடியாக அழித்துவிடும்,'' என பகவான் பதிலளித்தார்.

சாட்விக் மிகவும் பக்குவமடைந்திருந்ததால் பகவானது சொற்களைக் கேட்ட மாத்திரத்திலேயே, அவருடைய பயம் முழுமையாக விலகியதோடு அதன் பின்னர், தியான வேளையில் மீண்டும் பயம் ஏற்படவில்லை.

ஒரு முறை சாட்விக் படித்துக் கொண்டிருந்த ஒரு புத்தகத்தில் குருவினது ஒரேயொரு அருட்பார்வை முக்தி பெறுவதற்குப் போதுமானது என்று குறிப்பிடப்பட்டிருந்தது. 'ஒரேயொரு பார்வை முக்தியை அளிக்கவல்லது என்றால் எல்லோரும் ஏன் முக்தியடையவில்லை?' என்ற சந்தேகம்



**தாடியோடு சாட்விக் – குருவின் பின்னால் நிற்பது**

அவருக்கு எழவே பகவானிடம் சென்று அதைக் கூற ஆரம்பித்து "பகவானே! சாஸ்திரங்கள் இவ்வாறு கூறுகின்றன" என்று சாட்விக் கூறி முடிக்குமுன் பகவான் குறுக்கிட்டு "நிலக்கரி, அடுப்புக்கரி, வெடிமருந்து" என்று மூன்று வார்த்தைகளைக் கூறினார். சாட்விக் திகைப்புற்று

“பகவானே! நீங்கள் சொல்வதன் அர்த்தம் என்ன?” என்று கேட்டார். “குருவினுடைய அருட்பார்வை எப்போதும் இருக்கிறது. அதன் சக்தி எல்லா காலத்திலும் ஒன்று போலவே உள்ளது. ஆனால் அதைப் பெற்றுக் கொள்வதற்கு, ஸாதகனுக்குக் குருவைப் போன்றே அத்யாத்ம வேட்கையும், அதில் தீவிரமும் இருக்க வேண்டும். அதனால்தான் நிலக்கரி, அடுப்புக்கரி, வெடி மருந்து இவற்றைப் போன்றவர்கள் ஸாதகர்கள் என்று கூறப்படுகிறது. நிலக்கரியில் நெருப்புப் பற்றுவதற்கு அதிக நேரம் பிடிக்கும். அடுப்புக் கரிக்கு சற்று குறைவான நேரம் போதுமானது. ஆனால் வெடி மருந்தோ ஒரு நொடியில் பற்றிக் கொண்டுவிடும். ஆகையால் சில ஸாதகர்கள் நொடிப் பொழுதிலும், வேறு சிலர் உண்மையை அறிந்து கொள்ள அதைவிடச் சற்று அதிக நேரமும் எடுத்துக் கொள்கிறார்கள். ஆனால் குருவின் உபதேசங்களை நன்றாகக் கேட்டு, பின்னர் பின்பற்றாதவர்களுக்கு மிகமிக நீண்ட காலம் தேவைப்படுகிறது,” என்று பகவான் கூறினார். “பயம் தோன்றிய மறுகணமே ‘நான் யார்?’ என்ற கேள்வியை எழுப்பினால் அது மறைந்து போகும்,” என்று பகவான் கூறிய உடனேயே அதனை சாட்விக் பயிற்சி செய்ததால் அவரது பயம் உடனடியாக மறைந்து விட்டது. இராணுவத்தில் பணியாற்றிய சாட்விக் பகவானது அடியார்களில் உண்மையாகவே ‘வெடி மருந்து’ என்பதில் ஐயமில்லை.

ஆன்மீகப் புத்தகங்கள் படிப்பதில் மிகுந்த ஆர்வமுள்ளவர் சாட்விக், என்பதை அறிந்திருந்த பகவான், பாரம்பரிய நூல்களான கைவல்ய நவநீதம், திரிபுர ரஹஸ்யம், அத்வைதபோத தீபிகா முதலிய நூல்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்க்குமாறு முனகால வேங்கடராமய்யாவிடம் கூறினார். மொழிபெயர்க்கும் பணி முடிந்தபின் சாட்விக் அவற்றை டைப் (தட்டச்சு) செய்து தனக்குத் தெரிந்த ஒரு பைண்டரிடம் கொடுத்து ஒவ்வொரு புத்தகத்திலும் இரண்டு பிரதிகளைக் கறுப்புத் தோலினால் அட்டையிட்டுத் தருமாறு அறிவுறுத்தினார். அவற்றில் பகவானுக்கு ஒரு பிரதியை அளித்து விட்டு இரண்டாவது பிரதியைத் தான் வைத்துக் கொள்வார். தனது சுழலும் நூலகத்தில் பகவான் இந்தப் பிரதிகளை வைத்திருந்தார். ஸம்ஸ்க்ருதமோ தமிழோ அறியாத டாக்டர் மீஸ் (Dr. Mees), மிஸ் மெர்ஸ்டன் (Ms. Merston), போலந்தைச் சேர்ந்த உமாதேவி, W. Y. இவான்ஸ்-வென்ட்ஸ் (W. Y. Evans-Wentz), மாரிஸ் ஃப்ரீட்மன் (Maurice Frydman) இவர்களைப் போன்ற தீவிர ஸாதகர்களுக்கு அவற்றைப் படிப்பதற்குக் கொடுப்பார். இந்த மொழிபெயர்ப்புகள் நிகழ்வதற்கு சாட்விக்கின் ஆர்வமும் பகவானுக்கு அவர் மீதிருந்த கருணையுமே காரணம்.

சாட்விக் பகவானுடன் பல வேடிக்கைகள் செய்வார். அந்த நாட்களில் பழைய ஹாலில் மின் விசிறி (ceiling fan) இருக்கவில்லையென்பதால் அதற்குப்பதிலாக, மனித சக்தியால் இயக்கப்பட்ட ‘பங்கா’ (நீண்ட ஒரு கட்டையில் அதே நீளத்திற்கு துணியும் இணைக்கப்பட்ட நாட்டு விசிறி- கயிற்றால் இழுக்கப்படும் போது அதன் அசைவினால் மெதுவாகக் காற்று வீசும்) என்ற விசிறி உபயோகப்படுத்தப்பட்டது. பழைய ஹாலில் பகவானின் சோஃபாவிற்குப் பின்னால் இந்த பங்காவின் கயிறு தொங்கவிடப்பட்டிருக்கும். ஒரு நாள் ஹாலில் யாருமில்லாத சமயத்தில் சாட்விக் தனது ஆறடி நான்கு அங்குல உடம்பை எப்படியோ மடித்து சோஃபாவிற்குப் பின் மறைந்து அமர்ந்து கொண்டார். பகவான் சோஃபாவில் வந்து அமர்ந்தவுடன், பங்கா கயிற்றை சாட்விக் ரஹஸ்யமாக இழுக்கவும் தொடங்கினார். யாருமேயில்லாத ஹாலில் பங்கா முழு வேகத்தில் அசைந்து கொண்டிருப்பதை கவனித்த பகவான் அதிசயித்தார். பகவானால் மெதுவாகத்தான் திரும்ப முடியும் என்பதால் பங்காவை யார் இழுக்கிறார்கள் என்பதை அவர் கவனிக்க முற்படும் போது சாட்விக் இழுப்பதை நிறுத்திவிட்டு ஒளிந்து கொள்வார். யாரையும் காணாமல் அவர் திரும்பிய போது, பங்கா கயிறை மீண்டும் சாட்விக் இழுப்பார். இவ்வாறு சில முறைகள் நிகழ்ந்த பின்னர் இறுதியாக, “சாட்விக்! நீங்கள் அங்கு இருப்பது எனக்குத் தெரியும்,” என்று பகவான் கூறும் வரை இந்த விளையாட்டு நிகழ்ந்தது.

புனித மலையின் பல ரஹஸ்யங்களை பகவான் சாட்விக்குடன் பகிர்ந்து கொண்டார். ஒரு முறை பழைய ஹாலில் அவர்கள் இருந்த போது அவரை அழைத்து, "சாட்விக்! நான் மலையில் சுற்றிக் கொண்டிருந்த போது திடீரென்று மலையினுள் சென்று விட்டதாக உணர்ந்தேன். அங்கு பல நகரங்கள், அருவிகள், நதிகள், கோயில்கள் இவற்றையும், மக்களையும் கண்டேன். இப்போது வெளியில் இருப்பவர்கள் எல்லோருமே மலையினுள் இருந்தனர். சாட்விக்! நீங்களும் அதனுள் இருந்தீர்கள்," என்று கூறினார். இதன் பிறகு சாட்விக், முனகால வேங்கடராமய்யா, ஆஸ்போர்ன் மற்றும் பலரும் தாங்களும் மலையினுள் இருப்பதாக உணர்ந்ததோடு அங்கு நகரங்களையும் நீர்வீழ்ச்சிகளையும் தியானத்தில் ஈடுபட்டிருந்த ஸாதுக்களையும், ஞானிகளையும், ரிஷிகளையும் கண்டு, பகவான் பெற்ற அதே அனுபவத்தை அவர்கள் ஒவ்வொருவரும் பெற்றனர். இது ஒரு அதிசயம் என்று தோன்றினாலும் அது ஒரு உண்மையான ஆன்மீக அனுபவமாகும். நமக்குள்ளே விழிப்புடன் கவனிக்க வேண்டிய இருப்புணர்வே (I AM) மலையினுள்ளேயும் இருப்புணர்வாக (I AM) விளங்குகிறது.

அருணாசலத்தைப் பற்றி மேலும் எடுத்துரைக்க வேண்டும் என்று சாட்விக் பகவானைக் கேட்டுக் கொண்டபோது, "அவருடைய பாதம் படாத இடமே இல்லை என்னும் அளவுக்கு மலை முழுவதும் சஞ்சரித்திருக்கிறார்" என்று கூறினார். மலையடிவாரத்தில் காட்டிற்குள் அமைந்திருந்த பச்சையம்மன் கோயிலில் பகவான் தங்கியிருந்த சமயம், மலையில் அவர் அலைந்து கொண்டிருந்த போது ஒரு தினம் நிகழ்ந்த சம்பவத்தை நினைவு கூர்ந்தார். அன்று, மேலே பார்க்க நேர்ந்தபோது, மலையிலிருந்த செங்குத்தான பாறையின் முகப்பில் பெரிய ஆலமரம் ஒன்றை பகவான் பார்த்தார். புராணக் கதைகளில் பகவான் தக்ஷிணாமூர்த்தி, அருணகிரி யோகியாக அமர்ந்திருக்கக் கூடிய இடமாக அது இருக்குமோ, என்ற எண்ணம் பகவானுக்கு எழுந்தது. உடனே மேலே ஏறி அந்த இடத்தை அடைய விரும்பிய அவர், வழியில் புதரிலிருந்த குளவிக் கூட்டைத் தற்செயலாகக் காலால் கலைத்து விட்டார். அதனால் கோபமடைந்த குளவிகள் அவர் கால்களில் பலமாகக் கொட்டிவிட்டன. பகவான் கண்ட காட்சி திடீரென்று மறைந்தது. வீங்கிய இடது காலுடன் அவர் கோயிலுக்குத் திரும்பினார். பிற்காலத்தில் அந்தக் குறிப்பிட்ட ஆல மரத்தை நோக்கி மலை ஏறிச் செல்ல வேண்டாம், என்று பக்தர்களை அவர் எச்சரித்து வந்தார். "அன்று மலை மீது செல்லும் தனது முயற்சியைக் கைவிட்டு பகவான் கோயிலுக்குத் திரும்பியது நம்முடைய பெரும் பாக்கியமே. இல்லாவிடில் பகவானை அன்றே நாம் இழந்திருப்போம். அவரே அருணாசலம் என்பதால் 1950-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 14-ம் தேதி தனது உடம்பை உகுத்த போது அதிலிருந்து கிளம்பிய ஜோதி மலை உச்சி வரைப் பயணித்து அதோடு ஒன்றியது போல, அருணாசல யோகியோடு அன்றே ஒன்றியிருப்பார்," என்று சாட்விக் கூறினார்.

"சாட்விக் தனது முந்தைய பிறப்பில் நம்மில் ஒருவராகத் தான் இருந்திருக்கிறார். ஆனாலும் மேலை நாட்டில் பிறக்க வேண்டுமென்ற பெரிய ஆசை அவருக்கு இருந்ததால் சாட்விக்காக அங்கு பிறந்து, இப்போது நம்மிடம் மீண்டும் வந்து விட்டார்," என்று ஒரு முறை பகவான் வெளிப்படையாகவே கூறியுள்ளார். பகவான் முந்தைய பிறப்பு குறித்தோ, மறுபிறவி பற்றியோ ஒரு போதுமே பேசியதில்லை என்பதால் இந்த விஷயத்தை சாட்விக் என்னிடம் கூறிய போது அதை நான் ரசிக்கவில்லை. அவர் கூறியதை நான் அலட்சியப்படுத்துவதாக உணர்ந்த போது, "கணேசா! பகவான் கூறியதில் உள்ள முக்கியமான கருத்து 'ஆசைகள் இருக்கக் கூடாது' என்பது தான். கவனிக்கப்பட வேண்டியது அதுவேயன்றி எனக்கு முன் ஜன்மம் இருந்ததா? நான் மறுபிறவி எடுத்தேனா? என்பதல்ல," என்று சாட்விக் கூறினார். ஆசைப்படுவதோ அல்லது அவற்றை வளர்த்துக்

கொள்வதோ கூடாது என்பதை நம்மைப் போன்ற ஸாதகர்களுக்கு அறிவுறுத்துவதற்காகவே இவ்வாறு கூறப்பட்டது. இதை உணர்ந்து கொண்டு நமக்குள் விளங்கும் இருப்புணர்வை (I AM) எப்போதும் தியானம் செய்ய வேண்டும்.

பகவான், தன்னை குரு என்று குறிப்பால் மறைமுகமாக உணர்த்தியதற்கு சாட்விக்கே முக்கிய காரணம். குரு, சீடர் என்ற துவைத பாவத்தை பகவான் ஒரு போதும் ஏற்றுக் கொண்டதில்லை. தன்னை குரு என்றும் மற்றவர்களைச் சீடர்களென்றும் அவர் ஒரு போதும் பிரகடனம் செய்யவில்லை. ஆனால் ஒரு குறிப்பிட்ட கட்டத்தில் பகவானுடைய இந்த நிலைப்பாட்டினால் சாட்விக்கிற்கு பிரச்சனையிருந்தது. "நீங்கள் ஒரு போதும் உங்களை குரு என்று பகிரங்கமாகக் கூறிக் கொள்வதில்லை. ஆனால் குரு இல்லாமல் ஒரு சீடன் முக்தி பெற இயலாது என்றும் கூறுகிறீர்கள். அப்படியானால் என்னுடைய நிலைதான் என்ன? நான் ஒரு குருவைத் தேடிச் செல்ல வேண்டுமா?" என்று குழப்பத்தோடு சாட்விக் பகவானைக் கேட்ட போது 'இருப்பது ஆத்மா ஒன்றே. அதற்கு அன்னியமாக குரு இருக்க முடியாது' என்றும், 'ஒரு உண்மையான குருவால், சீடனிலிருந்து தன்னை அன்னியமாக, குரு என்று வேறாகச் சொல்ல முடியாது. அனைவருள்ளும் இருப்புணர்வாக இருப்பது ஒரு ஆத்ம வஸ்துவே,' என்று அவருக்குத் தெளிவுபடுத்த முயற்சி செய்தார். ஆனால் பகவானுடைய பதில் சாட்விக்கிற்கு திருப்தி தரவில்லை. அதைப் புரிந்து கொண்ட பகவான் மற்றவர்களைத் திரும்பிப் பார்த்து "நான் சொன்னது சாட்விக்கிற்குத் திருப்தியைத் தரவில்லை. நான் கூறியதையெல்லாம் எழுதி, சப்-ரெஜிஸ்ட்ராரிடம் சட்ட ரீதியான பத்திரத்தைத் தயார் செய்யச் சொல்லுங்கள். அலுவலகத்திலிருந்து முத்திரையையும் அனுப்பச் சொல்லுங்கள். பத்திரத்தில் முத்திரையைப் பதித்து நான் சாட்விக்கிடம் கொடுக்கிறேன்," என்று கூறும்படியாயிற்று. இவ்வாறு, குரு என்று தன்னை பகவான் கூறாமல் கூறி ஒப்புக் கொள்ளச் செய்தார் சாட்விக்.



**புலித்தோலில் அமர்ந்திருக்கும் சாது அருணாச்சலா**

பகவான் உடலை உகுப்பதற்குச் சில தினங்களுக்கு முன், பகவானது நிர்வாண அறைக்குச் சென்று, "பகவானே! நீங்கள் விடைபெறப் போகிறீர்களே!" என்று தான் கதறி அழுததாக சாட்விக் என்னிடம் சொன்னார். அதற்கு பகவான், "தனது சீடர்களின் இதயத்தில் தனது இருப்பை நிலைநிறுத்துவதுதான் குருவினுடைய தலையாய கடமை; அதைச் செய்த பின்னர் எப்போது வேண்டுமானாலும் அவர் சரீரத்தை விடலாம்" என்று கூறினார். இப்படி தன் பதில் மூலம், அந்த சந்தர்ப்பத்தில் கூட, தன்னை குரு என்று வெளிப்படுத்திக் கொண்டார் பகவான்.

பழைய பக்தர்களான முருகனார், கோஹென், ஆஸ்போர்ன், சாது நடனானந்தா, தேவராஜ முதலியார் மற்றும் பலரிடம், “நீங்கள் ஆத்ம ஸாக்ஷாத்காரம் அடைந்துவிட்டீர்களா?” என்று நான் கேட்ட போது அனைவருமே புன்னகை செய்தனரே தவிர, ‘ஆம், இல்லை’ என்று உறுதியான பதிலைத் தரவில்லை. ஆனால் சாட்விக்கிடம் அந்தக் கேள்வியைக் கேட்ட போது, ஆமாம் அல்லது இல்லையென்று கூறாமல் பதிலாக, “என்ன நடந்தது என்று நான் உனக்குக் கூறுகிறேன். நான்கைந்து வருடங்கள் பகவானுடன் இருந்த பின்னர், அத்யாத்மத்தில் நான் எத்துணை முன்னேறியுள்ளேன் என்று என்னையே மதிப்பிடும் தவறு செய்தேன். ஸாதகர்கள் செய்யக் கூடாத காரியமிது. நான் சற்றும் முன்னேறவில்லையென்று எனக்குத் தோன்றியது. ரமணாச்ரமத்தில் என்னை ஞானியாகவே பார்த்த அநேகர், “ஓ! அவர் மிகவும் பாக்கியசாலி. பகவானுடன் மிகவும் நெருக்கமாக இருப்பதோடு தீவிர தியானத்தில் ஈடுபடுகிறார். அவர் ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெற்றுவிட்டார்,” என்று கூறிய போது ‘நான் முன்னேறவில்லை’ என்ற எனது நினைப்பிற்கும் மற்றவர்களது அபிப்ராயத்திற்கும் இருந்த முரண்பாட்டை நான் உணர்ந்தேன். எப்படியானாலும் உலக வாழ்க்கையைத் துறந்து விட்ட என்னால் மீண்டும் அந்த வாழ்க்கையை ஏற்றுக் கொள்ள முடியாது. அதனால் முன்னும் போக முடியாமல் பின்னும் போக முடியாமல் தவித்துத் துயரத்தில் மூழ்கினேன். ஹாலில் இருந்த பகவானிடம் ஓடிச் சென்ற போது அவர் அங்கு தனியாக இருப்பதை உணர்ந்து ‘பகவான்! நான் இங்குமில்லாமல் அங்குமில்லாமல் திரிசங்கு சொர்க்கத்தில் உள்ளேன். என்னால் வேதனையைத் தாங்க முடியவில்லை,’ என்று அவரிடம் கூறினேன். பகவான் மிகுந்த கருணையோடு ‘சாட்விக்! இதையெல்லாம் கூறுவது யார்?’ என்று கேட்டவுடனே, மின்சாரம் பாய்வது போன்ற அதிர்ச்சி என் உடம்பில் ஏற்படவும், நான் என் அறைக்கு ஓடிப் போய்க் கதவுகளை மூடிக் கொண்டு, எதிலும் சாராத ஸமத்வ நிலைக்குச் சென்றேன். அத்யாத்மத்தில் பக்குவம் அடைந்துள்ளேனா, உலகத்தில் என்னால் வாழ முடியுமா என்றெல்லாம் நான் சற்றும் கவலைப் படவில்லை. நான் மௌனமாக ஸமத்வ நிலையிலிருந்தேன். மகிழ்ச்சியாகவோ, துக்கமாகவோ இல்லாமல் சில தினங்கள் கடந்தன”, என்று சாட்விக் கூறினார். அவர் அனுபவித்த ஒரே போகம் அவருடைய வராந்தாவிலிருந்த ‘BATHTUB’—ல் (குளியல் தொட்டியில்) குளிப்பது மட்டுமே. இந்த நிகழ்ச்சிக்குப் பின்னர் ஒரு நாள் எதிர்பாராதவிதமாக அந்த சம்பவம் நிகழ்ந்தது. “கணேசன்! ஒரு நாள் நான் குளித்துக் கொண்டிருந்தேன். அப்போது ஆன்மீக நிலையிலோ, பிரார்த்திக்கும் மன நிலையிலோ நான் இருக்கவில்லை. அப்போது, திடீரென்று, இருப்பை ‘(I AM)’ உணர்ந்தேன்” என்று கூறினார். வெறும் வார்த்தைகளாக இல்லாமல் தன் ‘இருப்பை’ உணர்ந்தார். அவர் இருந்த பரவச நிலையில் ஈரத்தைக் கூடத் துடைக்காமல் ஒரு துண்டை இடுப்பில் சுற்றிக் கொண்டு, எங்கிருந்து சில நாட்களுக்கு முன் ஓடிப் போனாரோ, அதே ஹாலுக்குச் சென்றார். நல்ல வேளையாக, இந்த முறையும் பகவான் தனியாக இருந்தார். அங்கே சாட்விக் என்று தனி வ்யக்தியாக இல்லாமல், தனது ‘இருப்பை’ மட்டும் அனுபவித்த பரவச நிலையில் பகவானிடம் சென்று, ‘பகவானே! இது தானா அது?’ என்று வினவிய போது பகவான் ஆனந்தமாகச் சிரித்து ‘ஆம் சாட்விக்! இது தான் அது!’ என்று உறுதி செய்தார். “அதன் பிறகு நான், ‘அது இத்தனை சுலபமானதா?’ என்று கேட்ட போது. ‘ஆம்! அத்தனை எளிதானது தான்!’ என்று பகவான் கூறினார். இதற்குப் பின்னர் எனக்கு எவ்வித சந்தேகமும் எழவேயில்லை,” என்று சாட்விக் தெரிவித்தார்.

ஒரு முறை சாட்விக் “கணேசன்! கல்வி, கேள்விகளால் பெறும் அறிவை மேலும் வளர்த்துக் கொள்ள முயற்சி செய்யாதே. ஏனென்றால் ஒரு நிலையில் ஆத்மானுபூதிக்கு அதுவே பெரிய தடையாக இருக்கும். நான், தமிழ் மொழியைக் கற்க விரும்பி, பகவானிடம் அதற்கு அனுமதி கோரியபோது, ‘ஏன் தேவையில்லாத பாரத்தைச் சுமக்க விரும்புகிறாய்?’ என்று பகவான் தந்த

மறுமொழி எனக்குத் தெளிவைத் தந்தது,'' என்று சாட்விக் என்னிடம் கூறியதோடு "ஸத்தியத்தை உணர்வதற்கு, கற்றதனைத்தையும் இறுதியில் விட்டுவிட வேண்டி வரும். 'நான் யார்?' என்ற ஆத்ம விசாரத்தின் இடைவிடாப் பயிற்சியினால் உள்ளே ஆழ்ந்து மூழ்குவதாலேயே உண்மையை அனுபவிக்க இயலும். ஆத்மானுபவத்தைப் பெற உதவும் சாவி, 'நான் யார்' என்னும் விசாரத்தின் பயிற்சி, பயிற்சி, பயிற்சி மட்டுமே,'' என பகவான் கூறியதாகவும் சாட்விக் என்னிடம் தெரிவித்தார். நான் அந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு பகவானுடைய உபதேசங்களால் மேலை நாட்டவர்களே அதிகமாகக் கவரப்படுவதன் காரணம் என்னவென அவரிடம் வினவினேன். "மேல் நாடுகளில் பகவானது உபதேசங்கள் வெகுவாகப் பாராட்டப்படுவது உண்மையே. ஏனெனில் அவை உணர்ச்சிகளுக்கு முக்கியத்துவம் கொடுக்காமல், தெளிவான சிந்தனையின் அடிப்படையிலேயே விவாதிக்கப்பட்டுள்ளன. அவர் போதிக்கவில்லை என்பதுடன் விதி முறைகளையும் வகுத்துக் கூறவில்லை. பதிலாக எப்போதுமே ஸாதகனை தன்னுள்ளேயே திருப்பி, அவரவரின் முயற்சியின் முக்கியத்துவத்தை உணர்த்தி, குரு வழிகாட்ட மட்டுமே முடியும் என்பதையும் தெளிவுசெய்தார். ஏனெனில், 'தன்னை அறிதல்' என்னும் ஆத்மானுபூதியை ஒருவர், மற்றொருவருக்குக் கொடுப்பது என்பது ஸாத்தியமேயில்லை,'' என சாட்விக் தெளிவுபடுத்தியதை ஸாதகர்களாகிய நாம் முக்கியமாகக் கருத்தில் கொள்ள வேண்டும்.

பகவானுடைய உயில் எழுதப்பட்டுச் சட்ட பூர்வமாகப் பதிவு செய்யப்பட்ட போது சாட்விக் அதை முழுமையாக ஆதரித்தார். அன்று, உயர்நீதிமன்ற அதிகாரிகள், நீதிபதி இவர்கள் முன்னிலையில் தனது கையெழுத்துக்குப் பதில் பகவான் ஒரு கோட்டை மட்டும் வரைந்தபோது சாட்விக்கும் உடன் இருந்தார். பின்னர், சிலர் அதை எதிர்த்து மனுச் செய்தபோது சம்பந்தப்பட்ட அனைத்து அரசு அலுவலகங்களுக்கும் சென்று, அந்த உயில் பதிவு செய்யப்பட்டபோது தான் அங்கு இருந்ததாகவும் பகவானின் குடும்பத்தினருக்கே நிர்வாக உரிமையளிக்கப் பட்டதென்பதையும் கூறி சாட்சி அளித்ததாகவும் கூறினார். "முன்பின் தெரியாதவர்களிடம் ஆச்ரம நிர்வாகம் ஒப்படைக்கப்படாமல் குடும்பத்தினரிடம் அளிக்கப்பட்டால் அவர்கள், என்ன வந்தாலும் அதை ஒரு போதும் கைவிட மாட்டார்கள். பகவான் எடுத்த முடிவே மிகவும் சிறப்பானது,'' என்பது சாட்விக்கின் அபிப்ராயம். நிரஞ்ஜனானந்த ஸ்வாமியின் மறைவுக்குப் பின்னர் எனது தந்தை, அடுத்த தலைமுறையின் தலைவர் என்ற முறையில் ஆச்ரம மேலாளராகப் பதவி ஏற்றார்.

1956 முதல் 1958 வரை நான் திருவண்ணாமலையில் இருந்தபடியே வேலை தேடிக் கொண்டிருந்தேன். அதில் வெற்றி கிட்டாதபோது மிகுந்த சோகத்தில் ஆழ்ந்திருந்தேன். அம்மாதிரியான ஒரு நாளில் சாட்விக் என்னை அவரது அறைக்கு வருமாறு அழைத்து, "கணேசன்! பகவானுடன் இருந்த காலத்திலிருந்தே எனக்கும் ஆஸ்போர்ன், கோஹென், முனகால வேங்கடராமையா ஆகிய நால்வருக்குமே ஜோதிடத்தில் மிகுந்த ஈடுபாடு இருந்தது. எனக்கும் முனகாலருக்கும் இந்து ஜோதிடத்திலும், கோஹெனுக்கு மேல்நாட்டு ஜோதிடத்திலும் நம்பிக்கை இருந்தது. ஆஸ்போர்னுக்கோ 'சிங்க்' (Ching) என்னும் புராதன சீன ஜோதிடத்தில் நம்பிக்கை இருந்தது. பகவானது உயில்படி ஆச்ரமத்தின் அடுத்த தலைவர் வெங்கிட்டுவின் மூத்த புதல்வரான உன் சகோதரர் சுந்தரம்தான் என்பது எங்களுக்கெல்லாம் தெரியும். ஆனால் பகவானின் தம்பியின் மூன்று பேரர்களில் அவரது ஆன்மீக உபதேசங்களைப் பரப்பப் போவது யார்? என்ற கேள்வி எங்களுக்கு இருந்தது. நாங்கள் ஒவ்வொருவரும் அவரவர் விரும்பும் ஜோதிடத்தின்படி விடை தேடியபோது எங்கள் அனைவருக்கும் கிடைத்த விடை ஒன்றே தான். கணேசன்! நீ தான் அது என்ற ஒரு முடிவையே ஒவ்வொருவரும் அறிந்து கொண்டோம்,'' என்று 1957-ல் ஆன்மீக வாழ்வில்

ஈடுபாடோ, ஆச்ரமத்தில் தங்கும் உத்தேசமோ எனக்கில்லாத அந்த சமயத்தில் சாட்விக்கினால் இது கூறப்பட்டது. “உன்னுடைய இடம் இதுதான் என்று உறுதியானபின் நீ எதற்கு வேலை தேடிக் கொண்டிருக்கிறாய்? இங்கேயே இரு,”. என்று அவர் கூறினார். நான் தங்காமல் வெளியில் சென்றாலும், 1960-ல் திருவண்ணாமலைக்குத் திரும்ப நேர்ந்தது. உபதேசங்கள் குறித்துப் பேசுவது அவற்றைப் பரப்புவதற்காக இருக்கும் பல வழிகளில் ஒன்று என்பது எனக்கு இப்போது புரிகிறது; இங்கு மட்டுமின்றி, வெளிநாடுகளுக்கும் சென்று பகவானது உபதேசங்களைப் பற்றிப் பேசவும், ஸத்ஸங்கங்கள் நிகழ்த்தவும் செய்வேன் என்பதையே அவர்கள் அன்று கூறினார்கள் என்பதைத் தெளிவாக உணர்ந்தேன்.

ஆச்ரமத்திற்குத் திரும்பி வந்து அதன் நிர்வாகப் பணியில் உதவி செய்ய முற்பட்ட போது சாட்விக் எனக்கு மிகவும் பக்க பலமாக இருந்தார். பிரச்சனைகள் பண சம்பந்தமானதாகவோ, சட்ட ரீதியாகவோ எதுவாக இருந்தாலும் சாட்விக் மலை போன்ற உறுதியுடன் எனக்கு உறுதுணையாக நின்றார். 1961-ம் ஆண்டு என் தந்தை ஆச்ரமத்தில் இல்லாத ஒரு சமயத்தில் ஏற்பாடுகளைக் கவனிப்பதும் தீர்மானங்கள் எடுப்பதும் எனது பொறுப்பாக இருந்தது. பத்து தினங்கள் கொண்டாடப்படும் வருடாந்தர கார்த்திகை தீபத்திருவிழா அருணாசலேச்வரர் கோயிலில் நடந்து கொண்டிருந்தது. அந்த விழாவின் உச்சக்கட்டம் மலை உச்சியில் மிகப் பெரிய அளவில் ஏற்றப்படும் கார்த்திகை தீபமாகும். பகவான் வாழ்ந்த காலத்தில் ஹாலுக்கு வெளியில் தீபம் தெரியும் இடத்தில் பகவான் அமர்ந்திருப்பார். மலையில் தீபம் ஏற்றப்பட்ட மறுகணம் பகவான் முன்னர் நெய் விளக்கு ஒன்று ஏற்றி வைக்கப்படும்.



பகவானின் மஹா ஸமாதிக்குப் பின்னர் அந்த இடத்தில் அவருடைய படம் ஒன்றை வைத்து அதன் முன்னால் நெய் விளக்கேற்றும் ஸம்பிரதாயம் இப்போதும் கடைப்பிடிக்கப்படுகிறது.

1961-ம் ஆண்டு கார்த்திகை தீபத்தன்று பலமாக மழைபெய்யத் துவங்கியது. ஸம்பிரதாயப்படி பகவானது படத்தை வெளியில் வைத்து அதன் முன் விளக்கேற்ற முடியாத ஒரு சூழ்நிலையாக இருந்ததால் நான் சற்று பதற்றமடைந்தேன். என் நிலையைக் கண்ணுற்ற சாட்விக் “கணேசன்! பதற்றமடைய வேண்டாம். நாம் உணவுக் கூடத்தில் பகவானது படத்தை வைத்து அங்கு விளக்கேற்றலாம்” எனச் சமாதானம் செய்தார். “பகவானுக்குச் சடங்குகளில் எப்போதுமே ஈடுபாடு கிடையாது என்ற போதும் கார்த்திகை தீபத்தைப் பார்ப்பதில் பிரத்தியேகமான ஆர்வம் இருந்தது.

ஆச்ரம ஸம்பிரதாயத்தை நான் எவ்வாறு கைவிட முடியும்? எனது தந்தை அங்கே இல்லாத சமயத்தில் வழக்கத்துக்கு மாறாக எதையும் செய்ய நான் விரும்பவில்லை,'' என்று சாட்விக்கிடம் எனது இக்கட்டான நிலை பற்றித் தெரிவித்தேன். எனக்கு நம்பிக்கையூட்டும் விதத்தில் "பகவான் இருந்தபோதும் இவ்வாறுதான் ஒரு கார்த்திகை தீபத்தன்று மழை கொட்டியது. உணவுக் கூடத்திற்குச் சென்று, அங்குள்ள பெரிய கதவு ஒன்றைத் திறந்தால் மலை உச்சியைக் காண முடியும் என பகவான் ஆலோசனை அளிக்கவே அவ்வாறே செய்தோம். பகவானுக்கு அருகிலேயே இருந்த நான் "மழை கொட்டுவதால் நம்மால் தீபத்தைக் காண முடியாதே பகவானே!'' என்று கூறவும் அவர் தனது 'பைனாகுலர்' (Binoculars) எடுத்து அதன் வழியாகப் பார்த்தவாறே, 'பாருங்கள்! பாருங்கள்!' என்று கூறிய மறு வினாடி, மலைமீது தீபம் ஏற்றப்பட்டது. கணேசன்! அப்போதுதான் அந்த அதிசயம் நிகழ்ந்தது. நான் மிகுந்த ஆர்வத்துடன் நோக்கிக் கொண்டிருந்த போது மழை நின்றது. சில நிமிடங்கள் மேகங்கள் விலகி வானம் சற்றுத் தெளிந்தபோது மலையில் தீபம் ஏற்றப் படுவதை நாங்கள் கண்டோம். உடனே "இப்போது நெய் விளக்கேற்றுங்கள். மலையில் தீபம் ஏற்றப்பட்டு விட்டது. நாமும் ஏற்றுவோம்,'' என பகவான் கூறியதாகச் சாட்விக் சொல்லி முடித்தார். அப்போதும் எனக்கு நம்பிக்கை வரவில்லை. ஏனெனில் மழை கடுமையாகப் பெய்த வண்ணம் தான் இருந்தது. என்றாலும் சாட்விக் கூறிய ஆலோசனைப்படியே செய்தேன். என்னருகே அமர்ந்திருந்த சாட்விக் திடீரென 'பார்! பார்!' என்று சொல்லவும் பகவான் இருந்தபோது நடந்தது போன்றே, மலையில் தீபம் ஏற்றப்படும் சமயத்தில் மழை நின்றதோடு மேகங்களும் விலகின. உணவுக் கூடத்தினுள் பகவான் படத்திற்கு முன் நெய் விளக்கை நாங்கள் ஏற்றினோம். மறு கணமே மீண்டும் மேகங்கள் சூழவே கார்த்திகை தீபம் எங்கள் பார்வையில் இருந்து மறைந்தது.

பகவானுடைய மஹா ஸமாதிக்குப் பிறகு, பணப் பற்றாக்குறை பிரச்சனைகள் காரணமாக ஆச்ரம காரியங்களில் சிலவற்றை நிறுத்த வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டது. 1938-ல் ரமணாச்ரமத்தில் வேதங்களைக் கற்பிப்பதற்காகத் துவங்கப்பட்ட வேத பாடசாலையை மூட வேண்டிவந்தது. விதிப்படி நடந்து வந்த பூஜைகள் முறைப்படி நடத்தப்படவில்லை. எப்போதுமே திட்டமிட்டு முறையாக செயல்படும் சுபாவமுடைய சாட்விக், நிர்வாகத்திற்கு உதவி செய்யும் வகையில் எனது ஆசிரியர் T. K. சுந்தரேசய்யரின் உதவியோடு வேத பாடசாலையை மீண்டும் செயல்படச் செய்ததோடு பகவானின் ஸமாதி, மற்றும் மாத்ருபூதேச்வரர் கோயிலில் நித்யபூஜைகள் ஒழுங்காக நடப்பதற்கும் வழிவகுத்தார். அன்னையின் கோயிலில் ஸ்ரீசக்ர பூஜையைத் துவக்கி வைத்தது சாட்விக்தான். முழுமையாகப் பகவானிடம் சரணடைந்த பக்தரான சாட்விக், ஆச்ரமத்திலேயே நிலையாக தங்கியிருந்த காரணத்தால் பகவானுடைய உபதேசங்களைப் பரப்புவதற்கு அது பேருதவியாக இருந்தது. ஸாமர்ஸெட்மாம் (Somerset Maugham), ஸ்பால்டிங் (Spaulding) போன்ற பிரசித்தி பெற்றவர்கள் ஆச்ரமத்திற்கு வந்தபோது அவர்களிடம் பேசி, பகவானது பெருமையை அவர்கள் நன்கு உணருமாறு செய்தார் சாட்விக்.

Talks with the Maharshi மற்றும் Day By Day with Bhagavan என்ற புத்தகங்களில் பிழை திருத்தங்கள் செய்து சாட்விக் சரிபார்த்துத் தந்ததால் மேலும் சிறப்பான விதத்தில் உபதேசங்களைப் பரப்புவது ஸாத்தியமாயிற்று. அவற்றிலுள்ள எல்லா ஸம்பாஷணைகளையும் நாம் தற்போது வாசிப்பது போன்று திருத்தி அமைத்தது சாட்விக்கே. Talks with the Maharshi என்ற புத்தகத்தை அச்சிடுமுன் அதற்கென அமைக்கப்பட்ட குழுவினர், கையெழுத்துப் பிரதிகளைச் சென்னைக்கு எடுத்துச் சென்றனர். அங்கே, சிலர், 'மீண்டும் கூறப்பட்டுள்ளது' என்று சொல்லிப் பல பக்கங்களை அச்சிட வேண்டாமென அடித்து நீக்கம் செய்தனர். அச்சிலேற்றுவதற்கு முன்னால் அந்தப் பிரதிகள், மீண்டும்



ஆச்ரமத்திற்கு எடுத்து வரப்பட்டபோது, நான் அலுவலகத்தில் இருந்தேன். சாட்விக்கின் ஒப்புதலைப் பெறுவதற்காக அது அவரிடம் கொடுக்கப்பட்டது. அவற்றைப் படித்துப் பார்த்துவிட்டு, கோபத்தால் சிவந்த முகத்தோடு, அவர் திரும்ப வந்து, ''என் குருவின் வார்த்தைகளை யார் இவ்வாறு அடித்து நீக்கம் செய்திருக்கிறார்கள்? அவர்களுக்கு என்ன தெரியும்? மனித அறிவிற்கு இதெல்லாம் சொன்னதையே சொல்வது என்று படுகிறது. அங்கு அதைத் திரும்பவும் கூற வேண்டியது மிகவும் அவசியமாக இருந்தது என்று அவர்களுக்குத் தெரியுமா?'' என்று பொரிந்து தள்ளினார். புத்தகத்திற்கு அவர் எழுதிய அறிமுக உரையில் ''மீண்டும் சிலவற்றைக் கூறியிருப்பது அர்த்தமுள்ளது தான். அதிலிருந்து ஒரு வார்த்தையைக் கூட நீக்கக் கூடாது. ஏனெனில் ஒவ்வொரு வார்த்தையும் பகவானால் சரிபார்க்கப்பட்டு ஒப்புக் கொள்ளப்பட்டது,'' என்று அவர் எழுதியுள்ளார். பகவானது ஸம்பாஷணைகள் அன்று எவ்வாறு பதிவு செய்யப்பட்டனவோ, அவற்றை அவ்வாறே இன்று நம்மால் படிக்க முடிகிறதென்றால், அதற்கு நாம் சாட்விக்கிற்கு நன்றி கூறியாக வேண்டும். அவரில்லாது போனால் அங்குமிங்கும் சிதைக்கப்பட்ட வெட்டப்பட்ட பகவானது உரையாடல்களே நமக்குக் கிடைத்திருக்கும். பகவானது உபதேசங்களைப் பரப்புவதில் பெரும் பங்காற்றியுள்ளார் சாட்விக்.

இறுதி நாட்களில் உடல் நலம் வெகுவாக பாதிக்கப்பட்டபோது வேலூரிலிருந்த 'கிறிஸ்டியன் மெடிக்கல் காலேஜ்' ஆஸ்பத்திரிக்குக் கொண்டு செல்லப்பட்டார் சாட்விக். திருவண்ணாமலையில் அவருக்கு 'ஹெர்னியா' (Hernia)- விற்காக அறுவை சிகிச்சை நடந்து புண் ஆறாமல் புரையோடிப் போனதால் ஏற்பட்ட பாதிப்பே சாட்விக்கை அந்த நிலைக்குக் கொண்டு சென்றது. அருணாசலத்தைவிட்டு அவர் வெளியில் செல்ல விரும்பவில்லை. நாங்கள் அனைவரும் கெஞ்சிக் கேட்டுக் கொண்டதாலேயே சிகிச்சை பெற அவர் வேலூருக்கு சென்றார். சாட்விக் மரணத்தைத் தழுவும் நேரம் அணுகி விட்டதை அவரது மருத்துவர்கள் எங்களுக்குத் தெரிவித்தபோது அவரைக் காணச் செல்ல வேண்டுமென்று நான் மிகவும் விரும்பினேன். ஆச்ரமத்தைக் கண்காணிக்கும் பொருட்டு என்னைத் திருவண்ணாமலையிலேயே இருக்குமாறு கூறிவிட்டு எனது தந்தை, ஸ்ரீமதி தலயார்க்கான், ஜெர்மன் டாக்டரான ஹ்யூகோ மேய்யர் (Hugo Maier) முதலியோர் தங்களால் இயன்ற உதவியைச் செய்யும் பொருட்டு வேலூருக்குச் சென்றனர். அங்கு அவர்கள் சென்றபோது சாட்விக் 'கோமா'வில் (மயக்கத்தில்) இருப்பதாகவும் அவரால் பேச முடியாது என்றும் தெரிவித்தனர். ஆனாலும் உடம்பின் பல பாகங்களில் குழாய்கள் (tubes) செருகப்பட்டுப் பரிதாபகரமான நிலையில் இருந்த அவரைக் கண்டபோது மனமுருகிப் போன ஸ்ரீமதி தலயார்க்கான், ''சாட்விக்! ரமணாச்ரமத்திலிருந்து நாங்களெல்லாம் வந்துள்ளோம்'' என்று அவரிடம் கூறியபோது, அடுத்த கணமே சட்டென்று ''வா கணேசன்!'' என்ற பதில் அவரிடமிருந்து எழுந்தது. அவரைக் காண நான் வந்துள்ளதாக எண்ணி அவர் இவ்வாறு கூறியதும் ''கணேசனால் வர முடியவில்லை'' என மற்றவர்கள் தெரிவித்தனர். உடனே அவர் ''இன்று ஈஸ்டர் (இயேசு உயிர்த்தெழுந்த ஞாயிற்றுக்கிழமை)'' என்று கூறவும் ''சாட்விக்! ஈஸ்டருக்கு இன்னும் ஒரு வாரம் இருக்கிறது'' என்று ஹ்யூகோ மேய்யர் அவரைத் திருத்தினார். ஆனால் சாட்விக் ''எனக்கு இன்று தான் ஈஸ்டர்'' என்று வலியுறுத்தி அழுத்தமாகக் கூறினார்.

அவர் உயிர் நீத்த பின்னர் அவரது உடல் ஆச்ரமத்திற்கு எடுத்து வரப்பட்டது. ஆச்ரம வளாகத்தினுள் அவரை அடக்கம் செய்யப் பலரும் எதிர்ப்புத் தெரிவித்த நிலையிலும் "சாட்விக் பகவானின் குழந்தை. அவரை வெளியே அனுப்பிவிடக் கூடாது" என்ற உறுதியில் நான் திடமாகவிருந்தேன். அவருடைய அறைக்குத் தென் பாகத்தில் அவருடைய உடல் அடக்கம் செய்யப்பட்டது. அதே அறையின் வட பாகத்தில் அவரது அஹங்காரத்தின் ஸமாதி உள்ளது என்பதை நீங்கள் அறிந்தால் ஆச்சரியப்படுவீர்கள். 1938-ல் சாட்விக் அங்கு ஒரு புதை குழியைத் தானே தோண்டிக் கொண்டிருந்தபோது சிலர், "எதற்குக் குழி தோண்டுகிறீர்கள்?" என்று குழம்பிப்போய்க் கேட்டனர். அப்போது அவர்களைத் திரும்பிப் பார்த்து "என் அஹங்காரத்தைப் புதைப்பதற்காக" என்று பதில் கூறியுள்ளார். பகவானும் ஒரு முறை அதைப் பார்க்கச் சென்றதாக நான் கேள்விப்பட்டேன்.

இந்த மகத்தான பக்தர், தனது குரு பகவான் ரமணருக்குத் தொண்டாற்றிய பின்னர், தனது மூலத்திலேயே ஒன்றிவிட்டார். இன்று, அவரது உடலுக்கும் அஹங்காரத்துக்கும் எழுப்பப்பட்ட ஸமாதிகளையே நாம் காண முடியும். உண்மையான சாட்விக்கை நீங்கள் காண விரும்பினால் அவரை இங்கேயே, இப்போதே காணலாம். உள்ளே திரும்புங்கள். அங்கு உங்கள் இதயத்தினுள் பகவானைக் காணலாம்! அருணாசலத்தைக் காணலாம்! என் பெருமதிப்பிற்குரிய நண்பர் சாட்விக்கையும் அங்கு காண்பீர்கள். 'கணேசன்! சலாம் அலேகும்' என்று, முஸ்லீம்கள் ஒருவரை ஒருவர் வாழ்த்திக்கொள்வது போன்று அவர் என்னை தினமும் வாழ்த்துவார். 'அமைதி உங்களுடையதாக இருக்கட்டும்' என்பதே இதன் பொருள். இதயத்தில் வாழும் மேஜர் A. W. சாட்விக் அவ்வாறுதான் இன்றும் நம்மையெல்லாம் வாழ்த்துகிறார். 'சலாம் அலேகும்', அமைதி உங்களுடையதாக இருக்கட்டும்.





மாரிஸ் ஃப்ரீட்மன் (சூட்டில்) மஹர்ஷியின் இடப்பக்கத்தில் அமர்ந்திருப்பது

# 41 மோரிஸ் ஃப்ரீட்மன்



சிறிய உருவினரான மோரிஸ் ஃப்ரீட்மன் ஒரு மாபெரும் மேதை. போலந்து நாட்டின் ஒரு ஊரில் யூதர்கள் வசிக்கும் சேரியில் மிகவும் ஏழ்மையான குடும்பத்தில் பிறந்த அவர், தனது பதின்மூன்றாவது வயது வரை வெள்ளை ரொட்டியின் ருசியைக் கூட அறியாதவர். தனது பத்தாவது வயதில் ரஷ்யன், ஹீப்ரு, சிரிலிக் முதலிய பாஷைகளை எழுதவும் படிக்கவும் கற்றிருந்ததோடு ரஷ்யன், போலிஷ், ஃப்ரெஞ்ச், ஆங்கிலம், ஹீப்ரு போன்றவற்றில் அவரால் சரளமாகப் பேசவும் முடிந்தது. தனது பள்ளிக்காலம் தொட்டு மின் பொறியாளராகப் பயிற்சி பெறும் வரை வகுப்பில் அவரே முதன்மை ஸ்தானத்தில் இருந்தார். பெரிய கண்டுபிடிப்பாளராக இருந்த அவர் தனது இருபதாவது வயதிற்குள் பொறியியல் சம்பந்தமான நூறு நவீனக் கண்டுபிடிப்புகளுக்குக் காப்புரிமை பெற்றிருந்தார்.

தனது இருபத்தைந்தாவது வயதில் இறைவனை அறிய வேண்டுமென்ற தீவிர உள் நாட்டம் அவருக்கு ஏற்படவே, யூதமதத்தைக் கைவிட்டு ரஷ்ய மரபுவழித் திருச்சபையில் சேர்ந்தார். துறவை மேற்கொண்டு தனிமையைப் போற்றும் ஒரு மடாலயத்தில் தவ வாழ்க்கையில் ஈடுபட்டார். பொதுவாக மடத்தை விட்டு வெளியே செல்லாத அவர், ஒரு நாள் அதிசயமாக வெளியில் சென்றபோது ஒரு பெரிய அருவியின் உச்சியில் தான் இருப்பதை உணர்ந்தார். "உனக்கு இயேசுநாதரிடம் உண்மையான நம்பிக்கை இருந்தால், கிறிஸ்தவ மதத்தை நீ மனப்பூர்வமாக நேசிப்பதாக இருந்தால், இந்த அருவிக்குள் குதி," என்று கூறி 'சாத்தான்' அவரை சோதித்தது. அவருக்கே உரிய தைரியத்துடன், அணிந்திருந்த பாதிரியார் உடையுடன் ஆழமான அந்தப் பள்ளத்தில் உடனே குதித்துவிட்டார். அருணாசலம் அத்துணை எளிதில் அவரைப் போக விடுவாரா என்ன? செங்குத்தான பாறையில் இருந்த ஒரு புதரில் அவரது ஆடை சிக்கிக்கொள்ளவே மோரிஸ் காப்பாற்றப்பட்டார். ஸத்தியப் பொருளை அறிந்து கொள்வதில் தீவிர நாட்டமுடையவர்களை அந்த மெய்ப்பொருளே வழி நடத்தும் என்பதை நிரூபிக்கும் ஒரு நிகழ்ச்சி இது.

மோரிஸ் பின்பற்றிய மரபுவழி நம்பிக்கைகள் எதுவும் அவருக்கு மெய்ப்பொருளை உணர்த்தாதபோது அவர் மிகுந்த வெறுப்படைந்தார். எல்லாவிதமான தளைகளிலிருந்தும் அவர் விடுதலையை நாடிய போது, பிரும்ம ஞான ஸபை (Theosphical Society) மற்றும் அன்னிபெஸன்ட் அம்மையாரையும் 1926-ல் அணுக நேர்ந்தது. அதே ஆண்டில் J. கிருஷ்ணமூர்த்தியுடன் ஏற்பட்ட சந்திப்பு, மோரிஸ்ஸிடம் நல்ல தாக்கத்தை உண்டு பண்ணியது. "உண்மைப்பொருளை அடைவதற்குக் குறிப்பிடப்பட்ட பாதை என ஒன்று கிடையாது. வெளியிலுள்ள பிரமாணங்களைச் சார்ந்திராமல் அயராது ஊக்கத்துடன் உழைப்பதால் மட்டுமே ஒருவரால் மெய்ப்பொருளை அடையமுடியும்," என்னும் அவருடைய கருத்துக்கள் மோரிஸ்ஸிற்கு ஏற்புடையதாக இருந்தது. J. கிருஷ்ணமூர்த்தியிடம் இவ்விஷயங்கள் குறித்து நீண்ட ஸம்பாஷணைகளில் ஈடுபட்டதாகவும், அவரும் தேவைப்பட்ட போதெல்லாம் மோரிஸ்ஸிற்கு உதவி செய்ததாகவும் சரித்திரக் குறிப்புக்கள் கூறுகின்றன.

மோரிஸ் இறைவனைக் காணவும் மெய்ப்பொருளை அறியவும் மிகத் தீவிர நாட்டத்தோடு இருந்த போதும், 1928-ம் ஆண்டு முதல் 1934 வரை மின் சாதனங்கள் தயாரிக்கும் தொழிலில் ஈடுபட்டிருந்தார். ஒரு பெயர்பெற்ற தொழிற்சாலையின் தலைமை மேலாளராக ஃப்ரான்ஸ் நாட்டில் பணியாற்றிக் கொண்டிருந்த நிலையிலும் அவருடைய இறை நாட்டம் சிறிதும் குறையவில்லை. அவர்

ஃப்ரெஞ்ச், ஜெர்மன் ஆகிய பாஷைகளில் மொழிபெயர்க்கப்பட்டிருந்த பகவத்கீதை, உபநிஷதங்கள் போன்ற வேதாந்த நூல்களைப் படிக்க ஆரம்பித்தார். 1935-ம் ஆண்டு பால் பிரண்டனின் புத்தகங்களைப் படிக்கத் துவங்கியதுதான் அவரது ஆன்மீக வாழ்க்கைக்கு ஒரு திருப்புமுனையாக அமைந்தது. 'நான் யார்' என்னும் பகவானின் உபதேசம் அவருக்கு ஆன்மீகத்தில் நல்ல தெளிவை ஏற்படுத்தியது. உண்மைப்பொருளான இறைவன் வெளியில் இல்லை என்றும், நமக்குள்ளேயே அது விளங்குகிறதென்பதையும் அறிந்து கொண்ட போது மோரிஸ் அகமுகமானார். பால் பிரண்டனின் நூல்கள் அவருக்கு, இந்தியாவிற்கு வந்து பகவான் ரமணரை காண வேண்டும் என்ற தீவிர ஆர்வத்தைத் தூண்டி விட்டன. இவை அனைத்தும் நிறைவு பெற இறைவனே வழிவகுத்தான். தனது மாநிலத்தை நவீனமயமாக்க விரும்பிய மைசூர் திவான், ஐரோப்பா மற்றும் இங்கிலாந்தில் இருக்கும் நவீன தொழில் நுட்பங்கள் குறித்து ஆராய்ச்சி செய்ய அங்கு சுற்று பயணம் மேற்கொண்டிருந்தார். ஒரு நாள் மோரிஸ்ஸின் தலைமையில் செயல்பட்டு வந்த தொழிற்சாலையைக் காண வந்த அவர், மோரிஸ் ஃப்ரீட்மனின் எளிமை, நேர்மை, செயல் திறன், கடுமையான உழைப்பு இவற்றைக் கண்டு வியப்படைந்தார். "எங்களுடைய மாநிலத்தை நவீனமாக்கி முன்னேற்றமடையச் செய்யத் தேவையான அறிவுரைகளைத் தாங்கள் தந்து உதவமுடியுமா?" என அவரிடம் வினவினார். 1930-களில் இந்தியாவில் தொழில் நுட்பம் அவ்வளவாக வளர்ச்சியடையாததால், முன்னேற்றமும் தடைபட்டிருந்தது. திவானின் சொற்களைச் செவியுற்ற மறுகணமே தனக்கே உரிய தனித்தன்மையோடு, "ஐயா! எனது பெட்டி படுக்கைகளை ஏற்கனவே தயாராக வைத்துள்ளேன். உங்களுடன் இந்தியாவிற்கு வர நான் தயார்," என்று கூறி செயலிலிறங்கினார்.

1935-ல் தனது கனவாக இருந்த இந்தியாவிற்கு வந்து சேர்ந்த மோரிஸ், மின் சாதனங்கள் தயாரிப்பதில் கைதேர்ந்தவராக இருந்ததால் அதில் ஈடுபட்டிருந்த ஒரு பெரிய தொழிற்சாலையின் பொறுப்பாளராக நியமிக்கப்பட்டார். எனினும் ரமண பகவானைக் காண்பதே அவருடைய குறிக்கோள் என்பதால் ஓயாத பணிகளுக்கு இடையிலும் பகவானைக் காண வந்தார். ஆரம்பத்திலிருந்தே அவரிடம் சரணடையத் தயாராகவும் இருந்தார். இரவு பகலாக தொழிற்சாலைப் பணிகளில் மும்முரமாக ஈடுபட்டதன் விளைவாக மோரிஸ் குறுகிய காலத்திற்குள் பல வெற்றிகளை சாதித்தார். சனி, ஞாயிறுகளில் அவர் அருணாசலத்திற்கு வரும்போது 'இதோ நம் மோரிஸ் வந்துவிட்டார்,' என்று அங்கிருந்தவர்கள் அவரை அன்புடன் வரவேற்பார்கள். அங்கு தங்கியிருக்கும் நாட்களில் பகவானிடம் பல கேள்விகளை எழுப்பி, அவர் பொறுமையோடு தரும் பதில்களைக் கேட்டுத் தெளிவு பெறுவதுடன் தனது நண்பர்களிடமும் உரையாடுவார். பகவான் தன்னிச்சையாகவும் இயற்கையாகவும் கண்ணாடியைப் போன்று பிறரைப் பிரதிபலிப்பவர் என்பதால், யாராவது தீவிர ஆன்மீக விழைவுடன் வந்தால் தன்னையே அவர்களுக்குத் தந்து உதவுவார். வாராவாரம் மோரிஸ் ரமணாச்ரமத்திற்கு வருவதைப் பார்த்து, "மோரிஸ்! நீங்கள் மாதத்தில் ஒரு முறையோ அல்லது இரண்டு மாதங்களுக்கு ஒரு தடவையோ வரலாமே? இங்கு வருவதற்கு உங்களுக்கு அதிகப் பணச்செலவு ஏற்படுகிறதே," என்று அக்கறையோடு பலர் கூறுவர். அதற்கு மோரிஸ் "என்ன செய்வது? என்னுடைய பாட்டரியில் ஒரு வாரத்திற்குத்தான் 'சார்ஜ்' நிற்கிறது. மீண்டும் 'சார்ஜ்' ஏற்றுவதற்காக, பகவான் ஸந்நிதியிலிருந்து சக்தியைப் பெறுவதற்காக — வாராவாரம் வரவேண்டியதாக உள்ளது," எனக் கூறுவார்.

மோரிஸ் பகவானுடன் நெருக்கமாகவும் சகஜமாகவும் பழகினார். பிறருடன் விஷயங்களை விவாதிப்பதன் மூலமும் இந்து சாஸ்திரங்களைப் படிப்பதன் மூலமும் வேதாந்தத்தைப் பற்றி அறிந்து கொள்வதில் ஊக்கத்துடன் செயல்பட்டார். முக்தி அடைய வேண்டும் என்றால் ஒருவர் துறவு மேற்கொள்ள வேண்டும் என்று கேட்டிருந்தபடியால் அவர் பகவானை அணுகி, "இந்து சாஸ்திரங்கள்

துறவின் முக்கியத்துவத்தைக் கூறுகின்றன. நீங்கள் எனக்கு ஸந்நியாசம் அளிப்பீர்களா?'' என்று கேட்ட போது பகவான் மௌனம் சாதித்தார். மோரிஸ் எடுத்த காரியத்தை முடிக்காமல் விட மாட்டார் என்பது நாம் அறிந்ததுதான். தனது சுபாவப்படி பகவானிடம் வேண்டுகோளைத் தொடர்ந்து விடுத்த வண்ணம் இருந்தார். ஒரு நாள் பகவான் மலை மீது சென்றிருந்த சமயத்தில், ''பகவானே! எனக்கு ஸந்நியாசம் அளியுங்கள். நான் துறவை ஏற்று முக்தியைப் பெறக் கடுமையாக முயற்சி செய்ய வேண்டும்,'' என்று மோரிஸ் கூறியபோது பகவான் கருணை பொழியும் குரலில் ''உள்ளிருந்து ஸந்நியாசத்தைப் பெற வேண்டுமேயன்றி வெளியிலிருந்து அன்று,'' என உரைத்தபோது மோரிஸ்ஸின் முகம் வாட்டமுற்றது. தாயை ஒத்த அன்போடு மோரிஸ்ஸைப் பார்த்த பகவான், ''நீங்கள் ஏற்கனவே துறவியாகத்தான் இருக்கிறீர்கள். காவி உடை அணிய ஏன் விரும்புகிறீர்கள்?'' என்று கூறிய பின்னரும், அவர் விடாமல் ஸந்நியாசம் தரும்படி பகவானை வற்புறுத்தினார். பகவானும் சளைக்காமல் ''ஸந்நியாசம் தேவையில்லை,'' என்று மீண்டும் மீண்டும் கூறினார். மிகவும் புத்திசாலியான அவர், ஒரு புது உத்தியைக் கையாண்டார். ஆனந்தாச்ரமத்திலிருந்த ஆத்மஞானி ஸ்வாமி ராம்தாஸை அணுகி பல விதங்களில் முயன்று, புற ஸந்நியாசத்தை அவரிடமிருந்து பெற்றுக் கொண்டு, ஸ்வாமி பாரதானந்தா—'இந்தியாவில் வாழ விரும்புகின்றவர்' - என்ற ஸந்நியாசப் பெயரையும் ஏற்றார். அவரிடம் நெருக்கமாக இருந்த ஸ்வாமி ராம்தாஸ் ''மோரிஸ்! -ஸ்வாமி பாரதானந்தா! இதுவே உங்களுடைய கடைசிப் பிறவி,'' என்று கூறினார். ஸ்வாமி ராம்தாஸ் சிறந்த ஞானியாக இருந்ததால், மோரிஸ்ஸின் உயர்ந்த ஆன்மீக நிலையை அவரால் உணர்ந்து கொள்ள முடிந்தது.

ஒரு நாள் பகவான் மலையிலிருந்து இறங்கி வந்தபோது இந்துத் துறவிகளைப் போன்று காவியுடையும், ருத்ராக்ஷ மாலையும் அணிந்து மோரிஸ் தன் முன் நிற்பதைக் கண்டார். தான் செய்த காரியத்தைத் தனது குரு அங்கீகரிக்க வேண்டுமே என்ற கவலை மோரிஸ்ஸிற்கு இருந்தது. மோரிஸ்ஸைப் பார்த்த பகவான் கலகலவெனச் சிரித்து தனது தொண்டரிடம், ''மோரிஸ் சர்க்கஸ்ஸில் கோமாளி வேஷம் போடுபவரைப் போன்று இருக்கிறார் இல்லையா, ஓய்?'' என்று கேட்ட போது மோரிஸ்ஸும் புரிந்து கொண்டு விட்டார். வாழ்நாள் முழுவதுமே அகத்துறவை மேற்கொண்டவர் மோரிஸ். அதனால் புறத்துறவில், காவி வஸ்திரத்தில் அவருக்கு இருந்த பற்று ஒரு சில வருடங்களே நீடித்தது. ''பற்றுக்களை விடுவதே ஸந்நியாசம்'' என்று பகவான் கூறியதன் பொருள் இதுதான். எப்போதுமே பற்றற்று வாழ்ந்த மோரிஸ்ஸிற்குப் புறத்துறவு மீதிருந்த பற்றும் நீங்கியது.

தொழிற்சாலையில் பணியாற்றி வந்த போதும் மோரிஸ் எளிய தவவாழ்க்கையையே கடைப்பிடித்தார். அந்த நாட்களில் அவருக்கு அளிக்கப்பட்ட ஊதியமான மூவாயிரம் ரூபாய் மிகப் பெரிய தொகையாகும். அதை ஏற்க மறுத்து, ''எனக்கு அத்துணை பணம் அவசியமில்லை,'' என்று கூறியதோடு அந்தத் தொகையை தொழிலாளிகளின் நலனுக்கென ஒதுக்கப்பட்ட நிதியில் சேர்த்து விடுமாறும் தெரிவித்தார். இரவில் தொழிற்சாலை மூடப்பட்ட பின்னர் ஏதாவது ஒரு தொழிற்கூடத்தின் முன் தாழ்வாரத்தில் படுத்துக் கொள்வார். தொழிலாளர்கள் தத்தம் வீட்டிலிருந்து எடுத்து வந்த உணவைச் சாப்பிடுவதற்காக மதியம் உணவுக்கூடத்தை நோக்கிக் கூட்டமாகச் செல்வார்கள். தொழிற்சாலையின் தலைமை மேலாளரான மோரிஸ் என்ன செய்வார் தெரியுமா? காவியுடை அணிந்து கையில் பிக்ஷாபாத்திரம் ஏந்தியபடி உண்மையான ஸந்நியாசியாக உணவுக் கூடத்தின் வாயிலில் நிற்பார். தொழிலாளர்கள் அவரை மிகவும் நேசித்ததால், தாங்கள் உண்பதற்குக் கூடத்திற்குள் செல்லுமுன் அவருடைய பாத்திரத்தில் ஒரு பிடி அன்னத்தை இட்டுச் செல்வார்கள். அதுவே அவரது மதிய உணவாகும். தன்னிடம் இருந்த இராட்டையில் தானே நூற்ற கதர் துணியால் ஆன, தன்னாலேயே தைக்கப்பட்டதுமான பைஜாமா, குர்த்தா இவற்றையே அவர் அணிந்தார். தனது



செருப்புக்களையும் கூட அவரே தைத்துக் கொள்வார். இவ்வாறு மிக எளிய வாழ்க்கையை வாழ்ந்த போதும் சந்தோஷமாகவும் திருப்தியோடும் இருந்தார். தனது வாழ்க்கை முறை பற்றிப் பெருமைப்படவும் இல்லை; அதனைத் தளரவிடவும் இல்லை; மிகவும் ஆனந்தமாக இருந்தார்.

பகவானுடன் அவருக்கு இருந்த தொடர்பு நெருக்கமாக இருந்து வந்தது. சிறு குழந்தை தன் தாயிடம் கேட்பது போன்று நடைமுறையில் செய்யக்கூடிய ஸாதனை முறைகள் பற்றி அடுக்கடுக்காக வினாக்களை எழுப்புவார். அவை மிகவும் நுட்பமாகவும் புத்தி பூர்வமாகவும் இருக்கும். 'தனக்காக மட்டும் மோரிஸ், அவற்றைக் கேட்கவில்லை, பிறருக்காகவே வினாக்களை எழுப்புகிறார்' என்று பகவான் கூறுவார் என்றாலும், மிகவும் பொறுமையாக அவருக்குப் பதில்களைக் கூறுவார். அவர்களிடையே நடக்கும் உரையாடல்களை மோரிஸ் பதிவு செய்து கொண்டு பின் பகவானிடம் காட்டித் திருத்திக் கொள்ளவும் செய்வார். 1939-ம் ஆண்டு பகவானுடைய ஷஷ்டியப்த பூர்த்தி வைபவத்தில் 'Maharshi's Gospel' என்ற பெயரில் அவை பிரசுரிக்கப்பட்டன. ஸாதகர்களுக்கு வழிகாட்டியாக விளங்கிய அந்த அற்புத புத்தகம் இன்றும் கூட தீவிர ஆன்மீக ஸாதகர்களுக்குச் சிறப்பாக வழிமுறைகளைக் கூறும் நூலாகத் திகழ்கிறது. 'The Maharshi and His message', 'Words of Grace', and 'Maharshi's Gospel' ஆகிய மூன்று நூல்களை ஸாதகர்களுக்கு நான் என்றும் பரிந்துரைப்பதுண்டு.

இவ்வாறு பகவானுடன் நெருங்கிப் பழகி வந்த நாட்களில் உள்ளத்தை உருக்கவல்ல பல செய்யுட்களை மோரிஸ் எழுதினார். பகவானும் அவற்றை ஆர்வத்துடன் படித்துப் பார்ப்பார். அவர் எழுதியவற்றில் இரு செய்யுட்களில், “நாடக மேடையில் தங்களை மகிழ்விக்க இதுவரை நடித்துவிட்டேன். உங்கள் லீலையினால் பரவும் பேரொளி என் கண்களைக் குருடாக்கி விட்டது. பேரிடி போன்ற தங்கள் சிரிப்பொலி என் காதுகளைச் செவிடாக்குகின்றது. துயரமென்னும் ஜ்வாலை என் இதயத்தைச் சுட்டெரித்துச் சாம்பலாக்கிவிட்டது. தங்களைத் திருப்தி செய்யும் பொருட்டு என்னையே பாமரனாக்கிக் கொண்டு விட்டேன். இந்த லீலையினால் விளையும் வேதனையை நிறுத்தும் சக்தியும் எனக்கில்லை. எனது பிரபோ! இந்த நாடக மேடையிலிருந்து என்னைக் கீழே இறக்கி விட்டுவிடுங்கள். அரங்கத்தில் நுழையும் வழியையும் வெளியே செல்லும் வழியையும் நான் மறந்துவிட்டேன்,” என மனமுருகிப் பாடியுள்ளார். இந்தப் பாடல்களை பகவான் மிகுந்த மகிழ்ச்சியுடன் படித்தார். பதினாறாம் நூற்றாண்டில் வாழ்ந்த அப்பய்ய தீக்ஷிதர் என்ற மஹானும் இதைப்போன்ற கருத்துக்களையே தமது பாடல்களில் வெளிப்படுத்தியுள்ளதாக பகவான் கூறினார். ஓலைச் சுவடியில் எழுதப்பட்டிருந்த தீக்ஷிதரின் பாடல்கள் பற்றிப் பலருக்கும் தெரியாது. அரசரது முன்னிலையில் அரசவையில் நடனமாடும் அரண்மனையைச் சேர்ந்த நடன மாதுவின் நிலையை விளக்குவதாக எழுதப்பட்டிருந்தது தீக்ஷிதரின் பாடல். அரசன் நிறுத்துமாறு உத்தரவு பிறப்பிக்காத வரை அவளால் நாட்டியத்தை நிறுத்த இயலாது. கைகால்களில் வேதனை இருந்தாலும் தன்னிச்சையாக அவளால் நடனத்தை நிறுத்த முடியாது. ‘பிரபோ! நான் பல முறை பிறந்தும் இறந்தும் களைத்துப் போய்விட்டேன். பிறப்பு, இறப்பு என்னும் ஆட்டத்திலிருந்து நான் விடுதலை பெற உங்களது ஒரே ஒரு பார்வையே போதுமானது. பிரபோ! தயை கூர்ந்து அதைத் தந்து எனக்கு விடுதலையளியுங்கள்’ என அப்பய்ய தீக்ஷிதரின் பாடல் பற்றிக் கூறிவந்த பகவான், சிறிது நிறுத்திப் பின் “மோரிஸ் ஃப்ரீட்மன் இந்த இடத்தைச் சேர்ந்தவர். எப்படியோ வெளிநாட்டில் பிறந்து திரும்பவும் இங்கேயே வந்துவிட்டார். அவ்வாறில்லையானால் அப்பய்ய தீக்ஷிதரைப் போன்றே அவரால் எப்படி எழுத முடிந்திருக்கும்?” என்று கூறினார். மேடையிலிருந்து இறங்கவிடாமல் மோரிஸ் தொடர்ந்து தனது உலக அரங்கில் எவ்வாறு பணியாற்றுமாறு பகவான் செய்தார் என்பதை இனி காண்போம். கர்மயோகியான அவர் இனி ஆற்ற வேண்டிய அற்புதமான செயல்கள் எஞ்சியிருந்தன. அதன் காரணமாக அவர் தனது வாழ்க்கையில் எதையும் மாற்றிக் கொள்ளாமல் தொழிற்சாலையில் ஊக்கத்தோடு உழைத்து வந்தார்.

இங்கிலாந்தில் படித்தவரும் மஹாராஷ்ட்ராவிலுள்ள ‘ஔந்த்’ பிரதேசத்தின் இளவரசருமான அபா பந்த், அரசாளும் கலையில் பயிற்சி பெறுவதற்காக மைசூர் மஹாராஜாவிடம் அனுப்பி வைக்கப்பட்டார். பயிற்சியின் நடுவே மோரிஸ் தலைமையில் செயல்பட்ட தொழிற்சாலையைப் பார்க்க அவர் அனுப்பப்பட்டார். அங்கு சென்றபோது கூர்ந்து கவனிக்கும் தன்மையும், அமைதியான மனநிலை உடையவருமான அபா பந்த், மோரிஸ்ஸின் அறிவுத் திறனையும் அர்ப்பணிப்பையும் கண்டு அவரிடம் ஈர்க்கப்பட்டார். இளவரசரிடம் மோரிஸ்ஸிற்கும் ஈர்ப்பு இருந்ததால் அவரை ஆன்மீக விஷயங்களிலும் மோரிஸ் வழி நடத்தினார். அத்துடன் அவருடைய ராஜ்யத்தில் விஞ்ஞானம் தொழில் நுட்பம் இவற்றை வளர்த்து கிராமங்களை முன்னேற்றமடையச் செய்வதுடன் குடியானவர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதிலும் கவனம் செலுத்த வேண்டுமென அறிவுறுத்தினார். அப்போது அபா பந்த் தனது ராஜதானிக்கு வருமாறு மோரிஸ்ஸை அழைத்ததுடன் அங்கு ஐந்தாறு மாதங்களாவது தங்கி வளர்ச்சிப் பாதையில் செல்ல வழிகாட்டுமாறும் கேட்டுக் கொண்டார்.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு ஒரு நாள் மோரிஸ் தனது அரண்மனைக்குத் திடீரென வந்திருப்பதை ஔந்த் இளவரசர் கண்டார். "நான் எனது பெங்களூர் வேலையை ராஜினாமா செய்துவிட்டு உங்களிடம் வந்து விட்டேன். உங்களது ராஜ்ஜியத்திலுள்ள கிராமங்களில் நான் சேவை செய்ய விரும்புகிறேன்," என்று மோரிஸ் இளவரசரிடம் தெரிவித்த போது அவர் திகைத்துப் போய் என்ன சொல்வதென்று புரியாமல், "உங்களைப் போன்ற ஒரு பொறியாளருக்கு ஊதியம் அளிக்கும் அளவுக்கு எங்கள் ராஜதானியில் வசதியில்லை," என்று மட்டுமே கூற முடிந்தது. உடனே மோரிஸ் அவருக்கே உரித்தான பாணியில், "அந்த அறையில் நான் தரையில் படுத்துக் கொண்டு விடுவேன். நான் வேலை செய்வதற்கு இந்தியாவில் உபயோகிக்கப்படும் சாதாரண மேஜை ஒன்று மட்டும் போதும். எனக்கு நடப்பதற்குக் கால்கள் உள்ளன. நாமிருவரும் சேர்ந்து நடந்து ஔந்த்திலுள்ள கிராமங்களில் ஒன்றாக வேலை செய்வோம். இப்போது எனக்கு மிகவும் பசியாக உள்ளது. சிறிது உணவு தந்தால் நன்றாக இருக்கும்" என்று கூறி முடித்தார். தந்திமொழி போன்று மௌரிஸின் வார்த்தைகள் எப்போதும் சுருக்கமாகவும், தெளிவாகவும் இருக்கும்.

தான் எங்கிருந்தாலும் மோரிஸ் பகவானுடன் கடிதப் போக்குவரத்து வைத்துக் கொண்டிருந்தார். மனத்தளவில் எப்போதுமே அவர் பகவானது ஸன்னிதியில் தான் இருந்தார். அவருக்கு எழுதிய கடிதம் ஒன்றில் "மஹர்ஷியை நான் நினைக்கும் போது மட்டுமல்லாமல், நினைக்காத போதும் கூட அவர் என்னுடன் இருக்கிறார். அன்றேல் என்னால் எவ்வாறு வாழ முடியும்?" என்று எழுதியிருந்தார். அபா பந்த்தும் மோரிஸ்ஸூம் இணைந்து வேலை செய்தனர். ஒரு பெரிய மரத்தடியின் நிழலில்தான் மோரிஸ்ஸின் அலுவலகம் செயல்பட்டது! தான் செல்லும் கிராமங்களிலேயே தங்கிக் கடுமையாக உழைத்தார். கிராமங்களுக்கு சுய ஆட்சி அளிப்பதன் மூலம் கிராம மக்களுடைய சக்தியை வளர்க்க வேண்டுமென்னும் மஹாத்மா காந்தியின் கருத்து அவருக்கு மிகவும் பிடித்திருந்தது. அதனால் அதைப் பற்றி மேலும் அறிந்து கொள்ளும் பொருட்டு மஹாத்மா காந்தியைக் காணப் புறப்பட்டார். மோரிஸ், மஹாத்மா காந்தியையும் வெகுவாக ஈர்த்தார். காந்திஜீயும் சேவாச்ரமத் தொண்டர்களும் மோரிஸ்ஸை 'பாரதானந்தா' என்றே அழைத்தனர். மோரிஸ் கடுமையான உழைப்பாளி என்பதுடன் இந்திய இராட்டையை உபயோகிப்பவர் என்றறிந்த காந்திஜீ அவருக்கு ஆசியளிக்கும் வகையாக "வேகமாக நூல் நூற்கும் சக்தியுள்ள ராட்டையை நீங்கள் ஏன் கண்டுபிடிக்கக் கூடாது?" என்று வினவினார். உடனே தனுஷ் தக்கிளி என்ற புதிய வகை இராட்டையை மோரிஸ் உருவாக்கினார். சாதாரண இராட்டைக்கு உபயோகப்படுத்தப்படும் அதே அளவு சக்தியைக் கொண்டு, இந்த புதிய இராட்டையால் மூன்று மடங்கு அதிகமாக நூல் தயாரிக்க முடிந்தது என்பதை அறிந்த காந்திஜீ அளவற்ற மகிழ்ச்சியடைந்தார்.

பகவானோ, மஹாத்மா காந்தியோ அல்லது J. கிருஷ்ணமூர்த்தியோ இவர்கள் யாருடன் மோரிஸ் இருந்தாலும் முதலில் கேள்விகளைக் கேட்டு, பின்னர் ஆராய்ந்து, உண்மையை அனுபவித்த பிறகு தான் அந்தக் கருத்துக்களை ஏற்றுக் கொண்டு பின்பற்றுவார். அது அவரின் பிறவிக்குணம். சீர்திருத்த முற்பட்ட 75 கிராமங்களிலும் இது போன்றுதான் அவர் செயலாற்றினார். படிப்பறிவில்லாத ஏழை மக்களை அவர் நேசித்து அவர்களிடம் மிகுந்த கருணையோடு பழகுவார் என்பதால் அவரது ஸாந்நித்தியத்தில் தாங்கள் புனிதமடைந்து விட்டதாக அவர்கள் கருதுவார்கள். அத்துடன் மிகுந்த மரியாதையுடன் 'ஸ்வாமி' என்றே அவரை அழைத்தார்கள். கிராமங்களில் அவர் மேற்கொண்ட பணிகள் வெற்றிகரமாக நிறைவேறியதால் மோரிஸ்ஸின் பெயரும் புகழும் இந்தியா முழுவதுமே பரவியதுடன் அவருடைய வாழ்க்கையைப் பற்றி பலரும் அறிந்தனர். இந்த சமயத்தில் ஸ்ரீ பகவானும், மஹாத்மா காந்தியும் உடல் விட்டிருந்ததால் அவர் மிகுந்த மனத்தளர்ச்சியுற்றார்.

என்றாலும் தான் இன்னும் நாடக மேடையிலிருந்து இறங்கவில்லை என்பதை உணர்ந்திருந்ததால் அந்த மஹான்கள் எதற்குப் பாடுபட்டார்களோ அதற்குத் தன்னை மீண்டும் முழுமையாக அர்ப்பணித்துக் கொள்வதென முடிவு செய்து ‘உலக விளையாட்டில் தான் ஈடுபட்டே ஆக வேண்டும்’ என்ற உறுதியுடன் அதில் இறங்கினார்.

வாரணாசியில் இருந்த J. கிருஷ்ணமூர்த்தியின் ஸ்தாபனத்தில் தங்கத் தீர்மானித்து மோரிஸ் அங்கு சென்றார். அங்கும் சுற்றுவட்டாரத்தில் இருந்த பல கிராமங்களைச் சீரமைத்தார். புத்தரது உபதேசங்களும், J. கிருஷ்ணமூர்த்தியின் உபதேசங்களும் பலவிதத்தில் ஒத்திருந்ததால் அவரைப் பின்பற்றிய பலரும் புத்தமதத்தைப் பெரிதும் மதித்தனர். கிருஷ்ணமூர்த்தியின் சீடர்களில் மூத்தவரான அச்யுத் பட்வர்த்தன் என்பவர் மோரிஸ்ஸுடன் மிக நெருக்கமாக இருந்தார். இதே சமயத்தில்தான் சீன கம்யூனிஸ்டுகள் தங்கள் ஆதிக்கத்தைத் திபெத்தில் நிலைநாட்ட முயன்று வந்ததால் அங்கு குழப்பமேற்பட்டது. அபா பந்த் அப்போதுதான் சிக்கிம் மாகாணத்து கவர்னராகப் பதவி ஏற்றிருந்தார். இந்த விஷயத்தைக் கேள்வியுற்ற மோரிஸ், உடனே செயலில் இறங்கினார். கால தாமதம் செய்யாமல் உடனே சிக்கிம் சென்று அபா பந்த்தை மோரிஸ் சந்தித்து, “நீங்கள் எனக்கு மிகவும் உதவியாக இருக்கப்போகிறீர்கள். இங்கு நாம் செய்ய வேண்டிய முக்கியமான ஒரு வேலை உள்ளது. பெருமதிப்பிற்குரிய தலாய் லாமாவைக் காப்பாற்றுவதுடன் புராதனமான புத்தமத நூல்களின் கையெழுத்துப் பிரதிகளையும், ஆயிரக்கணக்கான திபெத்தியர்களையும் காப்பாற்றும் பொறுப்பு நம்மிடம் உள்ளது,” என்று கூறிய மோரிஸ், அப்போது இந்தியாவின் பிரதமராக இருந்த ஜவஹர்லால் நேருவைக் காண அபா பந்த்தையும் அழைத்துக் கொண்டு டில்லிக்கு உடனே புறப்பட்டார். தலாய் லாமாவையும், திபெத்திய மக்களையும் வெற்றிகரமாக விடுவிப்பதற்கான மீட்புத் திட்டத்தை மோரிஸ்



**'மஹர்ஷியின் அமுதமொழிகள் ' புத்தகத்தில் பதிவான அருமையான உரையாடல்கள்**
**இந்த பழைய ஹாலில் நடந்தன**

ஏற்கனவே தயார் செய்து வைத்திருந்தார். தலாய் லாமா தப்பி ஓடுவதற்காக மோரிஸ்ஸும் அச்யுத் பட்வர்த்தனும் தீட்டியிருந்த திட்டங்களைப் பற்றி அவர்களே என்னிடம் கூறியுள்ளார்கள். மோரிஸ்ஸின் திட்டப்படியேதான் ஜவஹர்லால் நேரு செயல்பட்டு தலாய் லாமாவைத் திபெத்திலிருந்து விடுவித்து அழைத்து வந்தார். தலாய் லாமா தப்பியோடப் போகும் விஷயம் குறித்துச் சீன அரசாங்கத்திற்கு தவறான தகவல்களைத் தந்து, அவர்களைத் திசை திருப்பித்தான் திபெத் மக்களையும் அவர்களது குருவான தலாய் லாமாவையும் காப்பாற்ற முடிந்தது.

பூஜிக்கத் தக்க தலாய் லாமா இந்தியாவிற்குத் தப்பியோடி வந்த அதே நாளில் நூற்றுக்கணக்கான திபெத்தியர்களும் இந்தியாவில் தஞ்சமடைந்தனர். தலாய் லாமா தன்னுடன் எடுத்து வந்த புத்தமத சம்பந்தமான புராதன கையெழுத்துப் பிரதிகள் அனைத்தும் தற்போது ஸாரநாத்தில் உள்ள அருங்காட்சியகத்தில் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. சீன கம்யூனிஸ்டுகளின் கையால் அழிந்து போகும் நிலையிலிருந்த விலைமதிக்க முடியாத ஆயிரக்கணக்கான கையெழுத்துப் பிரதிகள் இவ்வாறுதான் காக்கப்பட்டன. தலாய் லாமா இந்தியாவிற்குள் நுழைந்த உடனே அச்யுத் பட்வர்த்தன் அவரைச் சந்தித்து எல்லா திட்டங்களையும் அவரிடம் தெரிவிக்கும் விதத்தில் மோரிஸ் ஏற்பாடு செய்திருந்தார். அவ்வாறிருந்த போதும் தலாய் லாமா இந்தியாவிற்குத் தப்பியோடி வந்த விபரம் பற்றிக் கூறும் புத்தகங்களிலோ அல்லது புத்தமத நூல்களின் கையெழுத்துப் பிரதிகள் எவ்வாறு திபெத்திலிருந்து மீட்கப்பட்டன என்று விளக்கும் நூல்களிலோ மோரிஸ்ஸின் பெயர் எங்குமே குறிப்பிடப்படவில்லை. மோரிஸ்ஸைப் போன்று தன்னை வெளிப்படுத்திக் கொள்ளாத ஒரு நபரை நான் இதுவரை பார்த்ததில்லை. முதன் முதலில் வெளியிடப்பட்ட ‘Maharshi’s Gospel’ என்ற நூலிலும் மோரிஸ்ஸின் பெயர் குறிப்பிடப்படவில்லை. சமீப காலத்தில்தான் அவரது பெயர் வெளியிடப்பட்டுள்ளது. திபெத் போராட்ட காலத்தில் ‘தனது கைகள் கட்டப்பட்டுள்ளன’ என்று வெளிப்படையாகக் கூறி நேரு அகதிகளுக்கு உதவ மறுத்த நிலையில், தனது கைக்காசைச் செலவு செய்து இந்தியா முழுவதும் பயணம் செய்து நூற்றுக்கணக்கான திபெத் அகதிகளுக்குப் புகலிடம் தேடி அலைந்தார் மோரிஸ். குளிர்ச்சியான பிரதேசங்களையே அவர்களுக்காகத் தேடி அவர்களுக்கென ஐந்து குடியிருப்புக்களை அவர் அமைத்தார். இன்று திபெத்தியர்கள் இந்தியாவில் அமைதியாக வாழ்கிறார்களென்றால், எங்குமே தனது பெயரைக் கூட வெளிப்படுத்திக் கொள்ளாமல் தன்னை முற்றிலுமாக மறைத்துக் கொண்ட போலந்து நாட்டு ஞானியான மோரிஸ் ஃப்ரீட்மன்தான் அதற்கு முக்கிய காரணம்.

மிக்க குழப்பமான நிலைமைகளிலும் நன்றாக முறைப்படுத்தி ஒழுக்கத்தை நிலைநாட்டும் திறமை கொண்ட மோரிஸ். கதர் இயக்கத்திற்கு தலைமை ஏற்றுக் கொள்ள வேண்டும் என நேரு கேட்டுக் கொண்டார். காந்திஜீயால் துவக்கப்பட்ட அந்த இயக்கம் அவருக்குப் பின் சரியான முறையில் இயங்காமல் போனது. தனக்கு அளிக்கப்பட்ட பணியை நிறைவேற்றும் பொருட்டு மும்பை சென்ற மோரிஸ், தனது பழைய சிநேகிதியான மிஸ் பெடிட் என்ற பார்ஸி மாதுவுடன் தங்கினார். பகவான் அருளால் மும்பையில் நான் அவரைச் சந்திக்கும் வாய்ப்பைப் பெற்றேன். 1960-களில் எப்போதாவது அவர் ஆச்ரமத்திற்கு வரும் போது நான் அவரைப் பார்த்திருக்கிறேன். 1970-ல் ரமணாச்ரம பத்திரிகையான ‘தி மௌண்டன் பாத்’-திற்கு விளம்பரங்கள் சேகரித்து அதன் மூலம் ஆச்ரமத்திற்கு நிதி திரட்டும் பொருட்டு நான் மும்பைக்குச் சென்ற போது மோரிஸ்ஸை மீண்டும் சந்தித்தேன். அப்போது அவர், “உனது உடம்பு ஆச்ரமத்தை நிர்வகிப்பதில் ஈடுபட்டிருக்கும் போதும் உனது இதயம் ‘நான் இருக்கிறேன்’ என்னும் தூய உணர்வில் நிலைத்து நிற்க வேண்டும். எந்தச்

செயலில் ஈடுபட்டாலும் அந்த உண்மையிலிருந்து விலகாது கவனத்துடன் இரு,'' என்று அறிவுறுத்தினார்.

எங்களிடையே பொருள் செறிந்த பல உரையாடல்கள் நிகழ்வதுண்டு. ''பகவான் நம்மிடையே உடலோடு வாழ்ந்து, உண்டு, உரையாடி, சிரித்து சுலபமாகப் பெறக் கூடியவராக இருந்த அந்த விலைமதிப்பற்ற ஆனந்தகரமான நாட்களை நாம் போதிய அளவு பயன்படுத்திக் கொள்ளாமல் வீணாக்கிவிட்டோமோ? என்று இப்போது வருத்தமாக உள்ளது. எவரும் பயன்படுத்திக் கொள்ளும் விதத்தில் ஸத்திய வஸ்து நம்மிடையே கொட்டிக் கிடந்தது. நமது போலிப் பணிவு, அர்த்தமில்லாத சால்ஜாப்புக்கள், சமாதானங்கள் இவற்றாலும், சோம்பேறித்தனத்தாலும் நம்மை நாம் மூடி மறைத்துக் கொண்டுவிட்டதால் நம்முன் மஹா ஸமுத்ரமே இருந்தபோதும் சிறிய கோப்பையளவு ஆனந்தத்தையே அள்ளிப் பருக முடிந்தது,'' என்று மோரிஸ் தனது உண்மையான உணர்வை என்னுடன் பகிர்ந்து கொண்டார். மற்றொரு முறை, ''கணேசன்! பகவானை ஒரு மனிதர் என எண்ணாதே. உபதேசங்களே பகவான்! உபதேசங்களாக எப்போதுமே அவர் நம்முடன் வாழ்கிறார். எவ்விதமான காரியங்களை நீ செய்து கொண்டிருந்தாலும் அதையும் தாண்டி அகமுகமாகி உள்ளே உறையும் மெய்ப்பொருளான உணர்வை அனுபவி. 'நான் இருக்கிறேன்' என்ற அந்த உணர்வே நமது பகவான்'' என்று ஊக்கமளித்தார்.

மும்பையில் நீண்ட தூரம் நடப்பதற்கு மோரிஸ் என்னை அழைத்துச் செல்வார். ''உனக்குக் 'கார்' ஒன்றும் ஏற்பாடு செய்ய மாட்டேன். பஸ்ஸில் கூட உன்னை அழைத்துச் செல்ல மாட்டேன். என்னுடன் செல்லுமிடத்திற்கெல்லாம் நீ நடந்து தான் வர வேண்டும். இதற்கு நீ தயாரா?'' என அவர் என்னிடம் வினவிய போது நான் கைக் கூப்பி ''எப்போதுமுள்ள மெய்ப்பொருளின் அருகில் இருப்பதற்கு நான் தயங்குவேனா?'' என பதிலளித்தேன். ஆன்மீகத்தில் உச்ச நிலையிலிருந்த மோரிஸ் உயரத்தில் ஐந்தடிக்கும் குறைவாகவே இருந்தார். அவருடன் நடப்பதற்கு நிச்சயமாக யாருமே தயங்கமாட்டார்கள். ஒரு நாள், ''கணேசன்! நான் சந்தித்த பீடி விற்கும் ஓர் எளிய மனிதரிடம் இன்று உன்னை அழைத்துச் செல்லப் போகிறேன்,'' என்றார். அந்த இடத்தை நோக்கி நாங்கள் நடந்து சென்று கொண்டிருந்த போது மோரிஸ், ''பீடி குடித்தவண்ணம் அமர்ந்திருந்த ஒரு கூட்டத்தினர், வாழ்க்கையில் தாங்கள் அனுபவிக்கும் துயரங்களை, அந்த எளிமையான மனிதரிடம் கூறிக் கொண்டிருந்தனர். பகவானைப் போன்றே அவர்களுக்கு அந்த மனிதர் பதிலளித்துக் கொண்டிருந்தார். பகவான் மராத்தி பாஷையில் பேசியிருந்தால் அவர் கூறியதையேதான் கூறியிருப்பார். நான் வழியிலேயே நின்று உன்னிப்பாகக் கேட்டேன். பீடி விற்கும் சாதாரண மனிதர் அவ்வாறு தங்கு தடையின்றி பேசியதைக் கேட்டு நான் வியப்படைந்தது மட்டுமின்றி தினமும் அங்கு சென்று அவர் கூறுவதையெல்லாம் குறிப்பெடுத்துக் கொண்டேன். பின்னர் என் வீட்டிற்குச் சென்று கேள்வி பதில்கள் அனைத்தையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வைத்தேன்,'' என்று என்னிடம் தெரிவித்தார்.

ஆனாலும் அந்த ஸாதுவின் அனுமதியின்றி மொழி பெயர்த்தது மோரிஸ்ஸின் மனதில் ஒரு குற்ற உணர்வை ஏற்படுத்தவே, அவர் தான் எழுதியவற்றை அவரிடம் எடுத்துச் சென்று தனது குறிப்புக்களை மராத்தியில் மொழிபெயர்த்து அவரிடம் கூறினார். அதைக் கேட்டு மிகவும் மகிழ்ச்சியடைந்த அந்த மனிதர் ''தொடர்ந்து குறிப்பெடுத்துக் கொள்,'' என்று அனுமதி வழங்கினார். இவையே பின்னர் ஆன்மீக உலகையே உலுக்கிய 'I am that' என்ற புத்தகமாக வெளிவந்தது. அந்த ஸாதுவே 'நிஸர்க்கதத்த மஹராஜ்'. நான் பின்னர் மஹராஜை சந்தித்த பிறகு, ''மோரிஸ்! நீங்கள் கூறியதனைத்தும் முற்றிலுமாக உண்மை. அந்த ஸாதுவின் முன் பகவானது ஸாந்நித்தியத்தை

என்னால் உணர முடிந்தது. அவர் வாயிலிருந்து சரளமாக வெளிப்படுபவை அனைத்துமே பகவானுடைய உபதேசங்கள் தான்,'' என மோரிஸ்ஸிடம் கூறினேன். எப்போதுமே என்னை உற்சாகப்படுத்தும் மோரிஸ், ''மஹராஜிடம் நீ என்ன பேசினாய் என்று என்னிடம் கூறு'' என்று சொல்லிப் பின் ''ஆன்மீக ஸாதகனான நீ ஞானிகளோடும் ஸாதுக்களோடும் ஸங்கம் வைத்து கொள்வது உனது தெளிவை வலுப்படுத்தும்; உன்னை இதயத்திற்கே கொண்டு சென்று உண்மையை உணரச் செய்யும். படிப்பதால் புத்திபூர்வமாக மட்டுமே புரிந்து கொள்ள இயலும். ஆனால் உண்மையை உணர்ந்தவர்கள் முன்னிலையில், புரிந்தாலும் புரியாது போனாலும் அந்த மெய்ப்பொருளை அனுபவபூர்வமாகத் தெரிந்து கொள்ள முடியும்,'' என்று கூறியதோடு, நிஸர்க்கதத்த மஹராஜிடம் தொடர்ந்து செல்வதற்கு என்னை ஊக்குவித்தார்.

மோரிஸ் ஃப்ரீட்மனுடைய இறுதி நாட்களில் என்னால் அவருடன் இருக்க இயலவில்லை. பகவானுடைய பக்தராகவும் அதே சமயம் நிஸர்க்கதத்த மஹராஜின் பக்தராகவும் இருந்த ஒரு நண்பர் மூலம் பகவானே மோரிஸ்ஸைக் கவனித்துக் கொண்டார் என்றறிந்து மகிழ்ச்சியடைந்தேன். ''மும்பையில் அதிக அளவு ஊதியம் பெற்று வந்த ஒரு நர்ஸ் இருந்தார். அவரது கனவில் கோவணம் மட்டுமே அணிந்திருந்த ஸாது ஒருவர் காட்சியளித்து 'எனது பக்தர் ஒருவர் மிகுந்த துன்பத்தை அனுபவிக்கிறார். அவரிடம் சென்று அவரைக் கவனித்துக் கொள்' என்று கூறியதுடன் மோரிஸ்ஸின் வீட்டிற்குச் செல்லும் வழியையும் அவருக்குத் துல்லியமாகத் தெரிவித்துள்ளார். கனவில் கண்ட அதே வீட்டில் மோரிஸ் படுத்திருந்ததை அந்த 'நர்ஸ்' மறுநாள் நேரில் பார்த்தார். மோரிஸ்ஸின் சிநேகிதியான மிஸ் பெடிட் அவரை விட மூத்தவர். அவருக்கும் உதவி செய்வதற்கோ கவனித்து கொள்வதற்கோ ஒருவரும் இல்லை என்பதை அறிந்தவுடனே அந்த 'நர்ஸ்' உதவி செய்வதாகக் கூறிய போதும் எளிமையைக் கடைப்பிடிக்கும் மோரிஸ் உதவியை ஏற்க மறுத்து விட்டார். ஏமாற்றமடைந்த அவள் வெளியில் செல்ல முற்பட்டபோது அறையிலிருந்த பகவானின் படத்தைக் கண்டு 'இவரைத்தான் நான் கனவில் பார்த்தேன்' என்று மோரிஸ்ஸிடம் உணர்ச்சி வசப்பட்டு கூறினாள். உணர்ச்சியால் நெகிழ்ந்து போன மோரிஸ் 'என் குரு என்னைக் கவனித்துக் கொள்ள வந்துள்ளார்' என்று கூறினார். கடைசிவரை மோரிஸ்ஸை அந்த நர்ஸே கவனித்துக் கொண்டார், என்று அந்த பக்தர் நடந்த விஷயங்களை என்னிடம் தெரிவித்தார்.

மோரிஸ்ஸைத் தனது குருவாக ஏற்றுக் கொண்டிருந்த அபா பந்த் மோரிஸ்ஸின் இறுதி நாட்களில் அவரோடு இருந்திருக்கிறார். அவருடைய வார்த்தைகளிலேயே அந்த நாட்களைப் பற்றி அறிந்து கொள்வோம். ''மும்பையிலிருந்து வந்த 'ஃபோனில்' ஒரு மெல்லிய குரல் 'ஞானி மரணத்தறுவாயில் இருக்கிறார். உங்களைக் காண விரும்புகிறார். அபா! விரைவாக இங்கு வாருங்கள்' என்று ஒலித்தது. நான் வந்தபோது மிஸ் பெடிட், மருத்துவர், நர்ஸ் ஆகிய அனைவருமே மோரிஸ் உணவு ஏற்கவும், மருந்துண்ணவும் மறுப்பதாகப் புகார் செய்தனர். எப்படியாவது அவரை உணவும் மருந்தும் உட்கொள்ளச் செய்ய வேண்டுமென்றும் என்னிடம் வேண்டிக் கொண்டனர். தான் விரும்பாத காரியம் எதையும் அவர் செய்ய மாட்டார் என்பது எனக்குத் தானே தெரியும்! அப்பழுக்கற்றுச் சீராக விளங்கிய அவரது அறையில் படுத்திருந்த மோரிஸ்ஸை மரியாதையுடன் நான் நெருங்கியபோது 'அபா! யார் இறந்து கொண்டிருக்கிறார்கள்?' என்று உரக்கக் கூறினார். மறுதினம் அறையிலிருந்த அனைவரையும் வெளியில் செல்லுமாறு கூறி என்னை மட்டும் கூட இருக்க சொன்னார். பிறகு 'அபா! இனிமையான ஸங்கீதத்தை நான் கேட்கிறேன். பேரொளியைக் காண்கிறேன். யார் மரணமடையப் போகிறார்? ஒருவருமில்லை. வியாதியினால் பீடிக்கப்பட்ட இந்த உடல் பேரின்ப வெள்ளத்தில் மூழ்க விடாமல் எனக்கு தடையாக உள்ளது. இந்த உடலிலிருந்து நான்

விடுதலை பெறுவதை அவர்கள் தடுக்காமல் கவனித்துக் கொள். இப்போது நீ அமைதியாகச் செல்,' என்று மிக அற்புதமாகக் கூறினார். மறுதினம் அவர் சரீரத்தை உகுத்தபோது நாங்கள் அனைவரும் அவரது படுக்கையைச் சுற்றி இருந்தோம். மூன்று முறை 'ஹரி ஓம்! ஹரி ஓம்! ஹரி ஓம்! என்று ஒலித்த பின் மூச்சு அடங்கிவிட்டது. அந்த இடத்தில் நிஸர்க்கதத்த மஹராஜும் இருந்ததால் நான் அவரிடம் 'மஹராஜ்! மோரிஸ் எங்கே போகிறார்? அவருக்கு என்ன நடக்கிறது?' என்று கேட்ட போது 'எதுவும் நடக்கவில்லை; யாரும் இறக்கவில்லை; ஏனெனில் யாரும் பிறக்கவில்லை' என்று அவர் பதிலளித்தார். நான் மீண்டும் அவரிடம் 'அப்படியானால் மஹராஜ்! ஏன் இந்த துக்கம்? ஏன் இந்த வெறுமை, இழப்பு இவை எல்லாம்?' என்று வினவியபோது 'யார் துக்கப்படுகிறார்? வெறுமையை யார் உணர்கிறார்? இழப்பு என்று கூறுவது யார்?' என்றாறவர். நான் மௌனமானேன்,'' என்பதாக அபா பந்த் தனது அனுபவத்தைப் பகிர்ந்து கொண்டார். சில மணி நேரத்தில் நிஸர்க்கதத்த மஹராஜின் முன்னிலையில் மோரிஸ் ஃப்ரீட்மன் என்றழைக்கப்பட்ட சரீரம் நெருப்பிற்கு இரையாக்கப்பட்டது. பஞ்ச பூதங்களால் ஆன அத்தேஹத்தில் இருந்தவை அதனதன் பூர்வ நிலைக்குத் திரும்பின. சிறந்த பக்தரான மோரிஸ் ஃப்ரீட்மன் தன் பிறப்பிடமான அருணாசலத்திடம் சென்று விட்டார்.

நிஸர்க்கதத்த மஹராஜ், அவருடன் தங்குமாறு கூறி அழைத்திருந்ததால், ஒரு முறை அவரது இல்லத்திற்குச் சென்று அங்கு எட்டு தினங்கள் தங்கினேன். காலையில் 8 முதல் 10 மணி வரை அவர் பூஜை செய்யும் நேரத்தில் என்னை உடன் அமரச் செய்வார். அவருடைய அறையில், ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர், புத்தர், இயேசுநாதர், ரமண மஹர்ஷி, இவர்களது படங்களுடன் மோரிஸ் ஃப்ரீட்மனுடைய படமும் இருந்தது. சந்தனம், குங்குமம், வாசனைத் திரவியம் இவற்றால் படங்களை அலங்கரித்து மாலையும் அணிவிப்பார். இந்த ஸம்பிரதாயமான சடங்கை அவர் செய்து கொண்டிருந்தபோது ஒரு நாள் அவர் ஏன் இப்படியெல்லாம் செய்கிறார்? என்ற எண்ணம் என்னுள் எழுந்தது. என்னை உடனே திரும்பிப் பார்த்த அவர், 'மோரிஸ் ஃப்ரீட்மன் ஒரு ஞானி. அவர் ஒரு மஹான், ஒரு ஸாது' என்று கருணையோடு உரைத்தார். அவர் கூறியது மறுக்க முடியாத ஒரு உண்மை. பகவான் ரமணர் மற்றும் நிஸர்க்கதத்த மஹராஜின் உபதேசங்களின் சாரத்தை நமக்களித்து அனுக்கிரஹித்துள்ளார் மோரிஸ். வியக்கத்தக்க பல பணிகளைச் செய்திருந்தும், பிறர் அறியாவண்ணமும், பிறருடைய கவனத்தை ஈர்க்காமலும் வாழ்ந்த மாமனிதரின் சரிதத்தைப் பகிர்ந்து கொள்ளும் வாய்ப்பைப் பெற்ற நாம் எத்துணை பாக்கியசாலிகள்! மோரிஸ் தொகுத்த 'Maharshi's Gospel' என்ற அற்புதமான நூலின் முதல் பதிப்பில் அவரது பெயர் எங்குமேயில்லை என்பதைச் சற்று சிந்தித்துப் பாருங்கள்!! மெய்ப்பொருளைத் தேடும் உண்மையான ஸாதகர்கள் தமது இதயத்தில், என்றும் மோரிஸ்ஸை நினைவு கூற வேண்டும்.





ஸ்ரீ பகவான் பலாக்கொத்தில்

# 42 S. S. கோஹென்



ஈராக் நாட்டைச் சேர்ந்த யூதரான S. S. கோஹென், ரமண பகவானிடம் வந்தவர்களில் மிகவும் கூர்மையான புத்தியுடையவர்களில் ஒருவர். தனது பதினெட்டாவது வயதில் யோகிகளின் வாழ்க்கையில் நிகழும் அறிவுக்கெட்டாத அதிசய நிகழ்ச்சிகள் பற்றிக் கூறும் ஒரு புத்தகத்தை கோஹென் படிக்க நேர்ந்தது. ஸத்யத்தை அறிந்து கொள்ளத் தீர்மானித்த அவர், வாழ்க்கையை மாற்றியமைக்கக் கூடிய ஒரு ஞானியைச் சந்திக்க வேண்டுமென்றால் தனது அனைத்தையும் தியாகம் செய்ய வேண்டியது அவசியம் என்பதை உணர்ந்திருந்தார்.

அப்போது, முதல் உலக மஹாயுத்தம் நடந்து கொண்டிருந்தது. ஒருவர் அமைதியைத் தனக்குள்ளேயேதான் பெற முடியுமேயன்றி, ஒரு போதும் அதை வெளியிலிருந்து பெற முடியாது, என்னும் மிகப்பெரிய பாடத்தை, அந்த யுத்தம் அவருக்குப் புகட்டியது. இளம் வயதிலேயே, அவருடைய இதயத்தில் ஆழமாகப் பதிந்து விட்ட இந்த உண்மை, வாழ்க்கையின் உள்ளர்த்தத்தை அறிவதற்கான திறவுகோல் இந்தியாவில் உள்ளதாக, அவருக்கு உணர்த்தியது. அந்தச் சமயத்தில், யதேச்சையாக மும்பையில் இருந்த அவரது நெருங்கிய நண்பர், மிகவும் உடல் நலம் குன்றிய நிலையில் இருந்தார். (இத்தகைய அனுபவங்களைப் பெறும்போது நாம் அவற்றைக் கடவுள் அருளால் நிகழ்ந்தது என்றோ அல்லது யதேச்சையாக நடந்தது என்றோ கூறுவோம். ஒரு ஸாதகனின் வாழ்க்கையில் எதுவும் யதேச்சையாக நடைபெறுவதில்லை. உண்மையில் குருவின் அருளே செயல்படுகிறது.) பங்குச் சந்தைகள் வீழ்ச்சியுறாத வரை அந்த நண்பர் லக்ஷாதிபதியாக இருந்தார். திடீரென்று அனைத்தையும் இழந்து, பிழைக்க வழியில்லாத பரம ஏழையாகத் தெருவிற்கு வந்துவிட்டதால் மனமொடிந்த நிலையிலிருந்தார். தனது உண்மை நண்பனும், உபகாரியுமான கோஹெனுக்குத் தன் நிலை பற்றி எழுதியிருந்தார். தனக்கு மிகவும் உதவிய அந்த புத்தகத்தைப் படிப்பது, நொடிந்து போன நிலையிலிருந்த தனது நண்பனுக்கும் கை கொடுக்கக் கூடுமென கோஹென் எண்ணினார். அத்துடன் மிக ஏழ்மையிலிருந்த தனக்கும் இந்தியாவிற்குச் செல்ல ஒரு வாய்ப்பாக இருக்குமென்றும் நினைத்தார். கப்பலைச் சுத்தம் செய்யும் தொழிலைச் செய்து வந்த அவரது தந்தை, பதினோரு குழந்தைகளில் மூத்தவரான கோஹெனை, மிகவும் நேசித்தார். கோஹெனின் மனதிலிருந்த ஆன்மீக ஏக்கத்தை அறிந்த அவரது தந்தை, தன் முதலாளியை அணுகித் தனது மகனுக்கு மும்பைக்குச் செல்லும் கப்பலில் சிறிய வேலை கொடுத்து உதவ வேண்டும் என்று விண்ணப்பித்தார். ஏழ்மையில் உழன்ற கோஹெனின் தந்தையால், தன் மகனது வழிச் செலவுக்காக ஒரே ஒரு நாணயத்தை மட்டுமே தர முடிந்தது. மகனுடைய சட்டைப் பையில் அந்தக் காசைப் போட்டு, “சென்று வா மகனே! உன் ஆன்மீகத் தேடலில் உனக்கு வெற்றி கிடைக்கட்டும்,” என ஆசீர்வதித்து அனுப்பி வைத்தார். இவ்வாறு கோஹென் விரைவிலேயே இந்தியாவிற்குப் பயணமானார்.

கோஹென் தன் நண்பனைப் பார்த்து, அந்தப் புத்தகத்தைக் கொடுத்துப் படிக்கச் செய்தார். அது, நண்பருக்கு நல்ல ஆறுதலைத் தந்தது. இருவருமே மிகுந்த ஏழ்மையில் இருந்தனர். கோஹெனிடமாவது தந்தை கொடுத்த ஒரு நாணயம் இருந்தது. நண்பரிடம் அதுவும் இருக்கவில்லை. கடும் உழைப்பாளியான கோஹென், மும்பையில் ஒரு கடையில் உதவியாளராக வேலையில்

சேர்ந்தார். கூர்மையான புத்தியுடைய அவர், உலகில் இரண்டு விதமான மக்களையே கண்டார் — ஒருபுறம், சந்தோஷமாக, வசதிகளோடு வாழ்பவர்களையும், மறுபுறம் துக்கத்தை அனுபவித்துக் கொண்டு, பல குறைகளைக் கூறியபடி வாழ்பவர்களையும் கண்டார். சந்தோஷமாக இருப்பவர்களிடம் நல்ல பணவசதியும், நல்ல அறிவும் இருப்பதையும், துக்கப்படுபவர்களிடம் இந்த இரண்டுமே இல்லை என்பதையும் கோஹென் உணர்ந்தார். அதனால் அறிவை வளர்த்துக் கொள்வதுடன் பணமும் சம்பாதிக்க தீர்மானித்தார். தேவைகளால் அவதிப்படாமல், ஆன்மீக ஸாதனைகளைச் செய்ய உதவும் என்பதற்காகவே பணம் சம்பாதிப்பது அவசியம் என எண்ணினார். ஒரு சாதாரண கடைக்காரரிடம் கணக்கர் வேலை கிடைத்தது. அந்தக் கடைக்காரரும் கோஹெனுக்கு நன்கு கற்பித்துப் பயிற்சியளித்தார். புத்தி சாதுர்யத்துடன் விளங்கும் கோஹெனைக் கவனித்த அவர், தனது கணக்குகள் அனைத்தையும் கோஹெனிடமே ஒப்படைத்ததுடன் மற்ற கடைக்காரர்களிடமும் அவரைச் சிபாரிசு செய்தார். கணக்குகளை சரியான முறையில் கவனித்துக் கொள்ளும் நல்ல கணக்கர் என்ற பெயரை, அருகிலிருந்த கடைக்காரர்களிடம் சம்பாதித்தார் கோஹென்.

இதற்கிடையில், கோஹென் யாருக்கு மன அமைதி பெற உதவினாரோ அந்த நண்பர், மும்பையில் பிரும்ம ஞான ஸபையில் (Theosophical Soceity) அங்கத்தினராகி, அவர்கள் ஏற்பாடு செய்த கூட்டங்களுக்குக் கோஹெனையும் அழைத்துச் செல்ல ஆரம்பித்தார். அங்கு கோஹென் ஸொஸைட்டியின் தலைவரான அன்னிபெசன்ட் அம்மையாரைச் சந்தித்தார். அவர் மிகுந்த அறிவாளியாக இருந்தது மட்டுமின்றி, முழுமையான அர்ப்பணிப்புடன், வெகு நிறைவாகச் செயல்களைச் செய்து முடிப்பதையும் பார்த்த கோஹெனுக்கு, அவரிடம் ஈர்ப்பு ஏற்பட்டது. இறைவனது அருளால், அன்னிபெசன்ட் அம்மையாருக்கு மும்பையில் அவருடைய கணக்குகளைக் கவனித்துக் கொள்ள ஒருவர், தேவைப்பட்டது. கோஹென், அன்னிபெசன்டை ஏற்கனவே சில முறை தனிமையில் சந்தித்திருந்தால், தனது கணக்குகளைக் கவனித்துக் கொள்ளுமாறு அம்மையார் அவரிடம் கேட்டுக் கொண்டார். கோஹென், அவருக்குக் கொடுத்த பணியை நிறைவாகச் செய்திருந்ததைக் கண்டு மிகவும் மகிழ்ச்சியடைந்த அன்னிபெசன்ட், சென்னையில் இருந்த தனது தலைமை அலுவலகத்தில் பணியாற்ற அவரைத் தன்னுடன் அழைத்துச் சென்றார். அங்கு பணியாற்றிய ஐந்து ஆண்டுகளையும் அவர் நன்கு பயன்படுத்திக் கொண்டார். சென்னையில் இருந்த பிரும்ம ஞான சபையின் நூலகம், இந்தியாவின் மிகப்பெரிய நூலகங்களில் ஒன்று. அங்கு வேதாந்தத்தையும், தத்துவ சாஸ்திரத்தின் பல பிரிவுகளைச் சார்ந்த நூல்களையும் கற்று அறிந்தார். இறைவன் இவ்வாறுதான் நம்மை வழி நடத்திச் செல்கிறான். 'நாம் இறைவனை நோக்கி ஒரு அடி எடுத்து வைத்தால், ஆண்டவன் நம்மை நோக்கி ஒன்பது அடிகளை வைப்பான்', என்று மஹான்கள் கூறுவார்கள். "நான் ரமண பகவானுக்கு வெகு அருகிலேயே ஐந்து ஆண்டுகள் இருந்தபோதும் அவரைப் பற்றிக் கேள்விப்படக்கூட இல்லை," என்று கோஹென் அழாத குறையாக என்னிடம் கூறி வருந்தினார்.

இந்தச் சமயத்தில், ஆயிரக் கணக்கான மைல்களுக்கப்பால் வெளிநாட்டில் இருந்த ஒரு நண்பர், தபால் மூலம் அவருக்கு ஒரு புத்தகத்தை அனுப்பியிருந்தார். அது கோஹெனின் வாழ்க்கையில் திருப்புமுனையாக அமைந்தது. தபாலின் மூலம் வந்த 'A Search in Secret India' என்ற பால் பிரண்டனின் புத்தகத்தைப் படித்த போது அவர் மெய்சிலிர்த்துப் போனார். வாழ்க்கையை மாற்றியமைக்க வல்ல ஒரு ஞானியைக் காண அனைத்தையும் துறக்க வேண்டும் என்னும் அவரது பேரவா நிறைவேறப் போகிறது என்பதைப் புரிந்து கொண்டார். பல மஹான்களைப் பற்றிக் கூறும் அந்தப் புத்தகத்தில், மேஜர் சாட்விக்கைப் போன்றே, ரமண பகவானைப் பற்றி உரைக்கும் மூன்று

அத்தியாயங்களே கோஹெனை மிகவும் கவர்ந்தது. மிகுந்த ஏக்கத்துடன் தான் காண விரும்பிய ஞானி இவர்தான் என்று அவரது உள்ளுணர்வு உணர்த்தியது. 1936-ம் ஆண்டு பிப்ரவரி மாதம், தனது சேமிப்பான ரூபாய் ஏழாயிரத்துடனும், தனது பெட்டி படுக்கைகளுடன், ரமணாச்ரமம் வந்து சேர்ந்தார். உணவுக்கூடத்தில் பகவான் தனது காலைச் சிற்றுண்டியை முடிக்கப் போகும் தருணத்தில் கோஹென் தனது மேல்நாட்டு உடையில் உள்ளே நுழைந்தார். பகவான் தன் தலையைக் கூட நிமிர்த்தாமல், ''தயவு செய்து உள்ளே வந்து சிற்றுண்டி சாப்பிடுங்கள்,'' என்று தனது மிக இனிய குரலில், அவரை வரவேற்றார். பிற்காலத்தில் இந்நிகழ்ச்சியைக் கோஹென் நினைவு கூர்ந்தபோது, ''அதுவே எனது ஆன்மீகப் பயணத்தின் ஆரம்பமும் முடிவுமாக இருந்தது,'' என கண்களில் கண்ணீருடன் கூறுவார். உள்ளே வந்து கோவணாண்டியாகப் பகவானைப் பார்த்தபோது, தனக்கு முன்னால் ஸத்தியமே மனித உருவில் இருப்பதை உணர்ந்து பரவசமடைந்தார். கோஹென் பரவசத்தில் தன்னை மறந்து நின்று கொண்டிருக்கையில் பகவான் தனது வழக்கப்படி மலை மீது நடக்கச் சென்று விட்டார்.

பகவான் திரும்பி வந்து மீண்டும் பழைய ஹாலில் அமர்ந்து கொண்ட சமயம் கோஹெனும் வந்து தனது குருவின் முன் அமர்ந்தார். அவரது உணர்ச்சிகள் ஆன்மீகப் பரவசமாக உள்ளிருந்து பொங்கி, கட்டுக்கடங்காமல் வெளிவந்தன. இந்த அனுபவத்தைப் பின்னால் அவர் நினைவு கூர்ந்த போது, ''நான் உணவுக் கூடத்தில் பகவானுடன் தனித்திருந்த அந்த சமயத்தில் ஆனந்தமும், அமைதியும் என்னுள் படர்ந்தன. அப்போது நான் உணர்ந்த புனிதத் தன்மையையும், சுகத்தையும் எந்த மனிதரின் அருகாமையிலும் அதுவரை நான் உணர்ந்ததில்லை. என் மனம் பகவானைப் பற்றிய ஆழ்ந்த சிந்தனையில் ஏற்கனவே மூழ்கியிருந்தது. அவரது சரீரம் மிக நேர்த்தியோடு இருந்தபோதும், அவர் எனக்கு சரீரமாகத் தோன்றவில்லை. மாறாக, அலௌகீக வஸ்துவாக அவரை உணர்ந்தேன். சிறிது நேரத்திற்குப் பின் எனக்குப் புறநினைவு வந்தபோது, தனது பெரிய ஊடுருவும் கண்களால் பகவான் புன்முறுவலுடன் என்னை நோக்கிக் கொண்டிருந்ததைப் பார்த்தேன். கள்ளம் கபடமற்ற குழந்தையின் தெய்வீகமான சிரிப்பைப் போன்று அது மிகவும் இதமாக இருந்தது,'' என்று கோஹென் கூறியுள்ளார். இவ்வாறுதான் அவர் பகவானுடைய வலையில் வீழ்ந்தார்!

தன்னை மறந்த நிலையில் பகவான் முன் அமர்ந்திருந்த கோஹென், தான் இன்னும் தனது உடுப்புக்களை மாற்றிக் கொள்ளவில்லை என திடீரென்று உணர்ந்தார். குருவிடம் அர்ப்பணிக்கக் கொண்டு வந்திருந்த பழங்கள் குறித்த நினைவு அப்போது வரவே, உடனே தனது பையில் பெட்டியின் சாவியைத் தேடினார். ஆனால் அது கிடைக்கவில்லை. அதுவும் ஒரு மறைமுகமான ஆசியாக அமைந்தது. நினைத்தவாறு நடக்காத போதும் அதை ஏற்றுக் கொண்டு, மீண்டும் கண்களை மூடியவாறு அமர்ந்திருந்த அவர் திடீரெனத் தனது மடியில் சாவிகள் குலுங்கும் சத்தத்தைக் கேட்டார். ஆச்ரம வேலையாக இராமஸ்வாமி பிள்ளை என்ற பக்தர் இரயில்வே ஸ்டேஷனுக்குச் சென்றிருந்தார். இரயிலில் பயணித்த ஒருவர், ஸ்டேஷன் மாஸ்டரிடம், ''ஐயா! இந்தச் சாவிக் கொத்து, ஒரு ஆங்கிலேயர் அமர்ந்திருந்த இடத்தில் கிடந்தது. ஒரு வேளை உங்களால் இதை அவரிடம் சேர்க்க முடியலாம்,'' எனக் கூறி அதை அவரிடம் தந்தார். ரமணாச்ரமத்திலிருந்து யாராவது வருகிறார்களா என்று நோக்கியபடி சாவிக் கொத்துடன் ஸ்டேஷன் மாஸ்டர் நின்றிருந்தபோது இராமஸ்வாமி பிள்ளை கண்ணில் படவே, அவரிடம் அதைச் சேர்த்தார். பிள்ளை ஆச்ரமத்திற்கு வந்து பகவானிடம் விஷயத்தைத் தெரிவித்தபோது ''சாவி யாருடையதாக இருக்க முடியும்! அதோ அங்கு அமர்ந்திருக்கிறாரே அவருடையது தான்,'' என்று கோஹெனைச் சுட்டிக்காட்டி பகவான் உறுதிபடக் கூறியவுடன் இராமஸ்வாமி பிள்ளை சாவிக்கொத்தை அவருடைய மடியில் வைத்தார். பகவான் இனி தொடர்ச்சியாக நிகழ்த்தப்போகும், அதிசயங்கள் எனக் கூற முடியாத பல



பகவானுடன் மலையில் மேற்கத்திய பக்தர்கள் (அவருக்குப் பின்னால் நிற்பது கோஹென்)

அதிசயங்களில் இதுவும் ஒன்றாகும். வாழ்க்கையின் உள்ளர்த்தத்தை வெளிப்படுத்தக்கூடிய திறவுகோலைத் தேடி இந்தியாவிற்கு வந்த, கோஹெனுக்கு 'அது தனக்கு நிச்சயமாகக் கிடைக்கும்' என்ற நம்பிக்கை அப்போது ஏற்பட்டது.

அந்தச் சமயத்தில் ரமணாச்ரமத்தில் தங்கியிருந்த பால் பிரண்டனிடம் சேர்ப்பதற்காக கடிதம் ஒன்றை, கோஹென் எடுத்து வந்திருந்தார். கடிதத்தை அவரிடம் சேர்ப்பதற்காக அவரைத் தேடிக் கொண்டிருந்த பொழுது, ஒரு அறையில் மேஜையின் முன் அமர்ந்து புத்தகம் படித்துக்கொண்டிருந்த ஒரு வெளிநாட்டவரைக் கண்டார். அவர்தான் பிரண்டன் என எண்ணி, "மிஸ்டர் பிரண்டன்! குட்மார்னிங்,' என்று வணக்கம் தெரிவித்தார். அதற்கு அவர் "நான் பிரண்டன் இல்லை. என் பெயர் மேஜர் A. W. சாட்விக்," என்று பதிலிறுத்த அக்கணத்திலேயே அவர்கள் இருவரும் நண்பர்களானார்கள். தொடர்ந்து "பிரண்டன் வெளியூர் சென்றுள்ளார். இரண்டு நாட்களில் திரும்புவார்" என்றும் சாட்விக் உரைத்தார். பிரண்டன் திரும்பி வந்த பின்னர் அவரோடும், சாட்விக்கோடும், அருமையான ஸத்ஸங்கத்தில் ஈடுபட்டார் கோஹென். மூவரும் தங்களது குருவைப் பற்றி மணிக்கணக்கில் பேசியதோடு, தங்களுடைய சந்தேகங்கள் சிலவற்றிற்கு விளக்கம் பெறவும் முயற்சி செய்தனர். பால் பிரண்டன், கோஹென் இருவருமே யூதர்கள் என்பதோடு மட்டுமின்றி அறிவாளிகளும் கூட. இப்பேற்பட்ட நிலையில் காரசாரமான விவாதங்கள் எழுவது சகஜம்தான். அன்று அவர்கள் பிரம்மச்சரியம் குறித்து விவாதித்தனர். பால் பிரண்டனுக்கு பிரம்மச்சரியத்தின் மீது நம்பிக்கை இருக்கவில்லை. ஆனால், அது ஆன்மீக ஸாதகர்களுக்கு இன்றியமையாதது என்ற தீர்மானமான கருத்துடன் இருந்தார் கோஹென். ஸாதகர்களுக்கு ஸாத்வீக உணவு, பிரம்மச்சரியம், ஸத்ஸங்கம் போன்ற பயிற்சிகள் உதவியாக இருக்கும் என்று கோஹென் உறுதியாக நம்பினார். பிரண்டனோ அவரது நிலைப்பாட்டிலிருந்து சிறிதுகூட அசைந்து கொடுப்பதாக இல்லை என்பதைக் கண்ட சாட்விக் "நீங்கள் எதற்காக முடிவின்றி இப்படி விவாதித்துக் கொண்டிருக்கிறீர்கள்? நாம் பகவானிடம் சென்று அவரிடம் கேட்போம்," என்று கூறவும், பகவானிடம் சென்றனர். "பகவானே! பிரம்மச்சரியம் ஆன்மீக ஸாதகர்களுக்குத் தேவைதானா?" என சாட்விக் வினவினார். பகவானுடைய பதில் எப்போதுமே பிரச்சனைகளைத் தீர்த்து வைப்பதாக மட்டும் இருக்காது. பிரச்சனைகளே எழாமலிருக்க என்ன செய்ய வேண்டும் என ஸாதகர்களுக்கு உணர்த்துவதாகவே பதில்கள் இருக்கும். "பிரம்மச்சரியம் என்ற சொல்லுக்கு ப்ரஹ்மத்திலிருந்து விலகாதிருத்தல் என்பதே பொருள். அதனால் ஸாதகர்கள் ப்ரஹ்மத்திலிருந்து அதாவது 'நான் இருக்கிறேன்' என்ற உணர்விலிருந்து ஒரு போதும் விலகாதிருப்பதுதான் முக்கியம்," என்று பகவான் தெளிவு செய்தார்.

பிரச்சனையே எழாத வகையில் இருந்த பகவானது பதிலைச் செவியுற்ற கோஹெனுக்கு, அவருடைய அனைத்து நூல்களையும் படிப்பதில் ஆர்வமேற்பட்டது. ஆச்ரமத்திலேயே நிரந்தரமாகத் தங்கி, பகவானது நூல்களைக் கற்கத் துவங்கினார். ரமணாச்ரமத்தை அவர் விரும்பியதற்கு முக்கிய காரணம், அங்கு எந்த விதிமுறைகளும் இல்லாததுதான். கூட்டங்கள், வகுப்புகள், பஜனைகள், சடங்குகள் இவைகளில் கலந்து கொண்டேயாக வேண்டும் என்று யாருமே வற்புறுத்தப்படவில்லை. ஆச்ரமத்தில் ஸாதகர்களுக்கு அளிக்கப்பட்ட சுதந்திரம் கோஹெனின் மனதைக் கவர்ந்தது. பகவானைப் பார்த்தால், அவரும் எல்லோருக்கும் பூரண சுதந்திரம் வழங்குகிறார். "இதைச் செய்தே ஆகவேண்டும்! இது செய்யக்கூடாதது! இது முக்கியமானது! இது அவ்வளவு முக்கியமில்லை!" என்று பகவான் எதுவும் கூறாமல் இருந்ததற்குக் காரணம், ஒவ்வொருவருக்கும் தனக்கு எது நன்மை பயக்கும் என்பது மற்றவர்களை விட நன்றாகத் தெரியும் என்பதால்தான். எவ்விதத் தடைகளும் இல்லாத காரணத்தால், ஆச்ரமம் ஈர்த்ததைவிட அதிகமாகவே பகவான் கோஹெனை ஈர்த்தார்.

“பகவான் எல்லா குருமார்களையும் விடப் பரந்த நோக்குள்ளவர். தனது சீடர்களைச் சட்டதிட்டங்களால் கட்டுப்படுத்த வேண்டுமென்ற எண்ணமே அவருக்கு இருக்கவில்லை. விதிமுறைகள் எதுவுமின்றித் தன்னுள் விளங்கும் ஸத்தியத்தை பகவான் உணர்ந்து கொண்டதால், பொதுவான ஒழுக்கங்கள் வற்புறுத்தப்பட வேண்டும் என்றுகூட அவர் கருதவில்லை. உரிய காலத்தில் ஒரு மொட்டினுள் விளங்கும் சக்தி அதை எப்படி மலர்விக்கிறதோ அதே போன்று, சரியான நேரத்தில் நம்முள்ளிருக்கும் உள்ளபொருள் தானே தன்னை விளக்கிக்கொள்ளும் என்பதை அனுபவபூர்வமாக உணர்ந்தவர் அவர்,” என்று கோஹென் குறிப்பிட்டுள்ளார்.

விருந்தினர்களுக்கென பொதுவாக ஒதுக்கப்பட்டிருந்த அறையில் அப்போது கோஹென் தங்கியிருந்தார். அறையில் கூட்டமாக இருக்குமென்பதால், தீவிர ஸாதகரான அவர் தனக்குத் தனிமை தேவை என்று எண்ணினார். பகவானிடம் சென்று “பகவானே! ஆச்ரமத்திற்கு வெளியில் ஒரு குடிலை அமைத்துக்கொண்டு அதில் தங்கி என் ஸாதனைகளைத் தொடரட்டுமா?” எனக் கேட்டபோது, பகவானும் அனுமதியளித்ததால், பலாக்கொத்தில் ஒரு குடிலைக் கட்டி, அங்கு தங்க முற்பட்டார். கோஹெனுக்கு எப்போதுமே ஆஸ்துமாவின் உபாதை இருந்தது என்பதால் அவர் ஈரப்பதமான இடத்தில் இருப்பதைத் தவிர்க்க வேண்டுமென்பதில் பகவான் கவனமாக இருந்தார். அதனால் “குடில் சுவர்கள் காயும் வரை காத்திருந்து பின்னர் அதில் தங்குங்கள்,” என்று அறிவுறுத்தினார். தனக்கு ஆஸ்துமா தொந்தரவு உள்ளது பகவானுக்கு எவ்வாறு தெரியும் என்று கோஹென் ஆச்சரியப்பட்டார். புதுமனை புகுவிழாவன்று பகவானையும் மற்ற பக்தர்களையும் கோஹென் அழைத்திருந்தார். குடிலினுள் நுழைந்த பகவான், “எனக்காக நாற்காலியோ வேறெதாவதோ போடத் தேவையில்லை,” எனக் கூறி எல்லோருடனும் தரையில் பாய்மேல் அமர்ந்துகொண்டார். விழா நிறைவுற்றபின், கிளம்பிய பகவானுடன் உணர்ச்சி பொங்க வெளியில் வந்த கோஹென், “பகவானே! இந்த சரீரத்திற்கு ஒரு வீட்டை நீங்கள் கொடுத்துவிட்டீர்கள். என் ஆத்மாவிற்கு நிரந்தரமான ஒரு வீட்டைத் தயை கூர்ந்து தந்தருள்வீர்களா? அதற்காகத்தான், எனது குடும்பத்தையும், உலக பந்தங்களையும் அறுத்தெறிந்து விட்டு இங்கு வந்துள்ளேன்,” எனக் கூறினார். சிறிது நேரம் மௌனமாக நடந்து சென்ற பகவான் பின் அவரைப் பார்த்து “கோஹென் உங்களது உறுதியான நம்பிக்கை உங்களை இங்கு கொண்டு வந்திருக்கிறது. அவ்வாறிருக்கும் போது அங்கு சந்தேகத்திற்கு இடமேயில்லையே?” என்று கூறி அவருக்குச் சமாதானமளித்தார்.

கோஹெனுக்கு, அவரது சேமிப்பான ஏழாயிரம் ரூபாயின் மூலம் கிடைத்த குறைவான வட்டிப் பணம் மட்டுமே வருமானம். பலாக்கொத்தில் தனது குடிலில் வாழ்ந்த போது, காலையில் சிறிது சாதமும் காய்கறியும் சமைத்து வைத்துவிட்டு, பகவானுடன் இருக்கும் பொருட்டு ஆச்ரமத்திற்குச் சென்றுவிட்டால் பிறகு மதிய உணவு உண்பதற்குத்தான் தனது இல்லம் திரும்புவார். வாழ்நாள் முழுவதுமே, தனக்கு விதவிதமான உணவு உண்பதில் நாட்டம் இருக்கவில்லையென்றும், பசியைத் தீர்த்துக் கொள்வதற்காக மட்டும் உண்டதாகவும், ருசிக்கு முக்கியத்துவம் தரவில்லை என்றும் கோஹென் என்னிடம் கூறியுள்ளார். ஒரு நாள் செல்வந்தர் ஒருவர், ஆச்ரமத்தில் மிகப்பெரிய அளவிலான விருந்திற்கு ஏற்பாடு செய்திருந்தார். ஆனால் விருந்திற்குக் கோஹென் அழைக்கப்படவில்லை. தனது எளிய உணவை உண்ண அவர் தன் குடிலுக்குச் சென்றபோது, முதன்முறையாக உணவு காரணமாக மனவேதனையடைந்தார். “அதற்கு முன்னாலும் பின்னாலும் நான் உணவைப் பற்றி சிந்தித்ததே இல்லை. ஆனால் அன்று மிகவும் வருந்தினேன். ‘எல்லோரும் அங்கு விருந்து சாப்பிடுகிறார்கள்; நான் மட்டும் இந்த எளிய உணவை உண்ண வேண்டிய நிலையிலுள்ளேன்’, என்று என்மீது அனுதாபம் கொண்டேன். அன்று மதியம் பகவான் எனது

குடிசைப் பக்கமாக வந்தபோது, "கோஹென் சாப்பிட்டுவிட்டீர்களா?" என்று கேட்டார். அதுவரை அவர் அம்மாதிரி கேட்டதே இல்லை. ஏதோ சிறிது சாதமும் காய்கறியும் சாப்பிட்டதாக கோஹென் அலுத்துக்கொண்டு பதிலளித்த உடன், "சாதமும் காய்கறிகளுமா? ரொம்ப நல்லதாயிற்று. நான் விரூபாக்ஷ குகையில் இருந்தபோது பல நாட்களுக்கு உண்பதற்கு எதுவுமே இருக்காது. சில நாட்களில் யாராவது சாதத்தை மட்டும் கொண்டு வருவார்கள். அதில் தண்ணீரைச் சேர்த்து, உப்புக் கூட இல்லாமல் சாப்பிடுவேன். உங்களுக்கு சாதம், காய்கறி, உப்பு இவையும் அதற்குமேல் தயிரும் கூடக் கிடைத்துள்ளதே!" என்று பகவான் அதிசயத்தோடு கூறினார். "நான் அன்று அதைக் கேட்டதற்குப் பின், ஒரு நாள் கூட உணவு என் மனதைத் திசைதிருப்பவில்லை," என்று கூறிய கோஹென் தொடர்ந்து, "குருவுடன் வாழ்வதால் கிடைக்கும் நன்மை இதுதான். ஒருவரிடம் உள்ள குறைகளனைத்தும் வேரோடு களையப்படுகின்றன. குருவோடு வாழ்வதே ஒரு ஆன்மீக ஸாதனைதான்," என்று கூறினார்.

கோஹென், பகல் முழுவதும், சில சமயங்களில் இரவும் கூட பகவானோடு கழிப்பார். "குருவுடன் தங்கும் போது நாம் அவரது ஆன்மீக சக்தியைக் கிரஹித்துக் கொள்ள வேண்டும். இரவு நேரங்களில், சில தீவிர ஸாதகர்கள் மட்டும் அவரைச் சுற்றி இருக்கும் சமயங்களில், அவர் பண்டைக்கால ரிஷிகள், ஞானிகள் இவர்களைப் பற்றியும் புராணக் கதைகளையும் கூறுவதுண்டு. பகவான் பேசினாலும், மௌனமாக இருந்தாலும், அவரது ஸாந்நித்தியத்தில் அத்யாத்ம சக்தி அளவு கடந்து நிரம்பியிருக்கும். அந்தச் சக்தியில் நனைந்த வண்ணம் அவரைப் பார்த்துக் கொண்டே இருப்பது எங்களுக்கெல்லாம் மிகவும் பிடித்த விஷயம்," என்று கூறினார். ஒரு சமயம் கோஹென், "இவ்வாறு ஸாதனை செய்யும் கட்டத்தில் குருவின் அருகில் அவருடைய ஸந்நிதியில் இருந்தது, மிகுந்த பலனைத் தந்தது," என்று என்னிடம் கூறினார். "அது எவ்வாறு சாத்தியம்?" என்று நான் கேட்டதற்கு, "முட்டாள்தனமான எதிர்பார்ப்புக்கள், தவறான மதிப்பீடுகள், ஒன்றுக்கும் உதவாத கொள்கைகள் போன்றவற்றால் விரயமான சக்தியால் எனக்கு ஏற்பட்ட காயங்களை ஆற்றியது. பகவான் என்மீது தன்னருளைப் பொழிந்தார். அத்யாத்ம பசியைப் போக்கும் வகையில் எனக்கு வழி காட்டுவதற்காக, அதுவரை நான் பின்பற்றி வந்த ஸாதனை முறைகள், என்னைக் கடைத்தேற்றும் எனக்கருதி நான் வளர்த்துக் கொண்ட நம்பிக்கைகள் அனைத்தையும் கைவிட்டு, எந்த ஒளிவு மறைவும் இல்லாமல் முழுவதுமாக சரணடைய வேண்டுமென்ற தாங்கமுடியாத உந்துதல், திடீரென என்னைப் பலமாகப் பற்றிக் கொண்டது. அந்தக் க்ஷணத்தில், எனது விதியையும் சேர்த்து, எனது அனைத்தையும், என் குருவான ஸ்ரீரமண மஹர்ஷியின் திருக்கரங்களில் ஒப்படைத்தேன்," என்று கோஹென் கூறியுள்ளார்.

மூன்றாண்டுகள் கடுமையான ஸாதனையில் ஈடுபட்ட கோஹென், ஒரு நாள் விட்டு ஒரு நாள் எட்டுமைல் சுற்றுப்பாதையில் கிரிவலம் செய்யத் துவங்கினார். "ஏன் அவ்வாறு செய்கிறீர்கள்?" என நான் வினவியபோது, "கிரிவலம் செல்லும் அந்த மூன்று மணி நேரமும் எண்ணங்கள் எழுவதில்லை. கவனம் முழுவதும் தன்னிருப்பிலேயே இருக்கிறது. சரீரத்திற்கும், மனதிற்கும் வெளிமுகமாக எந்த ஈர்ப்பும் இருப்பதில்லை. கவனத்தை எவ்வித முயற்சியுமின்றி எளிதாக நம்மிடமே திருப்புவதற்கு தெய்வீகமான அண்ணாமலை மிகவும் உதவியாக உள்ளது," என்று கோஹென் என்னிடம் தெரிவித்தார். இது ஏகாந்தமாக மௌனத்தில் நிலைத்திருக்க அவருக்கு பெரிதும் உதவியது. புறச் செயல்கள் அவரை ஈர்த்து, கவனத்தைத் திசை திருப்ப முற்பட்டபோது அவர் பகவானிடம் சென்று, தனது ஸாதனைகளை மேலும் தீவிரப்படுத்த விரும்புவதாகவும், அதன் பொருட்டு தீர்த்த யாத்திரையை மேற்கொள்ள ஆசைப்படுவதாகவும் தெரிவித்தார். "அதற்கான ஏற்பாடுகளைச் செய்து

விட்டீர்களா?'' என பகவான் வினவியபோது, ''பகவானே! எந்த ஏற்பாட்டையும் நான் செய்யவில்லை. ஒரு ஸாதுவைப் போல செல்ல இருக்கிறேன். இந்தியரைப் போல உடையணிந்து, சைவ உணவு ஏற்று, கோயில்களுக்கும் திவ்ய ஸ்தலங்களுக்கும் சென்று, ஏகாந்தமாக கவனத்தை என்மீது முழுமையாகத் திருப்பப் போகிறேன்,'' என்று பதிலிறுத்தார்.

கோஹென் தென்னிந்தியாவில் பயணம் மேற்கொண்டு பல கோயில்களைத் தரிசித்தார். மோரிஸ் ஃப்ரீட்மன் போன்றே தன் அத்யாத்ம தேடலில், பகுத்தறிவோடு, ஆழமான கேள்விகளைக் கேட்கும் இயல்புடைய கோஹென் புத்திபூர்வமாக சிந்திக்கக்கூடியவர். மனதிற்குக் கண்-புத்தி என்பதால், இத்தகைய புத்திக்கூர்மை உள்ளவர்கள், புத்தி பூர்வமாக ஆத்மாவைப் பற்றித் துல்லியமாக அறிந்து கொண்டு விடுவார்கள். ஆனால் அந்த அறிவின் மூலம் ஸாதகன் சிறிய அனுபவத்தைக் கூடப் பெற இயலாது. இந்த கட்டத்தில் உண்மை ஸாதகர், நம்பிக்கையை இழந்து ஏமாற்றமடைவதால் கஷாயநிலையை அடைகிறார். ஒரு ஞானியால், சூன்யமான அவரது நிலையைப் புரிந்து கொண்டு, முன்னேற்றப் பாதையில் அவரைச் செலுத்த முடியும். ஸாதகனை தீர்த்த யாத்திரை மேற்கொள்ளச் செய்வதும், இப்படிப்பட்ட ஒரு வழி தான். இது போன்ற யாத்திரைக் காலங்களில், ஒரு ஸாதகனுக்கு, அவன் புத்தி பூர்வமாக அறிந்த ஸத்யத்தை அவனக்குள்ளேயே உணர்வதற்கு, அந்த அறிவு அனுபவமாக மலர்வதை உணர்வதற்கு, வாய்ப்புகள் அதிகம். தென்னிந்தியாவில் தீர்த்த யாத்திரை செய்யக் கோஹெனை அனுமதித்ததன் மூலம், அவரிடம் இத்தகைய மாற்றத்தை வரவழைக்க பகவான் முற்பட்டார். இது அவரது அத்யாத்ம வாழ்க்கையில் பெரிய மாற்றத்தைக் கொடுத்தது. தத்துவ அறிவு என்ற வறண்ட மன நிலையிலிருந்து விடுபட்டு, உயிர்த்துடிப்புடன் கூடிய ஆத்மானுபவத்தை எவ்வாறு தன்னுள்ளே இதயத்தில் அனுபவித்தார் என்பதைக் கோஹென் இவ்வாறு கூறியுள்ளார்.

தீர்த்த யாத்திரையின் போது, கேரளாவில் ஆனந்தாச்ரமத்தில் அவர் ஸ்வாமி ராம்தாஸைச் சந்தித்தார். எப்போதும் ராமநாமத்தைப் பாடியவாறு, ஸ்வாமி ராம்தாஸ் மிகவும் ஆனந்தமாக



**பகவானின் மடியில் அணில் குட்டி**

இருப்பார். ரமண மஹர்ஷியின் ஸந்நிதியில், ஆத்மானுபூதியைப் பெற்ற ஸ்வாமி ராம்தாஸின் ஸந்நிதியில், அவர் இருக்கும் இடம் முழுவதுமே ஆனந்தம் நிறைந்திருக்கும். முதல் முறையாக பக்தியின் உண்மை ஸ்வரூபத்தை — பவித்ரமான ஆனந்தத்தை தன்னுள்ளே கோஹென் புரிந்து கொண்டார். ஆனந்தாச்ரமத்தை விட்டு, ஞான மார்க்கத்தைப் பின்பற்றும் ஓர் ஆனந்த புருஷனாக, கோஹென் வெளியில் வந்தார். கன்யாகுமரிக்குச் சென்ற போது பகவானின் பிரிவு அவரை வாட்டத் துவங்கியது. ‘‘பகவானுக்காக உணர்ச்சி பூர்வமாக ஏற்பட்ட அந்த ஏக்கம், ஸ்வாமி ராம்தாஸ் எனக்களித்த பரிசு,’’ என்று கோஹென் என்னிடம் கூறினார். கடற்கரையில் மணலில் படுத்தவாறு, ‘‘பகவானே! தாங்கள் எத்துணை மேன்மையுடையவர்! எத்துணை பெருந்தன்மையோடும், அப்பழுக்கற்ற தூய்மையோடும் எங்கும் நிறைந்து விளங்குகிறீர்கள்! உங்களுடைய சாந்தமான ஸ்வபாவம், அமைதியான, போற்றத்தக்க முகம், புத்துணர்ச்சியூட்டும் தங்களது புன்னகை, ஒப்பில்லாத தங்களது பண்புகள், தங்களிடமிருந்து வெளிப்படும் இன்சொற்கள், எங்கும் பரவக்கூடிய தங்கள் அன்பின் ஒளி, தெருவில் சுற்றும் நோயுற்ற மிருகங்களையும் கூட சம நோக்கோடு காணும் தயையோடு கூடிய பார்வை இவற்றைத் தங்கள் சீடர்களாகிய நாங்கள் எத்துணை நெகிழ்ச்சியோடு சிந்தித்துப் பார்க்கிறோம்,’’ என மனமுருகி எண்ணியவாறு அழ ஆரம்பித்து விட்டார் கோஹென்.

இவ்வாறு தனது குருவிற்காக ஏங்கி மீண்டும் ரமணாச்ரமம் வந்து சேர்ந்தார். பகவானுக்கும் பக்தர்களுக்கும் இடையே நடந்த உரையாடல்களையெல்லாம் குறிப்பெடுக்கத் துவங்கினார். அந்தக் கால கட்டத்தில், ஹாலில் நடக்கும் ஸம்பாஷணைகளை யாரும் குறிப்பெடுக்க அனுமதிக்கப்படவில்லை என்பதால், அவற்றை மனதில் நன்கு பதிய வைத்துக் கொண்டு, பின் தனது இடத்திற்குச் சென்று, ஒரு நோட்டுப் புத்தகத்தில் எழுதி வைப்பார். அந்தக் குறிப்புக்களே பின்னர், ‘குரு ரமணர்’ என்ற பெயரில் பிரசுரிக்கப்பட்டன. நோயுற்ற நிலையில் பகவான் இருந்த கடைசி இரண்டு வருடங்களைப் பற்றிய குறிப்புகளைத் தனது ‘டையரி’-யில் எழுதி வைத்தவர் கோஹென் மட்டுமே. ஹோமியோபதி மருத்துவரானதால், பகவானுக்கு அளிக்கப்பட்ட பலதரப்பட்ட சிகிச்சைகள் குறித்தும், அறுவை சிகிச்சைகள் பற்றியும் பிழையின்றி அவரால் எழுதி வைக்க முடிந்தது. இதற்கிடையில், ஆத்மவஸ்துவின் இயல்பாக பகவான் கூறும் பரமானந்தம் அவருக்கு க்ஷணநேர அனுபவமாக கிடைக்கப்பெற்றது. இந்நிலையை அடைய, கோஹெனுக்கு நீண்ட காலமானாலும், புத்தி பூர்வமாகவே சிந்திக்கும் இயல்புடையவரானதால், அவருடைய சந்தேகங்கள் முழுமையாகத் தீரவில்லை.

ஆத்மானுபூதி எதிர்பாராத விதத்தில், க்ஷண நேரத்தில் கைகூடும் என்று சாஸ்திரங்கள் கூறுவதை கோஹென் படித்திருந்ததால் அது, குறித்துத் தனக்கிருந்த சந்தேகத்தை நிவர்த்தி செய்து கொள்ளும் பொருட்டு பகவானிடம் கேட்டார். பகவான் கோஹெனைப் பார்த்துச் சிரித்தவாறு, ‘‘ஆம்! அது உண்மைதான். ஆனால் அதற்குமுன் பக்குவப்படுவதற்குக் காலதாமதமாகும். மரத்தில், காய் எவ்வாறு மெதுவாகப் பழமாகிறதோ, அதுபோல் ஆத்மானுபவமடைய காலதாமதம் ஆகும் என்பதை மறக்கக் கூடாது,’’ என்று விளக்கினார்.

1950-ம் ஆண்டு, ஏப்ரல் 12-ம் தேதி பகவானின் மஹாஸமாதிக்கு இரு தினங்களுக்கு முன் அவரது டையரியில் இவ்வாறு கோஹென் எழுதியிருந்தார். ‘இந்த நாள், கடவுள் நமக்குத் தண்டனை தரப்போகும் கடைசி நாளுக்கு முந்தையது என்ற எண்ணம் தோன்றுகிறது. நமது புகலிடம், நமது அன்பு, நம்பிக்கை, ஏன்? விலை மதிக்க முடியாத பொக்கிஷமான நமது குருவையே விரைவில் இழக்கப் போகிறோம். மஹர்ஷி இன்றும் நினைவோடுதான் இருக்கிறார். சில சமயங்களில் பேசவும் செய்கிறார். ஆனால் கடைசி வரையில், எதுவும் வேண்டும் என்று கேட்கவில்லை. தனக்கு எதைச் செய்யலாம், எதைச் செய்யக் கூடாது என்று எவ்வித அபிப்பிராயங்களைக் கூறாமலும், தன்னுடைய

வேதனைகளைப் பற்றி முறையிடாமலும் அமைதியாக இருக்கிறார். தன்னைத் தூக்கும்போதோ அல்லது வேதனையுள்ள பாகத்தைத் தொடும்போதோ மட்டும், நமக்கு ஏதோ செய்தி சொல்வது போல் "உடம்பில் தொட்டால் வலிக்காத இடம் எதுவுமே இல்லை," என்று கூறுகிறார். அப்போது தொண்டர்கள் சற்று அதிக கவனத்துடன் அவரைக் கையாளுகிறார்கள். அதிலும் அவரது வேதனை இன்று மிகவும் கடுமையாக உள்ளது," எனக் குறித்து வைத்துள்ளார்.

பகவானுடைய மஹா நிர்வாணத்திற்குப் பிறகு, ஆச்ரமத்தில் பல விதமான பூசல்களும் நிர்வாகத்தினருக்கு எதிர்ப்பும் இருந்தபடியால் ஆச்ரமம் ஆபத்தான நிலையிலிருந்தது. 1950/51-ம் ஆண்டுகளில் நிர்வாகத்தினரால் காலைச் சிற்றுண்டியோ, காபி, டீயோ அளிக்க முடியவில்லை. மதியமும் இரவும் உணவு மட்டும் வழங்கப்பட்டது. மூத்த பக்தர்கள் பலரும் ஆச்ரமத்தை விட்டுச் சென்று விட்டனர். விரைவிலேயே ஸர்வாதிகாரி நிரஞ்ஜனானந்த ஸ்வாமி இறைவனடி சேர்ந்து விட்டார். எனது தந்தை நிர்வாகப் பொறுப்பை ஏற்றார். அவருக்கு ஆங்கிலம் தெரியாது என்பதால், தேவையான பல கடிதங்களை எழுதுவதற்கும், ஆச்ரமத்திற்கு எதிராகத் தொடரப்பட்டிருந்த பல வழக்குகளுக்கு வேண்டிய, சட்டரீதியிலான பாதுகாப்புப் பிரமாணப் பத்திரங்களைத் தயார் செய்வதற்கும் கோஹென் என் தந்தைக்கு உதவியாக இருந்தார். கோஹெனின் பேருதவியால்தான் ஆச்ரமம் மீண்டும் அதன் கால்களில் நிற்க முடிந்தது. உண்மையான துறவியாக இருந்ததால், ஆச்ரம விவகாரங்களை எல்லாம் முடித்த பின்னர், தனது சிறிய குடிலைத் தன்னுடன் தங்கியிருந்த ஸ்ரீமதி தலயார்க்கானிடம் ஒப்படைத்தார். எனது தந்தையின் நிலத்திற்கு அருகிலிருந்த அவருடைய சிறிய நிலத்தை, எவ்வித நிபந்தனைகளுமின்றி, எனது தந்தைக்கே எழுதி வைத்துவிட்டார். ஆச்ரமத்திற்குச் சுமையாக இருக்க விரும்பாமல், ஐம்பத்து இரண்டு மைல் தொலைவிலிருந்த வேலூரில் வாழ முற்பட்டார். அருணாசலத்தை விட்டு ஏன் அங்கு சென்றார் என்று நான் கேட்ட போது தன்னுடைய ஆஸ்துமா தொந்தரவு அதிகமானதாலும் வேலூரின் சீதோஷ்ண நிலை தனக்கு அருணாசலத்தை விட உகந்ததாக இருந்ததாலும் அங்கு சென்றதாகக் கூறினார்.

கோஹென் எழுதிய 'குரு ரமணர்' என்ற புத்தகம் பிரசுரத்திற்குத் தயாராக இருந்த போதும், பணப் பற்றாக்குறை காரணமாக ஆச்ரமத்தால் அதை வெளியிட முடியவில்லை. அந்நிலையில் 1952-ம் ஆண்டு அவரே அதைப் பிரசுரித்தார். அப்புத்தகத்தை எப்படியேனும் ஆச்ரமப் பதிப்பாகச் செய்ய நான் விரும்பியதால், வேலூர் சென்று பதிப்புரிமையை ஆச்ரமத்திற்குத் தருமாறு அவரிடம் விண்ணப்பித்துக் கொண்டபோது கோஹெனும் சம்மதித்தார். 1962-ல் 'குரு ரமணர்'-ன் இரண்டாம் பதிப்பை ஆச்ரமத்தின் வெளியீடாக நான் கொண்டு வந்தேன். ஏனென்று தெரியவில்லை, காரணமேதும் இன்றி அதில் ஒரு பிரதியை, பகவானின் மற்றொரு தீவிர பக்தரான தோரப்ஜீ (Dorabji)-யின் மூத்த சகோதரிக்கு அனுப்பி வைத்தேன். அந்தச் சமயத்தில் அவருடைய இல்லத்தில், சில முக்கிய குடும்பப் பிரச்சனைகள் இருந்தன. அந்த அம்மையார் தனது சிறிய அறையில் பகவானது படத்தை வழிபட்டு வந்தார். அவருடைய குடும்பமும், சுற்றத்தாரும் எதிர்ப்புத் தெரிவித்து, பகவானுடைய படத்தைத் தூக்கி எறியப் போவதாக அச்சுறுத்தவே, "என்னை நீங்கள் என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளுங்கள். ஆனால் இப்போது பகவானை வழிபடுவதற்கு அரை மணி அவகாசம் மட்டும் தாருங்கள்," என்று அவர் கூறினார். ஆனால் அதுவும் அவருக்கு மறுக்கப்பட்டதால், பகவானிடம் போராடும் எண்ணத்துடன் தனது அறையினுள் சென்று பூட்டிக்கொண்டு, "பகவானே! நீங்கள் எனது குரு என்பதும், உண்மையாகவே இருக்கிறீர்கள் என்பதும் ஸத்தியமானால் எனக்கு அதை நிரூபித்துக் காட்டுங்கள்," என்று கூறிப் பிரார்த்தித்தார்.

நான் அந்த அம்மையாரின் இல்லத்திற்குச் சென்றிருக்கிறேன். அந்த வீட்டின் வாயில் கதவிற்கும் தரைக்கும் இடையே ஒன்று அல்லது இரண்டு அங்குல இடைவெளி இருக்கும். அம்மையாரின் தியான அறை, முன் கதவிற்கு நேராகவே இருந்தது. அந்த அறையிலும் மேற்சொன்ன மாதிரி ஒரு இடைவெளி இருந்தது. தபால்காரர், நான் அனுப்பிய புத்தகத்தை அந்த வாயில் கதவு இடைவெளி வழியாகச் சற்று வேகமாக உள்ளே தள்ளவே, அது அவரது தியான அறைக்குள் சென்று அம்மையாரின் மேல் பலமாக மோதியது. அவர் குனிந்து பார்த்தபோது, ஆச்சரியப்படத்தக்க விதத்தில் 'குரு ரமணர்' என்ற அப்புத்தகத்தின் பெயர் வெளியே தெரியும் வகையில் பார்சல் பிரிந்து போயிருந்தது. எத்தனையோ பேர் இருந்தும், நான் அவருக்கு அந்தப் புத்தகத்தை அனுப்பி வைப்பதற்கு எது காரணமாக இருந்தது என்பது, இன்றும் ஒரு புதிராகவே உள்ளது.

கோஹென் வேலூரில் சுதந்திரமாக வாழ்ந்து வந்தார். யாரிடமும் உதவியோ, பணமோ கேட்காமல் சிக்கனமாக வாழ்ந்தார். ஸாதகர்கள் யாரேனும் அவரைத் தேடி வந்தால், பகவானைப் பற்றிய கதைகளையும், அவரது உபதேசங்களையும் அவர்களுக்கு வாரி வழங்குவார். பக்தர்களில் ஒருவரான தோரப்ஜீ அவரைக் காண அடிக்கடி செல்வதுண்டு. ஒரு முறை அவர் சென்றிருந்த சமயம் கோஹெனைக் காணாமல் தேடியபோது, அவர் தனது குளியலறையில் படுத்துக் கிடப்பதைக் கண்டார். கீழே விழுந்து விட்ட கோஹென் மீண்டும் எழுந்திருக்க முடியாமல் ஏழு மணி நேரமாகப் 'பாத்ரூமில்' அதே நிலையில் கிடந்திருக்கிறார். உடனே திருவண்ணாமலையில் ஆச்ரமத்திற்கு எதிரில் ரமண நகரில் உள்ள தனது வீட்டிற்கு அழைத்து வந்து அவரைக் கவனித்துக் கொண்டார் தோரப்ஜீ. கோஹெனுக்கு உணவை மட்டும் அனுப்பி வைக்குமாறு என்னிடம் கேட்டுக் கொண்டார். அடுத்த ஆண்டும் கோஹென் 'பாத்ரூமில்' வழுக்கி விழுந்தபோது, அவரைக் கண்டுபிடிப்பதற்குப் பல மணி நேரம் ஆயிற்று. வெளியூர் சென்றிருந்த தோரப்ஜீ நல்ல வேளையாக அன்று திரும்பி வந்ததால் 'பாத்ரூமில்' கோஹென் கிடப்பதைப் பார்த்தார். உடனே என்னிடம் ஓடிவந்து, "இனி உதவிக்கு ஆளின்றி அவரைத் தனியாக விட முடியாது. கோஹென் ஆச்ரமத்திலேயே தங்கட்டும்," என்று தோரப்ஜீ கூறினார். ஆச்ரமத்திற்கு வந்த பின்னரும் படுக்கையிலிருந்து ஒரு நாள் விழுந்து, கால்களில் எலும்பு முறிவு ஏற்பட்டிருக்குமோ என்ற சந்தேகம் இருந்ததால், நான் ஆயுர்வேத வைத்தியரையும், எலும்பு டாக்டரையும் அழைத்து வந்து பரிசோதிக்கச் சொன்னேன். முறிவு ஏதுமில்லை என்று மருத்துவர்கள் கூறியபோதும், தனது கால்கள் உடைந்து போய்விட்டதாகவும், தன்னால் நடக்க முடியாதென்றும் அவர் உறுதியாக நம்பியதால் 'வீல் சேர்' ஒன்றை அவருக்கு வாங்கித் தந்ததுடன், கண்ணன் என்ற ஒரு தொண்டரையும் உதவிக்கு அமர்த்தினேன். கண்ணன் இறுதிவரை கோஹெனைப் பார்த்துக் கொண்டார்.

கோஹென் என்னிடம் மிகவும் அன்புடன் பழகுவார். மாலை ஐந்து மணிக்குப் பின்னும் நான் ஆச்ரம அலுவலகத்தில் வேலையில் மூழ்கியிருந்தால் அங்கு வந்து என்னைக் கடிந்துகொண்டு, அன்று அத்துடன் வேலையை நிறுத்துமாறு கூறுவார். நான் மறுப்புத் தெரிவித்தால், "என்ன வேலை இதெல்லாம்? நீ இங்கு ஸாதனை செய்ய வந்துள்ளாய். நமது குருவின் பொருட்டு நாம் இங்கு வந்துள்ளோம். நிறுவனத்திற்காகச் செய்யப்படும் இந்த சேவை உனக்கு பெயர், புகழ், மக்களிடையே நன்மதிப்பு, வசதிகள் இவற்றைத் தருமேயன்றி நீ முக்திக்கு வெகு தூரத்திலேயேதான் இருப்பாய்; விழித்துக் கொள் கணேசன்! என்னைப் போல் விழித்துக் கொள். நானும் தொண்டுகளாற்றினேன். ஆனால் அதன் பின் ஏகாந்தத்தில் இருந்தேன். அதேபோன்று ஏகாந்தத்தில் இருந்து ஸாதனை செய்," என்று படபடப்பார். "குருவிற்கும், நிறுவனத்திற்கும் தொண்டு செய்கிறோம் என்று கற்பனை செய்து கொண்டு ஏமாறாதே," என்று என்னிடம் அடிக்கடி கூறுவார் கோஹென்.

என் அலுவலகப் பணிகளை முடித்துக் கொண்டு அவரது அறைக்குச் சென்ற போதெல்லாம் ‘‘கணேசன்! ஜாக்கிரதை! விழிப்புடன் இரு. ஸாதனைகளை மீண்டும் பழகு. இந்த வேலைகள் எதுவும் உனக்கு உதவாது. உன் மீது எனக்கு அக்கறை இருப்பதால்தான் கூறுகிறேன். முக்தியை நாடி நீ வந்திருக்கிறாய்,’’ என்று மீண்டும் மீண்டும் வலியுறுத்திக் கூறுவார். தனது இறுதி நாட்களில், சில சமயம் சாதாரணமாகவும் வேறு சில சமயங்களில் கற்பனை உலகிலும் மாறி மாறி இருந்து வந்தார். மேற்கூறியவாறு எனக்கு அறிவுரைகள் வழங்கிய மறுகணமே, ‘‘உன் தந்தை என்னை ஏழாவது மாடியில் வைத்துள்ளார். எனக்கோ கால்கள் இல்லை. என்னால் எப்படி ஏழு மாடிகள் ஏற முடியும்?’’ என்று கேட்பார். முதல் முறை அவர் இம்மாதிரி பிரமையில் பேசிய போது, நான் அதிர்ச்சியடைந்தேன். ‘‘கோஹென்! பகவானிடம் வந்த சிறந்த அறிவாளிகளில் நீங்களும் ஒருவர். இப்போது நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? ரமணாச்ரமத்தில் முதல் மாடி கூட இல்லையே!’’ என்று நான் கூறிய பின்னும் அவர் ஏதேதோ சொன்னதால், மயக்கத்தில் இருக்கிறார் என நினைத்து அவரை எழுப்பும் பொருட்டு பிடித்து உலுக்கினேன். உடனே அவரது கண்கள் பிரகாசமாயின. ‘‘கணேசன்! வயதாகிவிட்டால் உடம்பு நாம் சொன்னபடி செய்வதில்லை. அதே போன்று மனதும் சில சமயங்களில் கட்டுப்பாட்டுக்குள் வருவதில்லை. நாம் உடம்புமில்லை; மனதுமில்லை, என்பதால் அதைப்பற்றிக் கவலைப்படத் தேவையில்லை,’’ என்று உரைத்தார். உடனே நான் ‘‘நீங்கள் எந்த நிலையில் இருக்கிறீர்கள்?’’ என்று கேட்கவும், கோஹென் ‘‘ஆனந்தத்தில் இருக்கிறேன். முழுமையான ஆனந்தத்தில் உள்ளேன்,’’ என்று கூறினார். ஆனால் மறுகணமே மீண்டும் ஏதேதோ சொல்ல ஆரம்பித்துவிட்டார். ‘‘நீ ஒரு கண்ணனை மட்டும்தான் நியமித்தாய். ஆனால் என் அறையில் ஒன்பது கண்ணன்கள் இருக்கிறார்கள். என்னால் எப்படித் தனிமையில் அறையில் தூங்கமுடியும்?’’ என்று அவர் கேட்கவும் நான் திகைத்துப் போனேன். மீண்டும் அவரை உலுக்கியபோது என்னை நிலையாக நோக்கி ‘‘என் மனது கூறுவதையெல்லாம் நீ ஏன் கேட்கிறாய்? இவையனைத்தும் என் மனதில் உள்ளன. மனம் சொல்வதைக் கேட்க வேண்டாமென்று நான்தான் ஏற்கனவே கூறினேனே!’’ என்றார். புத்தி என்பது கோஹெனின் வாழ்க்கையில் முக்கிய பகுதியாக இருந்துள்ளது. அவரது மனம் இப்போது ஜால வித்தைகளைக் காட்டத் துவங்கியிருந்தது. சில சமயங்களில் பழைய பக்தர்கள் தங்களது இறுதி காலத்தில், உடலளவில் மிகுந்த வேதனைக்குள்ளாகும் போது, ‘‘உங்களைப் போன்ற ஒருவர் இத்தகைய வியாதியால் ஏன் அவதிப்பட வேண்டும்?’’ என்று கேட்பேன். அப்போது அவர்கள் எல்லோரும் ஒரே மாதிரியாக ‘‘ஏனென்றால் இத்தனை காலம் நான் உடம்பின் மீதும், அதன் சுகத்தின் மீதும் அதிக கவனம் செலுத்தியதால், அது இப்போது பதிலுக்கு என்னை நன்கு கவனித்துக் கொள்கிறது,’’ என்று கூறுவார்கள். மனதிற்கப்பாலிருந்த ஆனந்த நிலையை எனக்கு முதன் முதலில் நேரிடையாக உணர்த்தியவர் கோஹென்தான். ‘‘நீங்கள் ஏன் பிதற்றுகிறீர்கள்?’’ என்று நான் அவரிடம் கேட்ட போது அவர், ‘‘என் கவனம் வெளிமுகமானால் அது உளறுகிறது. ஆனால் அது உண்முகமாகும் போது ஆனந்தத்தை அனுபவிக்கிறது. கணேசன்! இது போன்ற உடல், மன பாதிப்புக்கள் எதுவும் உனக்கு வரக்கூடாது என்று நான் உன்னை ஆசீர்வதிக்கிறேன்,’’ என ஆசி வழங்கினார்.

சில சமயங்களில் அவர் அழும் போது நான் அவரைச் சமாதானம் செய்வேன். ‘‘கோஹென்! நீங்கள் ஏன் அழுகிறீர்கள்? எவ்வாறு அமைதியாகத் தூக்கத்தில் ஆழ்ந்து போகிறீர்களோ அதே போன்று, உங்கள் மரணமும் சுலபமானதாகவே இருக்கும்,’’ என்று நான் கூறுவேன். நல்ல நகைச்சுவை உள்ளவர் என்பதால், என்னை நோக்கி ‘‘கணேசன்! நீ ஏன் இப்படிக் கூறுகிறாய் என்பது எனக்குத் தெரியும். அப்போதுதான், நான் இறந்தபின் ‘முன் கூட்டி நான் சொன்னபடியேதான் கோஹென் மரணத்தைத் தழுவினார்’ என்று ஆச்ரமத்திலுள்ளவர்களிடம் உன்னால் கூற முடியும்



கோஹென் சக்கர நாற்காலியில்

என்பதற்காகத்தான்'' என்று சிரித்தபடியே கூறினார். என்ன காரணத்தாலோ, தனது சரீரம் ஆச்ரமத்தினுள் புதைக்கப்பட வேண்டும் என்பதில் அவர் குறிப்பாக கவனம் செலுத்தினார். அவர் விருப்பப்படியே செய்யப்படும் என்று என் தந்தையும் உறுதியளித்தார். தான் எங்கு அடக்கம் செய்யப்பட வேண்டுமென, அந்த இடத்தைக் கூட அவர் எனக்குக் காட்டினார். சில சமயம் நான் ஆச்ரமத்தில் இல்லாதபோது, கண்ணனை அந்த இடத்திற்கு அழைத்துச் சென்று, ''இங்கு ஒரு குழிதோண்டி, என் உடம்பை அதில் போட்டு மண்ணால் மூடிவிடு, என்று கூறியுள்ளார். அவன் பயந்து போய், ''ஐயோ! முடியாது முடியாது. அதெல்லாம் பாவம்,'' என்று கத்தியிருக்கிறான். அப்போது கண்ணனிடம், ''சரி, சரி, கண்ணன். கவலைப்படாதே. நான் இறந்த பின்னர் இந்த இடத்தில்தான் என்னைப் புதைக்கப் போகிறார்கள். நான் உயிரோடு இருக்கும் போதே அதைச் செய்யுமாறு உன்னிடம் கேட்டேன். அவ்வளவு தான். அதனால் உனக்கு எந்தப் பாவமும் வராது,'' என்று கூறியுள்ளார்.

1980-ம் ஆண்டு ஆச்ரம வேலையாக நான் வெளியூர் சென்றிருந்த போது கோஹென் இறைவனடி சேர்ந்தார். அவர் தனது உடலை எதற்காக ஆச்ரமத்தினுள் அடக்கம் செய்யச் சொன்னார் என்பது நமக்குத் தெரியாது. ஆனால் அவரிடம் உறுதி கூறிய படி செய்ய முடியாமல், துரதிருஷ்டவசமாக அவரது உடல் வெளியே உள்ள இடுகாட்டிற்கு எடுத்துச் செல்லப்பட்டு புதைக்கப்பட்டது. நான் வெளியூரிலிருந்து திரும்பி வந்தபின் விஷயமறிந்த போது, ''கோஹென், பகவானது பக்தர்களில் மிகச் சிறந்தவர். அருணாசலத்திடமிருந்து வந்த ஒரு அக்னிப் பொறி. அவரது சிறிய ஆசையைக் கூட நம்மால் பூர்த்தி செய்ய முடியாதா?'' என்று வருத்தத்துடன் கூறியபடி நான் செய்த காரியத்தை எத்தனை பேர் ஏற்றுக் கொள்வார்கள் என்பது எனக்குத் தெரியாது. ஆனால் மயானத்தில் புதைக்கப்பட்ட உடலைத் தோண்டி எடுத்து வந்து தற்போது அவரது ஸமாதியிருக்கும் இடத்தில் கோஹெனை மீண்டும் அடக்கம் செய்தேன் என்பது உண்மை. கோஹெனின் விருப்பத்தைப் பூர்த்தி செய்துவிட்ட திருப்தியில் அன்றிரவு நான் நன்றாக உறங்கினேன்.

கோஹென் சாதாரணமான மனிதர் அல்ல. 'உடம்புக்கும் மனதிற்கும் அப்பாற்பட்ட நிலையில் இருந்தவரானால், ஆச்ரமத்திற்குள் தன்னை அடக்கம் செய்யுமாறு அவர் ஏன் கேட்டுக் கொண்டார்?' என்று சிந்தித்து நமது எண்ணங்களை வீணாக்குவது புத்திசாலித்தனமாகாது. பதிலாக அது எவ்வாறு நிகழ்ந்தது என்பதில் கவனம் செலுத்த வேண்டும். வேலூரில் அவர் இருந்த சமயம், ஒரு கிறிஸ்தவ நிறுவனத்திடம் பணம் கொடுத்து, தனது இறுதிக் காலத்தில் தன்னைக் கவனித்துக் கொள்ளுமாறு கூறியிருந்தார். எந்த சக்தி, அவரைப் 'பாத்ரூமில்' விழும்படி செய்து, ஆச்ரமத்திற்கு எடுத்து வரச் செய்தது? ஆச்ரமத்தில் தன்னை அடக்கம் செய்ய வேண்டுமென அவர் விரும்பிய போதும் முதலில் ஏன் வெளியில் அடக்கம் செய்யப்பட்டார்? என்பதை கோஹெனே நகைச்சுவையோடு ரசித்திருப்பார். எல்லாவற்றிற்கும் மேலான அந்த உன்னத சக்தியின் திருவிளையாடலால் புதைக்கப்பட்ட அவரது

உடல் மீண்டும் எடுத்து வரப்பட்டு ஆச்ரமத்தினுள் அடக்கம் செய்யப்பட்டது என்பது ஒரு அதிசயம்! மிகப் பிரகாசமான அக்னிப்பொறியாகிய சாமுவேல் சுலைமான் கோஹென், ஜோதிப் பிழம்பான அண்ணாமலையோடு மீண்டும் இரண்டறக் கலந்து விட்டார்.

கோஹெனுடைய வாழ்வும் நமது வாழ்வும் ஒன்றேதான். மூச்சுவிடுதல் என்பது எல்லோருக்கும் பொது என்பது போன்றுதான் இதுவும். ஆனால் தனித்தன்மையுடன் விளங்குகிறது என்பதில் தான் வேறுபாடு. இதைப்போன்றே ஸாதனையில் நிலைத்து நின்ற அவரது வாழ்க்கையே நம் எல்லோருடைய வாழ்க்கையுமாகும். அவரைப் பற்றிப் படித்து அதை உள்வாங்கிக் கொள்வோமானால், அவர் எதை அடைய விரும்பித் தனது வாழ்நாள் முழுவதையும் அதற்காகச் செலவிட்டாரோ, அந்த ‘நான் இருக்கிறேன்’ என்ற உணர்வு நம்மிடத்திலும் விழிப்படையும்.



# 43 பலராம ரெட்டியார்



ஐயனே! எனதுள்ளே நின்று
அனந்த ஜன்மங்களாண்ட
மெய்யனே! உபதேசிக்க
வெளிவந்த குருவே போற்றி!
உய்யவே முத்தி நல்கும்
உதவிக்கோர் உதவி நாயேன்
செய்யுமாறொன்றும் காணேன்
திருவடி போற்றி! போற்றி!

மேற்கூறிய பாடல் 'ஸ்ரீ பகவத் வசனாம்ருதம்' என்னும் புத்தகத்தில் அடிக்கடி எடுத்துக்காட்டாகக் கூறப்படும் கைவல்ய நவநீதம் என்ற நூலில் வருவதாகும். ஒருவன் தன் ஆத்மாவை உணர முடியாதபோது அந்த ஆத்மாவே மனித உரு எடுத்து, குருவாக வந்து அவரை ஆத்ம ஸாக்ஷாத்காரத்திற்கான பாதையில் அழைத்துச் செல்கிறது என்னும் பகவானது உபதேசத்தை அது பிரதிபலிக்கிறது.

N. பலராம ரெட்டியார் ரமணாச்ரமத்திற்கு 1933-ல் வந்தார். குருவைத் தேடி வந்த மற்றவர்களைப் போல் அல்லாமல், பாண்டிச்சேரியில் இருந்த ஸ்ரீஅரவிந்தரை ஏற்கனவே குருவாக வரித்துக் கொண்ட பலராம ரெட்டியார் அவரது ஆச்ரமவாசியாக 5 வருடங்கள் தங்கியும் இருந்தார். அங்கு ஆச்ரமவாசிகள் கண்டிப்பான சட்டதிட்டங்களுக்கு உட்பட்டிருந்தார்கள். பக்தி நிறைந்த பெற்றோர்களால் கட்டுப்பாட்டுடன் வளர்க்கப்பட்ட பலராம ரெட்டியாருக்கு இது கடினமாக இருக்கவில்லை. தீவிர ஆன்மீக ஸாதகரான அவரது தந்தை இந்தியா முழுவதும் பயணம் செய்ததோடு, ஆண்டு முழுவதும் மௌனத்தைக் கடைப்பிடித்ததையும் ரெட்டியார் கண்டிருக்கிறார். அவர் தனது தந்தையைப் போலவே ஆன்மீக ஸாதனைகளில் ஈடுபட விரும்பியதால், தனக்கென நேரத்தை ஒதுக்கிக் கொள்ள வேண்டும் என்பதற்காகத் தினமும் பிற்பகல் இரண்டு மணி நேரம் தோட்ட வேலையைச் செய்வதற்குத் தானாகவே முன் வந்தார். அதே சமயத்தில் படிப்பதிலும் தீவிரமாக இருந்தார். ரமண மஹர்ஷியைப் பற்றி முதன் முதலாக B. V. நரஸிம்ம ஸ்வாமி எழுதிய 'Self Realization' என்னும் நூலில் அவர் படித்தார். ஸ்ரீஅரவிந்தர் ஆச்ரமத்தில் தங்கி இருந்த ஸம்ஸ்க்ருத பண்டிதரான கபாலி சாஸ்திரி அடிக்கடி ரமண மஹர்ஷியைச் சென்று பார்ப்பார். ரமணரைப் பற்றி கபாலி சாஸ்திரி கூறிய விஷயங்கள் பலராம ரெட்டியாருடைய சிந்தனையைத் தூண்டி பகவானிடம் அவரை ஈர்த்தன. எனவே அந்தப் பெரிய ஞானியை ஒரு முறையாவது தரிசனம் செய்ய வேண்டும் என்று கபாலி சாஸ்திரி வலியுறுத்தவே, ரெட்டியார் அங்கு செல்லத் தீர்மானித்தார்.

1933-ம் ஆண்டில் மார்ச் மாதத்தில் ஒரு நாள் அதிகாலை ரெட்டியார் ரமணாச்ரமத்திற்கு வந்து சேர்ந்தார். காலைச் சிற்றுண்டியாக சுவையான இட்லிகள் பரிமாறப்பட்டிருந்தன. அவரும் உண்பதற்கு அழைக்கப்பட்டார். இறைவன் அருளால் பகவான் அருகில் அமர்ந்ததோடு அவரது வலது பக்கத்திலும் அமரும் படியான பேறு பெற்றார். உணவு பரிமாறிய பின் தனது வலது பக்கம் அமர்ந்திருப்பவரைப் பார்த்து பகவான் தலையை அசைப்பது வழக்கம். எல்லோரும் உணவருந்த ஆரம்பிக்கலாம் என்பதற்கு இது ஒரு அடையாளம் ஆகும். மஹர்ஷியின் இந்தச் சாதாரணச் செயல் ரெட்டியாரை மகிழ்ச்சியில் ஆழ்த்தியது. அவர் அகத்தில் என்றும் பிரகாசிக்கும் ஆன்மீக ஒளியை

க்ஷணநேரம் உணர்த்த உதவிய அச்செயல் அவருக்கு ஒரு தெய்வீக அனுபவமாக இருந்தது. ஆச்ரமத்தில் நிலவிய சுதந்திரமும் அவரை எல்லையற்ற மகிழ்ச்சியில் ஆழ்த்தியது.

'நீங்கள் யார்? எங்கிருந்து வருகிறீர்கள்? எத்தனை நாட்கள் இங்கு தங்குவீர்கள்?'' என்பது போன்ற கேள்விகளை ஆச்ரமத்திற்கு வரும் எவரிடமும் பகவான் சாதாரணமாகக் கேட்பதில்லை. ஒரு நாளைக்கு மட்டுமே இருப்பதாக வந்த ரெட்டியார் மாலையில் பகவானிடம் விடை பெறச் சென்றார். பகவானைக் காலையில் பார்த்தபோது அவருக்கு ஏற்பட்ட திகைப்போடு கூடிய வியப்பு, அப்போதும் அவரை விட்டு விலகவில்லை. பகவான் ''எங்கிருந்து வருகிறீர்கள்?'' என்று கேட்ட போது ஆதிசங்கரரின் பிரசித்தமான கேள்வியான 'குத ஆயாத' (எங்கிருந்து வருகிறீர்கள்?) என்பது ரெட்டியாருக்கு நினைவுக்கு வந்தது. அவர் புல்லரித்துப் போனார். அந்தக் கேள்வி அவரை அகமுகமாக்கி எண்ணங்களின் பிறப்பிடத்திற்கு அழைத்துச் சென்று ஆன்மீக ஆனந்தத்தைச் சுவைக்கச் செய்தது. குருவையும் சீடரையும் இணைக்கும் உன்னதமான சக்திக்கு இது ஓர் உதாரணம் ஆகும்.

பாண்டிச்சேரிக்கு வந்தவுடன் 'Self Realization' என்ற புத்தகத்தை முன்னைவிட மிகுந்த கவனத்துடன் மீண்டும் படிக்க ஆரம்பித்தார். அதில், ஒருவர் தன் குருவை மாற்றிக் கொள்ளலாம் என்று சொல்லப்பட்டிருந்தது. ரெட்டியாருக்கு இது சிறிது மாறுபட்ட கருத்தாகத் தோன்றியது. அவர் திரும்பவும் ரமணாச்ரமம் செல்ல முடிவு செய்தார். ரெட்டியார் இரண்டாவது முறை ஆச்ரமத்திற்குச் சென்ற போதும் ஆச்ரமத்தில் இருந்த ஆன்மீக சக்தியும் அங்கு நிலவிய அமைதியும் அவரை வெகுவாக ஈர்த்தன. பகவானின் தீவிர பக்தரான யோகி ராமய்யா, ரெட்டியாரை வரவேற்று பகவானிடம் அழைத்துச் சென்றார். ''பகவானே! இவர் பலராம ரெட்டியார். இவருடைய தந்தையை நான் அறிவேன்,'' என்று அறிமுகம் செய்து வைத்தார். பகவான் தன்னைப் பார்த்த பார்வை ரெட்டியாரை ஊக்குவித்ததால் அவர் தனது சந்தேகத்தை நிவர்த்தி செய்து கொள்ள எண்ணி, ''ஒருவர் தன்னுடைய குருவை மாற்றிக் கொள்ளலாமா?'' என்று பகவானிடம் கேட்டார். ''நிச்சயமாக, ஒருவர் தன் குருவை மாற்றிக் கொள்ளலாம். அதனால் என்ன?'' என்று அவர் கேட்ட பதில் கேள்வியே ரெட்டியார் விஷயத்தில் அவரது குருவை பகவான் ஏற்கனவே மாற்றி விட்டார் என்பதை உறுதி செய்தது. ஆனால் பகவான் கூறிய விஷயத்தை அவர் முழுமையாகப் புரிந்து கொள்ளவில்லை. எனினும், பகவானின் முன் அமர்ந்திருப்பதில் பரம சாந்தியை உணர்ந்தார். ஸ்ரீஅரவிந்தர் ஆச்ரமத்தில் இருப்பதைப் போன்று சட்டதிட்டங்கள் இல்லாததால் தனக்கு சுதந்திரம் கிடைத்ததாக உணர்ந்தார். ஒருவரின் மனநிலையை உயர்த்தக்கூடிய இயற்கையான சூழ்நிலை ரமணாச்ரமத்தில் நிலவியதையும் உணர்ந்தார். மஹர்ஷி, அவரது ஸாந்நித்தியம் இவை தவிர வேறு எதிலும் அவரது நாட்டம் செல்லவில்லை. என்ன செய்ய வேண்டும் எங்கு போக வேண்டும் என்று கூறுவதற்கு யாரும் இல்லாத போதும் தான் வழி நடத்தப்படுவதாக உணர்ந்தார். பகவானின் ஸாந்நித்தியத்தின் சக்தியே, வழி நடத்த வல்லது என்பதைப் பல ஆண்டுகளுக்குப் பிறகும் அவர் அழுத்தமாகக் கூறுவார். தன்னுள்ளிருக்கும் ஏதோ ஒன்று தன்னை வழி நடத்துவதாக நன்கு உணர்ந்தார்.

இம்முறை பலராம ரெட்டியார் மூன்று தினங்கள் ஆச்ரமத்தில் தங்கினார். இந்தச் சமயத்தில் பகவான் ரமணரே தனது குரு என்றும், ரமணாச்ரமமே தனது வீடு என்றும் முன்பை விட நன்கு உணர்ந்தார். மூன்றாவது நாள் அவர் பகவானிடம் விடைபெறச் சென்ற போது அவர் தனிமையில் இருப்பதைக் கண்டார். அடுத்து ஏற்பட்ட சம்பவம் அவருடைய எண்ணத்தை உறுதிப்படுத்தியது. ''வராந்தாவில் இருந்த மஞ்சத்தில் அமர்ந்திருந்த பகவானை விடை பெறுவதற்காக அணுகினேன்.

அவருடைய பாதங்கள் தரையில் மென்மையாகப் பதிந்திருந்தன. மதிய உணவிற்குப் பின் சிறிது உலாவி விட்டு அப்போதுதான் அவர் திரும்பியிருந்தார். நான் மண்டியிட்டு அவரது திருவடிகளை வணங்கினேன். ஆச்ரம விதிகளின்படி பகவானை யாரும் தொடக் கூடாது என்று நான் அறிந்திருந்தேன். அதனால் நான் சிறிது தூரத்திலேயே இருந்தேன். ஆனால் என்ன ஒரு அற்புதம்! பகவானின் பாதங்களின் அருகில் நான் தலையைத் தாழ்த்தியபோது கண் இமைக்கும் நேரத்தில் பகவானின் பாதங்கள் மிகவும் மெதுவாக எழும்பி பெருவிரல்கள் இரண்டும் மென்மையாக, மூடியிருந்த என் கண் இமைகளைத் தொட்டன. இவை அனைத்தும் ஒரு நொடியில் நிகழ்ந்தன. நான் மெய்சிலிர்த்து போனேன்,'' என்று ரெட்டியார் கூறினார்.

பலராம ரெட்டியார் மீண்டும் அரவிந்தாச்ரமத்திற்குத் திரும்பினார். அங்கு இருந்த போது தனது கிராமத்திற்குச் சென்று வந்தார். கிராமத்திற்குச் சென்ற போதெல்லாம் அவர் தனது வீட்டில் தங்குவது இல்லை. மிகவும் எளிமையும் கண்டிப்பும் உள்ள அவர், அந்த நிலத்திலிருந்த சிறிய குடிசையில் தங்குவார். தன்னுடைய இல்லத்திலிருந்து அனுப்பப்படும் உணவை உண்டு தனது ஸாதனைகளைத் தொடர்ந்து செய்வார். ஒரு வருடம் கழித்து மூன்றாவது முறையாக ரமணாச்ரமத்திற்குச் சென்றார். அம்முறை அவர் தங்குவதற்குத் தனி அறை கிடைக்கவில்லை. அதனால் இன்றும் உபயோகத்தில் இருக்கும் விருந்தினர்களுக்கான பொது அறையில் மற்றவர்களுடன் அவர் தங்க வேண்டி இருந்தது. ஒரு நாள் அவருக்கு மலை உச்சிக்குச் செல்ல வேண்டும் என்ற தீவிரமான ஆசை எழுந்தது. யாரிடமும் ஆலோசனை கேட்காமல் மேலே ஏறத் துவங்கினார். சிறிது நேரத்திற்குப் பின் அவர் மிகவும் செங்குத்தான பாறையில் மேலும் கீழும் செல்ல



**(இடம் – வலம்) கணேசன், குஞ்சு ஸ்வாமி மற்றும் பலராம ரெட்டியார்**

முடியாத மிகவும் அபாயகரமான நிலையில் இருப்பதை உணர்ந்தார். அங்கு எவ்வித பிடிமானமும் இருக்கவில்லை. பகவானிடம் பிரார்த்தித்துக் கொண்ட போது திடீரென்று தான் ஒரு வேரைப் பிடித்துக் கொண்டிருப்பதை உணர்ந்தார். அந்த வேரின் உதவியுடன் மேலே ஏறிய போது தான் மலை உச்சியில் இருப்பதை உணர்ந்தார். பகவானை நினைத்த மாத்திரத்தில் அவர் ரெட்டியாரைக் காப்பாற்றி விட்டார். அந்த நிகழ்ச்சி தெய்வீக சக்தியின் மீது அவருக்கு இருந்த நம்பிக்கையை மேலும் வலுப்படுத்தியது. இந்த அனுபவம் பகவானே அவரது குரு என்றும் புனித அருணாசலமே அவரது இருப்பிடம் என்றும் அவரை உணர்ந்து கொள்ளச் செய்தது. பழைய ஹாலில் பகவானின் முன் அமர்ந்திருந்தபோது, ''இவரே ஸர்வேச்வரன் - உலகனைத்திற்கும் நாயகன்,'' என்று தனக்குத் தானே கூறிக் கொண்டார்.

பலராம ரெட்டியார் அரவிந்தாச்ரமத்திற்கு வந்து ஸ்ரீஅரவிந்தரிடம் விடைப்பெற்றுச் செல்லத் தீர்மானித்தார். அரவிந்தாச்ரமத்தில் தினமும் குருவோடு சீடர்கள் எழுத்து மூலம் தொடர்பு கொள்ள வேண்டும் என்ற வழக்கம் இருந்தது. அதன்படி, ஒவ்வொருவரும் அவரவரது சந்தேகங்களைக் காகிதத்தில் எழுதிப் பெட்டியில் போட்டு விடுவார்கள். மறுநாள் காலை ஸ்ரீஅரவிந்தரின் விடைகளின் மூலம் அவர்களது சந்தேகங்கள் தெளிவுபடுத்தப்படும். ஒரு நாள் ''குருவே! நீங்கள் 'தன்னை உணர்தல்' என்று உங்கள் போதனைகளை ஆரம்பிக்கிறீர்கள். ரமண மஹர்ஷி அந்த நிலையிலேயே நிலைத்து நிற்கிறார். ரமணாச்ரமம் சென்று நான் என்னை உணர்ந்து கொள்வதற்கு எனக்கு அனுமதி அளியுங்கள்,'' என்று ரெட்டியார் எழுதியிருந்தார். ஸ்ரீஅரவிந்தர் தாமதமின்றி உடனடியாகப் பதிலிறுத்தார்: ''நீ இங்கேயே உன்னை உணர்ந்து கொள்ளலாம். எங்கும் செல்ல வேண்டிய அவசியம் இல்லை,'' என்ற அவரது பதில் ரெட்டியாருக்கு மிகுந்த ஏமாற்றத்தை அளித்தது. ரமண மஹர்ஷியின் ஈர்ப்பு மிகவும் பலமாக இருந்ததால் அவர் தன் முயற்சியை விடுவதாகவும் இல்லை. அவர் மீண்டும் ஸ்ரீஅரவிந்தருக்கு எழுதினார். ''இப்போது நீ இங்கிருந்து போனால் இதுவரை உனக்காக நாங்கள் செய்தது அனைத்துமே வீணாகி விடும். அதனால் போக அனுமதிக்க மாட்டோம்,'' என்று ரெட்டியாரை ஸ்ரீஅரவிந்தர் எச்சரித்தார். ஸ்ரீஅரவிந்தரைப் போன்ற மஹா புருஷரிடம் வாதாடுவது இயலாத காரியம் என ரெட்டியார் அறிந்திருந்தார். ஆனால் ஒரு தெய்வீக சக்தி மூன்றாவது முறை எழுதுமாறு அவரைத் தூண்டியது. விடை எதுவாக இருந்தாலும் செல்வது என்ற தீர்மானத்திற்கு அவர் வந்திருந்தார். பகவான் ஸ்ரீரமணரின் இருப்பிடமான அருணாசலத்திற்குச் செல்வதில் அத்தனை உறுதி ரெட்டியாருக்கு இருந்தது. அன்னைக்கும் ஸ்ரீஅரவிந்தருக்கும் மிகுந்த தயக்கம் இருந்தாலும், ரெட்டியாருடைய தீவிரமான நாட்டத்தைப் புரிந்து கொண்டு அனுமதி அளித்தனர். அரவிந்தாச்ரமத்தின் சட்டப்படி, ஸ்ரீஅரவிந்தரும் அன்னையும் ஸாதகர்களுக்கு அளிக்கும் விடைகள் படிக்கப்பட்ட பிறகு கிழிக்கப்படவோ எரிக்கப்படவோ வேண்டும் என்பதாகும். கடைசியில் அளிக்கப்பட்ட அனுமதிக் கடிதத்தைத் தவிர ரெட்டியார் மற்ற அனைத்தையும் அழித்து விட்டார். இதற்கும் ஒரு தெய்வீகக் காரணம் இருந்தது என்பதை நாம் பிறகு காண்போம்.

1937-ல் ரமண மஹர்ஷியின் 57-வது பிறந்த தினத்தன்று ரமணாச்ரமத்திற்கு ரெட்டியார் வந்தார். உறுதியோடு வந்துள்ள சீடர், குருவோடு இணைவதற்கு மிகவும் புனிதமான நாளாக அது அமைந்தது. குருவிடம் சரணடைந்து தன்னை அர்ப்பணித்துக் கொண்டு ஆன்ம ஸாதனைகள் பழக வேண்டும் என்ற குறிக்கோளுடன் ரெட்டியார் வந்திருந்தார். அவர் தனிமையில் ஸாதனைகளைத் தொடர விரும்பினார். ஆனால் அச்சமயத்தில் ஆச்ரமத்தில் தனி அறைகள் இருக்கவில்லை. அதனால் டவுனில் தனி அறையை எடுத்துக் கொண்டு தினமும் பகவானை வந்து சந்திக்கும் படி ஆலோசனை வழங்கப்பட்டது. அவ்வாறே செய்த ரெட்டியார், அதிகாலை 3 மணிக்கு வந்து 11 மணி

வரை இருந்து விட்டு மதிய உணவிற்குத் திரும்பிச் சென்று விடுவார். மீண்டும் மதியம் 3 மணிக்கு வந்து இரவு 8 மணி வரை ஆச்ரமத்தில் இருப்பார். பகவானைத் தினமும் தரிசனம் செய்வது அவருக்கு முக்கியமானதாக இருந்தது. "குருவின் ஸாந்நித்தியமும் சமீபமும் ஒரு ஸாதகருக்கு மிகவும் முக்கியம்," என்று அவர் சொல்வதுண்டு. பகவானைப் பார்த்துக் கொண்டே தனது நேரத்தைக் கழிப்பதற்கு இந்த ஏற்பாடு அனுகூலமாக இருந்தது. பகவான் மௌனமான அன்பின் வெளிப்பாட்டின் மூலமும் வார்த்தைகள் சமிக்ஞைகள் மூலமும் தயை பொருந்திய செயல்களின் மூலமும் ரெட்டியாருக்கு வழிகாட்டினார்.



**பலராம ரெட்டியார் பக்தர்களின் கேள்விகளை கவனத்துடன் கேட்டுக் கொண்டிருக்கும் போது**

ஸ்ரீஅரவிந்தரிடம் விடைபெற்று பகவானைத் தனது குருவாக ஏற்றுக் கொண்டு வந்துவிட்ட போதிலும் "நான் சரியான காரியத்தைச் செய்துள்ளேனா?" என்ற சந்தேகம் அவர் மனதை உறுத்தியபடி இருந்தது. ரெட்டியார் மீது ஸ்ரீஅரவிந்தரின் தாக்கம் மிகவும் அதிகமாக இருந்ததால் அதிலிருந்து அத்துணை எளிதாக விடுபட இயலவில்லை. ரமண மஹர்ஷியே தனது குரு என்பது குறித்தும், அரவிந்தரிடமிருந்து தான் விலகி வந்தது சரியான முடிவு என்பது பற்றியும், தெளிவு பெற வேண்டும் என்று ரெட்டியார் விரும்பினார். பகவானிடம் இருந்தே இதற்குத் தெளிவு பெற வேண்டும் என்று விரும்பிய பக்தரின் மேல் பகவானுக்குத் தான் எத்துணை கருணை! ஒரு நாள் செய்தித் தாளைப் படிக்கும் போது ஸ்ரீஅரவிந்தரின் 'Light on Yoga' என்ற புத்தகத்தின் விமர்சனத்தை பகவான் படிக்க நேர்ந்தது. அப்போது ஹாலில் அமர்ந்திருந்த ஒருவர், ரெட்டியாரிடம் அந்தப் புத்தகம் இருப்பதாகக் கூறினார். பகவான் ஸ்ரீஅரவிந்தரின் தத்துவ சாஸ்திரத்தைப் படித்திருக்கவில்லை என்பதால் அதை எடுத்து வரும்படி கூறி அதைப்படித்தார். எதற்காக? அவருக்காக அன்று. ஸ்ரீஅரவிந்தரின் தத்துவங்களில் ஊறிப் போயிருந்த தனது பக்தனின் பொருட்டே அவ்வாறு செய்தார்.

ஒரு நாள் பலராம ரெட்டியார் பகவானுடன் தனியாக இருந்த போது இரண்டு கேள்விகளுக்கு விடை வேண்டினார். அவை—தான் அரவிந்தரை விட்டு வந்தது சரிதானா? என்றும், அரவிந்தர் பகிரங்கமாகக் கூறியபடி சரீரத்தோடு இறவாத் தன்மையைப் பெற முடியுமா?—என்பது பற்றியும் ஆகும். சரீரத்தோடு இறவாத் தன்மை என்பது குறித்து விவாதம் எழும்போதெல்லாம் அது சாத்தியம் தானா என்பது பற்றி சாட்விக், கோஹென் மற்றும் பலருடன் ரெட்டியார் சர்ச்சை செய்வார். அவ்வாறு இருந்தும், பகவானிடம் இந்த விஷயம் குறித்து அவரால் ஒரு போதும் கேட்க முடியவில்லை. ஏனெனில் பகவானின் பதில்கள் இதயத்திலிருந்து நேரடியாக வெளிப்படுவதை அவர் உணர்ந்திருந்தார். 'சரீரத்தோடு இறவாமை' என்பது பற்றிய சந்தேகம் நீடித்தது. ஒரு நாள் பகவான்

ஹாலில் செய்தித் தாளைப் படித்து விட்டு “கும்பகோணத்திலிருக்கும் யோகி C. V. V. ராவ் என்பவரைப் பற்றி நீங்கள் கேள்விப் பட்டிருக்கிறீர்களா?” என்று கேட்கும் வரை இந்தச் சந்தேகம் அவரைவிட்டு நீங்கவே இல்லை. சரீரத்தோடு இறவாத் தன்மையைத் தரவல்ல ‘மூலிகை அமிர்தம்’ ஒன்றைப் பற்றித் தனக்குத் தெரியும் என்றும், அந்நிலையை அடைவதற்குத் தன்னால் உதவ முடியும் என்றும் யோகி ராவ் கூறி வந்தார். புகழ்பெற்ற பாலகங்காதர திலகர், அன்னிபெசன்ட் போன்றவர்கள் கூட அவரைச் சந்திக்க விரும்பினர். ஆனால் 36 வயதிலேயே C. V. V. ராவ் காலமானார்! ரெட்டியாரிடம் அந்தச் செய்திக்குறிப்பை பகவான் காட்டி அவரது சந்தேகத்திற்கு முடிவு கட்டினார்.

ஸ்ரீஅரவிந்தரிடமிருந்து தான் கடைசியாகப் பெற்ற கடிதத்தை ரெட்டியார் பகவானிடம் காட்டினார். அரவிந்தருடைய கையெழுத்தைப் படிப்பதற்கு பகவானுக்குச் சிறிது கஷ்டமாக இருந்ததால் ரெட்டியாரையே படிக்கும்படி கூறினார். அதில் அரவிந்தர் எழுதியிருந்ததாவது — ”ஆத்மானுபவத்தை முழுமையாகப் பெற முடியாத பாதையை நீ தேர்ந்தெடுத்துள்ளாய். நாங்கள் உன்னை ஆசீர்வதிக்கிறோம். நீ இங்கேயே இருந்து கொண்டு உன் ஸாதனைகளைத் தொடர்ந்தாயானால், அன்னையும் நானும் உனக்கு உதவி செய்ய முடியும்,” என்பதாகும். ‘ஆத்மானுபவத்தை முழுமையாக பெற முடியாத’ என்ற இடம் வந்த போது பகவான் குறுக்கிட்டார். “முழுமை பெறாத ஆத்மானுபூதியா? முழுமை பெறாதது, என்றால் அது ஆத்மானுபூதியே அல்ல. ஆத்மானுபூதியாக இருக்குமானால் அது நிறைவானது—அதில் பகுதிகள் கிடையாது,” என்று பகவான் தெளிவுபடுத்தினார். இது ரெட்டியாருடைய எல்லாச் சந்தேகங்களையும் நிவர்த்தி செய்தது. ஸ்ரீஅரவிந்தரின் சீடராகத் தொடர்வதைப் பற்றிய எண்ணங்களைக் கைவிட்டு பகவானுடைய ‘ஆத்ம விசாரம்’ பாதையைப் பின்பற்ற முடிவு செய்தார். தன்னை எப்போதும் உடனிருந்து வழி நடத்தி அருள் புரியக்கூடிய குருவாக பகவானையும், பகவானது பக்தர்களைத் தனது குடும்பமாகவும் பார்த்தார் ரெட்டியார்.

சாதாரணமாகப் பார்ப்பவர்களுக்கு பிறர் விஷயங்களில் பகவானுக்கு ஆர்வம் இல்லாதது போன்று தோன்றலாம். ஆனால் பகவானுக்குத் தீவிர ஸாதகர்களிடம் மிகுந்த அக்கறை இருந்தது என்பதையும் அதை அந்த ஸாதகர்களால் மட்டுமே உணர்ந்து கொள்ள முடியும் என்பதையும் பலராம ரெட்டியார் குறிப்பிட்டிருக்கிறார். பகவான் அவருக்கு உதவி செய்திருக்கிறாரா என்று நான் கேட்டபோது, “பகவான் எனக்குத் தனிப்பட்ட முறையில் உதவி செய்ததோடு, என் ஸாதனைகளைப் பலப்படுத்தித் தீவிரமடையச் செய்துள்ளார்,” என்று கூறினார். அத்தகைய அனுபவங்கள் சிலவற்றை என்னோடு பகிர்ந்து கொள்ளுமாறு அவரிடம் கேட்டுக் கொண்டேன்.

அவர் அனுபவித்த போராட்டங்களை என்னுடன் பகிர்ந்து கொண்டார். அரவிந்தாச்ரமத்தில் அவர் இருந்த போது, அங்கு இருந்த இந்து சமயத்தைச் சார்ந்த ஓர் இளம்பெண் அவரை விரும்பினாள். ரெட்டியாரின் மாநிலத்தையே சேர்ந்த அந்தப் பெண்ணின் பெற்றோரும், தங்கள் மகளுக்கு ரெட்டியாரை மணமுடிக்க விரும்பினர். பெற்றோர் அரவிந்தாச்ரமத்தில் அன்னையிடம் விஷயத்தைக் கூறிய போது அன்னை, “ஆம், இந்தப் பெண்ணைத் திருமணம் செய்து கொள். அவள் உனக்குத்தான். திருமணமானால் அது நன்றாக இருக்கும்,” என்று ரெட்டியாரிடம் கூறினார். அவர் அந்தப் பெண்ணை விரும்பிய போதிலும் அவரது மனம் ஆன்மீக ஸாதனைகளுக்கு முக்கியத்துவம் கொடுத்ததால், திருமணம் தனது கவனத்தைத் திருப்பக்கூடும் என்று எண்ணினார். அந்தப் பெண்ணும் அவளது பெற்றோரும் ரமணாச்ரமத்திற்கும் ரெட்டியாரைத் தொடர்ந்தார்கள். மனம் சற்று தடுமாற்றம் அடைந்த சமயத்தில் பகவானின் அனுமதியுடன் திருமணம் செய்து கொள்ளலாமா என்ற எண்ணம் ரெட்டியாருக்கு எழுந்தது. பகவானை 24 மணி நேரமும் பார்க்கக்கூடிய வாய்ப்பு ரெட்டியாருக்கு

இருந்தது. அவர், பகவானைக் கலந்தாலோசிக்காமல் எந்த முடிவையும் எடுத்ததில்லை என்பது குறிப்பிடத்தக்கது. ஒரு சீட்டில், "நான் இந்தப் பெண்ணை மணம் செய்து கொள்ளலாமா?" என்று எழுதி பகவானிடம் ரெட்டியார் கொடுத்த போது, பகவான் அதை வாங்கிப் படித்து விட்டு மடித்து, தனது தலையணைக்கு அடியில் வைத்து விட்டார். பகவான் அனுமதி அளிப்பதாக இருந்தால் தலையை அசைத்து சமிக்ஞை செய்து அந்தச் சீட்டைத் திருப்பிக் கொடுப்பார். இல்லையென்றால் அமைதி காப்பார். ரெட்டியார் விஷயத்தில் மௌனமாக இருந்தார். சில மாதங்களுக்குப் பிறகு ரெட்டியார் ஹாலுக்குள் நுழைந்த போது, அன்றைய செய்தித் தாளை பகவான் ரெட்டியாரிடம் கொடுத்தார். அதில் அந்தப் பெண் ஒரு அரசியல்வாதியைத் திருமணம் செய்து கொண்ட செய்தி வெளி வந்திருந்தது. ரெட்டியாரின் கேள்விக்குப் பதில் கிடைத்தது! சீடர்களை நேசித்த பகவான் தாயைப் போன்று அன்பு காட்டி, தந்தையைப் போன்று காப்பாற்றி, குருவாய் வழி காட்டி, ஒரு நண்பனைப் போன்று பழகி ஒவ்வொரு நொடியும் வழி நடத்தினார். அவரிடம் எதை வேண்டுமானாலும் கேட்க முடியும். சந்தேகப்படும் மனதை பகவானிடம் அர்ப்பணம் செய்துவிட்டு, அவரைக் குருவாக ஏற்றுக்கொள்வது மட்டுமே ஒருவர் செய்ய வேண்டிய காரியம்.

ஒரு முறை பலராம ரெட்டியார் இமய மலையில் உள்ள அல்மோரா என்ற இடத்திற்குச் சென்றார். அருணாசலத்திற்குத் திரும்பி வந்தவர், "அல்மோரா மிகவும் குளிர்ச்சியாகவும் சுகமாகவும் உள்ளது! இங்கு வெப்பம் அதிகமாக இருக்கிறது," என்று பகவானிடம் கூறியபோது, "உண்மையான குளிர்ச்சி நம் உள்ளே இருக்கிறது. அந்தக் குளிர்ச்சி இருக்குமானால், எங்கு சென்றாலும் குளிர்ச்சியாக இருக்கும்," என்று அவர் பதிலளித்தார். இதுவே பகவான் வழி நடத்தும் அழகு! சாதாரணமாக பகவான் சீதோஷ்ணம் குறித்து விமர்சிப்பதில்லை. இந்த விமர்சனத்தின் விளைவாக ரெட்டியார் சீதோஷ்ண நிலைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்காமல் அவைத் தன்னை பாதிக்காதவாறு பார்த்துக் கொண்டார்.



**பலராம ரெட்டியார் மற்றும் கணேசன் ஆகியோர் யோகி ராம்சுரத்குமாரை வரவேற்று ஸ்ரீ பகவானின் ஸமாதி கோயிலுக்கு அழைத்துச் செல்லும் போது (ரெட்டியாருக்கு பின்னால் அனுராதா)**

பலராம ரெட்டியார், காலை, மதியம், மாலை என மூன்று நேரங்களிலும் ஆச்ரமத்திற்கு வந்து பகவான் முன் அமர்ந்திருப்பார். மதிய வேளைகளில் கூட்டம் அதிகமான போது, பலராம ரெட்டியார் அந்த நேரத்தில் வருவதைத் தவிர்த்தார். இதைக் கவனித்த பகவான் ஒரு நாள் மாலை, ரெட்டியார் வந்த போது, "இன்று மதியம் நீங்கள் ஆச்ரமத்தில் இருக்கிறீர்களா?" என்று பேராசிரியர் G. V. சுப்பராமையா கேட்டதாகக் கூறினார். தான் மதிய வேளைகளிலும் வர வேண்டும் என்பதை பகவான் குறிப்பால் உணர்த்துகிறார் என்று ரெட்டியார் புரிந்து கொண்டார். என்றாலும் மறுநாள் மதியமும் அவர் ஆச்ரமத்திற்குச் செல்லவில்லை. அதற்கு அடுத்த நாள் ரெட்டியார் வழக்கம் போல் அதிகாலை 3 மணிக்கு ஆச்ரமத்திற்கு வந்தார். அந்த சமயத்தில் சாதாரணமாக பகவான் தனது மஞ்சத்திலிருந்து எழுந்திருப்பார். பகவான் இரவில் போர்த்தியிருந்த போர்வையை ரெட்டியார் மடித்து அதன் இடத்தில் வைப்பது வழக்கம். ஆனால் அன்று காலை பகவான் அதை ரெட்டியாரிடம் கொடுக்காமல் தானே மடித்துத் தலையணைக்கு அடியில் வைத்தார். இதனால் பகவானுக்கு சேவை செய்யும் வாய்ப்பை இழந்தார் ரெட்டியார். "இதன் மூலம் குருவின் ஸந்நிதியில் இருப்பதன் முக்கியத்துவத்தை பகவான் எனக்கு உணர்த்தி எந்த ஒரு நிமிடத்தையும் வீண் செய்யாதே என்று கூறாமல் கூறி, மதிய வேளைகளிலும் நான் வர வேண்டும் என்பதை எனக்கு உணர்த்தினார்," என்று பிற்காலத்தில் ரெட்டியார் எழுதி இருந்தார். அன்று முதல் ரெட்டியார் எப்போதும் தன் குருவான பகவானுடன் இருந்து வந்தார்.

ஒரு முறை கிரிவலம் வந்து கொண்டிருந்தபோது மௌனத்தைக் கடைபிடிக்க வேண்டும் என்று ரெட்டியாருக்குத் தோன்றியது. பகவானிடம் கூறாமல் மறுதினத்திலிருந்து மௌனத்தைக் கடைபிடித்தார். அந்தச் சமயத்தில் S. S. கோஹெனுடன் பலாக்கொத்தில் அவர் தங்கியிருந்தார். சில தினங்களுக்குப் பிறகு ஸ்வாமி ராம்தாஸிடமிருந்து விஸ்வநாத ஸ்வாமிக்கு வந்த கடிதத்தில், "ரெட்டியார் மௌனம் கடைப்பிடிப்பது குறித்து மகிழ்ச்சி அடைகிறேன். அவருக்கு அது நன்மையைத் தரும். என் சார்பாக பாராட்டுகளைத் தெரிவிக்கவும்," என்று அதில் எழுதப்பட்டிருந்தது. பகவானிடம் விஸ்வநாத ஸ்வாமி அந்தக் கடிதத்தைக் கொடுத்தார். ரெட்டியாரும் அப்போது அங்கு இருந்தார். 'அவருக்கு அது நன்மையைத் தரும்,' என்று படித்தபோது பகவான் ரெட்டியாரை நோக்கினார். தான் மௌனத்தைத் தொடர வேண்டும் என்பதை பகவானின் பார்வை உறுதி செய்வதாக அவர் நம்பினார். ரெட்டியார் ஓராண்டு காலம் மௌனத்தைக் கடைப்பிடித்தார். அந்த ஆண்டின் இறுதியில் ஸாது வாஸ்வானி என்ற ஒரு மஹான் ரமணாச்ரமத்திற்கு வந்தார். அவரைப் பலருக்கும் தெரியாது என்ற போதும், பலராம ரெட்டியார் அவரை இமாலயத்தில் சந்தித்திருந்தார். ஸாது வாஸ்வானி ஹாலில் ரெட்டியாருக்கு அருகில் அமர்ந்திருந்த போதும், ரெட்டியார் அவரோடு பேசவில்லை. வெளியில் சென்று பேசலாம் என்று எண்ணினார். ஆனால் அவசர காரியமாக வெளியே சென்று விட்டு ரெட்டியார் திரும்பி வந்தபோது ஸாது வாஸ்வானி ஆச்ரமத்தை விட்டு ஏற்கனவே கிளம்பி விட்டார். "ஸாது வாஸ்வானி வந்திருந்தது உங்களுக்குத் தெரியுமா?" என்று ரெட்டியாரிடம் பகவான் கேட்டபோது, 'ஆம்' என்று அவர் தலையசைத்தார். "உங்கள் நண்பரான அவரிடம் நீங்கள் பேசியிருக்க வேண்டும்," என்று பகவான் கூறியபோது மௌனத்தின் நோக்கம் நிறைவேறி விட்டதால் இனி அதை விட்டுவிடலாம் என்பதை பகவான் இதன் மூலம் அறிவுறுத்தித் தன்னை வழி நடத்துகிறார் என்பதை ரெட்டியார் உணர்ந்தார்.

பலராம ரெட்டியார் பணவசதி படைத்தவர். அவருக்குச் சொந்தமான நிலத்தை அவரது குடும்பத்தினர் கவனித்துக் கொண்டனர். அவருடைய அண்ணன் அவருக்குப் பணம் அனுப்பிக் கொண்டிருந்தார். ஒருநாள் அவருடைய அண்ணன், "உன்னுடைய நிலத்தை இனி என்னால்

கவனித்துக் கொள்ள முடியாது. நீயேதான் வந்து பார்த்துக் கொள்ள வேண்டும்,'' என்று கடிதம் எழுதி இருந்தார். அவ்வாறென்றால் ரெட்டியார் ஆச்ரமத்தை விட்டுச் செல்ல வேண்டியிருக்கும். மற்றவர்களைப் போன்று எப்போதாவது ஒருமுறை வந்துதான் பகவானைக் காண முடியும் என்பதால் அவர் உற்சாகமிழந்தார். பகவானிடம் அந்தக் கடிதத்தைக் கொடுத்த போது, அவர் அதைப் படித்துவிட்டு ஒரு பக்கமாக வைத்துவிட்டு மௌனமாக இருந்தார். பலராம ரெட்டியார் எதுவும் கேட்கவில்லை. மூன்று நாட்கள் கழித்து, ஆன்மீகத்தில் ஈடுபாடுடைய ரெட்டியாருடைய அன்னை, "நீ இங்கு வர வேண்டாம்! நீ அந்த மஹாபுருஷரோடு இருப்பது உன்னுடைய பாக்கியமே. நான் உன் நிலத்தைக் கவனித்துக் கொண்டு உனக்குப் பணம் அனுப்பி வைக்கிறேன். நீ அங்கிருந்து கிளம்பாதே,'' என்று கடிதம் எழுதி இருந்தார். பகவான் அதைப் படித்துவிட்டு புன்முறுவல் பூத்தது, "நீங்கள் பணத்திற்காகத் திரும்பிச் செல்ல வேண்டாம்,'' என்று ரெட்டியாருக்குக் குறிப்பால் உணர்த்துவதாக இருந்தது. எல்லா விதத்திலும் குரு தன் சீடர்களைப் பாதுகாக்கிறார்!




**பலராம ரெட்டியார் குறிப்பேட்டில் இருந்து ஸ்ரீ பகவானின் கையெழுத்து**

பகவானுடைய அந்திமக் காலத்தில் ரெட்டியாரைப் போன்ற பக்தர்கள் பகவானுக்கு எந்த அசௌகரியமும் கொடுக்கக் கூடாது என்பதற்காக எப்போதாவது ஒருமுறைதான் அவரைக் காண வருவார்கள். தற்போது நிர்வாண அறை என்று அழைக்கப்படும் அறையில் பகவான் இருந்த போது, சென்னை அரசாங்கத்தில் அமைச்சராக இருந்த சீதாராம ரெட்டியார் என்னும் பலராம ரெட்டியாரின் நண்பர், ஒரு நாள் அவருடன் வந்து பகவானைப் பார்த்தார். பகவானைச் சுற்றி அருள் ஒளி பரவி இருந்ததைக் கண்ட பலராம ரெட்டியார் பரவச நிலையடைந்து மெய்சிலிர்த்து கண்ணீர் பெருக்கினார். ஒரு வேளை தனது கற்பனையே தன்னை ஏமாற்றுகிறதோ என்று எண்ணினார். ஆனால் அவர் அறையை விட்டு வெளியே வந்த போது, "அந்த அறையில் அத்துணை பிரகாசம் எங்கிருந்து வந்தது? மின் விளக்குகள் அந்த அறையில் எதுவும் இருக்கவில்லையே!'' என்று அமைச்சர் வினவினார். பகவானுடைய இறுதிக் காலத்தில் இத்தகைய ஈடு இணை இல்லாத தெய்வீகப் பேரொளி அவருடைய ஸந்நிதியில் நீக்கமற நிறைந்திருந்தது.

ஒருமுறை பலராம ரெட்டியாரின் சகோதரி தனது கணவர், குழந்தை இவர்களுடன் ஆச்ரமத்திற்கு வந்தார். ஆச்ரமத்தினர் அவருடைய சகோதரியையும் குழந்தையையும் பகவானைத் தரிசிக்க அனுமதி அளித்தனர். ஆனால் அவரது கணவர் வெளியில் காத்திருக்க வேண்டியிருந்தது. ரெட்டியாரின் சகோதரி வணங்குவதற்கு முன்பு பகவானது இடது பக்கத்தில் குழந்தையைத் தரையில் கிடத்தினார். இடது கையில் செய்யப்பட்ட அறுவை சிகிச்சையால், அந்தப் பக்கத்தை அசைக்கக்

கூட முடியாமல் பகவான் தாங்க முடியாத வேதனையை அனுபவித்துக் கொண்டிருந்தார். ஆனால் குழந்தை அழ ஆரம்பித்தப்போது அவர் அந்தக் கையை மிகுந்த கஷ்டத்துடன் நீட்டிக் குழந்தையைத் தட்டிக் கொடுத்து சமாதானம் செய்ய முற்பட்டார்.

பகவான் சரீரத்தை விட்ட அன்று இரவு ரெட்டியார், விஸ்வநாத ஸ்வாமி மற்றும் சுப்பாராவ் போன்ற மூத்த பக்தர்கள் சிலர் வெளியில் சென்று நிலவொளியில் அமர்ந்தனர். "நமது குரு போய்விட்டார். மனித உருவில் அந்தக் கருணைக் கடலை நாம் மீண்டும் காண்போமா?" என்று ஏக்கத்துடன் சிந்தித்தவாறு இருந்தார். 'தன் முன் அமர்ந்த ஆயிரக்கணக்கானவர்களின் வாழ்க்கையை, சூரியனைப் போன்று அருளைப் பொழிந்து பகவான் மாற்றி அமைத்துள்ளார். பகவான் தன்னுடைய அருட்கரத்தால் எத்தனை பேருடைய வாழ்க்கையை மாற்றி அவர்களது இதயத்தாமரையை மலர்வித்திருக்கிறார் என்பது எப்போதுமே யாருக்கும் தெரியப் போவதில்லை. ஆன்மீக விழிப்பின் மிக உயர்ந்த நிலையை அடைவதற்குத் தேவையான அனைத்தையும் பகவான் அவர்களுக்கு அளித்துள்ளார்' என்பது போன்ற உணர்வுகள் நிலவொளியில் அமர்ந்திருந்த அவர்கள் மனதில் தோன்றின.

இதன் பிறகு பலராம ரெட்டியார் தன்னுடைய கிராமத்திற்குத் திரும்பி வந்து ஆன்மீக ஸாதனைகளைத் தொடர்ந்தார். பகவானது ஜெயந்தி, ஆராதனை இவற்றிற்கு ஆச்ரமத்திற்கு வந்தபோதும் தனது கிராமத்திற்குத் திரும்பிச் சென்று விடுவார். ஆச்ரமத்தில் பல மாறுதல்கள் ஏற்பட்டன. பழைய பக்தர்களை அழைத்து வந்து ஆச்ரமத்தில் தங்க வைக்க வேண்டும் என்று ஆச்ரமத்தின் தலைவரான என் தந்தையையும், என்னையும் பலர் வேண்டிக் கேட்டுக் கொண்டனர். நாங்கள் பலராம ரெட்டியாரை ஆச்ரமத்தில் வந்து தங்கும்படி கேட்டுக் கொண்டோம். அவருக்கு எந்தப் பணியும் ஒதுக்கப்படவில்லை என்பதோடு எந்த நன்கொடையும் அவரிடமிருந்து பெறப்படவில்லை. பலராம ரெட்டியார் தன் அறையை உட்பக்கமாகப் பூட்டிக்கொண்டு தனிமையில் தனது ஆத்ம ஸாதனையைத் தொடர்ந்தார். அவருடைய கவனம் முழுமையாக அவரது லட்சியத்தில் இருப்பதற்கு உதவும் விதத்தில் அவருக்கு சேவை செய்வதற்கும், உணவு எடுத்துச் செல்வதற்கும் ஒரு தொண்டரை நான் நியமித்திருந்தேன். அவரது ஆழ்ந்த தியானத்தையும், அவர் தனித்து வாழ்வதையும் அஹங்காரத்தால் செய்யப்படுவது என நினைத்து, "ஆச்ரம நிர்வாகத்தில் மற்றவர்களைப் போல அவரும் ஏன் பங்கு கொள்ளக் கூடாது? அவர் தன்னை மிக உயர்ந்த நிலையில் உள்ளவராக எண்ணிக் கொண்டு இருக்கிறாரோ?" என்று ஆச்ரமத்தில் இருந்த சிலர் அவரைப் பற்றி அவதூறாகக்கூட பேசினர். பலராம ரெட்டியாருடன் நெருக்கமாக இருந்த நான், "பகவானுடைய தனித்தன்மையைப் பற்றி என்னிடம் கூற முடியுமா?" என்று ஒருமுறை கேட்டேன். அதற்கு அவர் கூறியதாவது — ஒருமுறை, "பகவானே! உங்கள் ஞான நிலை குறித்து எனக்கு விளக்க முடியுமா?" என்று கேட்டேன். அதற்கு பகவான் 'பந்தத்தில் இருக்கும் போது எண்ணங்கள் இல்லாமல் இருப்பது எத்தனை கடினமோ அதே போன்று, ஞானத்தில் எண்ணங்களை எழுப்புவதும் அத்தனை கடினம்,' என்று கூறினார். பலராம ரெட்டியார் தொடர்ந்து, "பகவானுடைய மிகப்பெரிய சிறப்பு அவருடைய ஸாமீப்யமும், ஸௌலப்யமும் ஆகும். ஸாமீப்யம் என்றால் நெருக்கம், அருகாமை. ஸௌலப்யமென்றால் எளிதில் கிடைப்பவர் என்று பொருள். பகவான் எங்களுடன் அத்தனை நெருக்கமாக இருந்தார். சட்டத்திட்டங்கள் மிகவும் குறைவாக இருந்தமையால் எங்கள் ஆன்ம ஸாதனையில் ஊக்கமும் முன்னேற்றமும் இருந்தது. பகவான் முன்னிலையில், நாங்கள் விரும்பியது எதுவானாலும் அதை அநேகமாக எங்களால் செய்ய முடியும். சில சமயங்களில் அவர்

முன்னிலையில் செய்தித்தாள்களைப் படிப்போம். வேறு சில சமயங்களில் அரசியல் விஷயங்களைக் கூட விவாதிப்போம். என்ன ஒரு அழகு! பகவான் எப்போதுமே பிரஹ்மத்தில் நிலைத்திருந்தார், என்று ரெட்டியார் கூறியுள்ளார்.

இன்னொரு சமயம் ஆத்மானுபவம் குறித்த தனது சந்தேகத்தைத் தெளிவு படுத்த வேண்டும் என பகவானிடம் கேட்டுக் கொண்டார். ரெட்டியார் பகவத் கீதையை நன்கு அறிந்திருந்தார். கீதையில் 'பல பிறவிகளுக்குப் பின் — அது நிகழும் (பஹூனாம் ஜன்மநாம் அந்தே) என்று குறிப்பிட்டிருப்பதை ரெட்டியார் எடுத்துக் கூறிய போது, பகவான் வெகுண்டு எழுந்தவர் போல, "என்ன பஹூனாம் ஜன்மநாம்? பல பிறவிகளில் என்று ஏன் கூற வேண்டும்? அது இப்போதே இங்கேயே நிகழும் என நான் சொல்கிறேன்," என்று அழுத்தமாகக் கூறினார். கடைசி வாக்கியத்தைக் கூறும் போது அவருடைய குரல் சற்று ஓங்கி ஒலித்தது. ரெட்டியார் உட்பட ஹாலில் குழுமியிருந்த அனைவருமே ஆத்மானுபவ நிலையை அந்த நொடியில் அனுபவித்தனர். "குரு உடனிருந்தால் அதன் அழகே தனி! அனுபவம் நேரடியாகவும் உடனடியாகவும் கிடைக்கும். அங்கு பக்குவம் என்பதற்கு அவசியமில்லை," என்று ரெட்டியார் தனது அனுபவத்தைப் பற்றி உரைத்தார்.

என் வாழ்க்கையிலும் பலராம ரெட்டியார் ஒரு முக்கியமான பங்கு வகித்தார். பல ஆண்டுகளுக்கு முன், நான் காணாமல் போய்விட்டதாக ரமணாச்ரமத்தில் உள்ளவர்களும் என் குடும்பத்தினரும் எண்ணினர். பத்திரிகைகளிலும் அது பற்றிய தகவல்கள் வெளியாகியிருந்தன. இயல்பாகக் கவலையில் ஆழ்ந்த என் தந்தை ரெட்டியாரிடம் ஆலோசனை கேட்டார். ரெட்டியார் என் தந்தைக்கு ஆறுதல் கூறியதோடு தான் பெரிதும் மதித்த, சிறந்த ஞானியான ஆனந்தமயீமாவிடம் ஆலோசனை கேட்கலாம், என்று கூறினார். அச்சமயம் ஆனந்தமயீமா பெங்களூரில் இருந்தார். என் தந்தை, திருமதி தலயார்கான் மற்றும் ரெட்டியார் மூவரும் அங்கு சென்றனர். அவர்கள் வந்த காரணத்தைக் கேட்டபோது ஆனந்தமயீமா சிரித்தவாறே, "கவலைப்படாதீர்கள், என் கங்கா மாதா அவரைக் காத்துக் கொண்டிருக்கிறாள்," என்று கூறினார். நேரடியான பதிலை எதிர்ப்பார்த்த என் தந்தை திகைத்தார். பின் அவர்கள் ரமணாச்ரமத்திற்குத் திரும்பி வந்தபோது, காசியில் இருந்த டாக்டர் S. நாத் என்பவர் "கணேசன் காசியில் இருக்கிறான்," என்று கொடுத்திருந்த தந்தியைக் கண்டனர்.


அருள் நிறைந்த ஆனந்தமயீ மா

ஆனந்தமயீமா சென்னைக்கு வந்திருந்தபோது அவரைத் தரிசிக்க வரும்படி என்னை ரெட்டியார் கட்டாயப்படுத்தினார். பகவானின்

தீவிர பக்தரான நான் தயங்கியும் என்னை அவருடன் வரும்படி அழைத்தார். அங்கு மிகப் பெரிய கூட்டமாக இருந்ததால், என்னால் ஆனந்தமயீமாவைத் தனியாகச் சந்திக்க முடியவில்லை. ஆனால் பலராம ரெட்டியார் விடுவதாக இல்லை. என்னை ரயில் நிலையத்திற்கு அழைத்துச் சென்று ஆனந்தமயீமா கிளம்பும் சமயத்தில், ரயில் கம்பார்ட்மெண்ட்டில் தனியாக இருந்த அவரைச் சந்திக்கச் செய்தார். ரெட்டியார், "ஆனந்தமயீமாவை நமஸ்காரம் செய்," என்று கூறியபோது அதன்படி செய்தேன். என்னை பகவானின் சகோதரனின் பேரன் என்று அறிமுகம் செய்தபோது, ஆனந்தமயீமா மகிழ்ச்சி அடைந்து ஆசீர்வாதங்களைப் பொழிந்து, ஓர் ஆரஞ்சுப் பழத்தைப் பிரசாதமாகவும் கொடுத்தார்.

பலராம ரெட்டியார் இறப்பதற்கு முன் கார் விபத்தில் முதுகில் அடிபட்டு பெங்களூரிலிருந்த ஒரு மருத்துவமனையில் சேர்க்கப்பட்டார். அவருக்கு ஆச்ரமத்தில் தொண்டு செய்து கொண்டிருந்த நடேசனை, அவரைப் பார்த்துக் கொள்ள அனுப்பி வைத்தேன். ஆஸ்பத்திரியில் அவர் கிட்டத்தட்ட இரண்டு மாதங்கள் இருந்தார். இறக்கும் தறுவாயில் அவர், "நடேசா! நடேசா! இதோ பார் பகவான் வந்திருக்கிறார், நாற்காலி கொண்டு வா," என்று கூறி அழைத்தார். நடேசன் "ஸ்வாமி! பகவான் இங்கு இல்லை. அவர் ரமணாச்ரமத்தில் இருக்கிறார். நாளை நாம் அங்கே செல்லப் போகிறோம்," என்று கூறினார். அதற்கு ரெட்டியார் "முட்டாள்! பகவான் இங்கு என் முன் சிரமப்பட்டு நின்று கொண்டிருக்கிறார். உடனே நாற்காலி கொண்டு வந்து கொடு," என்று சொன்ன அந்த வார்த்தைகளே அவரது கடைசிச் சொற்கள். அடுத்த விநாடி முகத்தில் ஆனந்தமான புன்னகையோடு அவர் மரணத்தைத் தழுவினார். பகவான் அவருக்காக வந்திருக்கிறார். ஈடில்லா பக்தரான பலராம ரெட்டியார் அருணாசலத்தில் ஒடுங்கினார்.





ஸ்ரீ பகவான் – ஆச்ரமத்தில் சமையல் செய்த பெண்கள் மற்றும் ஆச்ரமவாசிகளுடன்

# 44 ஆச்ரமத்தில் சமையல் செய்த பெண்கள்

தனது வாழ்க்கையில் இரண்டு விஷயங்களுக்குப் பகவான் முக்கியத்துவம் கொடுத்திருந்தார். ஒன்று ஆத்மவிசாரம். இரண்டாவது ஸாதகர்களுடன் அமர்ந்து உண்ணாமல் ஆச்ரமத்திலிருந்து வெளியில் சென்றுவிடக் கூடாது என்பதுதான். ‘அனுதினமும் பகவான்’ மற்றும் ‘ரமணாச்ரமத்திலிருந்து கடிதங்கள்’ ஆகிய இரு புத்தகங்களையும் படிக்கும் போது அவற்றில், ‘எந்த நேரமாக இருந்தாலும் ஆச்ரமத்திற்கு வருபவர்கள் முதலில் உணவுக்கூடத்திற்கு செல்லும்படி கேட்டுக் கொள்ளப்படுவார்கள்’ என்று குறிப்பிடப்பட்டிருப்பது ஒரு சுவாரஸ்யமான விஷயமாகத் தோன்றும். உண்மையைச் சொல்லப் போனால் ஆச்ரமத்திற்கு வருபவர்கள் எந்த நேரமானாலும் சாப்பிட வேண்டுமென பகவான் எப்போதுமே ஏன் வற்புறுத்துகிறார்?’ என்று சில பக்தர்கள் அவரையே கூடக் காரணம் கேட்டிருக்கிறார்கள். “எனக்குப் பசி என்றால் என்னவென்று தெரியும்,” என்று மட்டுமே பகவான் பதிலளிப்பார். பகவான் நன்றாகச் சமையல் செய்வார். அதனால் சமையலுக்கும் முக்கியத்துவம் தந்தார். பிற்காலத்தில் ஸ்வாமி திரிவேணிகிரி என்று அழைக்கப்பட்ட ஸாது சுந்தரம் என்பவர் சில காலம் ஆச்ரம சமையல் பணியில் பகவானுக்கு உதவி செய்தார். “பகவானுடன் சமையலறையில் வேலை செய்வதென்பது சமையல் வேலை மட்டுமல்ல. நிச்சயமாக ஒருவித ஆன்மீக ஸாதனை அது, என்பதை நான் காலப்போக்கில் உணர்ந்து கொண்டேன்,” என்று அவர் கூறியுள்ளார்.

பகவான் சமையலறைக்கு வந்து சமையல் வேலையில் பங்கேற்ற போது கற்றுக் கொடுத்த முக்கியமான பாடம் — ஒருவர் இறைவனுடைய திட்டத்தில் நம்பிக்கை வைத்து முழுவதுமாக அதை ஏற்று நடக்க வேண்டும் என்பதுதான். இறைவனிடம் சரணடைந்து, அவன் நடத்திச் செல்லும் வழியில் செல்வதே இறையருளாகும். குறுகிய காலம் சமையலறையில், தான் பகவானுக்கு உதவி செய்த நாட்களை நினைவுகூர்ந்த போது அண்ணாமலை ஸ்வாமி, “ஒரு நாள் ஆச்ரமத்தில் உணவிற்கு வழியேதுமில்லாத நிலையில் எங்களிடம் இருந்த சில பொருட்களை வைத்துச் சமையல் செய்யத் துவங்கினார் பகவான். சமையலை முடிப்பதற்கு முன்னர் தேவையான மேலும் சில பொருட்களை அருணாசலர் அனுப்பி வைப்பார் என்ற நல்ல நம்பிக்கை அவருக்கு இருந்தது. காலை ஐந்தரை மணி இருக்கும். கை வசம் இருந்த ஒரு பிடி குருணையை பகவான் சுத்தம் செய்யத் துவங்கினார். ஒரு பாத்திரத்தில் அதை இட்டுக் கழுவி, கற்களை நீக்கிய பின் கும்மட்டி அடுப்பில் வேக வைத்தார். அந்த அரிசிக் குருணை ஒருவருக்குக் கூடப் போதுமானதாக இருக்கவில்லை என்பதால் அவருடைய செயலைக் கேள்விக்குறியுடன் நான் விநோதமாக நோக்கிய வண்ணமிருந்தேன். அரிசி கொதிக்க ஆரம்பித்தவுடன் ஒரு பக்தர் இரண்டு லிட்டர் பாலோடு வந்தார். அரிசிக் குருணை வெந்த பின்னர் வேறு ஒரு பெரிய பாத்திரத்தை அடுப்பில் ஏற்றிப் பாலையும் அரிசியையும் ஒன்றாகக் கொதிக்கச் செய்தார். சில நிமிடங்கள் கழித்து, வேறொரு பக்தர் உலர்ந்த திராட்சைகளையும் கற்கண்டையும் காணிக்கையாக அளித்தார். அவற்றையும் கழுவிப் பகவான் பாத்திரத்திலிட்டார். சுமார் ஆறரை மணிக்கு பகவானுடைய பாயசம் அநேகமாகத் தயாராகிவிட்ட போது கும்பகோணத்திலிருந்து ஒரு பக்தர் குழாம் ஒரு பெரிய பாத்திரத்தில் இட்லி, சட்னி, வடை, மலைப்பழம் இவற்றுடன் தொன்னைகளையும் எடுத்துக்கொண்டு வந்து சேர்ந்தனர். பாயசம் சாப்பிடுவதற்கு இந்தத் தொன்னைகள்தான் அப்போது எங்களுக்குத் தேவைப்பட்டன. பகவான் ஏழு மணிக்குக் குளித்துவிட்டு வந்த பின்னர் நாங்கள் அனைவரும் சம்பிரமமான சிற்றுண்டியைச் சாப்பிட்டோம்,” எனக் கூறினார்.

கீழ்க்காணும் விஷயங்களை நாம் பகிர்ந்து கொள்ள முடிகிறதென்றால் அதற்கு அவற்றைப் பதிவு செய்த 'சலம்' என்றழைக்கப்பட்ட குடிபட்டி வெங்கடாசலம் என்ற புகழ்பெற்ற தெலுங்கு எழுத்தாளர்தான் காரணம். அவர் ஆச்ரம அடுக்களை நிகழ்ச்சிகளைக் குறிப்பெடுக்காமல் விட்டிருந்தால் பகவானின் ஆசிகளைப் பெற்றிருந்த ரமணாச்ரம சமையல் கலைஞர்களுக்கு நாம் மரியாதையைக் கூடச் செலுத்தியிருக்க முடியாது.

'சலம்' அவற்றைத் தெலுங்கில் பதிவு செய்திருந்த விபரத்தை மும்பையிலிருந்த மாரிஸ் ஃப்ரீட்மன் அறிந்த போது அவர் அவற்றின் ஆங்கில மொழிபெயர்ப்புக்கு ஏற்பாடு செய்தார். ஆங்கில கையெழுத்துப் பிரதியை, தானே மீண்டும் எழுதி என்னிடம் கொண்டு வந்து கொடுத்தார். சிறந்த



**ஸ்ரீ பகவான் தனது ஜெயந்தி (பிறந்தநாள்) அன்று உணவு அருந்தும் போது**

ஸாதுவான அவருக்கு ஆச்ரமத்தின் பொருளாதார நிலைபற்றி நன்கு தெரியுமென்பதால் அதைப் பிரசுரிக்க முடியாது என்பதையும் அறிந்திருந்தார். அதனால் கையெழுத்துப் பிரதியைப் பற்றி ஒரு வார்த்தைகூடக் கூறாமல் வைத்துவிட்டுச் சென்றுவிட்டார்.

1979/80-ல் பகவான் பிறந்த நூற்றாண்டு விழாவைக் கொண்டாட இருந்ததால் பல பக்தர்களையும் சந்தித்து விழாவிற்கு நன்கொடை வசூல் செய்து வரும் பொருட்டு, நான் இந்தியா முழுவதும் சுற்றுப் பயணம் மேற்கொள்ள வேண்டுமென ஆச்ரம நிர்வாகம் ஏற்பாடு செய்திருந்தது. ஆதரவாளர்களிடமிருந்து விளம்பரங்கள் சேகரித்து அவற்றை விழா மலரில் பிரசுரிப்பதன் மூலம் பண வசூல் செய்வது என்பது ஒரு வழியாக இருந்தது. எனது மரியாதைக்குரிய நண்பரான T. S. நாகராஜன் என்னும் சிறந்த தொழிலதிபர் பெருந்தன்மையோடு அதன் முழுப் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டார். ஆனால் விழா மலரில் வெளியிடுவதற்குப் போதிய கட்டுரைகள் இல்லை என்பதை உணர்ந்து அது

பற்றி என்னிடம் தெரிவித்தார். மாரிஸ் ஃப்ரீட்மன் முன்பு விட்டுச் சென்ற அடுக்களை நிகழ்ச்சிகள் பற்றிய கையெழுத்துப் பிரதிகள் குறித்து எனக்கு ஞாபகமே இல்லாததால் ஆவண அறையில் ஏதாவது கிடைக்குமா என தேடிப் பார்க்குமாறு கூறினேன். அங்கு தேடிய போது மாரிஸ் தந்த பிரதிகள் கிடைக்கவே அவற்றைப் பிரசுரித்தார் நாகராஜன். மாரிஸ் ஃப்ரீட்மன், சலம் மற்றும் T. S. நாகராஜன் ஆகிய மூவருக்குமே நான் கடமைப்பட்டுள்ளேன். அவர்களுடைய உதவியால்தான் ஆச்ரமத்தின் எளிமையான சமையல் கலைஞர்கள் பற்றி இன்று நாம் அறிந்து கொள்ள முடிகிறது.

வாசகர்கள் தாங்கள் படிப்பது ஏதோ கதைகள் என்றோ சிறு சிறு சம்பவங்கள் என்றோ கருதக்கூடாது. கடவுளுடன் வாழ்ந்த மக்கள் சிலர் தங்கள் அனுபவங்களை நம்மோடு பகிர்ந்து கொள்கிறார்கள் என்பதை நினைவில் கொள்ள வேண்டும். தான் பகவானுடன் சமையலறையில் பணியாற்றிய நாட்களைப் பற்றி நினைவு கூறும்போது, “பகவான் அந்த சமயத்தில் சிறியதாக இருந்த சமையலறையின் நடுவே அமர்ந்தபடி நாங்கள் வேலை செய்வதைக் கவனித்துக் கொண்டும் யோசனைகள் கூறிக்கொண்டும் இருப்பார். நான் சமையலறையில் எங்கு செல்ல வேண்டுமானாலும், அவரைச் சுற்றிச் சுற்றியே தான் செல்ல வேண்டியிருந்தது. இவ்வாறு ஒரு நாளில் பகவானைப் பலமுறை பிரதக்ஷிணம் செய்து விடுவேன். அவர் எனது கடவுள் இல்லையா? அடுக்களையின் நடுவே அவர் அமர்வதற்கு நான் எவ்வளவு பாக்கியம் செய்திருக்க வேண்டும்? பரிமாறப்படுவதற்கு முன் பகவான் எல்லா உணவுப் பதார்த்தங்களையும் ருசி பார்ப்பார். அதனால் எல்லோருக்குமே பவித்திரமாக்கப்பட்ட, பகவானது புனித பிரஸாதமே வழங்கப்பட்டது,” என சமையல் செய்த பெண் பக்தர் கூறியுள்ளார். இன்றும் கூட ரமணாச்ரமத்தில் அளிக்கப்படும் உணவு மிகவும் புனிதமானதுதான். ஏனெனில் பகவானுடைய ஸாந்நித்தியம் — ஸ்பர்சம் அங்கு எப்போதுமே உள்ளது.



# 45 சாந்தம்மாள்



அடுத்ததாக நாம் காணப் போவது என்னோடு நெருங்கிப் பழகிய சாந்தம்மாள் என்பவரைப் பற்றியாகும். அந்தச் சமயத்தில் அவருடைய பெருமை எனக்குத் தெரியாது போனாலும், அவருடன் ஸத்ஸங்கத்தில் ஈடுபடும் பாக்கியத்தை நான் பெற்றிருந்தேன் என்பதை இப்போது உணருகிறேன். மாரிஸ் ஃப்ரீட்மனுடைய கையெழுத்துப் பிரதிகளை வாசித்த பிறகே சாந்தம்மாளின் ஆன்மீகப் பெருமைகளை நான் புரிந்து கொண்டேன். பகவான் 1922-ல் ஸ்கந்தாச்ரமத்திலிருந்து இறங்கி வந்துவிட்டார். அப்போது தொடங்கி 1928 வரை சமையல் வேலைக்குத் தலைமைப் பொறுப்பை ஏற்றிருந்த சின்னஸ்வாமியோடு சேர்த்து நான்கைந்து பேர்தான் அங்கு தங்கியிருந்தார்கள். மற்றவர்கள் சில நாட்களுக்கு மட்டும் வந்து உதவி செய்து விட்டு அவர்களது வீட்டிற்குத் திரும்பி விடுவார்கள். 1928-ல் சின்னஸ்வாமிக்கு உதவி செய்ய வந்த சாந்தம்மாள் பின்னர் ரமணாச்ரமத்தை விட்டுப் போகவில்லை.

தனது கணவனையும் மூன்று மகன்களையும் இழந்து விட்ட விதவையான சாந்தம்மாளுக்கு ஒரே ஒரு மகள் மட்டும் இருந்தாள். மிகவும் கஷ்டப்பட்டு அவளுக்குத் திருமணம் செய்து வைத்தார். வருந்தத்தக்க விதத்தில் பிரசவத்தின் போது மகளும் இறந்து போனாள். ஆக அவருக்கு சுற்றம், பொருட்கள் போன்ற பற்றுக்கோடுகள் எதுவுமின்றி போனது. மிகவும் ஏழ்மையில் இருந்தபடியால் உறவினர் வீடுகளில் சமையலுக்கு உதவி செய்து வந்தார். ஒரு நாள் அவரது மைத்துனர் வீட்டில் உலை நீர் கொதித்துக் கொண்டிருப்பதற்கிடையில், "சாந்தம்மாள்! நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்? உன் குழந்தைகளோ இறந்து விட்டார்கள். இந்தப் பொறுப்புக்களை ஏன் வலுக்கட்டாயமாகச் சுமக்கிறாய்? யாருக்குத் தொண்டு செய்கிறாய்? நீ யார்?" என்பதாக அவரது உள் உணர்வு பல கேள்விகளை எழுப்பியது. இவை வெறும் எண்ணங்கள் மட்டுமல்ல. அவரது ஆழ்மனத்தில் தீவிரமாக உணர்த்தப்பட்ட, அவருக்கு வர இருக்கும் குருவினது கட்டளைகளே அவை. இதன் விளைவாக அவர் மைத்துனர் வீட்டை விட்டு இராமநாதபுரம் சென்றார். அங்கு தனது நண்பர் முருகனாரின் இல்லத்தில் நுழைந்து அவரது அறைக்குள் சென்றபோது, பகவானது படத்தை முதன் முதலாகப் பார்த்தார். அது அவரைக் கவர்ந்ததோடு அழைப்பது போல் தோன்றியது. "இதோ, என் கடவுள் இருக்கிறாரே! இத்தனை காலமாக அதை நான் எவ்வாறு தெரிந்து கொள்ளாமல் இருந்தேன்?" என்று எண்ணினார். அருணாசலத்திற்குச் செல்வதில் ஆர்வம் இருந்தபோதும் பிரயாணத்திற்குத் தேவையான பண வசதி அவரிடம் இருக்கவில்லை. 1927-ம் ஆண்டில் இராமநாதபுரத்திலிருந்து கார்த்திகைத் திருவிழாவையொட்டி அருணாசலத்திற்குச் சென்று கொண்டிருந்த ஒரு குழுவினர் தெய்வாதீனமாக, பிரயாணச் செலவுக்கு பணத்தையும் தந்து, சாந்தம்மாளையும் உடன் அழைத்துச் சென்றனர்.

அந்தக் குழுவினருடன் அருணாசலத்தில் சாந்தம்மாள் 40 நாட்களுக்குத் தங்கியிருந்தார். ஒவ்வொரு நாளும் ரமணாச்ரமம் சென்று அங்கு பகவானுடைய ஸாந்நித்தியத்தில் திளைத்த அவர், பகவானிடம் "இன்று நான் பெறும் பேறு அடைந்தேன். என்னுடைய தெய்வத்தின் முன் நான் நிற்கிறேன். வாழ்வில் என் கனவு நனவாகி விட்டது. உங்கள் ஸந்நிதியில் நான் சொர்க்கத்தில் இருக்கிறேன். ஆனால் உங்களை விட்டுச் சென்ற பின்னும் எனது மனம் என்னைத் தொந்தரவு

செய்யாத விதத்தில் அனுக்ரஹிக்க வேண்டும்,'' என்று ப்ரார்த்தித்துக் கொண்டார். பகவான், அருகில் நின்று கொண்டிருந்த கூச்ச சுபாவமுள்ள முருகனாரைப் பார்த்து, ''மனம் என ஒன்று உள்ளதா? என்பதை அந்த அம்மாளிடம் பார்க்கச் சொல்லுங்கள். அப்படி இருந்தால் அதன் உருவம் எத்தகையது? அதற்குத் தாடியும், மீசையும் உள்ளதா?'' என்று கேட்கச் சொன்னார். இதைச் செவியுற்ற சாந்தம்மாள் பேசாமல் நிற்கவே, முருகனார் அவரை நோக்கி ''பகவான் ஆத்ம விசாரத்திற்கான தீக்ஷையை உங்களுக்கு அளித்துள்ளார் என்பதை நீங்கள் புரிந்து கொள்ளவில்லையா?'' என்று குறுக்கிட்டு வினவினார். பகவான் கூறியதில் அடங்கியிருந்த ஆன்மீகத் தத்துவத்தை சாந்தம்மாளால் உடனே கிரஹித்துக் கொள்ள முடியவில்லையென்ற போதும், பக்திப் பரவசத்தில் ஆழ்ந்து ரமண ஸ்துதி பஞ்சகத்திலிருந்து ஒரு பாடலைப் பாடினார்:

பொன்னொளிர் வடிவினானே பூரண வதனத் தானே
தன்னருஞ் சுவாநு பூதி தரையெலா மணக்க வேழை
உன்னரும் புகழைக் கேட்டிவ் வுலகெலாந் தேடிவந்தேன்
என்னரு ளிறையே ஞான ரமணனே ஜோதிக் குன்றே!

இந்தப் பாடல் சத்தியமங்கலம் வேங்கடராமையா என்பவரால் விரூபாக்ஷ குகையில் 1910-ம் ஆண்டில் எழுதப்பட்டதாகும். இது சாந்தம்மாள் இருந்த நிலைக்கும் நம் அனைவருக்குமே மிக அழகாகப் பொருந்தும். இந்தக்கணத்திலேயே பகவானுடன் ஸங்கம் வைத்து கொள்ளக் கூடிய இந்த வாய்ப்பை நாம் பெற்றுள்ளோம். ஆத்மாவின் நேரடி அனுபவமான ஆழ்ந்த மௌனமேதான் அவர். வேறெதுவுமில்லை. விடைபெறச் சென்ற சாந்தம்மாளிடம், ''முக்கியமான உபதேசங்களடங்கிய 30 பாடல்களைக் கொண்ட 'உபதேச ஸாரம்' நாளை வெளியாகும். நீங்கள் இன்னும் ஒரு நாள் இங்கு தங்கினால் உங்களுக்கு அந்தப் புத்தகத்தைத் தருகிறேன்,'' என்று பகவான் கூறினார். பகவான் கூறியபடி உபதேச ஸாரத்தின் ஒரு பிரதியை பகவானிடமிருந்தே மறுதினம் அவர் பெற்றுக் கொண்டார். விடைபெறும் சமயத்தில் பொங்கிய கண்ணீரைத் தடுக்க முடியாமல் நின்ற சாந்தம்மாளை சமாதானம் செய்யும் வகையாக, ''நீங்கள் அழ வேண்டாம்! அருணாசலத்தை விட்டு நீங்கள் போகப் போவதில்லை. சென்று விரைவில் மீண்டும் வாருங்கள்,'' என்று பகவான் கூறியருளினார்.

துரதிருஷ்டவசமாக ஒரு வருஷத்திற்கு சாந்தம்மாளால் அருணாசலத்திற்கு வர இயலவில்லை. இதற்கிடையில், பகவானுடைய பிறந்த நாள் விழாவிற்கான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. பகவான் ஸர்வாதிகாரியை அழைத்து சாந்தம்மாளுக்கும் ஒரு அழைப்பிதழ் அனுப்பி வைக்குமாறு கூறினார். அந்தச் சமயத்தில் சாந்தம்மாள் யாரென்பதே பலருக்கும் தெரியாத நிலையில் கேட்பாரற்ற ஏழை விதவையாக இருந்தார். குருவுக்கும் சிஷ்யைக்கும் இடையே இருந்த இடைவெளியை நீக்கும் வகையில் பகவான் அக்கறை காட்டியது சாந்தம்மாளை நெகிழச் செய்தது. பலரிடம் கடனைப் பெற்று இறுதியில் 1928-ல் நிரந்தரமாக ரமணாச்ரமத்திற்கு வந்து விட்டார். அவர் ஆச்ரமத்தினுள் நுழைந்த போது மெய்ப்பொருளைப் பற்றிய 40 பாடல்களைக் கொண்ட 'உள்ளது நாற்பதை' பகவான் விளக்கிக் கொண்டிருந்தார். சாந்தம்மாளைக் கண்டதும் சற்று நிறுத்திவிட்டு ''உங்களுக்கு இதில் ஒரு பிரதி அனுப்புமாறு நான் கூறியிருந்தேன். வந்து சேர்ந்ததா?'' என்று அவரைப் பார்த்துக் கேட்டார். பகவானது தனிப்பட்ட கவனமும் கருணையும் சாந்தம்மாள் இதயத்தை வெகுவாகத் தொட்டது. ''என் குருவோடு தங்கி அவருக்கு சமையல் செய்து கொடுப்பேன். அவரை விட்டு வேறெங்கும் செல்ல மாட்டேன்,'' என்ற விரதம் பூண்டார் சாந்தம்மாள்.

மறுநாள் "பகவானே! நான் உங்களிடம் இருக்கும் வரை என் மனம் அமைதியாக உள்ளது. உங்களை விட்டு அகன்றால் என் அமைதி குலைந்து விடுகிறது. நான் என்ன செய்வது?" என்று சாந்தம்மாள் வினவினார். அதற்கு பகவான், "மனம் அமைதி அடையும் வரை இங்கேயே இருங்கள்," என்று அருளினார். மறுதினம் காலையில் சிகிச்சை நிமித்தமாகச் சின்னஸ்வாமி சில நாட்களுக்குச் சென்னைக்குச் செல்ல வேண்டியிருந்தது. அவர் இல்லாத சமயத்தில் ஆச்ரமத்தில் சமைப்பதற்கு யாரும் இருக்க மாட்டார்கள் என்பதால் சாந்தம்மாள் அந்தப் பணியை ஏற்றுக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளப்பட்டார். தன்னுடைய கனவே பகவானுடன் தங்கி அவருக்குச் சமைப்பது தான் என்று அவர் கூறினார். இதுவே அவருக்கு ஒரு பொன்னான வாய்ப்பாக அமைந்தது. முதல் நாளே சாந்தம்மாளை அடுக்களையில் தனியாகப் பணியாற்ற விட வேண்டாமென்று பகவான், அவளுக்கு உதவியாகத் தானும் வேலையில் இறங்கினார். சிறந்த சமையல்காரராக இருந்ததோடு தனது பக்தர்களின் அஹங்காரத்தைப் பக்குவப்படுத்தி அருணாசலத்திற்கு உணவாகத் தருவதில் சிறந்த ஆன்மீகச் சமையல் தலைவராகவும் பகவான் விளங்கினார். காவ்யகண்ட கணபதி முனி ஒரு பாடலில் "ஹே பகவான்! நீங்கள் ஒரு சிறந்த சமையல் கலைஞர். ஆனால் அசைவ உணவு சமைப்பவராக இருக்கிறீர்கள். எங்களுடைய அஹங்காரத்தையெல்லாம் பக்குவப்படுத்தி உங்களுடைய தந்தை அருணாசலத்திற்கு உணவாக அளிக்கிறீர்கள்," என்று கூறியுள்ளார்.

ஒரு முறை எண்ணெய் வைத்திருந்த பாத்திரம் ஒழுக ஆரம்பித்தபோது அதற்குப் பதிலாக மற்றொரு பாத்திரத்தை எவ்வளவு தேடியும் கிடைக்காததால் சாந்தம்மாள் சற்று சிரமத்திற்குள்ளானார். விஷயத்தை பகவானிடம் கூறி எண்ணெய் வைப்பதற்கு மற்றொரு பாத்திரம் கிடைத்தால் வேலை சற்று சுலபமாகும் என்று தெரிவித்த போது அவர் பதில் எதுவும் கூறவில்லை. பத்து நாட்களுக்குள் ரயில் மூலம் யாரோ ஒருவர் தன் பெயர், விலாசம் தெரிவிக்காமல் ரமணாச்ரமத்திற்கு ஆறு பெரிய ஜாடிகள் அனுப்பி வைத்திருந்தார். பிறகு அவை ரயில் நிலையத்திலிருந்து ஆச்ரமத்திற்கு கொண்டு வரப்பட்டன. இன்றும் கூட அவை எங்கிருந்து வந்தன என்று யாருக்கும் தெரியாது. பகவான் சாந்தம்மாளை அழைத்து "நீங்கள் ஒரு ஜாடி கேட்டீர்கள். இங்கு ஆறு ஜாடிகள் வந்துள்ளன," என்று தெரிவித்தார். மற்றொரு சமயம் சாந்தம்மாளுக்குப் பணம் தேவையாக இருந்தது. மூன்று தினங்களுக்குள் அவருக்குத் தேவைப்பட்ட அதே தொகை மணியார்டர் மூலம் வந்து சேர்ந்தது. பகவான் ரமணரைப் பற்றி செய்தித் தாளில் வந்திருந்த ஒரு கட்டுரையைப் படித்த ஸ்ரீனிவாச ராவ் என்பவர் அதை அனுப்பியிருந்தார். அந்தக் கட்டுரையில், பகவானுக்கு சேவை செய்வதற்காக சாந்தம்மாள் என்ற சமையல் செய்யும் பெண்மணி ஆச்ரமத்திற்கு வந்துள்ளார் என்ற விஷயத்தைப் படித்த போது, சாந்தம்மாளுக்குச் சிறிது பணம் அனுப்ப வேண்டுமென்று தோன்றியதால், தான் பணம் அனுப்பியதாக ஸ்ரீனிவாச ராவ் கடிதத்தில் தெரிவித்திருந்தார். இந்த இரண்டு நிகழ்ச்சிகளும், 'ஒருவருக்கு குருவிடம் பரிபூரண நம்பிக்கை மட்டும் இருந்தால், அதுவே போதுமானது என்று நிரூபிக்கின்றன' என்பதைச் சாந்தம்மாள் என்னிடம் பின்னர் நினைவு கூர்ந்தார்.

ஒரு நாள் பகவானும் சாந்தம்மாளும் அடுக்களையில் சமையல் வேலையில் ஈடுபட்டிருந்தனர். குறைவான தண்ணீரில் வெந்து கொண்டிருந்த காயை விடாமல் கிளறிக் கொண்டிருந்த பகவான், திடீரென்று கிளறுவதை நிறுத்திவிட்டுச் சாந்தம்மாளைப் பார்த்தார். உடனே சாந்தம்மாள் அமைதியுற்றார். எல்லாம் அற்றுப்போய், அவருள் பூரண சாந்தியும், ஆனந்தமும் நிறைந்தது. சிறிது நேரத்திற்குப் பின், பகவான் அசையத் தொடங்கிய போது சாந்தம்மாள் மீண்டும் தன் சுய நிலையை அடைந்தார். அப்போது பாத்திரத்தில் வெந்து கொண்டிருந்த காயை நோக்கி, "இது முழுமையாக



**ஸ்ரீ பகவானுக்குப் பின்னால் நிற்பது சாந்தம்மாள்**

பக்குவமடைந்து ஓசை அடங்கி விட்டது. இப்போது வாசனை சாமான்களை அதில் சேர்க்கலாம்,'' என்று கூறினார் பகவான். முதலில் மனதின் ஓசையை அடங்கச் செய்து, பின் அதில் ஞானமாகிய வாசனை திரவியத்தைச் சேர்க்க வேண்டும் என்பது தான் பகவான் கூறியதன் பொருள் என்பதை சாந்தம்மாள் புரிந்து கொண்டார். இவ்வாறுதான், அன்றாட வேலைகள் செய்யும் போதே உபதேசங்களை பகவான் சேர்த்து அளித்தார். மற்றொரு சமயம், சாந்தம்மாள் ஒரு வகை உணவைத் தயாரித்து முடித்த பின் பகவான் சமையலறையில் நுழைந்தார். உடனே பகவானிடம் தான் சமைத்த உணவை ருசி பார்க்குமாறு சொல்ல, ''அரசர்களுக்கு உணவை ருசி பார்ப்பதற்கு என்றே அதிக ஊதியம் கொடுத்து ஆட்களை அமர்த்துவார்கள்,'' என்று வேடிக்கையாகக் கூறிவிட்டு ''சாந்தம்மாள்! நீங்கள் என்னிடம் அதைத்தான் செய்யச் சொல்கிறீர்கள். எனக்கு என்ன சம்பளம் தருவீர்கள்?'' என்று கேட்டார். ''பகவானே! நான் ஒரு பிச்சைக்காரி! என்னை மட்டுமேதான் என்னால் தர முடியும்,'' என்று சாந்தம்மாள் பதிலளித்தார். அவருடைய சரணாகதியை மனப்பூர்வமாக பகவான் ஏற்றுக் கொண்டார். உணவு பதார்த்தங்கள் மிகவும் ருசியாக இருந்ததோடு மட்டுமல்லாமல், அவை பூரணமாக சரணடைந்த ஒரு ஜீவனால் தயாரிக்கப்பட்டது என்ற காரணத்தால், சாந்தம்மாளின் சமையலை எல்லோருமே விரும்பினார்கள்.

ஹாலில் நடைபெற்ற ஒரு சுவையான நிகழ்ச்சி குறித்து நினைவு கூர்ந்த போது ''ஒரு முறை, முன்பின் அறிமுகமில்லாத ஒரு ஆங்கிலேயர் குதிரை வண்டியில் வந்திறங்கி, நேராக ஹாலுக்குள் நுழைந்தார். அங்கு ஏதோ எழுதப்பட்டிருந்த ஒரு துண்டு காகிதத்தை பகவானிடம் கொடுத்தார். பகவான் அதைப் படித்துவிட்டு, அந்த மனிதரை நிமிர்ந்து பார்த்தவுடனேயே அவர் கண்களை

மூடியவாறு அமைதியுற்றார். சிறிது நேரத்திற்கு பிறகு பகவானும் கண்களை மூடினார். இருவரும் ஒன்றாக மௌனத்தில் ஆழ்ந்தனர். அவர்களைச் சுற்றியிருந்த சிலரும் அமைதியில் மூழ்கினர். வழக்கம் போல் மதிய உணவிற்கான அறிவிப்புமணி பதினோரு மணிக்கு ஒலித்தது. ஆனால் பகவானும் ஆங்கிலேயரும் அசையவில்லை. பன்னிரெண்டு மணிக்கு இருவரும் கண்ணைத் திறந்தனர். அந்த ஆங்கிலேயர் பரவச நிலையில் வெளியே சென்றார் என்று சாந்தம்மாள் கூறினார். “எந்த அளவு பாத்திரத்தைக் கடலுக்கு எடுத்துச் செல்கிறீர்களோ அந்த அளவு தண்ணீர்தான் உங்களால் எடுத்து வர முடியும். நீங்கள் எடுத்துச் செல்வது ஒரு சிறிய கோப்பையாக இருக்கும் பட்சத்தில் ஒரு கோப்பைத் தண்ணீரையே உங்களால் எடுத்து வர முடியும். அதுவே ஒரு வாளியாக இருந்தால் ஒரு வாளித் தண்ணீரை எடுத்து வரலாம். கடலை ஒட்டு மொத்தமாகக் கொள்ளையடியுங்கள்,” என்று பகவான் ஒரு முறை கூறியதைச் சாந்தம்மாள் எடுத்துரைத்து, “அறிமுகமில்லாத அந்த ஆங்கிலேயர் கடலை மொத்தமாக கொள்ளையடிப்பதற்காகவே வந்தவர். பகவானுடைய அருளை முழுதும் பெற அவர் எவ்வளவு புண்ணியம் செய்திருக்க வேண்டும்,” என்று சாந்தம்மாள் என்னிடம் தெரிவித்தார்.

ஒரு இந்து ஸந்நியாசியைப் பற்றிய சுவையான நிகழ்ச்சி ஒன்றையும் சாந்தம்மாள் குறித்து வைத்திருந்தார். “ஒரு முறை வயதான வட இந்திய ஸந்நியாசி ஒருவர் ரமணாச்ரமத்திற்கு வந்து அங்கு சில வாரங்கள் தங்கியிருந்தார். ஆச்ரமத்தை விட்டுக் கிளம்பும் நாளில் அவர் பகவான் முன் வந்து நின்று, “பகவானே! ரமணாச்ரமத்தில் அனைத்துமே எனக்குத் திருப்தியளித்தன. நான் இப்போது புறப்படத் தயாராக இருக்கிறேன். எனது இதய பூர்வமான விருப்பத்தைப் பூர்த்தி செய்யுங்கள்,” என்று கூறியவுடனே அதுவரை ஒருபோதும் செய்யாத விதத்தில் எழுந்து நின்று துறவியை நோக்கி நடந்து வந்து பகவான் அவரைத் தொட்டார். அந்த நிலையில் சிறிது நேரம் இருவரும் நின்ற பின்னர் அந்தத் துறவி கண்ணீர் பெருக பகவானின் பாதங்களில் ஸாஷ்டாங்கமாக வீழ்ந்து வணங்கினார். முகத்தில் கண்கவரும் புன்னகையோடு பரவச நிலையில் அவர் பகவானை விட்டுச் சென்றார்,” என்று சாந்தம்மாள் குறிப்பிட்டிருந்தார்.

சாந்தம்மாள் குறித்து வைத்திருந்த மைசூர் மஹாராஜா சம்பந்தப்பட்ட மற்றொரு நிகழ்ச்சி வேறு புத்தகங்கள் எதிலும் காணப்படவில்லை. ஆங்கிலேயருடைய ஆட்சிக் காலத்தில் இந்தியாவில், 300-க்கும் அதிகமான ராஜ்யங்கள் இருந்தன. அரசன், அரசி, அரண்மனை, படைகள் என்று எல்லாமே ஒவ்வொரு ராஜ்யத்திற்கும் தனித்தனியாக இருந்தன. இவற்றில் ஹைதராபாதும், மைசூரும் மிகப் பெரிய அளவிலான ராஜ்யங்கள். கலைகளையும், பண்பாட்டையும் போஷித்து வந்த மைசூர் மஹாராஜா ஒரு சிறந்த கல்விமான். தன்னுடைய வரவை யாருக்கும் தெரிவிக்க விரும்பாமல், ஒரு நாள் நள்ளிரவில் பகவானைக் காண வந்து, மறுதினம் அதிகாலையிலேயே அவர் திரும்பிச் சென்று விட்டார். அவர் பகவானைத் தனிமையில் சந்திக்க விரும்பினார். ஆனால் பகவான் அதுவரை யாரையுமே தனிமையில் சந்தித்தது இல்லை. பகவான் ஹாலில் இருந்த போதோ, மலைமீது நடக்கச் சென்ற போதோ, எப்போதும் பக்தர்கள் உடன் இருப்பார்கள். அதனால் எட்டடிக்கு எட்டடி இருந்த தனது குளியலறையில் அவர் மஹாராஜாவைச் சந்திக்க அனுப்பினார். குளியலறையில் மஹாராஜா தனது காலில் விழுந்து வணங்கியதாகவும், ஆறாகப் பெருகிய அவரது கண்ணீர் தன்னுடைய பாதங்களை நனைத்ததாகவும் பகவான், பின்னர் சாந்தம்மாளிடம் தெரிவித்துள்ளார். பிறகு மஹாராஜா எழுந்து, “பகவானே! என்னை வற்புறுத்தி அரசனாக்கி அரியணையில் அமர்த்தியுள்ளனர். அதனால் என்னால் உங்களோடு தங்கி, உங்களது ஸாந்நித்தியத்தை அனுபவிக்க முடியவில்லை. எனக்குக் கிடைத்துள்ள இந்தச் சில நொடிகளே என்னுடைய வாழ்க்கையில் விலை

மதிப்பற்றவையாகும். இதற்குப் பிறகு, என்னால் உங்களைக் காண வர இயலாது. தயவு செய்து என்னை ஆசீர்வதியுங்கள்!'' என்று மஹாராஜா கூறியதாகவும், பகவானே இந்த நிகழ்ச்சி பற்றி அவரிடம் பகிர்ந்து கொண்டதாகவும் சாந்தம்மாள் என்னிடம் தெரிவித்தார். தொடர்ந்து சாந்தம்மாள் மஹாராஜாவைப் பற்றி பகவானிடம் கேட்டபோது ஒரே வாக்கியத்தில் 'அவர் ஒரு பழுத்த பழம்' என்று மட்டும் பகவான் உரைத்ததாகத் தெரிகிறது.

ஆண்டுதோறும் திருவண்ணாமலையில் கார்த்திகை தீபத் திருவிழா பத்து நாட்களுக்கு மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படும். அருணாசலேச்வரரின் விக்ரஹம் நகர வீதிகளில் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்படும். அந்த கண்கொள்ளாக் காட்சியைக் காண்பதற்கு ஆயிரக் கணக்கான பக்தர்கள் கூட்டமாக வருவார்கள். இந்த பக்தர்களில் பிச்சைக்காரர்கள், ஸாதுக்கள், ஸந்நியாசிகள் எல்லோருமே அடங்குவர். அவர்கள் அனைவரும் ரமணாச்ரமத்திற்கு உணவு உண்ண வருவார்கள். அவர்கள் எல்லோருக்குமே உணவளிக்கப்படும் என்றாலும், ஒரு குறிப்பிட்ட வருஷத்தில் கூட்டம் கட்டுக்கடங்காமல் போய்விட்டதாக ஆச்ரமத் தொண்டர்கள் கருதினார்கள். அதனால் அவர்களுக்கு உணவு அளிப்பதை நிறுத்த வேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டது. இந்த முடிவு எடுக்கப்பட்ட அன்று இரவு சாந்தம்மாளுக்கு ஒரு கனவு வந்தது. அந்தக் கனவில், தான் பகவானுடைய ஹாலில் அமர்ந்திருப்பதாகவும், பகவானுக்கு வெகு அருகில் பூச்சி ஏதோ பறப்பது போன்றும் திடீரென்று அவருக்குத் தோன்றியது. மெதுவாக அந்தப் பூச்சி பெரிதாகிக் கொண்டே வந்து இறக்கைகளோடு கூடிய பெரிய சிவப்புக் குதிரையாக மாறியது போன்று உணர்ந்தார். முதலில் பகவானைச் சுற்றிப் போன அந்தக் குதிரை, பின் ஆச்ரமம் முழுவதையும் சுற்றிவிட்டு இறுதியாக பகவானிடம் வந்து பின்னர் மறைந்து விட்டது. மறுதினம் அந்தக் கனவின் பொருள் என்னவென்று அறியும் ஆவலோடு சாந்தம்மாள் பகவானை அணுகினார். பகவான், ''கார்த்திகைத் திருவிழா சமயத்தில் தேவ தேவியரும் தேவர்களும் பிச்சைக்காரர்களாகவும், ஸாதுக்களாகவும் உருமாறி திருவண்ணாமலைக்கு வருவார்கள். அதனால் அவர்களுக்கு உணவு அளிப்பது நமக்குக் கிடைக்கும் பெறும் பாக்கியம்,'' என்று விளக்கினார். மறுதினம் காலையில் பகவான் கூறிய விஷயத்தை சாந்தம்மாள் சின்ன ஸ்வாமியிடம் கூறவும் அவர் திருவிழா பத்து நாட்களிலும் பிச்சைக்காரர்களுக்கும், ஸாதுக்களுக்கும் உணவு அளிப்பதற்கான ஏற்பாடுகளை உடனே செய்தார்.

சாந்தம்மாள் அவ்வப்போது பிரகாசமான ஒளியைக் காண்பதுண்டு. ''நான் முதன்முதலில் பகவானிடம் வந்தபோது சூரியனைப் போன்ற பிரகாசமான ஒளிக்கு நடுவில் பகவானைக் கண்டேன். அதன் பின்னர் எனது புருவ மத்தியில் ஒளியைக் காண்பது வழக்கம். மற்றொரு முறை பிரகாசமான வெளிச்சம் பகவானுடைய தலையிலிருந்து வெளிவந்து ஹால் முழுவதும் நிரம்பியதைக் கண்டேன். அந்த வெளிச்சத்தில் பகவான் உட்பட அனைத்தும் மறைந்து போன நிலையில் 'நான் இருக்கிறேன்' என்ற உணர்வு மட்டும் பிரகாசமான ஒரு சூன்யம் போல மிதந்தது. இதைப் பகவானிடம் நான் தெரிவித்தபோது, 'இத்தகைய காட்சிகள் வருவது ஸஹஜம் தான்' என்று அவர் தெரிவித்தார். ''தான் எவ்வாறு இருக்கிறோம் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டுமானால் ஒருவர் கண்ணாடியைப் பார்க்க வேண்டும். ஆனாலும் அவர், அதில் தெரியும் பிரதிபிம்பமே தான் என்று கருதக் கூடாது. புலன்களாலும், மனதாலும் அறிந்து கொள்ளப்படும் எதுவும் ஒருபோதும் உண்மையில்லை. தோற்றங்கள் அனைத்துமே மனதால் படைக்கப்படுகின்றன. அவற்றை உண்மையென்று நம்பினால் ஆன்மீக முன்னேற்றம் தடைப்படும். யாருக்கு அந்தக் காட்சி தோன்றியது என்பதை விசாரித்து ஸாக்ஷியாக நிற்பது யார்? என்று கண்டறிய வேண்டும். அனைத்து எண்ணங்களையும் துறந்து தூய

உணர்வில் நிலை நின்று அதனின்று விலகாமல் இருத்தல் வேண்டும்,'' என்று பகவான் கூறியதாக சாந்தம்மாள் தெரிவித்தார்.

சாந்தம்மாள் கூறிய மற்றுமொரு நிகழ்ச்சி : ஒரு முறை இந்தியாவின் வடமூலையிலிருந்து ஆச்ரமத்திற்கு வந்த ஒருவர் சில வாரங்கள் அங்கு தங்கினார். அவர் விடைபெற்ற நாளன்று பகவான் முன் நின்று, ''பகவானே! நான் வெகு தூரம் செல்கிறேன். என்னால் எப்போது திரும்பி வர முடியும் என்பது எனக்குத் தெரியாது. தங்களுடைய இடைவிடா ஸாந்நித்தியத்தினால் பலர் பயனடைகிறார்கள். ஆனால் அந்த பாக்கியம் எனக்கு இல்லை. வெகு தொலைவிலுள்ள பாபியான என்னை நீங்கள் நினைக்காவிட்டால் எவ்வாறு என்னைக் காப்பாற்ற முடியும்? அதனால் உங்கள் மனதில் எனக்கு இடம் தர வேண்டும் என்று மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன்,'' என்று கூறவும் பகவான், ''ஒரு ஞானிக்கு மனமேயில்லை. மனமில்லாத ஒருவரால் எவ்வாறு நினைக்கவும், ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவும் முடியும்? அதனால் இந்தப் பிரார்த்தனைகளை என்னால் எவ்வாறு நினைவில் வைத்துக் கொள்ள முடியும்? அவற்றை பரமேச்வரனிடம் தெரிவித்து விடுகிறேன். அந்தப் பொறுப்பு அவருடையது என்பதால் அவர் உங்களைப் பார்த்துக் கொள்வார்,'' என்று கூறி அனுப்பினார். அந்த பக்தர் சென்ற பிறகு பகவான் எங்களை நோக்கி, ''ஒரு ஞானியைச் சூழ்ந்து இருப்பவர்களுக்கு விசேஷ கவனம் கிடைப்பதாக மக்கள் கற்பனை செய்து கொள்கிறார்கள். பாரபட்சமாக இருந்தால் குரு எவ்வாறு ஞானியாக இருக்க முடியும்? முகஸ்துதியால் மகிழ ஞானி என்ன, ஒரு முட்டாளா? தூரம் என்பது ஒரு பொருட்டா? யார் ஒருவர் தன்னையே முழுமையாகத் தந்து, தனது அஹங்காரத்தை முற்றிலுமாக அழித்து விடுகிறாரோ அதுவே குருவிற்கு மகிழ்வூட்டும். அத்தகைய ஒருவர் எங்கிருந்தாலும் அவர் காப்பாற்றப்படுகிறார். எவ்விதப் பிரார்த்தனையையும் அவர் செய்ய வேண்டிய அவசியமில்லை. கேட்காமலே பகவானால் அவர் ரக்ஷிக்கப்படுகிறார், என்று கூறினார். பின்னர் தாமரைத் தண்டினடியில் தண்ணீரில் எப்போதும் வாழும் தவளையின் உபமானத்தை பகவான் கூறினார்: தவளை தொடர்ந்து மலரின் அருகில் இருந்த போதும், அதன் தேனை அருந்துவது தேனீக்களே. வெகு தூரத்திலிருந்து வந்து தேனை அருந்தி மீண்டும் பறந்து போய்விடுகின்றன. அவர்களே பாக்கியசாலிகள்.

மற்றொரு சமயம் தென்கோடியிலிருந்து இரண்டு பெண்மணிகள் பகவானைக் காண வந்தனர். ஒருவர் குருவாகவும் மற்றவர் சீடரைப் போன்றும் பாவனை செய்தனர். ஹாலுக்குள் நுழைந்த பின்னர், சீடர் ஒரு பெரிய ஆசனத்தைத் தனது குருவிற்காக விரித்து அதன்மேல் அவரை அமரச் செய்தார். பகவானிடம் சென்று ஆசீர்வாதங்களைப் பெற்றுக் கொண்ட பின்னர் சிஷ்யப் பெண்மணி திரும்பி வந்து தனது குருவின் முன் அமர்ந்து கொண்டார். மீண்டும் அவர் பகவானிடம் சென்று முக்தி பெறுவதற்கான மார்க்கத்தை உபதேசிக்குமாறு வேண்டினார். பகவான் மௌனமாக இருந்தார். மாலை நெருங்கிக் கொண்டிருந்தது. அவர்கள் இரவு ரயிலைப் பிடிக்க வேண்டியிருந்ததால் சிஷ்யை வேதனை அடைந்தார். ''ஸ்வாமி! எங்களுக்கு உபதேசம் தாருங்கள். சமயம் கடந்து கொண்டிருக்கிறது,'' என்று வேண்டினார். சில நிமிஷங்களுக்குப் பிறகு மீண்டும், காலதாமதமாகிறது என்று பகவானுக்கு ஞாபகப்படுத்தினார். இறுதியில் களைப்படைந்த அந்த சிஷ்யை, ''ஸ்வாமி! எங்களுக்கு ஏதாவது சொல்லுங்கள்! அஞ்ஞானம் பற்றி எல்லோரும் பேசுகிறார்கள். அஞ்ஞானம் என்றால் என்ன? தயவு செய்து அதையாவது எங்களுக்கு விளக்க வேண்டும்,'' என்று கேட்ட போது பகவான் தன்னருகில் அமர்ந்திருந்த முருகனாரைப் பார்த்து, ''யார் அஞ்ஞானத்தில் இருக்கிறார்? என்று, அகமுகமாகி அந்த அம்மாவை விசாரிக்கச் சொல்லுங்கள்'' என்று கருணையோடு கூறினார். முருகனார் அந்தப் பெண்களைப் பார்த்து, ''உங்களுக்கு பகவான் உபதேசம் செய்துவிட்டபடியால்,

நீங்கள் இப்போது கிளம்பலாம்,'' என்று கூறிய போது ஏமாற்றத்துடன் அவர்கள் இருவரும் சென்று விட்டனர். பின்னர் இந்த நிகழ்ச்சியைப் பற்றிக் கூறும் போது ''எல்லாமே அவசர அவசரமாகச் செய்யப் பட வேண்டியுள்ளது. எல்லோருக்குமே ஏதோ ஒரு ரயிலைப் பிடிக்க வேண்டியுள்ளது. இந்த ஸ்வாமியை அவசர அவசரமாக வந்து பார்த்து, முக்தி என்ற பார்சலைப் பெற்றுச் செல்ல விரும்புகிறார்கள். இங்கும் அங்குமாக ஏதாவது படித்துவிட்டுத் தாங்கள் அறிவாளிகள் என்றும், முக்தியடைய தயாராக இருப்பதாகவும் கருதுகிறார்கள். யாருக்கு முக்தி தேவை? யாருக்கு முக்தி வேண்டும்? அகமுகமாகி, இதயத்தில் நிறைந்திருக்கும் 'சாந்தி'யாக இருக்காமல், வெளியில் அலைந்து அமைதியின்றி சஞ்சலத்தோடு இருக்கிறார்கள். எல்லாம் தன்னுள்ளேயே இருக்கிறது. யார்




**ஸ்ரீ பகவான் பக்தர்களுடன் (வலப்புறத்தில் சாந்தம்மாள்)**

தேடுகிறாரோ அவரே தான் தேடப்படும் வஸ்து. அசலமான பூரண சாந்தியே ஸத்தியம்,'' என்று பகவான் கூறினார். சாந்தம்மாள் மட்டும் சிரத்தையுடன் குறிப்பெடுத்திருக்கவில்லையானால் ஸாதகர்களுக்கு இம்மாதிரியான ஸத்ஸங்க குறிப்புகள் கிடைத்திருக்காது.

சாந்தம்மாள் அற்புதமாக சமைப்பார். மிகுந்த மன வலிமையும், சரீர வலிமையும் உடையவர். ஒரு நாள் ஒரு பெரிய பாத்திரத்தில் சாம்பார் கொதித்துக் கொண்டிருந்த போது திடீரென சமையலறைக்குள் பகவான் வந்தார். மிகப் பெரிய அளவிலிருந்த அந்தப் பாத்திரத்தை மூன்று ஆண்கள் சேர்ந்துதான் சாதாரணமாக இறக்கி வைக்க முடியும். சாம்பார் தளதளவென்று கொதித்துக்

கொண்டிருந்ததால் அதை அடுப்பிலிருந்து இறக்கி வைத்து விடுமாறு கூறிவிட்டு பகவான் சென்று விட்டார். சாந்தம்மாள், அருகில் யாரையும் காணாத போது அனாயாசமாக அந்தப் பாத்திரத்தைத் தானே இறக்கி வைத்து விட்டார். அவ்வாறு செய்த பின்னர், "இது பகவானால் நிகழ்த்தப்பட்ட ஒரு அதிசயமே. சாதாரணமாக ஒரு பெண்ணால் அதை நகர்த்தக் கூட முடியாது. ஆனால் பகவான் இறக்கி வைக்கும்படி கூறியதால் என்னால் அந்தப் பாத்திரத்தை இறக்கி வைக்க முடிந்தது," என்று தெரிவித்த சாந்தம்மாளுக்கு பகவானிடம் எத்தகைய நம்பிக்கை இருந்திருக்க வேண்டும்!

பலாக்கொத்தில் வாழ்ந்த ஸாதுக்களிடம் மிகுந்த பிரியத்தோடு இருந்த சாந்தம்மாள் அவர்களுக்கு உதவவும் செய்வார். தங்களது உணவை தாங்களே சமைத்துக் கொண்டிருந்த அவர்களுக்கு எளிதில் கிடைக்காத ஊறுகாயையும், ஆச்ரமத்தில் தயாரிக்கப்படும் இனிப்புக்கள் போன்ற ருசியான பதார்த்தங்களையும் கொடுப்பார். பகவானுக்குத் தெரிந்தேதான் அவர் இம்மாதிரிச் செய்வார். ஒரு நாள், ஆச்ரமத்தில் தென்னிந்தியாவில் விசேஷமாகக் கருதப்படும் அவியல் பரிமாறப்பட்டுக் கொண்டிருந்த போது பலாக் கொத்தில் வாழ்ந்த முருகனாரை நினைவு கூர்ந்த பகவான் சாந்தம்மாளைத் தனியே அழைத்து, ''முருகனாருக்கு அவியல் என்றால் மிகவும் பிடிக்கும். அவருக்கு யார் அவியலைக் கொடுப்பார்கள்?'' என்று கூறியவுடனேயே சாந்தம்மாள் அடுக்களைக்குச் சென்று அவியலைப் பொட்டலமாய்க் கட்டிக் கொண்டு பலாக் கொத்துக்கு ஓடிச் சென்றார். ஆனால் அங்கு அவர் இருக்கவில்லை. ஏற்கனவே ஊருக்குள் சென்று பிக்ஷை எடுப்பதற்குக் கிளம்பி விட்டார். தேடிச் சென்று, நடுவழியில் அவரைக் கண்டு பிடித்த சாந்தம்மாள், ''பகவான் உங்களுக்காக அவியல் அனுப்பியுள்ளார்,'' என்று கூறவும் முருகனார் தனது குருவின் தயையை எண்ணி மனம் உருகிக் கண்ணீர் சிந்தினார்.

வயதான போது தன்னால் ஆச்ரமப்பணிகளைச் செய்ய இயலாது என்று உணர்ந்த சாந்தம்மாள், சுமையாக இருக்க விரும்பாமல், ஆச்ரமத்தை விட்டுச் சென்று விட விரும்பினார். அன்று இரவு அவரது கனவில் பகவான் தோன்றி ''சாந்தம்மாள்! எங்கே போவீர்கள்? உங்களை யார் பார்த்துக் கொள்வார்கள்?'' என்று கேட்பதாக உணர்ந்தார். இதன் மூலம் பகவான் அவரைப் பார்த்துக் கொள்வதாக உணர்ந்து கொண்டதால் சாந்தம்மாள் அருணாசலத்தோடு இணையும் வரை ஆச்ரமத்திலேயே அமைதியாக இருந்தார்.



# சங்கரம்மாள்

சங்கரம்மாளைப் பற்றிய குறிப்புக்கள் எதுவும் நமக்குக் கிடைக்கவில்லை. குழந்தைப் பருவத்திலேயே கைம்பெண்ணாகிவிட்ட அவர் சமையல் வேலை செய்தார் என்ற ஒரு தகவல் மட்டுமே நமக்குத் தெரியும். இந்தியாவில், குழந்தையாக இருக்கும் போதே விதவையான பெண்கள் எல்லோருமே கடவுளைப் பற்றிச் சிந்திக்க வேண்டும் என்றும், அவரைப் பற்றிப் படிக்க வேண்டுமென்றும், திருக்கோயில்களுக்குச் செல்ல வேண்டுமென்றும் அறிவுறுத்தப்பட்டனர். கணக்கற்ற (கடவுளர்கள்) தேவ, தேவியர் இருந்த போதும் மெய்ப்பொருள் ஒன்றுதான் என்பதையும், கடவுளைத் தேடுதல் என்றால் ஸத்யத்தைத் தேடுதல் என்றே பொருள் என்பதையும், புத்திசாலிப் பெண்ணாக இருந்த சங்கரம்மாள் தானாகவே அறிந்திருந்தார். மிகச் சிறிய வயதிலேயே அவர் இந்த உண்மையை உணர்ந்திருந்தார்.

பிறரைப் புரிந்து கொள்ளக்கூடியவரும், இரக்க குணமுள்ளவருமான அவரது சகோதரர் மட்டுமே சங்கரம்மாளின் இளமைப் பருவத்தில் அவருக்கு ஆதரவாக இருந்தார். கைவல்ய நவநீதம், யோக வாஸிஷ்டம் போன்ற ஆன்மீக நூல்களை அவருக்கு அறிமுகம் செய்தார். அந்த நூல்கள், நூற்றுக்கணக்கில் தேவ, தேவியர் இருந்தாலும் மெய்ப்பொருள் ஒன்றே என்ற அவரது திடமான கருத்தை மேலும் உறுதி செய்தது. அந்த உண்மைப் பொருளை அடைய, குருவருள் இன்றியமையாதது என்ற அவரது நம்பிக்கையையும் அவை உறுதி செய்தன. அத்வைத நூல்களில் விளக்கப்பட்டுள்ளது போன்று, மெய்ப்பொருள் எப்போதுமே உணர்வாக விளங்குகிறது என்பதையும் அவர் தனது நுண்ணறிவால் உணர்ந்து கொண்டபோது அகமுகமாகி, அதை அனுபவபூர்வமாக உணரத் தூண்டப்பட்டார்.

சங்கரம்மாள் பல புண்ய க்ஷேத்திரங்களுக்கும், கோயில்களுக்கும் சென்று வந்தார். இருந்த போதிலும், ஆத்மானுபூதியை அடைய வேண்டும் என்ற ஏக்கம் அவருக்கு அதிகமானது. குருவின் பாதங்களை அடைந்தால் மட்டுமே அது ஸாத்தியமாகும் என்பதை அவர் உணர்ந்திருந்தார். அவரது இந்த அறிவையும், விழைவையும் யாரிடமும் பகிர்ந்து கொள்ளும் நிலையில் அவர் இருக்கவில்லை. அவருடைய குரு, ரமணர் அவரை மேலும் சோதனைக்கு உள்ளாக்குவாரா என்ன? விரைவிலேயே, சங்கரம்மாளின் சகோதரர், அருணாசலேச்வரரை வழிபட அருணாசலத்திற்கு அவரை அழைத்துச் சென்றார். அங்கு நடந்தது என்ன? அவர்கள் இருவரும், கர்ப்பக்ருஹத்தில் லிங்க உருவில் அருணாசலேச்வரரைத் தொழுதபடி நின்று கொண்டிருந்தபோது, எங்கிருந்தோ திடீரென வந்த அர்ச்சகர் ஒருவர், “ஓ! நீங்கள் இருவரும் ரமண மஹர்ஷியை நமஸ்கரிக்க வந்துள்ளீர்களா?” என வினவினார். சங்கரம்மாள் தனது வாழ்க்கையில் முதன்முறையாக அந்தப் பெயரைக் கேட்கிறார். இருந்தும் பரவசத்தில் ஆழ்ந்த அவர், சில வினாடிகளுக்குத் தன்னை மறந்த நிலையில் நின்றார். இதைக் கவனித்த அவரது சகோதரர், அவரை ரமணாச்ரமத்திற்கு அழைத்துச் சென்றார்.

பகவான் எதிரே சங்கரம்மாள் நின்ற போது அவரைக் கருணையோடு நோக்கிய பகவான், “ என்னிடம் வருவதற்கு உனக்கு இத்தனை காலம் தேவையாக இருந்ததா?,” எனக் கேட்பது போல் அவருக்குத் தோன்றியது. இது போலவே, பல மூத்த பக்தர்களும் பகவான் அவர்களைப் பார்த்தபோது அவரது பார்வை இதே உணர்வை அவர்களிடம் ஏற்படுத்தியதாக உறுதி செய்துள்ளனர். கைவல்ய நவநீதம், யோக வாஸிஷ்டம் இவற்றில் கூறப்பட்டுள்ள, ஞானியின் - ஆத்மானுபூதி பெற்றவர்களின் அடையாளங்கள் அனைத்துமே பகவானிடம் பொருந்தியிருப்பதைச் சங்கரம்மாள் கண்டார். பகவானுடைய முதல் பார்வையே, அவர் ‘மனித உருவில் உள்ள கடவுள்’ என்பதைச்

சங்கரம்மாளுக்கு உணர்த்தியது. பகவான் அவரைப் பார்த்துப் புன்னகை செய்த போது, தனது குருவும் அவரே என்பதும் உறுதியாயிற்று. ஆத்மானுபவம் பெறும் பொருட்டு, எந்த குருவுக்காக அவர் ஏங்கினாரோ, அவருடைய ஸந்நிதியிலேயே தான் நிற்பதை உணர்ந்து இன்ப வெள்ளத்தில் மூழ்கினார். குருவின் ஸந்நிதி விசேஷத்தால் எண்ணங்கள் ஏதும் அற்ற நிலையில் இருந்தார். இது போன்ற பரவசத்தை, கைவல்ய நவநீதம் மற்றும் யோக வாஸிஷ்டம் மிக உயர்ந்த அனுபவ நிலையென உரைக்கின்றன. அதனால் சங்கரம்மாள் ஆச்ரமத்திலேயே தங்கி, தனது எஞ்சிய காலத்தைக் குரு சேவையில் கழிக்க முடிவு செய்தார்.

வாழ்க்கையில், எதையும் தனக்கு வேண்டுமென எப்போதுமே சங்கரம்மாள் கேட்டதில்லை. தனது சகோதரரிடம் கூட அவர் எதையும் கேட்டதில்லை. இந்து கலாச்சாரத்தில் சகோதரருக்குக் கீழ்ப்படிய வேண்டுமென்ற தர்மத்தைக் கடைப்பிடிப்பதற்காகவே, தன் சகோதரன் வேண்டுகோளுக்கு இணங்கிக் கோயில்களுக்கும் புனித ஸ்தலங்களுக்கும் அவர் சென்று வந்தார். இப்போது முதன் முறையாக “அண்ணா! எனது குருவிற்குத் தொண்டு புரிய, தயவு செய்து என்னை இங்கேயே விட்டுச் செல்லுங்கள்,” என்று கேட்க வேண்டுமெனத் தோன்றவே சகோதரரிடம் விருப்பத்தைத் தெரிவித்தார். தனது சகோதரி, குருவுடன் தங்கி, அவருக்குப் பணிவிடை செய்ய விரும்புவதைப் புரிந்து கொண்ட சங்கரம்மாளின் சகோதரர் உடனே ஆச்ரம அலுவலகத்திற்குச் சென்ற போது அங்கு, சற்று கவலையோடு தென்பட்ட ஸர்வாதிகாரி சின்னஸ்வாமி, ஆச்ரம ஊழியர்கள் சிலருடன் ஏதோ முக்கியமான விஷயம் குறித்து விவாதித்துக் கொண்டிருந்தார். ஆச்ரமத்தில் சமையலைக் கவனித்து வந்த சாந்தம்மாள் சில நாட்களுக்கு ஆச்ரமத்தை விட்டு எங்கோ செல்லப்போவதாக அவர்கள் கூறினர். ஆச்ரமத்திற்கு வரும் பல விருந்தாளிகளுக்கும், வரவிருக்கும் சில முக்கியமானவர்களுக்கும் எவ்வாறு சமையல் செய்வது என்று அவர்கள் கவலையில் ஆழ்ந்திருந்த சமயம், சங்கரம்மாளின் சகோதரர், சின்னஸ்வாமியிடம் தனது சகோதரி ஆச்ரமத்தில் தங்க விரும்புவதாகத் தெரிவித்தார். பகவானுடைய அருளன்றோ இது! சின்னஸ்வாமி உடனே, “அவருக்குச் சமைக்கத் தெரியுமா?” என்று வினவினார். சங்கரம்மாள் மகிழ்ச்சியோடு, சமைக்க ஒப்புக்கொண்டு ரமணாச்ரமத்திலேயே தங்கிவிட்டார்.

பகவான் அடிக்கடி சமையலறைக்கு வருவார் என்பதால் அவருடைய கண்ணெதிரிலேயே இருப்பதற்குச் சங்கரம்மாளுக்குப் பல வாய்ப்புகள் கிடைத்தன. பகவான், ஞானிக்குச் சிறந்த உதாரணமாகத் திகழ்ந்ததால் சங்கரம்மாள் மிக்க மகிழ்ச்சியடைந்தார். பகவானுடைய பார்வை, நடை, அங்க அசைவுகள் எல்லாமே, கிண்ணத்தை அவர் கீழே வைக்கும் விதம்கூட, மிக அழகாகவும், நிறைவோடும் இருக்கும். தன்னை அதிகமாக வெளிப்படுத்திக் கொள்ளாமல் மிகவும் அடக்கத்துடன் எப்போதுமே மனநிறைவுடன் இருப்பவர் சங்கரம்மாள், என்பதாலேயே அவரைப் பற்றிய குறிப்புக்கள் எங்குமே காணப்படுவதில்லை. சமையலறையில் உதவி செய்தவர்களைச் சலம் என்பவர் தனித்தனியே பேட்டி கண்டு, போட்டோவும் எடுத்தார் என்றபோதும், சங்கரம்மாள் அதற்கும் சம்மதிக்கவில்லை. ஆனால், அவர் எப்போதுமே வேலையில் ஈடுபட்டிருந்தாலும், சமையலறையில் ஒரு மூலையில் அமர்ந்திருந்தாலும், எப்போதும் ஆனந்தத்தில், அமைதியாக இருந்தார் என்பதை இங்கு கூறியே ஆக வேண்டும்.

எனது பட்டப்படிப்பை 1956-இல் முடித்துக் கொண்டு, வேலை கிடைக்கும் வரை ரமணாச்ரமத்தில் தங்கியிருந்தேன். எனக்கு அப்போது வயது இருபத்தி இரண்டு ஆண்டுகள் கடந்துவிட்ட பின்னரும், எனக்கு வேலை கிடைக்கவில்லை. பகவான் தன்னுடனேயே என்னை இருக்கச் செய்து, ஆச்ரமத்திற்கு வரும் ஸாதுக்கள், ஞானிகள், பக்தர்கள் இவர்களைக் கவனித்துக் கொள்வதற்குப் பயிற்சியளித்தார். என்னைப் பயிற்றுவிக்கும் பொறுப்பைத் தானாகவே ஏற்றுக்



கொண்டவர் எனது பள்ளி ஆசிரியர் T.K. சுந்தரேசய்யர். ஸாதுக்களுக்கும், ஸந்நியாசிகளுக்கும் மட்டுமன்றி பகவானின் பழைய பக்தர்களுக்கும் அவர் என்னை அறிமுகம் செய்து வைத்தார். அப்போதுதான், அறுபது வயதைத் தாண்டியிருந்த சங்கரம்மாளை நான் கவனித்தேன்; எப்போதும் ஒரு மூலையில் அவர் உட்கார்ந்திருப்பார். அநேகமாகப் பேசமாட்டார் (உண்மையைச் சொன்னால், பகவான் வாழ்ந்த காலத்திலும் அவருடன் அதிகம் பேசவில்லை. அதற்கும் ஒரு காரணம் உள்ளது. பகவான் தனது பார்வையினாலேயே சங்கரம்மாள் மீது அருளைப் பொழிந்ததால் வார்த்தைகளே அங்கு தேவைப்படவில்லை.) சங்கரம்மாள், பார்ப்பதற்கு வசீகரத் தோற்றம் இல்லாமல், மெலிந்து கறுப்பாகவும், கடு கடுவென, பிடிவாதமாகவும் இருப்பார். அத்துடன், யாருடனும் எளிதில் பழகமாட்டாரென்பதால், அவரை யாரும் நெருங்கமாட்டார்கள். இந்த நிலையிலும் கூட, பகவானது அருளாலோ என்னவோ நான் எப்போதுமே அவரால் ஈர்க்கப்பட்டேன். சில சமயங்களில் அடுக்களைக்குச் சென்று அவரருகில் அமர்ந்து கொள்வேன். ஆனாலும் அவர் மௌனமாகவே இருப்பார். ஒரு நாள், “பகவானைப் பற்றி ஏதாவது கூறுங்கள்,” என்று நான் அவரை மிகவும் நச்சரிக்கவே, இறுதியாகப் பேச ஆரம்பித்தார்.

“பகவானுடைய மௌனமே அவரது நேரடி உபதேசம். யாரால் அவரது மௌனத்தைப் புரிந்து கொள்ள முடியவில்லையோ, அவர்களுக்குத்தான் அவர் ஆத்ம விசாரத்தை உபதேசித்தார். அதனால் அவரது உபதேசங்களைப் பொறுத்தவரையில், ஆத்ம விசாரத்திற்கு இரண்டாவது இடம் தான். அருள் நிறைந்த அவரது பார்வையாலேயே அவர் மௌனத்தை உபதேசித்தார். இதைத்தான் முருகனாரும் மற்றவர்களும் அருட்பார்வை என்கிறார்கள். ஒருபோதும் பகவானிடம் பேச வேண்டிய அவசியமே எனக்கு இருக்கவில்லை. என்னை படிப்படியாக, நிதானமாகப் பக்குவப்படுத்தினார். பகவானுடைய அருட்பார்வையை அவரது பக்தர்கள் புகழ்கிறார்கள். இருந்தாலும், அந்தப் பார்வையும் கூட அவரது அக அமைதியின், புற வெளிப்பாடேயாகும். பகவானது நிலையே மௌனம்தான். அவரது நேரடி உபதேசமும் மௌனத்தின் மூலமேயாகும். பகவானுடைய மௌன உபதேசத்தைப் பெற்றுக்கொண்டவர்கள் யாருக்குமே அவருடன் பேச வேண்டிய அவசியம் இருக்கவில்லை. அவருடைய அறிவுரைகளும் அவர்களுக்குத் தேவைப்படவில்லை. பகவான் மௌனத்தினால் சூக்ஷமமாக நிகழ்த்தியதை, வார்த்தைகளால் நான் எவ்வாறு விளக்க முடியும்?” என்று சங்கரம்மாள் தெரிவித்தார்.

இரும்புத்துகள்களை ஈர்க்கும் காந்தம்போல் என்னை ஈர்த்த சங்கரம்மாளை, அமைதியாக விடுவதற்கு நான் தயாராக இல்லை. அவர் எப்போதுமே சாந்தமாகவும் அமைதியாகவும் இருப்பதை நான் கவனித்தேன். அடுக்களைப் பணிகளை மிகுந்த கவனத்துடன் செய்த அவர், அங்கிருந்து வெளியே வரவே மாட்டார். நானோ, அவரிடம் கேள்வி கேட்டே ஆக வேண்டுமென்று தீவிரமாக இருந்தேன். "நீங்கள் எந்த நிலையில் இருக்கிறீர்கள்? நீங்கள் ஸமாதியில் இல்லை; ஏனென்றால் பணிகளில் மும்முரமாக ஈடுபட்டிருக்கிறீர்கள். கண்கள் திறந்தபடியே உள்ளன, ஆனால் மௌனமான நிலையில் உள்ளீர்கள். இது என்ன நிலை? தயவு செய்து எனக்குச் சொல்லுங்கள்!", என்று அவரிடம் கேட்பேன். சங்கரம்மாள் புத்தி நுட்பமுள்ளவர் என்பதோடு கண்டிப்பானவரும் கூட. மிகுந்த கவனத்தோடும், ஒருமுகப்பட்ட மனதோடும் தனது வேலைகளில் முழுமையாக மூழ்கி விடும் அவர், யாருடனாவது பேசுவதை நாம் காணவே முடியாது. இக்காரணங்களால் யாரும் அவரை அண்டமாட்டார்கள். ஆனால் நேர்மாறாக, அவரது இந்த குணங்கள் என்னை அவரிடம் மிகத் தீவிரமாக ஆகர்ஷித்தது. அவரை நெருங்க நெருங்க அவர்மீது எனக்கிருந்த மதிப்பு அதிகமானது. அவர் அசாதாரணமானவர் என்பதைத் திடமாக அறிந்துகொண்டதால் அவரது பூரணமான ஸமத்வ நிலையின் ரஹஸ்யம் என்னவென்று கேட்டேன். பலமுறை, தளராமல் வற்புறுத்திய பின்னர், இறுதியில் மனமிரங்கி "என்னுடைய இந்த அகமுகமான அமைதியான நிலை எனக்கே புரியாத புதிராக உள்ளது. நமது சாஸ்திரங்கள் இந்த நிலையை வெகுவாகப் புகழ்ந்து பேசுகின்றன. நானோ ஒரு சாதாரண பெண் என்பதால் இந்நிலை பற்றிச் சந்தேகமாகவே இருந்தது. ரிஷிகளும், ஞானிகளும் கூட பல ஆண்டுகள் தவமியற்றிய பின்னரே இந்த ஆனந்த நிலையை அடைய இயலும் என்று நமது ஆன்மீக நூல்கள் கூறுகின்றன. நான் உண்மையாகவே அந்த நிலையில் இருக்கிறேனா என்று ஆச்சர்யப்பட்டேன்," என்று தெரிவித்தார். இத்தகைய சந்தேகங்களால் குழம்பிப் போன சங்கரம்மாள் எவ்வாறு தெளிவு பெறுவது என விளங்காமல், தகுந்த சந்தர்ப்பத்திற்காகக் காத்திருந்தார். ஒரு நாள், காலைச் சிற்றுண்டிக்குப் பின் பகவானுடன் தனிமையில் இருக்க நேர்ந்தது. 'தான் உண்மையாகவே அந்த அசாதாரணமான, அமைதியான நிலையில் இருக்கிறோமா? என்பதை பகவானிடமிருந்து எப்படித் தெரிந்து கொள்வது? எவ்வாறு அதைக் கேட்பது? அனுபூதிமானாக இருப்பவர் இத்தகைய கேள்விகளைக் கேட்க மாட்டார்' என்றெல்லாம் யோசித்த வண்ணம் சங்கரம்மாள் பகவானை வணங்கி எழுந்தபோது, கைவல்ய நவநீதத்திலிருந்து ஒரு பாடல் தன்னிச்சையாக அவர் உள்ளிருந்து எழும்பியது. அதில் குரு சீடனிடம் தான் அறிந்து கொண்டதைக் கூறுமாறு கேட்டபோது, சீடன் அவரை வணங்கிக் கூப்பிய கரங்களுடன்,

ஐயனே எனதுள்ளே நின்று
அனந்த ஜன்மங்களாண்ட
மெய்யனே உபதேசிக்க
வெளிவந்த குருவே போற்றி!
உய்யவே முத்தி நல்கும்
உதவிக்கோர் உதவி நாயேன்
செய்யுமாறொன்றும் காணேன்
திருவடி போற்றி போற்றி.

என இந்தப்பாடலை சங்கரம்மாள் ஓதிய போது பகவான் கருணையுடன் அவரை நோக்கி "சந்தேகப்படுவதற்கு என்ன இருக்கிறது?" என்று கூறித் தொடர்ந்து "ஆம், ஆம் அடுத்த பாடலிலேயே பதில் உள்ளது" என்று கூறினார்.

அப்பாடலில்,

சிட்டனிவ்வாறு கூறத்
தேசிகர் மகிழ்ந்து நோக்கிக்
கிட்டவாவென இருத்திக்
கிருபையோடருளிச் செய்வார்
துட்டமாந் தடைகள் மூன்றுந்
தொடராமற் சொரூப ஞான
நிட்டானாயிருக்கின் ஈதே
நீ செயுமுதவியாமே.

என இவ்வாறு கூறப்பட்டுள்ளது.

இதன் பொருள் :

குரு சீடனை அருகிலழைத்து அரவணைத்துக் கொண்டு அஞ்ஞானம், சந்தேகம், விபரீத ஞானம் ஆகிய மூன்று தடைகளையும் நீக்கி, ஆத்மாவில் நிலைநிற்பாயானால் அதுவே நீ எனக்குச் செய்யக்கூடிய பேருதவியாகும் என்பதாகும். (குருவுக்கும் சீடருக்கும் இடையேயுள்ள இந்த ஸம்பாஷணையை ஒவ்வொருவரும் படிக்கவேண்டுமென நான் அழுத்தமாகச் சிபாரிசு செய்வதுண்டு. இப்புத்தகத்தில் தத்துவ விளக்கப் படலம், சந்தேகந்தெளிதல் படலம் என்ற இரு பகுதிகள் உள்ளன. முதல் படலத்தில் 'நான் இருக்கிறேன்' என்னும் அனுபவம் குறித்து குரு சீடனுக்கு விளக்குவது பற்றியும், சீடன் அதைப் புரிந்து கொள்வது பற்றியும் கூறப்பட்டுள்ளது. இரண்டாவது படலத்தில், சீடனை அவன் புரிந்து கொண்டதை குரு தன்னிடம் தெரிவிக்கக் கூறி சந்தேகங்களைத் தீர்த்துக் கொள்ளுமாறு கூறுகிறார். சீடனால் கொடுக்கப்பட்ட விளக்கங்கள் அறிவு பூர்வமானவை மட்டும் அன்று; அனுபவபூர்வமானவை. இதனாலேயே 'கைவல்ய நவநீதம்' முக்கியத்துவம் வாய்ந்தது.) சங்கரம்மாள் பகவானைப் பார்த்த போது அவரும் அவளைச் சில நிமிடங்களுக்கு அசைவின்றி நோக்கினார். மீண்டும் மீண்டும் வணங்கிய சங்கரம்மாளின் கண்களில் கண்ணீர் ஆறாகப் பெருகியது. "அன்றிலிருந்து நான் அந்த நிலையிலேயேதான் இருக்கிறேன். எண்ணங்களே எழுவதில்லை," என்று அவர் என்னிடம் தெரிவித்தார்.

இயேசு கிறிஸ்து, புத்தர், ரமண மஹர்ஷி இவர்களின் உபதேசங்களை நாம் எவ்வளவு தான் படித்தாலும், அவற்றை நம்மால் கடைப்பிடிக்க இயலாது என்ற எண்ணம் வந்து விடுவதால், அவற்றிலிருந்து சற்றுத் தொலைவிலேயே நாம் நிற்கிறோம். இது மனித குலத்திற்குப் புத்தியினால் ஏற்படும் தடையாகும். 'இயேசுநாதருக்கும், புத்தருக்கும், ரமணருக்கும் அந்த உன்னத நிலையை அடைய முடிந்தது. ஆனால் நமக்கெல்லாம் அது ஸாத்தியமா?' என்று எண்ண ஆரம்பித்து விடுகிறோம். சங்கரம்மாளின் இறுதிக்காலம் வரை நான் அவரருகில் இருக்கும் பேறு பெற்றதால், அவரிடமிருந்து பல விஷயங்களை என்னால் கிரஹித்துக் கொள்ள முடிந்தது. ஸத்தியமாகவே அவர் வாழ்ந்ததால், எனக்கு நல்ல தெளிவு ஏற்பட்டது.

என்னுடைய ஸாதனைகளில் எனக்கு உதவக்கூடிய பகவானது முக்கியமான பாடல்கள் சிலவற்றைத் தேர்ந்தெடுத்துத் தருமாறு ஒருமுறை சங்கரம்மாளிடம் வேண்டிக் கொண்டேன். உடனே அவர் அக்ஷரமணமாலையிலிருந்து 'மீகாமன் இல்லாமல் மாகாற்று அலைகலம் ஆகாமல் காத்தருள் அருணாசலா' (மாலுமி இல்லாமல், கடலில் பெருங்காற்றால், புயலால் அலைக்கழிக்கப்படும் கப்பலைப்போல் நான் ஸம்சாரக் கடலில் அகப்பட்டுக் கரை காணாது தவிக்காமல் இருக்க என்னைக் காத்து இரட்சிப்பாய், அருணாசலா!) என்ற பாடலையும் (பாடல் எண்-79) 'மூக்கிலன் முன்காட்டும்

முகுரமாகாது என்னைத் தூக்கியணைந்தருள் அருணாசலா' (மூக்கில்லாதவன் முன்பு கண்ணாடியைக் காட்டினால் அவன் தாழ்மையைக் குறையைக் காட்டுவதேயாகும். அது போல நீ என் குற்றத்தை எடுத்துக் காட்டுபவனாக இல்லாமல், என்னைப் பக்குவப்படுத்தி, உயர்த்தி உன்னுடன் சேர்த்துக் கொள் அருணாசலா!) (பாடல் எண்-.81) என்ற பாடலையும் எடுத்துரைத்தார். இப்பாடல்களின் முக்கியத்துவம் என்னவென்று நான் கேட்கும் முன்னரே அவர், "ஆரம்பகாலத்தில், ஸாதகர்கள் இருவிதமான குறைகளைத் தங்களில் காண்பார்கள். முதலில், தங்களிடம் நிறைவின்மையை உணர்வார்கள். இரண்டாவதாக ஸாதனைக் காலத்தில், தாங்கள் எதிர்கொள்ளும் தாண்ட முடியாத தடைகளை எவ்வாறு தாண்டுவதென்று புரியாமல் தவிப்பார்கள். இவை இரண்டுமே ஸாதகனை நம்பிக்கை இழக்கச் செய்யும். மேற்கூறிய இரு பாடல்களின் மூலம் பகவான், ஸாதகனுக்குத் தோன்றக்கூடிய பயத்தைப் போக்கிவிடுகிறார். ஆன்மீக முன்னேற்றத்திற்குத் தடையாக விளங்கும் எல்லாப் பிணிகளுக்கும் ஒரே மருந்தாக இருப்பது உன்னத சக்தியிடம் செய்யப்படும் பூரண சரணாகதியே. ஞானம் என்பதைப் பால் அல்லது அமிர்தத்துடன் ஒப்பிட்டால், சரணாகதி என்பது அதைப் பாதுகாத்து, நம்முடையதாக்கிக் கொள்ள உதவும் பாத்திரத்தைப் போன்றது எனலாம். ஆழ்ந்து அகமுகமாவதற்குச் சரணாகதி ஒருவருக்கு உதவுகிறது," என்று விளக்கினார்.

மரணத்தைத் தழுவும்போது சங்கரம்மாள் முழு உணர்வோடு இருந்தார். தன் கண்களை மூடிக்கொண்டு புன்னகையோடு உடலை நீத்தார். மரணம் அவரை அச்சுறுத்தவில்லை. ஆசீர்வாதம் கொடுக்குமாறு அவரைக் கேட்டபோது புன்னகை செய்தவாறு, "கொடுப்பது, பெறுவது என்பதெல்லாம் என்ன பேச்சு? நீ ஏற்கனவே எந்த ஆனந்த நிலையில் இருக்கிறாயோ, எப்போதும் எந்த ஆனந்த நிலையில் இருக்கிறாயோ, அந்த நிலையிலேயே இனிமேலும் நிலைத்து இரு," என்று கூறி சங்கரம்மாள் ஆசீர்வதித்தார்



# 47 சுப்பலக்ஷ்மி அம்மாள்



ஆச்ரம சமையல் கலைஞர்களோடு பகவான் கொண்டிருந்த இணக்கம் தனித்தன்மை வாய்ந்தது. அநேகமாக பால்ய விதவைகளாக இருந்த அவர்களிடம், ஒரு நண்பரைப் போன்று அவர் பழகினார். அது எளிமையும், அன்பும் கூடியதாக இருந்தபோதும் தான் பண்டிதர்களோடு பகிர்ந்து கொண்ட அதே உயர்ந்த உபதேசங்களை அவர்களுக்கும் அளித்தார். அந்த உபதேசங்களை மிக ஆழமாக அனுபவிக்கும்படியும் செய்தார். ஒரு உண்மையான குரு அன்றும், இன்றும், என்றும் உயர்ந்த உபதேசங்களைப் பாரபட்சமேதுமின்றி எல்லோருக்கும் கொடுக்கிறார், என்பதற்கு இது ஒரு சிறந்த சான்றாகும்.

16 வயதிலேயே கைம்பெண்ணாகிவிட்ட வாரணாசி சுப்பலக்ஷ்மி அம்மாளுக்குத் தீவிர ஆன்மீகவாதியான அவரது தாயாரைத் தவிர வேறு ஆதரவு எதுவும் இருக்கவில்லை. நெல்லூருக்கு அருகிலிருந்த ஒரு கிராமத்தில் வாழ்ந்து வந்த அவர்கள் ஆலயங்களைத் தரிசிப்பதற்காகப் பல இடங்களுக்கு அடிக்கடி தீர்த்த யாத்திரை செய்வார்கள். ஒரு முறை அருணாசலத்திற்கு வந்த போது விரூபாக்ஷ குகையிலிருந்த இளந்துறவியைப் பற்றிக் கேள்விப்பட்டு அவரைச் சந்திக்கக் குகைக்குச் சென்றனர். பகவானைப் பார்த்த மாத்திரத்தில் அருணாசலேச்வரரே அங்கு மனித உருவில் அமர்ந்திருப்பதாக சுப்பலக்ஷ்மி அம்மாளுக்குத் தோன்றியது. “பகவானுக்கு அப்போது சுமார் முப்பது வயதிருக்கும். மெருகிட்ட தங்கம் போன்று ‘பள பள’ வென ஒளி வீசியது அவரது சரீரம். கண்களோ தாமரை இதழ்களைப் போன்று மிளிர்ந்தன. எல்லையில்லா அமைதி அவரைச் சூழ்ந்திருந்தது,” என பிற்காலத்தில் அந்த சந்திப்பைப் பற்றிச் சுப்பலக்ஷ்மியம்மாள் கூறியுள்ளார்.

தனது முப்பத்தொன்றாவது வயதில் சுப்பலக்ஷ்மி அம்மாள் பகவானைக் காண மீண்டும் வந்தார். இதற்குள் மலையடிவாரத்திலுள்ள தற்போதைய ரமணாச்ரமத்திற்கு பகவான் வந்து விட்டார். அம்முறை அவரால் சொற்ப காலமே பகவானுடன் இருக்க முடிந்தது. அதன் பின் ஓராண்டுக்கு பிறகு மீண்டும் பகவானது ஸந்நிதிக்குச் செல்ல வேண்டுமென்ற ஏக்கம் எழவே, அதற்குத் தகுந்த வாய்ப்பை அவர் எதிர்நோக்கிக் காத்திருந்தார். ஒரு நாள் அவருக்கு வந்த கனவு ஒன்றில் அவருக்கு நன்கு பரிச்சயமான பண்டிதர் ஒருவர் தோன்றி ‘நீங்கள் எங்கெல்லாமோ தேட வேண்டிய அவசியம் என்ன உள்ளது? பகவான் ரமணரிடம் உங்களை ஒப்படைத்து விடுங்கள். அவரேதான் கடவுள். அவரே முக்திக்கு வழிகாட்டுவார்’ என்று கூறுவதாகக் கண்டார். நெல்லூர் பர்வதம்மாள் என்ற சிநேகிதியுடன் பகவானுடைய ஸந்நிதிக்கு உடனே அவர் வந்து சேர்ந்தார் என்ற போதும் அவரும், அவரது தோழியும் வாரணாசிக்குச் சென்று, அப்புனித க்ஷேத்திரத்தில் நிரந்தரமாகத் தங்குவதாகத் திட்டமிட்டிருந்தனர். முக்கியமான அப்பிரயாணத்தை மேற்கொள்ளும் முன் பகவானுடைய ஆன்மீக வழிகாட்டுதலை நாடியே சுப்பலக்ஷ்மி அம்மாள் வந்தார். “ஆத்மா என்பது யாது? அது எல்லையில்லா வெட்ட வெளியா அல்லது அனைத்தையும் அறிந்து கொள்ளும் உணர்வா?” என்று பகவானிடம் சுப்பலக்ஷ்மியம்மாள் கேட்கவும், பகவான் அவரைக் கூர்ந்து நோக்கி “ஆத்மாவின் தன்மையாதென விசாரிப்பதற்குப் பதில் எண்ணங்களை முற்றிலும் தவிர்த்து ஆத்மாவில் நிலையாக இருங்கள்,” என உபதேசித்தார். அப்போது தனது மனம் கரைந்து, இல்லாமல் போனதாக உணர்ந்த சுப்பலக்ஷ்மியம்மாளுக்கு எண்ணங்கள் எதுவும் எழவில்லை. தன்னைச் சுற்றி பரம சாந்தி நிலவுவதை மட்டுமே அவர் உணர்ந்தார்.

சுப்பலக்ஷ்மியம்மாள் வாரணாசிப் பயணத்தையே மறந்துவிட்டு ஊருக்குள் தங்கி பகவான் ஸந்நிதியில் மௌனத்தையும் அமைதியையும் ஆழ்ந்து அனுபவிப்பதற்காகத் தினமும் அவரைக் காண வருவார். பகவானுடைய தங்கை அலுமேலு அம்மாளின் விருப்பத்திற்கிணங்கி ஆச்ரம சமையல் வேலைகளில் உதவி செய்ய இசைந்தார். சமையலறையில் பகவான் அவர்களை வழிநடத்துவார் என்பதால், சுப்பலக்ஷ்மியம்மாளுக்கு அந்தப் பணியில் தொடர்ந்து இருப்பதற்கு ஊக்கம் ஏற்பட்டது. ஆனாலும் பணிச்சுமையாலும் கடுமையான ஆசார அனுஷ்டானங்களில் அவருக்கு இருந்த ஈடுபாடு காரணமாகவும் அவர் மீண்டும் தனது கிராமத்திற்குச் சென்று விட்டார். நாட்கள் செல்லச் செல்ல தியானத்தின் போது ஒரு சூன்ய நிலையை அவர் அனுபவிக்க நேர்ந்ததுடன், குருவின் பிரிவால் ஏற்பட்ட ஏக்கத்தைத் தாங்க இயலாது மீண்டும் ஆச்ரமத்திற்கு வந்தார். அங்கு திரும்பி வந்த போது இழந்த சாந்தி திரும்பியது என்றாலும் அதைவிட மகிழ்ச்சியளித்த விஷயம் அன்று காலையே சாந்தம்மாளிடம், "இன்று சுப்பலக்ஷ்மியம்மாள் வருவார். அவருக்கு உணவு எடுத்து வையுங்கள்," என பகவான் தெரிவித்ததுதான். பகவானின் ஆழ்ந்த அன்பும், விசேஷ கவனமும் சுப்பலக்ஷ்மியம்மாளை நெகிழச் செய்து வாழ்நாள் முழுவதையும் பகவானுடைய சேவையில் தன்னை அர்ப்பணித்துக் கொள்ளுமாறு செய்தது.

சமையலறையில் தனக்களிக்கப்பட்ட வேலைகளின் பளுவால் தன்னால் தியானம் செய்ய இயலவில்லை என்று அவர் எண்ணலானார். அவருடைய மன ஏக்கத்தைப் புரிந்து கொண்ட பகவான் "நீங்கள் தியானம் செய்ய முடியவில்லை என இப்போதும் வருந்துவதாகத் தெரிகிறதே?" என்று அவரிடம் கேட்டபோது சுப்பலக்ஷ்மியம்மாள், "ஆம் பகவானே! ஓய்வு ஒழிச்சலில்லாத அடுக்களைப் பணிகளைத் தவிர எனக்கு வேறு என்ன இருக்கிறது?" என அலுத்துக் கொண்டார். பகவான் அவரைப் பார்த்துச் சிரித்தவாறு "உங்கள் கைகள் வேலைகளில் ஈடுபட்டிருக்கும் போதும் மனம் அமைதியாக இருக்கலாமே! போக்கு வரவு அற்ற ஸத்ய வஸ்துவன்றோ நீங்கள்! அதை உணர்ந்து கொண்டு விட்டீர்களென்றால் வேலை கஷ்டமாகவே இருக்காது. நீங்கள் இந்த சரீரம் என்றும், நீங்களே வேலைகளைச் செய்வதாகவும் எண்ணும் வரை உங்களது 'வாழ்க்கையே ஓயாத உழைப்பு' என்று தான் தோன்றும். உண்மையைச் சொன்னால் மனம் தான் வேலை செய்கிறதேயன்றி சரீரம் அன்று. சரீரம் அசைவற்று இருக்கும் நிலையில் மனமும் அசைவின்றி இருக்குமா? தூக்கத்திலும் கூட மனம் மும்முரமாகக் கனவு காண்பதில் ஈடுபடுகிறதன்றோ?" என்று பகவான் விளக்கியபோது "பகவானே! நான் சரீரம் இல்லை என்பதை என்னால் எப்போதும் ஏன் நினைவில் கொள்ள இயலவில்லை? என்று சுப்பலக்ஷ்மியம்மாள் கேட்டார். சிரித்தவாறே பகவான் "போதுமெனக் கூறும் அளவுக்கு நீங்கள் அதை இன்னும் அனுபவிக்கவில்லை என்பதுதான் காரணம்," என உரைத்தார்.

சுப்பலக்ஷ்மியம்மாள் அடிக்கடி உண்ணாவிரதம் மேற்கொள்ளும் வழக்கத்தைக் கொண்டிருந்ததார். ஏனெனில் 'தன்னை அறிய விரும்பும் ஒருவர் தன் சரீரத்தின் மீது கவனத்தைச் செலுத்துவது முதலையை நம்பி ஆற்றைக் கடக்க முற்படுவது போன்றது' என்று புராதன நூல்களில் கூறப்பட்டிருந்ததை அவர் படித்திருந்தார். அந்நூலில் குறிப்பிட்ட அந்தப் பகுதியை அவர் பகவானிடமும் காட்டினார். "இதற்குப் பட்டினி கிடக்க வேண்டுமென்றோ, உடலை வருத்திக் கொள்ள வேண்டுமென்றோ பொருளாகாது. தேவைக்கு மேலாக உடம்புக்கு எதையும் தர வேண்டாம் என்று தான் அர்த்தம். மனதால் ஆத்ம விசாரத்தில் ஈடுபட்டுக் கொண்டு அதே சமயத்தில் உடம்பு இடையூறு செய்யாவண்ணம் கவனித்துக் கொள்ள வேண்டும் என்றுதான் பொருள். இதற்கு, அவ்வப்போது புதிதாகத் தயாரிக்கப்படும் சுத்தமான எளிய உணவை மிதமாக உண்டாலே மிகவும் உதவியாக

இருக்கும்,'' என பகவான் உபதேசித்தார். மற்றொரு முறை, காவியுடை அணிந்து பிக்ஷை வாங்கி உண்ண சுப்பலக்ஷ்மியம்மாள் பகவானிடம் அனுமதி கோரினார். ''காவி வண்ணத்தில் தோய்த்துவிட்ட துணிகள் துறவைத் தந்து விடுமா? முதலில் ஸந்நியாசம் என்றால் என்ன என்பதை அறிந்து கொள்ளுங்கள்'' என்று பகவான் கண்டிப்புடன் பதிலளித்தார்.

ஒரு நாள் பகவான் முன் அமர்ந்து ஒரு குழுவினர் குருவைப் போற்றும் ஸ்துதி ஒன்றைப் பாடினார்கள். பாடிக் கொண்டிருக்கும்போதே எழுந்து போன பகவான் ''பிரார்த்தனைகளும் துதிகளும் ஒருவரை வெகுதூரம் அழைத்துச் செல்லாது. கருணை பொங்கும் குருவின் பார்வையே உண்மையான ஞானத்தைத் தர வல்லது,'' என்று கூறியபடி வெளியே சென்றுவிட்டார். பகவானுடைய அருட்பார்வை தனக்குப் பலமுறை கிடைத்ததில் சுப்பலக்ஷ்மி அம்மாள் பெருமிதம் கொண்டார். ஆனால் மறுநாளே, எவ்விதத் தூண்டுதலுமின்றி, பகவான் சுப்பலக்ஷ்மி அம்மாளைப் பார்த்து ''ஆறு மாதக் குழந்தையைப் போன்று ஒருவர் இருக்கவில்லையானால் உண்மையான ஞான நிலையை நோக்கி ஆன்மீகத்தில் அவர்கள் முன்னேற வழியேதும் இல்லை,'' என்று உபதேசித்தார்.

சுப்பலக்ஷ்மி அம்மாள் பகவானை நினைவு கூர்ந்தபோது ''பகவானுடைய ஸாந்நித்தியத்தில் வாழ்வதே உண்மையான ஸாதனையாகும். அவருடைய வார்த்தைகள், அங்க அசைவுகள், குரலின் ஏற்றத் தாழ்வுகள் இவையனைத்தும் சுற்றியிருப்பவர்களின் நிலைக்கேற்றவாறு மாறியமையும். பகவான் குழந்தைகளுக்கு ஒரு தோழன், குடும்பத்தினருக்கு விவேகமுள்ள ஆலோசகர், பண்டிதர்களுக்கு அறிவின் பொக்கிஷம், யோகிகளுக்கு வெற்றி தேவதை. பகவான் தன்னை அவர்களில் கண்டது போன்று, அவர்களும் தங்களை பகவானிடம் பார்த்தனர். அவருடைய ஸாந்நித்தியம் எப்போதுமே அவ்வாறு இருந்தது. இதனால் என்றும் மாறாத அன்பினால் பகவானுடைய சரணங்களில் அவர்கள் இறுகப் பிணைக்கப்பட்டார்கள். நெருப்பானது ஒளியைப் பரப்புவது போல பகவானுடைய ஸாந்நித்தியத்தில் அளப்பரிய சாந்தி நிலவியது. பகவான், ஞானம் மற்றும் கருணை, இவற்றின் உருவமாகவே திகழ்ந்தார். நம்முடைய தவறுகளையும் குறைகளையும் அவர் பொருட்படுத்தவில்லை என்றாலும் அவருடைய உபதேசங்களை, ஒன்றுகூட விடாமல் நாம் முழுமையாகக் கடைப்பிடிக்கும்படி செய்வார். அவருக்குப் பூரண திருப்தி ஏற்படும் வகையில் ஒரே பணியை மீண்டும் மீண்டும் நாம் செய்ய வேண்டியதாக இருக்கும். தனக்காகவா அவர் அப்படிச் செய்யச் சொன்னார்? அவருக்கு அதனால் என்ன பிரயோஜனம்? இல்லை. நம்மால் அந்தப் பணியைச் சரியான முறையில் சிறப்பாகச் செய்ய முடியும் என்பதையும், பொறுமையின்மையும் கவனமின்மையுமே காரியங்கள் கெடுவதற்குக் காரணம் என்பதையும் நமக்கு உணர்த்துவதற்காகவே அவர் அவ்வாறு செய்யும்படி கூறுவார். நமக்குத் தெரியாதது அவருக்குத் தெரியும் என்பதாலும், நாம் முயற்சி செய்தால் நம்மாலும் சரியான விதத்தில் செயல்பட முடியும் என்பதாலும், பணியை நாம் சிறப்பாகச் செய்யும் பொருட்டு சில சமயங்களில் கடுமையாக இருப்பவர் போன்று தோன்றுவார். அனுபவத்தினால் வரக்கூடியது தன்னம்பிக்கை; நேர்மையினால் வரக்கூடிய உன்னதமான அமைதியைத் தரக்கூடியது தன்னம்பிக்கை. பணிபுரிவதற்கும் ஞானத்திற்கும் எத்தனை உயர்ந்த ஆசானாக விளங்கினார் பகவான்!'' என்று அவர் கூறினார்.

குரு, சீடர் என்ற வகையில் தங்களுக்குள் இருந்த ஆழமான உறவை விளக்கும் போது, ''அவரது ஸாந்நித்தியத்தில், பார்த்துப் பழகிய மனித உருவமாக அல்லாமல், அவரைக் கடவுள் என்றே நாங்கள் ஒவ்வொரு நொடியும் உணர்ந்தோம். அந்த உணர்வுக்கும், பகவானுடைய அருளே காரணம். ஏனென்றால் தான் என்பதையும், தனது உண்மை ஸ்வரூபமான 'எல்லாம் வல்ல இறைவன்' என்ற நிலையையும் அவ்வப்போது நாங்கள் உணர அவரருளினார். அவருடைய அன்பின்

பிரதிபலிப்பான எங்களுடைய அன்பெனும் சங்கிலியே அவருடைய பாதங்களில் எங்களை இறுகப் பிணைத்து அவரோடு தங்குமாறு செய்தது. அவர் பொருட்டு எங்களுடைய வீட்டையும், சொந்த பந்தங்களையும் துறந்தோம். அவரோடு இருப்பது எங்களுக்குப் பாதுகாப்பைத் தரும் என்றும் ஏதாவது அதிசயிக்கத்தக்க விதத்தில் அவர் எங்களை எங்கள் லட்சியத்திற்கு அழைத்துச் சென்று விடுவார் என்றும் நாங்கள் அறிந்திருந்தோம். அவரே எங்களுடைய உண்மையான வீடும் லட்சியமும்,'' என்று சுப்பலக்ஷ்மி அம்மாள் கூறினார்.

சுப்பலக்ஷ்மி அம்மாளுடன் நான் மிகவும் நெருங்கி பழகும் பேறு பெற்றிருந்தேன். அப்போது எனக்கு 2 வயதாகியிருந்தது. நான் புஷ்டியாக இருந்தேன். கூச்ச சுபாவமுள்ள எனது சகோதரர்கள் போலில்லாமல், குடும்பத்தினர் அல்லாதவர்களிடமும், வேற்று மனிதர்கள் என்ற பயமோ தயக்கமோ இன்றி நான் செல்வேன். அதனால் இந்த சமையல் பெண்மணிகள் செல்லமாக என்னைக் கொண்டாடி என்னுடன் விளையாடுவார்கள். ஒரு நாள் சமையலறைக்கு வெளியில் என்னை அழைத்துச் சென்று தனது மடியில் அமர்த்தி சுப்பலக்ஷ்மி அம்மாள் மதிய உணவை ஊட்டிவிட்டார். என் கைகளில் 2 மாங்கனிகளை நான் இறுகப் பற்றியிருந்தேன். கனிகளைப் பார்த்ததும், திடீரென்று ஒரு பெரிய ஆண் குரங்கு என்னை நோக்கி ஓடி வந்தது. பயந்து போய் நான் சுப்பலக்ஷ்மி அம்மாளைத் திரும்பிப் பார்த்தபோது, எனக்கு உதவி செய்யும் பொருட்டு இரு கரங்களாலும் என்னை அணைத்தவாறு குரங்கினிடமிருந்து என்னைக் காப்பாற்ற முயன்றார். தனக்கு ஆபத்து விளையக்கூடும் என்பதை நன்கு உணர்ந்திருந்த சுப்பலக்ஷ்மி அம்மாளின் கையைக் குரங்கு கோபத்தில் நன்றாகக் கடித்ததால் சதை பிய்ந்து விட்டது. இரத்தம் கொட்டவே என்னை அருகிலிருந்தவர் யாரிடமோ கொடுத்துப் பார்த்துக் கொள்ளச் சொன்னார். அந்த நாட்களில் ரேபீஸ் (நாய்க்கடி) என்ற வியாதிக்கு மருந்து இல்லாத நிலையில் அவரை அந்த வியாதி பாதித்துவிடுமோ என்று மற்றவர்கள் பயந்தனர். இறைவனருளால், நல்ல வேளையாக அவருக்கு ஒன்றும் நேரவில்லை. நான் அந்த நிகழ்ச்சியை மறந்து விட்ட போதிலும் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டு சிகிச்சைபெற்ற அவருக்கு கையில் ஆழமான தழும்பு ஒன்று வாழ்நாள் முழுவதும் இருந்தது.

எனக்கு வயதான பின், அவருடைய கையிலிருந்த தழும்பைப் பார்த்த போது இது எப்படி நேர்ந்தது என்று அறிந்து கொள்ள விரும்பி, அவரிடம் ஆவலோடு கேட்டேன். குரங்கிடமிருந்து குழந்தையாகிய என்னைக் காப்பாற்ற முயன்ற போது அது ஏற்பட்டது என்று அவர் கூறிய போது நான் வருத்தமடைந்தேன். எனினும் என்னைச் சமாதானம் செய்யும் விதமாக ''வேண்டாம். நீ வருத்தப்படாதே! அம்மாதிரி நடந்ததற்கு நான்தான் உனக்கு நன்றி கூற வேண்டும். ஏனென்றால் அதன் பிறகு பல நாட்களுக்கு பகவானுடைய கவனம் என் மீதே இருந்தது. அவர் அடிக்கடி 'உனது புண் எப்படி இருக்கிறது? ஆறிவிட்டதா?' என்று விசாரிப்பார். பகவானுடைய பார்வை என்னை ரேபீஸிலிருந்து காப்பாற்றியது. அதனால் உனக்குத்தான் நான் நன்றி கூற வேண்டும்,'' என்று சுப்பலக்ஷ்மி அம்மாள் உரைத்தார். நான் அவருடைய பாதங்களைத் தொட்டு வணங்கி, காக்கும் அன்னையைப் போன்று (தாயாகிய தத்துவம்) நீங்கள் செயல்பட்டுள்ளீர்கள். உங்களுக்கு நான் எவ்வாறு நன்றி கூறுவது? என்று சொன்னபோது 'தாயாகிய தத்துவம்' என்ற சொல் சுப்பலக்ஷ்மி அம்மாளை நெகிழச் செய்தது. ''பகவானுடைய பக்தர்கள் எல்லோரையுமே இந்தத் தத்துவம் தான் காப்பாற்றுகிறது. பகவானே பலமுறை அதைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். ஆனால் பகவானைப் பற்றி எழுதும் பலரும், இந்தத் தத்துவத்தை புரிந்து கொள்ள இயலாததால், இதைப் புறக்கணித்து விடுகிறார்கள். தனது வாழ்க்கையில் இரண்டு, மூன்று முறை இந்தத் தாய்மைத் தத்துவம் செயல்பட்டு

அதன் பலனைத் தான் அனுபவித்துள்ளதாக, பகவானே குறிப்பிட்டிருக்கிறார்,'' என்பதாக சுப்பலக்ஷ்மி அம்மாள் கூறினார்.

ஒரு நாள் சாந்தம்மாள் தான் கண்ட கனவைப் பற்றி அவரிடம் கூறியதை சுப்பலக்ஷ்மி அம்மாள் என்னிடம் பகிர்ந்து கொண்டார். ''பகவான் ஹாலில் அமர்ந்திருந்தபோது, அவரது அருகில் கண்களைக் கூசச் செய்யும் ஒளியோடு இருந்த ஒரு பெண் தெய்வத்தை நான் கண்டேன். அதே சமயத்தில், அவரைப் போன்ற மற்றொரு பெண் தெய்வம் ஆச்ரமத்தைச் சுற்றி வந்து தன்னுடைய கடமைகளைச் செய்வதாகவும் உணர்ந்தேன். இந்தக் கனவினால் திகைப்படைந்த நான் அதைப் பற்றிய விபரங்களை பகவானிடம் தெரிவித்தேன். பகவான் தலையசைத்து 'ஆம்! நான் மலைமீதிருந்த போது ஒரு பெண்மணி (தேசூரம்மாள்) எனக்கு உணவளிப்பார். என்னுடைய இலைக்கருகில் மற்றொரு இலையையும் போட்டு இரண்டிலும் உணவைப் பரிமாறுவார். ஒரு நாள் இந்த இரண்டாவது இலையை யாருக்காகப் போட்டிருக்கிறீர்கள்?' என்று நான் கேட்டபோது அது அன்னைக்காக என்று அவர் கூறினார்,'' என்று தான் கூறுவதை சற்று நிறுத்திவிட்டு, ''உங்களுடைய கனவைப் போன்றே தேசூரம்மாளுக்கும் ஒரு கனவு வந்தது!'' என்று சாந்தம்மாளிடம் பகவான் கூறியதாகத் தெரிவித்தார் சுப்பலக்ஷ்மி. பின்னர் தொடர்ந்து மற்றொரு பக்தர் அப்பு சாஸ்திரியின் மனைவி சம்பந்தப்பட்ட வேறு ஒரு நிகழ்ச்சியை ''நான் நேரில் கண்டிருக்கிறேன்,'' என்று விளக்கத் தொடங்கினார். ''அந்த நாட்களில் காபி ஒரு அரிதான விலை உயர்வான பானம். அதனால் ஆச்ரமத்திற்கு வரும் பக்தர்கள், பகவானுக்கு அதில் விசேஷமான விருப்பம் ஏதுமில்லையென்பதை அறியாமல், தாங்கள் வரும் போது காபியை எடுத்து வருவார்கள். ஒரு நாள் அப்பு சாஸ்திரியின் மனைவி ஒரு பெரிய பாத்திரத்தில் தரம் வாய்ந்த காபியை பகவானுக்காக எடுத்து வந்தார். 'எனக்குக் காபியில் விருப்பமில்லையென்பது தான் உங்களுக்குத் தெரியுமே' என்று பகவான் கூறிய போது அப்பு சாஸ்திரியின் மனைவி 'நான் என்ன செய்வது? நான் கண்ட கனவில் அன்னை பார்வதி தேவி கோயிலின் முன் நின்று என்னை அழைத்தாள். 'என் மகன் காபி குடிக்காமலிருக்கிறான். அதனால் அதைத் தயார் செய்து அவனுக்கு எடுத்துச் செல்' என்று கூறியதால் நான் எடுத்து வந்தேன். என்னைக் குறை கூற வேண்டாம். இது அன்னையின்



**குழந்தை கணேசன் கையில் மாம்பழத்துடன்**
**(இடம்– வலம்) நாகலட்சுமி, வேங்கடராமன், பாலு, பகவானின் சகோதரி அத்தை, சுந்தரம்)**

கட்டளை' என்று கூறவே வேறு வழியில்லாமல் பகவான் அதை ஏற்றுக் கொள்ளும்படி ஆயிற்று. என்றாலும் 'என்னுடைய வாழ்க்கையில் குறுக்கிடுவதைத் தவிர அன்னைக்கு வேறு வேலையே இல்லை. நான் மலைமீதிருந்த போதும் இம்மாதிரியான ஒரு சம்பவம் நிகழ்ந்தது!' என்று பகவான் கூறியதாக சுப்பலக்ஷ்மி அம்மாள் தெரிவித்தார்.

பகவான் கூறிய அந்த குறிப்பிட்ட நிகழ்ச்சியைப் பற்றித் தெரிவிக்குமாறு சுப்பலக்ஷ்மி அம்மாளிடம் நான் கேட்டுக் கொண்டேன். (அந்த நிகழ்ச்சி தற்போது ஆச்ரமப் புத்தகங்களிலும் பதிவாகியுள்ளது) "மலை மீது இருந்த போது பகவானது அன்றாட வாழ்க்கை முறையில் 'இவ்வாறு தான்' என்ற நியமம் இருக்கவில்லை. காலை 8 மணிக்கு, இருப்பவர்கள் எல்லோரும் ஒன்று கூடி, பிக்ஷை எடுத்து வந்த உணவைப் பகிர்ந்து உண்பார்கள். அது அநேகமாக பழைய சாதமாக இருக்கும். இதன் பிறகு அவரவர் தங்களுக்கு விருப்பமான வேலைகளில் ஈடுபடுவார்கள். பகவான் நாள் முழுவதும் மலை மேல் சுற்றித் திரிவார். அதனால் 'என் கால் படாத இடமே மலையில் கிடையாது' என்று அவர் கூறுவதுண்டு. ஒரு நாள் அவரது பாதையில் வயதான ஒரு விறகு வெட்டும் பெண்மணியைத் தனது பாதையின் குறுக்கேக் கண்டார். வழியில் காலை நீட்டியபடி அவள் அமர்ந்திருந்ததால் அவர் சற்றுத் தயங்கி நின்றார். அவள் தன்னுடைய கால்களை மடிக்கவில்லை; இந்து கலாச்சாரப்படி தாண்டிச் செல்வது சரியல்ல என்பதால் பகவான் அவளைத் தாண்டி நடக்கவில்லை. தயங்கியபடி நின்ற பகவானை நோக்கி அந்த பெண்மணி வசைமாரி பொழிந்தாள். 'நீ எதற்காக மலையில் விடாமல் சுற்றித் திரிந்து கொண்டே இருக்கிறாய்? பேசாமல் ஓரிடத்தில் உட்கார்ந்து இருக்க மாட்டாயா?' என்று கேட்டாள். அவள் கூறிய வார்த்தைகளை இதயத்தில் வாங்கிக் கொண்ட பகவான் அதன் பிறகு ஸ்கந்தாச்ரமத்திலிருந்து எங்கும் போகவில்லை. பின்னர்தான் அடிவாரத்தில் ரமணாச்ரமத்திற்கு வந்தார். ஆனால் அவ்வப்போது நடப்பதற்காக மட்டும் வெளியில் சென்று வந்தாரே தவிர, மற்றபடி வேறெங்கும் போகவில்லை. அவரிடம் கேள்வி கேட்பதில் எனக்கிருந்த ஆர்வத்தைக் கண்ட சுப்பலக்ஷ்மி அம்மாள் தொடர்ந்து, "அந்தக் பெண்மணி யார்?" என்று நாங்கள் பகவானிடம் கேட்ட போது 'வேறு யார்? லோக நாயகியின் தாய்மைத் தத்துவத்தைத் தவிர வேறு யாராக இருக்க முடியும்?' என்று அவர் பதில் கூறினார்," என சுப்பலக்ஷ்மி அம்மாள் நினைவு கூர்ந்தார்.

பக்தியினால் என்னுள் உணர்ச்சிகள் பொங்கி எழவே, நான் மிகுந்த பணிவோடு பகவானைப் பற்றிச் சுப்பலக்ஷ்மி அம்மாள் என்ன நினைத்தார்? எனக் கூறுமாறு வேண்டிக் கொண்டேன். "எனக்கு பகவானே தாய். ஒருவர் தன் தாயிடம் அணுகுவது போல் பகவானை அணுகினால் அவரை உறுதியாகப் பற்றிக் கொள்வது சுலபமாக இருக்கும். நான் சந்தித்த அன்னையர்களில், கருணையில் மிகுந்தவர் பகவானே என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை. சமுதாயத்தால் புறக்கணிக்கப்பட்ட, கல்வியறிவற்ற அபலைப் பெண்ணான எனக்கு விடிவு கிடைக்கும் என என்னால் நினைத்துப் பார்த்திருக்க முடியுமா? ஆனால் பகவான் தன் அருளால் என்னைத் தாழ் நிலையிலிருந்து உயர்த்தி ஆன்ம விடுதலை தந்து காப்பாற்றியுள்ளார்," என்று சுப்பலக்ஷ்மியம்மாள் நன்றிப் பெருக்குடன் வெளியிட்ட சொற்கள் என்னை மெய் சிலிர்க்க வைத்தன. ஏனெனில் அவர் கூறியது போன்று பகவானது தாய்மைத் தத்துவத்தின் பாதுகாப்பை, அவரைப் பின்பற்றிச் செல்லும் பலரும் இன்றும் கண்கூடாகக் காண்கின்றனர். கேட்பதற்குக் காதுகளும், பார்ப்பதற்குக் கண்களும் மட்டும் இருந்தாலே போதும். 'தாயான தத்துவத்தை' புரிந்து கொள்ளலாம்.

ஸ்ரீ கிருஷ்ண பகவானைப் பற்றி ஒரு முறை கூறும் போது, "பல யுகங்களுக்கு முன் ஆயர்குலத்தில் உதித்து எளிமையான கோபியர்களுக்கு முக்தியளித்தார் ஸ்ரீ கிருஷ்ணர். அதே

போன்று சமையல் பணியில் ஈடுபட்டு அறியாமையில் மூழ்கியிருந்த எங்களைப் போன்ற பெண்களைக் காத்தார் ஸ்ரீ ரமண பகவான்'' என்று சுப்பலக்ஷ்மியம்மாள் கூறியபோது பகவானை அவர் அணுகிய முறையைக் கண்டு மனம் நெகிழ்ந்தேன். பகவானிடம் இவ்வளவு முழுமையாகப் பக்தி கொள்ள அவரால் எப்படி முடிந்தது? என்று நான் கேட்டதற்கு, ''பகவானுடன், அவர் அருகாமையில் சமையலறையில் பணியாற்றும் பேற்றைத் தந்ததன் மூலம் அவர் எங்களுக்கு உத்திரவாதமளித்த அந்த உன்னதப் பதவியை அடைவதற்குப் பண்டைக்கால யோகிகளும், ரிஷிகளும் எவ்வளவு கடுமையான விரதங்களையும் தவத்தையும் புரிந்தார்கள் என்பது உனக்குத் தெரியாதா? அன்றாடம் நாங்கள் செய்த சிறு சிறு பணிகள் எங்களுக்கு முழுமையான ஆனந்தத்தையும், அஞ்ஞான இருளை நீக்கும் ஒளியையும் தந்தன. சாதாரணப் பணிகளான மாவு அரைத்தல், சமைத்தல், பக்தர்களுக்கு உணவுக் கூடத்தில் உணவு பரிமாறுதல் போன்றவற்றின் மூலமாகவே நாங்கள் பரவசநிலையை எய்தினோம். இது எவ்வாறு சாத்தியமாயிற்று? பகவானுடைய அருகாமை என்ற அருளைப் பெற்றதன் பயனாக, மனம் இதயத்தோடு ஒன்றும் பெருநிலையை நாங்கள் அடைந்தோம். எங்கள் இதயம் அவரோடும் அவருள்ளும் நிலைத்தது; நாங்கள் செய்த வேலைகளனைத்திலும் அவரே நிறைந்து நின்றார். இத்தகைய ஆன்மீகப் பேரானந்த நிலையை அனுபவித்தறியாத ஒருவருக்கு மனித இதயம் எவ்வளவு ஆனந்தத்தை உள்ளடக்கவல்லது என்பதைக் கற்பனை கூடச் செய்ய இயலாது'' என்றுரைத்த சுப்பலக்ஷ்மியம்மாள் தனது குருவைப் போற்றிப் புகழும் போது அதில் ஆழ்ந்து போன நிலையில் ஸத்தியம் செய்வது போல் கைகளை அடித்துப் பேசினார். ''பகவானே எங்கள் உண்மையான லட்சியம்; அவரே எங்கள் வீடு; அவரைத் தவிர எங்களுக்கு வேறெதுவும் இருக்கவில்லை. ஒளி பொருந்திய அவரது உருவமே எங்களுக்குப் போதுமானதாக இருந்தது. அவருடன் வாழ்ந்து அவரோடு பணியாற்றியவர்களுக்கு மட்டும்தான் அவர் எவ்வளவு உன்னதமான குரு என்பதைப் புரிந்து கொள்ள முடியும். வாழ்க்கையில் அறிந்து கொள்ள வேண்டிய மிக உயர்ந்த உண்மையான வேதாந்தத்தை, தினசரி வாழ்க்கையிலுள்ள அற்பமான விஷயங்கள் மூலமே எங்களுக்குப் போதித்தார். அவருடைய வசீகர சக்தியின் ஆழத்தை உணர்ந்து கொள்ளக்கூட இயலாத எங்களை அடியோடு மாற்றியருளினார். பகவான், தன் எல்லையில்லாக் கருணையால் பரிபூரண ஞானத்திற்கு எங்களை அழைத்துச் சென்றார்'' என சுப்பலக்ஷ்மியம்மாள் மனம் நெகிழ்ந்து உரைத்தார்.

எனது உடலைக் காத்த தாய்மைத் தத்துவமாகவே என் கண்களுக்குக் காட்சியளித்த சுப்பலக்ஷ்மியம்மாளை ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்தேன். அவர் என்னுடன் பகிர்ந்து கொண்ட விஷயங்களின் மூலமாக இறைவனது ஸாம்ராஜ்யத்தை நான் கண நேரம் காணுமாறு செய்தார்.



# 48 சம்பூர்ணம்மாள்



பகவான் சாதாரணமாக யாரையும் ஒப்பிட்டுப் பேச மாட்டார் என்றபோதும், சம்பூர்ணம்மாளைப் பற்றிக் கூறும்போது “ஆச்ரமத்தில் சமையல் செய்பவர்களில், சம்பூர்ணம்மா சமையலில் ஒரு தனி ருசி,” என ஒருமுறை கூறினார். (சம்)பூர்ணம் என்றால் சமையல் அகராதியில் கொழுக்கட்டையினுள் வைக்கப்படும் இனிப்புப்பொருள் என்பது சாதாரணமான அர்த்தம். ஆனால் அத்யாத்மமாக பார்த்தால், ‘பூரண ஆனந்தம்’ என்று பொருள்படும். பகவான் பிறந்த ஊரான திருச்சுழிக்கு அருகிலுள்ள ஒரு கிராமத்தில் பிறந்தவர் சம்பூர்ணம்மாள். பகவானுடைய மரணானுபவம், அவர் திருவண்ணாமலைக்குச் சென்றது, பின்னர் பகவான் ரமண மஹர்ஷி எனப் பிரபலமானது, இவை அனைத்தையும் அவர் அறிந்திருந்தார். அவருடைய குடும்பத்தார் இந்நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றையும் மிகுந்த ஆர்வத்தோடு கேட்டறிந்த போது, பகவானைத் தரிசிக்க விரும்பினர். அவர்கள் சம்பூர்ணம்மாளையும் உடன் வரும்படி அழைத்தனர். ஆனால் தன் கணவருக்கும், அவரது சுற்றத்தாருக்கும் மிகுந்த ஈடுபாட்டுடன் பணிவிடைகள் செய்து வந்ததால், அவர் வர மறுத்துவிட்டார். சிலகாலம் கடந்தபின் அவரது கணவர் மறைவிற்குப் பின், தாங்கொணாத் துயரத்தில் மூழ்கியிருந்த அவரது மன அழுத்தத்தை நீக்க விரும்பிய அவரது பிறந்தவீட்டார், பகவான் ரமணரால் மட்டுமே அவருக்கு உதவ முடியும் என்று திடமான நம்பிக்கை கொண்டிருந்ததால், மீண்டும் திருவண்ணாமலைக்கு வருமாறு அவரை அழைத்தனர். என்றாலும் அழுது புரண்டு துயரத்தில் மூழ்கியிருப்பதையே சம்பூர்ணம்மாள் விரும்பியதால் இம்முறையும் தரிசனத்திற்கு வர மறுத்தார்.

அவருடைய மனநிலை இவ்வாறு இருந்தபோதும், பகவான் அவருக்கு எவ்வாறு அருள் புரிந்தார் என்பதைப் பாருங்கள். ஒரு நாள், அவர் மதுரை மீனாக்ஷி அம்மன் கோயிலில் கர்ப்பக்ருஹத்தில் பிரார்த்தித்த வண்ணம் இருந்தபோது, தேஜஸ்ஸுடன் விளங்கிய ஒரு இளம் பிராம்மணச் சிறுவன் குறுக்கிட்டு, “நீங்கள் எனக்கு உணவு சமைத்துத் தருவேளா?” என்று வலியுறுத்திக் கேட்டான். இது ஒரு அசாதாரணமான வேண்டுகோள். சாதாரணமாகப் பிக்ஷை கேட்பவர்கள், உண்பதற்கு உணவு வேண்டுமென்பார்களேத் தவிர, இந்த விநோதமான இளைஞனைப் போன்று, ‘சமையல் செய்து தருவேளா?’ என யாரும் கேட்பதில்லை. தனது பிரார்த்தனையை முடிக்கும் சமயத்தில் இருந்த சம்பூர்ணம்மாள், பிராம்மண இளைஞனுக்கு பிக்ஷயளிக்கும் வாய்ப்பு தனக்குக் கிடைத்துள்ளதாக மகிழ்ச்சியடைந்தார். ஆனால் அந்த இளைஞன், திடீரென மறைந்துவிட்டான். எங்கு தேடியும் அவனைக் காணாத போது பகவான் ரமணரே தன்னைத் தேடி வந்திருப்பாரோ என்ற எண்ணம் அவருள் எழுந்தது.

1932-ம் ஆண்டு தன் சகோதரி, அவரது கணவர் டாக்டர் நாராயணய்யர் இவர்களுடன் சம்பூர்ணம்மாள் திருவண்ணாமலைக்குச் சென்றார். அப்போதும் அவர் துயரத்திலிருந்து மீண்டிருக்கவில்லை. ஆனால் பகவானுடைய ஒரே பார்வை அவரை முழுமையாக மாற்றியது. அந்தப் பார்வை இதமாக இருந்ததால் அவர் தொடர்ந்து பகவானை நோக்கியவாறு நின்றார். பகவானும் தனது அருட்பார்வையை செலுத்தினார். இதனால் விளைந்த பயனோ மிக அற்புதமானது. வந்த மூவரும் இருபது நாட்கள் ஆச்ரமத்தில் தங்கியிருந்தனர். சம்பூர்ணம்மாள் எப்போதும்

சுறுசுறுப்பாக இயங்கக் கூடியவர்; தியானம் பண்ணும் வழக்கமில்லை. ஆனால், பகவானுடைய ஸாந்நித்தியத்தில் அமர்ந்திருந்தபோது அவரையும் அறியாமலே அவர் தியான நிலைக்குச் சென்று விடுவார். பகவானது ஸந்நிதியில் எண்ணங்கள் எழாத நிலையில் இருந்தாரென்றாலும், அவரை விட்டு அகன்று ஊருக்குள் சென்று விட்டால், மனதில் பொங்கிவரும் எண்ணங்கள் அவரைத் திக்குமுக்காடச் செய்தன. மறுதினம் பகவானுடைய ஸாந்நித்தியத்தில், அவருடைய அருள் நோக்கில் இருந்த போது மீண்டும் எண்ணங்களற்ற நிலையை அவரது மனம் அடைந்தது. 'இது அத்யாத்ம அனுபவமேயன்றி, மனதின் செயலன்று!' என்பதை அவருக்கு உணர்த்தும் பொருட்டு 'நான் யார்' என்ற புத்தகத்தின் பிரதியொன்றை பகவான் அவருக்கு வழங்கினார்.

இருபது தினங்களுக்குப் பிறகு தனது கிராமத்திற்குத் திரும்பிய சம்பூர்ணம்மாள், தான் அமைதியற்றிருப்பதை உணர்ந்தபோது, ஆச்ரமத்தில் தான் அனுபவித்த அமைதிக்கு பகவானுடைய ஸாந்நித்தியமே காரணம் என்பதைப் புரிந்து கொண்டார். ஆச்ரமத்திற்கு அவர் திரும்பிச் செல்ல விரும்பினார். அவரது நிலையை புரிந்து கொண்ட அவருடைய மாமாவின் துணையோடு, மீண்டும் ஆச்ரமத்திற்கு வந்தார். அந்தச் சமயத்தில் ஆச்ரமத்தில் சமையல் செய்து வந்த சாந்தம்மாள் வெளியூர் செல்ல வேண்டியிருந்தது. பகவான் முன்னிலையிலேயே, "நீங்கள் சமையல் பொறுப்பை ஏற்றால், சாந்தம்மாளுக்குச் செல்ல வசதியாக இருக்கும், உங்களால் முடியுமா?" என நிர்வாகத்தினர் வினவியபோது, அவர் புளகாங்கிதமடைந்தார். அச்சமயம் பகவான் அவரைத் திரும்பிப் பார்த்தவுடன், "ஓஹோ! இது உங்கள் திருவிளையாடல் தானா?" என்ற எண்ணம் சம்பூர்ணம்மாளுக்குள் எழுந்தது. இவ்வாறு ஆச்ரம சமையல் பொறுப்பை அவர் ஏற்றுக் கொள்ளுமாறு ஆயிற்று. அன்று சமையல் செய்து பகவானுக்குப் பரிமாறியபோது, 'எனக்கு உணவு சமைத்துத் தருவேளா?' என மதுரையில் கேட்ட பிராம்மண இளைஞன் பகவானே, என்பதை அவர் உணர்ந்து கொண்டார். பகவானுக்கு முதன்முதலாக உணவளித்த அந்த அனுபவமே அவருடைய அத்யாத்மத் தேடலின் ஆரம்பமும் முடிவுமாயிற்று. பிராம்மணன் என்று தனிப்பட்ட ஒருவருக்கு தான் உணவளிக்கவில்லை என்பதையும், அனைவருள்ளும் உறையும் அந்தர்யாமியான இறைவனுக்கே உணவு அளித்ததாக உணர்ந்த அவர், ஆச்ரமத்திலேயே தங்கி, பகவானுக்குச் சமைக்கும் பொறுப்பை ஏற்றார்.

சம்பூர்ணம்மாளுக்கு ஏற்கனவே சமைக்கத் தெரியுமென்றாலும், அதன் நுணுக்கங்களையும், மிக நன்றாகச் செய்யும் விதத்தை அவருக்குக் கற்றுத் தந்தவர் பகவானே! பருப்பு வகைகள், தானியங்கள், காய்கறிகள் இவற்றை விதவிதமாகத் தயார் செய்வதைக் கற்பித்த அதே சமயத்தில், பல ஆன்மீகக் கதைகளையும் சொல்வார். தனது இளமைப் பருவம் பற்றிய கதைகளில் துவங்கி, மெதுவாக வேதாந்தம் பற்றியுரைத்துக் கடைசியில் ஆத்ம விசாரத்தின் முக்கியத்துவம் பற்றிக் கூறுவார். 'நான் இருக்கிறேன்' என்ற தன்னிருப்பு நிலையே மிக உன்னதமான நிலை, என்று பகவான் போதித்தார். ரிபுகீதை என்ற புத்தகத்தை அவருக்குத் தந்து, அதன் சிறப்பையும் விளக்கினார். "பகவான் எங்களுக்குக் கற்றுத் தந்தது இவை மட்டுமன்று; பணிகளைச் செய்வது, பிறரிடம் அன்பு செலுத்துவதற்கு ஸமமானது, என்றும் போதித்தார். நாம் அனைவருமே இறைவனுடைய ஸாந்நித்தியத்தில்தான் இருக்கிறோம் என்பதையும், செய்யும் பணிகள் அனைத்தும் இறை பணி என்பதையும், அவருடைய ஸாந்நித்தியத்தால் புரிய வைத்தார். சமையல் வேலையின் மூலம் தத்துவத்தையும், ஆன்மீகத்தையும் எங்களுக்கு உபதேசித்தார். உதாரணமாக, ஒரு நாள், 'காய்கறிகள் வேக வைக்கும் போது அவற்றை மூடியால் மூட வேண்டும். அப்போதுதான் அவற்றின் சுவை குன்றாமல், உண்பதற்கு ஏற்றதாக இருக்கும். மனமும் அது போன்றதே. மனதின் மேல் மூடியிட்டு, அதை நிதானமாக, விசாரத்தில் ஈடுபடுத்த வேண்டும். அப்போதுதான் இறைவன் தன்னை ஏற்றுக்

கொள்ளும் விதத்தில், உகந்த உணவாக, ஸாதகன் பக்குவமடைய முடியும். பகவானால் மிகுந்த கவனத்துடன் தரப்படும் சமையல் குறிப்புக்களை வைத்து, அவர் ஒரு போஜனப் பிரியர் என்றும், நன்கு சாப்பிடுபவர் என்றும், அவரை அறியாதவர்கள், தவறான அபிப்பிராயம் கொள்ளக்கூடும். இதற்கு நேர்மாறாக, அவருக்கு இலையில் பரிமாறப்படும் சிறிதளவு பதார்த்தங்கள் - இனிப்பு, புளிப்பு, காரம் இவையனைத்தையும் - ஒன்றாகக் கலந்து உண்பார் என்பதுதான் உண்மை. சுவையைப் பற்றிச் சிறிதும் கவலைப்படாமல் கையிலுள்ளதை விழுங்கிவிடுவார். இதுபற்றி நாங்கள் சில சமயங்களில் வினவியபோது அவர் சிரித்தவாறே, "ஒரு சுவை போறாதா? பன்சுவை எதுக்கு?" என்று பதிலிறுத்தார். மற்றொருமுறை 'எதற்காக இத்தனை வேறுபாடுகள்? இவையெல்லாம், பிரித்துப் பார்க்க முடியாத ஒரேபொருளாக இருக்கலாமே?' என்று கேட்டதாக சம்பூர்ணம்மாள் தெரிவித்தார்.



**பழைய ஆச்ரம சமையலறை உள்ளே**

அத்யாத்ம ஸாதகன், சிரமமின்றி எளிதாகவும் விரைவாகவும் எவ்வாறு பக்குவமடைய முடியும் என்பது குறித்து, சம்பூர்ணம்மாள் நமக்கெல்லாம் ஒரு குறிப்பளித்துள்ளார். "இந்து சாஸ்திரங்களில் உறுதியளித்துள்ளபடியால், குருவின் அருளால் மட்டுமே இது ஸாத்தியமாகும். குருவின் அருள் வலையிலிருந்து தப்ப முடியாது என்பதால், மிக உன்னத நிலையான ஆத்மானந்தத்தை அதன் மூலமே பெற இயலும்", என்று சம்பூர்ணம்மாள் கூறியுள்ளார். "பகவான் சமையல் பணியில் மிகுந்த அக்கறையுடன் ஈடுபட்டு முழு கவனத்துடன் செய்வார். அதற்குத் தேவையான பொருட்களின் அளவை அவர் துல்லியமாக உணர்ந்திருந்தார். எப்போதுமே அவர் மிகத் திட்டமாகச் செய்வாரென்பதால், அம்மாதிரியே செய்யுமாறு எங்களையும் அறிவுறுத்துவார். அவருடைய கட்டளைக்கு நாங்கள் கீழ்ப்படிந்தாலே போதுமானது. சமைக்கும் போது அவரை நினைவில்

கொண்டால், அன்று செய்யும் பதார்த்தங்கள் சுவையாக அமைந்து விடும் என்பதை உணர்ந்து கொண்டு விட்டதால், முதலில் பகவானைத் தியானித்த பின்னரே, தயாரிக்கும் பதார்த்தத்திற்குச் சுவையூட்டத் தேவையான பொருட்களைச் சேர்க்கப் படித்தோம். பிறகு மெதுவாக, எந்தக் காரியத்தில் இறங்குவதானாலும், அது மிகச்சாதாரணமானதாகவோ, லௌகிகமாகவோ இருந்தாலும் கூட, அதற்கு முன் பகவானை நினைப்பது என்ற பழக்கத்தை நாங்கள் ஏற்படுத்திக் கொண்டோம். இதனால் காரியங்களனைத்துமே எப்போதும் நன்றாக நடந்ததைக் கண்டோம். அதனால், பகவானைத் தியானிப்பதென்பது எங்கள் வாழ்வின் ஒரு அங்கமாகவே மாறிவிட்டது. அதோடு, நாங்கள் எங்கள் கவனம் முழுவதையும் அவரிடம் திருப்பவும் கற்றுக் கொண்டோம். பயமோ, கவலையோ, வேதனையோ இவற்றில் எதை அனுபவித்தாலும், அவரை நினைத்த மாத்திரத்தில் அவரது உதவிக்கரங்கள் எங்களைக் காப்பதை எங்களால் உணர முடிந்தது,'' என்று உரைத்தார். சம்பூர்ணம்மாள், தனது வார்த்தைகளை உறுதி செய்யும் விதமாக, ''ஆச்ரமத்திற்கு வருவதற்கும், பின் வீடு திரும்புவதற்கும் காட்டுப் பாதையில் நான் தனியாக வரவேண்டியிருந்தது. மலையடிவாரத்திலிருந்த அந்த இடத்திற்குச் செல்ல, சில சமயங்களில் நான் அச்சப்படுவதை அறிந்த பகவான், 'நீங்கள் எதற்காக பயப்படவேண்டும்? நான் உங்களுடன் இல்லையா என்ன?' என்று கூறி தைரியமளித்தார். இதையே மீண்டும் உறுதி செய்வது போன்று, ஒரு நாள் சின்னஸ்வாமி என்னிடம், 'எதற்காக நீங்கள் தனியாக வருகிறீர்கள்? உங்களுக்குப் பயமாக இல்லையா?' என்று கேட்டபோது, பகவான் 'அவர் தனியாகவா இருக்கிறார்? எப்போதுமே நான் அவரோடு இல்லையா?' என்று குறுக்கிட்டு வினவினார், என்றார் சம்பூர்ணம்மாள். அவர் கூறியபடி பகவான் மீது நமது முழு கவனத்தையும் செலுத்தினால், நம்மை வழி நடத்தி, மேன்மேலும் பக்குவமடையச் செய்தவாறு அவர் எப்போதுமே நம்முடன் இருக்கிறார் என்பதை நிச்சயமாக உணர்வோம்.

சுப்பலக்ஷ்மியம்மாள், சாதாரண அன்றாட லௌகிக அனுபவங்கள் மூலம் எவ்வாறு உயர்ந்த ஆன்மீக நிலைக்குப் பகவானால் அழைத்துச் செல்லப்பட்டார் என்பதை விளக்கும் மூன்று சம்பவங்களைச் சம்பூர்ணம்மாள் என்னுடன் பகிர்ந்து கொண்டார். உணவில் மோருக்குப் பதிலாகத் தயிராகவே சேர்த்துக் கொள்ளும்படி டாக்டர்கள் பகவானிடம் கூறியிருந்தனர். அனைவருக்கும் பரிமாறும் அளவிற்குத் தயிர் இல்லாத காரணத்தால், தான் மட்டும் தனிப்பட்ட முறையில் அதை ஏற்க பகவான் விரும்பவில்லை. ஒரு நாள் பகவானுக்கு மோர் பரிமாறும்போது, தான் மிகவும் சாமர்த்தியமாகச் செய்வதாக எண்ணி, ரகசியமாக ஒரு கரண்டி தயிரை, மோர்வாளியில் வைத்திருந்த சுப்பலக்ஷ்மியம்மாள், பகவானுக்கு அதைப் பரிமாறினார். பகவான் அவரை முறைத்துப் பார்த்து, வேதனை தோய்ந்த குரலில் 'சுப்பலக்ஷ்மி! நீங்கள் என்ன காரியம் செய்தீர்களென்பது உங்களுக்குத் தெரியுமா? எனக்கு விஷத்தை அளித்துள்ளீர்கள். பக்தர்களையும் என்னையும் பிரித்துப் பார்த்துச் செயல்படுவது விஷத்தை அளிப்பது போன்றதுதான்,' என்று கூறினார். அம்மொழிகளைக் கேட்ட சுப்பலக்ஷ்மியம்மாள் பயந்து நடுங்கிப் போனதால், மூன்று நாட்களுக்குக் காய்ச்சலால் அவதியுற்றார். சாந்தம்மாள் பகவானிடம் சென்று, ''பகவானே! நீங்கள் சுப்பலக்ஷ்மியம்மாளைக் கடிந்து கொண்டதால், பாவம்! அவருக்கு ஜுரம் வந்துவிட்டது. அவரை மன்னிக்க மாட்டீர்களா?'' என்று கேட்டார். பகவான் சிரித்தவாறு ''நான் அவரையா கோபித்துக் கொண்டேன்? அவர் நடந்து கொண்ட விதத்தையல்லவா கண்டித்தேன்!'' என்று கூறிய பின்னரே சுப்பலக்ஷ்மியம்மாளின் காய்ச்சல் இறங்கியதாகச் சம்பூர்ணம்மாள் தெரிவித்தார்.

இரண்டாவது நிகழ்ச்சியும் மிக அருமையான ஒன்று. ''ஒரு முறை, சில நண்பர்களுடன் காசி யாத்திரை செல்ல விரும்பி பகவானிடம் அனுமதி கோரினேன். ''அருணாசலத்தில் இல்லாத எதை



பகவான் ஆராதனை விழா – ரமணாச்ரமம்

நீங்கள் காசியில் எதிர்பார்க்கிறீர்கள்? காசி விஸ்வநாதர் இங்கேயே இருக்கிறார். உங்களுடனேயே அவர் இருக்கையில், நீங்கள் ஏன் அவரைத் தேடி அங்கு செல்கிறீர்கள்?'', எனக் கூறித் தானே காசி விஸ்வநாதர் என்பதைக் குறிப்பால் உணர்த்தினார் பகவான். அவருடைய அனுமதி கிடைக்காததால் நான் எனது எண்ணத்தைக் கைவிட்டேன். ஆனால் பகவானின் கருணையைப் பாருங்கள்! மறுநாளே பகவான் என்னிடம், 'சம்பூர்ணம்மாள்! நேற்று இரவு நான் கண்ட கனவில், காசி விஸ்வநாதர் கோயிலில் நீங்கள் தொழுவதாகக் கண்டேன்,' என்று கூறியபோது, அது கனவு மட்டும் தானா? என்ற வியப்பு எனக்கு எழுந்தது. என் விருப்பத்தைப் பூர்த்தி செய்யும் பொருட்டு, பகவானே என்னை அங்கு அழைத்துச் சென்று தரிசனம் செய்து வைத்து, மீண்டும் அழைத்து வந்ததாக எனக்குத் தோன்றியது,'' என்று சம்பூர்ணம்மாள் உரைத்தார். சம்பூர்ணம்மாளைச் சுற்றியிருந்தவர்கள் அவரிடமிருந்த குறைகளைக் கண்ட போதும், பகவான், அவரிடம் நிச்சயமாக மிகுந்த கருணையோடு நடந்து கொண்டார் என்றுதான் கூற வேண்டும். அவருடைய குறைகள் எதையும் பொருட்படுத்தாமல், அவற்றைக் களைவதிலும், ஆன்மீக நிறை நிலைக்கு அவரை உயர்த்துவதிலும் மட்டுமே கண்ணும் கருத்துமாக இருந்தார்.

மூன்றாவது நிகழ்ச்சி, பகவானுக்கு மனித குலத்திடம் இருந்த ஈடு இணையற்ற அன்பையும், அக்கறையையும் விளக்குவதாகவும், அசாதாரண தனித்தன்மை வாய்ந்ததாகவும் உள்ளது. ஆன்மீகத்தில் மனித குலத்திற்கே முதலிடம் என்பதையும், கருணையே எல்லாவற்றிலும் உயர்ந்த, கடைப்பிடிக்க வேண்டிய விதி என்ற பண்டைய நம்பிக்கையையும் உறுதி செய்வதாக உள்ளது.

சம்பூர்ணம்மாள் கூறினார், ''அந்த நாட்களில் மாதவிடாய் காலங்களில், ஆச்ரமத்திற்குள் செல்லவோ அல்லது உணவு அருந்தவோ பெண்கள் அனுமதிக்கப்படவில்லை. ஒரு மாதம் எனக்கு உணவளித்து உதவி செய்ய என் உறவினர்கள் யாருமே இருக்கவில்லை என்பதுடன், வேறு ஏற்பாடு எதையும் என்னால் செய்து கொள்ளவும் இயலவில்லை என்பதால் நான் பட்டினி கிடக்க நேர்ந்தது.

பிக்ஷை எடுப்பவர்கள், இரவு நேரங்களில் சாதாரணமாகத் தங்கும், ஆச்ரமத்திற்கு எதிரிலிருந்த மண்டபத்தில் நான் அமர்ந்திருந்தேன். பகவான் என்னைப் பற்றி விசாரித்த போது, மூன்று தினங்களுக்கு நான் ஆச்ரமத்திற்குள் வரமாட்டேன் என்ற விஷயம் அவருக்குத் தெரிவிக்கப்பட்டது. உடனே 'அவர் எங்கே இருக்கிறார்?' என பகவான் கேட்க, 'ஆச்ரமத்திற்கு முன் உள்ள மண்டபத்தில்' என்று தெரிவிக்கப்பட்டது. "அவரை உள்ளே அழைத்து வந்து திருப்தியாகச் சாப்பாடு போடுங்கோ", என்று பகவான் உத்தரவிட்டார். பகவான் கூறியது வழக்கத்திற்கும் விதிகளுக்கும் முரண்பட்டதாக இருந்தபடியால் எல்லோருமே அதிர்ச்சியுற்று, 'அவர் சுத்தமான நிலையில் இல்லை' எனக் கூறித் தயங்கினர். 'யார் சுத்தம்? யார் அசுத்தம்? எல்லோரும் ஒன்றுதான். எந்த பேதமும் இல்லை,' என்று பகவான் அழுத்தமாகக் கூறினார்.

பகவான் இக்கட்டான ஒரு நிலையை உருவாக்கி விட்டார் என்பதைப் புரிந்து கொள்ளத் தென்னிந்திய பிராம்மணர்களை நாம் அறிந்துகொள்ள வேண்டியது அவசியம். அந்தக் காலத்தில், மாதவிடாய் சமயத்தில் பெண்களுக்கான விதிமுறைகள் மிகவும் கடுமையாகவும், கண்டிப்போடும் கடைப்பிடிக்கப்பட்டு வந்தன. அவற்றை மீறுவது என்றால், ஆச்ரமத்தின் தூய்மையை ஒட்டு மொத்தமாகக் கெடுத்ததற்காகச் சமுதாயத்தின் எதிர்ப்பைச் சந்திக்க நேரிடும்.

"பகவான் மீது மிகுந்த பக்தி கொண்டிருந்த ஒரே காரணத்தால், ஆச்ரமவாசிகள் வேண்டாவெறுப்பாகத் தயங்கியவாறு என்னை உள்ளே அழைத்தனர். பகவான் தானே அடுக்களைக்குச் சென்று உணவு எடுத்து வர விரும்பியபோதும், மற்றவர்கள் அவரைப் பொறுக்குமாறு கூறித் தடுத்து, தாங்களே உள்ளிருந்து உணவை எடுத்து வந்து, அவர் முன்னிலையிலேயே எனக்கு உணவளித்தனர். பழங்கால விதிமுறைகள் தகர்க்கப்பட்டு, பகவானது ஸாந்நித்தியத்தால் புனிதமாக்கப் பட்டது. ஆன்மீகத்தில் மனிதனுக்கே முதலிடம் என்பதையும், கருணையே மிக உயர்ந்த, கடைப்பிடிக்க வேண்டிய விதி என்பதையும் நமக்கு முழுமையாக உணர்த்துவதற்காகவே பகவான் அவ்வாறு செயல்பட்டார். வெகு சிலரே அதைப் புரிந்து கொண்டனர். ஆனால் பலரும் என்னைக் குத்துவதுபோல் கடுமையாக நோக்கியோ அல்லது எனக்கு உணவளிக்கச் செய்து, நான் அவர்களைத் தீட்டுப்படுமாறு செய்ததற்காக என் மீது வசைமாரி பொழியவோ செய்தனர்," என்று சம்பூர்ணம்மாள் கூறினார்.

ஒருநாள் அன்னையின் கோயிலுக்குச் சென்ற சம்பூர்ணம்மாளின் முகம் ஜ்வலித்தது. "நம் முன்னே பகவான் வைரங்களை வாரி இறைத்துள்ளார்," என ஆனந்தத்தில் கூச்சலிட்டார். அந்த வைரங்களைக் காணும் கண்களைப் பகவான் அவருக்கு அருளியிருந்தார்.

ஆச்ரமத்தில், பகவானின் ஆராதனை நாளில், இறைவனடி சேர்ந்த சம்பூர்ணம்மாளின் உடலை, மயானத்திற்கு எடுத்துச் செல்லவும், அவரது சிதைக்கு அவருடைய சகோதரியின் மகன் எரியூட்ட ஏற்பாடு செய்யவும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. பகவான் எனக்கருளிய பாக்கியங்களில் இதுவும் ஒன்று.



# 49 லோகம்மாள்



லோகம்மாள் 1930-களில் பகவானை முதலில் தரிசித்தார். மற்றெல்லா சமையல் பெண்மணிகளையும் போன்று, பகவானுடைய அந்த முதல் தரிசனம் லோகம்மாளையும் முழுமையாக அத்யாத்ம வாழ்க்கையில் ஈடுபடச் செய்தது. பகவானின் அந்த ஒரு பார்வை, அவரை பகவானிடம் முற்றிலுமாக சரணடைய போதுமானதாக இருந்தது. பக்தி நிறைந்த அவரது மாமா, லோகம்மாள் சிறு பெண்ணாக இருக்கும்போதே, லோகம்மாளுக்கு, 'ஓம் நம சிவாய' என்ற பஞ்சாக்ஷர மந்திரத்தை உபதேசித்திருந்தார். அதனால் குழந்தைப் பருவத்திலேயே அவரது கவனம் இறைவனிடம் இருந்தது.

குழந்தைப் பருவத்திலேயே கைம்பெண்ணாகிவிட்ட லோகம்மாளைக் குடும்பத்தாரும் சமுதாயமும் புறக்கணித்தனர். கிராமத்தில் அவருக்கிருந்த ஒரே தோழி தேனம்மாள் என்ற மற்றொரு விதவைப் பெண் மட்டுமே. தங்களுக்குத் தெரிந்த ஆன்மீக விஷயங்களை அவர்களிருவரும் பகிர்ந்து கொள்வார்கள். ஏற்கனவே அருணாசலத்திற்குச் சென்று பகவானைச் சந்தித்திருந்த தேனம்மாள் அடிக்கடி பகவானைப் பற்றிய நிகழ்ச்சிகளைக் கூறுவார். "நானும் பகவானிடம் சென்று அவரது திருப்பாதங்களில் அமர்ந்திருக்கும் வாய்ப்பைப் பெற மாட்டேனா?" என ஏங்கினார் லோகம்மாள். ஆனால் வசதியான குடும்பத்தைச் சேர்ந்த அவர் செல்வதற்கு அனுமதிக்கப்படவில்லை. அவருடைய வேண்டுகோளை யாருமே காதில் போட்டுக் கொள்ளவில்லை. ஆனால் மனப்பூர்வமான பிரார்த்தனை இறைவனது செவிகளில் விழாமல் போய்விடுமா என்ன? ஒரு நாள், ஒரு பெண்மணி, "ஏய், லோகம்மாள்! உன்னுடைய பகவான் அருணாசலத்தில் இறைவனடி சேர்ந்து விட்டார்," என்று செய்தித்தாளில் வந்திருந்த விஷயத்தைத் தெரிவித்தார். மனமொடிந்து லோகம்மாள் தொடர்ந்து அழுது கொண்டே இருந்தார். அந்தப் பெண்மணி குறிப்பிட்டது சேஷாத்ரி ஸ்வாமிகளின் மகாஸமாதியைப் பற்றித்தான். இதன் பிறகு விரைவிலேயே ஒரு நாள் லோகம்மாள் தனிமையில் இருந்த போது, தன்னை நோக்கி ரமண பகவான் நடந்து வருவதாகவும் தன்னை அழைப்பதாகவும் ஒரு காட்சியைக் கண்டார். மீண்டும் தனது சகோதரரிடம் மன்றாடிக் கேட்டுக் கொண்டபோது அவரும் மனமிரங்கி சம்மதம் தரவே, அருணாசலத்திற்கு அருகிலேயிருந்த திருப்பதிக்குத் தீர்த்த யாத்திரை சென்ற சில பெண்களுடன் அவரும் கிளம்பினார்.

அருணாசலத்தை அடைந்த லோகம்மாள் அக்காலத்தில் மற்ற பெண்கள் செய்தது போன்று, டவுனுக்குள் தங்கவேண்டி வந்தது. அந்த நாட்களில் இன்று போல் இல்லாமல், ஆச்ரமத்தில் காலையில் இட்லிக்குப் பதிலாக அரிசிக் கஞ்சியோ அல்லது காபியோ தான் வழங்கப்பட்டது. லோகம்மாள் ஆச்ரமத்திற்குள் நுழைந்த முதல் நாளே பகவான் அவரை அழைத்து, "இங்கு கஞ்சியோ காபியோதான் தருவார்கள். நீங்கள் இந்த இரண்டில் எதை அருந்த விரும்புகிறீர்கள்?" என்று கேட்ட போது, பகவானின் சிந்தனையில் ஆழ்ந்து போயிருந்த அவர் "எதுவானால் என்ன? எல்லாம் ஒன்று தான்" என்று கூறியவாறு பகவானின் ஸந்நிதியிலேயே இருக்க விரும்பிய அவர், பகவானைத் தொடர்ந்து அடுக்களைக்குச் சென்றார். அங்கு பகவானுக்குச் சமையல் வேலையில் உதவி செய்தார். ஹாலில் தமிழ் வேதாந்தப் பாடல்களை அவர் இனிமையாகப் பாடுவதை பகவானும்

ரசித்துக் கேட்பார். லோகம்மாள் நன்கு பாடுவாரென்பதால் ஏதாவது ஒரு பாடலைப் பாடுமாறு பகவானும் அவரிடம் கூறுவார்.

இதற்கிடையில் திருப்பதிக்குச் சென்றிருந்த பெண்கள் குழு திரும்பி வரவே, லோகம்மாள் ஊருக்குக் கிளம்பி குடும்பத்தாரிடம் செல்ல வேண்டியதாயிற்று. விடைபெற வேண்டிய சமயம் வந்தபோது பகவான் மிகவும் அன்புடன், "நீங்கள் ஊருக்குத் திரும்பிச் செல்லப் போகிறீர்களா?" என்று அவரிடம் கேட்டபோது அது லோகம்மாளின் இதயத்தை அடியோடு உலுக்கியது. பகவான், 'உபதேச ஸாரத்தின்' ஒரு பிரதியை அவருக்குத் தந்தபோது "பகவானே! உங்களைத் தவிர என்னைச் சேர்ந்தவரென்று சொல்லிக் கொள்ள எனக்கு யாருமே இல்லை," என அழுதுகொண்டே இருந்த லோகம்மாள் தொடர்ந்து, "என் குடும்பத்தார் என்னைத் துன்புறுத்துகிறார்கள். எனக்குப் போவதில் விருப்பமில்லாத போதும் அவர்களுடைய வற்புறுத்தலுக்காகச் செல்ல வேண்டியுள்ளது. எப்படியாவது நீங்கள் உங்கள் காலடியில் என்னை இழுத்துக் கொள்ள வேண்டும். உங்கள் அடிமையாகப் பாதங்களில் விழுந்து கிடப்பேன். அருள் புரிய வேண்டும்," என்று மனமுருகி அழுதுப் பிரார்த்தித்தவரை நீண்ட நேரம் கருணை பொங்க பகவான் பார்த்துக் கொண்டிருந்தார். அந்தப் பார்வை லோகம்மாளிடமே நிலைத்து விட்டது.

சமையல் பெண்மணிகளிடம் பகவான் செலுத்திய முதல் பார்வை அவர்களனைவரையும் ஆட்கொண்டு விட்டது. அவர்களிடம் தனிப்பட்ட தன் அன்பையும் பகவான் காட்டினார். கணக்கில்லா பக்தர்கள் அவருக்கு இருந்த போதும், அவர்கள் ஒவ்வொருவரிடமும் தனிப்பட்ட கவனத்தைச் செலுத்தினார், என்பதே பகவானுடைய தனிச் சிறப்பு. சமையல் பணி செய்த இந்த ஐந்து பெண்மணிகளுக்கும் ஆன்மீகத்தில் ஆழ்ந்து மூழ்க ஒவ்வொருவருக்கும் ஒரு புத்தகத்தை அவர் அளித்துள்ளார். சாந்தம்மாளுக்கும், லோகம்மாளுக்கும் 'உபதேச ஸாரம்' புத்தகத்தையும் சங்கரம்மாளுக்குக் கைவல்ய நவநீதத்தையும், சுப்பலக்ஷ்மியம்மாளுக்கு 'ரிபு கீதையையும்' சம்பூர்ணம்மாளுக்கு 'நான் யார்' புத்தகத்தின் ஒரு பிரதியையும் கொடுத்துள்ளார். ஒவ்வொருவரும் உண்மையை உணர்ந்து கொள்ளக் கூடிய வாய்ப்பு — இதயத்தில் 'நான் இருக்கிறேன்' என்ற அனுபவத்தைப் பெறக்கூடிய வாய்ப்பு அவர்களுக்கு அளிக்கப்பட்டது.

ஊருக்குத் திரும்பிய லோகம்மாள், பகவானின் அருளால் ஈர்க்கப்பட்டு பலவந்தமாகக் குடும்ப பந்தத்தை முறித்துக் கொண்டு, திருவண்ணாமலை வந்து ஆச்ரமத்தில் சமைக்க ஆரம்பித்தார். இச்செயலைப் பகவான் வெகுவாகப் பாராட்டினார். ஒரு நாள் அடுக்களைக்குப் பகவான் வந்த போது சாம்பார் கொதித்துக் கொண்டிருந்ததைக் கண்டார். "இன்னுமா அது அடுப்பிலே உள்ளது?" என்று லோகம்மாளிடம் கேட்ட போது அவர், "ஆம் பகவானே! இன்னும் சிறிது நேரம் கூட அது கொதிக்க வேண்டும்," என்று பதிலளித்தார். உடனே, "லோகம்மாள் மட்டும்தான் நான் கூறுவதைச் சரியாகப் புரிந்து கொண்டு சொன்னபடி செய்கிறார். சாம்பார் முழுவதும் பக்குவமாகி விட்டதை உறுதிப் படுத்திக் கொள்கிறார். மற்றவர்களெல்லாம் சமைத்து முடிக்க வேண்டுமென்ற அவசரத்தில் அரைகுறையாக வேக வைத்து இறக்கி விடுகிறார்கள்," என்று ஒரு முறை கூறினார்.

அந்த நாட்களில் மாதவிடாய் காலங்களில் முதல் மூன்று தினங்களுக்குப் பெண்கள் வீட்டுக்குள்ளேயே இருந்து, யார் கண்ணிலும் படாமல் மறைவாக இருப்பார்கள். குடும்பத்தினருக்காக சமைக்கப்படும் உணவைக் கொடுக்காமல், அவர்களுக்கென்றே தனியாகச் சமைக்கப்படும் எளிய உணவே அவர்களுக்கு வழங்கப்படும். குடும்பத்தாருடன் உண்பதற்கு அவர்கள் அனுமதிக்கப்படவில்லை. ஒரு விதத்தில் கூறப்போனால் மூன்று நாட்களுக்கு அவர்கள்

தீண்டத்தகாதவர்கள் என்றே கருதப்பட்டனர். ஒரு நாள் காலை, தான் கூறியபடி அடுக்களையில் வேலைகள் நடக்கின்றனவா என கவனிக்க பகவான் அங்கு சென்ற போது தேனம்மாள் பருப்பு உபயோகித்து ஒரு வகை உணவைத் தயார் செய்து கொண்டிருந்தார். உடனே, “காலையில் சமையல் பற்றிப் பேசும்போது இதைத் தயார் செய்யும்படி நிச்சயம் பண்ணலையே! தேனம்மாள் என்ன செய்து கொண்டிருக்கிறார்?” என்று பகவான் வினவியபோது, “எங்களில் ஒருவர் மாதவிடாய் காரணமாகத் தனி இடத்திலுள்ளார். அதனால் அவருக்குத் தனியாக உணவு சமைக்க வேண்டியுள்ளது,” என பகவானிடம் தெரிவிக்கும்படியாயிற்று. அவர் மனவேதனையுற்ற அதே சமயத்தில் கோபமும் கொண்டார். “எதற்கு தனிப்பட்ட சாப்பாடு? மற்றவர்களுக்குச் சமைப்பதையே அவர் ஏன் சாப்பிடக்கூடாது? மாதவிடாய் காலமாக இருந்தால் என்ன? வித்தியாசம் பார்க்காதீர்கள். பொதுவாக எல்லோருக்காகவும் அடுக்களையில் சமைக்கப்படும் சாதம், பருப்பு, காய்கறிகள் இவற்றையே அவருக்கும் அளியுங்கள். அதையே அவரும் சாப்பிடட்டும்,” என்று பகவான் கூறிவிட்டார்.

பகவான் கட்டளையிட்ட பின்னரும் கூட அலுவலகத்திலும் ஆச்ரமத்திலும் உள்ள பலரும் எதிர்ப்பைத் தெரிவித்தனர். இந்தப் புது விதிகளை ஏற்க அவர்கள் தயாராக இல்லை. இதனால் சில சமயங்களில் பகவான் கோபமுற்று, “ஆச்ரமம் எல்லோருக்கும் அன்னமளிக்கிறது. இங்கு தீண்டத்தகாதவர் என்று யாருமில்லை. யாருக்கு இதில் விருப்பமில்லையோ அவர்கள் வேறு எங்காவது சென்று சாப்பிட்டுக் கொள்ளலாம். ஸ்கந்தாச்ரமத்தில் எனக்கும் என் தாயாருக்கும் இதே விஷயத்தில் அபிப்ராய பேதம் ஏற்பட்டது. இங்கு மாதவிடாய் காரணமென்றால் அங்கு தீண்டத்தகாதவர் என்றழைக்கப்பட்ட கீழ் ஜாதியினர் காரணமாக இருந்தனர். எங்களுக்கு விறகு வெட்டிக் கொண்டு வருபவருக்கு என் தாய் உணவளிக்க மறுத்து விடுவார். ஏனென்றால் அவர் எங்களை அசுத்தப்படுத்தி விடுவார் என்ற பயம் அவருக்கு இருந்தது.



**ஸ்ரீ பகவான், குழந்தையுடன் சாப்பாட்டு அறைக்குள் செல்வது**

என்னை வற்புறுத்தி முதலில் சாப்பிடச் செய்து, பின் தானும் உண்டு கடைசியில் மீதி இருப்பதை அவருக்கு அளிப்பார். அதையும் கூட அவர் ஆச்ரமத்திற்கு வெளியே அமர்ந்து தான் உண்ண வேண்டும். அப்போதும் நான் பிடிவாதமாக அந்த மனிதருக்குக் கௌரவமான முறையில் அன்னமளிக்க வேண்டும் என்பேன். ஆரம்பத்தில் அம்மா சாப்பிட மறுத்தார். பின்னர் தொடர்ந்து கண்ணீர் சிந்தியவாறு இருப்பார். நான் இந்த விஷயத்தில் என் பிடியைச் சிறிதும் தளர்த்தப் போவதில்லை என்று தெரிந்த பிறகு, இங்கு இந்த மாதிரிதான் நடக்கும் என்பதை அவரும் புரிந்து கொண்டார். ஒரு மனிதனுக்கும் மற்றொரு மனிதனுக்கும் என்ன வித்தியாசம்? 'எல்லோரிடமும் இருப்பது இறைவன் மட்டுமே' என்று பார்ப்பது தானே சரி?'' என்று எடுத்துரைத்து அங்கிருந்தவர்களைக் கடிந்து கொண்டார் பகவான். எங்கள் ஒவ்வொருவரிடமிருந்தும் அற்பத்தனமான அஞ்ஞானத்தை பகவான் விலக்கினார். மேன்மையான ஸமத்துவ நிலைக்கு எங்களை உயர்த்தி ஒருமைப்பாட்டை உணர வைத்தார். பகவானுடைய அறிவுரைகளாலும் வழிகாட்டுதலாலும் மற்ற சமையல் பெண்மணிகளைப் போன்றே லோகம்மாளும் ஆன்மீகத்தில் பழுத்த பழமானார்.

இன்று ஆச்ரமத்தில் காலைச் சிற்றுண்டிக்கு நாம் இட்லி சாப்பிடுகிறோமென்றால் அதற்குக் காரணம் லோகம்மாள்தான். ஆச்ரமத்தில் அரிசிக் கஞ்சியோ, காபியோ தான் அதற்கு முன்னர் அளிக்கப்பட்டு வந்ததென்று நான் ஏற்கனவே கூறியுள்ளேன். லோகம்மாள் ஆச்ரமத்தில் இருந்த காலத்தில் பட்டக்குறிச்சி என்ற கிராமத்தில் இருந்த வளமான நிலத்தில் புழுங்கலரிசி தயாரிப்பதற்கு உகந்த நெல் விளைந்து வந்தது. இட்லி செய்வதற்குத் தகுந்த இந்த அரிசியை லோகம்மாளின் சகோதரர் ஒரு முறை ஆச்ரமத்திற்கு அனுப்பி வைத்தார். அந்த அரிசியைக் கொண்டு, பகவான் தானே அரைத்து இட்லி தயார் செய்தார். அவை மிகவும் சுவையாக அமைந்ததைக் கண்ட பகவான், ''இந்தப் புழுங்கலரிசி எவ்வளவு நன்றாக இருக்கிறது!'' என்று பாராட்டிப் பேசவும் லோகம்மாள் உடனே தனது சகோதரருக்கும் குடும்பத்தாருக்கும் ஒரு கடிதம் எழுதி, ''நீங்கள் வேறு எதுவும் எனக்குச் செய்ய வேண்டாம். ஆனால் தயவு செய்து பகவான் பாராட்டிப் பேசிய அந்தப் புழுங்கலரிசியை மட்டும் தொடர்ந்து அனுப்பி வைக்கவும்,'' என்று தெரிவித்திருந்தார். அன்று முதல் ஆச்ரமத்தில் காலைச் சிற்றுண்டிக்கு இட்லி நிரந்தரமானது.

அவரது இறுதிக் காலத்தில் ரமண நகரில் ஒரு குடிலில் லோகம்மாள் வசித்து வந்தார். மற்ற பக்தர்களை நான் கவனித்துக் கொண்டது போன்றே அவரையும் பார்த்துக் கொண்டேன். லோகம்மாள் பழுத்த பழமாக இருந்த போதும் அவரது முன்வினைப்பயன் காரணமாக, இறுதிவரை எளிதில் கோபம் கொள்ளும் சுபாவமுள்ளவராக இருந்தார். ஒரு முறை, தன்னைக் கவனித்துக் கொள்ள ஒரு பணிப்பெண்ணை அனுப்புமாறு என்னிடம் கேட்டார். அவரைச் சுலபமாகத் திருப்தி செய்ய இயலாத காரணத்தால், பதினெட்டு முறை பணிப் பெண்களை மாற்ற வேண்டி வந்தது. அவர்கள் ஒவ்வொருவரும் கை கூப்பியவாறு, ''தயவு செய்து எங்களை அந்த அம்மாளுக்குப் பணிவிடை செய்ய அனுப்பாதீர்கள்,'' என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டனர். மறுதினம் நான் லோகம்மாளைக் காணச் சென்ற போது, ''நான் தனியாக இருக்க வேண்டி வந்தது. எனக்கு மிகவும் பயமாக இருந்தது. நீ ஏன் நேற்று பணிப்பெண்ணை அனுப்பவில்லை?'' என்று என்னைக் கடுமையாகத் திட்டினார். அவருடைய வசை மொழிகளுக்குப் பயந்து நான் ஓடியே போய்விட்டேன். அன்று இரவும் அவருக்குத் துணையாக அனுப்புவதற்குப் பணிப்பெண் யாரும் கிடைக்கவில்லை. மறுநாள் அவரது குடிலுக்கு நடுங்கிக் கொண்டேதான் நான் சென்றேன். ஆனால் அன்று அவருடைய முகம் மிகவும் பிரகாசமாக இருந்தது. ''யாரது? கணேசனா?'' என்று அவர் கேட்டபோது ''ஆம் அம்மா'' என்று பதிலளித்த என்னைப் பணிப்பெண்ணை அனுப்பாததற்கு நன்றாகத் திட்டப் போகிறார் என்றுதான்

நினைத்தேன். எதிர்மாறாக அன்று, ‘‘குழந்தாய் வா! என்னருகில் வா,’’ என்று அன்போடு அழைத்து என் முகத்தை இறுகப் பிடித்து நெற்றியில் முத்தமிட்டபடி, ‘‘நேற்றிரவு உன்னால்தான் எனக்குப் பகவானுடைய தரிசனம் கிடைத்தது. நேற்று உன்னை நான் நன்கு திட்டி விட்டேன். ஆனால் இதோ இந்த பகவானைப் பார். முன்பொரு சமயம் இளைஞர்கள் என்னைத் தொந்தரவு செய்வதாக நான் பகவானிடம் தெரிவித்த போது, அவர் சோபாவிலிருந்து உடனே எழுந்து சென்று இந்தப் படத்தை எடுத்து எனக்குத் தந்தார். அதைக் கொடுக்கும் போது ‘‘இன்று முதல் அந்தத் தொந்தரவு உங்களுக்கு இருக்காது,’’ என்று கூறியபடியே கொடுத்தார் என்றுரைத்து, அந்தப் படத்தை லோகம்மாள் என்னிடம் காட்டினார். தொடர்ந்து ‘‘அன்று முதல் எந்த ஒரு மனிதனின் தொந்தரவும் எனக்கு இருக்கவில்லை. என்னைப் பார் கணேசா! எனக்கு வயது தொண்ணூறு ஆகிவிட்டது. நேற்று உன்னைத் திட்டிக் கொண்டிருந்தபோது, ‘லோகம்மாள்! லோகம்மாள்’ என்று பகவான் கூப்பிடுவதைக் கேட்டேன். அவர் அந்தப் படத்திலிருந்து உயிரோடு வந்து, ‘‘நான் எப்போதும் உன்னுடன் இருக்கிறேன் என்று ஏற்கனவே கூறியிருக்கிறேன். நான் உன்னுடன் இருக்கையில் நீங்கள் எதற்காகப் பயப்பட வேண்டும்? சந்தோஷமாக இரு’’ என்று கூறினார். உன்னால் தான் அவர் என்னுடன் பேசினார் என்று லோகம்மாள் கூறியதைக் கேட்ட நான் மகிழ்ச்சியடைந்தேன். மறுதினம் லோகம்மாள் இறைவனடி சேர்ந்து விட்டார். அவரது இறுதிச் சடங்குகளை நானே செய்தேன். என்ன ஒரு பாக்கியம்! சமையல் செய்தவர்கள் சாதாரணமானவர்களா அல்லது மதிப்புக்குரியவர்களா என்பது பற்றி நாம் கவலைப்படத் தேவையில்லை. அவர்கள் எல்லோருமே தன்னிருப்பிலேயே நிலை பெற்றனர்.

ஒரு நாள் சமையலறையில் இருந்த போது சாந்தம்மாளிடம், ‘அருணாசல மலையில் என் கால் படாத இடமே இல்லை’ என்று பகவான் கூறியுள்ளார். இது உண்மையாகவே நடைமுறையில் சாத்தியமானதா? பகவான் கூறியதன் உள்ளர்த்தம் அவரே அருணாசலம் என்பதாகும். நாம் இதுவரை அனுபவித்த பக்தர்களாகிய பாறைகள் அனைத்துமே அருணாசலத்தைச் சேர்ந்தவை என்பதால் அவை சாதாரணமானவையன்று - தனிச்சிறப்பு வாய்ந்தவை. நீங்களும் நானும் கூட அருணாசலத்தைச் சேர்ந்தவர்கள்தான். ஒரு வேளை பெரும் பாறைகளாகவோ கற்களாகவோ நாம் இல்லாதிருந்தாலும், சிறிய கற்கள் அல்லது புல் என்று நம்மைக் கூறலாம். அருணாசலத்தின் மீதுள்ள சிறு தூசியேதான் தான் என்பதை இப்புத்தக ஆசிரியர் நன்கு அறிவார். அது பலமுறை சுழல் காற்றில் சிக்கி அங்குமிங்கும் அலைக்கழிக்கப்பட்டாலும் வேறு இடங்களுக்கு அடித்துச்செல்லப்படாமல், இம்மலையை நோக்கியே அடித்துச் செல்லப்பட்டது என்பது நல்வினைப் பயனே. இதுவேதான் அருள். அருளைப் புரிந்து கொள்ள முடியாது என்பதில்லை; நம்மைச் சுற்றி அது எப்போதும் நிகழ்ந்தவாறே உள்ளது. நாம் அதைத் தெரிந்து கொள்ள வேண்டும். அவ்வளவே.





ஸ்கந்தாச்ரமத்தில் ஸ்ரீ பகவான் (1945), தரையில் பகவானின் வலப்புறம் அமர்ந்திருப்பது TPR
(பகவானின் வலப்பக்கம் நிற்பது சிறுவன் கணேசன்)

# 50 T. P. ராமசந்திர ஐயர்



ஹாலில் பலர் முன்னிலையில் பேசுவதற்கு சில ஸாதகர்களுக்கு கூச்சமாக இருந்ததால், அவர்கள் பகவானுடன் சமையலறையில் உரையாடுவதற்கு சாந்தம்மாள் மிகவும் உதவியாக இருந்தார். அதே போல பகவானுடைய உதவியாளர்களில் ஒருவரான TPR என்றழைக்கப்பட்ட T. P. ராமசந்திர ஐயரும் கூட, பகவானுடன் ஹாலில் உரையாடுவதற்கு ஸாதகர்களுக்கு உதவியாக இருந்தார். இயற்கையாகவே சுமுகமாகப் பழகக் கூடிய அவர் அத்யாத்மத்தில் தெளிவு பெறுவதற்காகவும், ஆறுதலைத் தேடியும் அருணாசலத்தில் குவியும் ஸாதகர்களின் துயரங்களை உணர்ந்திருந்தார். 1940-களில் ஆச்ரமம் வளர்ந்து விட்ட நிலையில் பகவானைக் காண்பதற்கு அநேகர் குவிந்தனர். பகவானுக்கு அநாவசியமான தொந்தரவு நேரக்கூடாது என்பதற்காக விரைவிலேயே, தேவையான சட்ட திட்டங்கள் வகுக்கப்பட வேண்டியிருந்தன. தங்களது தனிப்பட்ட பிரச்சனைகளையும், அத்யாத்ம தடைகளையும் பகவானிடம் அணுகிக் கேட்பதற்கு சிரமம் ஏற்பட்டால், அந்த ஸாதகர்கள் உதவிக்கு TPR-ஐ நாடுவார்கள். இந்தச் ஸாதகர்களுக்கும், பகவானுக்கும் ஏதாவது ஒரு விதத்தில் இணக்கம் ஏற்பட உதவும் பாலமாக TPR விளங்கினார். சாந்தம்மாளும், TPR-ம் ஸாதகர்களுக்கு உதவ முயற்சி செய்தார்கள் என்பதால் ஆச்ரம விதிகளுக்கு முரண்பாடாக அவர்கள் நடந்து கொண்டாலும் சில சமயங்களில் பகவான் அதைப் பொருட்படுத்த மாட்டார்.

திருவண்ணாமலையில் பிறந்த TPR திவ்யமான அருணாசலத்தின் அடியிலேயே வளர்ந்தார். பல தலைமுறைகளாக அங்கு வாழ்ந்த அவருடைய குடும்பத்தார் அருணாசலேச்வரரிடமும், அன்னை அபீதகுசாம்பாளிடமும் மிகுந்த பக்தியுடன் இருந்தனர். TPR-க்கு ஆறு அல்லது ஏழு வயதிருக்கும் போதே விரூபாக்ஷ குகையில் பகவானைப் பலமுறை தரிசித்திருக்கிறார். அடிக்கடி விரூபாக்ஷ குகைக்கு அவர் சென்று வந்தார் என்ற போதும், 'பகவான் கற்கண்டு, உலர்ந்த திராட்சை இவற்றைத் தருவார் என்பதற்காகவே நான் அங்கு சென்றேன்,' என்று உண்மையைக் கூறுவார். இருந்தாலும், மேற்கூறிய அனுபவங்கள் மூலம் கண்ணுக்குப் புலப்படாத வகையில் பகவானுடைய தாக்கத்திற்குட்பட்டு அவரது அருளையும் பெற்றார். அவர் இளைஞராகப் பள்ளிக்கும் கல்லூரிக்கும் சென்றபோது இந்தத் தாக்கம் நன்றாகவே வெளிப்பட்டது. சமயம், தத்துவம் இவற்றில் அவருக்கு அபரிமிதமான நாட்டமிருந்ததால் தனது குடும்பத்தாரின் விருப்பத்திற்கெதிராகக் கல்லூரியில் அவற்றையே தனது முக்கிய பாடமாக எடுத்துக் கொண்டார். பகவானுடைய நேரடி உபதேசங்களைப் புரிந்து கொண்டு நடைமுறைப்படுத்த அனைத்து சமயங்களைப் பற்றிய அறிவும் அவருக்குத் தேவைப்படும் என இறைவன் எண்ணியதால்தான் அவ்வாறு நிகழ்ந்ததோ! பிற்காலத்தில் சென்னையில் வசதி படைத்த வக்கீலாக அவர் வாழ்ந்தார்.

1938-ல் ரமணாச்ரமத்தில் சட்டரீதியான பிரச்சனைகளையெல்லாம் அவரே கவனித்துக் கொண்டார். அவர் மிகவும் நேசித்த அவருடைய மனைவி 1939-ல் காலமானார். மனைவியின் மறைவு அவரை வெகுவாக பாதித்ததால் நீரில் தத்தளிக்கும் படகு போன்று, செல்லும் வழியறியாது தவித்தார். அவருக்கிருந்த ஒரே ஆறுதல், பகவானுடைய அருகாமையும் ஸாந்நித்தியமும் மட்டுமே. பகவானின் வழிகாட்டுதலின்படி, 1940-களில் தன் உத்யோகத்தை விட்டுவிட்டு, அருணாசலத்தில் நிரந்தரமாக வாழத் தொடங்கினார். 1946-ம் ஆண்டிற்குப் பின்னர் பகவானுடைய தனிப்பட்ட

உதவியாளரானார். அறிவும் ஆற்றலும் மிகுந்த ஒரு இளம் வயதினர், பகவானுடன் இருந்து அவருக்கு உதவியாளராக இருப்பதற்கு தன்னுடையதனைத்தையும் துறந்து வந்தார் என்பதை எண்ணும் போது வியப்பு மேலிடுகிறது.

என்னுடைய சிறு வயது முதலும் அதன் பின்னரும் கூட TPR-ருடன் நான் நெருக்கமாகவே இருந்தேன். உண்மையில் நான் அவரால் வசீகரிக்கப்பட்டேன். இப்போது பின்னோக்கிப் பார்க்கும் போது, நான் ஏன் அவரால் கவரப்பட்டேன் என்பதைத் தெளிவாக என்னால் உணர முடிகிறது. பகவானுடைய மஹா ஸமாதியன்று அவரது குடும்பத்தாரும் டாக்டர்களும் ஆச்ரம முக்கியஸ்தர்களும் நிர்வாண அறையிலிருந்தனர். பகவான் படுத்திருந்தார். பகவானுடைய கடைசி நொடிகளில் டாக்டர்கள் அனைவரையும் வெளியில் செல்லுமாறு பணித்தனர். நாங்கள் அனைவரும் வெளியே செல்லத் தயாரான போது, TPR என்னுடைய கையை இறுகப் பிடித்து வாயிலில் நிற்கச் செய்தார். அவர் மட்டும் என்னைத் தடுத்திராவிட்டால் பகவான் உடலை உகுத்தவுடன் வெளிப்பட்ட பிரகாசமான ஒளியைக் காணும் அரிய வாய்ப்பை நான் இழந்திருப்பேன். ஆனால் அருணாசலத்திற்கு அந்த ஒளி பயணித்ததை என்னால் காண முடியவில்லை. “The Life” என்ற பத்திரிகையின் ஃபோட்டோகிராஃபரான, ஆரி கார்த்தியெர் பிரஸொன் மலை உச்சியில் அந்த ஒளி இரண்டறக் கலந்ததைக் கண்டார். அச்சமயத்தில் ஆச்ரமத்திற்கு எதிரிலிருந்த அவரே நேரம் 8.47 P. M. என்றும் குறிப்பிட்டுள்ளார்.

இந்தத் திவ்ய ஒளியை TPR-இன் மூலமாக நான் தரிசிக்க பகவான் அருள் புரிந்தார். நான் எப்போதுமே அவரால் ஏன் ஈர்க்கப்பட்டேன் என்பது இப்போது புரிகிறது. கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த போதுகூட ஆச்ரமத்திற்கு வந்த போதெல்லாம் நான் அவரை நாடிச் செல்வேன். இருவரும் சேர்ந்து எங்களது நேரத்தைக் கழிப்போம். மும்பையில் ஏழு மாதங்கள் பணியாற்றிய பின், 1960-ல் என் வேலையை விட்டுவிட்டு ஆச்ரமத்திற்கு நிரந்தரமாக வந்து விட்டேன். அதனால் TPR உட்பட எல்லா மூத்த பக்தர்களிடமும் நான் நெருக்கமாக பழகி கொண்டிருந்தேன். இவையனைத்துமே பகவானுடைய அருளால் நிகழ்ந்தவை. ஒருவர் ஸத்தியத்திற்கே தன்னை அர்ப்பணித்துக் கொண்டுவிட்டால் ஞானிகள் மூலமும் ஸாதுக்கள் மூலமும் பகவானே அவரை வழி நடத்துவார். ஒரு ஸந்நியாசினி நான் ஆற்ற வேண்டிய கடமையை எனக்கு எடுத்துரைத்த போது, “ஆச்ரமத்தை விட்டுச் சென்று விட்ட எல்லா மூத்த பக்தர்களையும் அழைத்து வந்து அவர்களுக்குத் தொண்டு செய். ஆச்ரமத்தினுள்ளேயே அவர்கள் வசதியாக வாழ ஏற்பாடு செய்!” என்று கூறினார். இவ்வாறாகவே TPR உட்பட ஒவ்வொருவரும் ஆச்ரமத்திற்குத் திரும்பி வந்தனர்.

ஒரு நாள் நான் ஆச்ரமத்திற்குச் சென்று கொண்டிருந்த போது TPR முதுகில் தட்டி, “உன்னைப் போன்றே நானும் தத்துவ சாஸ்திரம் படித்தேன் என்றாலும் அதையே சிறப்புப் பாடமாக எடுத்துக் கல்லூரியில் படித்தேன். எனக்கு அது மிகவும் பிடித்த பாடம். நான் வக்கீலான பிறகு வழக்கம் போல் ஒரு நாள் ஆச்ரமத்திற்கு வந்திருந்த சமயத்தில், ஹாலில் ஆத்மஸ்வரூபம் குறித்து விவாதம் நடந்து கொண்டிருந்தது. நான் புத்தகங்களில் படித்திருந்த விஷயங்கள் எனக்குள் பசுமை மாறாத நிலையிலிருந்ததால் நான் படித்தவற்றையெல்லாம் தாராளமாக எடுத்து விட்டேன். தத்துவ சாஸ்திரங்களின் பற்பல பிரிவுகளில் கூறப்பட்டுள்ள விஷயங்களைப் பற்றிப் பேசினேன். பேசும் போது உயர்ந்த உணர்வு நிலை, உள் உணர்வு, உணர்வற்ற நிலை ஆகிய பதங்களை உபயோகித்து, பகவான் முன் என் பெருமையைப் பறைசாற்றிக் கொண்டேன். என்னுடைய உற்சாகமான, விரிவான விளக்கங்களை எல்லாம் கேட்டுக் கொண்டிருந்தவர் திடீரென்று, “ஏதோ ஒன்றை அடிப்படையாக வைத்துக் கொண்டுதான் மேம்பட்ட உணர்வு, உள் உணர்வு, உணர்வற்ற நிலை என்பவற்றை நாம்

குறிப்பிட முடியும். உண்மைப் பொருள் 'உணர்வு' மட்டுமே என்பதால் அதைப் பற்றிக் கூறப்படும் அனைத்துமே - புத்தியை வசீகரிக்கக் கூடியதாக இருந்தாலும் - அவை அஞ்ஞானமே. உண்மை என்பது எளிமையானது, நேரானது. அதற்கு மாறுபாடுகள் எதுவும் தேவையில்லை. உணர்வு மட்டுமே உள்ளது. அதை ஆத்மா, ப்ரஹ்மம், உணர்வு, பூர்ணத்துவம், அருணாசலம் என்று எப்படி வேண்டுமானாலும் அழைக்கலாம். ஆனால் அது சுத்தமான உணர்வு மட்டுமே," என்று பகவான் ஆணித்தரமாகத் தெளிவுபடுத்தினார். சக்தி வாய்ந்த பகவானின் வார்த்தைகள் என்னை உடனே உண்முகமாக்கி, நீண்ட நேரம் ஆனந்தத்தில் ஆழ்த்தின. தொடர்ந்து TPR கூறிய வார்த்தைகள் மிகவும் அற்புதமானவை. "பலப் பல புத்தகங்களைப் படித்து அறிந்து கொள்ளக் கூடிய விஷயத்தை, குருவின் வார்த்தைகள் தட்டியெழுப்பி எளிதில் உணர்த்தி விடுகின்றன. ஸத்தியத்தை அனுபவிக்கக் கூடிய நிலைக்கு உன்னை உடனே அழைத்துச் சென்று விடுகின்றன. நான் பெற்ற சாட்டையடி இது மட்டுமன்று. எனக்குக் கிடைத்தது போன்ற இப்படிப்பட்ட அடிகள் பலவற்றை, குருவின் ஸாந்நித்யத்தில் இருக்கும் போது ஒருவர் பெறக்கூடும். ஒவ்வொரு சாட்டையடியும் சீடரை உண்முகமாக்குமேயன்றி புறவுலகிற்கு இழுக்காது. குருவுடன் இருப்பதால் ஒருவருக்குக் கிடைக்கக் கூடிய அனுகூலம் இதுவே," என்று TPR கூறினார்.

"பகவானுடன் கூடவே இருந்தபோதிலும், ஆன்மீக நூல்களைத் தவறாகப் புரிந்து கொண்டதால் விளைந்த பல சந்தேகங்கள் என்னைத் தீவிரமாகத் தாக்கின," என்று TPR ஒரு முறை கூறினார். தத்துவ சாஸ்திரங்கள் படித்ததன் காரணமாக எனக்கு எழுந்தது போன்றே அவருக்கும் இந்தப் பிரச்சனை இருந்தது. அளவுக்கதிகமாகப் படிக்கும் போது முரண்பாடுகளும், அபிப்ராயபேதங்களும் எழுந்தே தீரும் என்பதால், "தயவு செய்து இதை இன்னும் சற்றுத் தெளிவாகக் கூறுங்கள்! நீங்கள் கூறுவது என்னுடைய பிரச்சனையைப் போன்றே உள்ளது," என்று நான் வினவியபோது, TPR இவ்வாறு விளக்கமளித்தார். "என்னுள் அறிவிற்கும் ஞானத்திற்குமிடையே எப்போதும் ஒரு போராட்டம் இருந்து வந்தது. சாஸ்திர அறிவைத் துறப்பதால் மட்டுமே ஒருவர் ஞானம் பெற முடியுமா? சாஸ்திர அறிவு அனைத்துமே உண்மையில் உபயோகமற்றவையா? அல்லது அவற்றைக் கடந்து செல்ல வேண்டுமா? என்ற குழப்பமான நிலை எனக்கிருந்தது. சாஸ்திரங்களைப் படிப்பது வீண் கால விரயம்தானோ என்ற எண்ணம் எனக்கு எழும்பவே, பகவானிடம் அது பற்றிக் கேட்டேன். அப்போது பகவான், 'படித்தவை அனைத்தையும் மறக்க வேண்டிய இடம் அருணாசலமே. படித்தவை அனைத்தையும் துறப்பதால் மட்டுமே அத்யாத்மத்தில் நிறைவு நிலையை அடைய முடியும். ஒருவர் எதையாவது படிக்கவில்லையானால் அதைத் துறப்பதென்பது எவ்வாறு சாத்தியம்? சாஸ்திரங்கள் நமக்கு அறிவைத் தருகின்றன. படித்ததை மறப்பது என்றால் சாஸ்திரங்கள் கூறுவது உண்மை இல்லையென்றோ அவை தந்த அறிவை நம் நினைவிலிருந்து புறக்கணிப்பதென்றோ அர்த்தமாகுமா? அது எவ்வாறு சாத்தியமாகும்? உண்மையாகப் பார்த்தால் படித்தவற்றை மறப்பது என்றால் புத்தி பூர்வமான அறிவிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு ஸத்தியத்தை அனுபவிப்பதற்குத் தீவிர முயற்சி செய்ய வேண்டும் என்பதுதான் பொருள். அதாவது ஸத்தியத்தைத் தன்னிலிருந்து அந்நியமாகக் கருதாமல் தன்னுடையதாக்கிக் கொள்வது என்று அர்த்தம். சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள உண்மையை ஒருவர் தன்னுடைய அனுபவமாக்கிக் கொள்ள வேண்டும். சாஸ்திரங்கள் கூறும் ஸாரமாகிய 'நான் இருக்கிறேன்' என்ற உணர்வை ஒருவர் தனது அனுபவமாக்கிக் கொள்ளும் போது அவர், படித்த அறிவுக்கு அப்பால் சென்று - அதாவது நூலறிவுக்கப்பால் சென்று ஆத்மானுவத்தை அடைகிறார். இதை அருணாசலமே அருள்கிறது. சுருங்கக் கூறின் 'நான்' என்ற அஹங்காரமே அறிவு. இது புத்தியில் எழுகிறது; ஆனால் 'நான்-நான்' என்பது தானாக இதயத்தில் ஸ்புரிக்கிறது. இதுவே ஞானம். முரண்பாடு எங்கிருக்கிறது? என்ற



**வைகுண்டவாசர், ஸ்ரீ பகவான் மற்றும்** TPR

வினாவை எழுப்பிய பகவான் புத்தியிலிருந்து இதயத்திற்கு இறங்கி வருவதே அத்யாத்ம ஸாதனையின் ஆரம்பம்,'" என்று தெளிவாகக் கூறியதை TPR எடுத்துரைத்தார்.

ஆச்ரமத்திற்கு வெளியேயிருந்த TPR-இன் அறைக்கு நான் அடிக்கடி சென்று அவருக்காகக் காத்திருப்பது வழக்கம். ஒரு நாள் அவர் அறையிலிருந்து வெளியில் வந்த போது, "தாத்தா விதை விதைத்தார். பேரன் அறுவடை செய்கிறான்," என்று தொடர்ந்து அவர் முணுமுணுத்தவாறே இருந்தார். "நீங்கள் என்ன கூறுகிறீர்கள்?" என்று நான் கேட்டபோது அவர் ஒரு அழகான விளக்கம் கொடுத்தார். "ஒரு நாள் ஆச்ரமத்தில் பகவானுக்கு ஒரு பக்தர் விசேஷமாக பிக்ஷைக்கு ஏற்பாடு செய்திருந்தார். அது குறித்து என் மகிழ்ச்சியை என் நண்பரிடம் பகிர்ந்து கொண்டிருந்த போது, உள்ளே வந்த பகவான் எங்களது சம்பாஷணையைக் கேட்டிருக்கிறார். என் பக்கம் திரும்பிச் சிரித்தவாறு 'பிக்ஷையைப் பற்றியா நினைத்துக் கொண்டிருக்கிறாய்? அருணாசலத்தில் நான் சாப்பிடுவதற்காக நுழைந்த ஒரேயொரு வீடு உன் தாத்தாவுடையதுதான். அருணாசலேச்வரரின் பக்தரான அவர் தினமும் தவறாமல் கோயிலுக்குச் செல்வார். வாட்ட சாட்டமாக இருந்த அவர் ருத்ராக்ஷ மாலையோடு வேறு பல மணிகளையும் அணிந்திருப்பார். அந்த நாட்களில், சுமார் 1896-ம் ஆண்டில், அருணாசலேச்வரர் கோயில் நுழைவாயில் கோபுரத்தின் அருகேயுள்ள சுப்ரமண்யர் ஸந்நிதியில் நான் இருப்பது வழக்கம். தினமும் உன்னுடைய தாத்தா என் முன் சிறிது நேரம் அமர்ந்திருப்பார் என்றாலும், எதுவும் பேச மாட்டார். நான் அப்போது 16 வயது இளைஞனாக இருந்தேன். அவர் சற்று வயது முதிர்ந்தவர் என்றாலும் என்னுடன் இருக்கும் போது அவரும் மௌனமாகவே இருப்பார். ஊரில் பிரபலமாக இருந்த அவருடைய வீட்டிற்குப் பல முக்கியஸ்தர்கள் விருந்தினர்களாக வருவதுண்டு. ஒரு நாள் அவருடைய இல்லத்திற்கு முக்கியமாக ஒருவர் வருவதாக இருந்ததால் விருந்துக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அன்றும் கூட உன்னுடைய தாத்தா

கோயிலுக்கு தரிசனத்திற்கு வந்தவர், என் முன்னே வந்து அமர்ந்து கொண்டார். சிறிது நேரம் கழித்து எழுந்திருந்து தன் வழக்கமான மௌனத்தைக் கைவிட்டு என்னைப் பார்த்து, 'எழுந்திரு! என்னுடைய வீட்டிற்கு நாம் சென்று பிக்ஷை எடுத்துக் கொண்ட பின்னர் நீ திரும்பி வரலாம்!' என்று கூறினார். அப்போதெல்லாம் நான் பேசுவது வழக்கமில்லை. அதனால் சைகையால் 'நான் வரவில்லை' என்பதைத் தெரிவித்தேன். ஆனால் நான் சொல்வதை அவர் பொருட்படுத்தவில்லை. அவர் வாட்ட சாட்டமாக இருந்தார். நானோ மெலிந்து பலவீனமாயிருந்தேன். அவர் மீண்டும் மீண்டும் வேண்டுகோள் விடுத்த வண்ணம் இருந்தார். நானும் சமிக்ஞையால் வரவில்லையென்று மீண்டும் மீண்டும் தெரிவித்துக் கொண்டிருந்தேன். நான் சிறிதும் அசைந்து கொடுக்காததால், குனிந்து அவர் கையோடு என் கையைப் பிணைத்து என்னைப் பலவந்தமாக எழும்பச் செய்து அவரைத் தொடருமாறு செய்தார். இவ்வாறாக அவருடைய வீட்டிற்குள் வலுக்கட்டாயமாக நுழையும்படிச் செய்யப்பட்டேன். என்னை முக்கியமான ஒரு இடத்தில் அமரச்செய்து எல்லோருடைய இலையையும் விடப் பெரிய ஒரு இலையைப் போட்டு அதில் அவரே பரிமாறினார். நான் உண்ட பிறகு அவர் உண்டார். அந்த நாட்களில் நான் குளிக்கும் வழக்கமில்லை. அதனால் என் உடலிலிருந்து துர்நாற்றம் வீசும் என்பதால் யாரும் என் அருகே வரமாட்டார்கள். அவ்வாறிருந்த போதும் உனது பாட்டனார் மட்டும் தவறாமல் என் முன் வந்து நெருக்கமாக அமர்ந்து கொள்வார். பலரும் என்னைக் காண வந்துவிட்டுப் போய் விடுவார்கள். இளமைப் பருவத்திலிருந்த போதும் இந்த உடம்பினுள் இருந்தது பூரணப் பொருள் என்பதை உனது பாட்டனார் மட்டுமே உணர்ந்து கொண்டார்' என்று பகவான் கூறியதாக TPR சொன்ன போது அவருடைய கண்கள் பனித்தன. இறுதியில், "கணேசா! என் தாத்தாவுக்கு பகவான் மீதிருந்த பக்தியின் காரணமாகவே பகவானுடைய ஸாந்நித்தியத்தை நான் அனுபவிப்பதோடு பகவான் என் மீது தினமும் பொழியும் காருண்யத்தை என்னால் அனுபவிக்கவும் முடிகிறது," என்று TPR கூறி முடித்தார்.

மற்றொரு நாள் நான் TPR-ஐப் பார்த்து, "பலரும் பகவானுடைய கருணையே அவருடைய மிகச்சிறந்த பண்பு என்று கூறுகிறார்களே; அதைப் பற்றி நீங்கள் எனக்குக் கூற முடியுமா?" என்று கேட்டேன். "பகவானுடைய கருணைக்கு இரு முகங்கள் உள்ளன. யாராவது ஒருவர் துயருற்றிருந்தால் அவருடைய நிலைக்குத் தானும் இறங்கி, அவரை உயர்த்தி சாதாரண நிலைக்கு அழைத்து வந்து விடுவார். அதன் பொருட்டு தன்னுடைய உபதேசமான ஆத்ம விசாரத்திலிருந்து விலகக்கூடத் தயங்க மாட்டார். அடுத்த முகம் இன்னும் ஆழமானது. பகவான் துயருற்றவரின் துயரை நீக்குவது மட்டுமன்றி அவரையே முழுவதுமாக மாற்றி விடுவார்," என்று TPR கூறினார். எனக்கு பகவானின் ஸந்நிதி நிகழ்வுகளைக் கேட்பதில் எப்போதுமே ஆர்வமிருந்ததால் ஏதாவது உதாரணம் காட்டி தயவு செய்து விளக்குங்களேன் என்று கேட்ட போது TPR, "ரமணாச்ரம வளாகத்திற்குள் தபால் நிலையம் திறக்கப்பட்ட அன்று முக்கியமான அதிகாரி ஒருவர் வந்திருந்தார். அவர் கண்களில் நீர் மல்க ஹாலில் நுழைந்து பகவானைப் பார்த்த போது உருகிப் போனார். 'பகவான் என்னுடைய ஒரே மகனை நான் இழந்து விட்டேன். அதன் பிறகு நானும் என் மனைவியும் மகிழ்ச்சியும், அமைதியுமின்றி இருக்கிறோம். அப்போதிருந்து வாழ்க்கையில் குறிக்கோள் ஏதுமின்றி அலைந்து கொண்டிருக்கிறோம்', என்று கூறியபோது பகவான் அவரைக் கருணையோடு பார்த்தார். வந்தவர் தொடர்ந்து 'பகவானே! எங்களுக்கு ஒரேயொரு வேண்டுகோள்தான் உள்ளது. அடுத்த ஜன்மத்தில் நாங்கள் எங்களது மகனைக் காண நீங்கள் அருள் புரிய வேண்டும்' என்று கூறினார்.

TPR தொடர்ந்து, "ஹாலிலிருந்த எங்களுக்கு பகவான் என்ன பதில் கூறுவார் என்பது தெரியும். அதையே தான் அவரும் கூறினார். பகவான் அவரைக் கருணையோடு நோக்கி 'யார்

தந்தை? யார் மகன்? தந்தைக்கும் மகனுக்கும் உள்ள உறவுக்கு என்ன அர்த்தம்? மறு பிறப்பு என்று நீங்கள் கூறுவதற்கு உண்மையில் என்ன பொருள்? இவையனைத்தையும் நீங்கள் அறிந்து கொண்டால் உங்களது வேண்டுகோளின் ஆழத்தை உங்களால் புரிந்து கொள்ள முடியும்' என்று கூறவும் அந்த மனிதர் பகவானை வணங்கி, 'பகவானே! எனக்கு இது ஒன்றும் புரியவில்லை. நான் வேண்டுவதெல்லாம் என் மகனைக் காண வேண்டும் என்பது மட்டுமே' என்று கூறினார். பகவான் உடனே வழக்கத்திற்கு மாறாகக் குறிப்பிடத்தக்க விதத்தில் நடந்து கொண்டார். தன் இருக்கையிலிருந்து எழுந்து, பின் இரு கைகளையும் தூக்கியவாறு, 'சரி! நீங்கள் கேட்பதைத் தருகிறேன். இந்த ஜன்மத்தில் பார்த்தது போன்றே, உங்கள் மகனை அடுத்த ஜன்மத்தில் தெளிவாகக் காணச் செய்கிறேன்' என்று கூறினார். அந்த அதிகாரி மிகுந்த சந்தோஷத்தோடு பகவான் பாதங்களில் பலமுறை வணங்கி ஹாலை விட்டு வெளியே செல்லும் போது ஆனந்தத்தில் மிதந்தார்,'' என்று கூறினார்.

TPR உட்பட ஹாலிலிருந்த அனைவருக்கும் கவலை ஏற்பட்டது. TPR பகவானைப் பார்த்து, "உங்களுடைய உபதேசத்திற்கு எதிர்மாறான ஒரு பதிலை நீங்கள் எதற்காகக் கொடுத்தீர்கள்? உங்களது உபதேசப்படி பிறப்பு, மறு பிறப்பு என்பதெல்லாம் ஒன்றும் கிடையாது. இந்த உடம்பே பிறக்கவில்லையென்னும் போது மறுபிறப்பைப் பற்றிய கேள்வியே எழவில்லையே?'' என்று கேட்டார். 'நான் என்ன செய்வது? அந்த பதிலை நான் கொடுத்திராவிட்டால் அந்த மனிதர் மனம் உடைந்து போயிருப்பார்,' என்று பகவான் கூறிய போது TPR அதிருப்தியைத் தெரிவிக்கும் வண்ணம், 'பகவானே! நீங்கள் அந்த நிலைக்கு இறங்கியது குறித்து நான் வருந்துகிறேன்' என்று கூறினார். அவர்களுடைய வருத்தத்தையும், ஏமாற்றத்தையும் கவனித்த பகவான் பகவத்கீதையை எடுத்து வருமாறு ஆலோசனை கூறினார். அதிலிருந்து ஒரு பகுதியை உரக்கப் படிக்குமாறு TPR-இடம் சொன்னார். அந்தப் பகுதியில் பகவான் ஸ்ரீ கிருஷ்ணர், 'அவரவருடைய தகுதிக்கேற்ப ஞானம் வழங்கப்பட வேண்டும். தத்துவத்தை ஏற்கத் தகுதி இல்லாதவர்களுக்கு அது கொடுக்கப்பட்டால் அவர்களுடைய நம்பிக்கை சுக்கு நூறாகிவிடும் என்று கூறியுள்ளதை ரமண பகவான் எடுத்துச் சொல்லி தன் செய்கைக்கு விளக்கம் கூறினார்'. இதுதான் பகவானுடைய கருணை,'' என்று TPR முடித்தார்.



பகவானுடைய கருணையின் மற்றொரு முகம் பற்றி - ஒருவரை அடியோடு மாற்றியமைப்பது பற்றிக் கூற நான் அவரைத் தூண்டியபோது TPR, "அரவிந்த் போஸ் என்பவர் ஒரு தொழிலதிபர். அறிவாளியான அவர் பகவானின் பக்தரும் கூட. பகவானுடைய உபதேசமான ஆத்ம விசாரத்தால் கவரப்பட்ட

அவர் ஒரு தொழிற்சாலையை பெங்களூருவில் துவங்கினார். வாராவாரம் பகவானைக் காணவரும் அவர் தனது நண்பர்களையும் உடன் அழைத்து வருவதுண்டு. அச்சமயத்தில், போஸுக்கு, சுமார் இருபது வயதாகியிருந்த ஒரு மகன் இருந்தார். எல்லா விதத்திலும் சிறப்பாக விளங்கிய அந்த இளைஞரிடம் தொழிற்சாலை நிர்வாகத்தை ஒப்படைத்துவிட்டு பகவானுடைய திவ்ய சரணங்களில் போஸ் நிரந்தரமாகத் தங்க விரும்பினார். ஆனால் அவர் மகன் திடீரென இறந்து விடவே, போஸ் மீளாத் துயரில் மூழ்கினார். ரமணாச்ரமத்திலிருந்து பலரும் சென்று அவரைத் தேற்ற முயற்சி செய்யும் விதமாக பகவானுடைய உபதேசங்களைப் பற்றியெல்லாம் எவ்வளவுதான் எடுத்துரைத்த போதும் ஒன்றும் பிரயோசனப் படவில்லை. பகவானிடம் அவரை அழைத்து வருவது ஒன்றே வழி என்பதை நாங்கள் உணர்ந்து கொண்டோம். சாதாரணமாக, மதியம் பன்னிரெண்டு மணி முதல் இரண்டு மணி வரை ஹாலில் யாரும் இருக்கமாட்டார்கள் என்பதால் அந்தச் சமயம் பார்த்து நான் போஸை பகவானிடம் அழைத்துச் சென்றேன். பகவான் தனக்கு அருகாமையில் அவரை அமரச்செய்து, தொடர்ந்து அவரை நோக்கிய வண்ணமிருந்தார். உடலளவிலும் மனத்தளவிலும் போஸ் மிகுந்த வேதனையை அனுபவித்துக் கொண்டிருந்தார். அமைதியற்றிருந்த அவரால் கண்களைக் கூடத் திறக்க இயலவில்லை. பகவான் தன் கவனத்தை அவரிடம் முற்றிலுமாகத் திருப்பியிருக்கவே இறுதியில் அவர் கண்களைத் திறந்தார். போஸ் எப்படியோ பகவானைப் பார்க்க முற்பட்ட நிலையிலும், பகவான் அவரைப் பார்த்த வண்ணம் இருந்தார். சிறிது நேரத்திற்குப் பின் அவரது நிலையிலிருந்து உலுக்கி எழுப்பப்பட்ட அவர் உரத்த குரலில், “பகவானே! கடவுள் என்ற ஒருவர் உண்மையாக இருக்கிறாரா?” என்று மகனின் இழப்பினால் ஏற்பட்ட வேதனை தோய்ந்த குரலில் கதறினார். போஸை நோக்கியபடியே இருந்த பகவான் “போஸ்! உங்களுடைய கேள்வியிலேயே பதிலும் அடங்கியுள்ளது,” என்று கூறினார். (அவர் ஆங்கிலத்தில் கேட்ட கேள்வி ‘Is there God?’ என்பதாகும். வார்த்தைகளைச் சற்று மாற்றி அமைக்கும் போது, ‘There is God’ என்று அது மாறிவிடும்). ஐந்து நிமிடங்களுக்குப் பூரண அமைதி நிலவியது. இருவரும் ஒருவரையொருவர் பார்த்தவாறு இருந்தனர். ஜன்னலுக்கு வெளியில் நின்றபடி நடப்பதைக் கவனித்துக் கொண்டிருந்த TPR, போஸிடம் மாற்றம் ஏற்படுவதைக் கண்டார். சுயநிலைக்குத் திரும்பிய அவர் பகவானை ஸாஷ்டாங்கமாக வணங்கினார். முதன் முறையாகப் புன்முறுவல் செய்த போஸ், ‘பகவானே! உங்களுக்கு நன்றி’ என்றுரைத்ததாகக் கூறிய TPR, “இதுவே பகவானின் கருணை. பகவானுக்கும் போஸுக்குமிடையே என்ன நிகழ்ந்தது என்பதை நம்மால் புரிந்து கொள்ள முடியாது. போஸ் கேட்ட கேள்வி ‘Is there God?’ என்பதாகும். கேள்வியிலேயே அது அடங்கியுள்ளது என்ற பகவானது பதில் அறிவு பூர்வமானது என்ற போதும் பகவானுடைய அளப்பரிய கருணை மிகவும் சக்தியோடு செயல் பட்டதால், போஸ் சமாதானம் அடைந்தார்,” என்று TPR முடித்தார். தொடர்ந்து பகவானுடைய பக்தராக விளங்கினார் போஸ். பக்தர்கள் தங்குவதற்காகப் பல குடில்களைக் கொண்ட ‘போஸ் காம்பவுண்ட்’ என்ற இடத்தை அவர் ஏற்கனவே கட்டியிருந்தார். நான் TPR-ஐ அவரது இறுதிக் காலத்தில் ஆச்ரமத்திற்குள் அழைத்து வரும் வரை அந்தக் குடில்களில் ஒன்றிலேயே அவரும் தங்கியிருந்தார்.

அதிகாலை மூன்றரை மணிக்கு பகவான் எழுந்து ஐந்து அல்லது ஐந்தரை மணிக்கு மலைக்குச் சென்று விடுவார். ஆறு மணிக்குக் குளித்து விட்டு ஆறரை மணியளவில் காலைச் சிற்றுண்டியை ஏற்றுக் கொள்வார். ஹாலுக்குள் எட்டு மணிக்கு வந்துவிட்டால் பின் பதினோரு மணிக்கு உணவு உட்கொள்ளச் செல்வார். அதனால் நான் TPR-இடம், “சேஷாத்ரி ஸ்வாமிகள், ராமகிருஷ்ண பரமஹம்ஸர் போன்ற பெரிய மஹான்கள் எப்போது என்ன செய்வார்கள் என்பதே தெரியாது. ஆனால் நமது பகவான் என்ன செய்வார் என்பது நமக்கு நன்றாகவேத் தெரியும்,” என்று

கூறினேன். "அந்த மாதிரி சொல்லாதே. ஞானியைப் பற்றி எதுவுமே கூற முடியாது," என்று உரைத்த TPR தொடர்ந்து "உனக்குச் சில நிகழ்ச்சிகளைப் பற்றி நான் கூறுகிறேன். அவற்றை நீ புரிந்து கொண்டாயா, இல்லையா என்பதை ஆராய்ந்து பார். ஒரு முறை வட இந்தியாவிலிருந்து வந்த வயதான ஸந்நியாசி ஒருவர் சில வாரங்களுக்குத் தங்கியிருந்தார். அவர் ஆன்மீகத்தில் பழுத்த பழமாக இருந்திருக்க வேண்டும். ஏனென்றால் அவரைச் சுற்றி ஒரு ஒளி வட்டத்தை மக்கள் கண்டிருக்கிறார்கள். ஆச்ரமத்தை விட்டுக் கிளம்பிய அன்று அவர் பகவான் முன் நின்று கொண்டிருந்த போது நானும் பகவானருகில் இருந்தேன். 'நான் அருணாசலத்திற்கு வந்து உங்களது ஆச்ரமத்தில் தங்கியதன் விளைவாக விரும்பியது அனைத்தையும் பெற்று விட்டதால் மிகவும் மகிழ்ச்சியாக உள்ளேன். மேலும் என்னுடைய இரண்டு விருப்பங்களைப் பூர்த்தி செய்ய உங்களால் மட்டுமே முடியும்," என்று வேண்டினார்.

பகவானிடமிருந்து கடுமையான அதிர்ச்சி தரக்கூடிய பதில் அந்த ஸ்வாமிக்குக் கிடைக்கப் போகிறது என்று ஹாலிலிருந்த நாங்கள் அனைவருமே எண்ணியதால் திகைத்துப் போய் காத்திருந்தோம். பகவான் தலையை அசைத்துத் தொடர்ந்து கூறுமாறு ஸந்நியாசிக்குச் சமிக்ஞை செய்தார். அவர் கைக்கூப்பிய வண்ணம், "என்னுடைய முதல் வேண்டுகோள் : உங்களது திவ்ய சரணங்களில் என் தலையை வைத்து நான் மனமுருகி என் கண்ணீரால் உங்கள் பாதங்களைக் கழுவ வேண்டும்" என்றார். பகவான் பதில் எதுவும் கூறாமல் காத்திருந்தார். "இரண்டாவதாக உங்களது திருக்கரங்களை என் மீது வைத்து எனக்கு முக்தி அளித்து விட்டதாக உறுதி செய்ய வேண்டும்," என்று வேண்டினார். இத்தகைய ஆசைகளை அவர் பகவானிடம் கூறியதைக் கேட்ட நாங்கள் எங்களுக்குள்ளேயே சிரித்துக் கொண்டோம். ஆனால் ஒரு அதிசயம் நிகழ்ந்தது. சோபாவிலிருந்து எழுந்து ஸந்நியாசியின் முன் நின்று, பகவான் தன் காலைச் சுட்டிக் காட்டினார். அந்த ஸ்வாமி உடனே பகவானின் பாதங்களில் விழுந்து மனமுருகிக் கண்ணீர் பெருக்கியபோது பகவானுடைய பாதங்கள் முழுமையாக நனைந்தன. சிறிது நேரத்திற்குப் பிறகு பகவான் அவரை எழுப்பி நிறுத்தி தோள்களில் தனது கைகளை வைத்து 'நான் உங்களுக்கு ஆத்ம ஸாக்ஷாத்காரம் தந்து விட்டேன்!' என்று உறுதி செய்தார். ஸந்நியாசியினுடைய கண்களிலிருந்து கண்ணீர் பெருகியபடி இருந்த போதும் பகவானிடமிருந்து விடை பெறும் போது மன நிறைவினால் அவரது முகம் பிரகாசமாக இருந்தது."

TPR தொடர்ந்தார். "அறிமுகமில்லாத ஒரு அமெரிக்கர், ஆச்ரமத்திற்கு வந்தார். அவர் யார் என்பது எங்களுக்குத் தெரியாது. நல்ல உயரமும் வசீகரமும் மிக்க அவர், தான் யார் என்பதை வந்த போது தெரிவிக்கவில்லை. அவர் உள்ளே நுழைந்த நொடியிலிருந்து பகவானுடைய பார்வை அவர் மீதே இருந்தது. பகவான் முன்னால் அவர் மூன்று மணி நேரம் அமர்ந்திருந்தார். அந்த நேரத்தில் அவர்கள் இருவரிடையே ஏதோ ஒருவிதப் பரிமாற்றம் நிகழ்ந்தது. அங்கு வார்த்தைப் பரிமாற்றமேயில்லாத பேரமைதி நிலவியது. அமெரிக்கர் எழுந்து வெளியேச் சென்று விட்டார். அதன் பிறகு வரவுமில்லை. நான் பகவானிடம் "அந்த மனிதர் மூன்று மணி நேரம் மட்டும் தங்கி விட்டுச் சென்று விட்டாரே, அது எப்படி?" என்று கேட்டேன். அதற்கு பகவான் 'அவருக்கு வேண்டியது கிடைத்து விட்டது. வந்த வேலை முடிந்து விட்டது. அதற்கு மேலும் தங்குவதற்கு என்ன தேவையுள்ளது? எல்லாமே நிகழ்காலத்தில் முடிகிறது', என்று பகவான் கூறியதாக TPR சொன்னார்.

செல்வாக்கு மிக்க அமெரிக்க பெண்மணி ஒருவர், தான் பகவானுடன் இருப்பதற்காகவே இந்தியாவிற்கு வருவதாக ஒரு தந்தி அனுப்பியிருந்தார். அதில், குறிப்பிட்ட ஒரு தேதியில் மும்பைக்குக் கப்பலில் வருவதாகவும் பின்னர் ரயிலில் சென்னைக்கு வருவதாகவும் கூறப்பட்டிருந்தது. பின்னர், தான் ஒரு சிறப்பு ரயிலில் அருணாசலத்திற்கு ஒரு குறிப்பிட்ட நாளில் வருவதாக ஒரு



**ஸ்ரீ பகவான் கோசாலையை நோக்கி நடந்து செல்லும் போது – வலப்புறம்** TPR

கடிதமும் எழுதியிருந்தார். பின்னர், மும்பையிலிருந்து தனது பிரயாணத்தை உறுதி செய்து மீண்டும் ஒரு தந்தி அனுப்பியிருந்தார். அதைத் தொடர்ந்து சென்னை வந்த பின்னரும் ஒரு தந்தி அனுப்பினார். ஆனால் அவர் ரயில் நிலையத்தில் இறங்கிய போது அவரை வரவேற்க யாருமில்லாததைக் கண்டு ஏமாற்றமடைந்தார். ரமணாச்ரமத்திற்கு வந்த பின்னரும் கூட அவரை வரவேற்க யாரும் இருக்கவில்லை. அவர் ஹாலுக்குள் தனியாகவே வந்தார். அப்போது பகவான்

செய்தித் தாளை முகத்துக்கு நேராகத் தூக்கிப் பிடித்துப் படித்துக் கொண்டிருந்ததால் பகவானுடைய முகத்தைக் கூட அவரால் பார்க்க முடியவில்லை. வெகு தூரத்திலிருந்து பிரத்தியேகமாக ஒரு பயணத்தை அவர் மேற்கொண்டிருந்ததால், மேஜர் சாட்விக், முனகால வேங்கடராமையா இவர்கள் இருவரிடமும் இந்த பெண்மணிக்கு தேவையானதைச் செய்து கொடுக்கும்படி கேட்டுக் கொள்ளப்பட்டிருந்தது. தனக்களிக்கப்பட்ட வரவேற்பினால் மிகுந்த கோபத்தில் இருந்த அவர், "நான் ஒரு பெண். நான் என்ன தவறு செய்தேன்? செய்ய வேண்டிய அனைத்தையும் சரியாகச் செய்து நான் இங்கு வந்துள்ளேன். இங்கு யாரும் என்னை மதிக்கவில்லை. இந்த ரமண மஹர்ஷியோ என்னைப் பார்க்கக் கூட மாட்டேன் என்கிறார்," என்று பொரிந்து தள்ளினார். கோபம் பொங்க, சாட்விக், முனகால வேங்கடராமையா இவர்கள் இருவரிடமும். 'நாலு மணிக்கு நான் தங்கியுள்ள ரயில்வே காருக்கு வாருங்கள். எனக்கு உங்களோடு பேச வேண்டும் என்று கூறிவிட்டு ஆச்ரமத்தை விட்டு 'விருட்டென' சென்று விட்டார். அவர்கள் அந்தப் பெண்மணியைக் காணச் சென்றபோது 'ரமண மஹர்ஷி ஏன் சாதாரணமான மரியாதையைக் கூட எனக்குத் தரவில்லை? நான் என்ன தவறு செய்தேன்? நான் எல்லாவற்றையும் முறைப்படி தான் செய்தேன். ஆனால் அவருக்கு எப்படி மரியாதை செலுத்துவது என்றோ, ஒரு பெண்மணியை எவ்வாறு வரவேற்க வேண்டும் என்றோ தெரியவில்லை," என்று கூறினார். உடனே அவர்கள் "எங்கள் குருவை நிந்திக்க வேண்டாம். நாங்கள் சென்று எல்லா விஷயத்தையும் அவரிடம் தெரிவிக்கிறோம் என்று கூறினர். 'அதற்காகவே தான் நான் உங்களிடம் கூறுகிறேன். போய் அவரிடம் சொல்லுங்கள். அவர் ஏதாவது பாடம் படிக்கட்டும்' என்று அப்பெண்மணி கூறினார். மிகுந்த பயத்தோடு அவர்கள் இருவரும் பகவானிடம் நடந்ததைக் கூறியபோது, மிக ஆர்வத்தோடு அவர் கேட்டது மட்டுமின்றி நடந்ததை விரிவாகக் கூறும்படி ஊக்குவித்தார். பிறகு இறுதியாக பகவான், 'அவர் இதையெல்லாம் சொன்னாரா? அப்படி என்றால் அதுவே வேலை செய்யும்' என்று கூறினார். அன்றிரவு அந்தப் பெண்மணிக்கு வந்த கனவில் பகவான் தோன்றி 'திரும்பி வாருங்கள்' என்று கூறினார். மறுநாள் ரமணாச்ரமத்திற்கு வந்தபோது அவர் முன் அறிவிப்பு ஏதுமின்றி வந்தார். காலை எட்டு மணி முதல் ஹாலின் நுழைவாயிலைப் பார்த்தவாறே பகவான் அமர்ந்திருந்தார். பத்து மணிக்கு வந்து சேர்ந்த அந்தப் பெண்மணியின் மீது பகவான் தனது புன்னகையைப் பொழிந்தார். அவர் பகவானின் பக்தையானார். பிற்காலத்தில் 'நம்மால் ஒரு போதும் குருவை மதிப்பிடவோ அல்லது அவர் எவ்வாறு நடந்து கொள்வார் என்றோ தெரிந்து கொள்ள முடியாது. அவருடைய செயல்களைக் கொண்டு ஒருவரால் எதையும் நிச்சயிக்க முடியாது,' என்று அந்தப் பெண்மணியே கூறினார்.

இந்த நிகழ்ச்சிகளை TPR கூறியதோடு மட்டுமின்றி பகவானுடைய உபதேசங்களின் ஆழத்தையும் புரிந்து கொள்ளச் செய்தார். ஒரு முறை அவர் பகவானிடம், "பகவானே! உங்களுடைய ஸ்தூல ரூபத்தால் ஈர்க்கப்பட்டு நான் இங்கு வரவில்லை. உங்களுடைய 'நான் யார்' என்ற உபதேசம் முழுமையாக ஏற்கும்படி இருந்ததால் தான், நான் உங்களிடம் ஈர்க்கப்பட்டேன். நான் அதைக் கடைப்பிடித்துக் கொண்டிருக்கின்றேன் என்றாலும் எவ்வித முன்னேற்றமும் எனக்குத் தெரியவில்லை. அனுபவத்திற்கு வரவில்லை," என்று கூறினார். பகவான் அவரைக் கூர்ந்து பார்த்து, 'மீன் பிடிக்க விரும்பும் ஒருவன் அதை ஈர்ப்பதற்காகத் தூண்டிலில் ஒரு புழுவை வைக்கிறான். அவன் உண்மையில் மீனுக்கு ஆகாரம் கொடுக்கவா விரும்புகிறான்? அதைப் பிடிப்பதற்கே ஆசைப்படுகிறான்,' என்று கூறிய சொற்களின் உள் அர்த்தத்தைப் புரிந்து கொண்டால் 11 பக்கங்களைக் கொண்ட இரத்தினச் சுருக்கமான 'நான் யார்' என்ற புத்தகம் நம் அனைவரையும் ஈர்த்து ஒரேயடியாகப் புலியின் வாயில் இடுவதற்குத்தான் என்பது விளங்கும்.

பகவானிடமிருந்து அவருடைய நூல்களுக்கு ஏதாவது விளக்கம் கேட்டு அறிந்து கொண்டீர்களா? என நான் TPR-இடம் கேட்ட போது, தான் ஒரு முறை பிரகாசமான ஒளி என்ற அர்த்தத்தில் வரும் தமிழ் வார்த்தையான 'ஆர் ஒளி' என்ற சொற்களுக்கு விளக்கம் கேட்டதாகத் தெரிவித்தார். இந்தச் சொற்கள் 'உள்ளது நாற்பதின்' இரண்டு மங்களாசரண வெண்பாக்களுக்குப் பின் வரும் முதல் பாடலில் வருகிறது. அந்தப் பாடல்:

"நாம் உலகம் காண்டலால் நானா ஆம் சக்தி உள
ஓர் முதலை ஒப்பல் ஒரு தலையே - நாம உருச்
சித்திரமும் பார்ப்பானும் சேர்படமும் ஆர் ஒளியும்
அத்தனையும் தான் ஆம் அவன்"

"ஒருவர் உலகத்தைப் பார்ப்பதால் அதில் காணப்படும் பலவித உருவங்களை ஒப்புக் கொண்டே ஆக வேண்டும். ஆயினும் காண்பவை அனைத்தும், அவற்றின் பெயர்களும், அவற்றின் உருவமும் அவற்றைக் காண்பவனும், இந்தச் சித்திரத்துக்கு ஆதாரமான திரையும், அதை விளக்கும் ஒளியும் எல்லாமே ஒரேயொரு தத்துவம் தான். அது 'நான் இருக்கிறேன்' என்ற உணர்வே," என பகவான் விளக்கினார். நான், 'விளக்கக்கூடிய இந்த ஒளி யாது? அது எதைக் குறிக்கிறது? என்று பகவானிடம் கேட்ட போது 'ஆர்ஒளி' என்றால் எங்கும் பரவி நிற்கும் ஒளி என்று பொருள்படும். அது உலகிலுள்ள பொருட்கள் அனைத்தையும் காண உதவும் மனதின் ஒளியைக் குறிக்கும்' என்று பதிலளித்தார். உலகில் அறிந்தவை, அறியாதவை இரண்டையுமே நாம் காண்பது மனதின் மூலமே. அமானுஷ்யமான தத்துவங்களையும் கூட, நாம் மனதினாலேயே காண்கிறோம். கண்ணால் காண்பவை அறிந்தவை. அறியாதவை என்பது நாம் பெற விரும்பும் இறைக் காட்சியாகும். தூய ஒளி என்பது 'நான் இருக்கிறேன்' என்று நம்மால் அழைக்கப்படும் உணர்வின் ஒளியாகும். இதையே இயேசுநாதர், நெருப்பு என்று அழைக்கிறார். இந்தத் தூய ஒளி என்பது வெளிச்சம், இருள் இவையிரண்டையும் கடந்து நிற்கும் உணர்வின் ஒளியே. இந்த ஒளியில் பொருட்கள் எதையும் காண்பது இயலாது. இங்கு பார்ப்பவனோ, பார்க்கப்படும் பொருளோ இல்லை. ஆழ்ந்த உறக்கத்தில் நாம் எவ்வாறு பொருட்களைக் காண்பதில்லையோ அதே போன்று இங்கும், எதையும் காண முடியாது. இருந்தாலும் உணர்வின் ஒளி தூய மனதினால் பிரதிபலிக்கப்படுகிறது. அதுவே மனதின் ஒளியாகும். இந்த ஒளியே உலகம் முழுவதின் இருப்பிற்கும் காரணமாக உள்ளது. எது நம்மால் பார்க்கப்படுகிறதோ அதை முழுமையான பூரண ஒளியில் (முக்தி நிலையில்) அல்லது இருட்டில் (ஆழ்ந்த உறக்க நிலையில்) காண முடியாது. மலினமடைந்த, பிரதிபலிக்கப்பட்ட ஒளியின் மூலம் மட்டுமே (நான் எனும் அஹங்காரத்தின் மூலம் மட்டுமே) அவற்றைக் காண முடியும். பிரதிபலிக்கப்பட்ட மனதின் ஒளியையே இப்பாடலில் வரும் 'ஆர் ஒளி' என்பது குறிக்கிறது' என்று பகவான் விளக்கியதாக TPR கூறினார்.

ஒருமுறை நான் TPR-இடம் 'ஸாதகர்களாகிய எங்களுக்கும் பொறுப்புக்கள் உள்ளன. அதனால் ஒன்றுக்கொன்று முரண்பட்டதாகத் தோன்றும் லௌகீக கடமைகளையும், ஆன்மீக விழைவுகளையும் எவ்வாறு ஒரே சமயத்தில் சமாளிப்பது?' என்று நான் கேட்ட போது அவர் பதிலாக, "பகவானிடம் எனக்கு என்ன நேர்ந்தது என்பதை நான் உனக்குக் கூறுகிறேன். ஒரு முறை லௌகீக வாழ்க்கையில் சமாளிக்க இயலாத பல பொறுப்புக்கள் காரணமாக எவ்வளவுதான் மனதை உண்முகப்படுத்தினாலும் சம்சாரத்தின் பிடியிலிருந்து என்னால் விடுபட முடியவில்லை. தாங்கள்தான் காப்பாற்ற வேண்டுமென்று பகவானிடம் கெஞ்சினேன். இந்தப் பற்றுக்கள் அனைத்தையும்

எப்படியாவது கடந்து விட வேண்டும் என விரும்பி அதற்கான வழியை நாடினேன். 'பெருகி வரும் வெள்ளத்தில் எறியப்பட்ட மிகச் சிறிய மரத்துண்டைப் போன்று இரு' என்று பகவான் என்னைத் திரும்பிப் பார்த்து மிகுந்த அன்போடு கூறினார்,'' என்றார் TPR. பிறகு அதை விளக்க முற்பட்ட TPR, என்னிடம் ''கர்மங்களோடு இணைந்த புற வாழ்க்கையையும், அன்றாட வாழ்வில் ஏற்படக் கூடிய ஈடுபாடுகளையும் ஸாதகரானாலும் பிறரானாலும் தவிர்க்க முடியாது. அவையிரண்டும் மிகவும் முக்கியமானவை என்று நினைத்துக் கொண்டுதான் மனிதர்கள் பெயருக்கும், புகழுக்கும் பாடுபடுகிறார்கள். இதனால் பலவித பிரச்சனைகளையும், போராட்டங்களையும் அவர்கள் சந்திக்க நேருகிறது. உண்மையான ஆன்மீகம் என்பது கர்மங்களைத் தவிர்ப்பது அன்று. ஆனால் கர்மங்கள் செய்யும் போது, அவற்றைச் செய்பவருக்கு முக்கியத்துவம் அளிக்காமல் இருப்பதுதான் உண்மையான ஆன்மீகம். வேறு விதமாகச் சொன்னால் எந்தக் காரியத்தில் ஈடுபட்டாலும், ஈடுபடுபவர் வெள்ளப்பெருக்கில் மிதக்கும் தூசிக்குத் 'தான்' சமம் என்ற எண்ணத்தோடுதான் செயல் பட வேண்டும். 'நான் செய்கிறேன்' என்ற எண்ணத்தை விட வேண்டும். ஆனால் செயலை விடுவது கூடாது' என்று கூறினார். தொடர்ந்து TPR இடம் மேலும் கேள்விகளைக் கேட்டு, 'செயலைச் செய்பவன் நான் எனும் போது நான் அதைச் செய்யவில்லை என்று எவ்வாறு கருதுவது?' என்று கேட்டேன். அவர் மீண்டும் பதிலளிக்கும் போது 'இந்தக் கேள்வியை நானும் பகவானிடம் கேட்டேன். கர்மங்களைச் செய்யும் எனக்குள்ள முக்கியத்துவத்தை அழிப்பதற்கு, நடைமுறைக்கு ஒத்து வரக்கூடிய இரண்டு வழிகளை பகவான் எனக்குக் காட்டினார். கர்மங்களைச் செய்ய வேண்டும். ஆனால் எதிர் வினைகளில் (பதில் செயல்களில்) ஈடுபடக் கூடாது என்பது ஒன்று. இரண்டாவதாக கர்மங்கள் உங்கள் மூலம் செய்யப்படுகின்றனவேயன்றி உங்களால் அன்று என்பதை முழுமையாகவும், அனுபவ பூர்வமாகவும் உணர்ந்து கொள்ள வேண்டும். கர்மங்கள் உன்னதமான ஒரு சக்தியால் செய்யப்படுகின்றன. எனவே அவை நல்லதோ கெட்டதோ எதுவானாலும் உங்களால் செய்யப்படவில்லை என்பதை உணர்ந்து கொள்வதோடு மனதின் வேலையான எதிர் வினைகளில் (பதில் செயல்களில்) ஈடுபடாதிருக்க வேண்டும். மனம் எப்போதுமே நம்மைக் கர்மத்தில் பிணைக்கிறது. எதிர் வினைகளில் (பதில் செயல்களில்) ஈடுபடாத போது மனம் இல்லாது ஒழிகிறது - ஒரு செயலுக்கு எதிர்வினை செய்யாதிருக்கும் போது மனம் இறந்து விடுகிறது' என்று விரிவாக எடுத்துரைத்தார்.



'நிர்வாண அறை'க்கு வெளியே
ஸ்ரீ பகவானுடன் TPR

TPR-இன் இறுதி நாட்களில் ஆச்ரமத்திற்கு வந்து விடுமாறு நான் அவரை வற்புறுத்தி அழைத்தேன். சாட்விக்கின் அறையில், அவருக்குப் பிறகு முதன் முதலாகத் தங்கியது TPR தான். அந்த அறையில் சாட்விக்கைத் தவிர வேறு யாரும் இருந்ததில்லை. TPR-க்குப் பக்கவாதம் வந்ததால் பகவானின் பக்தரும், எனது நண்பருமான டாக்டர் பாஸ்கரனிடம் சிகிச்சைப் பெற பாண்டிச்சேரிக்கு

அவரை அழைத்துச் சென்றேன். சில நாட்களுக்குள்ளேயே அவரால் பேச முடிந்தது. ஆஸ்பத்திரியில் அவரைச் சென்று பார்த்தபோது, 'என்னை ஆசீர்வதியுங்கள்!' என்று கேட்டுக் கொண்டேன். அவர் என் தலை மீது கை வைத்து, "பகவானுடைய நேரடி உபதேசங்களைக் கடைப்பிடி. நேரடி உபதேசமான மௌனத்தையும், ஆத்ம விசாரத்தையும் தொடர்ந்து பழகு. வேறு எந்த வழிக்கும் திரும்பி விடாதே. செய்வதற்குக் காரியம் ஒன்றுமில்லாத போதெல்லாம் மௌனத்தைக் கடைப்பிடி. காரியங்களில் ஈடுபடும் போதும், 'இதைச் செய்வது யார்? என்ற கேள்வியை உன்னிடமே எப்போதும் கேட்டுக் கொள். இந்த ஆத்ம விசாரத்தைத் தொடர்ந்து செய்யும் போது, அது உன்னைச் 'சும்மா இருக்கும்' நிலைக்கு மீண்டும் அழைத்துச் சென்று விடும். சும்மா இரு என்றால் செயலற்று இரு என்று பொருளல்ல. எண்ணங்கள் அற்று இருக்க வேண்டும் என்பது தான் பொருள். கணேசா! எனக்கு அது அப்போது புரியவில்லை. ஸாதகருக்கும் பகவானுக்கும் உள்ள தொடர்பே 'சும்மா இருத்தல்' அதாவது எண்ணங்கள் அற்று இருத்தல் என்பது தான். எப்போதெல்லாம் கர்மங்களில் ஈடுபடவில்லையோ அப்போதெல்லாம் உன் கவனத்தை முழுமையாக அகமுகமாக்கி மௌனத்தில் 'நான் இருக்கிறேன்' என்ற உணர்வில் செலுத்து. அப்போது பூரணத்தோடு - அருணாசலத்தோடு பகவானோடு, இறைவனோடு, கிறிஸ்துவோடு - எந்தப் பெயரை வேண்டுமானாலும் அதற்கு வைத்துக் கொள். -அதோடுதான், அந்த உண்மைப் பொருளாகத்தான் நீ இருக்கிறாய். அப்போது நீ ஸத்தியத்தில் நிலைத்து விட்டாய் என்று கூறலாம்," என்று TPR அறிவுரை வழங்கினார். பெங்களூருவில் இறைவனடி சேர்ந்த TPR-இன் இறுதி வார்த்தைகள், 'கணேசனுக்குக் கடிதம் எழுதி நான் அவனை ஆசீர்வதித்ததாகக் கூறுங்கள்' என்பதாகும். அவருடைய அந்த ஆசிகள் தனியாக எனக்கு மட்டும் தரப்பட்டதன்று. ஸாதகர்கள் அனைவருக்குமே கொடுக்கப்பட்டதாகும். என்றுமுள்ள ஸத்தியப் பொருளான அருணாசலத்தின் பாறைகளும் கற்களுமான இந்த பக்தர்களுக்கு நமது வணக்கத்தைத் தெரிவிப்போம். அவர்களுடைய வாழ்க்கையைப் பகிர்ந்து கொள்வதால் நாமும் அந்த ஸத்தியத்தில் நிலைத்து இருக்கிறோம்.



# 51 ஸ்வாமி மாதவ தீர்த்தர்



பகவானுடைய இரு பக்தர்களில் அடுத்து நாம் காணப்போகும் ஒருவர் பண்டிதராகவும், தத்துவ ஞானியாகவும் இருந்தார்; மற்றவர் நாத்திகர். பகவான் தன் தயை, அன்பு, கவனம், ஞான ஒளி இவற்றால், வெவ்வேறு விதமான உலோகங்களைப் போன்றிருந்த இருவரையும் தங்கமாக மாற்றினார். அவர் ஒவ்வொருவரையும் மாற்றிய விதம் வெவ்வேறாக இருந்த போதிலும், விளைவு இருவருக்கும் அத்யாத்ம விடுதலையாகவே இருந்தது. ஒருவர் மிகுந்த கவனத்தோடு இந்த பக்தர்களைப் பற்றியும், பகவான் அவர்களுடைய நிலைக்கு இறங்கி, தடைகளை நீக்கி, அதன் மூலம் பூர்ண நிலையை பெற அவர்களது உள்ளுணர்வை எவ்வாறு தட்டி எழுப்பினார் என்பதைக் காணும் போது, தெரிந்தோ, தெரியாமலோ நாம் நெருப்பில் கை வைக்கும் போது எவ்வாறு அது சுடுகின்றதோ, அதே போன்று அறிந்தோ அறியாமலோ நம்மிலும் கூட அந்த மாற்றம் நிகழும்.

ஸ்வாமி மாதவ தீர்த்தர் ஒரு பெரிய மஹான். மோதிலால் (ஸ்வாமி மாதவ தீர்த்தர்) தனது குழந்தைப் பருவத்திலேயே மரணம் குறித்து ஆழமாக சிந்திப்பார். எல்லோரையும் முக்கியமாக பரிவ்ராஜக ஸாதுக்களையும், ஸந்நியாசிகளையும், "தயவு செய்து மரணம் என்னும் இந்தப் புதிரை எனக்கு விளக்கித் தாருங்கள்," என்று தொந்தரவு செய்வார். ஸம்ஸ்க்ருதம் கற்றுக்கொண்டு, தன் கையில் கிடைத்த ஆன்மீக நூல்கள் அனைத்தையும் படித்தார். அவருக்கு மிகவும் பிடித்தமானது 'ஸ்ரீமத் பாகவதம்.' நவீன விஞ்ஞானத்தை நன்கு கற்றறிந்திருந்த அவருக்கு ஐன்ஸ்டைன் கண்டறிந்த காலம்-இடம்-பொதுத் தொடர்பு தத்துவத்தின் (Theory of Relativity) மீது விசேஷ ஈர்ப்பு இருந்ததோடு வேதாந்தம் மற்றும் ஆதிசங்கரரின் மாயா தத்துவ விளக்கங்களிலும் ஒப்பு நோக்கக்கூடிய பல விஷயங்களை அவற்றில் அவர் கண்டார். அவர் வேதாந்தத்திற்கும் ஐன்ஸ்டைனின் தத்துவத்திற்கும் இருந்த ஒற்றுமை குறித்து கல்லூரிகளிலும், பள்ளிகளிலும் சொற்பொழிவு ஆற்றத் துவங்கினார். பிரபலமான பேச்சாளராக இருந்த அவர் தனது பிரயாணங்களின் போது ஆனந்தமயீமாவைப் போன்ற பல ஞானிகளையும், ஸாதுக்களையும் சந்திக்க முடிந்தது. 1920-ல் பாண்டிச்சேரியிலிருந்த புகழ்பெற்ற மஹாயோகியான ஸ்ரீஅரவிந்தரோடு நேரடித் தொடர்பு கிடைக்கவே உண்மையான ஆன்மீகத் தேடலில் அவர் மூழ்கினார்.

1939-ல் துறவு மேற்கொண்ட பின்னர் அவர் ஸ்வாமி மாதவ தீர்த்தர் என்று அழைக்கப்பட்டார். ஸந்நியாசி என்ற முறையில் விரிவாகப் பயணங்களை மேற்கொண்டார். வெறும் பண்டிதராக மட்டுமின்றி கற்றவற்றை வாழ்க்கையில் கடைப்பிடித்ததால் அவர் மிகவும் பிரபலமாக இருந்தார். அயராது எழுதும் பழக்கமுள்ள அவர் நூற்றுக்கும் மேலாகப் புத்தகங்களை எழுதியுள்ள போதிலும், தனது ஆன்மீக விழைவில் அவர் தளர்ச்சியடையவில்லை. தீர்க்க முடியாத இந்தத் தாகத்தின் காரணமாக 1944-ல் அருணாசலத்திடமும் பகவானிடமும் ஈர்க்கப்பட்டார். அருணாசலத்தில் அவர் தங்கியிருந்த 14 நாட்களுமே கற்றலும் அனுபவமும் நிறைந்து விளங்கின. பண்டிதரானதால் அவர் தனது அனுபவங்களையும், பகவானிடம் தான் விடுத்த வினாக்களையும் அவரது விடைகளையும் குறிப்பெடுத்து வைத்திருந்தார். உணவுக் கூடத்தில் பகவானுக்கு மாதவ தீர்த்தர் அறிமுகம் செய்து வைக்கப்பட்ட முதல் நாளிலேயே பகவான் அருள் பொங்க அவரை நோக்கினார். "மஹர்ஷியின்

பார்வையில் சூரியனுடைய பிரகாசமான ஒளியை நான் கண்டேன். மூச்சு நின்றுவிட்டது போலவும் மனம் விவரிக்க இயலாத அமைதியும் சந்தோஷமும் நிறைந்த ஆன்மீக உலகத்திற்கு உயர்த்தப்பட்டதாகவும் உணர்ந்தேன்,'' என்று அந்த முதல் பார்வையைப் பற்றி மாதவ தீர்த்தர் குறிப்பிடுகிறார். பகவான் தன்னை சந்தித்தவர்கள் அனைவரையுமே முதல் பார்வையாலேயே தன்னுடைய உயர்ந்த நிலைக்கு அழைத்துச் சென்று விடுவார். உண்மையில் 'தரிசனம்' என்பது அதுவே. ஒருவருக்கு அதை ஏற்கும் தகுதி இருந்தாலும், இல்லாத போதும், குரு தனது பூரணத்துவத்தை எப்போதுமே வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறார். குருவின் கடாக்ஷத்தைப் பெறும் தகுதி பெற்றிருந்த ஸ்வாமி மாதவ தீர்த்தர் போன்றவர்கள் பாக்கியசாலிகள்.

மாதவ தீர்த்தர் ஆச்ரமத்தில் தங்கியிருந்த 14 நாட்களிலும் ஒவ்வொரு நிமிடத்தையும் தனக்கு உபயோகமான முறையில் செலவிட்டதால் அது நமக்கும் பிரயோஜனப்படுகிறது. ஹாலில் மௌனமாகத் தனது சோபாவில் அமர்ந்திருந்த மஹர்ஷி, தன்னைச் சுற்றி நடப்பவை எதிலும் ஈடுபடாதவர் போன்று தோன்றிய போதும் அவரது மௌனமான பார்வையினால் ஒவ்வொரு ஸாதகருடைய உள் உணர்வினைத் தொட்டுப் பேதமின்றி இணைந்ததால் அவர்கள் எண்ணங்களுக்கு அப்பாற்பட்ட அந்த மெய்ப்பொருளைத் தங்களுக்குள் உணர்ந்தனர் என்பதை என்னால் சுலபமாகப் புரிந்து கொள்ள முடிந்தது,'' என்கிறார் மாதவ தீர்த்தர். மஹர்ஷியினுடைய பேதமற்ற பாவத்தை ஸாதகர்கள் அவருடைய ஸந்நிதியில் ஏற்றுக் கொண்டதைப் பற்றிக் கூறும்போது ''வானொலி ஒலிபரப்பியைப் போன்று பகவானையும், அலைவரிசையைக் கிரஹிக்கும் கருவியாய் (ரேடியோவாக) ஸாதகர்களையும் எனக்கு உதாரணமாகக் கூறத் தோன்றுகிறது. இடைவிடாது சூரியன் ஒளியைப் பரப்புவது போன்று பகவானுடைய ஆன்மீக அலைகள் அவரைப் பொறுத்த வரையில் இடையறாது வெளிப்பட்ட போதும் அந்தத் தொடர் தாக்கத்தின் பலனை ஒரு ஸாதகன் நிலையிலிருந்து பார்க்கும் போது அந்த ஸாதகன் தன்னைத் தயார் செய்து கொள்ளாவிட்டால் அதன் முழுப் பயனையும் பெற இயலாது. ஸாதகன் ஆன்மீக அலைகளைப் பெறத் தகுதியான நிலையில் இருப்பதையே அருளின் செயலாக நாம் கூறுகிறோம். 'அருள் எப்போதும் உள்ளது. அதை இப்போது ஏற்றுக் கொள்ளுங்கள்!' என பகவான் பல முறை உறுதி அளிக்கவில்லையா?'' என்று கேட்கிறார் ஸ்வாமி மாதவ தீர்த்தர்.

ஸ்வாமி மாதவ தீர்த்தர், தான் மாயையைக் குறித்து எழுதியிருந்த புத்தகத்தை பகவானுக்கு ஏற்கனவே அனுப்பியிருந்தார். அதில் ஆதி சங்கரரின் மாயாவாதத்தை நவீன விஞ்ஞானக் கொள்கையான 'Theory of Relativity' (காலம்-இடம்-பொதுத் தொடர்பு தத்துவம்) பற்றிய கொள்கையை உறுதி செய்வதாக எடுத்துரைத்துள்ளார். அந்தப் புத்தகத்தைப் பற்றிய பகவானது அபிப்ராயத்தை அவர் கேட்ட போது, பகவான் கருணை கூர்ந்து, ஸ்வாமி மாதவ தீர்த்தர் தவறான அடிப்படையை வைத்துக் கொண்டு விஷயத்தைக் கையாண்டிருக்கிறார் என்பதைச் சுட்டிக் காட்டினார். காலம்-இடம்-பொதுத் தொடர்புத் தத்துவத்தின்படி காலமும் இடமும் பார்ப்பவர் நிலையோடும், பார்க்கப்படும் பொருளின் நிலையோடும் தொடர்புடைய ஒரு கருத்து மட்டுமேயாகும். அங்கு உண்மையில் காலமோ இடமோ இல்லை. இதை நிரூபிக்கும் விதமாக வெவ்வேறு இடங்களில் இருக்கும் இரண்டு நபர்கள் ஒரே நிகழ்ச்சியை எவ்வாறு வெவ்வேறு விதமாகக் காண்கின்றனர் என்று அது குறிப்பிடுகிறது. காண்பவர் இருவர், இரண்டு வெவ்வேறு இடங்களிலிருந்து பார்ப்பதாகக் கொள்ளுவதே தேவையற்ற ஒரு கற்பனை; உண்மையுமல்ல என்று பகவான் சுட்டிக் காட்டியதோடு அவ்வாறு கூறுவது வெறும் கோட்பாடு மட்டுமே. வேறுவிதமாகச் சொல்லப்போனால் காண்பவர் இருவருக்கிடையேயுள்ள இடம் என்று கூறுவதே ஒரு தோற்றம் மட்டுமே. ''காண்பான்'' ஒருவனே; அவனன்றி வேறு ஒன்றுமேயில்லை. தன்னுடைய தவறை மாதவ தீர்த்தர் உடனே உணர்ந்து

கொண்டார். மஹர்ஷியின் உயர்ந்த அத்வைத உண்மையை அனுபவத்தால் உணர்ந்திருந்ததால் நவீன விஞ்ஞானக் கொள்கைகளைச் சுலபமாக அவரால் சரி, தவறு எனப் பிரித்தறிய முடிகிறதை கண்டு வியந்தார்.

ஸ்வாமி மாதவ தீர்த்தர் தனது வேதாந்த அறிவின் அடிப்படையிலேயே பகவானிடம் கேள்விகளை முன் வைத்தார். "உலகம் அனைத்துமே தெய்வத்தைத் தவிர வேறொன்றுமில்லை என்னும் போது ஈசாவாஸ்ய உபநிஷத்தில் 'ஸாதகன் உலகைத் துறக்க வேண்டும்' என்று ஏன் கூறப்பட்டுள்ளது?" என்று அவர் கேட்டதற்கு பகவான் இயல்பான, தனது சொந்த அனுபவத்தின் அடிப்படையிலேயே பதிலைக் கூறினார். "தெய்வத்தைத் தவிர வேறு ஒரு பொருள் உலகமாக உள்ளது என்ற தவறான அறிவை மட்டுமே துறக்க வேண்டுமென்று அதில் கூறப்பட்டுள்ளது. உண்மையைப் போன்று தோற்றமளித்து வெளிப்படும் எதுவானாலும் அவற்றில் இருமை, பன்மை இவை உள்ளன என்ற கருத்தை ஸாதகர் துறப்பது அவசியம்," என்று பகவான் விடையளித்தார். அதற்கு ஸ்வாமி மாதவ தீர்த்தர் தனது நிலையிலிருந்து மாறாமல் "இருமை, பன்மை இவற்றைத் துறக்க வேண்டுமென்றால் தெய்வத்திடம் சரணடைய வேண்டும் என்னும் சாஸ்திரக் கூற்றுக்கு என்ன பொருள்?' ' என்று கேட்டார். பகவான் விடையளிக்கும் போது, "தென்னிந்தியாவில் சிலரிடம் அன்றாட உணவுக்கு முன்பு பகவான் கணேசருக்கு அதை நிவேதனம் செய்யும் வழக்கமுண்டு. ஒரு ஏழைப் பயணி வழியில் உண்பதற்காகச் சிறிது வெல்லமும் சத்துமாவும் கையில் கொண்டு போனார். உண்பதற்கு முன் கணேசருக்குப் பூஜை செய்ய வேண்டியிருந்ததால் வெல்லத்தை எடுத்து உருட்டி அதில் பிள்ளையாரை ஆவாஹனம் செய்தார். அந்தப் பிள்ளையாருக்கு நைவேத்தியம் செய்ய வேண்டியிருந்தது. கையில் வேறு வெல்லம் இல்லாத காரணத்தால் வெல்லப் பிள்ளையாரிலிருந்தே ஒரு துளி கிள்ளியெடுத்து அந்த வெல்லத்தை நிவேதனமும் செய்தார். அதுபோல செய்ததால் பூஜைக்கு வைக்கப்பட்ட விக்ரகத்தின் புனிதத் தன்மையை அவன் இழக்கச் செய்தான். நீங்கள் செய்யும் சரணாகதி அந்தப் பயணி செய்யும் நைவேத்தியத்தைப் போன்றதுதான். பரம்பொருளிலிருந்து உங்களுடைய இருப்பு வேறுபட்டது என்ற எண்ணத்தினால் நீங்கள் அந்தப் பரம் பொருளின் புனிதத் தன்மையை இழக்கச் செய்கிறீர்கள். நீங்கள் பரம் பொருளிடம் சரணாகதி அடைந்தாலும் அடையாவிட்டாலும் அதனின்று ஒரு போதும் நீங்கள் தனித்து இருப்பதில்லை. இந்த நிமிடமும், இதற்கு முன்னும், வரும் காலத்திலும் பரம்பொருள் ஒன்றே உள்ளது. அது மட்டுமேதான் இருக்கிறது. ஸ்வாமி மாதவ தீர்த்தர் ஆச்ரமத்தில் தங்கிய 14-வது நாள் இந்த வெல்லப் பிள்ளையார் கதை நிகழ்ந்தது. பகவானிடம் விடை பெறும் முன்னர் நிறையப் பழங்களை அவர் பகவான் முன் வைத்தார். பகவான் அவரை அன்போடு பார்த்துச் சிரித்தவாறு "இப்போது நீங்கள் கணேசருக்கு வெல்லம் நைவேத்தியம் செய்கிறீர்களா?' ' என்று கேட்டார். பகவானுடைய இந்த வார்த்தைகள் தன் நிலைப்பாட்டை உடனே மாற்றி விட்டதாக ஸ்வாமி மாதவ தீர்த்தர் பிற்காலத்தில் கூறியுள்ளார்.

ஸ்வாமி மாதவ தீர்த்தர் ஆச்ரமத்தில் தங்கிய குறுகிய காலத்தில் பகவான் கூறக் கேட்ட முக்கியமான ஆன்மீக அறிவுரைகளை உங்களுடன் பகிர்ந்து கொள்கிறேன்: 'ஆத்ம விசாரத்தைப் பழகிக் கொண்டிருக்கும் போது 'நானே சிவன் என்று கூறிக் கொள்ள வேண்டுமா? அல்லது நான் மனமில்லை, புத்தியில்லை என்று எனக்குள் கூறிக் கொள்ள வேண்டுமா?' என்று மனம் எழுப்பும் கேள்விகளுக்குப் பதில் கூறாதீர்கள். 'நான் யார்' என்னும் விசாரத்தை இடைவிடாது தொடர்ந்து பழகும் போது இதயம் அதற்கான பதில்களைத் தானே தரும். பேசும் நானுக்குப் பின்னால் உள்ள மௌனமான 'நான்' என்ற நிலை அனைத்து மந்திரங்களிலும் உயர்ந்தது. இந்த 'நான்' என்ற நிலையே மிக உயர்ந்த மந்திரம். பிருஹதாரண்யக உபநிஷத்தில் இறைவனின் முதல் பெயரே 'நான்'



என்று கூறப்பட்டுள்ளது. முதல் ஒலியும் அதிர்வுமான ஓங்காரம் அதற்குப் பின்னரே வந்துள்ளது. ஜபம் செய்பவர் இல்லாவிட்டால் அங்கு ஜபமேயில்லை. எல்லோரும் ஜபிப்பது 'நான்' எனும் மந்திரத்தையே. நமது வாழ்க்கையில் 'நான்' 'நான்' 'நான்' என்று எத்தனை முறை கூறுகிறோம். இப்போது இருப்பது போன்றே இருங்கள். இந்த நிமிடம் உணரப்படும் தூய உணர்வே, உண்மைப் பொருளே உண்மையான ஜபம். ஜபமும் இறைவனும் ஒன்றே; இரண்டல்ல. நீங்கள் பூரணமானவர். உங்களிடம் குறைபாடு உள்ளது என்ற எண்ணத்தையே விட்டு விடுங்கள். அழிக்கப்பட வேண்டியது எதுவுமில்லை. அஹங்காரம் என்பது உண்மையான ஒரு வஸ்து அல்ல. கயிற்றில் தோற்றமளிக்கும் பாம்பை எவ்வாறு கொல்ல வேண்டியது அவசியமில்லையோ, அதே போன்று மனதையும் அழிக்க வேண்டிய அவசியமில்லை. மனதின் உண்மை ஸ்வரூபம் அறியப்படும் போது அது தானாகவே செயலிழந்து மறைந்து விடுகிறது. எப்போதுமே இல்லாத ஒன்றை ஒருவரால் அழிப்பது முடியாது. ஆத்மாவில் நிலைத்திருத்தலே உண்மையான நிலை. அந்த உண்மை நிலையில் நிரந்தரமாக நிலைத்திருங்கள்." மேற்கூறியவையே பகவான் கூறிய அறிவுரைகள்.

“என்ன புத்தகம் படிக்க வேண்டும்? என்று கேட்கிறீர்கள். ஆத்மாவே உண்மையான புத்தகம்; வாழ்க்கையின் அனுபவங்களே எழுதப்பட்ட பக்கங்கள். அந்தப் புத்தகத்தில் எந்த இடத்தில் வேண்டுமானாலும் படிக்கலாம். உங்களிடமிருந்து யாரும் அந்தப் புத்தகத்தை எடுத்துச் செல்ல மாட்டார்கள். நினைவு வரும்போதெல்லாம் ஆத்மாவை நோக்கித் திரும்புங்கள். புத்தகம் படித்தல் என்பது உண்மையாக இதுதான். உங்கள் கவனம் அகமுகமாகவே இருக்கட்டும். மனதை அமைதியாக வைத்திருங்கள். அது ஒன்றே போதும். மனம் அமைதியுற்றால் ஆத்மாவின் சக்தியை அனுபவிக்க முடியும். எல்லா ஆன்மீகப் பயிற்சிகளின் லட்சியமும் அந்தப் பயிற்சிகளை இறுதியில் விடுவதற்காகத் தான். உணர்வு எங்கும் நிறைந்தது. மனம் அமைதியுறும் போது ஒருவர் ஆத்மாவின் மௌனத்தை, நிம்மதியை அனுபவிக்கத் துவங்குகிறார். உங்களது இயல்பை உற்று நோக்குங்கள். எங்குமிருப்பது அது ஒன்றே. தியானத்தில் கண்கள் திறந்திருந்தாலும், மூடியிருந்தாலும் எல்லாமே ஒன்றுதான். அகமுகமாகி, ‘நான்’ என்ற உங்கள் உண்மை இயல்பை தியானியுங்கள். இருப்பாக இருங்கள். உலகம் முழுவதும் உங்களுக்குள்ளே இருக்கிறதேத் தவிர நீங்கள் உலகத்தில் இல்லை. அதில் தான் எல்லா உண்மையும் சந்தோஷமும் அடங்கியுள்ளது. கவலைகள் உங்களுக்குச் சொந்தமானவை அல்ல. மனதின் மூலமான மௌனத்தில் மூழ்கும்போது அங்கு கவலைகள் என்பது இல்லாமல் ஒழிகின்றன. ஆத்மாவை நாடுங்கள். உங்களுடைய துன்பங்கள் எல்லாம் முடிவுறும். மனதை உண்முகமாக்குங்கள். உள்ளேயிருப்பதை வெளியில் காணுங்கள். அப்போது தான் எங்கும் உன்னதமான ஒரு சக்தி செயல்படுகிறது என்று அறிந்து கொள்வீர்கள். காணும் ஒருவனேயாகிய உங்களையே அறிந்து கொள்ளுங்கள்- எல்லாமே நல்லதாகும். சூரியன் இருளை எவ்வாறு கண்டதில்லையோ, அதே போன்று ஆத்மா என்றுமே அஞ்ஞானத்தைப் பார்த்ததில்லை. ஆத்மாவைத் தெரிந்து கொள்ள முடியாது. ஆனால் நேரடியாக அனுபவிக்க முடியும். அந்த அனுபவத்திற்குப் பெயரே ஆத்ம ஞானம் ஆகும். எதிர்காலத்தில் நடக்கக் கூடியவை என்பதனைத்தும் நிலையற்றவை என்பதை அறிந்து கொள்ள வேண்டும். நீங்கள் இப்போது எதுவாக இருக்கிறீர்களோ, உங்களிடம் இப்போது என்ன இருக்கிறதோ அதை முறைப்படி அறிந்து கொண்டால் எதிர்காலத்தைப் பற்றி நினைக்க வேண்டிய தேவையேயில்லாமல் போய்விடும்,” என பகவான் கூறியதாக அவர் தெரிவித்தார்.

ஸ்வாமி மாதவ தீர்த்தர் தனிப்பட்ட முறையில் அறிவுரை வழங்க வேண்டுமென்று பகவானைக் கேட்டுக் கொண்டபோது பிரயாணங்களையும் சொற்பொழிவுகள் செய்வதையும் குறைத்துக் கொள்ளுமாறு பகவான் அறிவுரைத்தார். பகவானுடைய உபதேசத்தை மறுபேச்சின்றி ஏற்றுக் கொண்ட மாதவ தீர்த்தர் திரும்பிச் சென்ற பிறகு, குஜராத்தில் ஸாபர்மதி ஆற்றின் கரையில் வேதாந்த ஆச்ரமம் ஒன்றை நிறுவினார். குஜராத்தில் முக்கியமானவர்கள், பண்டிதர்கள், ஸாதுக்கள் எல்லோருமே ஸ்வாமிகளை நன்கு அறிந்திருந்ததோடு, ஆன்மீக அமைதியை நாடி அவர்களும் அவரிடம் வருவதுண்டு. தன்னை நாடி வரும் தீவிர ஸாதகர்கள் அனைவருக்கும் அவர் அயராது உபதேசங்களை அளித்து வந்தார். “ரமணாச்ரமத்திற்குச் சென்று ரமண மஹர்ஷியோடு இருங்கள். அவருடைய ஸந்நிதியில் உங்களது நேரத்தைச் செலவு செய்யுங்கள். நீங்கள் எதையெல்லாம் நினைக்கிறீர்களோ அவை அனைத்தும் எனக்கு பகவான் ரமண மஹர்ஷியால் கொடுக்கப்பட்டது,” என்று ஸ்வாமி மாதவ தீர்த்தர் கூறியதால் அவர்கள் எல்லோரும் ரமணாச்ரமத்திற்கு வரத் துவங்கினர். அதனால் சில சமயங்களில் ஆச்ரமத்தில் குஜராத்திகள் நிறைந்து விடுவார்கள்.

1956-ல் ஸ்வாமி மாதவ தீர்த்தர் அறுபது பக்தர்களோடு ரமணாச்ரமத்திற்கு வந்திருந்தார். ஏற்கனவே நல்ல ஸந்நியாசி என்று பெயர் பெற்றிருந்த அவர் ஆச்ரமத்தில் சில வாரங்கள் தங்கினார்.

அவருடன் வந்த பக்தர்கள் ஆச்ரமத்திற்கு வெளியில் விருந்தினர் விடுதியில் தங்கியிருந்தனர். என் தந்தை நீண்ட பிரயாணம் ஒன்றை மேற்கொண்டிருந்ததால் அந்த சமயத்தில் நான் ஆச்ரமத்தை நிர்வகித்துக் கொண்டிருந்தேன். T. K. சுந்தரேசய்யர் போன்ற மூத்த பக்தர்கள் என்னை வழி நடத்தி வந்தனர். "ஸ்வாமி மாதவ தீர்த்தர் பகவானுடைய ஸந்நிதியில் ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெற்றவர். அவரோடு சிறிது நேரமாவது இரு," என்று அந்த மூத்த பக்தர்கள் அறிவுறுத்தி இருந்தனர். மாதவ தீர்த்தரும் அவரோடு வந்த பக்தர்களும் புறப்படும் தினத்தன்று அவர்களை வழியனுப்பும் கடமை என்னுடையதாக இருந்தது. அவர்கள் ரயில்வே ஸ்டேஷன் செல்வதற்காக 20 குதிரை வண்டிகளை நான் ஏற்பாடு செய்திருந்தேன். ஆச்ரமத்திற்கு முன்னால் நுழைவாயிலில் ஸ்வாமி மாதவ தீர்த்தர் செல்ல வேண்டிய குதிரை வண்டி நின்று கொண்டிருந்தது. நான் அவருடைய அறைக்குச் சென்றபோது அவர் பரவச நிலையில் கண்களில் நீர் மல்க நின்று கொண்டிருந்தார். வெளியில் நல்ல மழை பெய்து கொண்டிருந்ததால் ஸ்வாமியினுடைய பக்தர்கள் அவருடைய குடையையும், பாதரக்ஷைகளையும் அவரிடம் கொடுத்தனர். நான் "ஸ்வாமி! ரயில்வே நிலையம் செல்வதற்கு நேரமாகி விட்டது. எல்லாக் குதிரை வண்டிகளும் வந்து விட்டன. உங்களது பக்தர்களும் காத்துக் கொண்டிருக்கின்றனர். தயவு செய்து வாருங்கள்," என்று அழைத்த போது அவர் என்னைப் பின் தொடர்ந்தார். ஆனால் அவர் காலணிகளை அணிய மறுத்ததோடு குடையையும் வேண்டாமென்று கூறிவிட்டார். தான் முழுவதுமாக நனைந்து போவதையும் பொருட்படுத்தாமல், கொட்டும் மழையில் நடந்து வந்தார். அந்த சமயத்தில் ஓலைக் குடிசையாக இருந்த பகவானது கோயிலை நாங்கள் அடைந்தோம்.

பிரகாசமாக விளங்கிய ஆறடி உயரமிருந்த முதிய ஸந்நியாசி பகவானது கோயிலின் முன்னர் சிறு குழந்தையைப் போன்று தேம்பி அழுதபடி, வெட்டப்பட்ட மரம் போன்று விழுந்து வணங்கிய




ஸ்ரீ பகவானின் திவ்ய ஸமாதி கோயில்

மெய்சிலிர்க்க வைக்கும் காட்சியை அன்று என் வாழ்க்கையில் முதன் முதலாகக் கண்டேன். ‘‘நான் பால் மணம் மாறா கைக்குழந்தை போன்றவன். உங்களைப் பிரிந்து என்னால் போக முடியாது. ஆனாலும் செல்ல வேண்டிய நிலையிலுள்ளேன்’’ என்று கூறி பிரார்த்தித்த ஸ்வாமியை நாங்கள் வலுக்கட்டாயமாக எழுப்பி நிறுத்தி கைத்தாங்கலாக வண்டிக்கு அழைத்துச் செல்ல வேண்டியிருந்தது. ஆச்ரம எல்லைக்குள் வண்டியில் ஏற மறுத்த அவருடன் பக்தர்களுடைய வண்டிகள் காத்திருந்த இடத்திற்கு நடந்து சென்றோம். வழி முழுவதும் பகவானிடம் பரிபூரண சரணாகதி அடைந்த பரவச நிலையில் கண்ணீர் பெருக்கியவாறு சென்ற ஸ்வாமியை வண்டியில் ஏற்றிவிட பக்தர்கள் காத்திருந்தனர். பக்தியால் பக்குவமடைந்த B. M. S நாயுடு என்ற வயது முதிர்ந்த பக்தர் ஸ்வாமியின் பெருமையை நன்கு உணர்ந்திருந்ததால் என்னிடம், ‘‘ஸ்வாமி ஒரு மஹான்; அவருடைய திவ்ய சரணங்களில் உன் சிரஸை வைத்து நமஸ்காரம் செய்,’’ என்று அறிவுறுத்தியபோது நானும் வணங்கினேன். ஸ்வாமி மாதவ தீர்த்தர் தனது இரு கைகளையும் என் தலைமீது வைத்து ஆசீர்வதித்தார். அந்த நொடியிலேயே நான் ஆனந்த வெள்ளத்தில் மூழ்கினேன். உடல், மனம் இவற்றின் எல்லைக்கு அப்பாற்பட்டதான அந்த ஆன்மீக நிலையை அன்று முதன் முதலாக நான் அனுபவித்தேன். என்னுடைய உண்மையான ஆன்மீகப் பயணத்தைத் தொடங்குவதற்கு B. M. S நாயுடுவே காரணமாக இருந்தார் என்ற போதும் அந்த சமயத்தில் அதன் முக்கியத்துவத்தை நான் உணரவில்லை. எல்லாமே பகவானுடைய அருள்.



# 52 சகன்லால் V. யோகி



பகவானின் அருளைப் பெறுவதற்கு ஸ்வாமி மாதவ தீர்த்தர் என்னும் புண்ணிய புருஷர் திருவண்ணாமலைக்குப் பயணிக்க வேண்டியிருந்தது. அதற்கு நேர்மாறாக நாஸ்திகரான சகன்லால் V. யோகியை பகவானே தன்னிடம் இழுத்துக் கொண்டார். சகன்லால் V. யோகி, தீவிர நாஸ்திகர். இறைவன் இருக்கிறார் என்பதை மறுத்ததோடு, ஸாதுக்களையும் மஹான்களையும் ஏளனமாகப் பேசினார். அவர்கள்தான் உலகில் லஞ்சம், ஏற்றத் தாழ்வுகள், துன்பம் எல்லாவற்றுக்கும் காரணம் என்று உறுதியாக நம்பினார். இளைஞராக இருந்தபோதே கடின உழைப்பாளியாக இருந்ததால் மும்பை மாநகரில் அவரது கடின உழைப்பு அங்கீகரிக்கப்பட்டு, அவருக்கு நல்ல மதிப்பும் இருந்தது. ஒரு அச்சகத்தின் முதலாளியாக இருந்த அவர், மிக சுவாரசியமாக உரையாடக் கூடியவர் என்பதால் அவருக்குப் பல நண்பர்கள் இருந்தனர். ஆனாலும் அவரை நாஸ்திகத்தைக் கைவிடச் செய்ய அவர்கள் எடுத்த முயற்சிகளெல்லாம் பலனற்றுப் போயின.

ஒரு நாள் உள்ளூர் ரயிலில் பயணித்துக் கொண்டிருந்த போது, ரமணாச்ரமம் சென்று ரமண மஹர்ஷியைத் தரிசித்து விட்டு வந்திருந்த அவரது நெருங்கிய நண்பர் ஒருவர், பகவானுடைய மகிமையைப் பற்றியும் அவர் எவ்வாறு மனித உருவில் கடவுளாகவே திகழ்கிறார் என்றும் கூறினார். நண்பரிடம் அனுதாபமும் இரக்கமும் தோன்றிய போதிலும் சகன்லால் அவரை எள்ளி நகையாடினார். ஆனால் அந்த நண்பர் விடாப்பிடியாக, "இதோ ரமணாச்ரமத்திலிருந்தும், திவ்யமான அருணாசலத்திலிருந்தும் நான் கொண்டு வந்த விபூதி. தயவு செய்து உன் நெற்றியில் இட்டுக் கொள்," என்று வற்புறுத்திய போதும், சகன்லால் செவி சாய்க்கவே இல்லை. சில நாட்களுக்குப் பிறகு ரமணாச்ரமம் சென்று திரும்பியிருந்த மற்றொரு நண்பர், 'ஸ்ரீ மஹர்ஷி ' என்ற மிக அழகான புகைப்படங்கள் அடங்கிய ஒரு ஆங்கிலப் புத்தகத்தை அவரிடம் தந்து, "சகன்லால்! நான் ரமணாச்ரமத்திலிருந்து வருகிறேன். ரமண மஹர்ஷி உண்மையில் கடவுளே! நான் கூறுவதை நம்பு! அருணாசலத்திற்குச் சென்று மஹர்ஷியைப் பார்த்து வந்தாயானால் நிச்சயமாக உன்னுடைய நாஸ்திக வாதக் கருத்துக்களை நீ மாற்றிக் கொள்வாய். அதில் விருப்பமில்லையென்றால் இந்தப் புத்தகத்தையாவது படித்துப் பார்," என்று கூறினார். சகன்லால் அச்சகத்தின் முதலாளியாக இருந்ததால் நேர்த்தியாக அச்சடிக்கப்பட்டிருந்த அந்தப் புத்தகத்தைத் தான் முழுமையாகப் பார்த்தேயாக வேண்டும் என எண்ணினார். B. V. நரஸிம்ம ஸ்வாமி எழுதிய பகவானின் சரித்திரத்தைக் கூறும் "Self Realization" புத்தகம், மற்றொரு நண்பர் மூலமாக அவருக்குக் கிடைத்தது. சகன்லால், மெதுவாக ஆனால் நிச்சயமாகப் புலியின் வாய்க்குள் விழுந்து கொண்டிருந்தார்! "Self Realization" என்னும் புத்தகத்தைப் படிக்கத் தொடங்கியதும் அவரது மனதில் பல சந்தேகங்கள் எழுந்தன. அவருக்கு ரமண மஹர்ஷியைப் பற்றிய அபிப்ராயம் ஏதும் இல்லாதபோதும், தன் சந்தேகங்களைப் பற்றி அவருக்குக் கடிதம் எழுதினார். அவருக்கு அளிக்கப்பட்ட விடைகள் தர்க்கரீதியாகச் சரியாக இருந்தாலும், அவை அறிவுபூர்வமாக மட்டுமே இருந்ததாக சகன்லாலுக்குத் தோன்றியது. இருப்பினும் அவற்றில் ஆழ்ந்த கருத்துக்கள் பொதிந்திருந்தன என்பதை அவர் ஒப்புக் கொள்ள வேண்டியிருந்தது. இத்தகைய அறிவு பூர்வமான ஞானம் மட்டுமே போதுமானதல்ல. "எனக்கு நேரடி அனுபவம் வேண்டும்" என்ற வலுவான உணர்வின் உந்துதலோடு, அவரது

நண்பர்களின் தூண்டுதலும் சேர்ந்து கொண்டதால் நாஸ்திகரான சகன்லால் 1938 டிசம்பர் மாதம் திருவண்ணாமலைக்குப் புறப்பட்டார்.

பகவான் ஸந்நிதியில், பகவான் தன் மீது முழு பார்வையையும் செலுத்துவதை சகன்லால் உணர்ந்தார். பகவானின் ஸாந்நித்தியம், ஸ்நேகம், கருணை இவை அனைத்துமே உண்மையானவை என்பதை அக்கணமே அவர் உணர்ந்தார். அந்த நிமிடம் தனக்கு என்ன நடந்ததென்பதைச் சகன்லாலே எழுதி வைத்துள்ளார். "முன்பு என்னால் தாங்க முடியாத, ஒரு பாரமாக இருந்த இருள் மெதுவாக லேசாகி உள்ளே பிரகாசித்துக் கொண்டிருந்த ஒளியில் கரைந்து போனது. முன்பு என்னுள் இருந்த துயரம் முழுமையாக மறைந்து என் இதயத்தில் காரணம் கூற முடியாத ஆனந்தத்தை விட்டுச் சென்றது. எனது கை கால்கள் சுதந்திரம் என்னும் அலைகளால் நீராட்டப்பட்டது போல் இருந்தன. இந்த உலகத்தின் வண்ணம் மாறியது. பகலின் வெளிச்சம் தெய்வீகமான நுண்ணிய ஒளியாகத் தென்பட்டது. வாழ்க்கையின் இருண்ட பகுதியின் மீது எனது கவனத்தைத் திருப்புவது எவ்வளவு முட்டாள்தனமானதும், பயனற்றதுமான செயல் என்பதைக் கண்டேன். விநோத மந்திரவாதியான பகவான், ஒளியும் ஆனந்தமும் நிறைந்த ஒரு புதிய உலகை என் முன் திறந்து வைத்தார். இவ்வாறாக நான் புலியின் வாயில் அகப்பட்டேன்," என்று சகன்லால் எழுதியிருந்தார்.

ஒரு நாள் மட்டுமே தங்கும் எண்ணத்துடன்தான் சகன்லால் ரமணாச்ரமம் சென்றிருந்தார். எனினும், பகவானுடைய அருள் தாக்கத்திலிருந்து அவரால் தன்னை விடுவித்துக் கொள்ள முடியவில்லை. அது செயற்கையாக ஏற்படுத்தப்பட்ட மயக்க நிலையோ அல்லது வசீகரிக்கப்பட்ட நிலையோ அல்ல. ஆனால் அது தூய அன்பினாலும், தயையினாலும், அமைதியினாலும் ஏற்பட்ட ஒரு நிலையே. மஹர்ஷியின் ஸந்நிதிக்கு மீண்டும் மீண்டும் அவர் வரத்துவங்கினார். ஒரு முறை கனவில் பகவான் அவருடைய கைகளைப் பற்றிக் கொண்டு அவரை அருணாசலத்தின் உச்சிக்கு அழைத்துச் சென்றதாகக் கண்டார். வாழ்க்கையின் லட்சியத்தைத் தான் அடைந்து விடுவோம் என்று பகவான் உறுதி செய்வதன் அடையாளமே இந்தக் கனவு என்பதைச் சகன்லால் ஆழமாக உணர்ந்தார். இதையொத்த கனவை மற்றும் பல பக்தர்களும் கண்டிருக்கின்றனர்.

சகன்லாலால் பகவானை விட்டுப் பிரிந்திருக்கவே முடியவில்லை. தனது குருவின் திவ்ய சரணங்களிலேயே எப்போதும் இருக்க அவர் விரும்பினார். உலகைத் துறந்து அருணாசலத்திலேயே நிரந்தரமாகத் தங்கத் தயாராகவும் இருந்தார். ஆனால் தனது குடும்பத்தைக் காப்பாற்றும் பொறுப்பையும் உணர்ந்திருந்தார். இருப்பினும் 1945-ல் மும்பையிலுள்ள தனது அச்சகத்தை விற்று விட்டு நிரந்தரமாக பகவானிடம் வந்து விடத் தீர்மானித்தார். அச்சகத்தை எவ்வாறு விரைவாக விற்பது என்று அவர் யோசித்துக் கொண்டிருந்த போது, பகவான் அவரது கனவில் மீண்டும் தோன்றினார். அதுவரை ரமணாச்ரமத்திற்குச் செல்லாத அவருடைய நண்பர்களில் ஒருவரும் அந்தக் கனவில் தோன்றினார். பகவான் அந்த நண்பரைச் சுட்டி காட்டி, "இவருக்கு உங்களுடைய அச்சகத்தை விற்று விடுங்கள்," என்று கூறியபோது கனவிலேயே அவர் பகவானிடம், "அவர் என்னுடைய அச்சகத்தை வாங்கினால்தான் என்னால் அருணாசலத்திற்கு வர முடியும். நான் என்னுடைய குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டியுள்ளது. இந்நிலையில் என்ன விலைக்கு நான் அதை அவருக்கு விற்பது?" என்று கேட்டார். அதற்குப் பதிலாக சகன்லாலுக்குத் திருப்தியளிக்கும் விதத்தில் ஐந்து இலக்கங்கள் கொண்ட ஒரு எண்ணை பகவான் சுவற்றில் எழுதிக் காட்டினார். மறுநாள் காலையில் விழித்த பின்னர், தனது அச்சகத்திற்கு சகன்லால் சென்ற போது கனவில் கண்ட அதே நண்பர் அங்கு தனக்காகக் காத்திருப்பதைக் கண்டார். சகன்லால் தன்னுடைய கனவைப் பற்றிய



**அவர் அருள் பார்வை**

விவரங்களைப் பகிர்ந்து கொண்டபோது அவரது நண்பர் பகவான் கனவில் குறிப்பிட்ட விலைக்கே அச்சகத்தை வாங்கிக் கொள்ள சம்மதித்தார்!

எனினும் அவரது நண்பர், "திருவண்ணாமலைக்கு ஒவ்வொரு வாரமும் சென்று வா. ஆனால் உன்னுடைய தொழிலைத் தொடர்ந்து நடத்து. பெங்களூருவில் ஒரு அச்சகத்தைத் துவக்கி உன்னுடைய குடும்பத்துடன் அவ்வூரிலேயே குடியேறி விடு. அவ்வாறு செய்தால் நீ பகவானை அடிக்கடி சென்று தரிசிக்கலாம். அத்துடன் ஆச்ரமத்தின் வெளியீடுகளைப் பிரசுரிப்பதற்கும் நீ அவர்களுக்கு உதவி செய்யலாம்," என்று அறிவுரை கூறினார். நண்பர் கூறியபடி சகன்லால் பெங்களூருவுக்கு வந்து ஆறு மாதங்களாகப் பூட்டப்பட்டிருந்த ஒரு பெரிய அச்சகத்தைக் கண்டு பிடித்தார். அதன் விலையைக் கேட்ட போது அதன் உரிமையாளர் கேட்ட விலை அவரால் கொடுக்க இயலாததால், அதிலிருந்து மீள்வது எப்படி என ஆலோசித்து, அச்சகத்தின் உரிமையாளரைத் தன்னுடன் ரமணாச்ரமத்திற்கு வரும்படி அழைத்தார். ரமண மஹர்ஷியைப் பற்றி அதுவரை கேட்டிராத அவர் சகன்லாலுடன் திருவண்ணாமலை சென்றார். பழைய ஹாலில் அமர்ந்திருந்த பகவானிடம் இந்தப் பிரச்சனை அவர்களால் தெரிவிக்கப்பட்டது. ஆனால் பகவான் விடையளிக்கும் முன்னரே அந்த அச்சகத்தின் உரிமையாளர் சகன்லால் ஏற்கனவே கொடுப்பதாகக் கூறியிருந்த விலைக்கே அதை விற்க ஒப்புக் கொண்டு விட்டார். இது சந்தேகத்துக்கிடமின்றி பகவானின்

ஸாந்நித்திய மகிமையினாலேயே நடந்தது. அச்சகம் விரைவிலேயே வாங்கப்பட்டது. சகன்லாலின் கோரிக்கைக்கு இணங்கி பகவான் அதற்கு 'அருணா அச்சகம்' என்று பெயரிட்டார். விரைவிலேயே ஆச்ரமத்தின் வெளியீடுகள் எல்லாம் அங்கு அச்சடிக்கப்பட்டன.

பகவான் திருவண்ணாமலைக்கு 1896-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 1-ம் தேதியன்று வந்ததால், அந்த நிகழ்ச்சியின் பொன்விழாவை 1946-ம் ஆண்டு செப்டம்பர் 1-ம் தேதி பகவானுடைய பக்தர்கள் கொண்டாட விரும்பினர். அந்த நிகழ்வின் ஞாபகார்த்தமாக அவர்கள் ஒரு அழகிய விழா மலர் ஒன்றை அருணா அச்சகம் மூலம் அச்சிட்டு வெளியிட விரும்பினர். அநேக புகைப்படங்களுடன் வெளிவர இருந்த அந்தப் புத்தகம் அளவில் பெரிதாக இருந்ததால், குறிப்பிட்ட சமயத்திற்குள் அதை அச்சடிக்கமுடியாதென சகன்லால் உணர்ந்திருந்த போதும், ஆச்ரம வெளியீடு என்பதால் அவரால் மறுப்புத் தெரிவிக்க முடியவில்லை. இந்தச் சிக்கலான நிலையில் பகவானிடம் சென்று தனது பிரச்சனையை சகன்லால் விளக்கினார். அவர் கூறியதைச் சில நிமிடங்கள் கேட்டு விட்டு பகவான் மௌனத்தில் ஆழ்ந்தார். சிறிது நேரம் கழித்து, பகவான் அவரிடம் ஆங்கிலத்தில், "Do your work" ("உங்களுடைய வேலையைச் செய்யுங்கள்") என்று கூறினார். சகன்லால் அதை ஆக்ஞையாகவும் ஆசீர்வாதமாகவும் எடுத்துக் கொண்டார். உற்சாகம் மிக்க தொழிலாளிகளுடன் அவர் இரவும் பகலும் உழைத்து விழாவிற்குச் சில தினங்களுக்கு முன் ஆகஸ்ட் மாதக் கடைசி வாரத்தில் பொன்விழா மலரின் சில பிரதிகளை எடுத்துச் சென்று, ஆச்ரமத்தில் பெரும் கூட்டமாகக் குழுமி இருந்த பக்தர்கள் அனைவரையும் மகிழ்ச்சியில் ஆழ்த்தி பகவானிடம் அர்ப்பணித்தார்.

பகவானுடைய சமத்துவ நிலையை விவரிக்க, சகன்லால் யோகி இரண்டு அழகான சம்பவங்களைப் பற்றிக் கூறினார். இந்தியா முழுவதிலும் பல ஸாதுக்களை சகன்லால் யோகி சந்தித்திருப்பதாகவும் அதில் சமத்துவ பாவத்திலும், எல்லாவற்றையும் சமமாகப் பகிர்ந்து கொள்வதிலும் எவரும் பகவானுக்கு இணையில்லை என்றும் உறுதியாகக் கூறினார். ஒரு நாள் அவர் ஹாலில் அமர்ந்திருந்த போது பஞ்சாபிலிருந்து பகவானுக்கு ஒரு பெரிய பார்சல் வந்தது. அதில் ஊட்டச்சத்துக்களைக் கொண்ட ஆயுர்வேத லேகியமான 'chyavanaprash' இருந்தது. அது பகவானுடைய உடல் நிலையை மேம்படுத்தும் என்பதால் பகவான் இரண்டு மாதங்களுக்குத் தினமும் அதைச் சிறிதளவு சாப்பிட வேண்டும் என்று அதை அனுப்பிய பக்தர் வேண்டுகோள் விடுத்திருந்தார். பகவான் புன்னகை பூத்தார். மறு நாள் காலை ஒவ்வொருவருடைய இலையிலும் உணவுடன் சிறிதளவு அந்த லேகியமும் பரிமாறப்பட்டிருந்தது. அந்த மருந்து முழுவதும் எல்லோருக்கும் சமமாகப் பங்கிடப்பட்டு ஒரே நாளில் தீர்க்கப்பட்டு விட்டது. ஆதங்கத்துடன் இதைக் கண்ணுற்ற ஒரு பக்தர், "பகவானே! அது இரண்டு மாதங்களுக்குத் தினமும் நீங்கள் உண்பதற்காகக் கொடுக்கப்பட்டது. நீங்கள் அதை ஒரே நாளில் தீர்த்து விட்டீர்களே!" என்று கூறினார். பகவான் கருணையோடு புன்னகைத்துவிட்டு "ஆம். பகவானுக்கு இந்த ஒரு வாய்தான் இருக்கிறதென்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்களா? அனைத்து வாய்களும் பகவானுடைய வாய்தான்," என்று கூறினார். அதை அனுப்பிய பக்தரின் வேண்டுகோளை பகவான் மீறவில்லை. பகவான் முழுவதையும் உண்டார். ஆனால் அங்கு இருந்த எல்லோருடைய வாய்களின் மூலமாக உண்டார்!

பகவானின் உடல்நிலை நலிந்திருப்பதைக் கண்டு ஒரு பக்தர், பகவானுக்குச் சப்பாத்தியில் நெய் தடவி அத்துடன் ஒரு தம்ளர் பாலும், ஒரு தம்ளர் ஆரஞ்சுப் பழச்சாறும் தயார் செய்து அவற்றை ஹாலுக்கு எடுத்துச் சென்று பகவானிடம், "பகவானே! இதை உங்கள் உடல் நலத்திற்காக உண்ண வேண்டும்," என்று கூறினார். பகவான் அவற்றைத் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. தனக்குப் பிரத்தியேகமாக செய்யப்படும் எந்த உபசாரமும் பகவானுக்குப் பிடிக்காது. இது புரியாமல் ஹாலில்

அமர்ந்திருந்த ஒரு பெண்மணி, ‘‘பகவானே! நாங்கள் வேண்டுகோள் விடுத்ததால் எங்களைத் திருப்தி செய்வதற்காக நீங்கள் சோபாவில் உட்காரவில்லையா? அதே போல் இதையும் அவ்வாறே எடுத்துக் கொள்ளுங்களேன்? இது உங்கள் உடல் நலத்திற்காகத்தான் கொடுக்கப்படுகிறது,’’ என்று கூறவும், பகவான், ‘‘ஆம். நீங்கள் கூறுவது உண்மை தான்’’ என்று சொல்லிவிட்டு, எல்லோரும் அதிர்ச்சியுறும் வண்ணம் சோபாவிலிருந்து கீழே இறங்கித் தரையில் அமர்ந்தார். எல்லோரும் அவரை ‘‘பகவான்! பகவான்! தயவு செய்து சோபாவில் அமருங்கள்,’’ என்று கெஞ்சினர். அவரை இசையச் செய்ய முயன்ற பெண்மணி பரிதாபமாகக் கண்களில் நீர் ஆறாகப் பெருக, பகவானிடம் ‘‘என்னை மன்னித்து விடுங்கள் பகவானே! நான் இவ்வாறு நடக்கும் என்று எதிர்பார்க்கவில்லை,’’ என்று மன்றாடினார். முகத்தில் அழகான புன்னகை தவழ பகவான், ‘‘ஏன் மன்னிப்புக் கேட்கிறீர்கள்? நீங்கள் சரியானதைத்தான் என்னிடம் கூறியிருக்கிறீர்கள்’’ என்று பதிலளித்து விட்டு தரையிலிருந்து எழுந்திருக்க மறுத்துவிட்டார். அதிருஷ்டவசமாக பல வருடங்களாக பகவானுக்கு சேவை செய்து வரும் ஒரு அணுக்கத் தொண்டர் தைரியமாக அவரைத் தூக்கி சோபாவின் மீது உட்கார வைத்தார். தன்னைத் தூக்கியதை பகவான் எதிர்க்கவுமில்லை. அதே நேரத்தில், தரையில்தான் உட்காருவேன் என்று வற்புறுத்தவும் இல்லை. ஒரு முறை ஒரு அமெரிக்க நாட்டவர் ஒரே ஒரு சாக்லேட் பாரை பகவானிடம் கொடுத்தார். அந்த சமயம் ஹாலில் முப்பத்தி ஆறு பக்தர்கள் இருந்ததால், ‘‘அதை முப்பத்து ஆறு சிறிய துண்டுகளாக உடைக்கச் சொல்லி எல்லோருக்கும் சமமாக பகிர்ந்து கொடுத்த பின் கடைசியாக எஞ்சிய சிறிய பகுதியை தான் எடுத்துக் கொண்டார். அந்த அளவுக்குத் தீவிரமான சமபாவத்தை பகவான் கொண்டிருந்தார்,’’ என்று சகன்லால் யோகி கூறினார்.

ஒரு முறை அருணாசலத்திற்கு வந்த ஒரு ஸாது கிரிவலப் பாதையில் ஆச்ரமத்திலிருந்து சிறிது தூரத்தில் இருந்த ஒரு மண்டபத்தில் தங்கியிருந்தார். அவர் பல நோயாளிகளை விபூதியினால் குணப்படுத்தியதால் விரைவில் பிரபலமானார். நூற்றுக்கணக்கில் மக்கள் அவரைக் காணக் குவிந்தனர். அந்தச் சமயத்தில் ஊரெங்கும் அதுவே பேச்சாக இருந்தது. விபூதி ஸ்வாமியைப் பார்த்து விட்டுத் திரும்பும் போது சிலர் ஆச்ரமத்திற்கும் வருவார்கள். அந்த நாட்களில் பகவானுக்கு வாதத்தினால் காலில் மூட்டு வலிப் பிரச்சனை இருந்தது. இரண்டு முழங்கால்களிலும் சிறிது ஆயுர்வேத எண்ணெயைத் தடவிக் கொண்டால் மட்டுமே அவரால் எழுந்திருக்க முடிந்தது. ஒரு நாள் அவர் ஒரு முழங்காலில் எண்ணெயைத் தடவாமல் விட்டுவிட்டார். ஆகவே எழுந்திருக்க முயன்ற போது, அவரால் முடியவில்லை. மறுபடி சோபாவில் அமர்ந்து அந்த முழங்காலில் எண்ணெயைத் தடவ ஆரம்பித்தார். அந்த சமயத்தில் விபூதி ஸ்வாமியைத் தரிசித்து விட்டு வந்த பெரிய கூட்டம் பகவானையும் தரிசிக்க வந்தபோது அவர் முழங்காலில் எண்ணெய் தேய்த்துக் கொண்டிருப்பதைப் பார்த்து ஏமாற்றம் அடைந்து பகவானுக்கு நமஸ்காரம் கூடச் செய்யாமல் சென்று விட்டனர். பின் பகவான் தன்னையே சுட்டிக் காட்டி, ‘‘தன் காலைத் தானே தடவிக் கொண்டிருக்கும் ஸ்வாமியைப் பற்றி அவர்கள் என்ன நினைத்துக் கொண்டிருப்பார்கள்? ஒரு வேளை ‘தன்னுடைய முழங்கால் வலியையே தீர்த்துக் கொள்ள முடியாத இந்த ஸ்வாமி மற்றவர்களின் நோயை எப்படித் தீர்க்க முடியும்?’ என்று நினைத்திருப்பர்களோ என்னவோ!’’ என்று கூறினார். பகவான் இவ்வாறு தன்னுடைய இயலாமையைக்கூட நகைச்சுவையோடு கூறுவதை சகன்லால் யோகி கவனித்தார். பக்தர்கள் பகவான் மீது வைத்திருந்த நம்பிக்கையினால் பலருடைய நோய்கள் அற்புதமாகக் குணமான போதும் பகவான் அவற்றுக்கு ஒரு போதும் பொறுப்பேற்றதேயில்லை. பதிலாக பகவான் ‘‘இவை அனைத்துமே தானாக நடப்பதுதான்; ஒருவருடைய ஆத்மாவின் இயற்கையான செயல்பாடுதான் அது. ஒருவரது கவனம் எப்போதும் ஆத்மாவிலேயே இருக்க வேண்டும்,’’ என்று கூறுவார்.



**அன்னை கிருஷ்ணாபாய் மற்றும் ஸ்வாமி ராம்தாஸ்**

சகன்லால் யோகிக்கு ஒரு மகனும் ஒரு மகளும் இருந்தனர். மகள் வயதுக்கு வந்ததும் சகன்லாலின் மனைவி அவளுடைய திருமணத்தைப் பற்றிக் கவலைப்பட்டார். அவர் T. P ராமச்சந்திர ஐயரைப் போய்ப் பார்த்ததும் உடனே ராமச்சந்திர ஐயர் அவரை பகவானிடம் அழைத்துச் சென்றார். அதற்கு முன் இன்னொரு பக்தரும் ஹாலுக்குள் வந்திருந்தார். பகவானிடம் அவர்கள் விஷயத்தைத் தெரிவித்ததும் பகவான் அந்த பக்தரைச் சுட்டிக் காட்டி, "திருமணத்தைப் பற்றி ஏன் கவலைப் படுகிறீர்கள்? இதோ பட் வந்திருக்கிறார். அவரைக் கேட்டுப் பாருங்கள்," என்றார். பட் தன்னுடைய மகனுக்கு உகந்த ஒரு பெண்ணைத் தேடிக் கொண்டிருந்தார். பகவானின் முன்னிலையில் அவர்களது திருமணம் நிச்சயிக்கப்பட்டது. அவர்கள் திருமணம் செய்து கொண்டு இன்றும் சென்னையில் சந்தோஷமாக வாழ்ந்து வருகின்றனர். இதேபோன்று, சகன்லால் யோகியும் பல வருடங்களுக்கு முன் தனக்கு ஒரு மகன் பிறக்க வேண்டுமென்று விரும்பினார். அவர் விருப்பப்படி அதே போல் ஒரு மகனும் பிறந்தான். அவனுக்கு 'அருண்' என்று பகவான் பெயரிட்டார். அந்தக் குடும்பத்தினர் அனைவரும் பகவானின் பரம பக்தர்கள். பகவத் கீதையில் ஒரு செய்யுள் உள்ளது. அதில் பகவான் ஸ்ரீ கிருஷ்ணர், "என்னை யார் சரண் அடைகிறாரோ அவருடைய குடும்ப பாரத்தை ஏற்று அவர்களை நான் காப்பாற்றுவேன், என்று உறுதி கூறியிருக்கிறார். முன்னாளில் நாஸ்திகராயிருந்த இந்த சகன்லால் பகவானிடம் சரணடைந்தார்; அதன் விளைவாக பகவான் அவரது முழு குடும்பத்தையும் பூர்ணமாகக் காப்பாற்றினார். அவரது வாழ்க்கையின் பின் பகுதியில் அவர் கேரளாவில் உள்ள ஆனந்தாச்ரமத்தில் நிரந்தரமாகக் குடியேறினார். அங்கு இடையறாது ரமண நாமம் ஜபித்துக் கொண்டு ஸ்வாமி ராம்தாஸ், மாதாஜி கிருஷ்ணா பாய் என்ற இரு மஹான்களின் முன்னிலையில் முழு உணர்வோடு அமைதியாக இறைவனடி சேர்ந்தார்.



# 53 N. R. கிருஷ்ணமூர்த்தி ஐயர்



N. R. கிருஷ்ணமூர்த்தி ஐயர் அறிவை மட்டுமே நம்பி மற்ற எல்லாவற்றையும் சந்தேகித்த ஒரு விஞ்ஞானி. இந்தச் சந்தேகப் பேர்வழியை, உள்ளிருக்கும் ஆனந்தத்தை நேரடியாகவும் தெளிவாகவும் உணரச் செய்தார் பகவான்.

N. R. கிருஷ்ணமூர்த்தி ஐயர் மிகச் சிறந்த இயற்பியல் பேராசிரியர். உலகப் பிரசித்தி பெற்றவரும் நோபல் பரிசு பெற்றவருமான டாக்டர் சி. வி. ராமனிடம் கல்வி பயின்றவர். நடைமுறை வாழ்க்கையைப் புறக்கணித்து கடவுள் மீதும், அத்யாத்ம விஷயத்திலும் மட்டுமே கவனம் செலுத்துபவர்களோடு, NRK என்று சுருக்கமாக அழைக்கப்பட்ட இவர், தானே வலுவில் சண்டைக்கு இழுத்து, வாதிடுவார். விஞ்ஞான ரீதியான விளக்கம் இருந்தால் மட்டுமே எதையும் அவர் ஒப்புக் கொள்வார். இந்துவாக இருந்த போதிலும், ஒருவருக்கு நமஸ்காரம் செய்வது மூட நம்பிக்கை என்பது மட்டுமல்லாமல் அது கௌரவக் குறைவு என்றும் அவர் நினைத்தார். 1922-ல் திருவண்ணாமலையில் தங்கியிருந்த தமது தமக்கையைப் பார்க்க அங்கு சென்றார். பகவானைத் தரிசிக்கச் சென்று கொண்டிருந்த தமக்கையின் கணவர் குப்புஸ்வாமியும் அவரது நண்பர் T. K. சுந்தரேச ஐயரும், “நாங்கள் இருவரும் ரமண மஹர்ஷியை தரிசிக்கச் சென்று கொண்டிருக்கிறோம். கிருஷ்ணமூர்த்தி! நீங்களும் எங்களுடன் வாருங்களேன்!” என்று அவரை அழைத்தனர். “நீங்கள் மஹர்ஷி என்று அழைப்பவரின் முன் நான் நமஸ்காரம் செய்வேன் என்று எதிர்பார்க்காதீர்கள்,” என்ற நிபந்தனையோடு NRK அவர்களுடன் செல்ல ஒப்புக் கொண்டார். என்ன நடக்கப் போகிறது என்பது சந்தேகமின்றித் தெரிந்திருந்ததால், நண்பர்கள் இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்து மெல்ல நகைத்துக் கொண்டனர்.

அந்தச் சமயத்தில் ரமணாச்ரமம், அன்னையின் ஸமாதிக்கு மேல் கூரை வேய்ந்த ஒரு கொட்டகையாக இருந்தது. மூவரும் அந்தக் கொட்டகைக்குள் நுழைந்ததும் மிக அதிசயமான ஒரு சம்பவம் நிகழ்ந்தது. தன்னையறியாமல் நெடுஞ்சாண் கிடையாக தான் தரையில் வீழ்ந்து பகவானை நமஸ்கரிப்பதை பேராசிரியர் உணர்ந்தார். நண்பர்கள் இருவரும் இதைத்தான் எதிர்பார்த்தார்கள் என்பதால், இதைக் கண்டதும் அவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்துச் சிரித்துக் கொண்டனர். ஏனெனில் ஒரு நாஸ்திகனை எதுவும் செய்யத் தூண்டவேண்டிய அவசியமில்லை. ஆன்மீக சக்தியின் பலமே போதுமானது. பகவான் தனது முழு கவனத்தையும் NRK-யின் மீது செலுத்திக் கொண்டிருந்தார். சில நிமிடங்கள் கழித்து NRK தன் செயலை உணர்ந்து திடுக்கிட்டு எழுந்திருந்தார். தன்னையறியாமல் தான் செய்த செயலுக்கு ஈடுகட்டுவதற்காக அவர் பகவானுடன் வாதம் செய்யத் தீர்மானித்தார்.

அதன்பின் என்ன நடந்ததென்று NRK என்னிடம் கூறினார். “சரீரத்தை விட்ட பின் உங்கள் ஸ்திதி என்ன?” என்று பகவானிடம் கேட்டேன். ‘இந்த உடல் இறந்த பிறகு, ஜீவாத்மா சில காலம் ஜீவித்து விட்டு ஆத்மாவுடனோ இறைவனுடனோ ஒன்றிவிடும்,’ என்ற பதிலை பகவானிடமிருந்து வரவழைக்க நினைத்தே, இந்த கேள்வியை அவரிடம் கேட்டேன். அவர் கூறுவது தவறு என்று நிரூபிப்பதற்காக நான் அவருடன் வாதம் செய்ய விரும்பினேன். ஆனால் அது நடக்கவில்லை. நான் கேள்வி கேட்டு பல நிமிடங்கள் கழிந்தும் பதில் வரவில்லை. எங்கள் கண்கள் ஒருவரையொருவர் கூர்ந்து நோக்கிய வண்ணம் இருந்தபோது, அங்கு பூர்ணமாக மௌனம் நிலவியது. என் மனத்தில்

‘இந்த மனிதர் என்னுடைய, எளிதில் பதில் கூற முடியாத கேள்வியைத் தவிர்ப்பதற்காக மௌனத்தைக் கடைப்பிடிக்கிறாரோ?’ என்ற எண்ணம் எழுந்தது. அதே கணத்தில் பகவான் கணீரென்ற குரலில், ‘நீங்கள் ஸ்திதி என்று கூறினீர்கள். ஸ்திதி என்று நீங்கள் கூறியதன் அர்த்தம் என்ன?’ என்று கேட்டார். திடீரென கேட்கப்பட்ட அந்த எதிர் கேள்விக்கு நான் பதில் சொல்லியாக வேண்டும் என்று தோன்றியதால் நான் சிந்திக்கத் தொடங்கினேன். புதைக்கப்படும் அல்லது எரிக்கப்படும் உடலைப் பற்றி நான் அவரிடம் கேட்கவில்லை; உடலினுள் எண்ணங்களை எழுப்பும் மனத்தைப் பற்றித்தான் நான் நினைத்துக் கொண்டிருந்தேன். அதைப் பற்றித் தான் நான் கேட்டேன். என்னுடைய கேள்வி மனத்தின் நிலையைப் பற்றி என்று நான் கூறினால் மனம் என்பது என்ன என்று விளக்கம் கேட்பார். அந்தக் கேள்விக்கும் நான் பதிலைத் தயாராக வைத்திருக்க வேண்டும். ஆகவே எனக்குள்ளேயே விசாரத்தை ஆரம்பித்தேன். அதற்குக் காரணம் சந்தேகமின்றி அவரது பார்வையின் சக்திதான். ஆனால் என்னால் அந்த கேள்விக்கு விடை கண்டு பிடிக்க முடியவில்லை. என் மனம் ஸ்தம்பித்துப் போய்விட்டது. சிந்திக்கும் சக்தி அறவே போய் விட்டிருந்தது. நான் செய்வதறியாது ஊமையாகி விட்டேன். பகவானின் கண்களில் பிரகாசித்த ஜ்வலிக்கின்ற ஒளியைக் கவனித்தேன். அவை என் கண்களை இறுக்கிப் பிடித்து நிறுத்தின. அதன் பின் மஹர்ஷியின் முகம் முழுவதும் பிரகாசமான வெற்றிப் புன்னகை பரவியது. என்னுடைய அற்பமான ‘நான்’ எனும் அகந்தையை ‘இருப்பு’ என்னும் பேரறிவு விழுங்கி விட, அனைத்துப் பெயர்களும், வடிவங்களும், காலமும், செயல்களும் முற்றிலும் மறைந்து போய், நான், எனது உடல், உலகம் இவற்றின் உணர்வை முற்றும் இழந்தேன். அது ஆரம்பமும் முடிவுமில்லாத ஸ்வயம் பிரகாசமான ‘நான் இருக்கிறேன்’ என்ற ஒளியோடு கூடிய ஆழ்ந்த மோன நிலை. உள்ளொளி பிரகாசித்துக் கொண்டேயிருக்க, எனக்கு என்னுடைய உடல், சுற்றுச்சூழல் இவற்றைப் பற்றிய நினைவு திரும்பியபோது, கேட்பதற்குக் கேள்வியோ, பெறுவதற்கு விடையோ எதுவுமில்லை. அந்தத் தோல்வியினால் நான் பெற்ற ஆனந்தத்தை முற்றிலுமாக அனுபவித்த வண்ணம் பகவானை நமஸ்கரித்து விட்டு விரைவாக வெளியே ஓடி விட்டேன்,’’ என்று கூறி முடித்தார் NRK.

‘‘அதுதான் என்னுடைய ‘நான்’ என்ற அகந்தையின் முடிவின் ஆரம்பம். எனக்குள் இந்த ஆன்மீக அதிரடி அனுபவத்தைக் கொடுத்த பின் பகவான் என்னை ‘உள்ளே வந்து சாப்பிடு’ என்று அழைத்தார். கூரை வேய்ந்த கொட்டகையான அதில்தான் தரிசனம், சாப்பாடு, தூக்கம் எல்லாமே நடந்தன என்று NRK கூறிவிட்டு மேலும் தொடர்ந்தார் ‘‘கணேசன்! எனக்கு உணவளித்ததன் பின்னால் உள்ள ரஹஸ்யத்தை உனக்குக் கூறுகிறேன். ஆன்மீக அனுபவத்தால் மிகவும் பலமாகவும் ஆழமாகவும் அதிர்ந்து போயிருந்த என்னுடைய உடலுக்குத் தாங்கும் சக்தியருளப் பகவான் எனக்கு உணவளித்தார். பகவானின் இந்தத் தாய் தத்துவத்தையும், கருணையையும் பலர் புரிந்து கொள்வதில்லை. ஆன்மீக அனுபவத்தை அருளுவது தந்தை தத்துவம். அதைத் தனக்குள் நிலை நிறுத்துவதற்காகத் தாய் தத்துவமான உடலுக்கு உணவளிப்பதை பகவான் கருணையோடு செய்தார். நான் ஆன்மீக ரீதியில் பகவானால் முழுமையாக உலுக்கப்பட்ட அன்று, எனக்கு உணவை அளித்து, எனது பௌதீக சரீரத்திற்கும், அவர் தனது எல்லையில்லா அருளை பொழிந்தார். வெறும் தரையின் மீது இலை போடப்பட்டது. சாதத்துடன் சாம்பாரும் பிறகு சாதத்துடன் மோரும் பரிமாறப்பட்டன. மிக எளிய உணவாக இருந்தாலும் அது தேவாமிர்தமாக இருந்தது. இந்தப் பிரஸாதம் என்னுடைய ஸத்குரு பகவான் ரமணரின் திருப்பாதங்களில் என்னை இறுகப் பிணைத்தது,’’ என்று கூறி முடித்தார்.



ஸ்ரீ பகவான் மற்றும் பேராசிரியர் என்.ஆர்.கே குடும்பத்தினர்

பேராசிரியர் N. R. கிருஷ்ணமூர்த்தி ஐயர் 1898-ல் திருச்சிக்கு அருகில் ஒரு கிராமத்தில் பிறந்தார். அவரது தந்தை ரங்கநாத ஐயர் நகரத்தில் ஒரு பிரபலமான வக்கீலாக இருந்தார். அவரது வீட்டிற்கு அடிக்கடி வரும் உறவினர் அப்பாச்சி ஐயர், எப்போது வந்தாலும் பகவானைப் பற்றியேப் பேசுவார். அப்போது NRK 15 வயது இளைஞனாக இருந்ததால் அவர்கள் பேசியது எதுவும் அவருக்கு அதிகமாகப் புரியவில்லை. அதிருஷ்டவசமாக ஒருமுறை இருபது நபர்கள் கொண்ட அவரது குடும்பத்தினர் திருப்பதிக்கு யாத்திரை சென்றனர். போகும் வழியிலிருக்கும் ரயில் நிலையங்களில் திருவண்ணாமலையும் ஒன்று. NRK-யின் தமக்கை திருமணமாகி திருவண்ணாமலையில் வசித்து வந்ததால் அவர்கள் அங்கு இறங்கி அவளுடன் தங்கினார்கள். 1914-15-ல் பகவான் விரூபாக்ஷ குகையில் இருக்கும்போது இது நடந்தது. 17 வயது இளைஞனான NRK-யுடனும் மற்றும் சில சிறுவர் சிறுமியரோடும் அனைவரும் விரூபாக்ஷ குகைக்குச் சென்றனர். அவர்கள் பகவானை நமஸ்கரித்த போது பகவானின் கவனம் அந்த 15 வயது பையனின் மீது விழுந்தது. குகையைச் சுற்றி ஓடுவதிலேயே NRK-யின் மனம் லயித்திருந்ததால் பகவானின் கூர்ந்த பார்வையில் அவர் கவனம் செலுத்தவில்லை. அங்கு இருந்த ஒரு பெரிய வெள்ளைச் சங்கை குழந்தைகள் எடுத்து ஊதினார்கள் என்றும், குழந்தைகள் இவ்வாறு சுதந்திரமாக விளையாட அனுமதிக்கப்பட்டது குறித்து, தான் மிகுந்த சந்தோஷம் அடைந்ததாகவும் என்னிடம் கூறினார்.

1919-ல் NRK மீண்டும் தம் தமக்கையின் வீட்டிற்குச் சென்ற போது பகவானை தரிசிப்பதற்காக ஸ்கந்தாச்ரமத்திற்குச் சென்றார். 1915-ம் ஆண்டிலிருந்து 1922 வரை அவர் பள்ளியில் இருந்தபோதும், பின்பு கல்லூரியில் இருந்தபோதும் அவரை மௌனத்தில் ஆழ்த்திய பற்பல அனுபவங்கள் அவருக்கு ஏற்பட்டன. எனினும் அவற்றை பகவானுடைய முதல் பார்வையுடன் அவர் சம்பந்தப்படுத்த முடியவில்லை. தான் மௌன நிலைக்குச் செல்வதற்குக் காரணம் என்னவென்பதையும் அவரால் புரிந்து கொள்ள முடியவில்லை. கல்லூரியில் பேராசிரியர் ஆங்கிலத்தில் வியாசமோ, கட்டுரையோ எழுதும்படி கூறினால் அனைவரும் பக்கம் பக்கமாக எழுதும்போது NRK-யால் மட்டும் ஒன்றுமே எழுத

முடியவில்லை. ஏனெனில் அவரது மனம் சூன்யமாக இருந்தது. அந்த நாட்களில் அவ்வப்போது விளக்கம் கூற முடியாமல் ஏற்படும் உள் மனத்தின் மௌனம், பகவானின் அருட் பார்வையினால்தான் என்பதை அவர் அறியவில்லை. ஆனால் பின்னொரு சமயம், "நான் சற்று சிந்தித்துப் பார்த்தபோது, என்னுடைய உள்நோக்கிய அத்யாத்ம பயணத்தின் பாதை பகவானின் அந்த ஒரு பார்வையிலிருந்து தான் தொடங்கியது என்பதை உணர்கிறேன்," என்று தனது அனுபவத்தை என்னுடன் பகிர்ந்து கொண்டார்.

1930-ல் அவருக்குத் தொண்டையில் 'டான்சில்ஸ் அறுவை' (Tonsils operation) நடந்தது. அதைச் செய்த மருத்துவர் தவறுதலாக அதிகமாகச் சதையை எடுத்து விட்டதால் அவருக்கு ஓயாமல் இருமல் வந்து இறுதியில் ஆஸ்துமாவில் கொண்டு போய் விட்டுவிட்டது. அவர் ஆங்கில மருந்துகளைச் சாப்பிட்டார். ஆனால் அவை பலனளிக்கவில்லை. பிறகு ஆயுர்வேதம், யுனானி என்ற பலவித மருத்துவ சிகிச்சைகளையும் மேற்கொண்டதால் புளி மிளகாய் இவற்றை உணவில் சேர்க்க முடியவில்லை. அந்தச் சமயம் அவர் அப்பாச்சி ஐயருடனும் தனது தமக்கையின் கணவருடனும் பகவானைச் சென்று தரிசித்தார். இம்முறையும் பகவான் அவர்களை உணவருந்த அழைத்தார். அவர்கள் எல்லோரும் அமர்ந்த பின் உணவு பரிமாறப்பட்டது. ரமணாச்ரமத்தில் இன்றும் பரிமாறப் படுவது போல் அன்றும் சாதம் சாம்பார், ரசம், மோர் இவை பரிமாறப்பட்டன. சாப்பாட்டில் சில கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டிருந்ததால், சாதத்தின் மீது சாம்பாரை ஊற்றியதும் NRK சற்றுத் தயங்கினார். அதுவரை அவரையே கவனித்துக் கொண்டிருந்த பகவான், "எல்லா வியாதிகளையும் தீர்ப்பதற்காக இங்கு வந்து விட்டு நீ ஏன் தயங்குகிறாய்? சாப்பிடு," என்று கூறினார். அவருக்கு இது ஒரு தெய்வீகக் கட்டளையாக இருந்தது. இந்தக் கட்டளை அவரை குணப்படுத்தும் என்று அவர் நம்பியது போன்றே நடந்தது. அற்புதம் நிகழ்வது போல் அது உடனே நடக்கவில்லையென்றாலும் சில மாதங்களில் அவர் பூரண குணமடைந்தார்.

அத்துடன் இன்னொரு அழகான சம்பவமும் அதே நாளில் நடந்தது. பகவானின் தம்பி சின்னஸ்வாமி NRK-யை அழைத்து பகவானை 21 வயதில் எடுத்த ஒரு பெரிய புகைப்படத்தை அவருக்குப் பரிசாகக் கொடுத்தார். அத்துடன் ஸ்ரீ அருணாசல ஸ்துதி பஞ்சகம் (அருணாசலத்தின் துதிபாடி பகவான் எழுதிய ஐந்து செய்யுட்கள்), ஸ்ரீ ரமண ஸ்துதி பஞ்சகம் (விரூபாக்ஷகுகைக்கு வந்த ஸித்த புருஷர் ஒருவர் பகவானைப் புகழ்ந்து எழுதிய ஐந்து பாடல்கள்) என்ற இரண்டு தமிழ்ப் புத்தகங்களையும் கொடுத்தார். NRK அளவிலா ஆனந்தமடைந்து அவற்றை பகவானிடம் எடுத்துச் சென்று அவர் மடியில் வைத்தார். பகவான் அந்தப் புத்தகங்களை எடுத்து அதிலிருந்த அச்சுப் பிழைகளைத் திருத்தி விட்டு அவற்றைப் புகைப்படத்துடன் திருப்பித் தந்தார். NRK பகவானை நமஸ்கரித்து விட்டு அவற்றைப் பிரஸாதமாகப் பெற்றுக் கொண்டதோடு, அவற்றைத் தனது வாழ்நாள் முழுவதுமே பொக்கிஷமாகக் கருதி பாதுகாத்து வந்தார்.

அத்துடன் அது நிற்கவில்லை. பகவானுக்கும் நாஸ்திகனாக இருந்த சிஷ்யனுக்கும் இடையில் மிக அழகான ஸம்பாஷணை முன்பே நடைபெற்றிருந்தது. நாஸ்திகனான விஞ்ஞானி, ரமண மஹர்ஷியின் சிஷ்யரான பிறகு 1922-ல் மீண்டும் அவர்களிடையே ஒரு ஸம்பாஷணை நடந்தது. "பகவானே! நான் 'ராம ராம ராம' என்று சொல்லி ராமஜபம் செய்கிறேன். 'அருணாசல சிவ அருணாசல சிவ' என்று ஜபிப்பது அதைவிட உயர்ந்தது அல்லவா?" என்று நான் வணங்கிக் கேட்டேன். பகவான் 'இல்லை இல்லை இல்லை' என்று மிக அழுத்தமாகக் கூறினார். 'இரண்டும் ஒன்று தான். 'ர' என்றால் இருப்பு (உள்ளது); 'ம' என்றால் 'நீ'; அருணாசலத்தில் 'அ' என்றால் 'அது'; 'ரு' என்றால் 'நீ'; 'ண' என்றால் இருப்பு. ஆகவே இரண்டின் அர்த்தமும் 'நீ அதுவாக

இருக்கிறாய்' (தத் த்வமஸி) என்பதுதான். விஷ்ணு பகவானின் சக்கரம் சதா சுழன்று கொண்டேயிருப்பது போல் மனத்தை வாயாக உபயோகித்து 'ராம நாமம்' அதில் இடையறாது சுழன்று கொண்டேயிருக்க வேண்டும். நீ ஜபம் செய்வது ஒருவருக்கும் தெரிய வேண்டிய அவசியமில்லை,'' என்றார். இயற்பியல் பேராசிரியரான NRK குறுக்கிட்டு 'நேரம் முழுவதையும் அவ்வாறு செலவழித்தால் என்னுடைய பேராசிரியர் பணி என்னவாகும்? அதற்கு ஆபத்து வந்து விடாதா?' என்று கேட்டார். பகவான் அவரைக் கருணையோடு பார்த்து விட்டு, "நீ யாருடைய நாமத்தை ஜபிக்கிறாயோ அவர் முழுப் பொறுப்பேற்றுக் கொள்வார். நீ அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். ராம நாமத்தை ஜபித்துக் கொண்டிரு,'' என்று கூறினார். குருவின் இந்த உறுதி மொழி அவருக்கு ஊக்கமளித்ததால், 5 வருட காலத்தில் எட்டு கோடி ராம நாமம் ஜபித்தார்.

1934-ல் NRK தன் மனைவி, மூன்று குழந்தைகளோடு ரமணாச்ரமத்திற்கு வந்தபோது பகவானுடைய சக மாணவர்களான வேங்கடராமையா, நாராயண ஐயர் ஆகிய இருவரும் உடன் வந்தனர். பகவானுடைய சக மாணவர்களுடனும், விளையாட்டுத் தோழர்களுடனும் NRK நட்பு வைத்திருந்தார். (பின்னாளில் என்னுடைய கோரிக்கைக்கிணங்கி NRK தான் அவர்களை பேட்டி கண்டார்). இந்த முறையும் பகவானின் ஸந்நிதியில் அவருக்குத் தொடர்ந்து அனுபவங்கள் ஏற்பட்டன. ஒரு நாள் இரவு உணவிற்குப் பிறகு பகவானின் முன் எல்லோரும் அமர்ந்திருக்கும் போது பெங்களூருவிலிருந்து வந்திருந்த ராமசந்திர ராவ் என்பவர் உரத்த குரலில் ரிபு கீதையைப் படிக்கலானார். தீவிர ஆன்மீக ஸாதகர்கள் அனைவருக்கும், பகவான் அதை சிபாரிசு செய்வது வழக்கம். ஒவ்வொரு செய்யுளும் 'அஹம் ப்ரஹ்மம்' —'நான் ப்ரஹ்மவஸ்து' என்றோ அல்லது பைபிளில் மோசஸிடம் கடவுள் கூறுவது போல் 'I AM THAT I AM' என்று முடியும். இதை ராமசந்திர ராவ் ஓதியபோது NRK பரவசமடைந்தார். தூய உணர்வின் அலைகள் அவரைக் குலுக்கின. அவருக்கு சரீர ப்ரக்ஞை மறைந்து போயிற்று. மற்ற எல்லாப் பொருட்களும் நிழல் போல் தெரிவதை உணர்ந்தார். இந்த நிலையில் அவர் இருந்தபோது தனது குடும்பத்தையும் உலகத்தையும் துறந்து விடத் தீர்மானித்தார். அந்த நாளில் அருணாசலம் காடு போல் இருந்தது. ஆகவே அவர் அந்தக் காட்டுக்குள் மறைந்துவிடத் தீர்மானித்தார். பகவான் அவரை மட்டுமே நோக்கியவாறு, "கிருஷ்ணமூர்த்தி! உன் குடும்பத்துடன் மதுரைக்குப் போ. எந்த முக்தியை ஸந்நியாசியாகக் காட்டில் இருந்து கொண்டு நீ அடைய விரும்புகிறாயோ, அந்த முக்தியைக் குடும்பஸ்தனாக இருந்து கொண்டு உத்தியோகத்திலிருந்தபடியே அடைய முடியும். நான் சொல்கிறேன். வீட்டிற்குத் திரும்பிப் போ,'' என்று கூறினார். இதுதான் குருவின் அருள்.

"'அஹம் ப்ரஹ்மம்' என்று மீண்டும் மீண்டும் சொன்னது எவ்வாறு என்னைப் பேரானந்தத்தின் உச்சத்திற்கே அழைத்துச் சென்றதோ, அதே போன்று பகவானின் இந்த குறிப்பிட்ட கட்டளை என்னை விழிப்படையச் செய்தது,'' என்றார் NRK அவர் குருவை வணங்கி அவரது கட்டளைக்கு அடி பணிந்தார். "நீங்கள் ரிபு கீதை புத்தகத்தின் ஒரு பிரதியை எனக்குத் தர முடியுமா?'' என்று மட்டும் அவர் கேட்டார். கையில் புத்தகத்துடன் தன் குடும்பத்தோடு அவர் வீடு போய்ச் சேர்ந்தார். தனது தொழிலுக்கும், குடும்பக் கடமைகளுக்கும் நேரம் ஒதுக்கிய அதே சமயத்தில் மிகத் தீவிர ஸாதகருமானார். அதைத் தவிர இடையறாது மந்திரத்தை ஜபிப்பதோ அல்லது அருணாசல ஸ்துதி பஞ்சகத்தையோ ரமண ஸ்துதி பஞ்சகத்தையோ ஓதியவாறு இருந்தார். இவை மட்டுமின்றி ரிபு கீதையை அநேகமாக மனப்பாடமும் செய்தார். இவ்வாறுதான் நாம் நமது குருவின் உபதேசங்களை நம்முடைய தினசரி வாழ்க்கையில் நடைமுறையில் கொண்டு வர வேண்டும். நாம் அவ்வாறு

செய்யும்போது N. R. கிருஷ்ணமூர்த்திக்கு பகவான் செய்தது போல் நம்முடைய உண்முக பயணத்தில், குரு நம்மை ஒவ்வொரு அடியாக வழி நடத்திச் செல்வார்.



1941-ல் மதுரையில் பேராசிரியராக இருந்த N. R. கிருஷ்ணமூர்த்திக்கு ரமணாச்ரமத்திலிருந்து நவராத்திரி விழாவிற்கு அழைப்பிதழ் வந்தது. இந்தச் சமயத்தில் ஒன்பது நாட்களுக்கு அம்பிகையை வழிபட்டு விழா கொண்டாடுவார்கள். எனக்கு அப்போது வயது ஐந்து. விஜயதசமியன்று ஸம்பிரதாயப்படி என்னுடைய அக்ஷராப்யாசம் நிகழ்வதாக இருந்தது. ('அக்ஷர' என்றால் 'எழுத்து.' 'அப்யாஸம்' என்றால் பயிற்சியென்று பொருள்.) ஆச்ரம ஸர்வாதிகாரி சின்னஸ்வாமி, NRK-யை எழுத்தறிவித்தல் என்னும் இந்த விழாவிற்கு அழைத்திருந்தார். இந்த அழைப்புப் பத்திரிகையைப் பார்த்ததும், தானும் பகவானின் குழந்தைதான் என்பதால் தானும் அக்ஷராப்யாசம் செய்து கொள்ள வேண்டுமென்று NRK நினைத்தார். ஸம்ஸ்க்ருதத்தில் அக்ஷராப்யாசம் என்றால் மெய்ப் பொருளில் நிலைத்திருந்து, மௌனமாகப் பயில்வது என்ற ஒரு அர்த்தமும் உண்டு. அந்தச் சமயத்தில் பகவான் தன் முன்னிலையில் இருப்பார் என்பதால் தனக்கும் மெய்ப்பொருளின் மௌன தீக்ஷை பகவான் ஸாந்நித்தியத்தில் கிடைக்கும் என்று NRK நினைத்தார். உடனே அவர் ரமணாச்ரமத்திற்குப் புறப்பட்டார்.

(1962/63-ல் அவர் என்னிடம் 'நாம் இருவரும் சகோதரர்கள். பகவான் முன்னிலையில் உனக்கு அக்ஷராப்யாசம் செய்து படிக்க வைத்தது ஞாபகமிருக்கா? அதே சமயம்தான் பகவானின் ஸாந்நித்தியத்தில், நான் ஆத்மவஸ்துவில் கவனம் செலுத்த ஸாதனை ஆரம்பித்தேன். ஆகவே நாம் இருவரும் சகோதரர்கள். நாம் எப்போதும் ஒன்றாக இருக்கிறோம். இனிமேலும் அப்படியே இருப்போம். இது பகவானுடைய ஸங்கல்பமே!', என்று கூறினார்.)

NRK ரிபு கீதையைக் கையில் வைத்தவாறு நவராத்திரி விழாவில் ஒன்பது நாட்களும் கலந்து கொண்டார். மற்ற இரண்டு புத்தகங்களையும் அவர் ஏற்கனவே மனப்பாடம் செய்து விட்டதால் அவற்றைச் சுமக்க வேண்டிய அவசியம் இருக்கவில்லை. அந்தப் புத்தகத்தை வைத்துக் கொண்டு தனது குருவை நோக்கினார். பகவான், "ஏன் அந்தப் புத்தகத்தைக் கையிலேயே வைத்திருக்கிறாய்?" என்று கேட்டார். அந்தப் புத்தகத்தை தான் பகவானிடம் கொடுத்ததையும், அதை பகவானே அவரிடம் திருப்பிக் கொடுத்ததையும் NRK விளக்கினார். பகவான் தன்னிடம் காட்டிய சிரத்தை NRK-யை நெகிழச் செய்தது. தைரியத்தை வரவழைத்துக் கொண்டு அவர் பகவானிடம், "நான் தினமும் பாராயணம் செய்வதற்கு மிக முக்கியமான வரிகளை தயவு செய்து தேர்ந்தெடுத்துக் கொடுங்கள்," என்று வேண்டினார். பகவான் 26-வது அத்தியாயத்தைச் சுட்டிக் காட்டி, "இந்த வரிகளை ஓதுவதே ஸமாதிதான்," என்றார்.

இது அனைத்து ஸாதகர்களுக்கும் உள்ள போதனை ஆகும். ஒரு புத்தகம் என்பது படித்துவிட்டு ஒதுக்கி வைத்து விடுவதற்கல்ல. அது நம்மில் ஒரு அங்கமாக ஆக வேண்டும். நமது உறுப்புக்களைப் போல் அவையும் நம்மை விட்டுப் பிரிய முடியாத ஒரு அங்கமாக ஆக வேண்டும். நம்முடைய குருவின் வழிகாட்டுதலைச் சிரமேற்கொண்டு தீவிரமாக செயல்பட வேண்டும் என்பது தான் இந்த போதனையின் நோக்கம். NRK எப்போதும் இந்தப் புத்தகங்களைத் தன்னுடன் எடுத்துச் செல்வார். அவர் அந்த ஸ்லோகங்களை ஆயிரக்கணக்கில் ஓதியதால் சுவாசிப்பதை போன்று ரிபுகீதை ஓதுவதும் அவருடைய இயல்பான செயலாகிவிட்டது. ஒரு முறை நான் அவரிடம் ஏன் அவர் அந்தப் புத்தகத்தை அவ்வளவு முறை படித்தார் என்று கேட்டதற்கு அவர், "அவை வெறும் புத்தகங்களோ அல்லது ஸ்லோகங்களோ மட்டுமல்ல. அவை மந்திரங்கள் — பவித்ரமான, திவ்யமான குருவின் வார்த்தைகள்," என்று பதிலளித்தார். நான் நம்பிக்கையின்றி தயங்கினாற்போல் இருந்ததைக் கண்டு NRK, "ஒரு முறை நான் என்னுடைய குருவை அருணாசல ஸ்துதி பஞ்சகத்திற்கு விளக்கம் கூறுமாறு கேட்டுக் கொண்ட போது, 'மீண்டும் மீண்டும் படிப்பதுதான் அதன் அர்த்தம்' என்று

பகவான் கூறினார். அதனால் தான், நான் அதை அத்தனை முறை படித்தேன்,'' என்றார். இந்த நாஸ்திக விஞ்ஞானிக்கு ஏற்பட்டிருக்கும் மாறுதலைப் பாருங்கள்! இந்தச் சந்திப்பிற்குப் பின்னும் அவர் அநேக முறை அவற்றைப் படித்திருப்பார். குரு அவரைத் தங்கமாக மாற்றி விட்டார். விஞ்ஞானியான அவர், எளிதில் அர்த்தம் விளங்கக்கூடிய செய்யுளை பல ஆயிரம் முறைப் படித்தார்; ராம மந்திரத்தை விடாது ஜபித்தார். சிறந்த விஞ்ஞானியாக இருந்தும் கூட அவரால் அறிவுக்கப்பால் போக முடிந்தது என்பதை இது காட்டுகிறது.

1944-ல் தனது இறுதி தீக்ஷைக்காக பகவானிடம் வந்தார் NRK இந்தக் கால இடைவெளியில் பகவானது விசேஷக் கிருபையினால் அவர் முழுமையாக ஸாதனையில் ஈடுபட்டிருந்தார். அன்று பகவான் மலை மேலிருந்து கீழே இறங்கி வந்து கொண்டிருந்த போது NRK பகவானை நமஸ்கரித்து விட்டு தைரியத்தை வரவழைத்துக் கொண்டு அவரிடம், "உங்களது அருளால் நான் எவ்வாறு ஆத்மாவை உணர்வது? நான் எவ்வாறு தூக்கத்தில் கூட கேவல நிர்விகல்ப ஸமாதியில் (சிறிது காலத்திற்கு ஏற்படும் வெளி உணர்வற்ற ஸமாதி நிலை) இருப்பது? மற்ற நேரங்களில் எவ்வாறு ஸஹஜ நிர்விகல்ப ஸமாதி நிலையில் (தன் நிஜ ஸ்வரூபத்தை மறக்காமல், இயல்பாக, வழக்கம் போல கர்மங்களில் ஈடுபட்டிருந்தபோதும், தன்னையுணர்ந்த பூரண நிலையில் இருப்பது) நான் தூங்கும்போது கூட அது இருக்க வேண்டும். நான் விழித்துக் கொள்ளும்போதும் அது தொடர வேண்டும்,'' என்று கூறினார். அதற்கு பகவான், "நித்திரை என்பது பகவான் கொடுத்த நிலை. தூங்கும்போது நீ ஒன்றும் செய்ய முடியாது. ஆனால் மற்ற நேரங்களில் 'நான் யார்?' என்ற விசாரத்தை நீங்கள் பயிற்சி செய்ய வேண்டும். நீங்கள் மிகவும் விரும்பும் அந்தப் பழம் நன்கு பக்குவமானதும், தானாகவே வந்து உரிய காலத்தில் உன்னை வந்தடையும்,'' என்று கூறினார். NRK தொடர்ந்து, "என் அன்பிற்குரிய பகவான் ஸத்குரு ரமணரின் அமுத வாயிலிருந்து என்னுடைய இறுதி உபதேசத்தைப் பெற்றேன். அவரிடம் கேட்டுப் பெற எனக்கு வேறு ஒன்றுமே இல்லை. என்னுடைய லட்சியத்தை அடைய நான் கடுமையாக உழைக்க வேண்டும் என்பதையும் அதைத் தவிர நான் செய்வதற்கு வேறொன்றுமில்லை என்றும் அறிந்தேன்,'' என்று கூறினார்.

ஸாதனையில் முழுமையாக ஈடுபட்ட NRK, 1955-ல் ஓய்வு பெற்ற பிறகு ஆச்ரமத்தில் நீண்ட காலம் வந்து தங்குவார். எந்நேரமும் அவர் உண்முகமாகவே இருந்தது எனக்கு வியப்பை அளித்தது. இருப்பினும் தன்னை முக்த புருஷனாக அவர் சொல்லிக்கொள்ளவே இல்லை. அது எனக்கு ஆச்சர்யமாக இருந்தது. உண்மையைச் சொல்லப் போனால் பழைய பக்தர்கள் யாருமே, அவர்களை ஆத்மானுபூதியடைந்தவர்களாகக் கூறிக் கொண்டதேயில்லை. NRK அடிக்கடி ஆச்ரமத்திற்கு வந்து போய்க் கொண்டிருந்ததால் நான் அவருக்கு நெருக்கமானேன். 1960-ல் இருந்து நான் நிரந்தரமாக ஆச்ரமத்திலிருந்ததால் அவருடைய நினைவுகளைப் பற்றிக் கூறும்படி கேட்டுக்கொண்டேயிருப்பேன்.

1960-ல் இருந்து ஆச்ரமத்திற்கு வரும்போதெல்லாம், NRK பல நாட்கள் தங்குவார். அவர், பகவானின் சக மாணவர்களைப் பற்றிய தகவல்களைக் கொடுப்பார். பகவானின் குடும்பம் திருச்சுழியில் தங்கியிருந்த போது, அடுத்த வீட்டில் வசித்த குடும்பத்தில் லக்ஷ்மி என்னும் ஒரு சிறுமி இருந்தாள். "பகவானைக் கருவுற்றிருந்த போது, அவரது அன்னை அழகம்மாள், தனது வயிற்றில், தொடர்ந்து, தாங்க முடியாத எரிச்சலை அனுபவித்து வந்தார். ஆகவே அதைத் தணிப்பதற்காக வில்வ இலையையும், வேப்பிலையும் சேர்த்து அரைத்து, அந்த விழுதை வயிற்றில் தடவுவார்கள்,'' என்று NRK-யிடம் லக்ஷ்மி கூறியுள்ளார். பகவானுடைய தாயாருக்கு நெருக்கமாக இருந்த லக்ஷ்மியிடமிருந்துதான் நமக்கு இந்த விஷயம் கிடைத்துள்ளது. அவருக்கு இரண்டு வயது இருக்கும்போது அவரும், பகவானும் ஒரே சமயத்தில் அழகம்மாள் மடியிலமர்ந்து பால் குடிப்பார்கள்

என்றும் கூறியுள்ளார். பகவான் தன் தாயாரிடம் ஆறு வயது வரை பால் குடித்ததாகவும், அதனால்தான் அவரது தேஹம் அவ்வளவு வலுவாக இருந்தது என்றும் லக்ஷ்மி கூறியிருக்கிறார்.

1896 செப்டம்பர் மாதம் முதல் தேதியன்று, பகவான் ரயிலிலிருந்து இறங்கியவுடன் நேராகக் கோயிலுக்குச் சென்றதாக அவருடைய வாழ்க்கைச் சரித்திரத்தில் கூறப்பட்டிருந்த போதிலும் அது அப்படி நடக்கவில்லை, என்று அவரது சக மாணவர்கள் கூறியுள்ளனர். நடந்தது இதுதான் — ரயில் காலை ஆறு மணிக்கு வந்து சேர்ந்த போது பகவான் பேரானந்த நிலையிலிருந்தார். அவர் நேராகக் கோயிலுக்குச் செல்லாமல், திருவண்ணாமலையின் தெருக்களில் அலைந்து விட்டு 12 மணிக்குத் தான் கோயிலுக்குள் நுழைந்தார். பூட்டப்பட்டிருந்த கோயில் கதவுகள் பகவான் உள்ளே நுழையும் போது தானாகத் திறந்து கொண்டன. அவர் உள்ளே நுழைந்ததும் அங்கு யாருமேயில்லை என்பதைக் கண்டார். நேராக கர்ப்பக்ருஹத்திற்குச் சென்று லிங்கத்தை அணைத்துக் கொண்டு பகவான், “அப்பா! நான் உன்னுடைய உத்திரவின்படி வந்து விட்டேன். இனி உன் இஷ்டம் என் இஷ்டம்,” என்று கூறினார். அனைத்தும் அருணாசலத்தின் ஸங்கல்பமேயன்றி பகவானுடைய திட்டம் எதுவுமில்லை.

பகவானுடைய தனிப்பட்ட பழக்க வழக்கங்களைப் பற்றி நான் NRK-யிடம் கேட்ட போது, “அவற்றை நான் கவனித்தது மட்டுமல்லாமல் அவரை உதாரணத்தைக் கொண்டு, என்னுடைய வாழ்க்கையில் நான் பின்பற்ற முயற்சி செய்து வந்திருக்கிறேன். தன்னைத் தூய்மையாக வைத்திருப்பது, உடையை சீராக வைத்துக் கொள்வது, சுற்றியிருக்கும் அனைவருடனும் உணவை சமமாகப் பகிர்ந்து கொள்வது, எல்லாக் காரியங்களையும் உரிய நேரத்தில் முறைப்படி செய்வது இவற்றை பகவான் தினசரி வாழ்க்கையில் கடைப்பிடித்ததை கவனித்தேன். உபயோகமானதாக இருக்கும் பட்சத்தில் கடைநிலைப் பணியாக இருந்தாலும் பகவான் அதைச் செய்வார். ஒரு வேலையையும் பாதியில் விட மாட்டார் என்பதோடு, தன்னால் செய்ய முடிந்த எந்த வேலையையும் அவர் இன்னொருவரைச் செய்யும்படிக் கூறமாட்டார். மற்றவர்களைவிட தன்னை உயர்ந்தவராக எப்போதும் கருதமாட்டார். அவர் எப்போதும் உண்மையே பேசுவார். உண்மை பேசுவதால் ஒருவருக்கு மனக்கஷ்டம் ஏற்படும் என்றாலோ அல்லது அவருடைய நன்மதிப்புக்கு பங்கம் ஏற்படும் என்றாலோ அவர் மௌனமாக இருந்து விடுவார். அத்துடன், அவர் எதிர்காலத்தைப் பற்றிக் கவலைப்பட்டதே கிடையாது. பக்தர்களாகிய எங்களுக்கு முன்னுதாரணமாக இருந்து காட்டினார். உடலளவிலும் மனத்தளவிலும், ஆன்மீகரீதியாகவும் நாம் அவரைப் பின்பற்ற வேண்டும்,” என்று கூறி முடித்தார்.

1980-ல் ஒரு முறை நான் NRK-யிடம் “நீங்கள் ஸாதனை செய்து வந்துள்ளீர்கள். இப்போதும் தொடர்ந்து ஸாதனை செய்து கொண்டிருக்கிறீர்கள். பேராசிரியரே! ஆச்ரமத்தின் வேலைகள் என் மீது சுமத்தப் பட்டிருக்கின்றன. எனக்கு ஸாதனை செய்ய நேரமேயில்லை. உங்களைப் பார்க்கும் போது எனக்கு இதுபோல் ஸாதனை செய்ய முடியவில்லையே என்று மிகவும் வேதனையாக உள்ளது,” என்று புலம்பினேன். பதிலுக்கு அவர் “கவலை எதற்கு? நீ ஸாதனை செய்கிறாயா? அல்லது சேவை செய்கிறாயா? என்பது பொருட்டல்ல. நீங்கள் அருணாசலத்தின் ஒரு அங்கம் என்பதை முழுமையாக உணர்; அதுபோதும், என்றார். குழப்பமடைந்த நான் “நான் அருணாசலத்தின் ஒரு அங்கம் என்றால் என்ன அர்த்தம்?” என்று கேட்டேன். NRK என்னை அலுவலகத்திலிருந்து அந்த திவ்ய மலையின் அடிவாரத்திற்குக் கூட்டிச் சென்றார். அந்த மலையை மிக்க பக்தியுடன் சுட்டிக்காட்டி, அருணாசலமே ஆத்மா —’நான் இருக்கிறேன்’ என்பதும், தத் த்வம் அஸி — என்ற மஹா வாக்கியப் பொருளும் அதுவே. வேதங்களும் இந்த உண்மையைத் தான் கூறுகின்றன. ‘நம் ஒவ்வொருவரின் இருப்புணர்வும், அருணாசலமும் ஒன்றே, அந்த அருணாசலமே வேதங்களின் ஸாரம்,’ என்பதை மனிதகுலம் மறந்து விட்டது. ‘நான் இருக்கிறேன்’ (I AM) என்னும் தனது இருப்புணர்வை மனித குலம் மீண்டும்

உணர்வதற்கும், தன்னிருப்பில் நிலைக்கச் செய்வதற்காகவும் அருணாசலமே பகவான் ரமணராக மனித வடிவம் எடுத்துள்ளது. 'நான் இருக்கிறேன்' என்பதன் உண்மையைப் பரப்புவதற்காக, அருணாசலம் மனித உருவெடுத்த போது அங்குள்ள சிறிய பெரிய பாறைகள் பக்தர்களாகப் பிறந்தன. ஆகவே கணேசன்! நாம் அனைவரும் அருணாசலத்தின் சிறிய பெரிய பாறைகள் என்பதை உறுதியாக நம்பு. நாம் எல்லோரும் பார்த்த வால் நக்ஷத்திரம் போன்ற ஒளியாக பகவான் எவ்வாறு அருணாசலத்தை அடைந்தாரோ அதே போன்று நாமும் நமது உடலை உகுக்கும் போது அந்தப் புனித மலைக்கே போய்ச் சேருவோம். இந்த உண்மையை இதயத்தில் ஆழமாகப் பதிய வைத்துக் கொள். இந்தப் பாறைகளின் மகத்துவத்தையும் பெருமையையும் பகிர்ந்து கொள். உலகறியச் செய். சந்தோஷமாக இரு. கணேசன்! இந்த வேலையை நீ செய்தாக வேண்டும். நீ தான் இதைச் செய்ய வேண்டுமென்று பகவான் விரும்புகிறார் என்று எனக்குத் தோன்றுகிறது," என்று NRK கூறினார்.

NRK-யையும், அவரது மனைவியையும் ரமணாச்ரமத்தில் நீண்ட நாட்கள் தங்குவதற்கு இசையச் செய்யும் பெரும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. இது அவருடைய ஆசிகளைப் பெறுவதற்கு சிறந்த வாய்ப்பை எனக்கு அளித்தது. 1981 அல்லது 82-ல் ஒருமுறை அவரும் மற்ற பக்தர்களும் பகவானின் ஸந்நிதியில் அனுபவித்த பேரானந்தத்தை எனக்கும் அருளும்படி வேண்டிக் கொண்டேன். அவர் மிக்க மகிழ்ச்சி அடைந்தார். "ஆம்! நீ மட்டுமல்ல கணேசன்! இந்த சம்பவத்தைக் கேட்கும் எவரானாலும் உள்ளுக்குள் ரமணரின் மௌனத்தில் கரைந்து வெளியே ஆனந்தக் கண்ணீர் வடிப்பார்கள். இதைக் கேள். தாயாரின் ஸமாதிக்கு மேல் கட்டப்பட்ட கூரை வேய்ந்த மண்



**ஸ்ரீ பகவானின் ஸமாதி கோயில் முன் பேராசிரியர் என்.ஆர்.கே மற்றும் குடும்பத்தினர்**

குடிசைக்கருகில் ஒரு நாள் பகவான் காலை மடித்தவாறு ஒரு பலகையின் மேல் (பெஞ்சின் மேல்) அமர்ந்திருந்தார். பகவானுடன் பள்ளிக்கூடத்தில் சேர்ந்து படித்த ரங்கன் மற்றும் ராமஸ்வாமி பிள்ளை, பிற பழைய பக்தர்கள் எல்லோரும் பகவானின் முன் தரையில் அமர்ந்திருந்தனர். அவர்கள் அனைவரும் பகவானைப் புகழ்ந்து கூறும் ரமண ஸ்துதி பஞ்சகம் என்ற தமிழ்ப் பாடல்களைப் பாட ஆரம்பித்தனர். ரங்கன் பகவானுக்கு வெகு அருகில் தரையில் அமர்ந்திருந்தார். அவரது தலை, பலகைக்கு மிக அருகில் இருந்தது. அந்தப் பாடல் 'உங்களது மிருதுவான புனித பாதங்களை என்னுடைய தலை மீது வைத்து அருளுங்கள்' என்று முடிந்தது. அந்த வரி பாடப்படும் போது பகவானுடைய ஒரு பாதம் சற்று இறங்கி ரங்கனுடைய தலையைத் தொட்டு, அங்கேயே நீண்ட நேரம் இருந்தது. ரங்கன் உட்பட அங்கிருந்த அனைவரும் இந்த அற்புதமான ஆன்மீக அனுபவத்தைப் பெற்றுத் தங்களை மறந்த நிலையில் அதே பாடலை மீண்டும் மீண்டும் இசைத்தனர்" என்றார் NRK.

பின்னர் சென்னைக்குச் சென்ற NRK அங்கு அருணாசல ரமணருடன் ஐக்யமானார். மருத்துவர்கள் அவர் உணர்வற்ற நிலையில் இருப்பதாகக் கூறினாலும், அவரது உதடுகள் ஏதோ ஜபிப்பது போல் சதா அசைந்து கொண்டேயிருந்தன என்று அவரது மகன்கள் என்னிடம் கூறினர். அது நிச்சயமாக அருணாசல ஸ்துதி பஞ்சகம், ரமண ஸ்துதி பஞ்சகம், ரிபு கீதையின் 26 ஆவது அத்தியாயம் இவைகளாகத் தான் இருந்திருக்க வேண்டும்.

இதயத்திற்குத் தலை வணங்குவதுதான் நாம் நமது அகந்தையை ஆத்மாவில் இழக்கும் இறுதிச் செயல். அதாவது இதயத்தில் அறிவு அடங்கி அதில் இரண்டறக் கலப்பது என்பது தான் அது. குருவின் புனித பாதங்களை ஒருவர் தலையின் மேல் வைப்பதன் தாத்பர்யம் இதுதான். ஒருவரை நமஸ்கரிப்பது அல்லது ஒருவர் பாதங்களில் தலையை வைப்பது ஆகிய செயல்களுக்கெல்லாம் ஆன்மீக ரீதியாக ஒரு பொருள் உண்டு. தயவு செய்து அதைப் புரிந்து கொண்டு அனுபவியுங்கள். நான் முப்பது குருமார்களின் திருப்பாதங்களில் என்னுடைய தலையை வைத்திருக்கிறேன். நானும் பலரைப் போல் இறை நம்பிக்கையில்லாதவனாகத்தான் இருந்தேன். ஒரு குருவின் திருப்பாதங்களில் தலையை வைக்கும் போது வேறு ஒன்று நடந்துவிடுகிறது. நான் கூறுவதை நம்புங்கள். அப்போது நடப்பது என்ன? எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் ஆத்மாவிற்கு, உங்களது அகந்தை அப்போது தலை வணங்குகிறது. வேறு வழி எதுவுமில்லை. வெறும் படிப்பும் பயிற்சியும் போதாது. ஆனால் குருவின் திருப்பாதங்கள் நம்மீது பட்டாலே போதும். "ஒருவருடைய இதயத்தில் ஸத்குருவின் திருப்பாதங்கள் உள்ளன. எப்போதெல்லாம் நீங்கள் இதயத்திற்கு தலை வணங்குகிறீர்களோ அப்போதெல்லாம் நீங்கள் ஸத்குருவின் புனித பாதங்களினால் ஆசீர்வதிக்கப்படுகிறீர்கள்" என்று பகவான் கூறியிருக்கிறார்.



‘ஆயிரக்கணக்கான பக்தர்களில் யாரோ ஒருவரே அத்யாத்ம பூரணநிலையை அடைய முயலுகிறார்,’ என்று பகவத் கீதையில் பகவான் ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார். முயற்சி செய்பவர்களிலும் யாரோ ஒருவர்தான், ஆத்மா —’நான் இருக்கிறேன்’ என்ற உணர்வாக நான் இருக்கிறேன் என்பதை அறிந்து கொள்ளுகிறார். ‘பலர் அழைக்கப்படுகின்றனர். ஆனால் வெகு சிலரே தேர்ந்தெடுக்கப்படுகின்றனர்’ என்று இயேசுநாதர் கூறினார்.

ஸத்தியத்தை அடைய வேண்டும் என்ற தீவிர உள்நாட்டம் அல்லது முக்தியடைவதற்கான விழைவு எளிதில் காண முடியாத ஒன்று. அது அசாதாரணமான ஒரு பண்புமாகும். இறை நாட்டமுள்ள ஒருவராக இருப்பதற்கு இறையருள் இருக்க வேண்டும். உண்மையை அடைவதற்குப் பல ஆண்டுகள் கடுமையாக முயற்சி செய்து வெகுவாகப் போராட வேண்டியுள்ளது. ஆனால் அது ரமண பகவானுக்கு, அதிசுலபமாக இருந்தது. அது எவ்வாறு சாத்தியமாயிற்று? அருணாசலத்தின் அவதாரமே அவர் என்பதால் அது சாத்தியமாயிற்று என்றுதான் கூற வேண்டும். அதனால் பகவானது பக்தர்களாக உருவெடுத்த அருணாசலத்தின் பாறைகளும், கற்களும் கூட அவரைத் தொடர்ந்து, பகவானைப் போன்றே ஆனந்த நிலையை அடைந்தனர். ஏற்கனவே உண்மையை அறிந்திருந்ததால் சம்பிரதாய முறைப்படி அவர்கள் முயற்சி செய்ய வேண்டிய தேவை இருக்கவில்லை. இதுவே அருணாசல லீலையாகிய தெய்வீக நாடகம். இது ‘நடிப்பு எனும் பெரிய விளையாட்டு’ என்று பகவான் கூறுவார். அவரது பக்தர்கள் அனைவருமே இவ்வாறுதான் சாதனைகள் செய்து இறுதியில் அருணாசலத்தோடு கலந்தனர். வேறு விதத்தில் கூறப் போனால் உண்மையிலிருந்து தோன்றிய அவர்கள், ஸத்தியத்திலேயே வாழ்ந்து மீண்டும் மெய்பொருளையே அடைந்தனர்.

மூன்று விதமான மக்கள் பகவானிடம் வந்தனர்: பகவான் முன்னிலையில் தியானம், விசாரம் இவற்றைப் பழகும் எண்ணத்தோடு வந்த இறை நாட்டமுள்ளவர்கள், தங்களது தனிப்பட்ட சாதனைகளிலேயே முழு கவனத்தையும் செலுத்தினர். முருகனார், முனகால வேங்கடராமையா, விஸ்வநாத ஸ்வாமி போன்றவர்கள் இப்படிப்பட்டவர்கள். மற்றும் சிலர், ஆச்ரம அலுவலகத்தில் சேவை செய்ய வந்தனர். ஒரு ஆச்ரமம் செயல்பட வேண்டுமானால், பலரும் அவர்களது கடமைகளை ஆற்ற வேண்டியிருக்கும். மேற்கூறியவர்கள் பகவானுக்குத் திருப்தி தரும் வகையில் தங்களது கடமைகளைச் செய்தார்கள். உதாரணமாக நிரஞ்ஜனானந்த ஸ்வாமி சர்வாதிகாரியாக இருந்ததோடு, பண்டக சாலைப் பொறுப்பையும், மேலும் பல பொறுப்புக்களையும் ஏற்றிருந்தார். மூன்றாவது வகையான பக்தர்கள் ஆச்ரமத்திற்கு வந்து பகவானின் பிரத்தியேகத் தொண்டர்களாகப் பணியாற்றினார்கள். ஆண்களாக இருந்த இந்தத் தொண்டர்கள் அனைவருமே தங்கள் முழு நேரத்தையும் பகவானுடைய பணியிலேயே கழிக்க எண்ணி ஆச்ரமத்தினுள்ளேயே தங்கினார்கள்.

ஸ்கந்தாச்ரம நாட்களிலிருந்து, பின்னர் ரமணாச்ரமத்திலும், பகவானது அணுக்கத் தொண்டராக இருந்த குஞ்சு ஸ்வாமி, பகவானும் அவருடைய தொண்டர்களும் ஒருவரோடு ஒருவர் பழகிய விதம் குறித்து அழகாக எடுத்துரைத்திருக்கிறார். “பகவான் ஹாலிலிருந்த சோபாவில் தூங்கி விடுவார். மற்ற தொண்டர்களும், நானும் சோபாவிற்கு அருகில் படுத்துறங்குவோம். காலை மூன்றரை மணிக்கு எழுந்து வெளியே போவது பகவானின் வழக்கம். அவர் சோபாவிலிருந்து எழுந்ததும் எங்களில் ஒருவர் எழுந்து அவரிடம் டார்ச் லைட்டைத் தருவோம். ஒரு முறை கூட விளக்குக்காக எங்களில் ஒருவரையும் பெயர் சொல்லிக் கூப்பிட வேண்டிய அவசியமோ அல்லது எழுப்ப வேண்டிய

அவசியமோ பகவானுக்கு ஏற்பட்டதில்லை. பகவான் எழுந்த அதே நிமிடத்தில் எங்களது முயற்சியேதுமின்றி தானாகவே நாங்களும் எழுவது போல் தோன்றியது. பகவானுடைய பார்வை எங்களை நோக்கித் திரும்பியவுடனே, எங்கள் உள்ளே பிரகாசமான ஒரு ஒளி புகுந்து நாங்கள் உடனே எழுந்து விடுவோம். காரியங்களைத் தானே செய்து கொள்ள பகவான் விரும்புவார் என்றாலும், அவருடைய தொண்டர்கள் என்ற நிலையில் அவருடைய தேவைகளை முன்கூட்டியே கணித்து, தேவையானவற்றை நாங்கள் செய்துவிடுவோம். பகவான் ஒருபோதும் கட்டளையிட்டதில்லை.



**ஹால் உதவியாளர்கள் – (இடம் – வலம்) ரங்கசாமி, சத்யானந்த ஸ்வாமி, T.P.ராமச்சந்திரய்யர், வெங்கடரத்னம், ராமகிருஷ்ண ஸ்வாமி, சுப்ரமணியம், சிவானந்த ஸ்வாமி**

இவர்கள் ஒவ்வொருவரும் உடலளவிலான பணிகளை மட்டுமே செய்யவில்லை. அவர்களுடைய தனிப்பட்ட சாதனைகளின் முன்னேற்றத்தையும் பகவான் கூர்ந்து கவனித்தார். இது பற்றிக் கூறும் பொழுது, ‘‘ஆன்மீக சாதனைகளில் முழுமையாக என்னுடைய நேரத்தைக் கழிக்க எண்ணி ஆச்ரமத்திற்கு வெளியே தங்குவதற்கு ஒரு முறை நான் பகவானிடம் அனுமதி கோரினேன். தொண்டு செய்வது மட்டும் எனக்குப் பூரண திருப்தியைத் தரவில்லையென்று பகவானிடம் நான் கூறிய பொழுது, ‘உண்மையான சேவையென்பது எனது துணிகளைத் துவைப்பது என்பதில்லை; மனதை தூய்மைப் படுத்துவதில்தான் உள்ளது’ என்று பகவான் கூறினார். ஆன்மீக சாதனைகளைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது ‘ஆத்ம விசாரத்தைப் பழகுவது என்பது தவிர்க்கக்கூடாத ஒன்று’ என்று பகவான் ஒரு முறை குறிப்பிட்டார். ஒவ்வொருவரும் சமயம் கிடைத்த பொழுதெல்லாம் ஆத்ம விசாரமோ, தியானம் செய்யவோ பழக வேண்டும். இவற்றைச் செய்ய முடியாத போது அவர்கள் ஜபம் செய்யலாம். கவனம் சிதறுவதால் இதுவும் சாத்தியமில்லையென்றால் ஒருவர் எப்போது வேண்டுமானாலும் புனித நூல்களில் கூறப்பட்ட ஸ்துதிகளையோ அல்லது ஞானிகளும் மஹான்களும்

இயற்றிய பாடல்களையோ ஓதலாம். இந்த நால்வகை சாதனைகளில் ஏதாவது ஒன்றில் ஈடுபட்டிருக்க வேண்டும்.

ஆச்ரமத்திற்கு வெளியே குஞ்சு ஸ்வாமி தங்க ஆரம்பித்த போது மற்ற அணுக்கத் தொண்டர்கள் பகவானுக்குத் தொண்டு செய்ய முற்பட்டனர். இரவும் பகலும் பகவானுக்குத் தொண்டு செய்ததால் பகவானுடைய அனுக்ரஹத்தை முற்றிலுமாகப் பெற்றனர். குருவுக்கும், சீடனுக்கும் உள்ள உறவு தனித்தன்மை வாய்ந்தது. பகவானே அருணாசலம் என்பதால், அசைவற்ற நிலையில் இருந்த அவர் நிரந்தரமாக சமநிலையிலும் ஆத்மானந்தத்திலும் திளைத்தார். ஆனால் பக்தர்களின் உருவிலிருந்த அருணாசலத்தின் பாறைகள் 'நான் இருக்கிறேன்' என்ற அவர்களது உண்மை இயல்பை மீண்டும் பெற, அதை நினைவு கூறும்படி செய்யப்பட்டார்கள். இத்தகைய பேரருளை பக்தர்கள், பகவானிடமிருந்து பெற்றனர். அருணாசல ரமண லீலை என்ற இந்த நாடகத்தில் இதுதான் நிகழ்ந்தது. எந்த நிலையை நாட வேண்டும்; எந்த நிலையில் நிலைக்க வேண்டும் என்பதை அவர்களுக்குத் தொடர்ந்து நினைவூட்டுவதற்காக அந்த அசையா நிலையில் தொடர்ந்து பகவான் இருந்தார்.

எல்லையற்ற அன்பையும் பிரியத்தையும் பொழிந்த பகவானுடைய தொண்டர்களின் நெருக்கமான தொடர்பு என்னும் பெரும் பேறு எனக்கு ஏன் அளிக்கப்பட்டது என்பது இத்தனை ஆண்டுகளாக எனக்குப் புரியவில்லை. அந்த பாக்கியத்தைப் பெற நான் என்ன புண்ணியம் செய்தேன் என்று வியந்தேன். ஆனால் இன்று எனக்கு விளங்குகிறது. தொண்டர்களின் அன்பும், அரவணைப்பும் எனக்குக் கிட்டியதற்குக் காரணம், பகவானுடைய இந்த ரத்தினங்களைப் பற்றிய விபரங்களை நான் உங்களுடன் பகிர்ந்து கொள்ள வேண்டும் என்பதற்காகவே நிகழ்ந்தவை என இன்று தெள்ளத் தெளிவாகப் புரிந்து கொண்டேன். இந்த பக்தர்களுடைய சிறப்பு என்னவென்றால், எவ்வளவுதான் வெளி உலக விஷயங்களில் சிக்கிக் கொண்டிருந்த போதிலும் உள்ளே ஒளிரும் ஸத்தியத்தை—'தன்னை' ஒரு போதும் மறக்கவில்லை.



# 55 S. துரைஸ்வாமி ஐயர்



1920-இன் ஆரம்பத்தில் ஸ்கந்தாச்ரமத்தில், முதல் முறையாக பகவானை துரைஸ்வாமி ஐயர் தரிசித்தார். சிறந்த பண்டிதரான அவர், பின்னாளில் புகழ்பெற்ற வக்கீலாகவும் விளங்கினார். வீணை குப்பையரின் பேரனாகிய இவர், வீணை நன்றாக வாசிப்பார். ஆனால் 'புகழ்' என்னும் கண்ணைக் குருடாக்கும் இருட்டில், பகவான் அவரை அலைய விடுவாரா என்ன? 1948-50-ல் பகவான் அவரை ஹாலில் பணிபுரியும் உதவியாளராக தன் அரவணைப்பில் மீண்டும் ஈர்த்துக் கொண்டார். இதற்குள் மிகப் பிரபலமான வக்கீலாகத் திகழ்ந்த துரைஸ்வாமி ஐயருக்கு, அரசாங்கத்தில் மிகுந்த செல்வாக்குள்ளவர்களின் நட்பும் கிடைத்திருந்தது. பகவானுக்குப் புற்றுநோய் வந்த போது, ஐயரின் அபாரமான செல்வாக்கு பகவானுக்குச் சிகிச்சை அளிப்பதற்கும், சேவை செய்வதற்கும் தேவையான கருவிகளையும் நிபுணர்களையும் திருவண்ணாமலைக்குத் தருவிப்பதற்குப் பயன்பட்டது.

S. துரைஸ்வாமி ஐயரைப் பற்றி நினைக்கும்போதே என்னுடைய இதயம் நன்றிப் பெருக்கால் நிறைகின்றது. 1960-ல் பாண்டிச்சேரியிலுள்ள ஸ்ரீஅரவிந்தரின் ஆச்ரமத்தில் அவர் வாழ்ந்து கொண்டிருந்த போது, அவரை நான் சந்திக்க முடிந்தது என் பாக்கியமே. 'The Mountain Path'-ல் ஒரு கட்டுரை எழுதுவதற்காக அவரைப் பேட்டி காண நான் அங்கு சென்றேன். அவர் பரந்த மனப்பான்மையோடு ஒரு திவ்யமான ரஹஸ்யத்தை என்னுடன் பகிர்ந்து கொண்டார். "1920-ல் நான் ஸ்கந்தாச்ரமத்தில் இருக்கும் போது, ஒரு நாள் பகவானுடன் தனியாக இருக்க நேர்ந்தது. மனித உருவில் வாழும் தெய்வமே பகவான் என்பதை நான் முழுமையாக உணர்ந்திருந்தேன். இந்த உண்மை பகவானின் பழைய பக்தர்கள் அனைவராலும் உணரப்பட்டிருந்தது. பகவானுடைய மேலை நாட்டு பக்தர்களும், கீழை நாட்டு பக்தர்களும் அவர் சாதாரணமான ஒரு ஸாதுவோ அல்லது துறவியோ மட்டுமல்ல என்ற திடமான நம்பிக்கை கொண்டிருந்தனர். அவர்கள் எந்த ஸாதனை அல்லது மதத்தைப் பின்பற்றுபவர்களாக இருந்த போதிலும், அவர்களுக்கும் எனக்கும் கூட பகவான் மனித உருவில் இருக்கும் ஒரு தெய்வீக சக்தி என்பதில் சிறிதும் சந்தேகம் இருக்கவில்லை. எனினும் என்ன காரணத்தினாலோ ஒரு சக்தி வாய்ந்த ஆன்மீகத் தூண்டுதலினால், 'பகவானே! உண்மையில் நீங்கள் யார்?' என்ற கேள்வியை என்னுள் யாரோ நிர்ப்பந்தமாக எழுப்புவது போல் தோன்றியது. அது வார்த்தைகளால் வெளிப்படுத்தப்படவில்லை என்ற போதும் பகவான் அந்தக் கேள்வியைச் செவியுற்றது போன்று என்னைப் பார்த்துவிட்டுப் பின் எழுந்து என்னை நோக்கி வந்தார். தன் கரத்தை நீட்டி என்னுடைய கையைத் தன் கையால் பற்றி என்னை மலைக்கு மேல் இழுத்துச் சென்றார். நாங்கள் மலையுச்சியை மிக எளிதில் அடைந்து விட்டோம். எங்கும் நிறைந்திருந்த பகவானின் ஸாந்நித்தியமும் அவர் அருகாமையும் என்னைப் பரவசத்தில் ஆழ்த்தி அவருடைய திவ்ய சரணங்களில் ஸாஷ்டாங்கமாக நமஸ்கரிக்கச் செய்தது. நமஸ்கரித்த நிலையிலும் அவரது கூர்மையான அருட்பார்வையை நேராக என்னுடைய இதயத்திற்குள் அவர் செலுத்துவதை நான் உணர்ந்தேன். 'நான் இருக்கிறேன்' என்ற உணர்வுக்கு அன்னியமாக அருணாசலம் உள்ளதா? உள்ளே பாரும்! நீரும் அருணாசலம் தான். அகமுகமாய் ஆழ்ந்து மூழ்கும்!' என்று கூறிய பகவான் அதன்பின் என் பக்கம் குனிந்து என்னுடைய இதயத்தைத் தன் கையால் தொட்டார். அந்தக் கணமே,



**'ஸ்கந்தாச்ரமத்தில்' ஸ்ரீ பகவான்**
**(துரைஸ்வாமி அய்யர் இடதுபுறம் சுவற்றில் சாய்ந்தபடி நிற்பது)**

பகவானே அருணாசலம் என்பதை நான் உணர்ந்ததோடு மட்டுமல்லாம், நான் அமர்ந்திருந்த பாறையும் நானும் வெவ்வேறல்ல என்பதையும் உணர்ந்தேன்.''

''எல்லாப் பொருட்களிலும் மெய்ப்பொருளாக வியாபித்திருப்பது அருணாசலமே என எண்ணியவாறு மீண்டும் பகவானின் திவ்ய சரணங்களில் வீழ்ந்து வணங்கினேன்,'' என்று இந்த அசாதாரணமான நிகழ்ச்சியைக் கூறி முடிக்கும் போது, துரைஸ்வாமி ஐயர் பரவச நிலையில் இருந்தார். என் தோளைப் பிடித்து உலுக்கி விட்டு, ''கணேசா! இப்போது கூட அருணாசலத்தை இடைவிடாது நான் அனுபவிக்கிறேன். அருணாசலத்திலேயே இரு. பகவானுடைய உபதேசங்களுடன் வாழு. எல்லாம் நன்றாகவே நடக்கும். உனக்கு என் ஆசீர்வாதங்கள்,'' என்று கூறினார். அவர் கூறிய மேற்சொன்ன விஷயம் என்னை நெகிழச் செய்து கண்ணீர் பெருக்க வைத்தது. நான் அவரது



**நிர்வாண அறையில், ஸ்ரீ பகவான் தன் இறுதி நாட்களில்**

பாதங்களில் விழுந்து வணங்கி என்னை ஆசீர்வதிக்குமாறு வேண்டினேன். அவர் என்னை பார்த்து மிக அழகான புன்னகையை உதிர்த்துவிட்டு என்னைத் தூக்கியபடி "கணேசா! போய்த் தேடு! இந்த அறை முழுவதும் சுற்றிப் பார்! பகவானின் இந்த ஒரு புகைப்படத்தைத் தவிர வேறு எந்தப் படங்களையும் நீ காண முடியாது. நான் எப்போதும் இதைப் பார்த்த வண்ணம் தான் இருக்கிறேன். 1938-ல் பகவான் எனக்குப் பிரத்தியேகமாகக் கொடுத்த இந்தப் படத்தில் அவர் உயிரோடு இருக்கிறார்," என்று கூறினார். உணர்ச்சி மேலிட இவ்வாறு கூறிய அவரால், மேலே பேச முடியவில்லை. அரவிந்தாச்ரமத்தில் ஒவ்வொரு அறையிலும் ஸ்ரீ அரவிந்தர், ஸ்ரீ அன்னை இவர்களின் படம் இருக்கும். ஆனால் அரவிந்தாச்ரமத்தில் வாழ்ந்த இவரது அறையில் பகவானின் படம் மட்டுமே இருந்தது. துரைஸ்வாமி ஐயர் போன்ற இத்தகைய ஆன்மீக மஹான்களும், பகவானும் இரண்டல்லர். இந்த நிகழ்ச்சிக்குச் சில வாரங்களுக்குப் பின் துரைஸ்வாமி ஐயர் தன் உடலைத் துறந்தார்.



# 56 சிவானந்த ஸ்வாமி



பகவானுடைய அருளைப் பெற்றவர்களில், சிறந்த கல்விமானாகவும் வசதி படைத்தவராகவுமிருந்த துரைஸ்வாமி ஐயரிலிருந்து முற்றிலும் மாறுபட்டவர் நாம் அடுத்துக் காணப் போகும் தொண்டர் சிவானந்த ஸ்வாமி. குழந்தையைப் போன்று கள்ளம் கபடமற்று விளங்கிய அவர், மிகுந்த பணிவுள்ளவர். சூதுவாதற்ற உள்ளத் தூய்மையோடு இருந்ததால்தானோ என்னவோ, பகவான் அவரை ஒரு முறை அல்ல, இரண்டு முறை அனுக்ரஹித்துள்ளார்.

பகவான் எழுதிய தமிழ் நூல்களின் தொகுப்பு 'நூல் திரட்டு' என்ற பெயரால் அப்போதுதான் வெளியிடப்பட்டிருந்தது. ஆச்ரம புத்தக சாலையில் அந்தப் புத்தகம் கிடைத்தது என்றாலும், பகவானின் ஒரு சில தொண்டர்களுக்கு மட்டுமே அதை வாங்கும் வசதி இருந்தது. முற்றிலும் துறந்தவராக இருந்த சிவானந்த ஸ்வாமியின் கையில் பணம் எதுவும் இருக்கவில்லை. மிகுந்த கண்டிப்போடு கூடியவராதலால் சர்வாதிகாரி சின்னஸ்வாமி புத்தகத்தை ஒருவருக்கும் இலவசமாகக் கொடுக்கமாட்டார். விலை மதிக்க முடியாத இந்தப் புத்தகத்தைப் பகவான் தன்னுடைய எளிய பக்தர் பெறாமல் இருக்க விடுவாரா? தன்னிடமிருந்த எழுதப்படாத ஒரு நோட்டில் நூல் திரட்டு முழுவதையும் பகவான் எழுதினார். நீண்ட நேரம் எழுதுவாரே தவிர, தான் எழுதுவது என்ன என்பதை யாருக்கும் தெரிவிக்கவில்லை. எழுதும் பணி முடிந்ததும், "சிவானந்தம்! இங்கு வாரும்! புத்தகம் வாங்குவதற்கு பணத்திற்கு நீர் எங்கு போவீர்? அதனால் நானே அதை முழுவதுமாக பார்த்து எழுதிவிட்டேன். இதை வைத்துக் கொள்ளும்," என்று அவரிடம் கொடுத்தார்.

மிகுந்த பரவசத்தில் ஆழ்ந்து போன சிவானந்த ஸ்வாமி, அந்த நொடியிலேயே ஸாதனைகளில் மூழ்க விரும்பினார். இருந்தாலும், அதற்கு பகவானுடைய உதவி இல்லாமல் முடியாது என்பதைப் புரிந்து கொண்டு, ஒரு குழந்தையைப் போன்று கபடமின்றி பகவானை அணுகி, "பகவானே! நான் முக்தி அடைவதற்காக நீங்கள் எனக்கு ஒரு மந்திரமோ அல்லது விசேஷமான உபதேசமோ தருவீர்களா?" என்று கேட்டபோது, பகவான் சிரித்தவாறு, 'உனக்கு நீ உண்மையாக இரு!' என்று பதில் கூறினார். அதன் உண்மையான ஆன்மீகப் பொருள் 'உணர்வாக நீ உன்னிலேயே நிலைத்திரு' என்பதேயாகும்.

சில தினங்களுக்குப் பிறகு பகவான் சிவானந்த ஸ்வாமியை மீண்டும் அழைத்தார். இதற்குள் சிவானந்தம் அகமுகமாகி விட்டதால், பகவானே அருணாசலம் என்பதை உணர ஆரம்பித்தார். 'இது உண்மையா? பகவானேதான் அருணாசலமா!' என்று தனக்குள்ளேயே வியந்தார். மறுதினமே சிவானந்தத்தை அழைத்து, "உமது நோட்டுப் புத்தகத்தை எடுத்து வாரும்," என்று பகவான்



**சிவானந்த ஸ்வாமிகளின் குறிப்பேட்டின் முகப்பாக ஸ்ரீ பகவான் வரைந்த அருணாசலம்**

சொல்லவும், பகவான் கொடுத்திருந்த அந்த நோட்டை அவர் கொண்டு வந்து கொடுத்தார். அந்த நோட்டுப் புத்தகத்தைக் கையில் இரண்டு மணி நேரம் வைத்திருந்து பின்னர் குறிப்பிட்ட பக்கத்தை பிரித்து, அதில் தானே வரைந்திருந்த அருணாசலத்தின் படத்தைக் காட்டி, "சந்தேகம் எங்கிருக்கிறது? இப்போது திருப்தியாயிற்றா?" என சிவானந்தத்திடம் கேட்டார். சிவானந்தத்திற்கு பகவானே அருணாசலமா? என்ற சந்தேகம் எழுந்தபடியால், பகவான் இவ்வாறு செய்து விளக்கம் தரவும், சிவானந்தம் மிகுந்த சந்தோஷமடைந்தார்.

பகவான் மஹாஸமாதியான அன்று சிவானந்த ஸ்வாமிக்கு அற்புதமான மற்றொரு அனுபவம் ஏற்பட்டது. அன்று அதிகாலையில் சிவானந்த ஸ்வாமி நிர்வாண அறையில் இருந்தபோது பகவான் அவரை அழைத்தார். அருகில் வந்த சிவானந்தத்திடம் பகவான், "சந்தோஷம்" என்று கூறினார். பகவான் எந்த நொடியிலும் தன் உடலை துறக்கக் கூடும் என்பதை நிச்சயமாக உணர்ந்திருந்ததால், அறையிலிருந்த அனைவரும் ஏற்கனவே மிகுந்த கவலையோடும், மன இறுக்கத்தோடும் இருந்தனர். பலரும் கண்ணீர் பெருக்கி, வருந்தியவாறு இருந்த அந்தச் சூழ்நிலையில் பகவான் எதற்காக "சந்தோஷம்" எனக் கூறினாரென அறிய ஆவலுடன் இருந்தனர். பகவான், சிவானந்த ஸ்வாமியை நோக்கியவாறு, "ஆங்கிலேயர்கள் தங்களது நன்றியை உணர்த்த 'THANK YOU' என்று கூறுவார்கள். அதற்கு இணையான தமிழ்ச் சொல் ஒன்று இல்லாததால் நாம் சந்தோஷம் என்று கூறுவோம்," என்று விளக்கம் கொடுத்தார். அதிசயம் என்னவென்றால் சிவானந்த ஸ்வாமி அந்த நொடியிலேயே சந்தோஷத்தையும், பேரானந்தத்தையும் ஒருங்கே அனுபவித்தார்.



'பழைய ஹாலில்' ஸ்ரீ பகவான்.
அவருக்கு அருகில் குறிப்பு நூலகம்

1960-70 களில் நான் சிவானந்த ஸ்வாமியோடு நெருங்கி பழகினேன். ஒரு முறை அவர், “கணேசன்! பகவானது மஹா நிர்வாணத்திற்குச் சில தினங்களுக்கு முன்பு நான் அவருடன் தனித்திருந்தேன். தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, ‘பகவானே! மஹான்கள் இறைவன் இருக்கிறார் என்றும், பலர் அவரைப் பார்த்தும் இருக்கிறார்கள் என்றும் கூறுகிறார்கள். உண்மையில் இறைவன் இருக்கிறாரா? அப்படியென்றால், நான் அவரைப் பார்க்கவும், அனுபவிக்கவும் முடியுமா?’ என்று பகவானிடம் கேட்ட போது, பகவான் தனது அருள் மழையைப் பொழிந்து, சிரித்த வண்ணம் ‘சிவானந்தம்! மூச்சு விடுகிறேன் என்று கூறுகிறீர்கள். யார் மூச்சு விடுகிறார்கள்?’ என்று பகவான் கேட்டார். அந்தக் கணத்திலேயே இறைவனது இருப்பு என்னை விழுங்கிற்று,” என்று சிவானந்தம் கூறினார்.

இந்தக் கள்ளங்கபடமற்ற எளிமையான தொண்டர், “கணேசன்! ‘ஒருவருடைய உண்மை இயல்பு ஆனந்தம்’ என்பதே பகவானுடைய உபதேசங்களின் மையக் கருத்து. வெளிப் பார்வைக்கு பகவானே அருணாசலம். ஆனால் உள்ளே ஆனந்தமே அருணாசலம். அந்த ஆனந்த நிலையிலேயே எப்போதும் இரு. எனது ஆசீர்வாதங்கள்,” என்று ஆசி வழங்கினார்.



# 57 ராமகிருஷ்ண ஸ்வாமி



ராமகிருஷ்ண ஸ்வாமியும், குஞ்சு ஸ்வாமியும் அருகருகே இருந்த கிராமங்களில் வாழ்ந்தார்கள். சுமார் 1920-ம் ஆண்டில் குஞ்சு ஸ்வாமியை பகவானிடம் செல்லுமாறு தூண்டியவர் ராமகிருஷ்ண ஸ்வாமிதான். பகவானுக்கு சேவை செய்து வந்த குஞ்சு ஸ்வாமி, ஆன்மீக ஸாதனை செய்யும் பொருட்டு பலாகொத்துக்குச் செல்லத் தீர்மானித்த போது, தனக்குப் பதிலாகத் தொண்டாற்ற ராமகிருஷ்ண ஸ்வாமியை வரவழைத்தார். சிவானந்த ஸ்வாமியைப் போன்றே கள்ளங்கபடமற்றிருந்த ராமகிருஷ்ண ஸ்வாமி மிகுந்த புத்திசாலியாகவும் இருந்தார். ஆர்வத்தோடும் சுறுசுறுப்பாகவும் இருந்த அவர் மிகுந்த கவனத்தோடு, பகவானும், நிரஞ்ஜனானந்த ஸ்வாமியும் திருப்தியடையும் வகையில் பகவானுக்குத் தொண்டாற்றினார். பண்டக சாலையை நடத்தவும், ஆச்ரமத் தோட்டங்களைப் பராமரிக்கவும் அத்தியாவசியமாக உதவி தேவைப்பட்டதால் அவரைத் தனக்கு உதவி செய்யுமாறு நிரஞ்ஜனானந்த ஸ்வாமி கேட்டுக் கொண்டார். பகவானுடைய அனுமதியோடும், முழு அர்ப்பணிப்போடும், பக்தியோடும் ராமகிருஷ்ண ஸ்வாமி ஆச்ரம நிர்வாகத்திற்கு உதவி செய்தார். இந்த பக்தரிடம் நிரஞ்ஜனானந்த ஸ்வாமி என்றும் நன்றி உணர்வோடு இருந்தது மட்டுமல்லாமல் எப்போதும் அவரைப் பற்றி உயர்வாகவே பேசுவார்.

என்னிடம் அன்போடு பழகிய ராமகிருஷ்ண ஸ்வாமி, தானும் பகவானும் சம்பந்தப்பட்ட பல நிகழ்வுகளை என்னோடு பகிர்ந்துகொண்டார். ஒரு நாள் ஹாலில் பகவானுக்குத் தொண்டு செய்து கொண்டிருந்த போது அவர் பகவானை அணுகி, “பகவானே! நான் முழுமையாக விசாரத்திலும் தியானத்திலும் ஈடுபட விரும்புகிறேன். அதன் பொருட்டு விரூபாக்ஷ குகைக்குச் செல்லட்டுமா?” என்று கேட்ட போது, பகவான் மிக்க மகிழ்ச்சியடைந்து, ‘அங்கு போய்த் தங்குங்கள்’ என்று அனுமதி அளித்தார். ஒரு வாரத்திற்குள்ளேயே ராமகிருஷ்ண ஸ்வாமி பேரானந்தத்தை உணர்ந்தார். ஒரு நாள் ஆழ்ந்த தியானத்தில் இருந்த போது, வெகு தொலைவிலிருந்த சிதம்பரத்திற்கு சூக்ஷ்ம உடலில் பயணித்து, அங்கிருந்த நடராஜர் கோயிலைத் தன் மனக்கண்ணால் கண்டார். அந்தக் காட்சியில் கர்ப்பக்ருஹத்தைக் கண்ணுற்ற அவர், அதை அடுத்து இருந்த திரைச் சீலை ஒன்று நெருப்புப் பற்றிக் கொள்ளும் நிலையில் இருப்பதையும் கண்டார். மிகத் தெளிவாக இருந்த அந்தக் காட்சி, திடுக்கிடும் வகையில் அவரை ஸமாதியிலிருந்து எழுப்பியது. அவர் கண்ட காட்சியை நிரூபிப்பது போல், அன்று மாலை, ஊரெங்கும் சிதம்பரம் கோயிலில் நிகழ்ந்த தீ விபத்துப் பற்றிய பேச்சாகவே இருந்தது. ராமகிருஷ்ண ஸ்வாமி, தான் ஒரு வாரத்திற்குள்ளேயே ஆன்மீகத்தில் உயர்ந்த நிலையை எய்திவிட்டதாக எண்ணி மிகுந்த பெருமிதம் கொண்டு, நடந்த விஷயம் பற்றி பகவானிடமும் சொல்வதற்காக ஓடினார். அவர் கூறியதை உன்னிப்பாகக் கவனித்த பகவான் சற்று எரிச்சலுற்று, ‘ராமகிருஷ்ணா! விரூபாக்ஷ குகைக்குக் காட்சிகளைக் காண்பதற்கா சென்றீர்? உம்முடைய தியானத்தைத் தீவிரமாக்க செல்லவில்லையா? ஒருவர் தனக்கு அந்நியமாக ஊனக் கண்ணாலோ, மனக் கண்ணாலோ வெளியில் எதையாவது காண்பது என்பது சீரான தியானத்திற்கு தடை ஏற்பட்டுள்ளது என்பதற்கான அறிகுறியாகும். எந்த விதமான ஸித்திகளை அல்லது அமானுஷ்ய சக்திகளைப் பெறுவதும், ஆன்மீகப் பயணத்தில் ஒரு தடையாகவே இருக்கும். நீர் தனியாக இருந்து தியானம் செய்ததெல்லாம் போதும்; கீழே இறங்கி வந்து விடும்,” என்று பகவான் கடிந்து கொள்ளவே, அவரது சொற்கள் ராமகிருஷ்ண ஸ்வாமியை விழிப்படையச் செய்தன. அன்று முதல் மனதில்

தோன்றும் காட்சிகள் எதற்கும் அவர் முக்கியத்துவம் கொடுக்கவில்லை. இதயத்தில் சீரான தியானம் அமைவதற்குக் குருவின் அருகில் இருப்பது மிகவும் அவசியம் என்பதை அவர் நன்கு உணர்ந்தார். அதனால் தோட்டத்திலும், பண்டகசாலையிலும் பணி புரிவதில் தீவிரமாக ஈடுபட்டார். ராமகிருஷ்ண ஸ்வாமி, ராமஸ்வாமி பிள்ளை இவர்களின் உழைப்பால் ஆச்ரமத் தோட்டம் பூத்துக் குலுங்கியது. ராமகிருஷ்ண ஸ்வாமியின் கடுமையான உழைப்பாலும், பண்டகசாலையை அவர் கவனத்தோடு கண்காணித்ததாலும் அதுவும் சிறப்பாகச் செயல்பட்டது.

ராமகிருஷ்ண ஸ்வாமி சிறு வயது முதலே அவ்வப்போது காக்காய் வலிப்பு நோயினால் பாதிக்கப்பட்டார். சில சமயங்களில் பண்டக சாலையில் வேலை செய்து கொண்டிருக்கும் போது வலிப்பு நோயால் பாதிக்கப்பட்டுப் பல மணி நேரம் தன் நினைவை இழந்து விடுவார். அப்போதெல்லாம், அவரை ஆச்ரம மருத்துவமனைக்குத் தூக்கிச் செல்லும் போது, பகவானுடைய பழைய ஹாலை அடுத்திருந்த ஒரு குறுகிய பாதை வழியாகச் செல்ல வேண்டியிருந்தது. ஒரு முறை இந்தக் காட்சியை பகவான் ஜன்னல் வழியாகக் காண நேர்ந்தது. உடல் நிலை தேறிய பின் ராமகிருஷ்ண ஸ்வாமி பகவானை வணங்கச் சென்ற போது, “ராமகிருஷ்ணா! உமக்கு அப்போது எப்படி இருந்தது?” என வினவினார். அவருக்கு வலிப்பு வந்தபோது, ஆத்மா என்ற உணர்வு இருந்ததா என்ற பொருளில், ‘எங்ஙனம் இருந்தது?’ என பகவான் கேட்ட போது, ராமகிருஷ்ண ஸ்வாமி, “பகவானே! எனக்கு எதுவுமே தெரியவில்லை. என் உடம்பைப் பற்றியோ சுற்றுச்சூழலைப் பற்றியோ எனக்கு உணர்வு இருக்கவில்லை; ஒன்றுமே தெரியவில்லை,” என பதிலிறுத்தார். “இல்லை,



**ஸ்ரீ பகவான் ஆச்ரம பசுக்கள் மீது அன்பைப் பொழியும் காட்சி. பசு லக்ஷ்மி அவரது பாதத்தில் சரணடைந்து ஸாஷ்டாங்கமாக வணங்கும் போது. (இராமகிருஷ்ண ஸ்வாமி வலதுபுறத்தில் நிற்கிறார்.)**

இல்லை. அது அவ்வாறு இருக்கக் கூடாது. உள் உணர்வை எப்போதும் பிடித்துக் கொள்ள வேண்டும். வெளி உணர்வை இழந்தாலும் ஞப்தியை - அதாவது உள் உணர்வை விட்டுவிடக்கூடாது'' என்று பகவான் கூறியதன் பொருளை உணர்ந்து கொண்ட ராமகிருஷ்ண ஸ்வாமிக்கு அந்த உபதேசத்தால் என்ன நேர்ந்தது? வலிப்பு நோயின் பாதிப்பு அவரை விட்டு அறவே நீங்கியது.

ஞப்தியைப் பற்றி ராமகிருஷ்ண ஸ்வாமி எனக்குக் கூறிய விளக்கம் இதுவே—உடம்பையும் அதைச் சூழ்ந்துள்ளவற்றையும் நமக்கு உணர்த்துவது 'பிரக்ஞை' எனப்படுகிறது. கண்ணால் காண்பதோ அல்லது புலன்கள் மூலம் அனுபவிப்பதோ பிரக்ஞை அல்லது புற உணர்வு எனப்படுகிறது. 'ஞப்தி' என்பது தூய உள் உணர்வைக் குறிக்கிறது. அதுவே ஒருவருடைய இயல்பான உணர்வு நிலை. உதாரணமாக உறக்கத்திலிருந்து ஒருவர் எழுந்திருக்கும் போது, ''தான் தூங்கவில்லை; எழுந்து விட்டோம்,'' என்பதை ஒருவர் உணர்ந்து கொள்ளும் நிலை ஒன்று உள்ளது. இது மிகவும் குறுகிய கால அளவே நிலைக்கிறது. இந்த அனுபவம் நம் அனைவருக்கும் உள்ளது. இது ஒரு ஆன்மீக அனுபவம் என்றாலும் நாம் அதைக் கூர்ந்து நோக்குவதில்லை என்பதால் தினமும் அந்த நிலை கவனிக்கப்படாமலே போய்விடுகிறது. அதாவது விழித்தவுடனே படுக்கையிலிருந்து குதித்தெழுந்து நம்முடைய அன்றாட அலுவல்களில் ஈடுபடுவதற்கு ஒரு வலுவான உந்துதல் வந்து விடுவதால், அந்த அனுபவத்தைச் சிறிது நேரம் கூட நிலை நிறுத்த நாம் முயற்சி செய்வதில்லை. எந்த விதமான அசைவோ எண்ணமோ இல்லாத 'ஞப்தி' என்ற இந்தத் தூய உணர்வே பின்னர் ப்ரக்ஞையாக - புற உணர்வாக வெளிப்படுகிறது. யார் வேண்டுமானாலும் இந்த நிலையை அனுபவிக்க முடியும். (நிஸர்க்கதத்த மஹராஜ் இந்த இரண்டு நிலைகளுக்கும் உள்ள வித்தியாசத்தைத் தெளிவுபடக் குறிப்பிடும் போது, ''ஞப்தி - அதாவது, தூய உள்ளுணர்வு ஒரு பொருளைப் பற்றும் போது அதுவே 'பிரக்ஞை' - அதாவது, புற உணர்வாகிறது,'' என்று கூறுகிறார்.)



# 58 வைகுண்டவாசர்



நாம் அடுத்து காணப்போகும் தொண்டர்களில் வைகுண்டவாசர் மற்றொரு எளிமையான மனிதர். அவர் தொடர்பு கொண்டிருந்த ஸாதுக்களின் வாழ்வு மற்றும் அவர்கள் அளித்த சாஸ்திர விளக்கங்களால், குரு சேவை அல்லது தொண்டு ஒருவரை நிச்சயமாக ஆன்மீக நிறை நிலைக்கு அழைத்துச் செல்லும் என்பதை அவர் தெளிவாகப் புரிந்து கொண்டிருந்தார். தன்னை முழுமையாக அர்ப்பணித்துக் கொள்ளும் பொருட்டு ஒரு குருவைத் தேடி அலைந்து கொண்டிருந்தார். கல்வியறிவற்றவராக இருந்ததால், சுய முயற்சியினால் சாஸ்திர அறிவை அவரால் பெற முடியவில்லை. இதன் பொருட்டே பகவான் ரமணர் அவரைத் தன்னிடம் ஈர்த்துக் கொண்டார். பகவானுடைய ஒரே ஒரு பார்வை, 'தனது குரு பகவானே' என்பதை வைகுண்டவாசருக்கு முற்றிலும் தெளிவாக உணர்த்தியது. இதை அவருடைய வார்த்தைகளிலேயே கூறவேண்டுமானால், "மனித உருவில் இருந்த கடவுளே பகவான். அவரது தனிப்பட்ட உதவியாளராக நான் தேர்ந்தெடுக்கப்பட்டபோது நான் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவில்லை. நான் தொண்டு செய்வது கடவுளுக்கேயன்றி மனிதப் பிறவியான ஒருவருக்கன்று, என்பதை ஒவ்வொரு நொடியும் நான் உணர்ந்தேன்."

பகவானைக் கடவுளாகவே கண்டார் வைகுண்டவாசர் என்ற போதும், அவர்களிடையே இருந்த இணக்கம், வேடிக்கையான நிகழ்வுகளுக்கும் இடமளித்தது. ஒரு நாள் அதிகாலையில் பழைய ஹாலில் தரையில் கிடந்த பாயைச் சுருட்டும் போது வைகுண்டவாசர், அதனடியில் ஒரு பாம்பு சுருண்டு கிடப்பதைக் கண்டு, "பகவானே! பாம்பு! பாம்பு!" என்று அலறினார். பகவான் பாம்பைப் பார்த்து விட்டுப் பின், அவரை அமைதியுறச் செய்யும் பொருட்டு, "ஏன் பயப்படுகிறீர்கள் வைகுண்டவாசரே? உங்களுடைய படுக்கை உங்களைத் தேடி வந்துள்ளது. அவ்வளவுதானே!" என்று அமைதியாகப் புன்னகைத்தார். வைகுண்டத்தில் வசிப்பவரான பகவான் விஷ்ணு சயனிக்கும் படுக்கையான ஐந்து தலைகளையுடைய ஆதிசேஷனையே பகவான் இவ்வாறு வேடிக்கையாகக் குறிப்பிடவும் வைகுண்டவாசரின் பயம் உடனே மறைந்தது.

நான் வைகுண்டவாசரோடு சற்று நெருங்கிப் பழக ஆரம்பித்தபோது, 'பகவான் உங்கள் மீது அருளைப் பொழிந்தது குறித்து எனக்குச் சில சம்பவங்களைக் கூறமுடியுமா?' எனக் கேட்டேன். அதற்கு விடையாக அவர், "ஒரு நாள் நள்ளிரவு ஒரு மணிக்குப் பகவான் ஆச்ரமத்திலிருந்து வெளியே வந்து, மலையை நோக்கிச் செல்வதைக் கண்டு அவரைப் பின் தொடர்ந்தேன். மிகவும் இருட்டாக இருந்ததோடு எனக்கும் பகவானுக்குமிடையே மணல் திட்டாகவும் இருந்ததால் நான் பகவான் சென்ற பாதையிலேயே என் முழு கவனத்தையும் செலுத்தினேன். திடீரென்று மரத்தாலான பாதரட்சைகளின் ஒலி என்னைச் சிறிது சிறிதாக நெருங்கி வந்து, பின் பலமாக ஒலித்துவிட்டு என்னைத் தாண்டிச் சென்று விட்டதாகவும் உணர்ந்தேன். ஒலியை மட்டுமே என்னால் கேட்க முடிந்ததே தவிர, யாரையும் காண முடியவில்லை. கண்களுக்குப் புலப்படாத ஒரு ஸித்தபுருஷர் மலைமீது வசிப்பதாகவும், அவர் அருணாசலமேயென்றும், பகவான் ஏற்கனவே கூறியிருந்தது எனக்கு நினைவிற்கு வரவே பணிவுடன் கூடிய அச்சத்தால் நான் உறைந்து போனேன்; உடல் வியர்த்து விட்டது. பின் பகவான் என்னைப் பார்த்து, "ஓ! நீங்கள் அந்த ஒலியைக் கேட்டு விட்டீர்களா?

**பகவான் வைகுண்டவாசரின் கையைப் பிடித்துள்ளார். குழந்தை டாக்டர் T.N. கிருஷ்ணசாமியின் மகன் – ரமணா, ஏக்நாத் ராவ் மற்றும் அம்ருதநாத யதீந்திரர் ஆகியோர்**

மலைமேல் வாழும் அந்த ஸித்தபுருஷர் வேறு யாருமன்று. அருணாசலமே தான். அவரை எளிதில் காணமுடியாது. அவர் நடந்து வந்த ஒலியைக் கேட்க முடிந்தது உங்கள் பாக்கியம் எனக் கூறி விளக்கினார் பகவான்," என்றார் வைகுண்டவாசர்.

இந்த பக்தர்கள், பகவானுக்கு உடலளவில் தொண்டாற்றியவர்கள் மட்டுமல்ல. பகவானுடைய ஆசிகளை முழுவதுமாகப் பெற்றுத் தங்களுள்ளே இருந்த பூரண நிலையை மீண்டும் அடைந்தவர்களும் ஆவர்.





ஆச்ரமக் கிணறு அருகே நடந்து செல்வது (இடம் – வலம்) வைகுண்டவாசர், ஸ்ரீ பகவான்,
டாக்டர் எம். அனந்தநாராயண ராவ்

# 59 டாக்டர் அனந்த நாராயண ராவ்



பகவான் ஒரு முறை, 'இந்த பௌதிக சரீரம் விழுந்து போக வேண்டும் என்றால், அது ஏதாவதொரு நோய்க்கு ஆளாக வேண்டும்' என்று குறிப்பிட்டுள்ளார். இடது கைமுட்டியில், மிகுந்த வேதனையைத் தரக்கூடிய ஸார்க்கோமா என்ற ஒருவகைப் புற்றுநோயினால், பகவானுக்கு பாதிப்பு ஏற்பட்டது. ஒரு விதத்தில் இதுவே அவர் சரீரத்தை விடுவதற்குக் காரணமாக இருந்தது.

பகவானுடைய அவதார லீலா வினோதத்தில் கடைசி கட்டமாக அவர் சரீரத்தை விட வேண்டிய காட்சி நிகழ வேண்டியிருந்ததால், சிறந்த மருத்துவ நிபுணர்களையெல்லாம் அவர் தன்னிடம் ஒரு சேரக் கொண்டு வர வேண்டிய அவசியம் இருந்தது. அவர்களையெல்லாம் பகவான் எவ்வாறு ஈர்த்தார் என்பது மிகவும் வியப்பூட்டும் விஷயம்.

டாக்டர் M. அனந்த நாராயணராவ் சிறந்த கால்நடை மருத்துவ நிபுணர். 1929-ல் மும்பையிலிருந்து ரயிலில் பிரயாணம் செய்து கொண்டிருந்த போது, அடுத்த ரயில் நிலையத்தில் இறங்க வேண்டிய நிலையில், உடனிருந்த சக பிரயாணி ஒருவர் பகவானுடைய புகைப்படத்தைக் காட்டி, தென்னிந்தியாவில் திருவண்ணாமலையில் வாழும் இவர் ஒரு பெரிய மஹர்ஷி என்று கூறி அவரிடம் அதைக் கொடுத்தார். டாக்டர் ராவ், மஹான்களுக்கும் ஸாதுக்களுக்கும் மிகுந்த மதிப்புக் கொடுப்பவர் என்பதால், அந்தப் படத்தை நன்றி உணர்வுடன் பெற்றுக் கொண்டார். 1930-ல் மேல்படிப்புக்காக லண்டன் சென்ற அவர் அந்தப் புகைப்படத்தைப் பற்றி முற்றிலுமாக மறந்து விட்டார் என்ற போதும், பகவான் அவரை மறக்க விடுவாரா என்ன? 1932-ல் தென்னிந்தியாவில் மருத்துவ ஆராய்ச்சி செய்வதற்காக அரசாங்கத்தால், டாக்டர் ராவ் நியமிக்கப்பட்டார். தென்னகம் வந்தபோது, ரயிலில் தனக்குக் கொடுக்கப்பட்ட பகவானது அந்தப் புகைப்படம் பற்றிய நினைவு வரவே, தன் மனைவியிடம், 'நாம் ஒரு மஹானை சந்திக்கப் போகிறோம்' என்று கூறினார். திருவண்ணாமலைக்கு வரும் போது அவரது மனைவியும், அவர் நண்பர் டாக்டர் சிவராவ் என்பவரும் உடன் வந்தனர். இந்த நண்பரும் பிற்காலத்தில் பகவானுக்கு சேவை செய்தார்.

டாக்டர் அனந்த நாராயண ராவ் ஸாதுக்களோடும், மஹான்களோடும் இடையறாத் தொடர்பு கொண்டிருந்தவர் என்ற போதும் 1932-ம் ஆண்டு அவர் பகவானைக் கண்ட போது, "ஸத்குரு, ஜீவன் முக்தர், ஸித்த புருஷர் மற்றும் ஞானி ஆகியவர்களைப் பற்றி சாஸ்திரங்கள் விளக்கியுள்ளபடி, மனித உருவில் இறைவன் இங்கு உள்ளார்," என்ற எண்ணம் மிகத் தெளிவாக அவர் மனதில் பளிச்சிட்டது. இயன்ற போதெல்லாம் ஆச்ரமத்துக்கு வரத் துவங்கிய டாக்டர் ராவ், இரண்டாவது முறை வந்த போது மஹர்ஷியின் தெய்வீகத் தன்மையைப் புரிந்து கொண்டதோடு, அவரது உபதேசமான ஆத்ம விசாரம் பற்றிய உள்ளுணர்வும் அவருக்கு ஏற்பட்டது. பகவானுடைய ஸாந்நித்தியத்தில் அமர்ந்திருந்த போது எவ்வித முயற்சியுமின்றி அமைதியான நிலையை அவர் அடைந்தார். ஆத்மானந்தம், ஆத்மானுபூதி என்ற நிலை பற்றி அவர் என்னவெல்லாம் புத்தகங்களில் படித்திருந்தாரோ அந்த பேரமைதியை, பகவான் முன் அமர்ந்திருந்ததாலேயே அவரால் அனுபவிக்க முடிந்தது. இந்த அனுபவத்திற்குப் பிறகு இடைவிடாது அவர் ஆத்ம விசாரத்தைப் பழகத் தொடங்கினார்.

டாக்டர் ராவ் அவர்கள் 1943-ல் ஆச்ரமத்திற்கு எதிராக ஒரு வீடு அமைத்து வாழ்ந்து வந்தார். குறுகிய காலத்தில் கனிகளை நல்கக்கூடிய விசேஷமான பழ மரங்களைக் கொண்ட தோட்டம்

ஒன்றை, வீட்டின் எல்லைக்குள்ளேயே பராமரித்து வந்தார். அந்தந்தப் பருவத்தில் பழுக்கும் முதல் கனிகளை எப்போதும் அவர் பகவானுக்கு அர்ப்பணிப்பார். பகவான் அந்தப் பழத்தை சிறு துண்டுகளாக்கி ஒரு துண்டைத், தான் எடுத்துக் கொண்டு மற்றவற்றை அங்கு கூடியிருக்கும் பக்தர்களுக்கு விநியோகிக்குமாறு கூறி, டாக்டர் ராவிடம் கொடுப்பார். மூன்று ஆண்டுகளுக்கு இவ்வாறு விநியோகிக்கப்பட்ட பழங்களில், பிரஸாதமாக ஒரு துண்டு கூட டாக்டருக்குக் கிடைக்கவில்லை என்பது வியப்பிற்குரியது. இம்மாதிரியான ஒரு சந்தர்ப்பத்தில் பழங்களை விநியோகித்தப் பின் காலித் தட்டோடு பகவானிடம் அவர் வந்த போது, ‘எனக்கு மட்டும் பகவானுடைய பிரஸாதம் கிடைக்காதது ஏன்?’ என்று ஏக்கத்தோடு எண்ணிக் கொண்டார். உடனே பகவான் “அனந்தநாராயண ராவ்! இங்கு வாரும்! இத்தனை ஆண்டுகளாக நீர் அனைவருக்கும் பழங்களை விநியோகம் செய்தீரேயன்றி உமக்கு ஒரு துண்டு பழம் கூடக் கிடைத்ததில்லை என்பதை நான் கவனித்தேன்,” என்று கூறிவிட்டு, தனக்கென வைத்திருந்த பழத்துண்டினருகிலிருந்த மற்றொரு துண்டை எடுத்து “இந்தாரும்! உமக்கென ஒரு துண்டை நான் எடுத்து வைத்திருக்கிறேன். எடுத்துக் கொள்ளும்!” என்று கூறவும் டாக்டர் ராவ் மெய் சிலிர்த்துப் போனார். அந்த நிகழ்ச்சியை நினைவு கூர்ந்த அவர், “பகவான் தனது கையாலேயே அதைக் கொடுத்தார். நான் அதை வாங்கி உண்டேன். அது ஒரு ஆன்மீக அனுபவமாக இருந்தது. ஏனென்றால் பகவான் என்னை அந்த நிலையில் இருத்தினார்,” என்றார்.

ஸாதகர் என்ற முறையில் மேற்கூறிய நிகழ்ச்சியின் மூலம் டாக்டர் ராவ் இரண்டு பாடங்களைக் கற்றார். முதலாவதாக ஒரு ஸாதகர் எதுவும் தனக்கு வேண்டும் என்ற எண்ணமின்றி, அனைத்தையும் பிறருக்குக் கொடுக்க முடிய வேண்டும். அடுத்ததாக ஸத்குருவின் அருளுக்காகக் காத்திருக்க வேண்டும். இந்த இரண்டு ஆன்மீக போதனைகளையும் உள்வாங்கித் தன்னுடையதாக்கிக் கொண்ட பின்னர், “பகவானே! நான் உங்களுக்குத் தனிப்பட்ட முறையில் தொண்டு புரிய வேண்டும்,” என்று தனக்குள் பிரார்த்தித்துக் கொண்டார். ஒரு மஹானின் பாதங்களைத் தொடுவதால் ஒருவர் அளவிலா ஆன்மீக உயர்வைப் பெறலாம் என இந்து சாஸ்திரங்கள் கூறுவதால் ‘பகவானுடைய பாதங்களைப் பிடித்து விட தனக்கு சந்தர்ப்பம் அமைய வேண்டும்’ என்று மனதில் எண்ணியே இவ்வாறு பிரார்த்தித்தார். 1948-ல் அவரிடம் நிரஞ்ஜனானந்த ஸ்வாமி, “பகவானுடைய தனிப்பட்ட உதவியாளராக உங்களால் பணியாற்ற முடியுமா?” என்று கேட்ட போது அந்த வாய்ப்பும் டாக்டர் ராவிற்கு வந்து அமைந்தது அவருடைய பாக்கியமே. தனிப்பட்ட உதவியாளர் என்ற முறையில் பகவானுக்குக் கைகால்களைப் பிடித்து விடுவது, அவருடைய கடமையாக இருக்கும் என்று கூறப்பட்ட போது, டாக்டர் அனந்த நாராயண ராவின் மனம் ஆனந்தக் கூத்தாடியது.

பகவான் அனைத்தையுமே சமமாகப் பகிர்ந்து கொடுப்பது போன்று தனது சரீரத்தைப் பிடித்து விடுவதிலும், ஒரு தொண்டருக்கு வலது கை, மற்றொருவருக்கு இடது கை என்று பகிர்ந்து கொடுத்தார். பகவானின் இத்தகைய சிறிய செயல்கள் கூட முக்கியத்துவம் வாய்ந்தவை என டாக்டர் ராவ் உணர்ந்து கொண்டதால், “பகவானது ஒவ்வொரு வார்த்தையும் ஒவ்வொரு அங்க அசைவும் கூட மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவை. கண நேரம் இருந்து மறையும் அனுபவங்களன்று, நிலைத்து நிற்கும் ஸத்தியமாக அவை திகழும்,” என்று கூறியுள்ளார். டாக்டர் ராவிற்கு தனது கால்களைக் கொடுக்காமல், இடது கையைப் பிடித்து விடும் பணியை பகவான் கொடுத்ததற்கும் ஒரு காரணம் உள்ளது. “இதிலும் கூட பகவானுடைய கருணை வெளிப்பட்டது. ஏனென்றால் புற்று நோயினால் பாதிக்கப்பட்ட கை அதுவே. நான் தொண்டாற்றும் வகையில் பகவான் தனது இடது கையை

**(இடம் – வலம்) சுந்தரம் (ஆச்ரமத்தின் முன்னாள் தலைவர்), டாக்டர் அனந்தநாராயண ராவ், T.N. வேங்கடராமன்**

எனக்குத் தந்ததால் இறுதி நாள் வரை, பாதிக்கப்பட்ட கையில் என்னால் கட்டுப் போட முடிந்தது,'' என்று டாக்டர் ராவ் குறிப்பிட்டார்.

பகவானுடைய இறுதி மூச்சுவரை உடன் இருக்கும் பேறு பெற்றார் டாக்டர் ராவ். எனக்கும் பகவானுடைய ஸாந்நித்தியத்தில் இருக்கும் பேறு கிட்டியது. கடைசி நொடிகளில் பகவானுக்குப் பிராண வாயு கொடுக்க வேண்டும் என்பதற்காக அறையிலிருந்த அனைவரையும் வெளியில் செல்லுமாறு மருத்துவர்கள் கூறிய போது, பகவானுடைய சகோதரரான எனது பாட்டனார், எனது தந்தை, பகவானின் தங்கை இவர்கள் உட்பட அனைவரும் வெளயேறினர். நிர்வாண அறையின் வாயிலில் நான் நின்று கொண்டிருந்தேன். T. P. ராமசந்திர ஐயர் என்னிடம் 'இங்கேயே இரு' என்று கூறியதால், இறுதியில் பகவானிடமிருந்து வெளிப்பட்ட ஜோதியை, அறையிலிருந்த டாக்டர் அனந்த நாராயண ராவ், டாக்டர் R. சுப்ரமணியன், டாக்டர் T. N. கிருஷ்ணஸ்வாமி இவர்களோடு நானும் காணும் பேறு பெற்றேன்.





(இடம் – வலம்) S. துரைஸ்வாமி ஐயர், TPR, ஸ்ரீ பகவான், டாக்டர். சுப்பிரமணியன் (ஸாது ப்ரஹ்மண்யம்)
(இரண்டாம் வரிசை) நிரஞ்ஜனானந்த ஸ்வாமி, டாக்டர். சங்கர் ராவ், சிவானந்த ஸ்வாமி, டாக்டர். அனந்தநாராயண ராவ்



பகவானுக்கு ஏற்கனவே சிறந்த டாக்டர்களால் நான்கு முறை அறுவை சிகிச்சை செய்யப்பட்டிருந்தது. அத்துணை டாக்டர்களும் எப்படி வந்து சேர்ந்தார்கள் என்று சிந்திக்கும் போது, அது பகவானுடைய வழிகாட்டுதலின் சிறப்பை உணர்த்துவதாக உள்ளது. ஸந்நியாசத்திற்குப் பிறகு ஸாது ப்ரஹ்மண்யம் என்று அழைக்கப்பட்ட டாக்டர் சுப்ரமணியன் இந்திய அரசின் வேண்டுகோளுக்கிணங்கி 1930-ல் வெளி நாடுகளுக்குச் சென்றார். இந்தக் குறிப்பிட்ட காலத்தில், பகவானுடைய தீவிர பக்தையான அவருடைய தாயார் அருணாசலத்தில் தங்கியிருந்தார். தனது பணிகளை முடித்துக் கொண்டு வெளிநாட்டிலிருந்து திரும்பி வந்த டாக்டர் சுப்ரமணியன், தனது தாயாரைக் காண்பதற்காக அருணாசலத்திற்கு வந்தார். அறிவிற்கு முக்கியத்துவம் கொடுத்த அவர், வந்தவுடன் முதன் முதலில் ஆச்ரமப் புத்தகச் சாலைக்குச் சென்று அங்கு கிடைத்த புத்தகங்கள் அனைத்தையும் வாங்கினார். ஹாலுக்குள் நுழைந்து, வாங்கிய புத்தகங்களை பகவான் முன் வைத்து, அவரை ஸாஷ்டாங்கமாக வணங்கினார். ஒவ்வொரு புத்தகத்தையும் பகவான் குனிந்து தொட்டார். அவற்றை டாக்டர் சுப்ரமணியனிடம் மீண்டும் கொடுக்கும் முன் பகவான், அவருடைய தாயாரை நோக்கி “இவர் உங்களுடைய பிள்ளையா?” என்று வினவி பின் டாக்டர் சுப்ரமணியனை பார்த்தார். வெளிநாடுகளிலிருந்து அப்போது தான் திரும்பி வந்தவரும், ஆன்மீகத்தில் எந்த நாட்டமும் இல்லாதவருமான அந்த மருத்துவருக்கு பகவானுடைய அருட்பார்வை ஒன்றினாலேயே ‘தன்முன் இருப்பவர் இறைவனும் ஸத்குருவுமாவார்’ என்ற ஞானோதயம் ஏற்பட்டது. அதன் பின்னர் பகவானைக் காண்பதற்கு அவர் ஒவ்வொரு வாரமும் வரத் துவங்கினார்.

டாக்டர் சுப்ரமணியனுடன், குறிப்பாக அவர் ஸந்நியாசம் ஏற்ற பின்னர், நான் நெருங்கிப் பழகலானேன். பகவானுடைய அந்த ஒரு பார்வை தன்னை அடியோடு மாற்றிவிட்டதாக அவர் என்னிடம் தெரிவித்தார். பகவான் முன் வைக்கப்பட்டு அவரால் தொட்டு ஆசீர்வதிக்கப்பட்ட அந்தப் புத்தகங்கள் டாக்டர் சுப்ரமணியனுக்கு விலை மதிப்பற்றவையாக ஆயின. அதன் பின்னர் அவர் அந்தப் புத்தகங்களை, படிப்பதற்குரிய சாதாரணமான புத்தகங்கள் எனக் கருதாது, மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவை என்று உணர்ந்து, அவற்றைத் தனது பூஜை அறையில் வைத்து, வெறும் சடங்காக மட்டும் அல்லாமல், மிகுந்த பக்தியோடு பூஜித்தார். படிப்பதற்காக அதே புத்தகங்களை மீண்டும் தனியாக வாங்கி, ஆத்ம விசாரம் செய்ய ஆரம்பித்தார்.

‘நீங்கள் பகவானிடம் எப்போதாவது கேள்விகள் கேட்டதுண்டா?’ என்று ஸாது ப்ரஹ்மண்யத்திடம் நான் கேட்ட போது, அவர் என்னை நோக்கி, என் முதுகில் தட்டிக் கொடுத்து “கணேசன்! அதற்கு அவசியமே இருக்கவில்லை. பகவானுடைய அந்த ஒரு பார்வை என்னை ஆத்மானந்த நிலையில் இருத்தியது. அதில் உறுதியாக நிற்பதற்கும் அந்நிலையிலிருந்து நழுவாதிருப்பதற்கும் எனக்கு அவருடைய புத்தகங்கள் இருக்கின்றன. அந்த நிலையை அடைவதற்குத் தேவையான அறிவு பூர்வமான விளக்கங்களை இவை நமக்குத் தருகின்றன. அந்த நிலையை பகவான் ஏற்கனவே எனக்களித்திருந்தார். அதனால் அந்தப் பார்வையும் இந்தப் புத்தகங்களும் மட்டுமே எனக்குப் போதுமானவையாக உள்ளன. என் மனதில் சந்தேகங்கள் எதுவும் எழவில்லை,” என்று விடையளித்தார். அந்த அனுபவத்திற்குப் பிறகு அரசின் சுகாதாரத் துறையில்

மிக உயர்ந்த பதவியான மருத்துவ சேவை மற்றும் பொது சுகாதார இயக்குநராக டாக்டர் சுப்ரமணியன் நியமிக்கப்பட்டார். இந்நிகழ்ச்சி பற்றி எண்ணி, அடிக்கடி சிரித்தபடி அவர் கூறும்போது “கவலைப் படாதே. மிக உயர்ந்த ஆன்மீக நிலையை மட்டுமல்லாமல் உனது உடல், மனத் தேவைகளையும் பகவான் கவனித்துக் கொள்வார்,” என்று தனது அபிப்ராயத்தைத் தெரிவிப்பார்.

தொடர்ந்து, “அந்தப் பதவியை பகவான் எவ்வளவு அழகாக எனக்குப் பெற்றுத் தந்தார்! அரசாங்கத்தில் பெரிய பதவியில் நான் இருந்தபடியால், சென்னையிலிருந்த பல மருத்துவமனைகளிலிருந்தும் பகவானது சிகிச்சைக்குத் தேவையான கருவிகளை என்னால் வரவழைக்க முடிந்தது. ஏப்ரல் 1949-ல் அறுவை சிகிச்சை மூலம் பகவானுடைய கையிலிருந்த பிளவை நீக்கப்பட்ட பின்னர், மீண்டும் மற்றொரு சிறிய கட்டி தோன்றிய போது, பிரத்தியேகப் பயிற்சி பெற்ற நிபுணர் யாரையாவது பகவானுக்குச் சிகிச்சையளிக்கச் சென்னையிலிருந்து அழைத்து வருமாறு S. துரைஸ்வாமி ஐயர் என்னைக் கேட்டுக் கொண்டார். நான் உடனே செயல்பட்டு எனது நெருங்கிய நண்பரும் சுகாதார அமைச்சருமான டாக்டர் T. S. S. ராஜனை அணுகிய போது, அவர் எனக்குப் பூரண சுதந்திரம் அளித்துத் தேவையான நடவடிக்கைகளையும் எடுக்கும்படி கூறினார். அரசாங்க விதிமுறைகளுக்கு உட்பட்டு என்னால் செயல் பட முடிந்தது. அந்தக் கால கட்டத்தில் புற்று நோய்க்குக் கொடுக்கப்பட்ட சிறந்த சிகிச்சையான ரேடியம் சிகிச்சை ஆச்ரமத்திலேயே பகவானுக்குக் கொடுக்கப்பட்டது. மிகச் சிறந்த அறுவை சிகிச்சை நிபுணர்கள் வரவழைக்கப்பட்டனர். எனது ஒரே தெய்வமும் குருவுமான பகவானுக்கு இத்தகைய தொண்டு புரியும் பேறு எனக்குக் கிட்டியது, நான் செய்த புண்ணியத்தின் பயனே. 1950-ம் ஆண்டு ஏப்ரல் 14-ம் தேதி பகவானது மஹா ஸமாதி வரை இந்த சேவையை என்னால் தொடர முடிந்தது. பகவான் எப்போதுமே கருணையோடு கூடியவர். அவருக்குத் தொண்டு செய்ய வேண்டும் என்ற எனது பிரார்த்தனைக்குச் செவி சாய்த்து



**ஸ்ரீ பகவானின் கடைசி புகைப்படம், 'நிர்வாண அறைக்குள்' (அவரது மகாநிர்வாணத்திற்கு பத்து நாட்களுக்கு முன்)**

எனக்கு வாய்ப்பளித்ததோடு அவரது இறுதி மூச்சுவரை தொண்டாற்றும் பாக்கியத்தையும் எனக்கு அருளினார்,'' என்றுரைத்தார். இதை கூறியபோது அவருடைய உணர்ச்சிகள் பொங்கி வந்ததால், அவரால் மேலே தொடர முடியவில்லை.

பகவான் சரீரத்தைத் துறந்த பின்னர், டாக்டர் சுப்ரமணியன் தனது பணியிலிருந்து ஓய்வு பெற்று ஆத்ம விசார ஸாதனைக்கு தனது வாழ்க்கையை அர்ப்பணித்தார். தனக்கென அவர் கட்டிக் கொண்ட ரமண குடீரத்தினுள் நான் முதன் முதலில் நுழைந்த போது, ''கணேசா! வா! வா!'' என்று என்னை வரவேற்று பூஜையறைக்கு அழைத்துச் சென்று அங்கு ஸாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்யுமாறு பணித்தார். நான் எதற்கு வணங்கினேன் தெரியுமா? ஆம்! பகவான் தொட்டு ஆசீர்வதித்து அவருக்களித்த அந்தப் புத்தகங்களுக்குத் தான்! பகவானது மஹா ஸமாதிக்கு இரண்டு தினங்களுக்கு முன்னர் பகவானின் தீவிர பக்தர்கள் பலர் முருகனாரின் தலைமையில் பகவானை அணுகினர். பகவானுடைய மறைவிற்குப் பின்னர், தாங்கள் எவ்வாறு வாழ வேண்டும் என்பது குறித்து அவர் கூற வேண்டும் என்று விரும்புவதாகப் பக்தர்களின் சார்பில் முருகனார் அவரை வேண்டிக் கொள்ள எண்ணினார். இந்தக் கருத்தை மேற்கூறியபடி விளக்கமாகக் கூற இயலாமல், ''பகவானே! தயவு செய்து எங்களுக்கு ஆசி வழங்குங்கள்!'' என்று மட்டுமே பிரார்த்தித்தார். அவர்கள் என்ன கூற விரும்புகிறார்கள் என்று பகவானுக்குத் தெரியாதா? அழகிய புன்னகையை உதிர்த்து 'உபதேசத்தைக் கடைபிடியுங்கள்' என்று மட்டும் அவர் கூறினார். தன்னுடைய உபதேசம் என்று கூறாததோடு, எந்த உபதேசம் என்றும் அவர் தெரிவிக்கவில்லை. 'உபதேசத்தைக் கடைபிடியுங்கள்' என்று மட்டுமே கூறினார்.

அவ்வாறென்றால் நாம் எதற்காகக் காத்திருக்கிறோம்? அவருடைய தொண்டர்களைப் போன்று நாமும் அவரைச் சேர்ந்தவர்கள் என்பதால் பகவான் நம் அனைவரையும் ஆன்மீகத்தின் உச்சிக்கு அழைத்துச் சென்று விடுவார். கடவுளுக்கோ ஸத்குருவுக்கோ பாரபட்சமேதுமில்லை. தனக்குச் சிகிச்சையளித்த மருத்துவர்கள் அனைவருக்கும் அருளைப் பொழிந்தார் பகவான். யார் எந்த நிலையிலிருந்தாலும் பகவான் தனது உதவிக்கரத்தைத் தந்து அருளுவார். நம்மை ஆன்மீகத்தில் உயர்த்துவதற்காக சிகரத்திற்கே அழைத்துச் சென்று விடுவார். 'பகவான் நீட்டும் கரத்தைப் பற்றிக் கொள்ள நாம் தயாரா?' என்பது தான் கேள்வி.



# 61 யோகி ராமையா



'A Search in Secret India' என்ற தனது புத்தகத்தில் யோகி ராமையாவைப் பற்றிப் பால் பிரண்டன் எழுதியிருந்த அறிமுக உரையும், தொடர்ந்து அவரை மிகவும் புகழ்ந்து கூறியிருந்ததும் உலகெங்கிலுமுள்ள பகவானுடைய பக்தர்களிடையே அவரை மிகவும் பிரபலமாக்கியது. கீழ்க்காணும் இச்சம்பவம் நடந்தது 1930-ம் ஆண்டில். பால் பிரண்டன் யோகி ராமையாவின் குடிலுக்குள் நுழையப் போகும் தருணத்தில் படமெடுத்த நிலையிலுள்ள ஒரு நல்ல பாம்பை அங்கு கண்ட போது ஒரே சமயத்தில் அவருக்கு அச்சமும் அருவருப்பும் ஏற்பட்டது. உதவிக்கு யாருமில்லாமல் உறைந்து போய் குடிலுக்கு வெளியே பிரண்டன் நின்ற போது அங்கு வந்த, தோற்றத்தில் புத்தரைப் போன்றும் வாட்டசாட்டமாகவும் இருந்த ஒரு மனிதர் ஒரே பார்வையில் நிலைமையைப் புரிந்து கொண்டார். பாம்பை சமாதானப்படுத்தும் வகையில் இரு கைகளையும் மேலே தூக்கியவாறு குடிலுக்குள் அவர் நுழைந்தார். படமெடுத்த நிலையிலிருந்த பாம்பு, உயர்த்திய தன் தலையைத் தாழ்த்தி உள்ளே சென்ற மனிதனின் காலில் பணிந்தது. பின்னர் அவர் பாம்பின் வாலைக் குனிந்து தடவிக் கொடுக்கவும், அது நெளிந்தவாறு அறையை விட்டு வெளியேறியது. ஆச்சர்யத்தில் மூழ்கிய பால் பிரண்டன், "உங்களுக்குப் பயமாக இல்லையா?" என்று கேட்ட போது "நான் எதற்காகப் பயப்பட வேண்டும்? ஜீவராசிகள் அனைத்திடமும் அன்போடு கூடிய இதயத்தோடு வெறுப்பு ஏதுமின்றி நான் அதனருகில் சென்றேன்" என்று விடையளித்தார். அவருடைய செயல்களையும், சொற்களையும் கண்டு மெய்சிலிர்த்துப் போன பிரண்டன் அவர் யாரென்று வினவியபோது "யோகி ராமையா" என்ற பதில் வந்தது.

யோகி ராமையாவின் பெற்றோர் செல்வச் செழிப்போடு மிகுந்த பக்தி உடையவர்களாகவும் இருந்தனர். அதன் விளைவாக படிப்பில் கவனம் செலுத்துவதை விட, வாழ்க்கையில் நல்ல விஷயங்களை அனுபவிப்பதில் அவர் மிகுந்த ஆர்வத்தோடு இருந்தார். இறைவன் எவ்வாறு செயல்படுகிறான் பாருங்கள்! அவரது 18-வது வயதில், கபீர்தாஸர் எழுதிய ஒரு புத்தகத்தைப் படிக்க நேர்ந்தது. அந்தப் புத்தகத்தைப் படித்த போது, 'உலகம் ஸத்தியமல்ல' என்ற உண்மை ஒரு வெடி குண்டைப் போல அவரைப் பலமாகத் தாக்கியது. ஏனெனில், அதுவரை உலகம் ஸத்தியம் என்று அவர் நினைத்திருந்தார். கபீர்தாஸருடைய வரலாற்றையும், உபதேசங்களையும் படித்த பின்பு அவர் முற்றிலுமாக மாறிய நிலையில் எது உண்மை என்பதை அறியும் தாகத்தோடு குருவைத் தேடிப் புறப்பட்டார். ஒரு நாள் "உண்மையை அறிந்து கொள்ள வேண்டுமானால் தினமும் 5000 முறை ராம நாமம் ஜபி" என்று உபதேசித்த ஒரு குருவை அவர் சந்தித்தார். உண்மையை அறியும் தாகம் அந்த இளைஞனுக்கு மிகவும் தீவிரமாக இருந்ததால், "இந்த எண்ணிக்கைக்கும் அதிகமாக ஜபித்தால் என்னாகும்?" என்று கேட்டார். "அதற்கேற்றவாறு பலனும் அதிகமாக இருக்கும்" என்று குரு பதிலளித்தார். அதோடு நிறுத்தாமல் ராமையா "நான் இடையறாது ஜபம் செய்தால் என்ன நடக்கும்?" என்று கேட்டார். இளைஞனின் கேள்வியினால் புளகாங்கிதமடைந்த குரு பதில் கூறாமல் அவனை ஆறத்தழுவி ராம மந்திரத்தையும் உபதேசித்தார். அந்த நொடியிலிருந்து எந்தக் காரியத்தில் ராமையா ஈடுபட்டிருந்த போதும் இடைவெளி இன்றி மந்திர ஜபத்தை செய்து வந்தார். இதே சமயத்தில் மற்றொரு குரு ஹடயோகப் பிராணாயாமத்தின் மூச்சுப் பயிற்சிகளையும் அவருக்கு உபதேசித்தார்.



**மலையில் ஸ்ரீபகவானுடன் பக்தர்கள் குழு**
**யோகி ராமையா, வலப்புறத்தில் கடைசியாக நிற்பவருக்கு முன்னால் இருப்பது**

இவ்விரு ஸாதனைகளையும் தீவிரமாகப் பழகியதன் விளைவாக, உலகம் ஸத்தியம் அல்ல என்ற உண்மை அவருக்கு உறுதியானதோடு, மனதில் ஆழமாகவும் பதிந்தது.

இதன் பின்னர் காசிக்குச் சென்று தனது எஞ்சிய வாழ்க்கையை அங்கேயே கழிக்க ராமையா விரும்பினார். போகும் வழியில் மந்திரோபதேசம் செய்த அதே குருவை ராமையா சந்திக்க நேர்ந்தது என்றால் அது இறைவனுடைய இச்சையே! தான் காசிக்குச் செல்வதாக ராமையா அவரிடம் தெரிவித்த போது, "உனது கிராமத்திற்குத் திரும்பிச் செல்! உன்னுடைய தோட்டத்தில் இருந்தவாறே உனது ஸாதனைகளைத் தொடர்ந்து பழகி வா!" என குரு கூறவும் சிறிதும் தயக்கமின்றி ராமையா, குருவின் சொற்படி தனது ஸாதனைகளைத் தொடர்வதற்காக வீடு திரும்பினார். உரிய காலத்தில் பகவான் ராமருடைய தரிசனமும் அவருக்குக் கிடைத்தது. ஸாதனைகளை மேலும் தீவிரமாக்கிய பொழுது வெளித் தோற்றமாக இருந்த ராமனது உருவம் மறைந்து இதயத்தில் ஆத்மாவாக இறைவன் விளங்குவதை ராமையா உணர்ந்தார். 'காண்பவனும், காணப்படும் பொருளும் எவ்வித பேதமுமின்றி ஒரே வஸ்துவாக இருக்க முடியுமா?' என்ற கேள்வியைப் பல பண்டிதர்களிடமும் அவர் கேட்டார். காண்பவன் வேறு, காணப்படும் பொருள் வேறு என்று அவர்கள் கூறிய பதில் ராமையாவுக்குத் திருப்தி அளிக்காததால் தனது சந்தேகத்தை நிவர்த்தி செய்யக்கூடிய ஒருவரைத் தொடர்ந்து தேடிக் கொண்டிருந்தார். இந்தத் தேடலின் பயனாக 1930-களில் ரமணாச்ரமம் பழைய ஹாலுக்கு வந்து சேர்ந்தார். தன் மனதை விட்டு அகலாது துன்புறுத்திய 'காண்பவனும் காணப்படும் பொருளும் ஒன்றாக இருக்க முடியுமா?' என்ற கேள்வியை அங்கு எழுப்பவும், ஹாலில் அமர்ந்திருந்தவர்களுள் ஒருவரான காவ்யகண்ட முனிவர் "நிச்சயமாக முடியாது! காணப்படும் பொருளிலிருந்து காண்பவன் வேறு" என்று அவர் தந்த பதில் ராமையாவை வேதனையுறச் செய்ததால், அவர் பகவானை

நோக்கினார். காவ்யகண்டர் கூறியதை மறுத்து, “பார்க்கப்படும் இந்த உலகில் ஒரு சாதாரண மனிதனுக்குப் பார்ப்பவன் வேறு பார்க்கப்படும் பொருள் வேறு; ஆனால் ஸமாதியை அனுபவிக்கும் பொழுது அவை இரண்டும் இணைந்து ஒன்றாகி விடுகிறது” என்று பகவான் தெளிவு படுத்தினார்.

மேற்கூறிய பதில் ராமையாவின் சந்தேகத்திற்கு ஒரு முடிவு கட்டியதால் உடனேயே பகவானைத் தனது ஸத்குருவாக வரித்துக் கொண்டு, திருவண்ணாமலையிலேயே தங்குவதெனத் தீர்மானித்தார். ராமையா உண்மையான ஒரு யோகியாக வாழ்ந்ததால் பகவான் தனது கவனத்தை அவருக்கு அதிகமாகத் தந்தார். ஒரு நாளைக்குத் தனக்குத் தேவைப்பட்ட ஒரே வேளை உணவான பருப்பு வகைகளை, தானே பக்குவப்படுத்தி ராமையா காலை பத்து மணிக்கு உண்பார். எஞ்சிய நேரங்களில் பலாக்கொத்திலிருந்த ஒரு குகையில் தனது ஸாதனைகளைத் தொடர்வதிலோ அல்லது பகவான் முன் மணிக்கணக்காக அமர்வதிலோ செலவிடுவார். எந்த இடத்திலும், எந்த நேரத்திலும் பகவானோடு தடையேதுமின்றி இருப்பதற்கு அனுமதிக்கப்பட்டவர் அவர் ஒருவர் மட்டுமே. பகவானுடைய நேரடி உபதேசமான ஆத்ம விசாரத்தை அவர் விரும்பினார். பகவானும் அவரிடம் அன்பு செலுத்தினார். ராமையாவிற்குத் தனது தாய்மொழியான தெலுங்கு மட்டுமே தெரியுமென்பதால் அவருக்கு ஆத்ம விசாரத்தில் உதவி செய்வதற்காக பகவான் தன்னிச்சையாக உபதேச ஸாரம், உள்ளது நாற்பது இவையிரண்டையும் தெலுங்கில் மொழி பெயர்த்தார்.



பகவான், ராமையா இவர்களிடையே நடந்த அழகிய சம்பாஷணைகளில் சில "பகவத் வசனாம்ருதம்" என்ற நூலில் இடம் பெற்றுள்ளன :-

யோ. ரா: ஞானத்தின் பொருட்டு ஒருவன் ஒரு குருவை ஆசிரயிக்கிறான். குரு பிரஹ்மஸ்வரூபம், குணங்குறியற்றது, மாசற்றது, சலனமற்றதென்று அவனுக்கு உபதேசிக்கிறார். ஜீவ பாவத்திலிருந்துதானே குரு சீடனுக்கு உபதேசிக்கிறார்? பொய்யாம் தனித்தன்மையினின்று எழும் உபதேசம் எவ்வாறு மெய்யாம்?

பகவான்: குரு சீடனையோ, தன்னையோ, பிறரையோ ஆத்மாவுக்கன்னியமாகப் பார்ப்பதேயில்லை.

யோ. ரா: ஆம். ஆனால் சீடன் குருவை ஒரு தனிவியக்தியாகக் கருதித்தானே கேள்வி கேட்கிறான்?

பகவான்: ஆம். ஆனால் குருவுக்கு பேத புத்தி சற்றுமில்லை. எல்லோரும் ஆத்மஸ்வரூபமேயென்றுணராமையே சீடனது அஞ்ஞானம். ஆத்மாவுக்கு (தனக்கு) அன்னியமாக யாராவது இருக்க முடியுமா? தன்னையுணராமையாம் பிழையை சீடனுக்கு உணர்த்துங்கால், குருவே அப்பிழைக்கு இலக்காவாரா? பேத பாவம் சற்றுமற்றவரே குருவாவர். ஸாக்ஷாத்காரமெனப்படுவது என்ன? பகவானை நான்கு கைகளோடு சங்கு-சக்ர-கதாதாரியாக பார்ப்பதா? கடவுள் அவ்வாறு தோன்றினாலும் அதனால் சீடனின் அஞ்ஞானம் எவ்வாறு விலகும்? நழுவா அனுபவமே ஞானம். கடவுள் நித்யாபரோக்ஷர்; வடிவுற்று தோன்றி மறைபவர் அல்லர். தோன்றி மறையாது, மாறாது, என்றும் ஒரேத் தன்மையுடையதாயிருப்பதே அனுபவம் எனத்தகும்; அதற்கு மாறாகத் தோன்றுவது அஞ்ஞானமே. காணப்படுவன யாவும் பொய்த்தோற்றம். காண்பவனே என்றுமுளான். என்றுமுள்ளதே ஸத்யம். கோடி சூரியப்பிரகாசமாகத் தோன்றினாலும் திருசியம் திருசியமே. அதைக் காண்பதற்குக் கண்கள், மனம் முதலியன தேவைப்படுகின்றன. கருவிகரணாதிகளைக் கொண்டு காண்பதெதுவும் பிரத்யக்ஷமெனத் தகாது. என்றும் தானே தானாயிலகும் ஆத்மாவே பிரத்யக்ஷம். அதாவது அபரோக்ஷம். தேகாத்ம புத்தி மிக வலுத்திருப்பதால், கண்ணால் காணப்படுவதை மெய்யாகக் கருதுகிறோம். தோன்றி மறையாது என்றும் நிரந்தரமாயிலகும் தன்னை விட்டுவிடுகிறோம். யாவரும் தானாகவே இருப்பதாலேயே தன்னை அறிய வேண்டுமென யாருக்கும் தோன்றுவதில்லை. எல்லோரும் தன்னை உணர்ந்தவாறே இருக்கின்றனர். ஆயினும் அதை அடைய வேண்டும், இதை அடைய வேண்டுமென்னும் தப்பெண்ணத்தால் வருந்துகின்றனர். அவ்வெண்ணத்தால், அதற்கு வேண்டிய ஆற்றலை ஈசனிடம் வேண்டுகின்றனர். அதைப் பெற்று, உலகத்தை ஆட்டுவிக்கலாமென்றும் எண்ணுகின்றனர். அனைத்தையும் இயக்குவது ஒரே ஈசசக்தியே என்பதை மறந்து விடுகின்றனர்.

யோ. ரா: எப்போதும் ஸத்யத்தில் நிலைபெற்றிருப்பதால், பகவான் அதைப் பற்றி ஸர்வஸஹஜமாய்ப் பேசுவது இயல்பே. ஆனால் அந்நிலை நிற்றல் மற்றவர்களுக்கு எளிதன்று.

பகவான்: தான் இல்லையென்று சொல்வோர் யாரேனும் உளரா?

யோ. ரா: உள்ளது உள்ளபடி ஸத்யத்தை இவ்வாறுணர்த்துவோர் வேறெவரையும் நான் காண்கிலேன்.

பகவான்: உள்ளதை உள்ளபடி யுரைத்தல் ஓர் வியப்பா? எல்லோரும் என்றுமுள்ளதோர் பொருளாகத்தானே இருக்கின்றனர்.

"பகவானுடைய ஸாந்நித்தியத்தில் உங்களது மனநிலை எவ்வாறு இருந்தது என்று என்னிடம் கூறமுடியுமா?" என ஒரு முறை நான் கேட்டபோது, யோகி ராமையா, "பகவானுடைய ஸந்நிதி மிக சுலபமாகவும் முயற்சியின்றியும் மனதை அமைதியில் ஆழ்த்தக் கூடியது. நான் அம்மாதிரி தொடர்ந்து 3, 4 மணி நேரம் கூட ஸமாதியில் இருப்பதுண்டு. எப்போதாவது ஒரு உருவத்தை எடுத்துக் கொண்டு மனம் வெளியே வருவதை நான் உணர்வேன். ஆனால் அயராத அப்பியாசத்தாலும், ஆழ்ந்த தியானத்தாலும், அந்த உருவத்தை இதயத்தில் மீண்டும் நுழையச் செய்து, அதில் கலந்து விடுமாறு செய்வேன். எப்போது மனம் இதயத்தில் ஒடுங்குகிறதோ அப்போது ஆத்மானுபவம் ஏற்படுகிறது. அதன் விளைவு பேரமைதி," என்று விடையளித்தார்.

பகவானின் மஹா ஸமாதிக்குப் பின்னர் யோகி ராமையா ஆந்திரப்பிரதேசத்தில் நெல்லூருக்கருகில் அன்னரெட்டிப்பாலம் என்ற தனது கிராமத்தில் தங்கி, பெரும்பாலான நேரத்தை, தவம், யோகம், மௌனம் இவற்றில் கழிக்க முற்பட்டார். யோகி ராமையா ஸந்நிதியில் பலர் அமைதியை அனுபவித்தனர். அவர்களுக்கு ஆத்ம விசாரத்தைத் தவறாது போதித்ததோடு, பகவானுடைய வழியைப் பின்பற்றுமாறு அவர் அறிவுரையும் வழங்கினார். இறுதி நாட்களில் மிகவும் அமைதியாக இருந்த அவர் தனது வாழ்வின் கடைசி நிமிடம் வரை முழு உணர்வோடு இருந்தார். அப்போது அவருடன் இருந்தவர்கள் 'யோகி ராமையாவின் முகம் யோகத்தின் விளைவாக ஏற்படும் ஒளியை வெளிப்படுத்தியது' என்று என்னிடம் தெரிவித்தனர். அவரின் கடைசி மூச்சுவரை அவரின் உதடுகள் ரமண நாமம் ஜபித்த வண்ணம் இருந்தன. அவருடைய உடல் அடக்கம் செய்யப்பட்ட இடத்தில் ஒரு ஸமாதிக் கோயிலும் எழுப்பப்பட்டது. அப்போது முதல் அது பலருக்கு வழிபாட்டுத் தலமாகவும் திகழ்கிறது.



**யோகி ராமையா தங்கி இருந்த பாறை குகை**
**(B. V. நரசிம்ம ஸ்வாமியால் கட்டப்பட்டது)**



# 62 டாக்டர் M. R. கிருஷ்ணமூர்த்தி ஐயர்



ஆன்மீகத்தில் ஆழமாக மூழ்க வேண்டுமானால் அறிவு பூர்வமான திட நம்பிக்கைக்கு மேலாக, மேலும் சில விஷயங்கள் அவசியமாகின்றன. இந்தப் பிரயாணத்தில் முதன் முதலாகத் தேவைப்படுவது மிக அதிக அளவிலான பிரயத்தனம். ஏனென்றால் நீங்கள் அகமுகமாகும் வரை உங்களது குறிக்கோளை அடைவதற்கு, முடிவில்லாத பிரயாணத்தை மேற்கொள்ள வேண்டியிருக்கும். ஆனால் உள் முகமாகி விட்டால் நீங்கள் பிரயாணம் செய்ய வேண்டிய அவசியம் இல்லை. ஏனெனில் உங்களுள்ளேயே ஸத்தியம் உங்களுடைய ஆத்மாவாக விளங்குகிறது. எப்போதுமே அங்கு தான் இருந்தது. இப்போதும் அங்கு தான் இருக்கிறது. அந்த இடத்தில் காலம், இடம் அல்லது காரணம் இவற்றின் எந்தச் சலனமும் தேவையில்லை. நாம் எல்லோருமே வெவ்வேறு மதங்களைச் சார்ந்த மனிதர்கள். காரணங்களுக்கெல்லாம் இதுவே மூலவிதை. உறக்கத்தில் எதனுடனும் நம்மை ஐக்கியப்படுத்திக் கொள்ளாமல் நாம் நம்மை எவ்வாறு விடுவித்துக் கொள்கிறோமோ, அதே போல், விழிப்பு நிலையிலும் நம்மால் செய்ய முடியுமானால், அப்போது, அமைதி, சாந்தி, மௌனம் இவை தானாக மலரும். இடம் காலம், காரண காரியம் இவற்றுக்கு அப்பாலான இந்த நிலையில் இருப்பதற்கு, அகமுகமாக ஆழ்ந்து செல்வது அவசியத் தேவை.

பகவானின் துறவற பக்தர்களான B. V. நரஸிம்ம ஸ்வாமி, முருகனார், சாது நடனானந்தா, குஞ்சு ஸ்வாமி, விஸ்வநாத ஸ்வாமி இவர்களைப் பற்றியும் பெரிய பண்டிதர்களான காவ்யகண்ட கணபதி முனி, டாக்டர். மீஸ், க்ராண்ட் டஃப் டங்கன் கிரின்லீஸ், பானிங் ரிச்சர்ட்ஸன், முனகால S. வேங்கடராமையா, ஆர்தர் ஆஸ்போர்ன், மாரிஸ் ஃப்ரீட்மன், S. S. கோஹென் மற்றும் பலரைப் பற்றியும் அநேக புத்தகங்கள் எழுதப்பட்டுள்ளன. ஆனால் முற்றிலுமாக குடும்ப வாழ்க்கையில் மூழ்கிய சாதாரண கிருஹஸ்தரும் பகவானுடைய தீவிர பக்தருமான ஒருவரைப் பற்றி நாம் எப்போதாவதுதான் கேட்க முடிகிறது. பகவான் இவர்கள் அனைவரிடத்திலும் தனது அருளை சமமாகவேப் பொழிந்தார்.

குடும்பத்தில் ஆழ்ந்திருந்த பக்தர்கள் அவ்வளவாக பிரசித்தி பெறவில்லையென்பது விசித்திரமாக இருந்தாலும் உண்மை அதுதான். இதற்குத் தவம், துறவு, அறிவு இவற்றை வைத்தே ஆன்மீகத்தை அடையாளம் காட்டும் பாரம்பரிய இந்துவின் தவறான நோக்கே காரணமாக இருக்கலாம். உண்மையான அத்யாத்மத்தைச் சரியாகப் புரிந்து கொண்டிருந்தால் இத்தகைய பாகுபாடு வராது என்று நான் கருதுகிறேன். இதன் விளைவாக 1960-ல் நிரந்தரமாக ரமணாச்ரமம் வருவதற்கு முன்னரே துறவு வாழ்க்கை வாழ்பவர்கள் மட்டுமல்லாமல், குடும்பத்திற்கு முக்கியத்துவம் கொடுத்த பக்தர்களில் பலரையும் கூட நான் மிக உன்னிப்பாகக் கவனித்தேன். இந்த முயற்சியின் காரணமாக புறக்கணிக்கப்பட்டது போல் இருந்த சில பக்தர்களிடம் வேண்டுமென்றே நான் இணக்கம் கொண்டேன். இந்தச் சொல்லை நான் தெரிந்துதான் இங்கு உபயோகிக்கிறேன். அவர்களோடு எத்துணை அதிகமாகப் பழகினேனோ அதற்கேற்ப அவர்கள் மீது எனக்கிருந்த மதிப்பும், மரியாதையும், பக்தியும் கூடியது. அவர்கள் பகவானிடம் கொண்டிருந்த பலமான உறவுக்கும் பூரண சரணாகதிக்கும் நான் மதிப்புக் கொடுத்தேன். இந்தப் பக்தர்களிடம் பகவான் செலுத்திய அசாதாரண கவனத்தையும், அவர்கள் மீது பொழிந்த அருளையும் கண்டு நான் மெய்சிலிர்த்தேன். அவர்கள்

குடும்பப் பற்று உடையவர்களாகத்தான் இருந்தார்கள் என்ற போதும், அவர்களும் ஞானிகள் என்பதில் எனக்கு எள்ளளவும் சந்தேகம் இருக்கவில்லை. இடைவிடாமல் பகவான் ரமணரின் ஸங்கத்தில் இருக்கும் போது, ஒருவருக்கு ஏதாவது சந்தேகம் இருக்க முடியுமா? மேலை நாட்டுத் தத்துவ மேதை இம்மானுவேல் கான்ட் கூறியபடி, 'பச்சைக் கண்ணாடி அணிந்தால் எல்லாமே பச்சையாகத் தான் தெரியும்'. அதே போன்று அஞ்ஞானியானவன் எங்கும் அஞ்ஞானத்தையே காண்பான். ரமண பகவான், புத்தர், இயேசுநாதர் போன்ற மஹான்கள், எல்லோரையும் ஞானியாகவோ, தெய்வீகமானவர்களாகவோதான் கண்டனர். அவ்வாறிருந்தும் அஞ்ஞானிகளாகிய நாம், மேற்கூறிய மஹான்களைத் தவிர ஏனையோரை ஞானியாகக் காண்பதில்லை.

ஆரம்பகால பக்தர்கள் டாக்டர். M. R. கிருஷ்ணமூர்த்தி ஐயரைப் பொதுவாக ஆச்ரம டாக்டர் என்றே அழைத்து வந்தனர். தன்னுடைய மருந்துகளை ஒரு சிறிய மரப் பெட்டியிலிட்டு அதை ஒரு அலமாரியில் வைத்திருந்து பிற்காலத்திய ரமணாச்ரம மருத்துவமனைக்கு வித்திட்டவர் அவர். (இந்த மருந்து அலமாரியை ஆச்ரமத்தின் பழைய உணவுக் கூட வாயிலின் அருகில் இப்போதும் கூடக் காண முடியும்). தஞ்சாவூர் மாவட்டத்தில் மோண்டி என்ற ஊரைச் சேர்ந்த பிரபலமான குடும்பத்தில் பிறந்த Dr. M. R. கிருஷ்ணமூர்த்தி சிறந்த மகப்பேறு மருத்துவராக இருந்தார். தொழில் ரீதியாகப் புகழடைந்திருந்த அவர் பெரிய மனிதர்களுள் ஒருவராகக் கருதப்பட்டார். அவருக்குத் தீவிர ஆன்மீக நாட்டம் இருந்த போதும், தன்னுடைய முன்கோப குணத்தை அவரால் வெல்ல முடியவில்லை. 1927-ல் பகவானைச் சந்தித்த பிறகே அவருடைய உணர்ச்சிக் கொந்தளிப்பு அடங்கியது. முதன்முறையாக ஆன்மீக ஸாதனைகளில் அமைதியும் ஆறுதலும் அப்போதுதான் அவருக்குக் கிட்டியது. (பக்குவமான ஸாதகர்கள் பகவானிடம் வந்தது குறித்து நான் பெரு மகிழ்ச்சி அடைகிறேன். They just needed the right switch to be turned on. "ஸத்தியத்தின் வாயிலருகே நான் உன்னை அழைத்து வந்து விட்டேன். இப்போது நீதான் உள்ளே செல்ல வேண்டும்," என்று புத்தர் கூறியது போன்று உண்மையான, ஆன்மீகத்தில் முன்னேறத் தேவையான உந்துதலை பகவான் பழைய பக்தர்களுக்கு அளித்ததால்தான், சுதந்திர புருஷரான ரமணருக்கு இவர்கள் அனைவரும் ஆன்மீக அடிமைகளாக இருந்தனர். விடுதலைப் பெற்றவராக இருந்ததால் பகவான் அனைவருக்கும் விடுதலை அளித்தார். அதே சமயத்தில், அவர்கள் ஆன்மீக அடிமை என்னும் பாவத்திலேயே பகவானோடு பழகினார்கள்).

உணர்ச்சிக் கொந்தளிப்புகள் அடங்கிய பின்னர் கிருஷ்ணமூர்த்தி ஐயர் பகவானிடம் தவறாமல் வரத் துவங்கினார். அவருக்கு பகவானிடம் இருந்த இணக்கத்தின் காரணமாக, மனித உருவில் இருந்த ஸத்தியமாக தனது ஸத்குருவாக அவரைக் காணத் தொடங்கினார் கிருஷ்ணமூர்த்தி. 1933-ல் அவர் திருவண்ணாமலையில் நிரந்தரமாக வாழ முற்பட்டார். குடும்பஸ்தரானதால் ஊருக்குள் ஒரு வீட்டை வாடகைக்கு எடுத்துக் கொண்டார். "அந்த நாட்களில், அவருக்கு ஒவ்வொரு தினமும் பிரத்தியேகமான ஆன்மீக அனுபவத்தைத் தந்தது. ஆன்மீக ஸ்தலமான திருவண்ணாமலையில் 24 மணி நேரத்தையும் கழித்த அனுபவம் மட்டுமன்று அது; எனக்கு ஒவ்வொரு நொடியுமே ஆன்மீக அனுபவமாக இருந்ததால், அது மிகவும் விலைமதிக்க முடியாததாகவும் புனிதமாகவும் இருந்தது. மௌனமான சூரியனைப் போல் ஒளிர்ந்த பகவான் துருவ நட்சத்திரத்தைப் போன்று என் வாழ்க்கையில் ஒவ்வொரு நொடியிலும் வழி காட்டினார்," என டாக்டர் கிருஷ்ணமூர்த்தி கூறியதோடல்லாமல் தொடர்ந்து, "எனக்குச் சலிப்பே ஏற்படவில்லை. கடவுளேயான பகவான் ரமணர் எனக்களித்த விலை மதிக்க முடியாத பரிசாகவே நான் ஒவ்வொரு கணத்தையும் கருதினேன்," என்று கூறினார். இதைத் தவிர திருவண்ணாமலையிலும் சுற்று வட்டார கிராமங்களிலும் அயராமல் உழைத்துச் சுறுசுறுப்பாகவும், ஓய்வு ஒழிச்சலில்லாமல் இருந்த பிரபலமான டாக்டராகவும் அவர்

இருந்தார். ஆனால் பிரதி ஞாயிறுதோறும் மதியம் 2 மணிக்கு பகவானுடைய திவ்ய சரணங்களில் தியானம் செய்வதற்கு வந்து விடுவார். அதன் காரணமாக ஆச்ரமத்தில் உள்ளவர்கள் அவரை, 'ஞாயிறு டாக்டர்' என்றழைக்க ஆரம்பித்தனர். கிருஷ்ணமூர்த்தியைப் பார்த்தால் பகவானும் கூட மகிழ்ந்து, 'ஓ இன்று ஞாயிற்றுக் கிழமையா?' என்று கேட்பதுண்டு.

இயேசு நாதரைப் போன்றே தனது பக்தர்களை மிக மென்மையாக கவனித்துக் கொள்பவர் பகவான் ரமணர். அவர் கிருஷ்ணமூர்த்தி ஐயருக்கு மட்டுமல்லாமல் அவருடைய மனைவி சுப்புலக்ஷ்மியம்மாள் மற்றும் அவரது குடும்ப அங்கத்தினர்களுக்கும் அமைதியையும் ஆறுதலையும் அளித்தார். இதன் விளைவாக சுப்புலக்ஷ்மியம்மாளும் அவரது குழந்தைகளும் பகவானிடம் தங்களைப் பூரணமாக அர்ப்பணித்துக் கொண்டனர். பகவானைச் சந்திப்பதற்கு முன் அவரது குடும்பம் ஒரு சிறிய கிராமத்தில் வாழ்ந்து வந்தது. ஏற்கனவே பகவானிடம் தன்னை அர்ப்பணித்துக் கொண்டு விட்ட கிருஷ்ணமூர்த்தி ஐயர், தனது மனைவி குடும்பம் இவற்றைக் கிராமத்திலேயே விட்டுவிட்டு அவ்வப்போது அருணாசலத்திற்கு அடிக்கடி ஓடி வந்து விடுவார். இந்தக் கால கட்டத்தில் தனது கணவர் ஸந்நியாசம் எடுத்துக் கொண்டு உலகைத் துறந்து விடுவாரோ என்ற பயம் சுப்புலக்ஷ்மியம்மாளுக்கு உள்ளூரத் தொடர்ந்து இருந்து வந்தது. ஒரு நாள் இரவு இந்த பயம் அவள் இதயத்தைப் பலமாகப் பீடித்ததால் அழுதபடியே அவர் தூங்கச் சென்றார். அன்று பகவான் அவரது கனவில் தோன்றி, "சுப்புலக்ஷ்மி! பயப்படாதீர்கள்! நான் கிருஷ்ணமூர்த்தியைக் கவனித்துக் கொண்டிருக்கிறேன். அவர் விருப்பப்படி ஸாதனைகளில் ஈடுபட அனுமதியுங்கள். உங்களையும் நான் காப்பாற்றிக் கொண்டிருக்கிறேன். கவலையை அறவே விடுங்கள்!" என்று கூறிய பின் பகவான் தனது கையால் அவரை ஆசீர்வதித்தார். மறுதினம் பகவானைக் காண வந்த அந்த தம்பதி கனவைப் பற்றி அவரிடம் கூறிய போது, அவர் அதை ஆமோதிப்பது போல் அருள் கலந்த புன்னகையை உதிர்த்தார். அன்றிரவிலிருந்து சுப்புலக்ஷ்மியம்மாள் பகவானுக்குத் தன்னை முழுமையாக அர்ப்பணித்துக் கொண்டு சந்தேகம், பயம் இவற்றிலிருந்து விடுபட்டவராக சந்தோஷமாகக் குடும்ப வாழ்க்கையில் ஈடுபட்டார்.

திருவண்ணாமலைக்கு வந்த பின்னர் அந்தக் குடும்பம் ஊருக்குள்ளேயே தங்கியிருந்தது. தனது குழந்தைகளுக்கு அறிவைப் புகட்டுவதிலேயே மும்முரமாக ஈடுபட்டிருந்ததால், ஆன்மீக ஸாதனைகளைப் பழக சுப்புலக்ஷ்மியம்மாளுக்கு நேரமேயிருக்கவில்லை. குடும்பமே பகவானைக் கடவுளாகப் பார்த்தபோதும், ஸாதனை செய்வதற்கு அவருக்கு நேரம் கிடைக்கவில்லை. எதையுமே எதிர்பார்க்காத பகவான், சுப்புலக்ஷ்மியம்மாளைப் போன்று தன்னிடம் வரமுடியாதவர்களுக்கு வேறு வழிகளில் தானே சென்று அருள் புரிந்தார். ஒரு நாள் மேள தாளம் முழங்க சேஷாத்ரி ஸ்வாமிகளின் பெரிய படம் ஒன்றைத் தாங்கிய மாபெரும் ஊர்வலம் ஒன்று ஊருக்குள் சென்றது. அந்தப் படத்தைக் கண்ணுற்ற சுப்புலக்ஷ்மியம்மாள் இதைப் போன்ற பகவானுடைய பெரிய படம் ஒன்று என்னிடம் இருக்குமானால் அவரைத் தினமும் சென்று காண முடியாத நான், அவருக்கு மாலை அணிவித்துப் பூஜை செய்ய முடியுமே என்று ஏக்கத்தோடு மனதிற்குள் எண்ணினார். இத்தகைய எண்ணங்களுடன் வீட்டினுள் சென்று கதவைத் தாளிட்டவுடனே கதவை யாரோ தட்டினார். வந்தவர் சேஷாத்ரி ஸ்வாமிகளுடையதைப் போன்றே பெரிய பகவானுடைய படம் ஒன்றைக் கையில் தாங்கியவாறு வாயிலில் நின்று கொண்டு, "நான் போளூர் கிராமத்திலிருந்து வருகிறேன். இந்தப் படத்தை உங்களுடைய வீட்டில் கொடுக்கும் படியாக அறிவுறுத்தப்பட்டது. நான் ஆச்ரமத்திற்குச் சென்று கொண்டிருக்கிறேன். பகவானைத் தரிசித்த பின் நான் திரும்பி வருவேன்," என்று கூறினார். படத்தைப் பார்த்தவுடன் சுப்புலக்ஷ்மியம்மாள் எல்லையற்ற மகிழ்ச்சியடைந்தார் என்பதைக் கூறத்



தேவையில்லை. அதை பக்தியோடு உள்ளே எடுத்துச் சென்று, மாலை அணிவித்து, பூஜையும் செய்தார். பள்ளியிலிருந்து திரும்பி வந்த குழந்தைகளும் தங்கள் தாயைப் போன்றே பகவானது படத்தைக் கண்டு புளகாங்கிதமடைந்தனர். "ஓ! நம் வீட்டிற்கு பகவான் வந்து விட்டார்!" என்று கூறி ஆனந்தக் கூத்தாடினர். வீட்டிற்குத் திரும்பி வந்து கொண்டிருந்த தங்களது தந்தையைக் கண்டவுடன் தெருவிற்கே ஓடிச் சென்று, "அப்பா! பகவான் நம் வீட்டிற்கு வந்துள்ளார்!" என்று கூறிய போது மற்றவர்களைப் போன்றே பரபரப்படைந்த கிருஷ்ணமூர்த்தி ஐயர், அது எவ்வாறு அங்கு வந்து சேர்ந்தது? என்று ஆச்சரியப்பட்டார். "நீங்கள் தான் அனுப்பி உள்ளீர்கள் என நான் எண்ணினேன்" என்று சுப்புலக்ஷ்மியம்மாள் கூறினார். கிருஷ்ணமூர்த்தி அதற்கு விடையளிக்கு முன் ஏற்கனவே படத்தைக் கொண்டு வந்தவர் திரும்பி வந்து, "நான் ஒரு மின் பணியாளர் (எலக்ட்ரீஷியன்). மேஜர் சாட்விக் தன் அறையிலிருந்த மின் சாதனங்களைப் பழுது பார்க்க ஒரு நாள் என்னை அழைத்திருந்தார். இந்தப் படத்தை நான் அங்கு பார்த்தேன். எனது பணியை முடித்த போது அவர் எனக்குக் கூலி தந்தபோது கூலிக்குப் பதிலாக இந்தப் படத்தைத் தருமாறு சாட்விக்கிடம் கேட்டேன். அவர் அதைத் தந்தபோது மிக்க மகிழ்ச்சியோடு போளூருக்கு அதை எடுத்துச் சென்று தினமும் பக்தியோடு பூஜை செய்தேன். இருந்தாலும் ஒரு நாள் ஏதோ ஒரு சக்தி என்னுள் புகுந்து 'திருவண்ணாமலையில் ஆவாரங்காட்டுத் தெருவில் இருக்கும் டாக்டர் M. R. கிருஷ்ணமூர்த்தி ஐயரிடம் இந்தப் படத்தைக் கொடுக்க வேண்டும்' என்று என்னை உந்தித் தள்ளியது. அதனால்தான் இதை நான் இங்கேயே விட்டுச் செல்கிறேன்," என்று கூறினார். குடும்பமே சென்று இந்த நிகழ்ச்சியை பகவானிடம் தெரிவித்த போது தனக்கும் அதற்கும் எந்த சம்பந்தமும் இல்லாதது போல் அவர் மிகுந்த ஆச்சரியத்தோடும் ஆர்வத்தோடும் அதைக் கேட்டார்.

டாக்டர் கிருஷ்ணமூர்த்தி நிபந்தனைகள் ஏதுமின்றி பகவானிடம் முழுமையாகச் சரணடைந்திருந்தார். தனது கவனத்தை ஒன்று குவித்து, மேன்மேலும் ஸாதனைகளில் செலுத்தியதன் காரணமாக, அவருடைய மருத்துவத் தொழிலுக்கு அதிக நேரத்தைச் செலவழிக்கவும் பணம் சம்பாதிக்கவும் முடியவில்லை. அச்சமயத்தில் அவருடைய பள்ளித்தோழரும் நல்ல நண்பருமான

டாக்டர் T. S. S. ராஜன் சுகாதார அமைச்சராக இருந்தார். கிருஷ்ணமூர்த்தியைக் காண டாக்டர் ராஜன் வந்த போது அவருடைய பொருளாதார நிலையைப் பற்றிக் கேட்டு அவருக்கு உதவ விரும்பினார். “அரசுப் பொது மருத்துவமனையில் என்னால் உங்களுக்கு ஒரு வேலை வாங்கித் தர முடியும். அதன் மூலம் உங்களுக்கு நிரந்தர வருமானம் கிடைக்கும்,” என்று ஆலோசனையளித்தார். “எந்த சக்தி என்னை அருணாசலத்திற்கு அழைத்து வந்ததோ, அதுவே என்னுடைய எதிர்கால நலனைக் கவனித்துக் கொள்ளும்,” என்று கூறுமளவுக்கு கிருஷ்ணமூர்த்திக்கு பகவான் மீது அசைக்க முடியாத நம்பிக்கை இருந்தது. அவரது நம்பிக்கைக்கு ஈடு கட்டுவது போன்று அவர் சிகிச்சை செய்யும் படியான இரண்டு சரீர உபாதைகளை பகவான் தம்மீது வரவழைத்துக் கொண்டார்.

பகவானுக்குத் தொடர்ந்து வந்து கொண்டிருந்த விக்கலை நிறுத்துவது சாத்தியமாகவில்லை. கிருஷ்ணமூர்த்தி மிகச் சிறந்த மருந்துகளின் மூலம் சிகிச்சையளித்தும் எந்தப் பிரயோஜனமும் இருக்கவில்லை. பகவானுடைய உடல் நலம் மேன்மேலும் குன்றி கவலைக்கிடமாகியதால் அவர் பிழைக்க மாட்டார் என்று கிருஷ்ணமூர்த்திக்குத் தோன்றியது. கண்களில் நீர் மல்க, “பகவானே! உங்களைக் காப்பாற்ற எனக்கு உதவுங்கள்!” என்று தனக்குள்ளேயே பிரார்த்தித்தார். அன்றிரவு சுப்புலக்ஷ்மியின் கனவில் பகவான் தோன்றி, “கிருஷ்ணமூர்த்தி எதற்காக அழுகிறார்? குறிப்பிட்ட இந்த மூலிகையின் இலை கொண்டு தயாரிக்கப்பட்ட ஆயுர்வேத மருந்தை எனக்கு அளிக்கும்படி அவரிடம் கூறுங்கள்!” எனத் தெரிவித்து “அது உங்களது புழக்கடையிலேயே உள்ளது” என்ற பகவானது கூற்று சுப்புலக்ஷ்மியம்மாளுக்குக் கனவிலேயே ஒரு புதிராக இருந்தது. பகவான் தொடர்ந்து, “அதன் இலைகளைப் பறித்து நெய்யில் பொரித்து சிறிது வெல்லம் சேர்த்துப் பொடி செய்து அதிகாலை நான்கு மணிக்கு என்னிடம் எடுத்து வரவும்,” என்று தெரிவித்தார். அந்த நாட்களில் காலை ஐந்து மணிக்கு முன்பு பெண்கள் ஆச்ரமத்திற்குள் அனுமதிக்கப்படவில்லை. பகவானோ சுப்புலக்ஷ்மியம்மாளை அதிகாலை நான்கு மணிக்கே வரவேண்டும் என்று கூறினார். அவர் தயங்கியதால், “பகவான் நம்மை வரச் சொல்லி இருக்கிறார். நாம் போய்த்தான் ஆக வேண்டும்,” என்று கூறிய கிருஷ்ணமூர்த்தி மனைவியுடன் ஆச்ரமத்திற்குச் சென்றார். அவர்களுக்காகக் காத்திருந்த பகவான், தன் கைகளை நீட்டி அவர்கள் தயார் செய்த அந்த மருந்தைப் பெற்றுக் கொண்டார். அவருடைய விக்கலும் நின்றது.

இரண்டாவது சம்பவம் மேற்கூறியதை விட முக்கியத்துவம் வாய்ந்தது. கிருஷ்ணமூர்த்தி மருத்துவக் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த போது, அவருக்கு ஸ்ரீனிவாஸராவ் என்ற பேராசிரியர் ஒருவர் இருந்தார். பிற்காலத்தில் டாக்டர் ஸ்ரீனிவாஸ ராவ் ஆச்ரமத்தில் தங்கி பகவானுடைய அணுக்கத் தொண்டராகவும் இருந்திருக்கிறார். சற்று அதிகார தோரணை உள்ளவர். ஒரு முறை ஹெர்னியா, அப்பெண்டிஸைடிஸ் இவற்றில் ஏதோ ஒன்றினால் பகவானுக்கு மிகுதியான வேதனை இருந்ததால், அறுவை சிகிச்சை தேவையென்று டாக்டர் ஸ்ரீனிவாஸ ராவ் கூறினார். நிரஞ்ஜனானந்த ஸ்வாமியை அணுகி வாதித்து சம்மதம் பெற்றார். இருவருமாகச் சென்னையிலிருந்த பிரபலமான அறுவை சிகிச்சை நிபுணர் டாக்டர் பண்டாலேக்கு அபிப்ராயம் கேட்டு எழுதினர். பாரம்பரியத்தை மதித்த கிருஷ்ணமூர்த்திக்கு இந்த முடிவு வேதனையளித்தது. ஞானியின் உடம்பைச் சிதைக்கலாகாது. அதிலுள்ள அணுக்கள் ஒவ்வொன்றுமே தெய்வீகமானவை என்பதால், மருத்துவ ஆயுதங்களின்றியே அவை புத்துயிர் பெற்றுவிடும் என்பதில் அவர் உறுதியாக இருந்தார். மற்ற மருத்துவர்களிடம் அந்த எண்ணத்தைக் கைவிடுமாறு வேண்டிக் கொண்டார். ஆனாலும் அவரது வேண்டுதலுக்கு மற்றவர்கள் செவி சாய்க்கவில்லை. பிரார்த்தனையைத் தவிர வேறு வழியில்லையென்று கண்ட கிருஷ்ணமூர்த்தி, “பகவானே! இந்த இக்கட்டான நிலையிலிருந்து உங்களைக் காப்பாற்ற எனக்கு உதவி செய்யுங்கள்,”

என்று தனக்குள்ளேயே பிரார்த்தித்துக் கொண்டார். அன்றிரவே அவருடைய கனவில் தோன்றி, ''ஏன் கவலைப்படுகிறீர்கள் கிருஷ்ணமூர்த்தி! இந்த மூன்று ஆயர்வேத எண்ணெய்களையும் ஒன்றாகக் கலந்து நாளை காலை எடுத்து வாருங்கள். அதுவே குணம் பெறச் செய்யும்,'' என்று பகவான் கூறியதைத் தொடர்ந்து கிருஷ்ணமூர்த்தி சுப்புலக்ஷ்மியம்மாள் தம்பதி இரவிலேயே அந்த மருந்தைத் தயார் செய்து மறுநாள் அதிகாலையில் பகவானிடம் எடுத்துச் செல்லவும் அவர் அதைக் குடித்தார். அதற்கு மறுநாள் காலை அறுவை சிகிச்சை செய்வதற்கு முன் டாக்டர் பண்டாலேயும், ஸ்ரீனிவாஸராவும் பகவானைப் பரிசோதித்த போது நோயின் அறிகுறி எதுவுமே இல்லாததைக் கண்டு வியந்து, இது எவ்வாறு நடக்க முடியும் என்று ஆச்சரியப்பட்டனர். ''இன்று காலை கிருஷ்ணமூர்த்தி ஆயுர்வேத எண்ணெய் ஒன்றை அளித்தார். எல்லாமே சரியாகி விட்டது,'' என்று நோய் மாயமாக மறைந்த ரகசியத்தை பகவான் தனக்கு எந்த சம்பந்தமும் இல்லாதது போன்று தெரிவித்தார். ''என் ஆசிரியர் ஸ்ரீனிவாஸராவின் திட்டத்தை நான் குலைத்து விட்டதாகக் கருதியதால் எங்களுக்கிடையே இருந்த தூரம் கூடியது,'' என கிருஷ்ணமூர்த்தி பின்னர் கூறினார்.

டாக்டர் என்ற முறையில் கிருஷ்ணமூர்த்திக்கு பகவான் மதிப்புக் கொடுத்தார். பிற டாக்டர்கள் எழுதிக் கொடுத்த மருந்தாக இருந்தாலும், கிருஷ்ணமூர்த்தியிடம் ஆலோசனை கேட்காமல் பகவான் அந்த மருந்துகளை உட்கொள்ள மாட்டார். தன்னுடைய பக்தர் மீது அவருக்கு அத்துணை நம்பிக்கை இருந்தது. ஆனால் மூத்த மருத்துவர்கள் அறுவை சிகிச்சை செய்ய முற்பட்டபோது அதை எதிர்த்து நின்றதால், மற்ற மருத்துவர்கள் அவரைக் கலந்தாலோசிப்பதை நிறுத்தி விட்டனர். ஆனால் அதுவும் கிருஷ்ணமூர்த்தி ஐயருக்கு அனுக்ரஹமாகவே அமைந்தது. அதன் பின்னர் அவர் மேலும் மேலும் உண்முகமான ஸாதனைகளில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டார். பிற்காலத்தில் பகவானுக்கு இடது கையில் புற்றுநோய் வந்துள்ளதாகக் கண்டு பிடிக்கப்பட்ட போது அவருக்கு எவ்விதமான சிகிச்சையளிக்க வேண்டும் என்பது குறித்து கலந்தாலோசிப்பதற்கு கிருஷ்ணமூர்த்தி ஐயரை அவர்கள் அழைக்கக் கூட இல்லை.

பகவானுடைய கையில் ஏற்கனவே மூன்று அறுவை சிகிச்சைகள் நடத்தப்பட்டிருந்தன. பகவானுடைய உடல் சிதைக்கப்படுவதைத் தன்னால் தடுக்க முடியவில்லை என்ற ஆதங்கம் கிருஷ்ணமூர்த்தியை வாட்டியது. நான்காவது முறை இறுதியாகப் பெரிய அளவிலான அறுவை சிகிச்சைக்கு ஏற்பாடு செய்யப்பட்ட போது, டாக்டர் ராகவாச்சாரி மற்றும் பல பிரபலமான வைத்தியர்கள் சென்னையிலிருந்து வந்தனர். பகவான் முன் நின்று, ''பகவானே! இந்த அறுவை சிகிச்சை செய்தேயாக வேண்டும். அதற்கான உபகரணங்கள் எல்லாம் சென்னையிலிருந்து வந்து கொண்டிருக்கின்றன,'' என்று அவர்கள் கூறிய போது பகவான் அவர்களை நோக்கி, 'கிருஷ்ணமூர்த்திக்குத் தகவல் கொடுத்து விட்டீர்களா?' என்று கேட்கவும், டாக்டர் ஸ்ரீனிவாஸராவ் உட்பட எல்லா மருத்துவர்களும் கிருஷ்ணமூர்த்தியின் இல்லத்திற்குச் சென்றனர். டாக்டர் ராவ் மிகுந்த கண்டிப்போடு கிருஷ்ணமூர்த்தியிடம், ''இந்த அறுவை சிகிச்சையைத் தடுத்து நிறுத்தி விடாதீர்கள். இதைத் தவிர வேறு வழியேயில்லை. அனைவருமே அதற்காகத் தான் வந்துள்ளார்கள். பகவான் எங்களிடம், 'கிருஷ்ணமூர்த்திக்குத் தகவல் கொடுத்தீர்களா?' என்று கேட்டதற்கு நாங்கள் அறுவை சிகிச்சை செய்ய உங்களது அனுமதியைப் பெற வேண்டும் என்பதுதான் பொருள். அதனால் எங்களோடு வாருங்கள். ஆனால் அறுவை சிகிச்சை வேண்டாம் என்று மட்டும் கூறாதீர்கள். இந்தச் சிகிச்சையை செய்தே ஆக வேண்டும் என்று நீங்கள் பகவானிடம் தெரிவிக்க வேண்டும்'' என்று கூறிய போது ''அதை என்னால் எவ்வாறு கூற முடியும்?'' என்று கிருஷ்ணமூர்த்தி கதறினார். மருத்துவர்கள் அவரை வலுக்கட்டாயமாக ஆச்ரமத்திற்கு இழுத்துச் செல்ல வேண்டியிருந்தது.

இதற்குப் பின் நடந்ததை கிருஷ்ணமூர்த்தி இவ்வாறு கூறியுள்ளார் : "பகவான் அவரைப் பார்த்த பார்வையின் மூலம் அந்த சிகிச்சைக்கு மறுப்புத் தெரிவிக்க வேண்டாம் என்று கூறுவது போல் அவருக்குத் தோன்றியது. மிகுந்த கலக்கமுற்றபோதும் கிருஷ்ணமூர்த்தி அதை ஏற்றுக் கொண்டு அறுவை சிகிச்சையைத் தொடங்குமாறு மருத்துவர்களைக் கேட்டுக் கொண்டார். மருத்துவர்கள் அனைவரும் வெளியில் சென்றபின் பகவானுடன் தனித்து இருந்த கிருஷ்ணமூர்த்தி ஐயரிடம், வார்த்தைகளின்றி, "என்ன செய்வது கிருஷ்ணமூர்த்தி? காரியங்கள் எவ்வாறு நிகழ வேண்டுமோ அவ்வாறு நிகழ்ந்தாக வேண்டும். இது அருணாசலத்தின் ஆணை. அது நடந்தே தீரும்," என்று பகவான் கூறியது போல் தோன்றியது. என்றாலும் "எல்லாம் முடியும் வரை என்னுடனேயே இரும்," என்று வெளிப்படையாகவும், எல்லோரும் கேட்கும்படியாகவும் கிருஷ்ணமூர்த்தியிடம் பகவான் கூறினார்.

நான்காவது அறுவை சிகிச்சை 1949-ம் ஆண்டு டிசம்பர் 19-ம் தேதியன்று நடந்தது. அன்று முதல் 1950-ம் ஆண்டு ஏப்ரல் 14-ம் தேதி பகவான் அவரது சரீரத்தை துறக்கும் வரை ஒவ்வொரு இரவும் கிருஷ்ணமூர்த்தி பகவானுடன் இருந்தார். பகவான் முன்னிலையில் இல்லாத போதும் அறையிலிருந்து கூப்பிடும் தூரத்தில் எப்போதும் விழிப்போடு சுலபமாக உதவக்கூடிய வகையில் அருகிலேயே காத்திருந்தார். அனைவரும் உறங்கச் சென்ற பின்னர் இரவு முழுவதும் பகவானுடனேயே அவர் கழித்தார். "ஒவ்வொரு இரவும் நான் சொர்க்கத்திற்கும் நரகத்திற்கும் சென்று வந்தேன் — எனது குருவான பகவானுடன் இருப்பது சுவர்க்கானுபவமாக இருந்தது. ஆனால் அவர் சரீரம் அனுபவித்த வேதனைகளைக் காணும் போது நரகமாக இருந்தது," என்று கூறியுள்ளார்.

அவருக்கு இயற்கையாக இருந்த ஆன்ம பலத்தினால் டாக்டர் கிருஷ்ணமூர்த்தியின் மருத்துவத் திறமையின் ஆழம் கூடியது. என் சம்பந்தப்பட்ட ஒரு நிகழ்வினை இங்கு கூற விரும்புகிறேன்: நான் காசியில் இருந்த போது என் முதுகில் இருந்த பிளவு அழுகிப் போன நிலையில் இருந்தது (septic). எனது தந்தை அங்கு வந்து என்னைச் சென்னைக்கு அழைத்துச் சென்றார். அங்கு மருத்துவர்கள், பக்க வாதம் வராமல் தடுக்கும் பொருட்டு அறுவை சிகிச்சையை சிபாரிசு செய்தனர். டாக்டர் T. N. கிருஷ்ணஸ்வாமி, "உடனே அறுவை சிகிச்சை செய்து கொள்ள வேண்டும்," என்ற போதும் "நான் டாக்டர் M. R. கிருஷ்ணமூர்த்தி ஐயரிடம் சிகிச்சை செய்து கொள்கிறேன்," என்று கூறி விட்டேன். என்னை எது இவ்வாறு சொல்ல வைத்தது என்பது எனக்குத் தெரியாது. அதற்கு எனது தந்தை, "நமக்கும் கிருஷ்ணமூர்த்தி ஐயருக்கும் பேச்சு வார்த்தையே இல்லை. பத்து ஆண்டுகளுக்கும் மேலாக அவரோடு எவ்விதத் தொடர்புமின்றி நாம் இருக்கிறோம். இப்போது உனக்கு சிகிச்சை செய்யுமாறு நான் எப்படி அவரிடம் கூற முடியும்?" என்று கேட்ட போது, "அது எனக்குத் தெரியாது" என்று பதிலிறுத்தேன். தந்தை என்னை வீட்டிற்கு அழைத்துச் சென்ற போது, "கணேசன் கூறியது போல் அவனை கிருஷ்ணமூர்த்தி ஐயரிடம் அழைத்துச் செல்லுங்கள்" என்று எனது தாய் கூறினாள். அதனால், என் தந்தை வேண்டா வெறுப்போடு, "அவர் முகத்தில் நான் எவ்வாறு முழிப்பேன்?" என்று வினவினார். இருந்தாலும் கிருஷ்ணமூர்த்தியிடம் சிகிச்சை விஷயமாக அவர் சென்ற போது, "ஆகட்டும். நான் வருகிறேன். ஆனால் இரண்டு நிபந்தனைகள் : நான் சிகிச்சையளிக்கும் போது அறைக்குள் யாரும் வரக்கூடாது. சிகிச்சைக்கு நேரக் கட்டுப்பாடு விதிக்கக்கூடாது என்பதோடு கணேசனுக்கு என்ன சிகிச்சையளிக்கிறேன் என்றோ, அளிக்கப்படும் மருந்துகளைப் பற்றியோ என்னிடம் கேள்விகள் கேட்கக் கூடாது," என்றும் கூறினார். அவர் சிகிச்சையளித்த இரண்டு மாதங்களுக்கும் நான் குப்புறப்படுத்திருந்தேன். என்னுடைய முதுகில் புரையோடிப் போயிருந்த புண்களில் அவர் மருந்துகளைத் தடவினார். முக்கியமாக அந்த நேரங்களில், பகவானோடும் அருணாசலத்தோடும் அவருக்கிருந்த அமானுஷ்யமான உறவு பற்றி என்னிடம் பகிர்ந்து கொள்வார்.

அவை எனக்கு மிகுந்த ஆறுதல் அளித்ததோடு மன நிலையையும் மேம்படுத்தியது. அவர் அளித்த மருந்துகளின் வீரியம், சக்தி இவற்றை விட அவர் பகிர்ந்து கொண்ட ஆன்மீக விஷயங்கள் என்னை வேகமாகவும் முழுமையாகவும் குணம் பெறச் செய்தன. இவ்வாறு அவர் பகிர்ந்து கொண்ட போது ஒரு முறை, ''அருணாசலமும் ரமணரும் ஒன்றேதான். ஆத்ம விசாரத்திற்கானத் திறவு கோலை பகவான் அருணாசலத்தில் விட்டுச் சென்றுள்ளார். பைபிளில் 'கேளுங்கள் கொடுக்கப்படும்! தட்டுங்கள் திறக்கப்படும்!' என்று கூறப்பட்டவை வார்த்தைக்கு வார்த்தை உண்மை. அருணாசலத்திடம் கேட்டால் ஆத்ம விசாரத்திற்கான சாவியை நீங்கள் பெற முடியும். ஆத்ம விசாரம் என்பது உண்முகமாக ஆழ்ந்து மூழ்குவது தான்,'' என்று கிருஷ்ணமூர்த்தி ஐயர் கூறினார்.

கிருஷ்ணமூர்த்தி ஐயர் நாள்தோறும் கிரிப்பிரதக்ஷிணம் செய்ய ஆரம்பித்தார். அவர் சில சமயங்களில் பரவச நிலையில் தெருக்களில் அலைந்து கொண்டிருப்பதையும், அருணாசலேச்வரர் ஆலயத்தை வலம் வந்து கொண்டிருப்பதையும் பலர் பார்த்துள்ளனர். ஊரில் உள்ள அனைவரும், அவருக்குப் பைத்தியம் பிடித்து விட்டது என்று வெளிப்படையாகவே கூறினர். கிரிவலம் செய்யும் போதே தினமும் ஆச்ரமத்திற்குள் வந்து பகவானது ஸமாதி கோயிலின் முன்பு பகவானைப் பற்றியும் அருணாசலரைப் பற்றியும் பரவச நிலையில், உரத்த குரலில் பாடல்களைப் பாடுவார். நான் அவரைத் தரையில் வீழ்ந்து வணங்கும் போது, என்னைப் புரிந்து கொண்டு புன்னகை பூத்து 'பகவான் ஒருவரே



வணங்கத் தக்கவர்' என்று கூறும் விதமாக அவரது ஸமாதியைச் சுட்டிக் காட்டுவார். அவர் எப்போதுமே அலையலையாக அமானுஷ்ய அனுபவங்களைப் பெறுகிறார் என்பதை என்னால் உணர முடிந்தது.

டாக்டர் கிருஷ்ணமூர்த்தியின் இறுதி நாட்களில் அவருக்கு அசாதாரணமான அனுபவம் ஒன்று ஏற்பட்டது. விழாக்காலங்களில் உற்சவமூர்த்தி பவனி வரும் பெரிய தேரின் சக்கரம் உடைந்து விடும் நிலையிலிருப்பதாகவும், அதைப் பழுது பார்க்கச் சொல்லி கோயில் நிர்வாகத்தினாரிடம் தெரிவிக்கும் படியும் அருணாசலேச்வரரே தம்மிடம் கூறியதாகவும் அவர் சொன்னார். டாக்டரைப் பைத்தியம் என்று கருதி கோயில் நிர்வாகத்தினர் அவருடைய வார்த்தைகளை மதிக்கவில்லை. ஆயினும் பெரிய ரதம் அவரது வீட்டினருகில் வந்த போது, அதன் சக்கரம் முறிந்து நின்று விட்டது. மூன்று நாட்களுக்குக் கிருஷ்ணமூர்த்தி தனது வீட்டின் மொட்டை மாடியைத் தாளிட்டுக் கொண்டு கீழேயே வராமல், கொளுத்தும் வெயிலையும் பொருட்படுத்தாது அந்த ரதத்தையே கூர்ந்து நோக்கியவாறு இருந்தார். மூன்றாம் நாள் நான் கிரிவலம் வரும் போது எனக்குப் புரியாத ஏதோ ஒரு காரணத்தினால், டாக்டரைக் காணும் ஆர்வம் என்னுள் எழுந்த போது அவரது இல்லத்திற்குச் சென்றேன். டாக்டரைப் பற்றி நான் வினவிய போது அவரது மனைவி, "என்ன செய்வது? அவர் மாடியிலேயே இருக்கிறார். நாங்கள் அவரைப் பார்த்து மூன்று நாட்கள் ஆகி விட்டன. மாடியறையின் கதவைத் தட்டுவதற்குக் கூட எங்களுக்குத் தைரியம் இல்லை," என்று என்னோடு பேசிக் கொண்டிருக்கும் போதே கிருஷ்ணமூர்த்தி இறங்கி வந்து, "கணேசன் வந்திருக்கானா?" என வினவிய பின் என்னைக் கண்டு "எங்களைத் தனியாக விடு" என்று கூறி மனைவியை வெளியே அனுப்பி விட்டார். நான் அவரை ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்தேன். அவர் வெயிலின் தாக்கத்தினால் கறுத்துப் போயிருந்தார். "கணேசன்! அருணாசலம் என்னைக் கூப்பிட்டு விட்டதால் நான் விடைபெற்றுக் கொள்கிறேன். உனக்கு ஆசீர்வாதம்! இந்தப் பாதையிலிருந்து சிறிதும் விலகாதிரு. அருணாசலம் உன்னைக் காப்பாற்றும். இங்கேயே இரு!" என்று கூறினார். இதன் பின் சில நாட்களில் அவர் இறைவனடி சேர்ந்தார். அருணாசலம், தனது இதயத்தினுள் அவரை இணைத்துக் கொண்டது.



# 63 டாக்டர் ஹாஃபீஸ் ஸையத்



பகவானுடைய அவதார ரகசியத்தை வெளிப்படுத்தும் வகையில் அவரது ஸாந்நித்யத்திற்கு ஈச்வர இச்சையால் வந்தடைந்தவர்கள் சிலர், அந்தந்த கட்டத்தில் அவர்கள் எவ்வாறு வந்து சேர்ந்தார்கள் என்பது மனித அறிவிற்குப் புலப்படாத புதிர். உதாரணமாக மதுரையிலிருந்து திருவண்ணாமலைக்குச் செல்ல முற்பட்ட அவருக்கு, ரயிலில் திருவண்ணாமலைக்கு எவ்வாறு செல்ல வேண்டுமெனத் தெளிவாகக் கூறி உதவிய முகம்மதிய மௌல்வி; பின்னர் சாஸ்திரங்கள் கூறும் நுணுக்கமான விளக்கங்களை பகவான் அறிய வேண்டுமென்ற இறைவனின் திட்டப்படி அருணாசல மாஹாத்மியம் உட்பட பல தார்மீக நூல்களை விரூபாக்ஷ குகையில் அவருக்குக் கொண்டு கொடுத்தவர்; அடுத்து குருமூர்த்தத்திலிருந்த புளிய மரங்களிலிருந்து புளியம்பழங்களைத் திருட வந்த திருடர்கள் சிலர் அங்கு அமர்ந்திருந்த பகவான் தங்களுக்கு இடையூறு செய்யாதிருக்க விஷச்சாறு மூலம் அவரைக் குருடாக்க எண்ணியபோது, அவர்களுள் ஒருவரே அதைத் தடுத்து நிறுத்தி பகவானுடைய பார்வையைக் காத்தது. ஏனென்று நோக்கினால் அதுவும் ஈச்வர ஸங்கல்பமே; முன்பின் தெரியாத கவியும், ரமண ஸ்துதி பஞ்சகம் பாடியவருமான சத்தியமங்கலம் வேங்கடரமணய்யர் விஷயமோ நம்ப முடியாத ஒரு அற்புதம். சத்தியமங்கலம் வேங்கடரமணய்யர் பகவான் முன்னிலையில் ரமண ஸ்துதி பஞ்சகத்தில் நான்கு செய்யுட்களை எழுதி, கடைசி பாடலான ஐந்தாவது பாடலைத் தபாலில் அனுப்பி வைத்தார்.

பகவனை முன்பு கண்டிராத அவர், அவரது பாடல்களில் பகவானை வர்ணித்திருப்பது பகவானின் வாழ்வில் நிகழ்ந்த பரம அற்புதங்களில் முக்கியமான ஒன்று.

இதில் நான்காவதாக அமைந்திருக்கும் பொன்னையொத்த பத்து - ஒன்பதாவது பாடல்

எத்திசையரும் அன்பரும் எய்தியே
அத்தன் அத்தன் எனத்தொழுது ஏத்துவார்
முத்தன் ஆனந்த மோன ரமணனை
சத்துச் சித்தெனத் தாவித் தொழுவரே

இப்பாடல்கள் 1910-ல் இயற்றப்பட்டபோது பகவானைச் சுற்றி வெகு சிலரே இருந்தனர். ஆனால் 1922-ல் பகவான் ரமணாச்ரமத்திற்கு வந்த பின்னர் உலகெங்கிலுமிருந்து பல இனத்தவரும் பல மதத்தைச் சேர்ந்தவர்களும் ஆச்ரமத்திற்கு வரத் தொடங்கினர். சத்தியமங்கலம் வேங்கடரமணய்யர் தீர்க்க தரிசனத்தோடு கூறியது உண்மையாகவே நிகழ்ந்தது.

பகவானிடம் வந்த பழுத்த முகம்மதியர்களில் ஒருவர் டாக்டர் ஹாஃபீஸ் ஸையத். அவர் அலகாபாத் பல்கலைக்கழகத்தில் பேராசிரியராகவும், இஸ்லாமியக் கல்வித் துறையின் தலைவராகவும் இருந்தார். பிற மதங்களின் மீது வெறுப்பு ஏதுமில்லையென்றாலும் உலக மதங்களில் எல்லாவற்றிலும் இஸ்லாமே மிகவும் சிறந்தது என்பதில் அவருக்கு எள்ளளவும் சந்தேகமிருக்கவில்லை. ஒரு நாள் அவருடைய நண்பர் ஒருவர் பால் பிரண்டனின் 'A Search in Secret India' என்ற புத்தகத்தை

அவருக்குக் கொடுத்தார். அந்தப் புத்தகத்தைப் படித்து பெருமகிழ்ச்சியுற்று அந்த இந்து குருவை - பகவான் ரமணரைக் காணப் பேரார்வம் கொண்டார். ஒரு முகம்மதியரை அவர் எவ்வாறு வரவேற்பாரோ என்ற தயக்கம் அவருக்கிருந்தது. ஹாஃபீஸ் ஸையத், மாரிஸ் ஃப்ரீட்மனைச் சந்திக்க நேர்ந்த போது மாரிஸ், “ஆம்! எனது ஸத்குரு பகவான் ரமணர்தான்! இறுதியான ஸத்தியம் அவரே. அவரைச் சென்று பாருங்கள்” என்று அவருக்கு ஆலோசனை கூறியதோடு மட்டுமின்றி, அவர் ஆச்ரமத்தில் தங்குவதற்கு வேண்டிய ஏற்பாடுகளையும் செய்தார். அப்போது ஆச்ரமத்தில் அவரை வரவேற்றது யார் தெரியுமா? பால் பிரண்டனே அவரை வரவேற்று பகவானிடம் அழைத்துச் சென்றார்.

டாக்டர் ஹாஃபீஸ், தெய்வ நம்பிக்கையுடைய பக்குவமான முகம்மதியராக இருந்ததால், பால் பிரண்டனும், ஃப்ரீட்மனும் கூறியது முற்றிலும் உண்மை என்பது பகவானைப் பார்த்த அக்கணத்திலேயே அவருக்கு உறுதியாயிற்று. அம்முறை சொற்ப நேரமே பகவானுடன் தங்கி அவர் திரும்ப வேண்டியிருந்தது. ஆன்மீகத்தில் எவ்விதமான நிறைவு ஏற்பட வேண்டுமானாலும் அது ரமண மஹர்ஷியின் அருகாமையில் மட்டுமே தனக்கு நிகழ முடியும் என்று அவர் கிளம்பும் பொழுது எண்ணினார். 1935-ல் முதன் முதலாக பகவானைச் சந்தித்தவர் மீண்டும் 1936-லும் வந்தார். 1937-ல் அவர் ஆச்ரமத்திற்கு வந்தபோது டாக்டர் ஸையதின் உடல் நலம் குன்றியதால் ஒரு மாதத்திற்குப் படுத்த படுக்கையாகி விட்டார். அச்சமயத்தில் ஒரு தாய் குழந்தையிடம் செலுத்துவதைப் போன்ற அன்பை பகவான் சையதின் மீது பொழிந்தார். ஒரு முறை சமையலறைக்குச் சென்று டாக்டர் சையதிற்காகத் தனது கையாலேயே உப்புமா தயாரித்தார். அவரது கருணை மிகுந்த அன்பு டாக்டர் சையதின் உயிரையும், உள்ளத்தையும் உருக்குவதற்குப் போதுமானதாக இருந்தது. இருந்தாலும் தொழில் ரீதியான பொறுப்புக்கள் காரணமாக அவருக்கு திரும்பி செல்ல வேண்டியிருந்தது. தனக்கு எல்லாமே பகவானது ஸாந்நித்தியம்தான் என்பதை உணர்ந்து கொண்ட அவர் விடுமுறை நாட்களிலாவது தன் மனைவியுடன் பகவான் ஸந்நிதியில் தங்க வேண்டுமென்பதற்காக 1943-ல் ஆச்ரமத்தின் அருகிலேயே ஒரு வீட்டைக் கட்டிக் கொண்டார்.

ஜனவரி 1936-ல் ஒரு நாள் மிகவும் சந்தோஷமாக இருந்த டாக்டர் ஸையத் பகவானிடம், “நான் ஆச்ரமத்திற்கு முதன் முதலாக வந்த போது மிகவும் தயக்கத்தோடு இருந்தேன். உங்களை அணுகுவதற்கும், உங்களோடு பேசுவதற்கும் எனக்கு அனுமதி கிடைக்குமா என்ற சந்தேகம் எனக்கு இருந்தது. ஆனால் விரைவிலேயே அது நீங்கியது. இங்கு எல்லோருமே சமம் என்பதை நான் காண்கிறேன். அனைவரிடமும் அத்தகைய ஒரு சமத்துவத்தை நீங்கள் நிலை நாட்டியுள்ளீர்கள். நான் உங்களோடும், மற்றவர்களோடும் உணவு உண்டேன். இதை உத்திரப்பிரதேசத்தில் என்னைச் சேர்ந்தவர்களிடம் கூறினால் அவர்கள் நம்பமாட்டார்கள். அங்கு ஓர் அந்தணர் என்னுடன் தண்ணீர் அருந்தவோ அல்லது வெற்றிலையைச் சுவைக்கவோ மாட்டார். ஆனால் இங்கு என்னையும் என்னைப் போன்ற மற்றவர்களையும் உங்களோடு அரவணைத்துக் கொண்டிருக்கிறீர்கள். மஹாத்மா காந்தி இதன் பொருட்டுப் பெரும் முயற்சி எடுத்துக் கொண்ட போதும் நாட்டில் இத்தகைய ஒரு நிலையை அவரால் கொண்டு வர இயலாது. உங்களோடு இருக்கும் போது நான் மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறேன்,” (பகவத் வசனாம்ருதம் : எண் 125 - பக்கம் 112) என்று கூறினார்.

டாக்டர் சையதின் மனைவியைப் பற்றிக் குறிப்பிடாமல் அவரைப் பற்றிப் பேசுவது என்பது இயலாத காரியம். அவர் முகத்திரை அணிந்த ஒரு முகம்மதியப் பெண்மணி. இஸ்லாம் மதத்தின் கோட்பாடுகளை மிகவும் சிரத்தையோடு பின்பற்றி வந்தார் என்றாலும், இந்து ஞானியான பகவானிடம் கணவர் ஸையதை போன்றே ஈர்க்கப்பட்டார். அவரைக் காண வேண்டும் என்ற ஏக்கம் இருந்த போதும், அவரது சமயக் கோட்பாடுகள் படி கணவனைத் தவிர பிற ஆண்களைக் காண்பது



கூடாது என்பதை உணர்ந்திருந்தார். அதனால் ஆச்ரமத்திற்கு வந்து ரகசியமாகத் தனது கணவர் மூலம், “பகவானே! தயவு செய்து என்னை வந்து பாருங்கள்” என்று செய்தி சொல்லி அனுப்புவார். பகவானும் அவரது வேண்டுகோளை ஏற்று அவர் காத்திருக்கும் இடத்திற்குச் சென்று அவர் முன் நிற்பார். ஆண்களிடம் நேரடியாகத் தொடர்பு கொள்வதை இஸ்லாம் மதம் அனுமதிக்காததால் அவர் தனது கணவரின் மூலம் பகவானோடு பேசுவார். பகவானும் அவரை ஆசீர்வதிப்பார். பகவான் அவரை மாற்ற முயலாவிடினும் மாற்றம் தானாகவே நிகழ்ந்தது. நாளடைவில் முகத்திரைஅணிந்த இந்தத் தீவிர முகம்மதிய மாது தானாகவே பகவான் அமர்ந்திருந்த ஹாலுக்கு வரத் துணிந்தார்.

ஒரு சமயம் பகவானைத் தன் இல்லத்திற்கு அழைத்து தன் ஆசை தீர அவருக்கு உணவளிக்க வேண்டும் என்ற தாங்க முடியாத விருப்பம் டாக்டர் ஹஃபீஸின் மனைவிக்கு உதித்தது. அப்போது அந்தத் தம்பதி ஆச்ரமத்தின் அருகில் ஒரு வாடகை வீட்டில் தங்கியிருந்தனர். தனது ஆவலைத் தன் கணவரிடம் தெரிவித்த போது ஆச்ரமத்தின் விதிமுறைகளையும் பகவானின் வாழ்க்கை முறையையும் நன்றாக அறிந்திருந்த டாக்டர் ஹாஃபீஸ், ''இல்லை, அவர் ஆச்ரமத்தை விட்டு வெளியே வந்து நம் இல்லத்திற்கு வருவது சாத்தியமில்லை. ஆச்ரமத்திற்கு வெளியே அவர் உணவருந்தியதே கிடையாது,'' எனக் கூறியும் அவரது மனைவி பிடிவாதமாக இருந்ததால், இறுதியில், பகவான் மலைக்குச் செல்லும் போது மனைவியின் கோரிக்கையை அவரிடம் தெரிவித்தார். பகவான் அதைக் கேட்டுச் சிரித்தபடி தொடர்ந்து நடக்கலானார். ஆனால் பக்தர்களின் விடாமுயற்சி எதைச் சாதித்தது என்று பாருங்கள்! புத்திபூர்வமான விடாமுயற்சி என்பது கர்வத்தின் வெளிப்பாடே. ஆனால் அது இதயபூர்வமானதாக இருந்தால் வேறு விஷயம்; அதுவே பக்தி எனப்படுகிறது. பகவான் தினமும் மலை மீது ஏறுவார். ஒரு நாள் ஹஃபீஸின் மனைவி தன் கணவருடன் வழியில் நின்று கொண்டு அவர் மூலம், ''பகவானே! நீங்கள் கட்டாயம் எங்கள் வீட்டில் உணவு ஏற்றுக் கொள்ள வேண்டும்'' என்று அவரிடம் தெரிவித்தார். பகவான் அப்போதும் புன்னகைத்தவாறு தொடர்ந்து நடந்தார்.

அன்றிரவு பகவான் அவரது கனவில் தோன்றி, ''நீங்கள் எதற்காக இத்துணை பிடிவாதமாக இருக்கிறீர்கள்? என்னால் வர இயலாது என்பது உங்களுக்கே தெரியும். உணவுக்கூடத்தில் மற்றவர்கள் அனைவரோடும் சேர்ந்துதான் உணவருந்த முடியும். மக்கள் வெகு தொலைவிலிருந்து வருகிறார்கள். அவர்களுக்கு நான் ஏமாற்றத்தைத் தர முடியாது. என்னை வரும்படி கூறி வற்புறுத்திக் கொண்டே இருக்கப் போகிறீர்களா?'' என்று கேட்ட போதும், பகவானுடைய கருணை எந்த அளவுக்கு இருக்கிறது எனப் பாருங்கள்! மறு கணமே ''மூன்று ஸாதுக்களுக்கு உணவளித்தால் அது எனக்கு அளித்தது போன்று தான்'' என்று கூறியதோடு சந்தேகத்துக்கிடமின்றி அந்த மூவர் யார் என்பதையும் தெளிவுபடுத்தும் விதமாக அச்சமயத்தில் ஆச்ரமத்தில் வாழ்ந்து கொண்டிருந்த டாக்டர் மேல்கோடெ, ஸாது பிரபுத்தானந்தா, கிருஷ்ண பிக்ஷு ஆகியோரைக் கனவிலேயே அவர் காணுமாறு பகவான் அருள் புரிந்தார். டாக்டர் மேல்கோடெ ஒரு குடும்பஸ்தர், பிரபுத்தானந்தர் ஒரு துறவி; கிருஷ்ண பிக்ஷு ஒரு பிரம்மச்சாரி. சையதின் மனைவி அவர்களுக்கு வயிறார உணவளித்துத் தன் ஆசையையும் தீர்த்துக் கொண்டார். அவர்களைப் பகவானாகவே அவர் கண்டார் என்பதை நிரூபிப்பது போல் விருந்திற்குப் பின்னர் வெற்றிலையையும் வழங்கினார். ஒரு முகம்மதிய பெண்மணி தன் கணவனைத் தவிர மற்ற ஆண்களுக்கு — தனது சகோதரன், தந்தை இவர்களுக்குக் கூட — வெற்றிலை மடித்துத் தருவதற்கு அனுமதிக்கப்படவில்லை என்றாலும் ஒரு ஸாதுவிற்குத் தருவதை இஸ்லாம் மதம் அனுமதிக்கிறது. எந்த நிலைக்கு டாக்டர் ஹஃபீஸின் மனைவி தங்களை உயர்த்தி விட்டார் என்பதை அம்மூவரும் புரிந்து கொண்டனர். திரும்பி வந்து பகவானிடம் நடந்தவற்றை அவர்கள் விவரமாக எடுத்துரைத்த போது அவர் திருப்தியுடன் கேட்டார். வார்த்தைகளால் பாராட்டிப் பேசவில்லை என்றாலும் அவர் முகப்பாவனையிலிருந்து அவரது பக்தர்கள் புரிந்து கொண்டனர்.

நான் ஒரு முறை டாக்டர் ஸையத்தைப் பகவானிடம் பலமாக ஈர்த்தது யாதென அவரிடமே கேட்டபோது, ''பகவானுடைய ஆன்மீகம் எவ்வளவு உன்னதமாகவும் தூய்மையாகவும் இருந்ததோ அதே போன்று அவரது மனிதநேயமும் இருந்தது,'' என விடையளித்தார். ஒருவர் எந்த அளவுக்கு ஆன்மீகத்தில் முதிர்ச்சியடைகிறாரோ அந்த அளவு மனிதாபிமானமும் அவருக்கு அதிகமாகும் என்பது டாக்டர் ஸையத்திற்கு உறுதியாயிற்று. ''இறைவனிடம் சரணாகதியடைவதால் விளையும்

பயனைத் தானே அனுபவித்திருந்தபடியால் பகவான் மிக அழுத்தம் கொடுத்துச் செய்த உபதேசம் 'கடவுள் அல்லது குருவிடம் செய்யப்படும் சரணாகதியே', என்பது என்றாலும் உயிரினங்கள் யாவும் ஒன்றே, தெய்வ தவமென்பது இரண்டற்ற ஒன்றே என்றும் அவரிடமிருந்து கற்றுக்கொண்டோம். 'உலகை ஆள்பவன் ஈச்வரன் ஒருவனே; அதைக் காப்பதும் அவனுடைய பணியே' என பகவான் அடிக்கடி கூறுவதை நான் கேட்டிருக்கிறேன். உலகைத் தாங்குபவன் அவனேயன்றி நாம் அல்ல. 'ஆத்மாவின்பால் மனதைத் திருப்பி அகமுகமாவதே பக்தி' என்பது பகவானுடைய கருத்து'" என்றும் ஹாஃபீஸ் கூறினார்.

டாக்டர் ஸையத் மஹர்ஷியுடன் நிகழ்த்திய நீண்ட அறிவு பூர்வமான சம்பாஷணைகளை 'Talks with Ramana Maharshi', 'Day by Day with Bhagavan' மற்றும் 'Letters from Ramanasramam' ஆகிய நூல்களில் காணலாம். பகவானிடம் அவர் ஏன் கேள்விகளைக் கேட்டுக் கொண்டே இருந்தார் என நான் வினவியபோது, "ஞானி ஒருவர் கிடைத்துள்ள சமயத்தில் இறைவனை அடையும் வழிகளை அவரிடம் கேட்டுத் தெளிவு பெறுவதன் மூலம் மனிதகுலம் அவரை முழுமையாகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். அதனால்தான் நான் பகவானிடம் கேள்வி கேட்கத் தயங்கியதே இல்லை," என டாக்டர் கூறினார்.

"Talks with Ramana Maharshi" என்ற புத்தகத்திலிருந்து கீழ்க்காணும் உரையாடல்கள் தரப்பட்டுள்ளன:

அலகாபாத் பல்கலைக்கழகத்தில் பணியாற்றிய இஸ்லாமியக் கல்விப் பேராசிரியர் டாக்டர் ஹாஃபீஸ் ஸையத் பகவானுடன் பின்வருமாறு சம்பாஷித்தார்.

டா. ஸை: அகில வெளிப்பாட்டின் உத்தேசமென்ன ?

பகவான்: இதுவென்ன வென்னும் விசாரணையை பிறப்பிப்பதே அதனுத்தேசம்.

டா. ஸை: உண்மையே. ஆனால் நான் மூடப்பட்டிருப்பதால் ஒன்றும் தெரியவில்லை. அதனின்றும் எப்படி விடுபடுவேன் ?

பகவான்: மாயையால் மூடப்பட்டதும், விடுதலையை நாடுவதும் யார்?

டா. ஸை: யாரென்று கேட்டால் உடல், மனம், இந்திரியங்கள் எல்லாம் சேர்ந்து ஒரு வடிவாயிருக்கும் அஞ்ஞானியாம் நானேதான் அது. பால் பிரண்டன் எழுதிய புத்தகத்தை படித்த பிறகு நான் யாரென்னும் விசாரணையைப் பயின்று பார்த்தேன். சில சமயங்களில் அது உற்சாக மூட்டியது. ஆனால் அது நிலைக்கவில்லை. நான் என்பதின் யதார்த்தத்தில் நிலைப்பதெப்படி என்னும் நுட்பத்தை உணர்த்தி உதவ வேண்டுகிறேன்.

பகவான்: ஆம். புதிதாகத் தோன்றுவது காலப்போக்கில் மறைந்துதான் போகும்.

டா. ஸை: சாச்வத ஸ்வரூபத்தை அடையும் வழியை எனக்கு உபதேசித்தருள வேண்டுகிறேன்.

பகவான்: அடைவதாவது! அதுவே நாம். நம்மை விட்டு நாமெப்படி இருக்க முடியும்? எப்போதும் அவ்வுண்மையே நாமாதலின், அதை அடைவதென்பதில்லை. மாறாத நம் இயல்பை உணர முயற்சியொன்றும் வேண்டாம்.

வேறு ஒரு சந்தர்ப்பத்தில் டாக்டர் ஸையத் கேட்ட கேள்விகள்:-

டா. ஸை: ஸ்ரீ பகவான் அருளியுள்ள அருணாசல ஸ்துதி பஞ்சகத்தைப் படித்துக் கொண்டிருக்கிறேன். அத்வைதியாம் தாங்கள் எப்படி ஒரு ஸ்தோத்திரத்தை இயற்றக்கூடுமென்று ஆச்சர்யப்படுகிறேன் !

பகவான்: பக்தனும், பகவானும், ஸ்தோத்திரிமும் யாவும் ஒரே ஸவரூபமேயாகும்.

டா. ஸை: ஆனால் அத்துதிகளில் அருணமலையையே கடவுளாகப் போற்றிப் பணிந்து பிரார்த்தித்துள்ளீர்களே!

பகவான்: ஆத்மாவை உடலோடு நீங்கள் ஒன்றுபடுத்திக் கொள்ளலாம்! பக்தன் மட்டும் அந்த ஆத்மாவை அருணாசலத்துடன் ஒன்றுபடுத்திக் கொள்ளக்கூடாதா?

டா. ஸை: பரமாத்ம ஸ்வரூபம் எனக் கொள்வதெனின் எத்தனையோ மலைகளிருக்க ஸர்வவியாபியாம் அவரை, இந்த மலையோடு ஒரு தனிச் சிறப்புடன் சம்பந்தப் படுத்துவதேன்?

பகவான்: அலகாபாத்திலிருந்து உங்களை இவ்விடத்திற்கு ஆகர்ஷித்தது எது? இங்கு கூடியிருப்போர் யாவரையும் இவ்விடத்திற்கு ஆகர்ஷித்தது எது?

டா. ஸை: பகவானே! (அதாவது தாங்களே)

பகவான்: என்னை இவ்விடத்திற்கு ஆகர்ஷித்தது எது? அருணாசலமேயல்லவா? அந்தச் சக்தியை யாரும் மறுக்க முடியாது. மேலும், அருணாசலம் உள்ளே இருக்கிறது. வெளியில் இல்லை. ஆத்மஸ்வரூபமே அருணாசலம்.

பகவான் உடலை உகுக்கும் வரை டாக்டர் ஸையத் தன் மனைவியுடன் ஆச்ரமத்தில் தங்கியிருந்தார். அவர் ஒரு முறை என்னிடம், ''அருணாசலமும் பகவானும் ஒன்றே தான். வெவ்வேறு அன்று'' எனக் கூறினார். பகவான் உடலை உகுத்த பின் உடல் நிலை காரணமாகவும் வேறு காரணங்களாலும் ஆச்ரமத்தில் அவரால் தங்க முடியவில்லை. தனது ஊருக்குத் திரும்பி ஆத்ம விசாரமும், தியானமும் பழகலானார். அருணாசலம் இதயத்தில் உள்ளதென்பதை உணர்ந்து கொண்டிருந்தார். பகவான் கூறுவது போன்று 'இதயமே அருணாசலத்தின் பெயர்'. டாக்டர் ஸையத்தின் இறுதி நாட்கள் மிக அமைதியாகக் கழிந்தன. பகவான் அவரை அருணாசலத்துடன் ஒன்றுமாறு செய்தார். 'ஆத்மாவில் நிலைத்திருப்பது' என்னும் செய்தியையே - அறிவுரையையே அருணாசலம் தருகிறது. ஆத்மாவே மௌனம்.





"கடவுளைப் பார்ப்பதற்கு கடவுளாகவே இருக்க வேண்டும்"

(ஸ்ரீ பகவான் – சப்–ரெஜிஸ்ட்ரார் நாராயண ஐயர்)

# 64 ஸப்–ரெஜிஸ்ட்ரார் நாராயண ஐயர்



பகவானின் அருளை முழுமையாகப் பெற்ற பாக்கியசாலியான பக்தர் ஸப் ரெஜிஸ்ட்ரார் நாராயண ஐயருக்கு நினைத்துக் கூடப் பார்க்க முடியாத, காரணம் கூற முடியாத அளவு கவனிப்பும், கனிவும், அன்பும், ஆசிகளும் பகவானிடமிருந்து கிடைத்தன. பகவானுக்கு மிகப் பிரியமான பக்தர்களுள் அவர் ஒருவர் என்பது பலர் கருத்து. திருவண்ணாமலையிலிருந்து சுமார் 30 மைல் தூரத்திலிருந்த சேத்துப்பட்டு என்னும் ஊரில் 1928-ல் நாராயண ஐயர் துணைப் பதிவாளராகப் பணியாற்றி வந்தார். சுதந்திரமாகச் சிந்திக்கக் கூடிய அவர் கடைந்தெடுத்த நாஸ்திராக இருந்ததால் ஸாதுக்களையும் ஸந்நியாசிகளையும் சமுதாயத்தின் புல்லுருவிகள் என்று ஏளனம் செய்யும் ஒரு புரட்சிகரமான சிந்தனையாளராகவும் இருந்தார். அவருக்கு தெய்வ பக்தியுள்ள டாக்டர் ஏ. ராமகிருஷ்ண ஐயர் நண்பராகக் கிடைத்தது அவருடைய அதிருஷ்டமே. திருச்சுழியில் பகவானுடைய குழந்தைப் பருவத்தில் அவருடைய விளையாட்டுத் தோழியாக இருந்த லக்ஷ்மி அம்மாளின் மகன் ராமகிருஷ்ண ஐயர். ஆகையால் விவரம் தெரியும் வயது வந்த போது இயற்கையாகவே பகவானின் தீவிர பக்தரானார். அரசாங்க மருத்துவராக இருந்த அவர் சுவாரஸ்யமாக உரையாடக் கூடியவராகவும் இருந்தார். அவரது மென்மையான குணமும் நகைச்சுவையும் பிரசித்தி பெற்றவை. எங்கு பணியாற்றிய போதும் தனது அலுவல்களுக்கிடையே நேரம் கிடைத்த போதெல்லாம் பகவானைக் காண வருவார்.

1928-ல் ஒரு நாள் ராமகிருஷ்ண ஐயர் நாராயண ஐயரிடம், "கார்த்திகை தீபத் திருவிழாவிற்கு என்னுடன் அருணாசலத்திற்கு வருகிறீர்களா?" என வினவினார். (அந்தக் காலத்தில் திருவண்ணாமலை 'அருணாசலம்' என்றே அழைக்கப்பட்டது. ரயில் நிலையத்திற்குக் கூட 'அருணாசலம்' என்னும் பெயரே கொடுக்கப்பட்டிருந்தது). "ராமகிருஷ்ணா! நகைகளால் அலங்கரிக்கப்பட்டுக் கடவுள் விக்ரஹங்கள் தெருக்களில் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்படும் மூடத்தனமான இச்சடங்குகளெல்லாம் எனக்குப் பிடிக்காது என்பது உனக்குத் தெரியுமே! ஆனால் எனது ஆப்த நண்பன் என்பதால் உன்னுடைய திருப்திக்காக உடன் வருகிறேன்," என உரைத்தார். திருவண்ணாமலையை அடைந்தபோது திருவிழாவை ஒட்டி அங்கு குவிந்திருந்த மக்கள் கூட்டத்திடையே அவர்களுக்கு நிற்கவோ உட்காரவோ கூட இடமிருக்காது என்பதை நாராயண ஐயர் கண்ட உடன், "ராமகிருஷ்ணா! நீங்கள் ரமணாச்ரமத்திற்குச் செல்வதாகச் சொன்னாயே, ஆச்ரமம் என்றால் மரங்களோடு கூடிய பரந்த வெளி நிறைந்த இடமாக இருக்கும். நான் ஒரு நிபந்தனையோடு - ஒரு வேளை நீ கூறும் அந்த ஸ்வாமி நம்முன் வர நேர்ந்தால் நான் அவரை நமஸ்கரிக்க மாட்டேன் என்ற நிபந்தனையோடு உன்னுடன் வருகிறேன்," என்று கூறினார். "நாராயண ஐயரின் கழுத்தைச் சுற்றிப் பெரிய சுருக்கிட்டு பகவான் இழுக்கிறார் என்பது எனக்கு நன்றாகவே புரிந்து விட்டதால் சிறிதும் தயங்காமல் நான் அவரையும் அழைத்துச் சென்றேன்," என்று எனக்கு மிகவும் பழக்கமான ராமகிருஷ்ண ஐயர் பிற்காலத்தில் என்னிடம் கூறினார்.

1928-ல் கூரை வேய்ந்த மூன்று குடிசைகள் மட்டுமே ஆச்ரமத்தில் இருந்தன. நண்பர்களிருவரும் ஆச்ரமத்தை அடைந்த போது அக்குடிசைகள் ஒன்றிலிருந்து பகவான் வெளியில் வந்தது உண்மையில் யதேச்சைதானா? ராமகிருஷ்ண ஐயரைக் கண்ட பகவான் சற்று நின்று "ராமகிருஷ்ணா! உங்கள் தாயார் எப்படி இருக்கிறார்? குடும்பத்தினர் எல்லோரும் நலம் தானா?"

என்று விசாரித்தார். நாராயண ஐயர் பகவானுக்கு அறிமுகப்படுத்தப் படாததால் பகவானும் ராமகிருஷ்ண ஐயரும் உரையாடிக் கொண்டிருந்த சமயத்தில் ஆங்கிலேய வழக்கப்படி பகவானைத் திரும்பிக்கூடப் பார்க்காமல் நின்று கொண்டிருந்தார். அதன் பின்னர் ராமகிருஷ்ண ஐயர் பகவானுக்கு நாராயண ஐயரை அறிமுகப்படுத்தினார். பகவானின் சாந்தமான அமைதியான கருணை ததும்பும் முகத்தைக் கண்ட உடனே நாராயண ஐயர் அவரால் வசீகரிக்கப்பட்டார். அடுத்த நிமிடம் கற்கள் நிறைந்த கரடு முரடான தரையாக இருந்ததையும் பொருட்படுத்தாமல் கீழே விழுந்து ஸாஷ்டாங்கமாகப் பகவானது திவ்ய சரணங்களில் வணங்கினார். அதுவரை ஸாதுக்களையும் ஸந்நியாசிகளையும் எள்ளி நகையாடிய தான், இப்போது ஒரு ஸாதுவை நமஸ்கரித்தது அவருக்கேக் குழப்பத்தை விளைவித்தது. இருந்த போதும் சமாளித்துக் கொண்டு தனக்குள்ளேயே, "நான் என் வாழ்க்கையில் மஹாத்மா காந்தி, ரவீந்திரநாத் தாகூர் ஆகிய இரு மஹான்களைப் பார்த்திருக்கிறேன். என்றாலும், உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் தயை நிறைந்த பார்வையால் என்னைக் கட்டி கண்களை அவரை விட்டு நீக்க முடியாமற் செய்து விட்ட இந்த அற்புத மனிதருக்கு ஈடாக அவர்களிருவரையும் கூற முடியாது. இவரது பார்வையில் மயங்கி இவரிடம் அகப்பட்டுக் கொள்ளாமல் நான் கவனமாகக் கட்டுப்பாட்டுடன் இருக்க வேண்டும். ஆனாலும் இவருக்கு ஒரு வாய்ப்பளிப்பதற்காக இவருடைய நூல்கள் சிலவற்றைப் படித்துப் பார்க்கிறேன்," என்று தனக்குத் தானே சிந்திக்கலானார்.

சிறிய திறந்த அலமாரி ஒன்று மட்டுமே கொண்ட ஆச்ரமத்தின் அன்றைய புத்தகக் கடைக்குச் சென்றார் நாராயண ஐயர். பகவானுடைய 'உள்ளது நாற்பது' அப்போதுதான் வெளியிடப்பட்டிருந்தது. தான் அன்று பார்த்த அந்த ஸ்வாமி எப்படிப்பட்டவர் என்று எடை போட்டுப் பார்க்கும் நோக்கத்துடன் அந்தப் புத்தகத்தை வாங்கிப் படிக்கத் திட்டமிட்டார். தான் ஸாது மரியாதைக்குரியவர் தானா என்று கண்டு கொள்ள விரும்பினார். முதல் செய்யுளைப் படித்த போது அதில் ஒரு வார்த்தைகூட அவருக்குப் புரியவில்லை. தனக்கு என்ன நேர்ந்ததென்றே அவருக்கு விளங்கவில்லை. "நான் அவரை நோக்கும் போது ஏதோ ஒரு உணர்வு என்னுள் தூண்டப்படுகிறது. அதை என்னால் கட்டுப்படுத்தவும் முடியவில்லை. ஏன் அவ்வாறு நிகழ்கிறது என்பதும் தெரியவில்லை. அவரை எடை போட்டுப் பார்க்கலாமென்றால் அவர் எழுதியுள்ள தமிழ்ச் செய்யுளில் ஒரு வார்த்தை கூட விளங்கவில்லையே!" என்பதாக இருந்தது அவரது எண்ண ஓட்டம். வெளியில் சென்று கொண்டிருந்த ஒருவரை கூப்பிட்டு, "உங்களுக்கு 'உள்ளது நாற்பது' பற்றித் தெரியுமா? அதன் அர்த்தம் தெரியுமா?" என்று கேட்டபோது அந்த மனிதர், "எனக்கும் உள்ளது நாற்பதின் பொருள் விளங்கவில்லை. ஆனால் இன்றிரவு பகவான் அந்தச் செய்யுட்களைப் படித்து விளக்கமளிக்கப் போகிறார். நீங்களும் இங்கு தங்கி விடுங்களேன்?" என்று ஆலோசனை கூறினார். "இங்கு தங்கி அந்த ஸ்வாமிக்கு மற்றொரு வாய்ப்பைத் தரலாம்," என நாராயண ஐயர் எண்ணினார். ஆனால் பகவானால் அவர் கழுத்திலிடப்பட்ட சுருக்கு கொஞ்சம்கூட இறுக்கப்பட்டது!! அதுவே உண்மை.

அன்றிரவு பகவான் மிக இனிய குரலில் அப்பாடல்களைப் படித்த போது, அவற்றிலிருந்த ஒவ்வொரு சொல்லும் எளிமையாகவும் சுலபமாகப் புரிந்து கொள்ளும் வகையிலும் இருக்கவே நாராயண ஐயருக்குத் தான் மயக்க நிலைக்குக் கொண்டு செல்லப்படுகிறோமோ என்ற சந்தேகம் எழுந்தது. "அவர் இப்போது வாசிப்பதனைத்தையும் என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் முன்பு ஒரு வார்த்தை கூட விளங்கவில்லையே!" என்று யோசிக்கலானார். நாராயண ஐயரின் மனநிலை இவ்வாறிருந்த சமயத்தில் படிப்பதற்கிடையிலும் பகவான் தனது கவனத்தை முழுவதுமாக அவரிடம் மட்டுமே செலுத்தினார். ஆரம்ப காலத்தில் பகவானைச் சுற்றி மிக நெருக்கமான பக்தர்கள்

சிலர் மட்டுமே இருந்தனர். 1940-ல் தான், ஆச்ரமத்தில் மக்கள் குவியத் துவங்கினர். அதற்கு முன்பு தான் தேர்ந்தெடுப்பவரை பகவான் அடிக்கடி நேரடியாக நோக்குவார். பகவானாலும், அவர் படித்த செய்யுளாலும் நாராயண ஐயர் கவர்ந்திழுக்கப் பட்டார். இந்நிகழ்வை நினைவு கூறும்போது நாராயண ஐயர், "இருபத்து ஒன்றாவது செய்யுளை பகவான் விளக்கிய போது 'கடவுளை நமது கண்களாலோ அல்லது புலன்களாலோ காண முடியாது. கடவுளைக் காண்பது என்றால் கடவுளாக ஆவது என்றே பொருள். இதையே இச்செய்யுள் கூறுகிறது' என்று பகவான் கூறியவுடன் கேட்டுக் கொண்டிருந்தவர்களில் ஒருவரான தண்டபாணி ஸ்வாமி மிகவும் தைரியமாக, 'பகவான் தன் சொந்த அனுபவத்திலிருந்துதான் இவ்வாறு சொல்கிறாரா?' என்று கேட்டார். நேரிடையாகக் கேட்கப்பட்ட அக்கேள்விக்கு 'அப்படி இல்லையென்றால் இப்படித் துணிந்து என்னால் கூற முடியுமா?' என்று பகவான் அமைதியாகவும் ஒளிவு மறைவின்றி நேர்மையாகவும் பதிலளித்தார்."

இந்த உறுதி மொழியைச் செவியுற்ற நாராயண ஐயரை விவரிக்க இயலாத ஒரு உணர்ச்சி ஆட்கொண்டது. அவரது உடல் முழுவதும் நடுங்கியது. அந்த நிலையில் அவர் பகவானை நோக்கிய போது பகவானைச் சுற்றி அற்புதமான பிரகாசத்தோடு கூடிய ஒளி பரவியிருந்ததைக் கண்டார். 'கடவுளைக் காண்பது என்பது கடவுளாக இருப்பது' என்ற அந்த நிலையை நாராயண ஐயர் அனுபவித்தார். 'அனைத்து மதங்களாலும் கடவுள் எனப் போற்றப்படுபவர் யாரோ, அவர் என் முன் மனித உடலெடுத்துத் தோன்றினால் அது இவரேதான்' என்ற எண்ணம் அவருக்கு எழுந்தது. தொடர்ந்து, நாராயண ஐயருடைய ஆழ் மனதில் ஏற்பட்ட அனுபவம் 'பகவான் ரமணரே கடவுள்' என்பதை உறுதிப்படுத்தியது. "அந்த நொடியிலிருந்து என்னுடைய தீர்மானம் என்பதே இல்லாமல் போயிற்று. நான் பகவானின் அடிமையாகி விட்டேன்" என தன் அனுபவத்தை விளக்க முற்பட்ட நாராயண ஐயர் என்னிடம், "கணேசன்! கடவுளைப் பற்றிய அறிவு பூர்வமான விளக்கங்கள் அனைத்தையும் நான் ஏற்க மறுத்ததால் எனக்கு உண்மையை உணர்த்த 'அவரே கடவுள்' என்ற அனுபவத்தைப் பகவான் எனக்கு அளிக்க வேண்டியிருந்தது," எனக் கூறினார். 'கடவுளை அனுபவிப்பதற்காக நாராயண ஐயர் கடவுளாக ஆனார்' என்ற பகவானின் கூற்றை உரைத்து நான் அவரைக் கிண்டல் செய்த போது அவர் என்னைத் தழுவிக் கொண்டு, "ஆம் கணேசன்! அதுதான் உண்மை. கடவுளை அறிந்து கொள்ள வேண்டுமானால் கடவுளாக ஆக வேண்டும்! வேறு வழியே இல்லை" என்று கூறினார்.

பகவானின் அருள் எனக்கிருந்ததால் மட்டுமே பகவானுடன் தனக்கு ஏற்பட்ட சில அனுபவங்களை நாராயண ஐயர் என்னோடு பகிர்ந்து கொண்டார். அவ்வாறு நடக்க வேண்டுமென்பது இறைவனுடைய பகவான் ரமணருடைய விருப்பமாக இருந்திருக்க வேண்டும். பல சந்தர்ப்பங்களில் அவர் ஆச்ரம அலுவலகத்திற்கு வந்து என்னை வெளியே இழுத்து, மாட்டுக் கொட்டிலுக்கோ அல்லது மலையடி வாரத்திற்கோ அழைத்துச் சென்று விடுவார். பின்னர் தன் அனுபவங்களை என்னோடு பகிர்ந்து கொள்வார். அவர் அப்போதெல்லாம் மீண்டும் மீண்டும் கூறுவது "பகவானுடைய இத்தகைய பிரத்தியேகப் பரிவைப் பெற எனக்கு அருகதை இல்லை. கடந்த பிறவிகளில் நான் ஏதாவது புண்ணியம் செய்திருக்கக் கூடும்; அவருடைய இந்த விசேஷ கவனிப்பிற்கும், அன்பிற்கும் பாத்திரமாவதற்கு இந்த ஜன்மத்தில் நான் ஒரு போதும் பூஜையோ, ஸாதனையோ செய்யவில்லை" என்பது தான்.

ஒரு முறை 'பகவான் தான் கடவுள்' என அவர் உறுதியாகக் கூறுவதற்குப் பொருள் என்னவென்றும், அவ்வாறு கூறும் போது அவரது அனுபவம் என்னவென்றும் தெளிவு படுத்துமாறு நாராயண ஐயரிடம் நான் கேட்டேன். அவரது அனுபவங்களை நான் சந்தேகிக்கவில்லை. ஆனால்

அவற்றை அவர் வாய் மொழியாகவே கேட்க விரும்பினேன். பதில் கூற முற்பட்ட அவர், ''பகவானே தான் கடவுள். இவ்வாறு கூறும் போது எந்த மதத்தில் கூறப்படும் கடவுளையும் நான் குறிப்பிடவில்லை; எங்கும் நீக்கமற நிறைந்து நிற்கும் சுத்த சைதன்யத்தையே குறிப்பிடுகிறேன். ஒன்றேயான அத்தத்துவத்தை அதன் வெளிப்பாடேயான அவதாரத்தோடு ஒப்பிடுவதில்



**சப்–ரெஜிஸ்ட்ரார் நாராயண ஐயர் மற்றும் அவரது குடும்பத்தினருடன் ஸ்ரீ பகவான்**

அர்த்தமில்லை என்பதால் இதற்கு முன் தோன்றிய அவதாரங்கள் ஒருவரோடும் பகவானை ஒப்பிட நான் விரும்பவில்லை. என்றாலும் நாம் புரிந்து கொள்வதற்கு அது தேவையென்றால் அப்போது புத்தருடனோ அல்லது இயேசு கிறிஸ்துவுடனோ மட்டும் ஒப்பிடலாம்'' என்று கூறிப் பின் தொடர்ந்து, ''எப்போதெல்லாம் பகவானுடன் பேசிக் கொண்டிருந்தேனோ அல்லது அவர் ஸந்நிதியில் அமர்ந்திருந்தேனோ அப்போதெல்லாம் கடவுளே அங்கு அமர்ந்து பேசிக் கொண்டிருப்பதாக நான் உணர்ந்தேன். சுத்த சைதன்யமே மனித உருக்கொண்டு நாம் புத்தியால் புரிந்து கொள்ளும் நிலைக்கு இறங்கி வந்து ஆத்ம வித்யையின் உண்மையைத் தெளிவு செய்கிறது என்றால் அது நாம் பெற்ற பெறும் பேறாகும். எப்போதுமே இத்தகைய எண்ணங்கள் பகவானையும் அவரது உபதேசங்களையும் மேலும் தெளிவாகப் புரிந்து கொள்ளும்படி செய்தன,'' என நாராயண ஐயர் உரைத்தார்.

நான் ஆச்ரமத்திற்கு நிரந்தரமாக வந்த போது உண்மையில் எனக்கு வேதாந்தம் முழுமையாகப் பிடிபடவில்லை என நாராயண ஐயரிடம் கூறினேன். அப்போது எனக்கு வயது இருபத்து நான்கு. நான் தத்துவ சாஸ்திரத்தைப் படித்து அதில் M. A பட்டமும் பெற்றிருந்ததோடு மேலை, கீழை நாட்டு தத்துவ சாஸ்திரங்களிலும் எனக்குப் பரிச்சயம் இருந்தது. அவ்வாறிருந்த போதும், இந்து மதத்தின் மையக் கருத்தான வேதாந்தத்தை என்னால் தெளிவாகப் புரிந்து கொள்ள இயலவில்லை. அது சிக்கலாகவும் பரந்து விரிந்து இருந்ததால் புரிந்து கொள்ள நான் மிகவும் சிரமப்பட்டேன். ஆச்ரமத்திலேயே தங்கியிருந்த சிலர் 'ஸம்ஸ்க்ருதம் கற்பதோடு ஆதி சங்கரரின் நூல்களைப் படித்தால் பகவானுடைய உபதேசங்களைப் புரிந்து கொள்ள முடியும்' என்று கூறினர். இதை நான் சொன்ன உடன் நாராயண ஐயர், ''அப்போது உனக்கு மனதில் என்ன தோன்றியது?'' எனக் கேட்டார். ''வெவ்வேறு விதமான மதங்களையும் தத்துவங்களையும் பற்றிய அறிவை வளர்ப்பதற்குப் பதிலாக எந்த வித ஸாதனையாக இருந்தாலும் ஒரு ஸாதனையில் ஈடுபடுவதுதான் அதை விட முக்கியம் என்று தோன்றியது'' என பதிலளித்தேன்.

''பகவானிடம் கேள்விகளைக் கேட்ட போது நானும் இதே நிலையில் தான் இருந்தேன். பகவான் என்னுடைய பிரச்சனையை எவ்வாறு நொடிப் பொழுதில் தீர்த்து வைத்தார் என்பதைக் கேள்'' என்றார் நாராயண ஐயர். ''ஒரு முறை சில பேரறிஞர்கள் பழைய ஹாலில் அமர்ந்து வேதம், உபநிஷதங்கள் மற்றும் ஸம்ஸ்க்ருதத்திலிருந்த சாஸ்திர நூல்கள் இவற்றின் சில பகுதிகளைப் பற்றி விவாதித்துக் கொண்டிருந்தனர். பகவான் அப்போது மிகத் தெளிவான விளக்கம் ஒன்றைக் கூறினார். அருமையான அக்காட்சி நினைவில் நிறுத்திப் போற்றப்பட வேண்டிய ஒன்றாகும். அதை நான் கவனித்துக் கொண்டிருந்த போது 'இத்தகைய அறிவை பகவானுடன் பகிர்ந்து கொள்வதற்கு இந்த அறிஞர்கள் பாக்கியம் செய்திருக்க வேண்டும். அவர்களுக்கு அறிவை வளர்த்துக் கொள்வதில் மிகுந்த ஆர்வம் இருப்பதோடு விஷயத்தை நுணுக்கமாகப் புரிந்து கொண்டுமிருக்கிறார்கள். அவர்களோடு ஒப்பிடும் போது நான், எம்மாத்திரம்? சாஸ்திர ஞானத்தைப் பொறுத்தவரை நான் ஒரு அறிவிலி' என்ற ரீதியில் என் எண்ண ஓட்டமிருந்தது. அது எனக்கு மிகுந்த வேதனையளித்தது. அந்தப் பண்டிதர்கள் சென்ற பின் பகவான் என் பக்கம் திரும்பி ''என்ன இது?'' என்று கேட்ட போது என் எண்ணங்களைப் படிப்பது போன்று என் கண்களை ஊடுருவிப் பார்த்தார். பதிலளிக்க எனக்கு வாய்ப்பளிக்காமல் பகவான் தொடர்ந்து, ''இது வெறும் உமிதான். நூலறிவும் அவற்றைப் பொருள் தெரியாமல் மனப்பாடம் செய்து, குருட்டுத்தனமாய் ஒப்பிக்கும் திறன், ஒன்றுக்கும் உதவாது. ஸத்தியத்தை அறிந்து கொள நீர் ஏட்டுப்படிப்பு என்ற சித்திரவதைக்கு ஆளாக வேண்டியதில்லை,'' என்று கூறி அதைத் தொடர்ந்து பொருள் பொதிந்த மிக அழகான வாக்கியம் ஒன்றைக் கூறினார்.

'படிப்பால் உண்மையை உணர முடியாது. மௌனமாக இரும் - அதுவே ஸத்தியம்! அசைவற்று இரும் - அதுவே கடவுள்!' என்றார்.

பின்னர் பகவான் மிகுந்த கருணையுடன் என்னை மீண்டும் திரும்பிப் பார்த்தார். இம்முறை அவரது குரலிலும் மனப்பாங்கிலும் மாற்றம் இருந்தது. 'நாராயண ஐயர்! நீர், தானே க்ஷவரம் செய்து கொள்கிறீர்களா?' என்று தனிப்பட்ட விஷயம் குறித்துத் திடீரென பகவான் கேட்கவும் நான் வியப்பிற்குள்ளானேன். 'ஆம்' என்று நான் பதில் கூறியபோது அவர் தொடர்ந்து 'நீர் க்ஷவரம் செய்து கொள்ளக் கண்ணாடியை உபயோகிக்கிறீர்கள் அல்லவா? கண்ணாடியில் பார்த்தவாறு உம் முகத்தை க்ஷவரம் செய்கிறீர். கண்ணாடியில் தெரியும் உம் பிம்பத்திற்கு க்ஷவரம் செய்வதில்லை அல்லவா? அதே போன்று அனைத்து சாஸ்திரங்களும் ஆத்ம ஞானம் பெறுவதற்கான வழியைக் காட்டுவதற்காக ஏற்பட்டவையே. அவற்றின் நோக்கம், ஸாதனையும், அதன் பயனான ஆத்ம ஞானமும் தான். வெறும் புத்தக ஞானமும், விவாதங்களும் கண்ணாடியிலுள்ள பிரதி பிம்பத்திற்கு க்ஷவரம் செய்வதற்கு ஒப்பாகும்' என்று கூறிய போது எனக்கு மிகுந்த ஆறுதலும் தெளிவும் ஏற்பட்டது. பகவானது இச்சொற்களைக் கேட்ட பின், என்னுடைய தாழ்வு மனப்பான்மை அடியோடு மறைந்தது. பகவானது வார்த்தைகளால் விளைந்த மற்றொரு நன்மை என்னவென்றால் அப்போது முதல் என்னால் ஆத்மாவில் நிலைக்கவும் மௌனமாக இருக்கவும் முடிந்தது. அது என் சொத்தாகவே ஆகிவிட்டது" என்று நாராயண ஐயர் முடித்தார். அவர் கூறியவற்றைக் கேட்டுக் கொண்டிருந்த போதே நானும் அந்த மௌனமான அசைவற்ற நிலைக்கு அழைத்துச் செல்லப்பட்டேன். அறிவை வளர்ப்பதிலிருந்த வெறியை நானும் விடுத்து அகமுகமானேன். "மௌனமாக இரு - அதுவே ஸத்தியம். அசைவற்றிரு - அதுவே கடவுள்".

நாராயண ஐயரைப் பொறுத்தவரை திருப்திப் படுத்த முடியாத கேள்வி கேட்பவனாக நான் இருந்தேன். பகவானிடமிருந்து அவருக்குப் பிரத்தியேகமான உபதேசம் ஏதாவது கிடைத்ததா என்றும், அதன்படி அவரால் வாழ முடிந்ததா என்றும் அறிய நான் விரும்பினேன். "கணேசா! பகவான் பிரத்தியேகமான உபதேசம் ஒன்றைத் தந்தார். அவர் கொடுத்த அந்த தனிப்பட்ட உபதேசம் எனக்கு எப்பொழுதும் விலை மதிப்பற்றது. அது என்னுடைய இயல்பாகவே ஆகிவிட்டது" என்று உரைத்த பின் அவர் கூறிய விஷயம் மிக முக்கியத்துவம் வாய்ந்தது. "எனக்கு வேதாந்தம் பற்றி எதுவுமே தெரியவில்லை என்று பகவானிடம் அழுதேன். குடும்பஸ்தனாக இருப்பதால் சில விரதங்களை என்னால் கடைப்பிடிக்க இயலவில்லை. ஸத்தியத்தை அறியும் வழியையோ அல்லது ஸத்தியத்தையோ காட்டி உதவி செய்தருளுமாறு பிரார்த்தித்தேன். பகவானுக்கே உரிய விசார மார்க்கம் எனக்கு மிகவும் கடினமானதாக இருப்பதையும் மறைக்காமல் கூறினேன். பகவான் கருணை பொங்க என்னை நோக்கி, 'நாராயண ஐயர்! உமக்கு 'உள்ளது நாற்பது' தெரியுமா? அது ஸத்தியத்தையே போதிக்கிறது. ஸத்தியத்தைப் பற்றிக் கூறுவதோடு அதை விளக்கவும் செய்கிறது. ஒவ்வொரு பாடலாக அதைத் தொடர்ந்து படியும். காலம் செல்லச் செல்ல பாம்பு சட்டையை உரித்து விட்டுப் பளபளப்பாக வருவதைப் போன்று பாடல்களில் உள்ள சொற்கள் மறைந்து, உண்மை பிரகாசிக்கும். ஸத் அல்லது உள்ளது - இருக்கும் வஸ்து மட்டும் ஒளிரும்' என்று பகவான் கூறினார். கணேசா! இதுவே என்னுடைய ஸாதனை. அதையே நான் தொடர்ந்து செய்து வருகிறேன். நேரம் கிடைக்கும் போது 'உள்ளது நாற்பது' பாடல்களை ஓதுவேன்," என்று நாராயண ஐயர் கூறிய விஷயங்களை, மந்திரத்தால் கட்டுண்டவன் போன்று வாய் புதைத்துக் கேட்டுக் கொண்டிருந்தேன்.

2010-ம் ஆண்டு ஜனவரி 1-ம் தேதி பகவானது ஜயந்தி தினத்தன்று பகவானது ஸமாதி ஹாலில் இறைவனடி சேர்ந்த பகவானது பழைய பக்தை கனகம்மாளிடம் நான் ஒரு முறை நாராயண

ஐயரைப் பற்றி வினவிய போது, அவர் கீழ்க்காணும் விஷயங்களைக் கூறினார், “நாராயண ஐயர் செல்வச் செழிப்புடன் இருந்த ஒரு குடும்பத்தில் பிறந்தவர் என்றாலும் மிகவும் பணிவுள்ளவர். அவருடைய மனைவி கணவரின் கருத்துக்களை உள்ளவாறே ஏற்றுக் கொண்டு அவர் விரும்பியபடி வாழ்ந்தார். நாராயண ஐயர் வீட்டில் இருக்கும் போது அடிக்கடி உள்ளது நாற்பதை உரத்த குரலில் பாராயணம் செய்வார். பசுக்களிடமும், தோட்டக்கலையிலும் அவருக்கு ஆழ்ந்த ஈடுபாடு இருந்ததால் பசுக்களையும் தோட்டத்தையும் பராமரிப்பதில் தனது நேரத்தைக் கழிப்பார். ஒரு பசு கன்றை ஈன்று விட்டால் அந்த நொடியிலிருந்து தாய்ப்பசு, கன்று இவற்றிடம் தனது முழு கவனத்தையும் செலுத்துவார். பசு கன்று போடும் போதும், உள்ளது நாற்பதைப் பாராயணம் செய்வார். பிரசவ காலத்தில் அவருடைய முழு கவனிப்பையும் பெறும் தனிச் சலுகை பசுக்களுக்கு மட்டுமே கிடைத்தது என்றும் எட்டு குழந்தைகளுக்குத் தாயான தனக்கு அந்தச் சலுகை ஒரு போதும் கிடைத்ததில்லை என்றும் நாராயண ஐயரின் மனைவி வேடிக்கையாக என்னிடம் கூறியதுண்டு,” என கனகம்மாள் தெரிவித்தார்.

பகவானுடைய உபதேசங்களையும் அறிவுரைகளையும் மிகுந்த கவனத்தோடும், முழு அர்ப்பணிப்புடனும் பயின்று வந்தார் நாராயண ஐயர். ஒரு முறை நான் அவரிடம் ‘பகவான் முழுவதுமாக நீக்கிவிட்ட சந்தேகம் எப்பொழுதாவது உங்களுக்கு இருந்ததுண்டா?’ என்று கேட்ட போது கருணையோடு ஒரு நிகழ்ச்சியை அவர் நினைவு கூர்ந்தார். “பகவானின் சோபாவின் அருகே நான் அமர்ந்திருந்தேன். நாம் காண்பதனைத்தும் மாயை - வெறும் தோற்றம் என்ற வேதாந்த போதனை எனக்குப் புதிராக இருந்தது. பகவான் சோபாவில் அமர்ந்திருப்பதும், எனக்கும் அவருக்குமிடையே உள்ள மரத் தடுப்பும் எவ்வாறு பொய்யாக இருக்க முடியும்? என ஆச்சரியப்பட்டேன். ‘நாம் அனைவருமே பொய்தானா, பகவானே? நாம் வெறும் தோற்றம் மட்டும்தானா, பகவானே?’ என்று நான் கேட்ட போது பகவான் சிரித்தவாறு, முந்தைய இரவில் எனக்குக் கனவு வந்ததா? என வினவினார். பலர் உறங்கிக் கொண்டிருப்பதாக நான் கனவு கண்டேன் என்று அவரிடம் தெரிவித்த போது, பகவான் ‘கனவில் உறங்கிக் கொண்டிருப்பவர்களை எல்லாம் எழுப்பி அவர்களெல்லாம் உண்மையன்று என அவர்களிடம் கூறும்படி நான் உம்மிடம் சொன்னால் எப்படி இருக்கும்? அது அபத்தமான காரியமல்லவா? எனக்கு இப்போது அப்படித்தான் இருக்கிறது. கனவு காண்பவனைத் தவிர வேறு எதுவும் இல்லை என்பதை உறுதியாக அறிந்து கொள்ளும். அப்படியென்றால் கனவில் தோன்றிய மக்கள் உண்மையா, பொய்யா? என்ற கேள்வியே எழவில்லையே? அவர்களை எழுப்புவதும் அவர்கள் உண்மையில்லை என்று கூறுவதும் அதைவிட அசட்டுத்தனமாகவன்றோ உள்ளது! நாம் எல்லோருமே வெறும் தோற்றம் தான். அதை ஏன் சந்தேகிக்கிறீர்கள்?’ என்றார். அது ஒன்றே - ஆத்மா ஒன்றே உண்மை என்று பகவான் விளக்கிய பின்னர் உலகம் ஒரு பொய்யான தோற்றம் என்பது பற்றிய சந்தேகம் முற்றிலுமாக நீங்கியது. அது உண்மையில், ‘இல்லாத ஒன்று’ என்பதைத் தொடர்ந்து உணர்ந்தேன்” என்று நாராயண ஐயர் உரைத்தார். மற்றொரு நாள் பகவான் அவரிடம் ‘கனவில் காணப்படும் பொருட்களைப் போன்று அனைத்துமே உண்மையில்லை. இருந்தாலும் குறிப்பிட்ட ஒரு நிலையில் மெய்ப்பொருளும், பொய்யான உலகமும் இருக்கின்றன. அந்நிலையில் தன்னையறிந்த ஞானியின் ஞானம், மற்றவர்களை எழுப்பி அவர்கள் காண்பது வெறும் தோற்றமென்பதையும் அவர்களின் இருப்பு மட்டுமே உண்மை என்பதையும் அவர்களுக்கு உணர்த்துகிறது. இதை ஒரு யானை தன் கனவில் சிங்கம் ஒன்றைக் கண்டு திடீரென விழித்துக் கொண்டதும் சிங்கம் பொய்யென்பதையும், தான் மட்டுமே உண்மையென உணர்ந்து கொள்வதற்கும் ஒப்பிட்டுக் கூறலாம். யானையே தனி மனிதன் - ஜீவன். கனவே இப்பொய்யான உலகம். சிங்கத்தைக் குரு அல்லது ஞானிக்கு ஒப்பிடலாம்.



உண்மைக்கும், உண்மையல்லாததற்கும் இடையே உள்ள இணைப்பே குரு,'' எனக் கூறினார். வேறொரு சந்தர்ப்பத்தில் பகவான் நாராயண ஐயரிடம் ''ஞானி என்றோ ஆத்மானுபூதி பெற்றவர் என்றோ எதுவும் கிடையாது. ஞானம் மட்டுமே உள்ளது. அது ஒன்று தான் இருக்கிறது,'' என்று கூறியுள்ளார்.

நாராயண ஐயர் திருவண்ணாமலையிலிருந்து சற்று தூரத்திலிருந்த ஒரு ஊரில் துணைப் பதிவாளராக நியமிக்கப்பட்டார். அதனால் விரும்பிய பொழுதெல்லாம் பகவானைத் தரிசிக்க அவரால் செல்ல முடியவில்லை. தாயிடம் பால் குடிக்கும் குழந்தை தன் அன்னையிடம் செல்ல ஏங்குவது போன்ற நிலையில் அவர் இருந்தார். அந்த நாட்களில் வாடகைக் கார்களோ (டாக்ஸிகளோ) பேருந்துகளோ அதிகம் இல்லாததால், சில சமயங்களில் பகவானைத் தரிசிக்கவும், பின் வீடு திரும்பவும் நடந்தே செல்லும் போது இடையில் சரக்கு லாரிகளின் உதவியையும் நாடுவதுண்டு. ஒரு நாள் இரவு எட்டரை மணிக்கு ஆச்ரமம் வந்து சேர்ந்தார். ஆச்ரமத்திற்கு எதிரே அவருக்கு ஒரு வீடு இருந்தது. அங்கு சென்று குளிக்காமலும், உணவு அருந்தாமலும் வேகமாக ஆச்ரமத்திற்குள் சென்று

ஆச்ரம அலுவலகத்தில் சர்வாதிகாரி நிரஞ்ஜனானந்த ஸ்வாமியை வணங்கும் பொருட்டுச் சென்ற போது அவர் சிலருடன் ஏதோ விஷயமாகப் பேசிக் கொண்டிருந்தார். சாதாரணமாக ஆச்ரமத்திலுள்ளவர்கள் இரவு எட்டு மணிக்கே உறங்கச் சென்று விடுவார்கள் என்பதால் நாராயண ஐயருக்கு அந்தக் காட்சி வியப்பளித்தது. சர்வாதிகாரி நாராயண ஐயரை கூப்பிட்டு, "நாராயண ஐயர் இங்கு வாருங்கள். பகவானுக்கு ஒரு விபத்து நேர்ந்து விட்டது. அவரது தோள்பட்டை எலும்பு முறிந்து விட்டது. அதனால் பழைய ஹாலுக்கு வெளியே சிறிய கிணற்றுக்கும் ஹாலுக்கும் இடையே பகவானது சோபா மாற்றப்பட்டுள்ளது. அவரைத் தொந்தரவு செய்யாமல் தூரத்திலிருந்தே வணங்கி விட்டுச் சென்று விடுங்கள்," என்று கூறினார். இச்சம்பவத்தை நினைவு கூர்ந்த நாராயண ஐயர் "பகவானுக்கு எலும்பு முறிந்த விபரத்தை அவர்கள் தெரிவிக்காமல் இருந்திருந்தால் நான் அந்தப் பக்கம் சென்றிருக்கவே மாட்டேன். விஷயம் தெரிந்த பின் எவ்வாறு போகாமல் இருப்பது? நிரஞ்ஜனானந்த ஸ்வாமியின் உத்தரவுப்படி மெதுவாகப் பூனை போல் நடந்து சென்று சற்று தூரத்திலிருந்து பகவானை வணங்கிய போது அவரே, 'நாராயண ஐயர்! இங்கு வாரும்' என அழைத்தது எனக்கு வியப்பளித்தது. நான் வந்த சத்தம் யாருக்கும் கேட்டிருக்காது என்றே எண்ணினேன்" என்றார். தொடர்ந்து பகவான் 'நாராயண ஐயர்! நீர் சத்தம் செய்யாமல் இருக்க முயற்சி செய்வதை நான் பார்த்துக் கொண்டுதானிருக்கிறேன்' என்று கூறிய பகவான் சோபாவில் படுத்தபடி, 'நாராயண ஐயர்! என்னருகில் வந்து அமரும்' என்றழைத்து மிகவும் விநோதமான ஒரு விஷயத்தைக் கூறினார்" என்றுரைத்தார். (என்னைத் தவிர பகவானருகில் சோபாவில் அமர்ந்தது நாராயண ஐயர் ஒருவராகத்தான் இருக்குமென்று நினைக்கிறேன். நான் சுமார் ஒன்றரை வயதில் அம்மாதிரி அமர்ந்திருக்கிறேன்.) 'நாட்டு வைத்தியர் இந்தக் கட்டை அசைக்கக் கூடாதெனக் கூறியிருக்கிறார். நான் உம்மிடம் ஒரு விஷயத்தைப் பேச விரும்புகிறேன். என் அருகில் உட்காரும்' என்றார் பகவான். தான் பகவானுடன் சோபாவில் அமர்ந்திருப்பதைப் பார்த்தால் சர்வாதிகாரி கடுங்கோபம் கொள்வாரோ என்ற அச்சம் நாராயண ஐயருக்கு இருந்தது. ஆனாலும் நொடிப்பொழுதில் அந்த பயத்தை உதறித் தள்ளிவிட்டுப் பகவானிடம் சென்றார். அவர் உட்கார்ந்த பின் பகவான் தொடர்ந்து, "இன்று காலை நான் மலை மீது ஏறப்போய்க் கொண்டிருந்த போது ஒரு நாய், அணில் ஒன்றைத் துரத்தியதைக் கண்டவுடன் அவற்றிற்கு இடையில் என் கைத்தடியை வீசினேன். பின் நான் சறுக்கி விழுந்து விட்டதால் என் தோள்பட்டை எலும்பு முறிந்து போயிற்று. எலும்பு முறிவுக்குச் சிகிச்சையளிக்கும் நாட்டு வைத்தியரான பக்தர் ஒருவர் மூலிகைகளையும் உளுந்தையும் சேர்த்து அரைத்து அந்தக் கலவையைத் தடவிக் கட்டும் போது கையை அசைக்காமல் இருக்க வேண்டுமென என்னிடம் வேண்டிக் கொண்டார்," என்று பகவான் கூறியதைக் கேட்ட போது, தனது பக்தரான நாட்டு வைத்தியருடைய வேண்டுகோளுக்கு எத்துணை மதிப்பளித்தாரோ அதே போன்று அணிலின் நிலைக்கும் பகவான் முக்கியத்துவம் தந்தது நாராயண ஐயரை மிகவும் நெகிழச் செய்தது.

பகவானுடைய பிறந்த நாளன்று நாராயண ஐயர் எவ்வாறேனும் ஆச்ரமத்திற்குத் தவறாமல் வந்து விடுவார். ஒரு முறை அவர் அறுபது மைல்களுக்கு அப்பாலிருந்த போது ஒன்று மாற்றி ஒன்றாகப் பல சரக்கு லாரிகளில் பிரயாணம் செய்து இறுதியில் இரவு ஒரு மணிக்கு ஆச்ரமம் வந்து சேர்ந்தார். மறுதினம் காலை ஒன்பது மணிக்கு வேலைக்குச் செல்ல வேண்டுமென்பதால் அதிகாலை ஐந்து மணிக்கே அவர் ஆச்ரமத்திலிருந்து கிளம்ப வேண்டியிருந்தது. விடை பெறும் பொருட்டு பகவானை நமஸ்கரித்து எழுந்த போது பகவான் தன் கையை நீட்டியபடி, "வாரும் நாராயண ஐயர்! நீர் ஏதாவது சாப்பிட்டு விட்டுத்தான் போகணும்" என்று கூறி அவரைச் சமையலறைக்கு அழைத்துச் சென்றார். அங்கிருந்த பாத்திரங்களை இருவருமாகத் திறந்து தேடியபோதும் எதுவும்

கிடைக்கவில்லை. முந்தைய நாள் இரவே அடுக்களை உட்பட அனைத்துமே சுத்தமாகத் தண்ணீரால் கழுவப்பட்டிருந்தன. பின் அடுக்களையை அடுத்திருந்த சிறிய அறைக்குள் சென்று அங்கும் ஒவ்வொரு பாத்திரத்தையும் சட்டியையும் திறந்து நோக்கிய பகவானுக்கு நல்ல வேளையாக ஒரு பிடி பாதாம் பருப்பு கையிலகப்பட்டது. அங்கிருந்து வெளியில் வந்த அவர் அடுக்களையில் இருந்த அடுப்பு அநேகமாக அணைந்து விட்ட நிலையில் இருந்ததைக் கண்டு அதனுள் மேலும் சில விறகுக் கட்டைகளைச் செருகி அதன் மேல் பாணலி ஒன்றைப் போட்டுச் சிறிது நெய்யையும் விட்டுப் பாதாம் பருப்புக்களை வறுத்து சிறிது உப்பு, மிளகாய்த்தூள் இவற்றையும் சேர்த்தார். வறுத்த பாதாமில் சிலவற்றை இலையில் வைத்து நாராயண ஐயரிடம் கொடுத்து, "நீர் எப்படி ஒன்றும் சாப்பிடாமல் போகலாம்?" என பகவான் கேட்ட போது நாராயண ஐயரால் நடப்பதை நம்பமுடியவில்லை என்றாலும் சொர்க்கத்தில் இருப்பது போன்ற அனுபவம் ஏற்படவே சிந்தனையேதுமின்றி பகவான் கூறியவாறே செயல்பட்டார். பின் பகவான் ஒரு செய்தித்தாளையும் மற்றொரு இலையையும் தேடி எடுத்து எஞ்சியிருந்த பாதாம் பருப்புக்களை உணவு விடுதிகளில் பொட்டலம் கட்டுவது போன்றே மிக அழகாகக் கட்டி நாராயண ஐயரிடம் கொடுக்கும் போது, "நீர் வீட்டுக்குச் சென்றால் லலிதாவும் (நாராயண ஐயரின் மனைவி) உங்கள் குழந்தைகளும் 'பகவானிடமிருந்து என்ன கொண்டு வந்தீர்கள்?' எனக் கேட்பார்கள். இதை எடுத்துச் சென்று அவர்களிடம் கொடுங்கள்" என்று கூறினார். இந்நிகழ்ச்சி பற்றிக் கூறிய போது நாராயண ஐயர் உணர்ச்சிகளை அடக்க முடியாமல் அழுதவாறே, "பகவானின் அன்பின் வெளிப்பாடான இத்தகைய விசேஷ செயல்களை நான் எவ்வாறு மறக்க இயலும்! நான் இதைப் பற்றிச் சொன்னால் யாராவது நம்புவார்களா?" என்றுரைத்தார்.

நாராயண ஐயரின் மூத்த மகளுடைய திருமண நிச்சயதார்த்தம் செய்ய வேண்டியிருந்த பொழுது அவரிடம் பணம் ஏதும் இருக்கவில்லை. இந்து சம்பிரதாயப்படி, அந்தச் சடங்கிற்கும் அதைச் சார்ந்த பூஜைக்கும் சில பொருட்கள் தேவைப்பட்டன. நாராயண ஐயரின் மனைவி, "நீங்கள் ஏன் பகவானிடம் விண்ணப்பிக்கக் கூடாது?" என்று கேட்ட பொழுது, "லௌகிக விஷயங்களுக்காக நான் ஒரு போதும் பகவானிடம் கேட்க மாட்டேன்," என்று பதில் கூறிவிட்டார். அதனால் அவருடைய மனைவி நிச்சயதார்த்தத்தின் முக்கியத்துவத்தை எடுத்துக் கூறி பகவானிடம் மௌனமாகப் பிரார்த்தித்தார். இதன் பிறகு அந்த தம்பதி பகவானை காணச் சென்ற போது அவரை ஸஷ்டாங்கமாக நமஸ்கரித்தார்களே தவிர அந்த விஷயம் குறித்து மூச்சுக்கூட விடவில்லை. மறுநாள் காலை நாராயண ஐயரின் பெயருக்கு வந்திருந்த 51 ரூபாய்க்கான மணியார்டரை எடுத்துக் கொண்டு தபால்காரர் வந்தார். (மணியார்டர் வந்ததற்கான அடையாளச் சீட்டை நாராயண ஐயர் காட்டியதால் நானே பார்த்திருக்கிறேன்). திருவண்ணாமலைக்கு ஆயிரம் மைல்களுக்கப்பாலிருந்த அகமதாபாத்திலிருந்து வந்த அந்த மணியார்டரில், கடிதம் தொடர்கிறது என்ற ஒரு குறிப்பும் எழுதப்பட்டிருந்தது. அந்தப் பணத்தைக் கொண்டு தேவையானவற்றை அந்த தம்பதி வாங்கினர். மாப்பிள்ளையாகப் போகிறவர் வந்த போது அவருக்கு நல்ல வரவேற்பு அளிக்கப்பட்டது; திருமணத் தேதியும் நிச்சயிக்கப்பட்டது. மணியார்டரில் குறிப்பிடப்பட்டிருந்த கடிதத்தை நாராயண ஐயரும் அவரது மனைவியும் எதிர்பார்த்திருந்தனர். அவர்களுக்கு முன்பின் அறிமுகமில்லாத அகமதாபாத்திலிருந்த ஒரு குஜராத்தி கனவானிடமிருந்து பின்னர் அக்கடிதம் வந்தது. அதில் "அன்புடைய நாராயண ஐயர்! பகவான் ஸ்ரீ ரமண மஹர்ஷி என்னுடைய கனவில் தோன்றி 51 ரூபாய்க்கு, நான் உடனே ஒரு தந்தி மணியார்டர் அனுப்ப வேண்டும் என்று கூறியதோடு உங்களுடைய விலாசத்தையும் கொடுத்தார். எனக்கு உங்களைத் தெரியாது. இந்தப் பணத்தை எதற்காக அனுப்பச் சொன்னார் என்பதும் தெரியாது. தயவு செய்து இதை ஏற்றுக் கொள்ள வேண்டும்," என்று அதில் எழுதப்பட்டிருந்தது. (இந்தக் கடிதத்தையும் நான் பார்த்திருக்கிறேன்).

நாராயண ஐயர், அவரது மனைவி, மகள் ஆகியோர் பகவானிடம் சென்று ஸாஷ்டாங்கமாக வணங்கி கண்ணீர் மல்க, “பகவானே! எங்கள் மீது எத்தகைய அருளைப் பொழிந்துள்ளீர்கள்!” என்று கூறிக் கடிதத்தைக் காட்டிய போது, வேறு யாரோ அருள் புரிந்தது போன்று கடிதத்தை அவர் வாங்கிப் படித்தார். பின்னர் அவர் தம்பதியிடம் முழு கவனத்தையும் செலுத்தி “ஏனிந்த சந்தேகம்? என்னிடம் ஏன் கேட்கக் கூடாது?” என்று வினவினார். இதையே தான் நானும் உங்களிடம் பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன். நாம் ஆன்மீக நிறைவுக்காக மட்டுமே குருவிடம் செல்ல வேண்டும் என்பதில்லை. பூர்ணமான குருவால் மிக உயர்ந்த ஆத்மானுபூதியையே தர முடியுமென்றால், உங்களுடைய லௌகிக பிரார்த்தனைகளை அவர் நிறைவேற்ற மாட்டாரா?

இதே போன்ற ஒரு சந்தர்ப்பத்தில் ஒரு முறை தேவராஜ முதலியார் பகவானிடம், “பகவானே! உங்கள் தந்தையாகிய அருணாசலத்தை, கிருபையோடு கூடிய தயை உள்ளவர் என்றும் ஆத்ம ஸாக்ஷாத்காரத்தை அளிக்க வல்லவர் என்றும் புகழ்கிறீர்கள். அப்படியென்றால் என் மகளின் திருமணத்திற்காகவும் என்னுடைய வேலைக்காகவும் கூட நான் அவரிடம் வேண்டிக் கொள்ளலாம் என்று அர்த்தமா?” என்று வினவினார். பகவான் சிரித்தபடியே, “ஒருவரால் ஆத்மானுபூதியையே கொடுக்க முடியும் என்றால் வேலையின் பொருட்டும் மகன் பிறக்க வேண்டுமென்றும் நீங்கள் செய்யும் எளிமையான பிரார்த்தனையை நிறைவேற்றுவதில் அவருக்கு என்ன கஷ்டம் இருக்க முடியும்? உங்களிடம் லட்ச ரூபாய் இருக்கிறதென்றால் பத்து ரூபாயைக் கொடுப்பதில் உங்களுக்கென்ன கஷ்டம்?” என விடையளித்தார்.



ஒரு நாள் மாலை பழைய ஹாலில் ஸ்ரீ பகவான், “நீங்கள் பார்ப்பது அனைத்துமே உண்மையில்லையென்றும் பார்ப்பவன் மட்டுமே ஸத்தியம்” என்றும் மிகவும் அழுத்தமாகக் கூறினார். மறுநாள் மதியம் பகவான் தனிமையில் இருக்கும் பொழுது அவர் முன் அமர்ந்திருந்த நாராயண ஐயர், “பகவானே! எல்லாம் பொய்யா? நீங்கள் ஸாக்ஷாத் ஈச்வரன். நீங்கள் பொய்யா? நீங்கள் அமர்ந்திருக்கும் சோபா பொய்யா? இந்த ஹால் பொய்யா? இந்தத் தடுப்பு பொய்யா? பார்க்கும் நான் பொய்யா?” என்று நாராயண ஐயர் கேட்கவும் பகவான் மிகவும் அழுத்தமாக “இதுல என்ன ஓய் சந்தேகம்? எல்லாம் பொய்! பார்ப்பது எல்லாம் பொய்தான் ஓய்! எல்லாத்தையும் உள்ளேயிருந்து பார்க்கிறதே ஒரு வஸ்து அது ஒண்ணுதான் மெய்! மீதியெல்லாம் பொய்!” என்று பகவான் கூறினார்.

நாராயண ஐயர் ஒரு முறை பகவானிடம், “பகவானே! நான் இங்கு பல வருஷங்களாக இருக்கிறேன். பலரும் தியானம் செய்து ஸமாதிக்குச் சென்று விடுகின்றனர். நான் ஒரு நிமிடம் கண்ணை மூடுவதற்குள் என் மனம் பத்து தடவை உலகைச் சுற்றி வந்துவிடுகிறது. மறந்து போன எண்ணங்கள் பலவும் குதித்தெழுகின்றன. எனக்கு வேதனையாக உள்ளது!” என்று கூறுவதைக் கேட்ட பகவான், “நீர் ஏன் மற்றவர்கள் மீது கவனம் செலுத்துகிறீர்? அவர்கள் தியானம் செய்யலாம்; தூங்கலாம்; அல்லது குறட்டை கூட விடலாம். உம்மை மட்டும் பாரும்! மனம் எப்பொழுதெல்லாம் தடம் மாறிச் செல்கிறதோ, அப்பொழுதெல்லாம் அதை மீண்டும் விசாரத்தில் ஈடுபடுத்தும். அமைதியற்ற நிலையில்லாத மனம், எந்தப் பக்கம் அலைந்து திரிந்தாலும், அந்த மனதை மீண்டும் ஆத்மாவிற்கே கொண்டு வர வேண்டும் என்று பகவத்கீதையில் ஒரு சுலோகம் உள்ளது,” என்று

கூறினார். எனினும் பகவானது விளக்கம் நாராயண ஐயருக்குத் திருப்தி அளிக்கவில்லை. பின்னர் தாயுள்ளம் கொண்ட பகவான் மேலும் தெளிவு செய்யும் விதமாக, “குழந்தை இரவு தூங்கிய பின் அதை எழுப்பிப் பால் கொடுத்தால், அது மறுநாள் காலை ‘அம்மா! நேற்று இரவு எனக்குப் பால் கொடுக்கவேயில்லை’ என்று கூறும். அதே போன்று உமக்கும் தேவையானது கிடைத்து விட்டது,” என்று கூறினார். பகவானது இந்த உறுதிமொழி நாராயண ஐயருக்கு மட்டுமல்லாது நம் ஒவ்வொருவருக்கும் கொடுக்கப்பட்டதாகும்.

பகவானுடைய நிர்வாணத்திற்குப் பிறகு செய்யப்பட்ட முதலாம் ஆண்டு ஆராதனை விழாவில் கண்ணீர் சிந்தியபடி இருந்த பல பழைய பக்தர்களுடன் நான் இருந்தேன். அமைதியின் உருவமான பகவான் அவர்களை விட்டுச் சென்று விட்டதால் அவர்கள் அழுது கொண்டிருந்தார்கள். தேம்பித் தேம்பி அழுது கொண்டிருந்த நாராயண ஐயரை நான் அணைத்துக் கொண்டு “நாராயண ஐயர்! நீங்கள் இப்பொழுது என்ன அனுபவிக்கிறீர்கள்? என்று வினவியபோது, ‘என்னால் இப்போது பேச முடியாது’ என்று கூறிய அவரிடம் அவரது உணர்ச்சிகளை எழுத்தில் வடிக்குமாறு கேட்டுக் கொண்டேன். மலையடிவாரத்தில் அமர்ந்து எழுதிக் கொடுத்தவை ‘மவுண்டன் பாத் (The Mountain Path)’ மற்றும் மொமெண்ட்ஸ் ரிமெம்பெர்ட் ‘(Moments Remembered)’ ஆகிய புத்தகங்களில் வெளி வந்துள்ளன. பகவானது முதல் ஆராதனையன்று நாராயண ஐயர் எழுதிக் கொடுத்த உள்ளத்தை உருக்கும் வாசகங்கள் கீழே தரப்பட்டுள்ளன:- “பகவான்! ஹே பகவான்! என் அன்பான பகவானே! இன்று தானே நீங்கள் எங்களை விட்டுச் சென்றீர்கள். 1950-ம் ஆண்டு ஏப்ரல் 14-ம் தேதி மாலை முருகனாருடன் உங்களைக் காண்பதற்காக வரிசையின் கடைசியில் நின்றிருந்த எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. மாணிக்கவாசகப் பெருமானையும் தாயுமானவரையும் போன்று புல்லரித்துப் போனேன்’ என்று என்னால் கூற முடியுமா? நான் வெட்கமின்றிக் கதறி அழுதேன். விதிர்விதிர்த்தேன். அப்போது நானும் என் நண்பர் முருகனாரும் மட்டுமே அங்கு இருந்தோம். மூடிய கண்களோடும் மேல் நோக்கிய முகத்தோடும், பலஹீனமாகக் கிடந்த தங்களது உடலைப் பார்த்த போது, எனக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. ஆனால் நீங்கள் திரும்பி, உங்கள் முன் ஆழ்ந்த துக்கத்தில் மூழ்கி அழுது கொண்டிருந்தவர்கள் மீது பார்வையைச் செலுத்தினீர்கள். மீண்டும் திரும்பி கண்களை மூடிக் கொண்டு விட்டீர்கள். நாங்கள் அழுதவாறு அங்கேயே நின்று கொண்டிருந்தோம். நீங்கள் எங்கள் பக்கம் திரும்பி எங்களை மீண்டும் பார்த்தீர்கள். ஓ பகவானே! எங்களிடமிருந்து விடை பெறுவதற்காக அவ்வாறு பார்த்தீர்களா? அதுவே நீங்கள் கடைசியாகப் பார்த்த இறுதிப் பார்வையா? ‘என்னால் எங்கு போகமுடியும். நான் இங்குதான் இருக்கிறேன்’ என்ற உங்களது ஆறுதல் சொற்களே எங்களை வாழ வைக்கும் நித்தியமான ஞானம். உங்களது அன்பின் வெளிப்பாடான ஆயிரக்கணக்கான சம்பவங்களை நான் எவ்வாறு மறக்க முடியும்? நீங்களே அடுப்பை மூட்டி பிரத்தியேகமாக வறுத்துக் கொடுத்த பாதாம் பருப்பும், வேங்கடரத்தினத்திடம் எனக்காக எடுத்து வைக்கச் சொன்ன கடலைக் கூட்டின் சுவையும் இப்பொழுதும் என் நாக்கில் உள்ளது. என்னுடைய நண்பர் ஜி. வி. சுப்பராமையா என்னை அலுவலகச் சிக்கலிலிருந்து விடுவிப்பதற்காகத் தங்களிடம், ‘பாவம் நாராயண ஐயர்! பகவானால் அவருக்கு எதுவும் செய்ய முடியாதா?’ என்று கேட்டபோது, ‘அவருக்கு என்ன தேவை இருக்கு?’ என்று நீங்கள் கேட்டீர்கள் அல்லவா? உங்களது இறுதி நாட்களில் ஒரு நாள் ‘எனக்குப் பாதுகாப்பளியுங்கள் பகவானே!’ என்று ஜி. வி. சுப்பராமையா வேண்டிக் கொண்ட போது ஒரே சொல்லில் ‘இச்சானு’ (கொடுத்து விட்டேன்) என்றீர்களே! அந்தச் சமயத்தில் அவர் கேட்டதையே நானும் வேண்டுகிறேன் என்று கூறும் வகையில் அவர் கையுடன் என் கையைப் பிணைத்துக் கொண்டதை நீங்கள் பார்த்தீர்களே! தாங்கள் அருள் புரிந்த சம்பவங்களுக்கு கணக்கேது? பகவானே! அவை எவ்வாறு வீணாகப் போகும்? கண்ணீரால் மாய்க்கப்பட்ட எத்தனை பக்கங்கள் நான் எழுதி

விட்டேன். தங்களுக்கு எனது வணக்கங்கள்! அன்பான எண்ணங்களோடு உங்களது புனிதப் பாதங்களிலேயே நான் எப்பொழுதும் இருக்கிறேன். இங்கு கூடியிருப்பவர்களுடைய இதயத் துடிப்போடு எனது இதயமும் சேர்ந்து மாறா அன்பை தங்களுக்குக் காணிக்கையாக அளிக்கிறது,'' என்று குறிப்பிட்டிருந்தார்.

அஞ்ஞானத்தோடு பிணைக்கப்பட்டு துயருறும் நம் அனைவரையும் காக்கும் பொருட்டு பகவான் அருணாசலத்தில் தோன்றினார். நாம் சரீரத்துடன் நம்மை இணைத்துக் கொள்ளும் வரை, துக்கங்கள் தொடர்ந்து கொண்டுதானிருக்கும். ஆனால் 'நான் யார்?' என்ற கேள்வியை எழுப்பித் தொடரும் மௌனத்தைக் கவனித்தால் அந்த மௌனமே அருணாசலம்; அதுவே ரமணர்; அந்த மௌனமே நமது உண்மை ஸ்வரூபம்.

**'பழைய ஹால்', ஆரம்ப காலத்தில்**



# 65 டாக்டர் T. N. கிருஷ்ணஸ்வாமி



'தனக்கு பகவானின் சரீரமே எல்லாம்', எனக் கருதிய ஒரே பக்தர், டாக்டர் TNK என்று எல்லோராலும் அழைக்கப்பட்ட டாக்டர் T. N. கிருஷ்ணஸ்வாமி. அருணாசல மலை முழுவதுமே மிகவும் தெய்வீகமானது என்றும், அது இறைவனே தான் என்றும் பகவான் அவருக்கே வெளிப்படுத்தினார். அது எவ்வாறு நடந்தது என்று டாக்டர் TNK விவரிக்கையில், "ஒரு நாள் பகவானைத் தொடர்ந்து மலை மீது ஏறிக் கொண்டிருந்த போது, அவர் சற்று நின்று பாதையிலிருந்த ஒரு கல்லையெடுத்து என்னிடம் காட்டி, 'வெளிநாட்டிலிருந்து ஒருவர் இந்த மலையில் மிகவும் புனிதமான ஒரு இடத்திலிருந்து ஒரு கல் வேண்டுமென்று கேட்டு எழுதியுள்ளார். அவருக்கு இந்த மலை முழுவதுமே பூஜிக்கத் தக்கது என்பது தெரியாது. நமது உடல் நம்மை அடையாளம் காட்டுவது போன்று சிவபெருமான் தன்னை அடையாளம் காட்டுவதற்கு இந்த மலையைத் தேர்ந்தெடுத்துள்ளார். நம்பிக்கையோடு அணுகும் போது அருணாசலத்தின் அசைவற்ற தன்மையே தூய ஞானம். தந்தையைத் தேடுபவர்களின் மீது கருணை கொண்டே அவர் கண்ணுக்குப் புலப்படக்கூடிய இப்புனித உருவில் தன்னை மனமுவந்து வெளிப்படுத்திக் கொண்டுள்ளார். ஸாதகன் மலைக்கருகில் வசிக்கும் பொழுது அதனிடமிருந்து வழிகாட்டுதலையும் ஆறுதலையும் பெறுவான்'" என்று பகவான் சொன்னதாகக் கூறினார்.

சென்னையில் மிகுந்த கைராசியுடைய வைத்தியர் என்று பெயர் பெற்றிருந்த டாக்டர். கிருஷ்ணஸ்வாமி அருணாசலத்தைப் பற்றிய இந்த உண்மையை நாம் எல்லோரும் அறிய ஒரு கருவியாக இருந்தது மட்டுமல்லாமல், இப்பொழுது நமக்குக் கிடைத்திருக்கும் பகவானுடைய அநேக புகைப்படங்களை எடுத்தவரும் ஆவார். டாக்டர் TNK பகவானிடம் எவ்வாறு ஈர்க்கப்பட்டார் என்பது சுவையான ஒரு கதை. 1930-களில் டாக்டர் கிருஷ்ணஸ்வாமி தனது மருத்துவப் படிப்பின் இறுதித் தேர்விற்காகத் தயார் செய்து கொண்டிருந்தார். நீண்ட கடுமையான படிப்பில் பலமணி நேரம் மும்முரமாக ஈடுபடுவதிலிருந்து சற்று ஓய்வு பெற எண்ணி, அவரும் அவருடைய சக மாணவர்களில் சிலரும் வேலூரிலிருந்த பழமையான கோட்டையைப் புகைப்படம் எடுப்பதற்காகச் சென்றனர். வேலூர் சென்ற பிறகு அந்தக் கோட்டை படம் பிடிக்குமளவுக்கு கவர்ச்சிகரமாக இல்லாததைக் கண்டு, அவர் மிகுந்த ஏமாற்றமடைந்தார். அவருடைய ஏமாற்றத்தைக் கண்ட உள்ளூர்வாசி ஒருவர், "நீங்கள் ஏன் ஏமாற்றமடைகிறீர்கள்? திருவண்ணாமலைக்குச் செல்லுங்கள். அங்கு உங்கள் கண்ணிற்கும் கேமராவிற்கும் விருந்தளிக்கக்கூடிய ஒரு பழமையான கம்பீரமான கோயில் ஒன்று உள்ளது" என்று கூறினார். ஆகவே அவர் தமது நண்பர்களுடன் திருவண்ணாமலைக்குச் சென்றார். அங்கு புகைப்படங்கள் எடுத்துக் கொண்டிருந்த போது அருகில் ரமணாச்ரமத்தில் வாழ்ந்த ஒரு ஞானியைப் பற்றி யாரோ ஒருவர் கூறியதோடு, "அவரை ஏன் நீங்கள் போட்டோ எடுக்கக் கூடாது?" என்றும் கேட்டார்.

ஸாது ஒருவர் புகைப்படம் எடுக்கத் தக்க கவர்ச்சியுடையவராக இருக்க முடியுமா? என்பதில் டாக்டர் கிருஷ்ணஸ்வாமிக்குச் சந்தேகம் இருந்தது. இருந்த போதும் நண்பர்களோடு ஆச்ரமத்திற்கு வந்தார். அந்தக் காலத்தில் ரமணாச்ரமத்தில் புகைப்படம் எடுப்பவர்களைக் காண்பது மிக அரிது. அவரைப் பார்த்ததும் ஆச்ரமவாஸியான சேஷு ஐயர் 'சிறிது காத்திருந்து, பகவானைப் புகைப்படம்

எடுக்க வேண்டும்' எனக் கேட்டுக் கொண்டார். மலைமீது சென்றிருந்த பகவான் அப்பொழுதுதான் திரும்பி வந்து கொண்டிருந்தார். சேஷு ஐயர் பகவானிடம் சென்று, "இந்தக் குழுவினர் சென்னையிலிருந்து வந்துள்ளனர். உங்களைப் படம் எடுப்பதற்காகக் காத்திருக்கின்றனர்," என்று கூறவும் பகவான் அவர்களை நோக்கி குறிப்பாகக் டாக்டர் கிருஷ்ணஸ்வாமியைப் பார்த்தவாறு, 'அப்படியா! எடுத்துக் கொள்ளட்டும்' என்று கூறியதோடு மட்டுமல்லாமல், அவர்கள் புகைப்படம் எடுக்கத்தக்க விதத்தில் நின்றார். டாக்டர் கிருஷ்ணஸ்வாமி பகவானை முதன் முறையாக எடுத்த படம் அதுவே. பிற்காலத்தில் எண்ணிலடங்காப் புகைப்படங்கள் எடுக்கப்பட்டபோதும், முதலில் எடுத்த அந்தப் படமே டாக்டர் TNK க்கு மிகவும் விருப்பமானது.



**பகவான் – பத்மாசனத்தில்**

டாக்டர் கிருஷ்ணஸ்வாமியும் நண்பர்களும் கிளம்பிக் கொண்டிருந்த சமயம் காவியணிந்த ஸந்நியாசி ஒருவர் அவர்களது பின்னால் ஓடி வந்து, டாக்டர் கிருஷ்ணஸ்வாமியிடம், ‘‘ஆச்ரமத்தில் எங்களிடம் பகவானுடைய நல்ல படமொன்றும் இல்லை. ஏதானாலும் நீங்கள் படம் பிடித்திருப்பதால் அதன் சில பிரதிகளை பக்தர்களுக்குக் கொடுக்கக் கூடிய வகையில் எங்களுக்கு அனுப்பலாமே?’’ என்று அபிப்ராயம் சொன்னார். டாக்டர் கிருஷ்ணஸ்வாமி சென்னைக்குத் திரும்பியதும் தானே போட்டோக்களைக் கழுவி பிரதிகள் எடுத்து அந்த ஸந்நியாசிக்கு அனுப்பி வைத்தார். அந்த ஸந்நியாசியால் வசீகரிக்கப்பட்ட டாக்டர் கிருஷ்ணஸ்வாமி அவரது விருப்பங்களையும் உத்தரவுகளையும் தனது வாழ்நாள் முழுவதும் நிறைவேற்றி வைத்தார். இந்த ஸந்நியாசி வேறு யாருமில்லை, பகவானின் இளைய சகோதரரான சர்வாதிகாரி நிரஞ்சனானந்த ஸ்வாமியே! டாக்டர் எடுத்த இந்த முதல் படமே சர்வாதிகாரிக்கும் மிகவும் பிடித்ததாக இருந்திருக்க வேண்டும். ஏனெனில் தனது அலுவலகச் சுவற்றில், குறிப்பிட்ட இந்தப் படத்தையே மாட்டி வைத்திருந்தார்.

1960-ல் நான் பேட்டி கண்ட டாக்டர் TNK, பகவானுடைய முதல் பார்வையை விவரிக்கும் பொழுது, ‘‘பகவானை என்னுடைய கேமராவில் வெற்றிகரமாகப் பிடித்து விட்டேன் என்று நான் எண்ணினேன். வெகு விரைவிலேயே பகவான்தான் தன்னுடைய இதயத்தில் நான் ஒரு போதும் தப்பிக்க முடியாத வகையில் என்னைச் பிடித்து வைத்து விட்டார் என்பதை உணர்ந்து கொண்டேன்,’’ என்று அவர் கூறினார். நான் தொடர்ந்து, ‘மஹர்ஷியை முதன் முதலில் பார்த்தபோது எப்படி இருந்தது?’ என்று கேட்டதற்கு அவர், ‘‘தன்னைச் சுற்றி இருந்த எதையுமே பகவான் கவனித்ததாகத் தெரியவில்லை. அவரது பார்வை அமைதியாகவும் எவ்வித இலக்கு இல்லாதது போன்றும் இருந்தது. இனம் புரியாத தெய்வீகத்தை வெளிப்படுத்திய அவர் முகத்தில் கண்கள் ஒளி வீசின,’’ என்று பதிலிறுத்தார்.

டாக்டர் கிருஷ்ணஸ்வாமி தாம் எடுத்த பகவானுடைய முதல் புகைப்படத்தை ஆச்ரமத்திற்கு அனுப்பிய சில நாட்களுக்குப் பிறகு அவர்கள் பகவானைச் சில பக்தர்களோடு சேர்ந்து புகைப்படம் எடுப்பதற்காக வர வேண்டும் என்று விண்ணப்பித்து அவருக்குப் பதில் எழுதினர். பின்னர், டாக்டர் கிருஷ்ணஸ்வாமி இது பற்றி நினைவு கூர்ந்த போது, ‘‘நான் அந்த முதல் புகைப்படத்தைப் பற்றி ஏற்கனவே மறந்து விட்டேன். ஏனென்றால் மாணவனாக இருந்த என் மனதைச் சிதறச் செய்யவும் கவரவும் பல விஷயங்கள் இருந்தன. ஆகவே அந்தக் கடிதம் வந்ததும் அது ஒரு தொல்லையாக ஆகி வருவது போன்று எனக்குத் தோன்றியது,’’ என்று கூறினார். விசித்திரமாக வெகு சீக்கிரத்திலேயே திருவண்ணாமலை செல்லும் ரயிலில் தன்னுடைய கேமராவுடன் தான் அமர்ந்திருப்பதை டாக்டர் கிருஷ்ணஸ்வாமி உணர்ந்தார். அவர் ஆச்ரமத்தினுள் நுழைந்த போது பகவான் அவரை நோக்கி வரவேற்கும் விதமாக அழகான புன்னகையை உதிர்த்து, ‘‘இவர்களுக்கு எல்லோரும் சேர்ந்திருக்கும் ஒரு போட்டோ வேண்டுமாம். அதை நீங்கள் தான் எடுக்க வேண்டும் என்று விரும்புகிறார்கள்,’’ என்றார். அதனால் பெருமிதம் கொண்டு டாக்டர் கிருஷ்ணஸ்வாமி மகிழ்ச்சியோடு, அவர்கள் கூறியபடி போட்டோ எடுத்தார். அதன் பின்னர் ‘‘பகவானே! தயவு செய்து உங்களை நான் ஒரு போட்டோ எடுத்துக் கொள்ளட்டுமா?’’ என்று அவரிடம் கேட்க டாக்டர் TNK-யை ஏதோ ஒன்று தூண்டியது. பகவான் அதற்கு இசைந்து பத்மாசனத்தில் அமர்ந்தார். 1930-40-களில் இந்த போட்டோ பகவானுடைய பல பக்தர்களின் இல்லங்களை அலங்கரித்தது. இதன் பிறகு விரைவிலேயே டாக்டர் கிருஷ்ணஸ்வாமி மருத்துவப் படிப்பை முடித்துக் கொண்டு சென்னையில் மருத்துவராகி புகழ் ஈட்டினார்.

அப்போதிருந்து ஆச்ரமத்திற்கு வருவது டாக்டர் TNK-க்கு வழக்கமான ஒரு வேலையாயிற்று. இவ்வாறு ஒரு முறை வந்த சமயம் அவர் ஹாலில் நுழைந்தவுடன் "இப்போது தான் உன்னைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தோம். அவர்கள் உனக்கு ஒரு கடிதம் எழுதியுள்ளனர். இன்னும் அதைத் தபாலில் சேர்த்திருக்க மாட்டார்கள் என்றே நினைக்கிறேன். அதை நீ நேரிலேயே பெற்றுக் கொண்டு விடலாம்," என்று பகவான் கூறினார். டாக்டர் TNK என்னிடம், "இது போன்ற பல ஒத்த சம்பவங்கள் யதேச்சையாக நிகழ்ந்தன. வாரா வாரம், மாதா மாதம், வருடா வருடம் நான் என் கேமராவுடன் அங்கு சென்று காலையிலிருந்து மாலைவரை பகவானைப் போட்டோக்கள் எடுப்பேன்," என்று கூறினார். இன்று நாம் பார்க்கும் பகவானின் புகைப்படங்களில் அநேகமாக எண்பது சதவிகிதம் அவரால் எடுக்கப்பட்டவையே. பிற்காலத்தில் பெங்களூருவைச் சேர்ந்த G. G. வெல்லிங்ஸ் போன்ற மற்றும் சில புகைப்படக்காரர்களுக்குப் பகவானைப் படம் எடுக்க எப்போதாவதுதான் அனுமதியளிக்கப்பட்டது. ஒரு ஆன்மீக காந்தத்தைப் போன்று பகவான் டாக்டர் TNK-யை மீண்டும் மீண்டும் ஈர்த்தார். "எது உங்களைப் பகவானிடம் மீண்டும் மீண்டும் வரச் செய்தது?" என நான் அவரிடம் கேட்ட பொழுது, எதிர் கேள்வியாக "எது குழந்தையைத் தாயிடம் செல்லுமாறு செய்கிறது?' என்று கேட்டுவிட்டு, "பகவான் எனக்குத் தாயைப் போன்றவர். நான் அவ்வாறு உணர்ந்ததாலேயே மீண்டும் மீண்டும் அவரிடம் சென்றேன்," என TNK கூறினார்.



டாக்டர் TNK 'ஆச்ரம புகைப்படக்காரர்' என்ற பட்டப்பெயரைப் பெற்றார். அவர் எவ்வாறு புகைப்படங்களை எடுத்தார் என விவரிக்குமாறு நான் கேட்டுக் கொண்ட போது அவர், "நான் ஆச்ரமத்திற்குச் சென்ற போது வழக்கமாக ரொம்பக் கொஞ்ச நாட்களே அங்கு தங்கினேன் என்றாலும் காலையிலிருந்து மாலை வரை மஹர்ஷியைத் தொடர்ந்து சென்று எத்தனை படங்கள் எடுக்க முடியுமோ அத்தனை படங்கள் எடுப்பது என்பதில் மிக உறுதியுடன் இருந்தேன். அவர் பின்னாலேயே நானிருந்தது பகவானுக்கு எரிச்சலை மூட்டியிருக்குமோ? என்று கூட எனக்கு தோன்றியதுண்டு. அவர் நடப்பதையும் உட்கார்ந்திருப்பதையும் உணவருந்துவதையும் கால் கழுவுவதையும் கூட நான் போட்டோ எடுத்துள்ளேன். அவர் புன்னகைத்த போது, வாய்விட்டுப் பலமாகச் சிரித்த பொழுது, குழந்தையைப் பார்த்துச் சிரித்த போது, தியான நிலையிலிருந்த போது, ஸமாதியில் ஆழ்ந்திருந்தபோதும் கூட நான் அவரைப் படம் எடுத்துள்ளேன். ஒரு முறை அவர் மலை மீது ஏறிக்கொண்டிருந்த போது லேசான மழைச்சாரல் இருக்கவே கொங்கணி என்ற பனை ஓலையினாலான நாட்டுக்குடை அவருக்கு அளிக்கப்பட்டது. இதை அவர் தலையில் அணிந்தபடி ஒரு படம் எடுத்தேன். சாதாரணக் குடையைப் பிடித்தவாறும் ஒரு போட்டோ எடுத்திருக்கிறேன். அந்தப் படத்தை எடுக்க நான் முயன்ற போது பகவான் என்னை நோக்கிப் பலமாகச் சிரித்தார்," என்றார் டாக்டர். ஒவ்வொரு புகைப்படத்திற்குப் பின்னாலும் ஒரு கதை உண்டு. ஆனால் அவற்றில் பல பதிவு செய்யப்படவில்லை. அதனால் டாக்டர் TNK-யைப் பார்த்த போதெல்லாம் மேலும் இம்மாதிரிக் கதைகளைக் கூறுமாறு நான் நச்சரிப்பேன்.



ஒரு முறை நூற்றுப்பதினேழு படங்களோடு கூடிய 'The Maharshi' என்ற ஒரு புத்தகத்தை ஆச்ரமம் வெளியிடுவதாக இருந்தது. ஆச்ரமத்தில் டாக்டர் TNK எடுத்த புகைப்படங்கள் நிறைய இருந்தபோதும் அருணாசல மலையின் சரியான படம் ஒன்று கூட இருக்கவில்லை. அதனால் புத்தகத்தில் வெளியிடத்தக்க விதத்தில் மலையின் அழகான படமொன்றை எடுத்துத் தரும்படி ஸ்வாமி நிரஞ்ஜனானந்தர் அவரைக் கேட்டுக் கொண்டார். டாக்டர் TNK-க்கு மாதா, பிதா, குரு, தெய்வம் எல்லாமே பகவான்தான். அதனால் அவர் பகவானிடம் சென்று, "அவர்கள் மலையைப் போட்டோ எடுத்துத் தருமாறு கேட்கிறார்கள். நான் என்ன செய்ய வேண்டும்?" என வினவியபோது "தெற்கிலிருந்து ரயில் தண்டவாளங்கள் திருவண்ணாமலையை வந்தடையும் முன்னர், ஒரு ரயில்வே பாலமிருக்கு. அங்கிருந்து நீ அருணாசலத்தை நோக்கினால் அருணாசலத்தின் சிகரமும், கோயிலின் பிரதான கோபுரமும் ஒரே நேர் கோட்டில் இருப்பதைக் காணலாம்;. அக்காட்சி மனதைக் கொள்ளை கொள்வதாக இருக்கும். அதைப் படம் பிடி," என பகவான் பதிலிறுத்தார். இந்நிகழ்ச்சியைப் பற்றிய சிந்தனைகள் எழுந்தபோது, டாக்டர் TNK என்னிடம் ஒரு கேள்வியைக் கேட்டு விட்டுத் தானே பதிலையும் கூறினார், "கணேசன்! பகவானுக்கு அது எவ்வாறு தெரிந்திருக்கக் கூடுமென்று நீ எண்ணுகிறாயா? பகவானுடைய இடத்தில் உன்னை வைத்துப் பார். வீட்டை விட்டு ஓடிவந்து, தந்தையைத் தேடிக்கொண்டு, தன்னை மறந்த நிலையில் பதினாறு வயதுச் சிறுவனாக அந்த வழியாக அவர் ரயிலில் ஒரே ஒரு முறை மட்டுமே பிரயாணம் செய்திருந்தார். இருந்தாலும் அந்தப் பாலத்திலிருந்து நொடிப் பொழுது மட்டுமே அவர் கண்ட மலைச் சிகரம், கோயில் கோபுரம் இவற்றின் காட்சி எவ்வளவு ஆழமாக இதயத்தில் பதிந்திருந்தால், இத்தனை வருஷங்களுக்குப்பின் அதை இவ்வளவு தெளிவாகவும் உடனடியாகவும் மனதில் கொண்டு வந்திருக்க முடியும்! ஒரு ஞானியின் ஒவ்வொரு அசைவுக்கும் சொல்லுக்கும் சைகைக்கும் ஆழ்ந்த பொருளுள்ளது. ஏனெனில் அவர் எப்பொழுதும் நிகழ்காலத்திலேயே இருக்கிறார்," என்றுரைத்தார். ரமண மஹர்ஷியின் சரித்திரத்தில் டாக்டர் TNK நமக்கு ஒரு முக்கியமான இணைப்பு என்பதால், சென்னைக்குச் சென்ற பொழுதெல்லாம் அவரது இல்லத்திற்குச் சென்று அவரை வணங்கி, "பகவானைப் பற்றி இன்னும் நிறையக் கூறுங்கள்" என அவரைத் தொந்தரவு செய்வேன். அது மட்டுமின்றி அவர் எடுத்த போட்டோக்களின் கணக்கற்ற 'நெகடிவ்' (negative)-களை சேகரித்துக் கொள்வேன். இம்மாதிரியான ஒரு சமயத்தில் நூற்றுக்கணக்கான 'நெகடிவ்'களை ஒரு பெரிய துணியில் மூட்டையாகக் கட்டிக்கொண்டு ஆச்ரமத்திற்கு எடுத்து வந்தேன்.



ஒரு நாள் டாக்டர் TNK பரவச நிலையில் இருப்பது போல் தோன்றியது. அவரைக் காணக் காத்திருந்த நோயாளிகளை எல்லாம் வெளியே அனுப்பிவிட்டு, என்னை மாடியிலிருந்த தனது அறைக்கு வருமாறு கூறினார். அங்கு கண்களில்

ஆனந்தக் கண்ணீர் பொங்க பகவானின் மகிமையையும் மேன்மையையும் கம்பீரத்தையும் பற்றிப் பேசினார். ‘‘ஒரு முறை கூட நேரடியாகவோ மறைமுகமாகவோ நிரஞ்ஜனானந்த ஸ்வாமியின் மூலமோ அல்லது தொண்டர்கள் மூலமோ புகைப்படம் எடுப்பதை நிறுத்தும்படி பகவான் என்னிடம் கூறயதே இல்லை. மாறாக சிறிதும் தயக்கமின்றி என் விருப்பத்திற்கேற்ப நின்று கொண்டும், அமர்ந்து கொண்டும் என்னைப் படம் பிடிக்க அனுமதித்தார். ‘முகத்தை இந்தப் பக்கம் திருப்புங்கள்; மேலே பாருங்கள்; பக்கவாட்டில் பாருங்கள்; கைகளைத் தொங்க விடுங்கள்; இம்மாதிரி வைத்துக் கொள்ளுங்கள்,’ என்று நான் அவரிடம் சொன்னதாகவும், எனது வேண்டுகோளின்படியே அவர் நடந்து கொண்டாரென்றும் நான் இப்போது கூறினால், ஒருவரும் நம்பமாட்டார்கள். மலை மீது பகவானை நான் படம் எடுத்த போது அவரது தொண்டர்களைத் தவிர வேறு யாரும் அங்கு அனுமதிக்கப்படவில்லை. வேறு யாரேனும் அங்கு இருந்திருந்தால் நான் சொன்னபடியெல்லாம் அவர் செய்வதைக் கண்டு, ‘பகவானுக்குத் தன்னை போட்டோ எடுத்துக் கொள்வதில் பேரார்வம் உள்ளதாகத் தவறாக எண்ணிக் கொண்டிருக்கலாம்’ உண்மை என்னவென்றால் என் குரு என்னும் முறையில் அவரைப் படம் எடுக்க வேண்டும் என்ற எனது தீராத ஆசையை அவர் நிறைவேற்றிக் கொண்டிருந்தார்; அவ்வளவுதான். வாழ்நாள் முழுவதும் ஒவ்வொரு பக்தரின் ஒவ்வொரு பிரார்த்தனையையும் நிறைவேற்றி வைத்தவரன்றோ அவர்?’’ என்று உரைத்த டாக்டர் TNK தொடர்ந்தார்.



**... தக்ஷிணாமூர்த்தி கோலத்தில்**

‘‘ஒரு முறை பகவானை ஒரு காலை மற்ற காலின் தொடை மீது வைத்து பாரம்பரிய தக்ஷிணாமூர்த்தியின் தோற்றத்தில் அமரச் செய்து போட்டோ எடுக்க வேண்டுமென நிரஞ்ஜனானந்த ஸ்வாமி என்னிடம் கேட்டுக் கொண்டிருந்தார். பகவானும் ஒப்புதலளித்திருந்தார். மலை பின்னால் தெரியும் விதமாக ஒரு பாறையைத் தேர்ந்து, அதில் பகவான் அமரும் படி செய்தோம். அமர்வதற்கு முன்னர் தொண்டரிடமும் என்னிடமும், ‘‘எந்தக்கால் மேலே இருக்க வேண்டும், எது கீழே இருக்க வேண்டும்?’’ என்று அவர் கேட்கவும் நிச்சயமாக எங்களுக்கு அது தெரியாததால், சற்று குழப்பமடைந்தோம். ‘‘பரவாயில்லை. இரண்டு படங்கள் எடு - வலது கால் மேலே வைத்து ஒன்றும், இடது கால் மேலே வைத்து ஒன்றும் எடு’’ என்று பகவான் உரைக்கவே பிரச்சனை தீர்ந்துவிட்ட நிம்மதியுடன் பகவான் கூறியபடி படங்களை நான் எடுத்தேன்’’ என்று டாக்டர் TNK முடித்தார்.

‘நீங்கள் எந்தப் படத்தையாவது பகவானுடைய அனுமதியின்றி அவருக்குத் தெரியாமல் எடுத்ததுண்டா?’ என நான் ஒரு முறை கேட்ட பொழுது, ‘‘போட்டோ எடுப்பதற்கு முன் எப்போதுமே அவரிடம் அனுமதி பெற்று விடுவேன். நமது சாஸ்திரங்கள் ஸத்குருவின் பாதங்களை மிக உயர்வாகப்

போற்றுவதால் பகவானுடைய திருப்பாதங்களைப் படம் பிடிக்க விரும்பிய போது மட்டும், நான் அனுமதி பெறவில்லை. பகவான் தனது மஞ்சத்தில் சாய்ந்தவாறு இருந்த போது அவரது பாதங்களுக்கு முன் சில மலர்களைத் தூவுமாறு தொண்டரிடம் கேட்டுக் கொண்டிருந்தேன். பகவானின் பார்வையிலிருந்து எனது கேமராவை மறைத்துக் கொண்டு வணங்குவதற்குக் குனிவது போல் பாவனை செய்து சட்டென்று நிமிர்ந்து போட்டோ எடுத்துவிட்டேன். பகவானது உருவம் தெளிவாக வரவில்லை. ஆனால் பாதங்கள் நன்றாகப் பதிந்திருந்தன. நான் வெளியே நழுவ முயற்சி செய்தபோது தன்னருகில் வரும்படி பகவான் எனக்குச் சைகை செய்தார். அவர் என்னை நோக்கிய போது, ‘உங்களது குறும்புத்தனம் எனக்குத் தெரியாதா என்ன?’ என்றுரைப்பது போன்ற ஒரு புன்னகை அவரது கண்களில் நடனமிட்டது. அந்த நிகழ்வை முதன் முதலாக இப்போது உன்னிடம்தான் சொல்லியிருக்கிறேன். இத்தனை காலமாக அப்புகைப்படத்தை மறைத்து வைத்திருந்து நான் தனிப்பட்ட முறையில் பூஜித்து வந்தேன். இப்போது அதை உனக்குத் தரலாம் என்று தோன்றுகிறது. அதன் ‘நெகடிவ்’களை உனக்குத் தருகிறேன். தன்னுடைய திருப்பாதங்கள்



பக்தர்களின் இல்லங்களையும் இதயங்களையும் அலங்கரிக்க வேண்டுமென பகவான் எண்ணுகிறாரோ என்னவோ!" என்றார் டாக்டர் TNK. இந்நிகழ்ச்சி 1967-ல் நடந்தது. அச்சமயத்தில் ரமணரின் புகைப்படங்களைத் தாங்கிய நினைவு மலரை ஆச்ரமம் வெளியிடவிருந்ததால் நான் புளகாங்கிதமடைந்தேன். எதிர்பார்க்காத இந்த அற்புதமான திருப்பத்தின் விளைவாக, எனக்குக் கிடைத்த ஈடிணையற்ற அத்தகைய திருப்பாதங்களின் ஒரே போட்டோவிற்கு உரிய மதிப்பையளித்து, நினைவு மலரின் முக்கியமான முதல் பக்கத்தில் அதை என்னால் பிரசுரிக்க முடிந்தது.

நான் அவரிடம் ஒரு முறை, "புகைப்படங்கள் எடுப்பது மட்டுமே போதாது என உங்களுக்குத் தோன்றியதே இல்லையா?" என வினவினேன். "சில சமயங்களில் 'நான் இந்த உடம்பில்லை' என்பதே பகவானின் உபதேசமாக இருக்கும் போது அவருடைய உடம்பைப் படம் எடுப்பதில் நான் செலுத்தும் கவனம் பைத்தியக்காரத்தனமானதோ? என்றும், ஒளியான பகவானை விட்டு, அவர் நிழலாகக் கருதுவதைப் பின் தொடர்ந்து சென்று அதை நிலை நிறுத்த முற்படுகிறேனோ? என்றும் ஆலோசித்ததுண்டு. ஆனால் என் கண்களால் அவரை நான் பார்த்துக் கொண்டிருந்த வரை அவரது உபதேசம் எனக்கு முக்கியமானதாகப் படவில்லை. அவரது உருவத்தை நான் கண்ணால் கண்டேன்; அது என்னைக் கவர்ந்தது; அதனால் நான் அவரிடம் ஈர்க்கப்பட்டேன். அவரைப் போட்டோ எடுப்பது எனக்கு அளவற்ற மகிழ்ச்சியைத் தந்தது. அவருடைய போதனைகளை விட அவர் எனக்கு முக்கியமானவராக இருந்தார். எப்பொழுதும் தெய்வீக மணம் பரப்பிய அவருடைய சிறு சிறு அசைவுகளையும், எல்லா செயல்களையும், சைகைகளையும் நான் பெரிதும் மதித்தேன். அவர் என்ன செய்து கொண்டிருந்தாலும் அதைப் பார்த்துக் கொண்டிருப்பதே மிகுந்த திருப்தியை அளித்தது," என தனக்கிருந்த மனநிலையை டாக்டர் TNK ஒப்புக் கொண்டார்.

ஏற்கனவே கூறியபடி டாக்டர் TNK நல்ல புகைப்படக் கவிஞர் மட்டுமின்றி சிறந்த மருத்துவராகவும் இருந்தார். சென்னையில் பல பிரமுகர்களுக்கு குறிப்பாகப் புகழ்பெற்ற சினிமா நடிகர்கள், பிரபலமான கர்நாடக இசைக் கலைஞர்கள், மற்றும் மக்களின் மதிப்பிற்குப் பாத்திரமானவர்கள் இவர்களுக்கு வைத்தியராக இருந்தார். தன்னிடம் வந்துவிட்டதோடு தனக்குத் தொண்டாற்றியவருமான டாக்டர் TNK-க்கு ஆன்மீக ரீதியில் பகவான் பரிசளிக்காமலா இருப்பார்? நல்ல புகைப்படக்காரராகவும், செல்வந்தரான சிறந்த டாக்டராகவும் மட்டும் அவர் இருப்பதற்கு விட்டு விடுவாரா? அதனால் தனது இறுதி நாட்களில் தன்னுடன் தங்கிச் சேவை செய்யும் பாக்கியத்தை டாக்டர் TNK க்கு பகவான் அளித்தார்.

பல ஆண்டுகளுக்குப் பின் பகவானது வாழ்க்கையில் இறுதி நொடிகளைப் பற்றி விவரமாகக் கூறுமாறு நான் டாக்டர் TNK-யிடம் கேட்டேன். கண்களிலிருந்து கண்ணீர் பெருகித் துக்கம் தொண்டையை அடைத்ததால், அவரால் ஒரு வார்த்தை கூடப் பேச முடியவில்லை. அதனால் அதை எழுதித் தருமாறு நான் கூறிய போது அவர் எழுதித் தந்தது இதுதான்—"மஹர்ஷியின் இறுதி நாட்களில் அவருடனே தங்கும் அரிய சலுகையை நான் பெற்றிருந்தேன். அவர் உடலை உகுக்கப்போகும் தருணம் நெருங்கிவிட்டதை உணர்ந்து நமக்கெல்லாம் ஏதாவது செய்தியை விட்டுச் செல்வாரா என்று அறியும் ஆவலுடன் நான் கவனித்துக் கொண்டிருந்தேன். அவர் ஆறுதலாக இரண்டு வார்த்தைகள் கூற மாட்டாரா? நாம் செய்ய வேண்டியது யாதெனத் தெரிவிக்க மாட்டாரா? என மனம் பதைபதைத்தது. அவர் உடலளவில் படும் துன்பம் மிகுந்த வருத்தத்தைத் தந்தது. ஆனால் அதை அவர் ஏற்றுக் கொண்ட விதம் புரியாத புதிராக இருந்தது. தனது உடலில் இருந்த வலியையும் வேதனையையும் விவரிக்கும் போது வேறு யாருடைய உடம்பைப் பற்றியோ கூறுவது போன்று தெரிவிப்பார். அவர் துன்பப்படுகிறாரா, இல்லையா என்பதே ஒரு கேள்விக்குறியாக இருந்தது.

உடம்பில் எந்த பாகத்தில் வலியும் வேதனையும் உள்ளன என்பதைத் துல்லியமாக உரைக்கும் போதும், அவற்றால் பாதிக்கப்படாமல் எவ்வாறு இருக்க முடிகிறது? அவருடைய சிறுநீரகங்கள் செயலிழக்கத் துவங்கிய போது, 'கடுமையான தாங்க முடியாத தலைவலி உள்ளது' என்று கூறினார். நோயின் அறிகுறிகளை விளக்கும் போது, தன்னை அதனுடன் ஒருபோதும் இணைத்துக் கூறமாட்டார். இறுதி நாளன்று மாலையில் உட்கார்ந்திருப்பது போல் தன்னைத் தாங்கி நிலைப்படுத்துமாறு கூறி ஏறத்தாழ பத்மாசனமிட்டவர் போன்ற நிலையில் இருந்தார். அவரது சுவாசம் திணறலோடு கூடிய பெருமூச்சாக வந்து கொண்டிருந்தது. அவரைக் கவனித்துக் கொண்டிருந்த டாக்டர், பிராணவாயுவை அளிக்கும் முகமூடியை அணிவித்தபோது அதை இழுத்துத் தள்ளிவிட்டார். அறைக்கு வெளியே 'அருணாசல சிவ' 'அருணாசல சிவ' என்ற தெய்வீகப் பாடலைப் பக்தர்கள் சேர்ந்து இசைத்துக் கொண்டிருந்தனர். அங்கு குழுமியிருந்த மக்கள் பேச்சுத் திறனை இழந்து நின்றனர். 'உடலின் மரணம் அவரைத் தீண்டத் துணியுமா? நிச்சயமாக முடியாது. அது சாத்தியமில்லை. ஒரு அதிசயம் நிகழப்போவது திண்ணம்' என்றே அனைவரும் எண்ணினர். அந்தச் சூழல், உணர்ச்சி, பயம் எதிர்பார்ப்பு இவற்றோடு கவலை குடிகொண்டிருந்ததாகவும் காட்சியளித்தது. சிலர் அழுது கொண்டிருந்தனர். மஹர்ஷிக்கு சுவாசிப்பதில் சிறிது சிரமம் இருப்பது போல் தோன்றியது. அத்துடன் அவரது உடல் அசைவற்று நின்றது. அவரது கடைசி மூச்சு வெளிவந்த அதே சமயத்தில் எரி நக்ஷத்திரம் போன்ற ஒளிக்கீற்று ஒன்று, வான்வெளியில் கடந்து சென்றது. என்ன நடக்கிறதென்பதை எங்களால் புரிந்து கொள்ள இயலவில்லை. பகவானது பூதவுடல் எங்களை நிரந்தரமாகப் பிரிந்து சென்று விட்டது. இனி அந்த அழகிய பரவசமூட்டும் புன்னகை எங்களை வரவேற்காது. அவருடைய கம்பீரமான உருவம் இனி ஆச்ரமத்தை அலங்கரிக்காது,'' என்று டாக்டர் TNK தனது உணர்ச்சிகளை அதில் கொட்டியிருந்தார்.

நான் டாக்டரை அவருடைய இல்லத்தில் சந்தித்த போதெல்லாம் மாடிக்கு அழைத்துச் சென்று பகவானைப் பற்றிப் பேசுவார். "பகவான் உடலை உகுத்த பின்னர் நீங்கள் என்ன செய்தீர்கள்?'' எனக் கேட்ட போது அவர் "நான் பூஜித்து வந்த அவரது சரீரத்தை இனி என்னால் பார்க்க இயலாது என்னும் விஷயம் என்னை வெகுவாக உலுக்கிவிட்டது. பெரும் அதிர்ச்சிக்கு உள்ளானேன். 'ஒரு ஞானியிடமிருந்து நேரடியாக உபதேசம் பெறும் அரிய வாய்ப்பை வாழ்க்கையில் நான் இழந்து விட்டேனோ? ஆன்மீக ஸாதனை எனக் கூறும் விதமாக நான் எதுவும் செய்ததில்லை. அவருடைய ஸந்நிதியில் அவரது உபதேசங்களைப் புரிந்து கொண்டு அவற்றைப் பயிற்சி செய்வதில் ஈடுபடாமல், போட்டோக்கள் எடுப்பதிலேயே காலம் கடத்தி விட்டேனோ? இல்லை. அது உண்மையாக இருக்க முடியாது' என்று எனக்குள்ளேயே கூறிக் கொண்டேன். மஹர்ஷியின் அருளை நான் சிறிதளவேனும் பெற்றிருந்தேன் என்பதை நிச்சயமாக உணர்ந்தேன். அவர் இப்பொழுதும் இங்குதான் இருக்கிறார். ஆனால் எல்லாவற்றிற்கும் ஆதாரமாக உருவம் இன்றி நிலவும் அவரது ஸாந்நித்தியத்தை உணர்ந்து கொள்ள, நாம் தான் கற்றுக்கொள்ள வேண்டும். 'நான் எங்கும் செல்லப் போவதில்லை!' என அவரே நம்மிடம் உறுதியாகக் கூறியுள்ள போது நம்மை ஒருபோதும் கைவிட மாட்டார். அனைத்தும் அறிந்தவர் அவர். இதன் பிறகு நான் அவரது உபதேசங்களைப் படிக்க துவங்கிய போது சிற்சில வாக்கியங்கள் என் மனதைத் தொட்டு அவரது ஸந்நிதியில் நான் இருப்பதாகவும் அவர் கூறுவதைக் கேட்டுக் கொண்டிருப்பது போன்ற உணர்வையும் எனக்குத் தந்தன. நான் அவற்றில் இதயபூர்வமாக மூழ்கிப் படிக்கப் படிக்க மஹர்ஷி மேன்மேலும் எனக்கு நெருங்கியவரானார். அவரது போதனைகள் உயிர்த்துடிப்புடன் கூடியவையாக இருந்தன. அவற்றை நான் புரிந்து கொள்ளத் துவங்கிய பொழுது அவை என் இருப்பில் கலந்து எனக்குச் சொந்தமாயின,'' என்று அவர் கூறினார். மேலை நாட்டு உடையணிந்து கழுத்தைச் சுற்றி 'ஸ்டெதாஸ்கோப்பை' அணிந்திருந்த போதும் ஆத்மாவில் நிலைத்து

சாந்தியோடும் நிறைவோடும் இருந்த டாக்டர் TNK-யின் தூய நிலையை நான் உணர்ந்து கொண்டதால் உடனே அவரை வணங்கி அவரது கால்களைப் பிடித்துக்கொண்டு ‘டாக்டர் என்னை ஆசீர்வதியுங்கள்!’ என்று வேண்டினேன்.

ஒரு முறை நியூயார்க்கில் இருந்து வந்த ஒரு தம்பதி, ‘‘பகவானுக்குப் பிறகு ஆத்மானுபூதி பெற்ற வேறு ஞானிகள் யாராவது இருக்கிறார்களா?’’ என அறிய விரும்பினர். ‘என்னால் ஒருவரைக் காட்ட முடியும். ஆனால் அவர் ‘தன்னை அறிந்த ஞானி’ என்று உங்களால் அடையாளம் கண்டு கொள்ள முடியுமா?’ என்று நான் வினவிய பொழுது, ‘‘இயன்ற வரை முயல்கிறோம்’’ என அவர்கள் பதிலிறுத்தனர். ‘அவர் ரமணாச்ரமத்தில் இல்லை; சென்னையில் இருக்கிறாரென்றும் காவி உடையணிவதில்லை, மொட்டையடித்துக் கொள்ளவில்லை’ என்றும் நான் தெரிவித்தேன். மேல்நாட்டு உடை அணிந்திருப்பாரென்றும் எச்சரித்தேன். அதன் பின்னும் தங்கள் ஊக்கத்தை இழக்காமல் அவரைக் காணத் தங்களை அழைத்துச் செல்லுமாறு அவர்கள் கேட்டதால் நான் சென்னையில் இருந்த டாக்டர் TNK-யின் இல்லத்திற்கு அழைத்துச் சென்றேன். டாக்டரைப் பார்த்தவுடனே, நான் சாஷ்டாங்கமாக வணங்கினேன். அவரது வீடு முழுவதுமே பகவானுடைய படங்களால் நிரப்பப்பட்டிருந்தது. அந்த தம்பதிக்குத் தன் வீட்டைச் சுற்றிக் காண்பித்த பின் அவர்களுக்கு விருப்பமான படம் எதுவானாலும் அதை அவர்களுக்குத் தருவதாகக் கூறினார் அவர். ரமணாச்ரமத்தில் அதுவரை கண்ணில் படாத ஒரு படத்தை அவர்கள் தேர்ந்தெடுத்தனர். டாக்டர் சுவற்றிலிருந்து உடனே அதை எடுத்து அவர்களிடம் கொடுத்த பிறகு, ‘‘இந்தப் படத்திற்குப் பின்னால் ஒரு கதை உள்ளது. என் இரண்டாவது மகனின் பெயர் சூட்டும் சடங்கை ஒட்டி, பூஜையும் விழாவும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. நான் அவனுக்கு ‘ரமணா’ என்று பெயரிட விரும்பினேன். ஆனால் என் மனைவி மறுப்புத் தெரிவித்தாள். ‘மூத்த மகனுக்கு சம்பிரதாயப்படி உங்கள் தகப்பனாரின் பெயரை வைத்தது போன்றே, இவனுக்கு எனது தந்தையின் பெயரைச் சூட்ட வேண்டுமெனக் கூறினாள். நியாயமாக அவள் கூறியதை மறுக்க இயலாத நிலையில் மனமின்றி சம்மதித்தேன். சடங்குகள் நடந்து கொண்டிருந்தன. பாரம்பரிய முறைப்படி என்னையும் என் மகனையும் ஒரு துணியால் மறைத்துக் கொண்டு அவனுடைய காதில் எனது மாமனாரின் பெயரை ஓதப் போகும் தருணத்தில் திடீரென்று சுவற்றில் மாட்டப்பட்டிருந்த இந்தப் படம் என் முதுகின் மீது விழுந்தது. என்னைப் பொறுத்த வரை அந்த நிகழ்வின் மூலம் ‘என் பெயரை உன் மகனுக்குச் சூட்டு’, என பகவானே அறிவுறுத்துகிறாரோ என்று தோன்றியதால் அவனுக்கு ‘ரமணா’ என்றே பெயரிட்டேன்’’ என்று டாக்டர் உரைத்தார்.

டாக்டர் TNK மரணப்படுக்கையிலிருந்த சமயம் நான் அவரைக் காணச் சென்றேன். அவரைப் பார்த்தபோது அழுது விட்டேன். அவர் என்னைக் கண்டித்து, ‘‘பகவானுடைய உபதேசங்களை நீ புரிந்து கொண்டது இவ்வளவு தானா? என்னைப் பாரு. பகவான் என்னை அழைப்பதை நான் பார்த்துக் கொண்டிருக்கிறேன். நான் அவரிடம் செல்கிறேன். நீ எதற்காக அழ வேண்டும்? விழித்துக் கொள்!’’ என்று கூறினார். பின்னர் நான் ‘டாக்டர் எனக்கு ஒரு சந்தேகம் உள்ளது. நீங்கள் கோடீச்வரர். நிறைய சொத்து சேர்த்துள்ளீர்கள். மக்கள் உங்களை ஏமாற்றுப் பேர்வழி என்றும் பக்தராக நடிப்பதாகவும், உண்மையில் உங்களுக்கு பணந்தான் குறி என்றும் கூறுகிறார்களே? இந்த நகரத்தில் உங்களுக்கு அறுபது வீடுகள் உள்ளன. பல வங்கிகளில் கோடிக் கணக்கான பணமும் உள்ளது’ என்று கூறினேன். அதற்கு டாக்டர் TNK சிரித்தவாறே, ‘‘ஆம். அவை எனக்குச் சொந்தமானவை தான். ஆனால் நான் அவற்றிற்குச் சொந்தமல்ல!’’ என்று கூறித் தொடர்ந்து, ‘‘கணேசன்! உனக்கு நான் ஒரு அறிவுரை தருகிறேன். ஆத்மாவிற்கு அந்நியமான எதிலும் உன்

கவனத்தைச் செலுத்த வேண்டாம். சொத்து உள்ளதோ, இல்லையோ அவை அனைத்துமே உண்மையில்லை. உனக்குள்ளே இருக்கும் மௌனம் மட்டுமே ஸத்தியம். முழு கவனத்தையும் அந்த உண்மையின் மீது செலுத்து. பகவான் என்னை அழைக்கிறார். அவர் உன்னை ஆசீர்வதிக்கிறார்!'' என்று கூறி விட்டுச் சிறிது நேரம் கண்களை மூடியவாறு படுத்திருந்தார். சில நிமிடங்களுக்குப் பின் மிகுந்த பிரியத்துடன் என்னை நோக்கி, ''ஆச்ரமத்திற்கு எதிரில் எனக்குச் சொந்தமான ஒரு கட்டிடம் உள்ளது. அதில் தங்குமாறு முருகனாரிடம் நான் வேண்டிக் கொண்டேன். அந்தக் கட்டிடத்தை உங்கள் பெயரில் எழுதி வைக்கிறேன். இக்கட்டான நிலையில் கைகொடுக்க உன்னிடம் பணமோ சொத்தோ இல்லை என்பதை நான் அறிவேன். நீ பகவானிடம் சரணடைந்து அவரது சேவையில் ஈடுபட்டிருக்கிறாய். எதுவுமில்லை என்ற காரணத்தால் எதிர்காலத்தில் நீ துன்பத்திற்கு ஆளாகக்கூடாது. தயவு செய்து நான் கொடுப்பதை ஏற்றுக் கொள்'' என்று கூறினார். டாக்டர் அன்புடன் அளித்ததை மிக்க மரியாதையுடன் ஏற்றுக் கொண்டு அவரது பாதங்களைத் தொட்டு வணங்கி அவரிடமிருந்து விடை பெற்றேன். (சமீபத்தில் அந்தக் கட்டிடத்தை ரமணாச்ரமத்திற்கு அர்ப்பணித்தேன்.) சில நாட்களுக்குப் பின்னர் பகவானுடைய நிழல்படக்காரரான டாக்டர் TNK பூரண உணர்வோடு ஒளியுரு ரமண அருணாசலத்தில் கலந்தார்.








ஸ்ரீ பகவானுக்கு டாக்டர் T.N.K. அவர்களின் 'புகைப்பட சேவை' (மவுண்டன் பாத், ஜூலை 1975 இதழ்)



ஸ்ரீ பகவான் 'பழைய ஹால்' வெளியே அமர்ந்திருக்கும் போது



# 66 ஃப்ராம்ஜி தோரப்ஜி



சென்னையில் வெலிங்க்டன் சினிமா தியேட்டரின் உரிமையாளராக இருந்த ஃப்ராம்ஜி தோரப்ஜி பார்ஸி இனத்தைச் சேர்ந்தவர். சிறு வயதிலிருந்தே ஸாதுக்களிடமும், ஸந்நியாசிகளிடமும் மிகுந்த பக்தியோடு இருந்ததால் அவர்கள் எங்கு இருந்தாலும், அங்கு சென்று அவர்களது பாதங்களில் வீழ்ந்து வணங்குவார். கண்மூடித்தனமான அவருடைய இந்த பக்தியைப் பற்றி அறிந்த அவரது குடும்ப நண்பர்கள், "ஃப்ராம்ஜி! மும்பை நகருக்குப் புறத்தே இன்ன இடத்தில் ஒரு பெரிய ஸாது வந்திருக்கிறார்," என்று பரிஹாஸமாக அவரிடம் இடையிடையே கூறுவார்கள். அவர் உடனே காணிக்கையாகப் பழங்களை வாங்கிக் கொண்டு சென்று பார்த்த பின்னரே, அங்கு அவ்வாறு யாருமில்லை என்பதையறிந்து கொள்வார். அவர்கள் தன்னைக் கிண்டல் செய்தார்கள் என்பதை உணர்ந்து கொண்டாலும் கூட அவர்களிடம் ஆத்திரம் கொள்ள மாட்டார். பின்னர் இதைப் பற்றி நினைவு கூறும்போது, "நான் ஒரு போதும் வேதனையோ, கோபமோ பட்டதில்லை. ஏனென்றால் எனது எண்ணம் முழுவதுமே நாம் ஒரு மஹானைக் காணச் செல்கிறோம் என்பதாக மட்டுமே இருந்ததால், அந்த நேரம் எனக்கு மிகவும் விலை மதிப்பில்லாததாக இருந்தது," என்றார்.

ஒரு முறை உண்மையான ஸாது என்று தோரப்ஜி எண்ணிய ஒருவரால் ஏமாற்றப் பட்டார். அமானுஷ்ய சக்திகளைக் கொண்ட அந்த ஸாது, பிறருடைய எண்ணங்களை அறிந்து கொள்வதில் கைதேர்ந்தவராக இருந்தார். முதல் முறையாக இந்த ஸாதுவை அவர் காணச் சென்றபோது, ஃப்ராம்ஜி காரிலிருந்து இறங்குவதற்கு முன்னரே அவருடைய நண்பர்கள் முன்னதாக அந்த ஸாதுவிடம் சென்று விட்டனர். அவர்கள் திடுக்கிடும் வகையில் உங்களுடைய நண்பர் ஃப்ராம்ஜி தோரப்ஜியை ஏன் காரிலேயே விட்டு வந்தீர்கள்? அவரை இங்கு அழைத்து வாருங்கள் என்று அந்த ஸாது கூறினார். ஃப்ராம்ஜி அந்த ஸாதுவைச் சந்தித்த போது அவர் தனது அமானுஷ்ய சக்தியைப் பிரயோகித்து ஃப்ராம்ஜியின் எண்ணங்களை அறிந்து கொண்டார். இதனால் அந்த ஸாதுவின் மீது ஃப்ராம்ஜிக்கு இருந்த மதிப்பு அதிகமானதால் அவரை உண்மையான ஸாது என எண்ணி, அடிக்கடி அவரிடம் செல்ல ஆரம்பித்தார். வெகு விரைவிலேயே அவர் ஃப்ராம்ஜியிடம் ஸாது பணம் பறிக்கத் துவங்கினார். ஒரு முறை ஃப்ராம்ஜியினால் நினைத்துக் கூடப் பார்க்க முடியாத அளவுக்கு ஒரு பெரிய தொகையை ஸாது கேட்டதால் அவர் தன் இயலாமையைப் பற்றி கூற வேண்டியதாயிற்று. "அந்தத் தொகையுடன் நீ வரவில்லையானால் உனக்கு நான் சாபம் கொடுப்பேன். உனது குடும்பம் முழுவதுமே நசித்துப் போய்விடும்!" என்று அச்சுறுத்தினார். வீடு திரும்பிய ஃப்ராம்ஜி தனது மூத்த மகள் உடல் நலம் குன்றிய நிலையிலிருப்பதைக் கண்டார். நாட்கள் செல்லச் செல்ல அவளுடைய நிலைமை மோசமாகி வருவதைக் கண்டு ஸாதுவிடம் ஓடிச் சென்று, "தயவு செய்து உங்கள் சாபத்தை மாற்றித் தாருங்கள். என் மகள் இறந்து கொண்டிருக்கிறாள்" என்று மன்றாடிக் கேட்டார். ஆனால் சற்றும் அசைந்து கொடுக்காத அந்த ஸாது, 'நான் கேட்ட பணத்தை நீ கொடுத்தாலொழிய நான் சாபத்தை மாற்ற முடியாது' என்று கூறி விட்டார். ஃப்ராம்ஜி வீட்டிற்குத் திரும்பிய பொழுது அவரது மகள் இறந்து விட்டதையும் மனைவி மிகுந்த நோய்வாய்ப்பட்டிருப்பதையும் கண்டார். அப்பொழுதுதான், 'A Search in Secret India' எனும் புத்தகத்தின் விமர்சனத்தைப் படித்திருந்த ஃப்ராம்ஜியின் தமையனார் தாதிபா துக்கத்தினாலும் பயத்தினாலும் பீடிக்கப்பட்ட தன் சகோதரரிடம், "தம்பி! தென்னிந்தியாவில்

உள்ள மகிமை பொருந்திய மஹான் ஒருவரைப் பற்றி இப்போது தான் படித்தேன். உன்னுடைய பாதுகாப்பிற்கு நீ ஏன் அவரிடம் செல்லக் கூடாது?'' என்று கூறினார்.

இவ்வாறு 1937-ம் ஆண்டு ஃப்ராம்ஜி பகவானிடம் வந்து சேர்ந்தார். அந்தச் சமயத்தில் யாரும் பகவானைத் தனிப்பட்ட முறையில் காண்பதற்கு அனுமதிக்கப்படவில்லை. ஆனால் அவர் மலைக்குச் செல்லும் பொழுது அவரோடு தனியாக ஒருவரால் செல்ல முடியும். ஃப்ராம்ஜி இவ்வாறு மலைமீது பகவானைத் தொடர்ந்து சென்று மனம் திறந்து தன்னுடைய கஷ்டங்களைக் கொட்டித் தீர்த்தார். ''பகவானே! என்னுடைய நிலைமை இது தான். உண்மையைச் சொல்லப் போனால் என் மனைவி இப்போது உயிரோடு இருக்கிறாளா, இல்லையா என்பது கூட எனக்குத் தெரியாது,'' என்று கூறவும், பகவான் சற்று நின்று திரும்பி ஃப்ராம்ஜியை சில நொடிகள் நோக்கிவிட்டு, ''அவர்களால் அவ்வளவு தூரம்தான் போக முடியும். பயப்படுவதற்கு ஒன்றுமில்லை. எப்போதும் பாதுகாப்பு உள்ளது. அமைதியாகத் திரும்பச் செல்லுங்கள்,'' என்று கூறினார். ஃப்ராம்ஜி சட்டை கழன்று விழுவது போன்று தனது பயம் தன்னை விட்டு நீங்கியதை உணர்ந்தார். 'நாதன்' என்ற ஒரு வார்த்தை அவருடைய இதயத்திலிருந்து அலை போல எழுந்தது. பகவான் ரமண மஹர்ஷியை 'நாதன்' (Master) என்று அழைத்த முதல் நபர் ஃப்ராம்ஜி தோரப்ஜிதான். அன்று முதல் எனது நாதன்! எனது நாதன்! என அடிக்கடி கூற ஆரம்பித்தார். திரும்பி வந்த ஃப்ராம்ஜியைக் கண்டு குடும்பத்தினர் வியப்பிற்குள்ளாயினர். ஏனெனில் சந்தேகமின்றி உண்மையாகவே அவருக்கு நிகழ்ந்தது மிகப்பெரிய அதிசயமாக இருந்தது. அவருடைய மனைவி உடல் நலம் பெற்றாள். பின்னர் வெகு தொலைவிலிருந்த மும்பையிலிருந்து தனது ஆசானைக் காண வரத் துவங்கினார்.

அதிருஷ்டவசமாக 1942-ல் சென்னையில் ஒரு சினிமா தியேட்டரின் உரிமையாளரானதால், அவருடைய தொழில் சென்னைக்கு மாறியது. இதன் காரணமாக அவர் விரும்பிய போதெல்லாம் பகவானிடம் செல்ல அவரால் முடிந்தது. பகவானுடைய ஸந்நிதியில் சந்தேகங்களோ கேள்விகளோ அவருக்கு எழவில்லை. அவருடைய ஸந்நிதியிலேயே அப்போதே தெய்வீகத்தை உணர்ந்தார். பகவானிடம் சென்ற மறுநொடியிலேயே அவருடைய ஒரே பார்வை ஃப்ராம்ஜியின் சந்தேகங்கள் அனைத்தையும் விலக்கின. வேறு சில சமயங்களில் அவருடைய சந்தேகத்தையே வேறு யாராவது கேட்டு பகவான் பதிலும் அளிப்பார். அதனால் அறிவு பூர்வமான கேள்வி எதையும் பகவானிடம் கேட்க வேண்டிய தேவை அவருக்கு ஏற்படவில்லை. சரணாகதியே தன்னுடைய வழி என்பதையும் அவர் புரிந்து கொண்டார்.

பகவானைத் தரிசிக்கச் செல்லும் பொழுது தோரப்ஜி தனது பரம்பரை பார்ஸி உடையின் ஒரு அங்கமான கறுப்புத் தொப்பியை அணிந்து கொண்டே பகவானை வணங்குவது வழக்கம். ஆங்கிலேயர்களின் தாக்கத்தின் காரணமாகவோ என்னவோ இந்தியாவில் வயதில் மூத்தவர்கள் அல்லது அந்தஸ்த்தில் உயர்ந்தவர்கள் முன்னிலையில் ஒருவர் தொப்பியை நீக்குவது என்ற ஒரு வழக்கம் இருந்தது. அதனால் பகவான் முன்னிலையில் தொப்பி அணிந்து, அவரை வணங்குவதோ, அமர்வதோ சரியல்ல என்று மற்ற பக்தர்கள் ஃப்ராம்ஜியிடம் கூறினர். இந்த விஷயம் பகவானுக்குத் தெரிந்த பொழுது ஒரு மஹானுக்கு மரியாதை செலுத்தும் பொழுது தொப்பி அணிய வேண்டுமென்பது பார்ஸிகளின் வழக்கம். அதனால் ஃப்ராம்ஜி செய்வது சரிதான் என்று கூறவும், ''பகவானுக்கு இது எப்படித் தெரியும்? ஏற்கனவே சில பார்ஸி பக்தர்கள் பகவானிடம் வந்து கொண்டிருக்கிறார்கள் என்றபோதும் அவர்களில் எவரும் தங்களுடைய பழக்க வழக்கங்களைக் குறித்து ஒரு போதும் அவரிடம் பேசியதில்லையே'' என்று ஃப்ராம்ஜி வியப்படைந்தார்.

ஃப்ராம்ஜி சென்னையில் குடியேறத் தீர்மானித்த போது பல கட்டிடங்களோடு கூடிய பெரிய நிலம் ஒன்றை மிகவும் மலிவான விலைக்கு விற்பதாக ஒரு நண்பர் கூறினார். அந்த நிலம் மிகுந்த கஷ்ட தசையில் இருந்த ஒரு விதவையினுடையது. அதை வாங்குவதனால், தான் ஒரு மிகப் பெரிய செல்வந்தர் ஆக முடியும் என்பதால் ஃப்ராம்ஜி அதை வாங்க விரும்பிய போதும் பகவானது அனுமதியைப் பெற விழைந்தார். ஆச்ரமம் சென்று தனக்கு வழிகாட்ட வேண்டுமென்ற மானசீக பிரார்த்தனையுடன், பகவான் முன்னிலையில் அமர்ந்தார். இதன் பிறகு ஒரு பக்தர், பகவானிடம் ஒரு கேள்வியை எழுப்பினார். தான் கூறிய நீண்ட பதிலுக்கிடையே பகவான் ஃப்ராம்ஜியைப் பார்த்துச் புன்சிரிப்புடன், "ஒருவருக்கு முன்னால் சம்பாதித்த உடைமைகளின் சுமை ஏற்கனவே உள்ளது. அதை ஏன் அதிகப் படுத்த வேண்டும்? அதனால் ஒருவருடைய பந்தம் மேலும் அதிகரிக்கத் தான் செய்யும், என்று கூறவே, ஃப்ராம்ஜி அந்த சொத்தை வாங்கும் எண்ணத்தைக் கைவிட்டார். பல ஆண்டுகளுக்குப் பின் அந்தக் குறிப்பிட்ட சொத்தை வாங்கியவர் கணக்கற்ற வழக்குகளை எதிர்கொள்ள நேர்ந்தது என்று அறிந்தார்.

சினிமா எடுக்கும் கேமரா ஒன்றை வாங்கி வந்து K. K. நம்பியார் பகவானைப் படம் எடுத்தாரென்றால் பகவான் காண்பதற்காக பிரபலமான ஆன்மீகப் படங்களான துகாராம், மீரா, நந்தனார் போன்ற திரைப் படங்களை ஃப்ராம்ஜி கொண்டு வந்தார். சினிமா ப்ரொஜக்டர் திரை இவற்றை வைத்திருந்த மற்றொரு பக்தரின் உதவியோடு இரவில் ஆச்ரமத்தின் உணவுக் கூடத்தில் அம்மாதிரிப் படங்களை பகவானுக்குத் திரையிட்டுக் காண்பிப்பதில் வெற்றியும் கண்டார். இந்தப் படங்களை பகவான் காணும்பொழுது அவரருகில் அமரும் பேறு எனக்குக் கிட்டியது. பகவான் நகைச்சுவைக் காட்சிகளை வாய்விட்டுச் சிரித்து முற்றிலும் ரசித்ததும், அந்த ஸாதுக்கள் ஆன்மீகப் பரவச நிலையில் நெகிழ்ந்த போது ஆனந்தக் கண்ணீர் சொரிந்ததும், நேற்று நடந்தது போன்று என் நினைவில் பசுமையாக உள்ளன. ஆனால் சினிமா முடிந்தபிறகு அவரிடம் எந்த விதமான சிறு பிரதிபலிப்பும் கூட வெளிப்படவில்லை. அப்பழுக்கற்ற ஒரு கண்ணாடி போன்று பகவான் செயல்பட்டார் என்பதற்கு இதுவே சான்று. தன்முன் நிகழ்ந்தது எதுவானாலும் அதை முற்றிலும் உள்ளது போன்றே பிரதிபலித்தார். இத்துணை காலத்திற்குப் பின் அதைப் பற்றிச் சிந்திக்கும் போது ஒரு ஞானியின் உண்மை நிலையை உணர்ந்து கொள்வதற்கு அது உதவியாக இருந்தது என்று கூறுவேன். மேலும் பூரணமாக அகமுகமான நிலையில் தன்னைச் சுற்றி நிகழ்பவைகளால் ஒரு ஞானி சிறிதும் பாதிக்கப்படுவதில்லை என்பதையும் உணர்ந்தேன்.

பகவானுடைய இறுதி நாட்களில் ஒரு நாள் மற்ற எல்லோரையும் போன்று பகவானைத் தரிசிப்பதற்காக ஃப்ராம்ஜி க்யூவில் நின்று கொண்டிருந்தார். பகவான் முன் அவர் வந்து நின்றபோது பார்ஸிகளின் வேதமான ஸென்ட் அவெஸ்தா (Zend Avesta) என்ற நூலிலிருந்து அவர் பாடல்களை ஓதிக் கொண்டிருந்தார். அப்பொழுது பகவான் அவர் பக்கம் திரும்பி, "ஃப்ராம்ஜி! இது உதிக்கும் சூரியனல்ல, அஸ்தமிக்கும் சூரியன்" என்று சிரித்தவாறு கூறினார். அவெஸ்டன் மொழியில் அவர் ஓதிக் கொண்டிருந்த புனிதப் பாடல்கள் உதய சூரியனை நோக்கிப் பிரார்த்திப்பதாக இருந்ததால் பகவான் கூறியதைக் கேட்ட ஃப்ராம்ஜி வியப்படைந்தார்.

ஒரு முறை ஃப்ராம்ஜியிடம், "நீங்கள் மிகவும் வித்தியாசமான பாரம்பர்யத்தைச் சேர்ந்தவராக இருப்பதால் பகவானைப் பின்பற்றுவதில் நீங்கள் எவ்வித முரண்பாடையும் உணரவில்லையா?" என்று நான் கேட்ட போது, "சிறிது கூட முரண்பாடு இல்லை" என்று அவர் பதிலிறுத்தார். 'சொல்லப் போனால் என்னுடைய மதம் கூறும் முக்கியமான உபதேசங்களும் பகவான் கூறுவதும் ஒன்றேதான்' என்றுரைத்தார். 'Day by Day with Bhagavan' என்ற நூலில் கொடுக்கப்பட்டுள்ள கீழ்க்காணும் ஒரு

நிகழ்ச்சி இவ்வாறு அவரது கூற்றை விளக்குவதாக உள்ளது—இன்று மாலை பாராயணத்திற்குப் பின்னர் முனகால வேங்கடராமையா பகவானிடம் வந்து, ‘‘ஸ்ரீமதி தலயார்கானும் அவருடைய நண்பர் மைசூரைச் சேர்ந்த சர் மிர்சா இஸ்மாயிலும் மலைமீதமர்ந்து பகவானைப் பற்றியும் மலையைப் பற்றியும் பேசிக் கொண்டிருந்திருக்கிறார்கள். ஸ்ரீமதி தலயார்கான், ‘பகவான் நடமாடும் தெய்வமே! நமது பிரார்த்தனைகள் எல்லாம் நிறைவேற்றப்படுகின்றன என்பதுதான் என்னுடைய அனுபவம். ஆனால் பகவானோ, இந்த மலை கடவுளே என்று கூறுகிறார். என்னால் அதைப் புரிந்து கொள்ள முடியவில்லை. இருந்தாலும் பகவான் சொல்வதால் அதை நான் நம்புகிறேன்’ என்று கூறியுள்ளார். இதன் பின் அவரது நண்பர் சர் மிர்சா ‘நம்முடைய நம்பிக்கைகளின் படி இப்போது மழை பெய்தால் அதை அடையாளமாகக் கொண்டு நான் நம்புவேன்’ என்று பதில் கூறினார். அவர் கூறி முடித்தவுடனே மழையும் பெய்தது. அவர்கள் மலையிலிருந்து இறங்கி வந்த பொழுது முழுவதுமாக நனைந்திருந்தனர்’’ என்று என்னிடம் தெரிவித்தனர்’’ என்று முனகால வேங்கடராமையா கூறினார்.

ஃப்ராம்ஜி தோரப்ஜி எப்பொழுதுமே ஸாது, ஸந்நியாசிகளின் மகத்துவம் பற்றி என்னிடம் எடுத்துரைப்பார். துகாராம், மீராபாய், ஸூர்தாஸ், துளஸிதாஸ் போன்ற மஹான்களின் மீது அவருடைய இதயத்தில் பக்தி நிரம்பி வழிந்தது. அவர்களில் யாராவது ஒருவரின் பெயரைக் கூறினால் போதும், உடனே அவர் அவர்களுடைய பாடல்களை இசைத்து அதன் பொருளையும் எனக்கு எடுத்துரைப்பார். ‘‘ஸாதுக்கள், மஹான்கள் - இவர்கள் காட்டிய வழியில் செல்லுங்கள். அவர்களை வழிபடுங்கள்’’ என்று எனக்கு அடிக்கடி உபதேசம் செய்வார். இதனால்தானோ என்னவோ ஸாதுக்கள், மஹான்கள் இவர்கள் பின்னால் செல்வதில் எனக்கும் சிறிது பைத்தியம் வந்து விட்டது.

1965-ல் ஒரு நாள் ஆச்ரமத்திற்கு வந்த ஃப்ராம்ஜியின் மகன் தோராப் ஃப்ராம்ஜி அவருடைய காரில் என்னை ஏறுமாறு சொன்னார். என்னை அவரோடு சென்னைக்கு அழைத்துச் சென்று விட்டார். கைகால் கழுவி தேநீர் அருந்தியபின் மீண்டும் என்னை அவருடைய காரில் ஏறும்படி கூறினார். செல்லும் வழியில் ‘‘ஆச்ரமத்தில் நான் உங்களைக் காரில் ஏறச் சொல்லும் பொழுது நான் உங்களை எங்கு அழைத்துச் செல்கிறேன் என்பது பற்றி நீங்கள் கேட்கவில்லை. இங்கும் நான் எங்கு அழைத்துச் செல்லப் போகிறேன் என்று கேட்காமலே காரில் ஏறிக் கொண்டீர்கள்’’ என்று கூறினார். அதற்கு நான் ‘‘தோராப்! என்னை மேன்மைப் படுத்தக்கூடிய ஒரு இடத்திற்குத்தான் நீங்கள் அழைத்துச் செல்வீர்கள் என்று எனக்குத் தெரியும்’’ என்று நான் கூறியபொழுது அவர் மகிழ்ச்சியடைந்து ‘‘ஆம்! அடையாறிலுள்ள வஸந்த விஹாருக்கு உங்களை நான் அழைத்துச் செல்லப் போகிறேன். அங்கு ஜெ. கிருஷ்ணமூர்த்தி என்ற மஹானின் சொற்பொழிவு நடக்க உள்ளது’’ என்று தெரிவித்தார். இதைக் கேட்டவுடன் நான் எனக்குள்ளேயே சிரித்துக் கொண்டேன். ஸாதுக்கள் அல்லது ஸந்நியாசிகளாக இருந்தால் அவர்களை பகவான், ஸ்வாமி, மஹராஜ் அல்லது பாபா என்று அழைப்பார்கள். ஆனால் பெயருக்கு முன்னால் ஒரு ஆங்கில



**ஜெ. கிருஷ்ணமூர்த்தி**

எழுத்தை (Initials) போட்டுக் கொண்டிருக்கும் ஸந்நியாசியைப் பற்றி முதன் முதலாக இப்பொழுது தான் கேட்டிருக்கிறேன். இவ்வாறு நினைத்தபோது பெரிய மரத்தினடியில், மேடையின் மீது சொற்பொழிவாற்றுவதற்காக கிருஷ்ணாஜி அமர்ந்து கொண்டிருந்ததை நான் பார்த்தேன். 'உண்மையை எடுத்துக் கூறும் மனிதர் இவர்' என்று இதயத்தின் ஆழத்தில் உணர்ந்தேன். இந்த உணர்வு என் உள்ளத்தில் மிகவும் பலமான பரவச அதிர்வுகளை ஏற்படுத்தியது. பின்னர் கிருஷ்ணாஜி கூறிய முதல் வார்த்தையே என்னுள் மேலும் பலமான தாக்கத்தை ஏற்படுத்தியது. ''அன்பரே! உங்களுக்குள்ளே ஸத்தியம் இல்லாமல் போனால் உங்களுக்கு வெளியேயும் ஸத்தியம் இல்லையென்று நான் திடமாகக் கூறுவேன்'' என்று அவர் கூறினார். இந்த ஒரு வாக்கியத்தைத் தீவிரமாக சிந்தித்த போது அதன் ஸாரம், ஆழம், சக்தி இவை பகவானுடைய உபதேசமான 'நான் இருக்கிறேன்' என்ற உண்மையோடு ஒத்திருப்பதாக எனக்குத் தோன்றியது.

தோராப் ஜெ. கிருஷ்ணமூர்த்தியிடம் என்னை அழைத்துச் சென்றது போன்றே, ஃப்ராம்ஜியின் மகள் ஸூனா நிக்கல்சன் என்னை முதன் முறையாக நிஸர்கதத்த மஹராஜிடம் கூட்டிச் சென்றார். பகவானின் பழைய பக்தர்களில் ஒருவரான ஸூனாவிற்கு மரியாதை செலுத்தும் விதமாக அவருடைய இல்லத்திற்குச் சென்ற போது ஒரு முறை, பத்தாண்டுகளுக்கு முன் அவரது சகோதரர் சென்னையில் செய்தது போன்றே தன்னுடைய காரில் என்னை ஏறுமாறு உத்தரவிட்டார். போகும் வழியில் நிஸர்கதத்த மஹராஜ் என்ற மஹானைக் காண்பதற்காக என்னை அழைத்துச் செல்வதாகத் தெரிவித்தார். நான் மிகவும் மகிழ்ச்சி அடைந்தேன். அவருடைய ஈடு இணையற்ற 'நானே அது' (I am that) என்ற புத்தகத்திற்குச் சூட்டப்பட்டிருந்த புகழ்மாலைகள் குறித்துக் கேள்விப்பட்டிருந்ததால் மஹராஜைக் காண மிக்க ஆர்வமாக இருந்தேன். அதற்கான வாய்ப்பும் இப்பொழுது தானாகவே வந்தமைந்துள்ளது. அந்த ஞானியே என்னையழைப்பதாக உணர்ந்தேன். நாங்கள் அவருடைய இல்லத்தில் படியேறி முதல் மாடியை அடைந்த பொழுது அங்கு அவர் தனியாக அமர்ந்திருந்தார். அவரை நான் வணங்கிய பொழுது அந்த மஹானின் ஆன்மீக ஸாந்நித்தியத்தின் பேரமைதியை சந்தேகத்துக்கிடமின்றி என்னால் உணர முடிந்தது. அவர் தனது வலது கையை உயர்த்தி ஆசீர்வதித்தார். அவரது தலைக்குப் பின்னால் சுவரில் ஸ்ரீ ரமண பகவானின் பெரிய படமொன்று மாட்டப்பட்டிருந்தது. தானே தனது கம்பீரமான குரலில் மௌனத்தைக் கலைத்து, "ஆசாரமான பிராமணன் ஒருவன் அசைவ உணவை எவ்வாறு துச்சமாக நோக்குவானோ அதே போன்று ஒரு ஸாதகன் 'நான் இந்த உடல்' என்ற எண்ணத்தை — தேஹாத்ம புத்தியை இழிவானதாகக் கருத வேண்டும்''. இதை அவர் மீண்டும் மீண்டும் மூன்று முறை கூறினார். ஸூனாவும் நானும் பரவசத்தால் சூழப்பட்டோம். அதன்பிறகுத் தனிப்பட்ட முறையில், மஹராஜை விடாமல் பல வருடங்களுக்குத் தொடர்பு கொள்ளும் பெறும் பாக்கியம் எனக்குக் கிட்டியது.



**நிஸர்க்கதத்த மஹராஜ்**

என்னை மஹாத்மாக்களுக்கு அறிமுகப்படுத்தும் குடும்ப வழக்கத்தைக் கடைப்பிடிப்பது போன்று ஃப்ராம்ஜியின் மகன் தோராபும் Huang Po, Hui Neng மற்றும் வேறு சில சென் (Zen) குருமார்களின் உபதேசங்களைத் தாங்கிய புத்தகங்களின் மூலம் அவர்களின் போதனைகளை எனக்கு அறிமுகப்படுத்தினார். ஆரம்ப காலத்தில் பகவானுக்கும் தோராபுக்கும் தொடர்பு இருந்த பொழுது நிகழ்ந்த சுவையான இரு சம்பவங்கள் உள்ளன. ஃப்ராம்ஜி தன் மகன் தோரபை பகவானிடம் அழைத்து வரும் போது அவன் இளைஞனாக இருந்தான். ஆச்ரம உணவுக் கூடத்தில் சிற்றுண்டி அருந்திக் கொண்டிருந்த தோராப், தான் முதன்முதலாக உண்ணும் இட்லிகள் தனது சுவைக்கேற்றவாறு இல்லை என்பதை உணர்ந்தான். அதனால் இயற்கையாக மறுநாள் சிற்றுண்டி ஏற்றுக் கொள்ள மறுத்தான். தந்தையின் வற்புறுத்தலுக்காக வேண்டா வெறுப்பாக அவருக்கருகில் அமர்ந்து கொண்டான். அன்று வியக்கத்தக்க வகையில் இட்லிகள் பரிமாறப்பட்டபோது அதை அவன் ரசித்து உண்டான். ரகசியம் என்னவென்றால், முந்தைய தினம் காலையில் தோராப் மிகுந்த வெறுப்போடு இட்லிகளைப் பார்த்ததைக் கவனித்த பகவான் சமையல்காரர்களிடம், அவற்றின் மேல் நெய்யூற்றி நிறைய சர்க்கரையும் தூவுமாறு கூறியிருந்தார். தான் வெறுத்த அதே இட்லிகள் விசேஷமான கவனிப்புடன் கொடுக்கப்பட்டபோது பார்ஸிகளின் புகழ் பெற்ற விசேஷ தின்பண்டத்தைப் போன்ற சுவையோடு இருந்ததைக் கண்டான். பார்ஸிகளின் தின்பண்டங்களைக் குறித்து பகவானுக்கு எப்படித் தெரிந்தது என்று ஃப்ராம்ஜியும் தோராபும் ஆச்சரியப்பட்டனர்.

மற்றொரு முறை இளைஞன் தோராப் ஹாலுக்கு வெளியே உறங்கிக் கொண்டிருந்தான். அவ்வழியாக பகவான் சென்ற போது அவன் பகவானைத் தரிசித்து அவரது ஆசிகளைப் பெற வேண்டுமென்பதற்காக அவனை எழுப்பும் நோக்கத்தில் ஃப்ராம்ஜி தூங்கிக் கொண்டிருந்த தோராபிடம் விரைந்து சென்றார். தட்டி எழுப்புவதில் வல்லவரான பகவான் ஒரு சமிக்ஞையின் மூலம் அவரைத் தடுத்து நிறுத்தி மெல்லிய குரலில், "அவனை எழுப்பாதீர்கள். தானாகவே எழுந்திருக்கட்டும்" என்று உரைத்தார். இது நமக்கும் ஒரு பெரிய பாடமல்லவா? அறியாமையில் உறங்கிக் கொண்டிருக்கும் ஒருவரை ஸத்தியத்தைக் காண எழுமாறு செய்ய மற்றொருவரால் இயலாது. நாம் ஒவ்வொருவரும் நாமே எழுந்து நம்முள் ஆழ்ந்து மூழ்கி ஸத்தியத்தைக் காண விழைய வேண்டும்.



# 67 H. C. கன்னா



பகவானின் குறிப்பிடத்தக்க பக்தரான ஹரி சந்த் கன்னா அல்லது H. C கன்னா என்பவர் கான்பூரில் உள்ள மிகப்பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவர். அவரது பெற்றோருக்குப் பத்தாவது குழந்தையாக இருந்த அவர் மிகச்சிறிய குழந்தையாக இருந்தபோதே, வாழ்க்கையை மிக நுணுக்கமாகக் கவனிப்பவராக இருந்தார். அவருடைய தந்தை குழந்தைகளை நன்கு பேணிக் காத்தார். கன்னா மிக்க சந்தோஷமாகவும் திருப்தியோடும்தான் இருந்தார் என்ற போதும் உலகிலுள்ள மக்களில் பலரும் சந்தோஷமாக இல்லை என்பதையும் அவர் கண்ணுற்றார். ஒரு எல்லைக்குட்பட்டிருந்த அவரது அனுபவம் பணம் படைத்தவர்கள் மகிழ்ச்சியுடன் இருப்பதை அவருக்கு உணர்த்தியது. இதன் விளைவாக நிறைய செல்வம் சம்பாதிக்க வேண்டுமென்று மனதில் தீர்மானித்துக் கொண்டார். 'இன்ஷூரன்ஸ் ஏஜெண்ட்' ஆகத் தொழில் புரிந்த அவர் அதில் அசாதாரணமான வெற்றி பெற்று அபரிமிதமான பணத்தையும் சம்பாதித்தார். தெய்வ பக்தியுடன் கூடிய பிரேமாவதி என்னும் பெண்மணியை விரைவிலேயே திருமணமும் செய்து கொண்டார். நன்கு உணவருந்துவதுடன், விரும்பிய அளவு மதுபானம் குடித்துக் கொண்டு வசதியான வாழ்க்கையைத் தான் வாழ்வதால் மிகவும் மகிழ்ச்சியுடன் இருப்பதாகவும் உறுதியாக நம்பினார்.

வேலை நிமித்தமாகப் பல இடங்களுக்கும் அவர் பயணம் மேற்கொள்ள வேண்டியதாக இருந்தது. அந்த நாட்களில் அதிகமாக 'ஹோட்டல்கள்' (தங்கும் விடுதிகள்) இல்லாத காரணத்தால் அரசாங்க விருந்தினர் இல்லங்களில் மட்டுமே ஒருவர் தங்க வேண்டியதாக இருந்தது. அவற்றில் பெரும்பாலும் ஆங்கிலேய அதிகாரிகள் மட்டுமே தங்க அனுமதிக்கப்படுவர் என்பது மட்டுமின்றி இந்தியர்களை அநேகமாக அங்கு வரவேற்பதில்லை. ஆனால் உலக விஷயங்களை நன்கு அறிந்திருந்த கன்னாவிற்குப் பணத்தைப் பேச வைக்கவும் தெரிந்திருந்ததால், அரசு விருந்தினர் இல்லத்தில் தங்கும் பொருட்டு அதன் நிர்வாகிக்கோ அல்லது சிப்பந்திக்கோ லஞ்சம் கொடுத்து விடுவார். ஒரு நாள் தனது வாடிக்கைக்காரர்களிடம் பெரியதொரு தொகையை வசூல் செய்து தனது பெட்டியிலிருந்து வழியும் அளவுக்குப் பணத்தை நிரப்பிக்கொண்டு வெற்றிக் களிப்புடன் விருந்தினர் இல்லத்தை அடைந்தார். அங்கு அவர் வந்து சேர்ந்தவுடன் அதன் காவலாளி, "ஐயா! நீங்கள் ஒவ்வொரு முறையும் எனக்கு முப்பது ரூபாய் தருவீர்கள். என் மனைவிக்குக் குழந்தை பிறக்கும் தருணமாக உள்ளது. அவளது நிலை கவலைக்கிடமாக இருப்பதாகவும் அவள் உயிர் பிழைக்க வேண்டுமானால் தனக்குத் தொண்ணூறு ரூபாய் தர வேண்டுமென்றும் டாக்டர் கூறுகிறார். அந்தத் தொகையைத் தயவு செய்து தாங்கள் இம்முறை தந்தால் அடுத்த மூன்று தடவைகளுக்கு நீங்கள் எதுவுமே கொடுக்க வேண்டாம்," என மிகப் பணிவுடன் அவர் வேண்டிக் கொண்டார். அந்தக் காலத்தில் இது மிகப்பெரிய தொகையாகும். ஏனெனில் காவலாளியின் மாத சம்பளமே அப்போது பதினைந்து ரூபாயாகத்தான் இருந்திருக்கும். ஆனால் கன்னா மகிழ்ச்சியில் திளைக்கும் மனநிலையில் இருந்ததால் முன்னூறு ரூபாய்க்கான நோட்டுக்களை காவலாளியிடம் தூக்கி எறிந்து, "எனக்கு மிகச்சிறந்த அசைவ உணவும் குடிப்பதற்கு மதுபானமும் இப்போது வாங்கி வாருங்கள். உங்கள் வேண்டுகோளைப் பின்னர் பார்க்கலாம்," என்று கூறவே அவரும் இசைந்தார். கன்னா ஜம்பமாகத் தனது பணப்பெட்டியைக் காவலாளியிடம் திறந்து காட்டி, "பாருங்கள்! நான் இன்று எத்துணை பணம் வசூல் செய்துள்ளேன்!" என்று கூறினார். தன் வெற்றியால் மதிமயங்கிய

நிலையிலிருந்த அவர் தனது பெட்டியை மூட மறந்தது மட்டுமின்றி அறையின் கதவை உள்ளிருந்து தாளிடவும் மறந்து போயிருந்தார்.

அக்காலத்தில் அரசின் விருந்தினர் மாளிகைகள் எப்போதும் ஊருக்கு வெளியில் சற்றுத் தொலைவிலேயே அமைந்திருக்கும். அநேகமாக அது ஆள் நடமாட்டமில்லாத தனித்த இடமாகவும் இருக்கும். இரவில் நன்கு குடித்திருந்த கன்னா காலையில் எழுந்து பார்த்த போது அவரது அறைக்கதவு சாத்தப்பட்டிருந்தது. வழக்கம் போல் காவலாளி வெளியே அமர்ந்திருந்தார். "உங்கள் மனைவிக்கு பிரசவ நேரம் என்று கூறினீர்களே? இங்கேயே எப்படி உட்கார்ந்திருக்கிறீர்கள்?" என்று காவலாளியிடம் கன்னா கேட்ட போது, "நீங்கள் இருந்த நிலையில் உங்களைத் தனிமையில் நான் எவ்வாறு விட்டுச் செல்ல முடியும்? நான் சென்றிருந்தால் திருடர்கள் உங்கள் பணம் முழுவதையும் அபகரித்துச் சென்றிருப்பார்கள்," என்று அவர் பதில் உரைக்கவும், "அப்படியானால் உங்கள் மனைவியின் நிலை என்ன?" என்று வியப்போடு கன்னா வினவினார். "நான் இப்போது சென்று அவளுக்கு வேண்டியதைப் பார்க்கிறேன்," என்று காவலாளி கூறவும், அந்த பதிலைக் கேட்டு கன்னா பேராச்சரியத்தால் மலைத்து நின்றார். ஒருவருக்குத் தனது விருப்பங்களையும், தேவைகளையும் பூர்த்தி செய்வதில் மட்டுமே மகிழ்ச்சியுள்ளதென்று இதுவரை எண்ணிக் கொண்டிருந்த கன்னாவிற்குக் கண் திறந்தது. காவலாளியின் மனைவி ஆபத்தான நிலையிலிருப்பதையறிந்த பின்னும், தான் அவருக்குப் பணம் தர மறுத்ததையும், மறுபுறம் தனது கஷ்டமான நிலையிலும் போதையிலிருந்த கன்னாவின் பணத்தைத் திருட வேண்டுமென்ற எண்ணமே எழாத காவலாளியின் மன நிலையையும் குறித்துச் சிந்தித்தார். இவ்வாறென்றால் தனது சொந்த திருப்திக்கு அப்பால் வாழ்க்கையில் ஏதோ ஒன்று உள்ளதென்பதை அவர் உணர்ந்தபோது, "அது என்ன?" என்ற கேள்வி கூடவே எழவும், கன்னாவின் ஆன்மீகத் தேடலும் ஆரம்பமாயிற்று.

கன்னா பகவத்கீதையைப் படித்தார். உயர்ந்த ஆன்மீக உண்மைகளை அனுபவித்து உணர ஒரு குரு தேவை என்பதை அவர் உறுதியாக நம்பினார். தனது வீட்டில் கதவுகள், ஜன்னல்கள் இவை அனைத்தையும் இரவில் பூட்டிவிடுவது மட்டுமல்லாமல், தனது படுக்கை அறையின் கதவையும் கூடத் தாளிட்டுப் பூட்டிக் கொண்டு விடுவது, கன்னாவின் வழக்கம். ஒரு நாள் நள்ளிரவில் விநோதமான ஒரு உணர்ச்சியுடன் அவர் விழித்துக் கொண்டபோது தனது அறைக்குள் வேறு யாரோ இருப்பது போன்று தோன்றியது. கண்ணைத் திறந்து நோக்கிய போது, தான் அறிந்திருந்த ஸாது ஒருவர் தன் முன்னே அமர்ந்திருப்பதைக் கண்டார். ஸாதுவின் கால்கள் சற்று ஊனமுற்றிருந்தன. அவர், 'நாளை காலை நான்கு மணிக்கு என்னிடம் வாருங்கள்,' என கன்னாவிடம் கூறவும், அவர் தன் மனைவியை எழுப்பி நடந்தவற்றைக் கூறினார். காலையில் ஸாதுவைச் காணச் செல்ல வேண்டுமென்றும் கன்னா தெரிவித்தார். இதற்கிடையே அந்த ஸாது தன் சீடனிடம் ஒரு மஹாத்மா வருவதாகவும் அவரை வரவேற்கும் பொருட்டு தன்னைத் தூக்கிச் சென்று வாயில் கதவிற்கு வெளியே அமர்த்துமாறும் கூறியுள்ளார். ஸாதுவைக் கண்ணுற்றபோது மெய்சிலிர்த்துப் போன கன்னா, அவரே தன் குரு என்று எண்ணினார். ஆனால் ஊனமுற்றிருந்த அந்த ஸாது, "நான் உங்கள் குரு அல்ல. ரமண மஹர்ஷியே உங்கள் குரு எனக் கூறவும் கன்னா வாயடைத்துப்போய் நின்றார். ஏனெனில் அவர் அதுவரை ரமண மஹர்ஷியைப் பற்றிக் கேள்விப்பட்டதே இல்லை. முந்தைய இரவில் தனது அறையில் மாயமாகத் தோன்றிய இந்த ஸாதுவிடம் சரணடையத் தயாராகவே வந்திருந்த கன்னாவிடம் அவர் உனது குரு நானல்ல என்று கூறவும், ரமண மஹர்ஷியைப் பற்றிய விபரங்களை அறிவதில் கன்னா ஆர்வம் காட்டினார். ஸாதுவின் சீடரான பேராசிரியர் 'பட்நாகர்' என்பவர், "எனக்கு மஹர்ஷியைப் பற்றி சிறிது தெரியும்," எனக் கூறியபடி கன்னாவிற்கு 'உபதேச ஸாரம்' என்னும் நூலின் ஒரு பிரதியைப்

பரிசாகத் தந்தார். அதில் ரமணாச்ரமத்தின் விலாசம் கொடுக்கப்பட்டிருந்தது. ''பால் பிரண்டனின் புத்தகம் ஒன்றின் விமர்சனத்தை நான் படித்துள்ளேன். ரமண மஹர்ஷி ஒரு உண்மையான ஞானி என்றே தோன்றுகிறது. நீ அவரைக் காணச் செல். நான் உன் குழந்தைகளைக் கவனித்துக் கொள்கிறேன்,'' என்று கன்னாவின் தந்தை பரிவோடு உதவ முன் வந்தார்.

அதனால் 1941-ல் பிரேமாவதியும், கன்னாவும் பகவானிடம் வந்தனர். மற்ற பக்தர்களைப் பார்த்தது போன்றே, பகவான் கன்னாவைப் பார்த்த பார்வை, ''என்னைக் காண வருவதற்கு உங்களுக்கு இத்தனை காலம் ஆயிற்றா?'' என்று கேட்பது போல் அவருக்குத் தோன்றியது. உடனே, அவரே தனது குரு என்று கன்னா உணர்ந்து கொண்டார். பின்னர் ஆச்ரமத்திற்கு அடிக்கடி வரத் துவங்கினார் என்றாலும், 'தானே அவருடைய குரு' என்பதை வெளிப்படையாக பகவான் தெரிவிக்க வேண்டுமென்று கன்னா விரும்பினார். அவர் பகவானிடம், ''பகவானே! எனக்கு வெளியில் ஒரு குரு தேவை. நீங்களே அந்த குரு என்று என்னிடம் கூறி உறுதிப்படுத்த வேண்டும்,'' என்று சொன்னவுடன், பகவான் தன் வழக்கமான முறையில், 'குரு உள்ளே இருக்கிறார்!' என்று பதிலளித்தார். கன்னா தன் பிடியைத் தளர்த்தாமல் தொடர்ந்து, ''பகவானே! நீங்கள் எனது குரு என்று நீங்களே என்னிடம் கூற வேண்டும்'' என்று மன்றாடிக் கேட்டுக் கொண்டார். அந்தச் சூழ்நிலையின் அழகைப் பாருங்கள்! சீடன் மிகுந்த புத்திசாலியாக இருக்கும் போது குரு அதை விட புத்தி சாதுர்யத்துடன் நடந்து கொள்கிறார். பகவான் தொடர்ந்து, ''வெளியே இருக்கும் குருவேதான் 'குரு உள்ளே இருக்கிறார்' என்று கூறுகிறார்!'' எனத் தெரிவித்தார். இது சாமர்த்தியமான பதில் மட்டுமன்று. பகவான் இவ்வாறு கூறியபோதே அந்த அனுபவம் கன்னாவுக்கு ஏற்பட்டது. தன்னுள் பலமான துடிப்புக்களோடு கூடிய அதிர்வுகளை உணர்ந்தார். பகவானுடைய தீவிரமும் கூர்மையுமான பார்வை அவருள் ஊடுருவிச் சென்று கன்னாவை ஆன்மீக விழிப்படையச் செய்தது. பகவான் வெளியிலிருந்து பார்த்தார் என்பதுதான் உண்மையென்றாலும் கன்னாவிற்கு உள்ளே அனுபவம் ஏற்பட்டு அந்த அனுபவம் உள்ளேயிருக்கும் குரு, 'நான்' என்ற அனுபவத்தைத் தனக்குத் தருவதை நிரூபிப்பதாக இருந்தது. பகவானுடைய பார்வையின் சக்தி அத்தகையது.

நான் கன்னாவிடம் மிகுந்த அன்பு கொண்டிருந்தேன். ஆச்ரம பராமரிப்புக்காகப் பணம் வசூல் செய்வது எனது வேலைகளில் ஒன்று என ஏற்கனவே கூறியிருக்கிறேன். செல்வந்தராக இருந்ததால், நான் அவரை அணுகிய போதெல்லாம் கன்னா எனக்கு உதவி செய்வார். இருந்தாலும் எப்போதுமே, ''விழித்துக் கொள்ளுங்கள் கணேசன்! இது மட்டுமே உங்களுடைய வேலையில்லை. உங்களுடைய வேலையில் ஒரு பகுதி மட்டுமே இது. ஆத்மானுபூதியைப் பெறுவதே, நம்முடைய தலையாய கடமை'' என்று கூறி என்னை எச்சரிப்பார். பிதாஜி என்று நான் அன்போடு அழைக்கும் இந்தப் பெருந்தன்மையுள்ள மனிதருக்கு நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். பிதாஜியுடன் நான் நெருக்கமாக இருந்ததால், ''எத்தனை முறை நீங்கள் வந்திருக்கிறீர்கள்? பகவானுடைய இந்த உபதேசத்தைப் பெற்ற பிறகு பகவானைக் காண வரவேண்டியதன் அவசியம் தான் என்ன?'' என்று நான் துணிந்து கேட்டேன். அதற்குக் கன்னா, ''குரு வெளிப்படுத்திய உண்மை மிகவும் மேன்மையானது என்பதால், அது ஒருவரது உள்ளே ஊடுருவிச் சென்று இதயத்தை நனைத்து அது அவருடையதாவதற்குக் காலம் தேவைப்படுகிறது. இதற்கு, வெளியில் உள்ள குருவின் அருகாமை அத்தியாவசியமானது. அதனால்தான் இயன்ற போதெல்லாம் வந்து கொண்டிருந்தேன். என் சந்தேகங்கள் நீக்கப்பட்டு வந்தன. அவை உண்மையிலேயே அழிக்கப்படுகின்றன என்பதை நிரூபிப்பது போன்று, உள்ளத்தில் அமைதியின் ஆழமும் அதிகரித்து வந்தது,'' என்று பதிலளித்தார்.



**இந்த புனிதமான 'பழைய ஹாலில்'– "குரு உனக்கு உள்ளே இருக்கிறார்" என்ற உபதேசத்தைப் பெற்றார் கன்னா**

பின்னர் பிதாஜியிடம், "பகவானுக்கும் உங்களுக்குமிடையே நிகழ்ந்த உரையாடல்களை என்னோடு தயவு செய்து பகிர்ந்து கொள்வீர்களா?" என நான் கேட்டபோது, "அதுதான் ஏற்கனவே 'Day by Day with Bhagavan' என்னும் நூலில் உள்ளதே!" என பதில் கூறிய போதும் சிறிது தாமதித்துப் பேசத் துவங்கினார். "ஒரு காகிதத்தில் என் மன வேதனைகளை எழுதி அதைப் பகவானிடம் கொடுத்தேன். அதைப் படித்துப் பார்த்த அவர், "இது ஒரு குற்றச்சாட்டு. 'நான் உங்களிடம் வந்து கொண்டே இருக்கிறேன். இம்முறை உங்கள் பாதாரவிந்தங்களில் ஏறத்தாழ ஒரு மாதம் இருந்திருக்கிறேன். என் நிலையில் எவ்வித முன்னேற்றமுமே எனக்குத் தெரியவில்லை. என் வாசனைகள் எப்போதும் போன்று பலமாகவே உள்ளன. நான் திரும்பிச் சென்றால் எனது நண்பர்கள் ஆச்ரமத்தில் தங்கியதில் உங்களுக்கு என்ன நன்மை விளைந்தது? என்று எள்ளி நகையாடுவார்கள் என எழுதியிருக்கிறார்" என்று கூறிக் கன்னாவை நோக்கிய பகவான், "ஞானத்தைப் பெறவில்லை, வாசனைகள் நீங்கவில்லை என்றெல்லாம் எண்ணி உங்கள் மனதை ஏன் வருத்திக் கொள்கிறீர்கள்? எண்ணங்களுக்கு இடம் கொடுக்காதீர்கள். தாயுமானவர் தனது பாடல்கள் ஒன்றில் நீங்கள் காகிதத்தில் எழுதியுள்ளதையே கூறியுள்ளார்," என்று கருணையோடு தெரிவித்த பின்னர், அந்தப் பாடலைப் படித்து அங்கிருந்தவர்களில் தமிழ் தெரியாதவர்களுக்காக அதை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துக் கூறுமாறு தேவராஜ முதலியாரிடம் சொன்னார். அப்பாடலின் கருத்து, 'மனம் என்னைக் கண்டு நகைக்கிறது. ஆயிரம் முறை நான் உங்களிடம் எடுத்துக் கூறியும் நீங்கள் அசட்டையாகவே உள்ளீர்கள். இவ்வாறிருந்தால் நான் எவ்வாறு அமைதியையும், ஆனந்தத்தையும் பெறுவது?' என்பதாகும். பின் முதலியார் கன்னாவை நோக்கி, "பகவானிடம் இம்மாதிரியான

புகார்களைக் கூறுவது நீங்கள் மட்டுமன்று. நானும் பகவானிடம் பலமுறை குறை கூறியுள்ளேன். இன்னும் கூடக் குறை கூறியபடி இருக்கிறேன். ஆனாலும் என்னிடம் முன்னேற்றம் எதுவும் எனக்குத் தெரியவில்லை,'' என உரைத்தவுடன் கன்னா, ''நான் முன்னேறவில்லை என்பது மட்டுமில்லை. மேலும் மோசமான நிலைக்குச் சென்று விட்டதாகத் தோன்றுகிறது. வாசனைகளுக்குச் சக்தி கூடியுள்ளது. என்னால் புரிந்து கொள்ளவே முடியவில்லை,'' என பதிலிறுத்தார்.

இதன் பிறகு, ''பேரறிவும் மனமும் சேர்ந்தது ஜீவாத்மா — தனிமனிதன். பேரறிவு தனித்து நிற்கும் போது அது பரமாத்மா - இதுவே இறுதி உண்மை. இது சரிதானா பகவானே?'' எனக் கன்னா கேட்ட போது பகவான் சரி எனத் தலையசைத்தார். பிறகு தனது வெள்ளைத் துண்டைச் சுட்டிக்காட்டி, ''வெள்ளைத் துணியென இதை நாம் கூறுகிறோம். ஆனால் துணியையும் அதன் வெண்மையையும் நம்மால் பிரிக்க இயலாது. பேரறிவும் மனமும் இணைந்து அஹங்காரமாக உருவெடுத்திருப்பதும் இதைப் போன்றது தான். புத்தகங்களில் அடிக்கடி கொடுக்கப்படும் நான் கூறப்போகும் இந்த உபமானமும் உங்களுக்கு உதவியாக இருக்கும். நாடகம் நடத்தப்படும் கொட்டகைகளில் உபயோகப்படுத்தப்படும் விளக்கே பரமாத்மா. அது தன்னையும் விளக்கிக்கொண்டு, திரையரங்கு நடிகர்கள் முதலியவற்றையும் விளக்கிக் காட்டுகிறது. விளக்கின் ஒளியில்தான் அரங்கையும் நடிகர்களையும் காண்கிறோம். நாடகம் நடத்தப்படாத போதுகூட விளக்கு மட்டும் பிரகாசித்துக் கொண்டிருக்கும். இரும்புத் தடியை மனதிற்கு மற்றொரு உபமானமாகக் கூறலாம். நெருப்பைத் தடியுடன் சேர்க்கும் போது அது நன்கு சூடேறி சிவப்பாகத் தோன்றுகிறது. நெருப்பைப் போன்று ஒளிவீசுவதோடு அதைப்போன்றே பிற பொருட்களை எரிக்கும் சக்தியும் அதற்கு உண்டு. ஆனால் நெருப்பைப் போலில்லாமல் ஒரு தனிப்பட்ட உருவத்தில் அது உள்ளது. அந்த இரும்புத் தடியைச் சுத்தியலால் அடிக்கும் போது அதை வாங்கிக் கொள்வது தடிதானே தவிர நெருப்பு அன்று. தடியே ஜீவாத்மா, நெருப்புதான் பரமாத்மா,'' என விளக்கிக் கூறினார் பகவான்.

பகவான் கன்னாவுக்கு மட்டுமின்றி அவரது மனைவி பிரேமாவதிக்கும் உதவி செய்தார். ஒரு நாள் மதியம் ஹாலில் இருந்த போது பிரேமாவதி ஒரு சீட்டின் மூலம் பகவானிடம், ''நான் சாஸ்திரங்கள் எதுவும் கற்கவில்லை; எனக்கு ஆத்ம விசாரப் பாதை மிகவும் கடினமாக உள்ளது. நான் ஏழு குழந்தைகளுக்குத் தாயான ஒரு பெண் என்பதோடு குடும்பப் பணிகளின் சுமையும் அதிகமாக உள்ளதால் தியானம் செய்வதற்கு எனக்கு நேரமே இருப்பதில்லை. அதனால் பகவான் எனக்கு எளிமையானதும் சுலபமானதுமான ஒரு வழியைக் காட்டியருள வேண்டும்,'' என வேண்டிக் கொண்டார். பகவான் மிகுந்த கருணையுடன் அவரை நோக்கி, ''ஒரு மனிதன், தான் இருப்பதை உணர்வதற்குக் கண்ணாடி தேவையில்லாதது போன்று ஆத்மாவை உணர்ந்து கொள்ள படிப்போ சாஸ்திர ஞானமோ அவசியமில்லை. இறுதியில் எல்லா அறிவுமே ஆத்மா அன்று என அறிந்து அவற்றை விட வேண்டியிருக்கும். குடும்பக் காரியங்களையும், குழந்தைகளையும் கவனிப்பது கூடத் தடையாக இருக்க வேண்டிய அவசியமில்லை. உங்களால் வேறெதுவும் செய்ய முடியவில்லை என்றாலும் 'நான் யார்?' என்னும் புத்தகத்தில் கூறியபடி, 'நான்''நான்' என்று எப்போதும் மானஸீகமாகச் சொல்லிக் கொண்டாவது இருங்கள். நீங்கள் எந்தப் பணியில் ஈடுபட்டிருந்தாலும் உட்கார்ந்திருந்தாலும் நின்றாலும் நடந்தாலும் கடவுளின் பெயரான 'நான்' என்ற மந்திரத்தை ஓதியபடி இருங்கள். அதுவே முதன்மையானதும் மந்திரங்கள் அனைத்திலும் சிறப்புடையதுமாகும். 'ஓம்' என்னும் மந்திரம் கூட அதற்கு அடுத்தபடி தான்,'' என்று உபதேசித்தார்.

பிதாஜி, திட நம்பிக்கையும் விடாமுயற்சியும் உள்ளவர். ஒரு முறை உணவுக் கூடத்தில் பகவானுடன் உணவருந்திக் கொண்டிருந்த போது தனது குடும்பத்தினருக்கும் பகவானுடைய

பிரசாதத்தை எடுத்துச் செல்ல வேண்டுமென்ற பலமான உந்துதல் அவருள் எழுந்தது. குரு உணவருந்திய பின் அவர் உண்ட இலையில் மிகுந்திருப்பதை உண்பது ஒரு ஜீவனின் ஆன்மீக முன்னேற்றத்திற்கு உதவும் என்ற நம்பிக்கை சில இந்துக்களிடம் உள்ளது. இதைக் கருத்தில் கொண்டு பகவானுடைய எச்சில் இலையை எடுத்துச் செல்வதே சிறந்த வழி எனத் தீர்மானித்தார். குறிப்பிட்ட அந்த நாளில் பகவானுக்குப் போடப்பட்டிருந்த இலை முற்றாத மென்மையான இலையாக இருந்தது. பகவான் உண்ட இலையைத் தான் திருடும் போது ஹாலில் அதைக் கவனிக்க யாரும் இருக்கக் கூடாதென்று இதய பூர்வமாகப் பகவானிடம் அருள் புரியப் பிரார்த்தித்தார். கண்களை மூடிப் பிரார்த்தித்த அவர் கண்களைத் திறந்த போது அவருக்கு வியப்பையும் நிம்மதியையும் தரும் விதமாக உணவுக் கூடத்தில் யாரும் இருக்கவில்லை. தன் இருக்கையிலிருந்து குதித்தெழுந்த கன்னா தனது மேலங்கியில் பகவான் உண்ட இலையைப் பொதிந்து எடுத்துக் கொண்டு மலையை நோக்கி விரைந்தார். பெரிய பாறையின் பின்னால் மறைந்து நின்றபடி தளிராக இருந்த இலையின் ஒரு பகுதியைப் பிய்த்து பகவானின் புனித பிரசாதமாகத் தான் உண்ட பின் எஞ்சியிருந்த நீண்ட இலையைக் கான்பூருக்கு எடுத்துச் செல்வதற்காகப் பத்திரப்படுத்தி, அவர் தங்கியிருந்த பொது விருந்தினர் இல்லத்திற்குத் திரும்பி வந்து தனது பெட்டிக்குள் அடிபாகத்தில் ஜாக்கிரதையுடன் பொதிந்து வைத்தார். தன்னை யாரும் பார்க்காதவாறும் கவனித்துக் கொண்டார். அவருக்கிருந்த மன அழுத்தத்திலிருந்து விடுபட ஊருக்குள் சென்றார்.

மாலையில் அவர் ஆச்ரமத்திற்குத் திரும்பி வந்த போது, அங்கு அவருக்கு ஒரு விசாரணை காத்திருந்தது. காணாமல் போன இலை குறித்து சர்வாதிகாரிக்கு அறிவிக்கப்பட்டதால், அதற்கு யார் பொறுப்பு என்பது பற்றிய விரிவான விசாரணையில் அவர் ஈடுபட்டிருந்தார். உணவு பரிமாறிய போஸ்ட் மாஸ்டர் ராஜா ஐயர் உணவுக் கூடத்தை விட்டுக் கடைசியாக வெளியேறியது கன்னா தான் என்ற செய்தியைச் சின்னஸ்வாமியிடம் ஏற்கனவே கூறியிருந்ததால் கன்னா அலுவலகத்திற்கு வரவழைக்கப்பட்டார். அவர் பகவானுடன் மனதிற்குள்ளேயே சண்டையிடத் துவங்கினார். “ஹே பகவான்! உங்களது இலையை யாருமறியாமல் எடுத்துக் கொள்ள நான் செய்த பிரார்த்தனையை நீங்கள் நிறைவேற்றினீர்கள். இப்போது என்னைக் காட்டிக் கொடுக்கப் போகிறீர்களா? இதுதானா உங்கள் அருள்? நான் மேற்கொண்ட பணியை வெற்றிகரமாக முடிக்க எனக்கு உதவி செய்யும் வகையில் சின்னஸ்வாமியிடம் என்னைக் காட்டிக் கொடுக்காமல் இருங்கள்,” என்று மனதிற்குள் கூறிக் கொண்டிருந்தார். சின்னஸ்வாமி கன்னாவை வரவேற்று நடந்த விஷயத்தைக் கூறும் போது இலையைத் திருடியவரின் துணிச்சலைப் பற்றியும் உரைத்தார். சின்னஸ்வாமி கூறியதையெல்லாம் ஆமோதித்து திருடியவரைக் கட்டாயம் கண்டுபிடித்து நன்கு தண்டிக்க வேண்டும் எனக் கூறிய அதே சமயத்தில் அவ்வாறு நடந்துவிடக் கூடாதென மனதில் பகவானிடம் பிரார்த்தித்தவாறு இருந்தார் கன்னா. பின் ஹாலுக்கு ஓடிச் சென்று பகவானை ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்தார். அப்போது அவரைப் பார்த்து பகவான் புரிந்த குறும்புத்தனமான சிரிப்பு, “பயப்பட வேண்டாம், எல்லாம் சரியாக உள்ளது,” என்று அவர் உறுதி செய்ததைத் தெளிவாக வெளிப்படுத்துவதாகத் தோன்றியது. 1970-ல் இந்நிகழ்ச்சியை என்னுடன் மிகுந்த மரியாதையுடன் பகிர்ந்து கொண்ட பிதாஜி, “அன்றே நான் கான்பூருக்குப் புனிதமான பிரசாதத்தை எடுத்துக் கொண்டு கிளம்பினேன். குடும்பத்தின் ஒவ்வொரு அங்கத்தினருக்கும் அதில் ஒரு பகுதியைப் பகிர்ந்து கொடுத்தேன். அந்தப் பிரசாதத்தை நான் திருடுவதற்கு உதவிய பகவானுக்கு நாங்கள் ஒவ்வொருவரும் நன்றிக்கடன் பட்டுள்ளோம் என்பதை பகவானிடம் தீவிர பக்தியுடைய எனது குழந்தைகளும் நன்கு அறிவர். எல்லாமே ஸ்ரீ பகவானின் அருள்,” எனக் கூறி முடித்தார்.

“பகவான் நோய்வாய்ப்பட்டிருந்த இறுதி நாட்களில் ஒரு தினம் - 1950-ம் ஆண்டில் மார்ச் மாதம் - கான்பூரில் இருந்த போது பகவான் என்னை அழைப்பதாகத் தோன்றவே நான் திடீரென விழித்தெழுந்தேன். எனது மனைவியையும் கைக்குழந்தையாக இருந்த என் மகளையும் அழைத்துக் கொண்டு அருணாசலம் வந்து சேர்ந்தேன். பகவான் முன் நான் நின்ற போது வரவேற்கும் வகையில் என்னை நோக்கிச் சிரித்துவிட்டு அவரது தொண்டரை விநோதமான முறையில் பார்த்தார். பின்னர் அவர் ஏன் அவ்வாறு பார்த்தார் என நான் அந்தத் தொண்டரிடம் வினவியபோது, “இன்று காலைதான் என்னிடம் ‘கான்பூர் கன்னா வந்திருக்காரா?’ என பகவான் கேட்டார். அதற்கேற்ப நீங்களும் வந்திருக்கிறீர்கள்,” என்று தொண்டர் தெரிவித்தார். இன்று நான் இவ்வாறு இருக்கிறேன் என்றால் அதற்குப் பகவான் என்மீது செலுத்திய கூரிய கவனமும் பொழிந்த அருளுமே காரணம்,” என்று பிதாஜி கண்களில் நீர் மல்கக் கூறினார்.

‘பகவான் உடலை உகுத்த சமயத்தில் நீங்கள் ஆச்ரமத்தில் இருந்தீர்களா?’ என நான் கன்னாவிடம் கேட்டபோது “ஆம். பகவான் அருள் புரிந்ததால் அது சாத்தியமாயிற்று. விதி விளையாடிய அன்று இரவு சம்பவம் நிகழ்ந்து முடிந்துவிட்ட பின் பக்தர்கள் தரிசிக்கும் பொருட்டு பகவானின் சரீரம் புதிய ஹாலில் வைக்கப்பட்டிருந்தது. எனது நாதனின் உடலை அலங்கரிக்கும் பொருட்டு பெரிய பூமாலை ஒன்றை வாங்கி வர நான் ஊருக்குள் விரைந்தேன். என் காணிக்கையே முதலாவதாகவும் பிரதானமானதாகவும் இருக்க வேண்டுமென்று வற்புறுத்துவதை வாழ்நாள் முழுவதும் என் வழக்கமாகக் கொண்டிருந்தேன். நகரிலிருந்து வேகமாக மாலையுடன் திரும்பிய நான் தொண்டர் சுட்டிக் காட்டிய ஒரு மூலையில் மிகவும் மரியாதையுடன் அதை வைத்தேன். மறுநாள் காலை பகவானுக்கு அர்ப்பணிக்கும் போது என் மாலையே முதலாவதாக இருக்கும் என தொண்டர்



**பிரேமாவதி கன்னாவிடம் ஸ்ரீ பகவான் – 'நான்', 'நான்' என்று சொல்லிக்கொண்டே இருங்கள்**

உறுதிபடக் கூறவும் செய்தார். மறுதினம் காலையில் புதிய ஹாலுக்குச் சென்ற போது அதிர்ச்சியுற்றேன். நான் வாங்கிய மாலைக்கு மேல் அடுக்கடுக்காக அதே போன்ற பெரிய மாலைகள் வைக்கப்பட்டிருந்தன. என்னுடையது அடியில் கிடந்தது. உடனே நான் மிகத் தீவிரமாக, 'பகவானே! நீங்கள் மிகுந்த பொலிவுடன் ஒளிபரப்பிக் கொண்டு உடலோடிருந்த போதெல்லாம் நான் முழுமையாகத் திருப்தியடையும் விதத்தில் என் பிரார்த்தனைகளை எப்போதும் நிறைவேற்றி வைத்தீர்கள். இப்பொழுதும் பிரார்த்திக்கிறேன் - எனது மாலையே உங்கள் தேஹத்தை முதலாவதாக அலங்கரிக்க வேண்டும் என்னும் என் எளிய வேண்டுகோளை நிறைவேற்றி வையுங்கள் என்று கூறினேன்" என்ற கன்னா சிறிது தாமதித்து "குறிப்பிட்ட நேரத்தில் மாலைகளைப் பகவானின் சரீரத்தின் அருகே தொண்டர் வைக்கும் போது அவற்றைத் தலைகீழாக வைக்கவே என் மாலை மேலே முதலிடத்திற்கு வந்து விட்டது. என்ன ஒரு அருள் பாருங்கள்! என் சிறு பிள்ளைத்தனமான பிரார்த்தனையைக் கூட பகவான் நிறைவேற்றி விட்டார். எங்கும் நீக்கமற நிறைந்த பேருண்மையான பகவான் தன் முன் வைக்கப்பட்ட பிரார்த்தனைகளை எப்போதும் நிறைவேற்றினார். இனிமேலும் நிறைவேற்றுவார். அவர் அருட்கடலே அன்றோ!" என கன்னா நெகிழ்ச்சியுடன் கூறினார்.

கன்னாவிற்கு ஏராளமான பொறுப்புக்கள் இருந்தன. பல கோடி மதிப்புடைய ஒரு சொத்தின் காரணமாக ஏற்பட்ட சச்சரவைத் தீர்க்கும் பொருட்டு அவர் ஒரு முறை டில்லிக்குச் செல்ல விரும்பினார். நானும் அவரும் நெருங்கிய நண்பர்களாக இருந்ததால் அவர் என்னைக் கலந்தாலோசிப்பதுண்டு. "நான் டில்லிக்குச் செல்ல விரும்புகிறேன். என்றாலும் அருணாசலத்தில் இறக்கவே ஆசைப்படுகிறேன்" என்று அவர் என்னிடம் தெரிவித்த போது, 'பிதாஜி! நீங்கள் அருணாசலத்தை விட்டுச் சென்றால் ஒரு வேளை அங்கேயே மரணமடைய நேரிடலாம்!' என்று கூறினேன். மறுநாள் காலை அவர் என்னை ஆரத் தழுவியபடி, "கணேசன்! என் பயணத்தை நான் ரத்து செய்து விட்டேன். இங்கேயேதான் இருக்கப் போகிறேன். ஆழம் தெரியாமல் நான் காலை விடப் போவதில்லை. வழக்கும் சொத்தும் எக்கேடு கெட்டுப் போனாலும் பரவாயில்லை. எவனுக்கு வேண்டுமானாலும் அது போகட்டும். நான் தொடர்ந்து இங்கு தான் இருக்கப் போகிறேன். அருணாசலத்தில் தான் என் உடலை விடப் போகிறேன்," என்று கூறிய கன்னா என்னிடம் ஒரு கேள்வியைக் கேட்டார். "உங்கள் தாயார் இறந்த போது நீங்கள் அவரருகில் தானே இருந்தீர்கள்? அவர் எவ்வாறு மரணத்தைத் தழுவினார்? தயவு செய்து என்னிடம் கூறுங்கள்," என்று கேட்டார். "எனது தாய் முழு உணர்வோடும், மகிழ்ச்சியோடும் அற்புதமான விதத்தில் தனது உடலை நீத்தார். கடைசி நொடிகளில் கண்களை மூடியவாறுதான் இருந்தார் என்ற போதிலும் நாங்கள் அனைவரும் பகவானின் அக்ஷரமணமாலையை ஓதியபோது அவர் பக்தி பரவசத்தில் ஆழ்ந்திருந்ததை அவரது முகம் தெளிவாக உணர்த்தியது," என நான் கூறி முடித்தவுடன் மிக உன்னிப்பாகக் கேட்டுக் கொண்டிருந்த பிதாஜி, "நானும் அது போன்றே தான் மரணத்தை எதிர்கொள்வேன்" எனக் கூறினார்.

1984-ம் ஆண்டு ஜுலை மாதக் கடைசியில் ஒரு நாள் தான் இறக்கப் போவதாகத் திடீரென்று ஒரு உணர்வு அவருக்கு ஏற்பட்டது. தன் மனைவி பிரேமாவதியை அழைத்து, "கணேசனைக் கூப்பிடு. உடனே வரும்படி சொல்" என்று கூறிவிட்டு பகவானின் பெரிய படம் ஒன்றின் முன் ஒரு நாற்காலியைத் தானே போட்டு அதில் அமர்ந்து முழு உணர்வுடன் தனது இறுதிமூச்சை விட்டார். நான் வந்து சேருவதற்கு முன்னர் அவர் மரணத்தைத் தழுவியிருந்தார். மரணம் நொடிப் பொழுதில் நேரிட்டுள்ளதாக டாக்டர்கள் கூறியதால், கன்னா இறந்த போது முழு உணர்வுடன் இருந்திருக்க வேண்டுமென்பது ஊர்ஜிதமாயிற்று. தனிப்பட்ட முறையில் எனக்குப் பிதாஜி ஒரு மாவீரன். உடலின் தேவைகளை எதிர்த்து நின்றதுடன் கடும் உழைப்பால் தனது வேதனைகள், சோதனைகள்

இவற்றிடையே பகவானிடம் முழு கவனத்தையும் திருப்பி வெற்றி கண்டார். அவருக்கு பகவானிடம் பூரண நம்பிக்கை இருந்ததால் அவருடைய நாதனான அவர் கன்னாவை முழு உணர்வுடன் தன்னோடு இணைத்துக் கொண்டார். பிதாஜி ஒரு குடும்பஸ்தர் என்றாலும் ஆச்ரம வளாகத்தில் அவரது ஸமாதி அமைவதற்குத் தேவையான தகுதி அவருக்கு இருந்ததென்று நான் திடமாக நம்பினேன். என்னை எதிர்த்தவர்களிடம் வாதித்து என் வழிக்குக் கொண்டு வந்து பிதாஜியை சாட்விக், கோஹென் இவர்களின் ஸமாதிகளுக்கருகே அடக்கம் செய்தேன். இன்றும் இந்த ஸமாதியில் பக்தர்கள் அஞ்சலி செய்கின்றனர். ரமணாச்ரமத்தில் அடக்கம் செய்யப்பட்ட ஸாதுக்கள் ஸந்நியாசிகள் இவர்களிடையே இவர் ஒரு கிருஹஸ்தர்.

ஸத்தியம் என்பது தேடி அலைய வேண்டிய வெறும் கொள்கை அன்று. அந்த ஸத்தியம் நீங்களேதான். வேதாந்த சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள கவரிமானின் உதாரணத்தைப் பகவான் அடிக்கடி கூறுவதுண்டு. நறுமணம் தன் உடம்பிலிருந்துதான் வருகிறதென்பதை உணராத அந்த மான்களில் சில, அந்த அற்புதமான மணத்தைத் தேடி அலைந்து ஓடி இறந்து கூடப் போய் விடும் எனக் கூறுவார்கள். நாமும் ஸத்தியத்தைத் தேடி அந்த மானைப் போன்று அங்குமிங்கும் ஏன் ஓட வேண்டும்? நாமேதான் அந்த உண்மை. வெளியில் தேட வேண்டிய அவசியம் என்ன? இதயத்தின் உள்ளே ஸத்தியமாக நிலைத்து நிற்போம். பகவானின் அருளால் அருணாசலம் தன்னோடு இணைத்து நம்மை ஆட்கொண்டுவிடும். ஸத்தியத்தில் நிலைத்து நிற்பதே அருணாசலத்துடன் இணைவதாகும்.

ஒரு முறை தீரன் என்பவன் யார்? என்ற வினா பகவானிடம் எழுப்பப்பட்டது. ‘‘தான் யாரென எவன் அறிந்து கொண்டிருக்கிறானோ அவனே தீரன் - தைரியமுடையவன்,’’ என்று பகவான் பதிலிறுத்தார். ஸத்தியமாகவே எப்பொழுதும் இருப்பதுதான் மிக உயர்ந்த பராக்ரமம் தைரியம். பகவானுடைய பழைய பக்தர்கள் எல்லோரிடமும் இத்தகைய இயல்பு - பண்பு இருந்தது. நாமும் எப்பொழுதும் தீரர்களே என்பதை நினைவில் கொள்வதற்கு அவர்களுடைய வாழ்க்கை வரலாறுகளைப் பகிர்ந்து கொள்வது மிகவும் அவசியம். ஸத்தியத்துடன் உண்முகமாக இணைந்திருக்கும் இந்நிலை ஒவ்வொரு நொடியிலும் - நிகழ்காலத்தில் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.

அருணாசலத்துடன் இரண்டறக் கலப்பதற்காகவே நாம் அருணாசலத்திற்கு வந்துள்ளோம். பகவான் இதையே ‘ஐக்கியம் ஆக்கிக்கொள்’ எனக் குறிப்பிட்டார். ‘உன்னுடைய ஆன்மாவோடு அவளை இணைத்துக் கொள்’ என அருணாசலத்திடம் பகவான் பிரார்த்தித்தது, அவரது தாயாருக்காக மட்டுமன்று. நம் ஒவ்வொருவருக்காகவும் அவர் பிரார்த்தித்தார். நாம் விழித்துக் கொள்ள வேண்டும். நம்மை எழுப்புவதற்கான பகவானின் அறைகூவல் இது. கவரி மானைப் போன்று உண்மையைத் தேடி வீணாக அலைவதை நாம் தவிர்ப்போம். உண்மை நம்முள் உள்ளதென்பதை உணர்ந்து கொள்வோம். ஆத்மாவை உணரும் அந்நிலையே இணைதலாகும். அதுவே அருணாசலம். ‘‘இதயமே! உன் பெயர்தான் அருணாசலம்!’’ என பகவான் அருணாசலத்தைப் பற்றிக் கூறியுள்ளார். நமது இருப்பின் மையமான இதயமே அருணாசலம். அகமுகமாக ஆழ்ந்து ஆத்மாவில் நிலைப்பதே அருணாசலத்துடன் இணைவது. இந்நிலை கால தேசங்களுக்கு அப்பாற்பட்டது. எந்த நித்தியமான தருணத்தில் நாம் இப்போது உள்ளோமோ அந்த அழிவற்ற தருணமே அது.



# 68 சிவராம ரெட்டியார்



ஒரு தீச்சுடரைக் காண மற்றெந்த ஒளியும் தேவையில்லை. ஸ்வயம்ப்ரகாசமான அதற்கு இருப்பு உள்ளது; கண்ணுள்ளவர்களால் அதைக் காண முடியும். அந்தத் தீச்சுடர் தன்னை யாராவது காண்கிறார்களா இல்லையா என்னும் சிந்தனை ஏதுமின்றிப் பிரகாசமாக ஒளிவீசிக் கொண்டிருக்கிறது. சிவராம ரெட்டியார் அத்தகையதொரு தீப்பிழம்பு. ஆச்ரமத்தில் ஒரு சிறிய அறையில் இயங்கி வந்த புத்தகக் கடையின் பொறுப்பை அவர் ஏற்றிருந்தார். 1960-ல் நான் ரமணாச்ரமம் வந்தபோது எனது தந்தை, "உனக்கு உலக விவகாரங்களைக் குறித்து முக்கியமாகப் பண விஷயமாக எதுவும் தெரியவில்லை. அதனால் சிவராம ரெட்டியாருக்குக் கீழ் வேலை செய்," என்று அனுப்பினார். நான் ஆன்மீகத்தில் அப்போதுதான் அடி எடுத்து வைத்திருந்தேன் என்றபோதும் அவருடன் பணியாற்றிய சில மணி நேரத்திற்குள்ளாகவே அவரைச் சுற்றிப் பரவியிருந்த நிலையான சாந்தியும் அமைதியும் என்னை வசீகரித்தன. நான் அவருடைய ஆன்மீக நிலையை எடைபோடவோ, புரிந்து கொள்ளவோ கூட முயற்சி செய்யாத போது ஒரு மலர் இயல்பாகத் தானாக மலர்வது போன்று அது நிகழ்ந்தது.

சென்னைக்கும், திருவண்ணாமலைக்கும் இடையே இருந்த அச்சரப்பாக்கம் என்னும் சிறு நகரிலிருந்து வந்தவர் சிவராம ரெட்டியார். அவருடைய பெற்றோர் நிலச்சுவான்தார்கள். சிவராம ரெட்டியாருக்கும் சொந்தமாக ஒரு அரிசி ஆலை (ரைஸ் மில்) இருந்தது. அவரது குடும்பம் முழுவதுமே அச்சுத தாஸர் என்ற ஒரு ஸாதுவிடம் மிகுந்த பக்தி பூண்டிருந்தனர். ஸாதுவும் கவிஞருமான அவர், அத்வைத அடிப்படையில் எழுதிய பாடல்கள் மிகவும் பிரசித்தி பெற்றிருந்தன. அச்சுத தாஸர் முதன் முதலாக பகவானைத் தரிசித்தது அருணாசலேச்வரர் கோயிலில்தான். கோயிலுக்குள் தன் பக்தர்கள் சிலரோடு நுழைந்த உடனேயே, இலுப்பை மரத்தடியில் சிறு பையனாக இருந்த பகவான் ஆழ்ந்த தியானத்தில் மூழ்கியிருந்த காட்சி அவரை வெகுவாக ஈர்த்தது. அங்கு அமர்ந்திருந்தது ஒரு சிறுவனின் உடல் என்றபோதும், அது காலத்தைக் கடந்த ஆனந்தத்தில் திளைத்துக் கொண்டிருக்கிறது என்பதை சற்று வயது முதிர்ந்த ஸாதுவான அச்சுத ஸ்வாமியினால் உணர முடிந்தது. ஏறத்தாழ இருநூறு பக்தர்களுடன் அடுத்த ஆண்டும் அவர் திருவண்ணாமலைக்கு மீண்டும் வந்தார். அம்முறை இலுப்பை மரத்தடியில் பகவானைக் காணாத போது கோயில் முழுவதும் தேடியும் அவர் கிடைக்கவில்லை. மிக ஆழ்ந்த ஸமாதியிலிருந்த பகவான் கோவணம் கூட இல்லாத நிலையில் இருந்ததாலும், கார்த்திகை தீபத் திருவிழா சமயமென்பதாலும், அவருக்குக் கோவணம் அணிவித்து, திருவிழாக் கூட்ட நெரிசலால் அவருக்கு எவ்வித பாதிப்பும் நேராத வண்ணம் நல்லிதயம் கொண்ட சிலர் அவரை ஊருக்கு வெளியே குருமூர்த்தத்திலிருந்த சிறிய கோயிலுக்கு அழைத்துச் சென்று விட்டார்கள் என விசாரித்து அறிந்து கொண்டனர்.

அச்சமயத்தில் பகவானை யாருக்குமே தெரியாது என்ற போதும் அச்சுத தாஸர் எனப் பிரசித்தியடைந்திருந்த அச்சுத ஸ்வாமி தனது பக்தர்களுடன் அவரைக் காண வந்தார். சேஷாத்ரி ஸ்வாமி பகவானின் பெருமையை முதன் முதலில் அறிந்து கொண்டவர் என்றால், அச்சுத ஸ்வாமி இரண்டாவதாக அவரைப் புரிந்து கொண்டவர். குருமூர்த்தத்திற்குச் சென்ற போது தனது பக்தர்களை வெளியிலேயே நிறுத்திவிட்டு அச்சுத ஸ்வாமி தனியாகக் கோயிலினுள் சென்றார். ஆத்மானுபவத்தில் முழுவதுமாக ஆழ்ந்தபடி ஒரு 'இருக்கையில்' (stool) அமர்ந்திருந்த பகவானது பாதங்களைப் பற்றி

அவரிடம், ‘‘நான் இரண்டற்ற அத்வைத நிலை குறித்துப் பல பாடல்களை இயற்றியுள்ளேன் எனினும் அந்நிலையை இதுவரை அனுபவித்ததில்லை. அந்த நிலையை எனக்குத் தந்தருள வேண்டும்,’’ என்று பிரார்த்தித்தார். வெளியில் வந்த பின் அவர் பக்தர்களிடம் பேசிய போது வெளிப்பட்ட சொற்கள் அந்த நிலை அவருக்கு அருளப்பட்டதென்பதை நிரூபிப்பதாக இருந்தது. ‘‘அங்கே அமர்ந்திருப்பது கொழுந்து விட்டெரியும் அக்னியாகும். சற்று தொலைவிலிருந்தே வணங்கி அருள் வேண்டிப் பிரார்த்தியுங்கள்,’’ என்று அவர் தனது பக்தர்களிடம் கூறினார்.

அச்சுத தாஸரின் அத்வைதப் பாடல்களினால் வசீகரிக்கப்பட்ட சிவராம ரெட்டியார், சிறு வயது முதலே அத்வைத சிந்தாந்தத்தில் ஈடுபாடு கொண்டிருந்தார். பகவான் அடிக்கடி குறிப்பிடும் மிகச்சிறந்த தமிழ் அத்வைத நூல்களான கைவல்ய நவநீதம், யோக வாஸிஷ்டம் இவற்றை ரெட்டியார் எப்பொழுதும் படித்த வண்ணமிருப்பார். அச்சுத தாஸரின் சீடர்களில் ஒருவர் சிவராம ரெட்டியாருக்கு ராமபிரானின் தாரக நாமத்தை உபதேசித்து பரம்பரையாக வந்த ஷண்முகி உபாசனையின் மூலம் அதை எவ்வாறு ஜபிக்க வேண்டுமென்பதையும் கற்பித்திருந்தார். ரெட்டியார் அச்சரபாக்கத்திலிருந்த தனது இல்லத்திலும், அருகே இருந்த சிறிய வனப்பகுதியிலும் அந்த மந்திரத்தைப் பத்து ஆண்டுகள் மிகத் தீவிரமாக நிஷ்டையோடு உபாசித்து வந்தார். தனது ஸாதனைகளில் முன்னேற்றமடைந்த பொழுது ஷண்முகி உபாசனையில் கூறப்பட்டுள்ளதைப் போன்ற பேரொளியின் தரிசனம் அவருக்குக் கிட்டியது. அதன் விளைவாக அவருக்கு நல்ல உற்சாகமும் உத்வேகமும் ஏற்பட்டது. ஆனாலும் ஆழ் மனதில் தான் இன்னும் இறுதி லட்சியத்தை அடையவில்லை என்றே தோன்றியது. அதனால் மன நிறைவு ஏற்படவில்லை. இதே சமயத்தில் அவர் மிகவும் நேசித்த இருபது வயதே ஆன அவருடைய மனைவி இறைவனடி சேர்ந்தார். “இறைவன் அவளை என்னிடமிருந்து எடுத்துக் கொண்டபோது இவ்வுலகமே இருண்டு போய் மகிழ்ச்சியற்ற இடமாக மாறியது’’ என ரெட்டியார் அச்சம்பவம் பற்றி என்னிடம் கூறினார். ரெட்டியாருக்கு காலப் போக்கில் சாதாரணமாக மறைந்து போகக் கூடியதாக இல்லாமல் இந்தத் துயரம் தாங்கவே முடியாத பேரிழப்பாக இருந்தது. சிற்சில பரம்பரைகளில் தீர்த்த யாத்திரை செய்வதன் மூலம் துயரங்கள் குறைந்து இறுதியில் மறைந்து விடுமென்ற நம்பிக்கை இருந்து வந்ததால், சிவராம ரெட்டியார் மூன்று ஆண்டுகளுக்குப் புண்ணிய க்ஷேத்திரங்களுக்குக் கால்நடையாகவே சென்றார். அப்போதும் அவரது துக்கம் சிறிதளவும் குறையவில்லை.

பின்னர் திருவண்ணாமலையில் ரமணாச்ரமத்திலிருந்த அச்சுத தாஸரின் நேர் சீடரான தனது மாமாவின் நினைவு வரவே அவர் அங்கு சென்றார். அருணாசலேச்வரர் கோயிலில் தங்கிக் கொண்டு தினமும் காலையில் கிரிவலம் செல்லத் துவங்கினார். 1931-ல் அதிகமாக வளர்ச்சி பெறாத நிலையிலிருந்த ரமணாச்ரமத்தை அவர் கிரிவலம் செல்லும் போது கடந்து செல்வது வழக்கம். அங்கு பழைய ஹாலுக்குப் பின்னால் ஒரு பூந்தோட்டத்தைப் பராமரித்து வந்த தனது மாமா கிருஷ்ண ரெட்டியாருடன் பூக்களைப் பறித்துத் தருவார். ஒரு நாள் சிவராம ரெட்டியாரிடம் இரக்கங் கொண்ட கிருஷ்ண ரெட்டியார், அவரைப் பகவானிடம் அழைத்துச் சென்று, ‘‘பகவானே! இவன் எனது மருமகன்; மூன்றாண்டுகளுக்கு முன் இவனுடைய மனைவி இறந்து போனதிலிருந்து மீளாத் துயரில் மூழ்கியிருக்கிறான்,’’ என்று கூறவும் பகவான் சிவராம ரெட்டியாரைக் கூர்ந்து நோக்கினார். பகவானுடைய கூரிய பார்வை தங்கள் உடல், மனம், இதயம் இவற்றில் ஒவ்வொரு அணுவையும் ஊடுருவிச் சென்று ஆறுதலளித்தது என்று அவரைத் தரிசித்த பல பக்தர்கள் என்னிடம் கூறியுள்ளனர். பகவான் அவரைப் பார்த்த சில நொடிகளுக்குள்ளேயே ரெட்டியாருடைய துயரம் இருந்த இடம் தெரியாமல் மறைந்தது. மனைவியின் மீதிருந்த அன்பு குறையவில்லை என்றாலும் அவளுடைய மறைவினால் ஏற்பட்ட மன வேதனை குறைந்து, நீங்கியது. இதயத்தில் மகிழ்ச்சி பொங்க

அச்சரப்பாக்கத்தில் தன் தொழிலைக் கவனிக்கச் சென்று விட்டார். 1934-ம் ஆண்டில் அவரது மாமா காலமாகி விட்டதாகவும் உடனே வரும்படியும் ரமணாச்ரமத்திலிருந்து அவருக்குத் தகவல் வந்தது. அவருடைய கிராமம் திருவண்ணாமலையிலிருந்து தொண்ணூறு கிலோ மீட்டர்களுக்கு அப்பால் மட்டுமே இருந்தபடியால் அன்றிரவே அவர் அங்கு வந்து சேர்ந்தார். அவருடைய மாமாவின் மரணம் குறித்த விபரங்களையெல்லாம் குஞ்சு ஸ்வாமி அவருக்கு எடுத்துரைத்தபின் பகவான் அறிவுறுத்தியபடி மாமாவின் ஈமக்கிரியைகளைச் சிவராம ரெட்டியார் செய்து முடித்தார். இனி தனது வாழ்நாள் முழுவதும் பகவானுக்குப் பணிவிடை செய்ய வேண்டுமென்ற எண்ணம் அவருக்கு உண்டாயிற்று.

சிவராம ரெட்டியாரிடம் அவரது மாமாவைப் பற்றிய விபரங்களையெல்லாம் தெரிவிக்க வேண்டுமென நான் கேட்டுக் கொண்ட போது, அவர் கீழ்க்காணும் தகவல்களைத் தந்தார். 1896-ல் அச்சுத தாஸருடன் பகவானைத் தரிசிக்க வந்த பக்தர்களுள் அவரது மாமா கிருஷ்ண ரெட்டியாரும் ஒருவர். அவர் அச்சுத தாஸருக்குத் தொண்டு செய்து கொண்டிருந்தார். சில ஆண்டுகளுக்குப் பின் அச்சுத தாஸர் மரணப் படுக்கையில் இருந்த சமயம், கிருஷ்ண ரெட்டியார் தனது குருவின் பாதங்களைப் பற்றியவாறு தனக்கு வழிகாட்ட வேண்டும் எனப் பிரார்த்தித்தார். அச்சுத தாஸர், “ரமணாச்ரமத்திற்குச் சென்று ரமண பகவானுக்குத் தொண்டு செய்யுங்கள். நான் ஆன்மீகத்தில் பெற்றதனைத்தையும் உங்களுக்குக் கொடுத்து விட்டேன். அதற்கு மேலும் உங்களுக்குத் தேவைப்படுகிறது. அதனால் ரமண மஹர்ஷியிடம் செல்லுங்கள்,” என்று கூற, குருவின் அறிவுரைப்படியே சிவராம ரெட்டியாரின் மாமா பகவானிடம் வந்துள்ளார். அவருடைய சரீரம் திடகாத்திரமானதாக இருந்ததோடு அவர் கடுமையான உழைப்பாளியாகவும் இருந்தார். ஆச்ரமத்தில் பூந்தோட்டத்தை உருவாக்கியதுடன் ஆச்ரம நிர்வாகத்திற்குத் தேவையான சிறு சிறு பணிகளையும் கவனித்துக் கொண்டார். ஒரு நாள் அவர்களிடம், “நான் எனது கிராமத்திற்குப் போய்விட்டு விரைவிலேயே திரும்பி விடுவேன்” எனக் கூறிச் சென்றார். ஊருக்குச் சென்றவுடன் தனது உறவினர்களை எல்லாம் அழைத்து “இன்னும் ஒரு வாரத்திற்குள் என் குருநாதரின் திருவடிகளில் ரமணாச்ரமத்தில் எனது உடலை விட்டு விடுவேன். உங்களிடமெல்லாம் விடை பெறவே வந்தேன்,” என்று கூறியுள்ளார். கிருஷ்ண ரெட்டியாருக்கு ஜோதிடம் நன்றாகத் தெரியுமென்பதால், தனக்கு எப்போது மரணம் நிகழுமென்பதை அறிந்திருந்தார். திருவண்ணாமலைக்குத் திரும்பிய போது அவர் ஆரோக்யமாகவே இருந்தார். உடலில் கோளாறு எதுவும் இருக்கவில்லை. ஆனால் ஏழாவது நாள் லேசான காய்ச்சல் வந்தது. அன்று மாலைக்குள் எழுந்து நிற்க முடியாத அளவுக்கு அது கடுமையான ஜுரமாக மாறியது. ராமகிருஷ்ண ஸ்வாமியும், குஞ்சு



**ஆச்ரம பூந்தோட்டத்தில் நடனமாடும் வெள்ளை மயில்**

ஸ்வாமியும் ஒரு குடிலில் தங்குமாறு அவருக்கு ஆலோசனை அளித்தனர். அந்தச் சமயத்தில் ஆச்ரமத்தில் கூரை வேய்ந்த ஒரு சில குடிசைகள் இருந்தன. அதில் ஒன்றில் அவரைப் படுக்குமாறு செய்து ராமகிருஷ்ண ஸ்வாமியும், குஞ்சு ஸ்வாமியும், பகவானிடம் சென்று, கிருஷ்ண ரெட்டியாரைப் பற்றி உரைத்தனர். அதற்கு "கிருஷ்ண ரெட்டியாருக்கு நன்கு ஜோதிடம் தெரியும். ஆகையால் ஊருக்குச் சென்று குடும்பத்தினரிடம் விடை பெற்று வந்து அருணாசலத்துடன் ஐக்யமாவதற்காகத் திருவண்ணாமலைக்குத் திரும்பி இருக்கார்," என்று பகவான் பதிலுரைத்திருக்கிறார்.

1914-ம் ஆண்டு தனது தாயின் உடல் நிலை மிகவும் மோசமாக இருந்த போது, அவரைத் தன்னோடு ஒடுக்கிக் கொள்ள வேண்டும் என அருணாசலத்திடம் பிரார்த்தித்து நான்கு பாடல்களை பகவான் எழுதியிருந்தார். அதில் மூன்றாவது செய்யுளில் 'அருணாசலா! கொழுந்து விட்டெரியும் ஞானாக்னியே! மனமிரங்கி என் தாயை உனது ஒளி வெள்ளத்தினால் அணைத்துக் கொண்டு உன்னுடன் இணைத்துக்கொள்," என்று கூறியிருந்தார். 1922-ல் அன்னை அழகம்மாள் உடலை ஸ்கந்தாச்ரமத்தில் நீத்த பொழுது அதுவேதான் நிகழ்ந்தது. சிவராம ரெட்டியாரின் மாமா விஷயத்திலும் கூட 'அருணாசலத்துடன் ஐக்யமாவதற்காகவே திரும்பி வந்திருக்கார்' என்று கூறியதன் மூலம் பகவான் அந்த நிகழ்வை உறுதி செய்துள்ளார். அதன் பின்னர் இரவு ஏழு மணிக்குத் தங்களது உணவை முடித்துக் கொண்டு பகவான், B. V நரஸிம்ம ஸ்வாமி ஆகியோருடன் மற்றும் சிலரும் நேராகக் கிருஷ்ண ரெட்டியாரின் குடிசைக்குச் சென்றனர். அவருடைய தலையைத் தொட்டவாறு பகவான் அவரருகில் அமர்ந்து கொண்டார். B. V. நரஸிம்ம ஸ்வாமி பஜனை செய்து கொண்டிருந்த அதே சமயத்தில் ராமகிருஷ்ண ஸ்வாமியும், குஞ்சு ஸ்வாமியும் தியானத்தில் ஈடுபட்டனர். இரவு வெகு நேரமானதால், ராமகிருஷ்ண ஸ்வாமியும், குஞ்சு ஸ்வாமியும் பகவானிடமும் B. V. நரஸிம்ம ஸ்வாமியிடமும் ஓய்வெடுத்துக் கொள்ளுமாறு வேண்டிக் கொண்டனர். கிருஷ்ண ரெட்டியாரை நிலையாகச் சிறிது நேரம் நோக்கிய பின் பகவான் புறப்பட்டுச் சென்றார். ரெட்டியார் இறைவனடி சேர்ந்த விபரத்தைக் காலை நான்கு மணிக்கு ராமகிருஷ்ண ஸ்வாமியும் குஞ்சு ஸ்வாமியும் பகவானிடம் அறிவித்தனர். அவருடைய உடல் எங்கு எவ்வாறு அடக்கம் செய்யப்பட வேண்டுமென பகவான் பிரத்தியேகமாக அறிவுறுத்தினாரோ, அதே விதத்தில் சிறிதும் பிசகின்றி கிருஷ்ண ரெட்டியாரின் தேஹம் அடக்கம் செய்யப்பட்டது. மேற்கூறியவை அனைத்தையும் நினைவு கூர்ந்த சிவராம ரெட்டியார், "எனது மாமாவின் ஆசிகள் காரணமாகவே என்னால் ரமணாச்ரமத்தில் நிரந்தரமாகத் தங்கி பகவானுக்குத் தொண்டாற்ற முடிந்தது," என்று நன்றியுணர்வோடு தெரிவித்தார்.

"நீங்கள் எப்போதும் சம நிலையில் மௌனமாகவும், சாந்தமாகவும் இருப்பதால் உங்கள் அருகிலேயே அமர்ந்து எனது நேரத்தைக் கழிக்க வேண்டும் என்று தோன்றுகிறது. ஆனால் நீங்களோ எல்லோரையும் போல் மிக சாதாரணமானவராகத் தான் காணப்படுகிறீர்கள். இத்தகைய ஒரு நிலைக்கு உங்களைக் கொண்டு வரும்படியாக என்ன நிகழ்ந்ததென என்னிடம் கூறுங்கள்" என நான் ரெட்டியாரை வேண்டிக் கொண்டேன். "எதுவுமே நிகழவில்லை. மற்றவர்களைப் போன்று நானும் சாதாரணமானவன் தான்" என்று அவர் கூறிய போதும், நான் அவரை எளிதில் விடுவதாக இல்லை. ஒவ்வொரு நாளும் விடாமல் அவரைத் தொந்தரவு செய்து, "உங்களிடம் விசேஷமாக ஏதோ உள்ளது. அது என்னவென்பதைக் கூறுங்கள்," என்று நச்சரித்தேன். ஆனால் அவர் மசியவில்லை என்பதைக் கண்டபோது நான் கேள்வி கேட்கும் பாணியை மாற்றி, "உங்களுக்கு ஆன்மீக விஷயங்களில் சந்தேகமே எழுந்ததில்லையா?" என வினவினேன். எனது யுக்தி பலித்தது. சிவராம ரெட்டியார் மனம் திறந்து பேசலானார். "1931-ம் ஆண்டு வரை தாரக மந்திரத்தை இருபது ஆண்டுகளும், ஷண்முகி

உபாசனையைப் பத்து ஆண்டுகளும் சிரத்தையோடும், கவனத்தோடும் பின்பற்றி வந்தேன். அதன் விளைவாக என்னைச் சுற்றிலும் ஒரு பிரகாசமான ஒளியையும் இன்பமான கிளர்ச்சியையும் என்னுள் உணர ஆரம்பித்தேன். இருந்த போதிலும், அது உண்மையான ஒரு நிலைதானா என்ற சந்தேகம் என்னுள் எழவே, 1934-ல் பகவானிடம் என் சந்தேகத்தை மிகுந்த மரியாதையுடன் சமர்ப்பித்தேன். பகவானும் கிருபை கூர்ந்து, "ஆம். அது நிதித்தியாசனத்தின் ஒரு நிலையாகும். குருவின் அறிவுரைகளைக் கேட்டல் சிரவணம் எனப்படுகிறது. அவரது உபதேசங்களை உள்வாங்கிப் புரிந்து கொள்வதுதான் மனனம். இதன் பின் நீங்கள் அதை அனுபவித்து உணர்வது நிதித்தியாசனமாகும். ஆனால் இந்நிலையிலும் முப்புடிகளின் தோற்றம் அதாவது — காண்பான், காணப்படும் பொருள், காட்சி என்ற மூன்றும் உள்ளன. இதற்கு அப்பாலும் சென்று ஒளியையும் மகிழ்ச்சியையும் அனுபவிக்கும் 'நான் யார்?' என்பதைக் கண்டறிய வேண்டும். யாரோ ஒருவருக்கு ஒளியும் மகிழ்ச்சியும் உள்ளது. அந்த நபர் யாரென்று ஆராய்ந்து அறியுங்கள்," எனப் பதிலுரைத்தார். இவ்விஷயத்தைப் பகவான் எனக்குத் தெளிவுப் படுத்துவதற்கு முன்னரே திரிபுடியைப் பற்றியும் அதைக் கடக்க வேண்டியதன் அவசியத்தையும் நான் அறிந்திருந்தேன். ஆனால் ஸத்குருவின் ஸாந்நித்தியத்தில்தான் நடைமுறையில் அது உண்மை என்பதை ஒரு அனுபவமாக உணர்ந்தேன். முப்புடிகளைக் கடந்த 'நான்' என்பதன் அனுபவம் எனக்கு அளிக்கப்பட்டது. சக்தி வாய்ந்த மௌனத்தின் மேன்மைமிக்க அந்நிலை என்னைச் சூழ்ந்து கொண்டது. அதுவே என் இறுதி தீக்ஷை. இடைவெளியின்றி அந்த ஆனந்த நிலை தொடர்கிறது," என்று சிவராம ரெட்டியார் கூறி முடித்தார். 1934-ம் ஆண்டு முதல் முப்பது வருடங்களுக்கு அவர் புத்தகக் கடையின் நிர்வாகியாக புத்தகங்களை விற்பதும், பெட்டிகளில் கட்டுவதுமான குறிப்பிட்ட வேலைகளைத் தானே செய்து கொண்டிருந்தார். அவர் சாதாரண மெழுகுவர்த்தியின் ஒளியில் அல்லாது உள்ளொளியின் வெளிச்சத்தில் எப்பொழுதும் வாழ்ந்து வந்தார். நான் அவருக்கு நான்கு ஆண்டுகள் மகிழ்ச்சியுடன் உதவி செய்தேன். அறுதி உண்மையான மெய்ப்பொருளில் முழு உணர்வுடன் எப்போதும் நிலைத்து நின்ற ஒருவருடன் வாழ்வது என்னைப் பொறுத்த வரையில் விசாலமான ஆழ்ந்த ஒரு அனுபவமாக இருந்தது. பகவானது அருளைப் பெருமளவில் பெற்றிருந்த சிவராம ரெட்டியார் மீது எனக்கிருந்த மதிப்பும் மரியாதையும் மேலும் பெருகியது.

1960-ல் நான் ஆச்ரமத்திற்கு நிரந்தரமாக வந்துவிட்ட போது, தன்னிச்சையாக மூன்று பிரதிக்ஞைகளை எடுத்துக் கொண்டேன். ஆன்மீக வாழ்க்கைக்கு அவை அத்தியாவசியமானவை என நான் எண்ணினேன். அவை — நான் பணத்தைக் கையால் தொடமாட்டேன். என் பெயரைக் கையெழுத்திட மாட்டேன். பெண்களைப் பார்க்க மாட்டேன் என்பவையாகும். ஆச்ரமத்திற்கு விருந்தினர்கள் அபூர்வமாகத்தான் வருவார்கள் என்றாலும் ஒரு பெண்ணோ அல்லது ஒரு குடும்பமோ புத்தகங்கள் வாங்க வந்தால், நான் எழுந்து வெளியே சென்று விடுவேன். மாலையில் கணக்கு வழக்குகளை முடிக்க வேண்டுமாதலால் அவற்றை எழுதுவதில் சிவராம ரெட்டியாருக்கு உதவி செய்வேன். ஆனால் பணத்தை நான் தொட மாட்டேன் என்பதால் அவரேதான் எண்ணிக் கொள்ள வேண்டியிருந்தது. மேலும் புத்தகங்களின் பெயர், விலை இவை அடங்கிய ஜாபிதாக்களையும் ரசீதுகளையும் நான் எழுதி மட்டும் தருவேனே தவிர, கையெழுத்திட அவரிடம் கொடுத்து விடுவேன். இதையெல்லாம் அவர் கவனித்துக் கொண்டிருக்கிறார் என்பதை நான் உணர்ந்து கொள்ளவில்லை. அனுபூதிமான்கள் ஆலோசிக்காமல் சட்டென்று ஒரு முடிவுக்கு வர மாட்டார்கள் என்பதோடு, மற்றவர்களைச் சீர்தூக்கிப் பார்க்கவும் மாட்டார்கள். மூன்று நான்கு மாதங்களுக்கு ரெட்டியார் என்னை மிக உன்னிப்பாகக் கவனித்து வந்துள்ளார். பகவானுடைய ஸமாதிக் கோயிலின் முன்னால் திறந்த வெளியில் நான் உறங்குவது வழக்கம். புத்தக நிலையத்தின்

எதிரேயிருந்த ஓலைக் குடிசையில் சிவராம ரெட்டியார் உறங்குவார். அவர் என்னைக் 'கணேசு' எனச் செல்லமாக அழைப்பார். ஒரு நாள் இரவு ஒன்பது மணிக்கு "கணேசு! இங்கே வா" என்று என்னை அழைத்தார். அவருக்குக் கடுமையான ஆஸ்த்துமாவின் தாக்கம் அவ்வப்போது ஏற்படுவதுண்டு. அம்மாதிரி சமயங்களில் அவர் என்னை அழைக்கும் போது, நானும் ஓடிப்போய் என்னாலியன்ற சிறு உதவிகளைச் செய்வது வழக்கம். அன்றும் ஆஸ்த்துமாவின் தாக்குதலால் அவதிப்படுகிறார் என எண்ணி அவரருகில் விரைந்து சென்ற போது, "என்னருகில் அமர்ந்து கொள்" எனக்கூறித் தொடர்ந்து, "நான், கடந்த சில மாதங்களாக உன்னைக் கவனித்து வருகிறேன். நீ பணத்தைத் தொடுவதில்லை; அனுப்பப்பட்ட புத்தகங்களின் விலைப் பட்டியல்களில் (invoices) கையெழுத்திடுவதில்லை; புத்தகக் கடைக்கு, எந்த வயதிலுள்ள பெண்கள் வந்தாலும் நீ எழுந்து ஓடிப் போய்விடுகிறாய். உனக்கு என்னவாயிற்று?" என்று வினவினார்.

ஆன்மீகப் பயணத்தில் எனக்கு உதவி செய்வதற்காக நான் மேற்கொண்டுள்ள மூன்று பிரதிக்ஞைகளைக் குறித்து நான் அவரிடம் தெரிவித்த உடன், "ஓ! அப்படியா! மிகவும் நல்லது. ஆனால் நீ வேண்டிய அளவு விரதங்களைக் கடைப்பிடித்து விட்டாய். இனி உன் செயல்களைப் பற்றிச் சற்று சிந்தித்துப் பார். பணத்தின் மீது என்ன தவறு உள்ளது? அதைத் தொடுவது பாவமாகாது. பற்று வைப்பதுதான் தவறு," என்று கூறினார். இதை என்னிடம் வாதிப்பதைப் போன்றோ, அறிவுரைகள் வழங்குவது போன்றோ அவர் கூறாமல், மனம் விட்டுக் கருத்தைப் பகிர்ந்து கொள்வது போல் கூறியதால், அது என் இதயத்திற்குள் தானாகவே நேரடியாகச் சென்றது. அவர் மேலும் தொடர்ந்து, "பெயரைத் கையெழுத்திடுவதில் என்ன தவறு இருக்கிறது? நீ பெயரோடு பிறந்துள்ளாயா? உன் பெற்றோர் அதை உனக்குக் கொடுத்துள்ளனர். உடம்போடு உன்னை நீ இணைத்துக் கொள்வது கூடாது. பெயரை விட்டுவிடுவதன் மூலம், நீ உடம்பின் மீதுள்ள பற்றை விடவில்லை. 'நான் இந்த உடம்பு' என்ற எண்ணத்தை விட்டுவிடு. கணேசு! உனக்குப் பகவானே பெயரைத் தந்துள்ளார். அது எவ்வளவு புனிதமானது என்று யோசித்துப் பார்!" எனக் கூறவும், அந்த நொடியிலேயே என் பெயரை நான் நன்கு பிடித்துக் கொண்டேன். எனது மூன்றாவது உறுதிமொழி குறித்துத் தொடர்ந்து சிவராம ரெட்டியார், "பெண்களை நீ அசட்டை செய்வதால் படைத்தவனை அவமதிக்கிறாய் என்பதை நீ உணரவில்லையா? மிருகங்கள், பக்ஷிகள், ஜீவராசிகள், மரங்கள், செடி கொடிகள் ஏன் பாறைகளிலும் கூட, ஆண்-பெண் என்னும் இரு தோற்றங்களையும் அந்த உன்னதமான சக்தியே தான் ஏற்படுத்தியுள்ளது. அவ்வாறிருக்கும் பொழுது, பெண் என்னும் தோற்றத்திற்குரிய முக்கியத்துவத்தை நீ தர மறுப்பதால் படைப்பில் சரிபாதியை நீ முற்றிலுமாக ஏற்க மறுப்பதாகவன்றோ தோன்றுகிறது! இது சரியானதா? தேவைதானா? இந்தத் தடையைக் கடந்து செல்வதற்கு எவ்வித நிபந்தனையுமின்றி எல்லாப் பெண்களையும் தாயின் உருவமாக நேசி. நீ எந்த அளவுக்கு ஆழமாக அவர்களை நேசிக்கிறாயோ அந்த அளவிற்கு இறைவனிடம் உனக்கிருக்கும் பக்தி மேலும் அதிகமாகப் பொங்கி வரும். இறைவனின் படைப்பில் ஒரு பாதியை ஒதுக்குவதே உனது ஆன்மீக ஸாதனைகளுக்கும் முன்னேற்றத்திற்கும் மிகப் பெரிய தடையாக இருக்கும்," என்று அவர் கூறியதிலிருந்து நான் எல்லாப் பெண்களையும் தாய்மார்களாகவும், சொந்த சகோதரிகளாகவும் பாவித்து அன்பு செலுத்தத் தொடங்கினேன்.

1965-ல் சிவராம ரெட்டியார் மிகவும் நோய் வாய்ப்பட்டார். ஆச்ரமத்திற்குச் சுமையாக இருக்க விரும்பாமல் வெளியே சென்று விடத் தீர்மானித்து தனது மகளை வரவழைத்தார். அவள் தனது சொந்த கிராமமான உத்தரமேரூருக்கு ரெட்டியாரை அழைத்துச் சென்றாள். அவர் ஆச்ரமத்தை விட்டு வெளியேறும் முன்பு நான் சிவராம ரெட்டியாரின் பாதங்களைப் பற்றிக்

கொண்டு, “என்னை விட்டு விட்டு நீங்கள் சென்று விடத் தீர்மானித்து விட்டீர்களே!” என்று ஆதங்கத்துடன் முறையிட்டேன். அவர் சிரித்துக் கொண்டே “அருணாசலமே உண்மை! உண்மை மட்டும் தான் உள்ளது. அருணாசலத்திலேயே தங்கி இரு. எல்லா ஆசிகளும் உன்னை வந்து சேரும்!” என்று ஆசீர்வதித்தார்.

அருளும், ஆசிகளும் ஒரு தனி மனிதனின் சொத்தல்ல. எல்லோருடனும் சந்தேகத்திற்கு இடமின்றிப் பகிர்ந்து கொள்ளக் கூடிய உண்மையான வஸ்துக்கள் அவை மட்டுமே. வெளிப் பொருட்கள் அனைத்திற்குமே ஒரு வரையறை உண்டு. ஒரு வீட்டை ஒருவருக்குக் கொடுக்க முடியும். பணத்தை நூறு பேரோடு பகிர்ந்து கொள்ளலாம். ஆனால் ஆசிகள், அருள், அன்பு இவற்றை எல்லோருடனும், எப்போதும் எல்லா இடங்களிலும் பகிர்ந்து கொள்ள முடியும்.



**ஸ்ரீ அருணாசலேச்வரர் கோயிலின் கிழக்கு நுழைவு வாயில்**



# 69 ஜானகி மாதா



ஒரு முறை, பகவான் முன் நின்ற மேலை நாட்டைச் சேர்ந்த தீவிர கிறிஸ்தவர் ஒருவர், "எனக்கு வாழ்ந்து கொண்டிருக்கும் ஒரு குரு வேண்டும், அப்படிப்பட்ட ஒருவரை உங்களால் எனக்குக் காட்ட முடியுமா?" என்று மனப்பூர்வமான ஆர்வத்தோடு பகவானிடம் வினவினார். பகவான் எதிர்கேள்வியொன்றை எழுப்பி இயேசுநாதர் இறந்து விட்டாரா? புத்தர் இறந்து விட்டாரா? என்று மட்டும் கேட்டாரே தவிர, அதைப் பற்றி விரிவாக எதுவும் கூறவில்லை. ஏனெனில் உண்மையான குருமார்கள் விடையைக் குறிப்பால் மட்டுமே உணர்த்துவார்கள். கேள்வி எழுப்புபவரே தான் பதிலும்; அவரேதான் விடையில் முழு கவனத்தையும் செலுத்த வேண்டும் என்பதால் பகவான் தனது பதிலை மேலும் விவரித்துக் கூறவில்லை. சாஸ்திரங்களோ அல்லது பிற மனிதர்களோ தெளிவுபடுத்திக் கூறும் விடைகளை விட, கேள்வி கேட்பவரே விடையை அனுபவத்தில் உணர வேண்டும். வேறு விதமாகக் கூறினால், ரமண மஹர்ஷியே உண்மை என்றால் கேள்வி கேட்பவரும் கூட அந்த உண்மையாக ஆக வேண்டும். கேள்விக்குத் தகுந்த பதில் பகவானுடைய எதிர்கேள்வியே ஆகும்.

சுருங்கக் கூறின், இயேசுநாதர் அல்லது புத்தர் என்று உரைக்கும் போது முதலில் அது ஒரு எண்ணம் அல்லது நினைவு மட்டுமேயாகும். இப்போது உள்ளே விசாரம் துவங்க வேண்டும். மனிதர்களைத் துன்பக் கடலிலிருந்து மீட்கும் புண்ணிய புருஷர்களை வெறும் எண்ணம் என்று கூறலாகுமா? பகவான் ஒரு முறை, "மற்றவையனைத்தும் எண்ணங்களே. ஆனால் குரு என்பது ஒரு எண்ணமாகாது," என்று திட்டவட்டமாக கூறிருக்கிறார். குருவுக்கும் சீடனுக்கும் உள்ள உறவை ஒருவர் தன் தாயிடம் வைத்துள்ள அன்போடு ஒப்பிடலாம். ஒருவர் தனது தாயை மிக ஆழமாக நேசிக்கும் போது தாய் ஒரு எண்ணமாக மட்டும் இருக்க முடியுமா? ஒரு நாளில் ஒருவருக்கு அலை அலையாக எழும்பக் கூடியதும் குறுகிய கால அளவுக்கே நிலைப்பதுமான எண்ணங்களோடு அன்னையின் மீது அன்பு என்பதை ஒப்பிட முடியுமா? அதே போன்று உங்களுடன் தற்சமயத்தில் இல்லாத குழந்தையைப் பற்றி நீங்கள் எண்ணும் பொழுது அது அன்பான ஒரு எண்ணம் அல்லவா? அந்த எண்ணம் ஸத்தியத்தின் வேறு ஒரு பரிமாணத்தை உங்களுக்கு உணர்த்தவில்லையா? நாம் - ஸாதுக்களோடும் ஸந்நியாசிகளோடும் ஆன்மீகப் பெரியவர்களோடும் நம்மை இத்தகைய எண்ணங்களால் இணைத்துக் கொள்ளும் போது இந்தக் குறிப்பிட்ட பரிமாணத்திற்கு அழைத்துச் செல்லப்படுகிறோம். உடலளவில் அவர்கள் இல்லாது போனாலும், நம்மோடு நம் மத்தியில் வாழ்ந்து கொண்டுதான் இருக்கிறார்கள். நாம் கவனத்தை அவர்களிடம் செலுத்தும் போதெல்லாம், எப்போதும் நம்மை வழி நடத்தக் கூடிய ஆழ்ந்த அன்பு என்னும் தத்துவத்தின் மறு உருவமாகவே அவர்கள் திகழ்கிறார்கள். இருப்பது ஒரேயொரு குருவே என்றும், அவர் ஒருவருடைய இதயத்தில் வாழ்கிறார் என்றும் பகவான் ரமணர் அடிக்கடி கூறுவதுண்டு.

ஞானிகள், மஹான்கள் என்ற சொல்லின் பொருள் என்ன? நற்பண்புள்ளவர்கள், புனிதமானவர்கள், இறைவனால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் என்றெல்லாம் அகராதியில் இதற்குப் பொருள் தரப்பட்டுள்ளது. ஆன்மீக உலகில் 'நான், எனது' என்ற எண்ணத்தை அறவே நீக்கியவரை மட்டுமே ஞானி என்று கருதுகிறோம். தங்களோடு பழகுபவர்களிடமும் 'நான், எனது' என்னும் உணர்வை அவர்கள் அழிப்பவர்களாக இருக்கிறார்கள். இது அவர்களுக்கு எவ்வாறு



**கோசாலை வாசலில் ஸ்ரீ பகவான் அமர்ந்திருக்கும் காட்சி**

சாத்தியமாகிறது? அவர்களுடைய தரிசனம் அல்லது ஒரேயொரு பார்வையால் மட்டுமே இது அவர்களுக்குச் சாத்தியமாகிறது. இதையே கடவுள், கடவுளைப் பார்ப்பது என்றும் கூறுவதுண்டு.

ஆரம்ப காலத்தில், ரமணாச்ரமத்தில் நானிருந்த போது பகவானைத் தரிசித்த, ஏறத்தாழ 400 பக்தர்களை நான் பேட்டி கண்டுள்ளேன். தவறாமல், இந்த பக்தர்களிடம் நான் கேட்ட முதல் கேள்வி ரமண மஹர்ஷியைப் பற்றி உங்களுக்கு எவ்வாறு தெரியும் என்பதும் அதைத் தொடர்ந்து மஹர்ஷியை முதன் முதலில் நீங்கள் சந்தித்த போது உங்களுக்கு என்ன நேர்ந்தது? என்பதாகவும் இருந்தது. எதிர்பார்க்கக் கூடிய விதத்தில், ஒவ்வொருவரிடமிருந்தும் வந்த முதல் கேள்விக்கான பதில் வெவ்வேறு விதமாக இருந்தது. ஆனாலும் இரண்டாவது கேள்விக்கு, அவர்களது பால், இனம், மதம், நாடு, படிப்பு, அந்தஸ்து இவை எதுவாக இருந்தாலும் பதில் ஒன்றாகவே இருந்தது. அந்த பதில், எவ்வித மாற்றமுமின்றி எப்பொழுதுமே, ''நான் பகவான் ஸந்நிதியில் முதன் முதலில் நின்ற பொழுது அவர் என்னை நோக்கினார். அப்பொழுது நான் அதுவரை அனுபவித்திராத அமைதியை அனுபவித்தேன்,'' என்பதாகவே இருந்தது. சில பக்தர்கள் 'அமைதி' என்ற சொல்லுக்குப் பதிலாக, பரவசம், ஆனந்தம், மகிழ்ச்சி, சாந்தி போன்ற சொற்களை உபயோகித்திருக்கலாம். ஆனால் அவர்கள் அனைவரும் கூறியதன் பொருள் ஒன்றே. நான், 'அதுவரை ஒரு போதும் அந்நிலையை

அனுபவித்ததில்லை', என்றும் கூறினார்கள். 'ஒரு போதும் அனுபவித்ததில்லை' என்று கூறும்பொழுது அத்தகைய அனுபவத்தை நினைவு கூர்வதற்கு, அங்கு ஒரு 'நான்' இருக்கவில்லை என்பதே பொருள். அந்த 'நானே' அனுபவத்தைப் பதிவு செய்து கொள்கிறது. மேற்கூறிய கடவுள், கடவுளைக் காணும் தரிசனத்தில், 'நான்' என்ற தனி மனித அகந்தை முற்றிலுமாக அழிந்து விடுகிறது. இந்த அழிவு, ஒரு மஹாத்மாவின் ஸ்பர்சத்தினாலோ வார்த்தையாலோ, பார்வையாலோ கூட அனுபவிக்கும் அக்கணத்திலேயே ஏற்படலாம்.

ரிஷிகேசத்தில் வாழ்ந்த பிரபலமான இந்திய ஸந்நியாசியும் பகவானுடைய அருளைப் பெற்றவருமான ஸ்வாமி சிவானந்தர், 'Women Saints from India' என்ற தனது புத்தகத்தில், தஞ்சாவூரைச் சேர்ந்த ஜானகி மாதாவை "தனது ஸத்குருவான பகவான் ரமண மஹர்ஷியின் நினைவிலேயே எப்போதும் வாழ்ந்து கொண்டிருப்பவர் ஜானகி மாதா" என்று போற்றிப் புகழ்ந்துள்ளார். சிறந்த ரமண பக்தைக்கு, பெரிய மஹானான ஸ்வாமி சிவானந்தர் அத்தகையை அற்புதமான புகழாரத்தைச் சூட்டினார். ரமண மஹர்ஷியிடம் வருவதற்கு முன்னரே ஜானகி மாதா ஒரு கம்பீரமான, பூடகமான சக்தி உடையவராக இருந்தார். பல அமானுஷ்ய அனுபவங்களோடு கூடிய ஒரு ஒரு உயர்ந்த ஜீவனாகவும் இருந்தார்.

யார் இந்தப் பிரசித்தமான பெண்மணி? ஜானகி மாதா வசதி படைத்த குடும்பத்தைச் சேர்ந்தவர். அவரது குடும்பத்தின் செல்லப் பெண்ணாக இருந்தவர். ஒரு நாள் தனது தந்தையின் அரண்மனை போன்ற இல்லத்தில் வராந்தாவில் விளையாடிக் கொண்டிருந்த போது தெருவில் மிகவும் மெலிந்த ஸாது ஒருவர், 'குழந்தாய்! எனக்கு மிகவும் பசிக்கிறது! தயவு செய்து எனக்கு ஏதாவது உணவு தருகிறாயா?' என்று உரத்த குரலில் யாசிப்பதைக் கேட்டார். மிகவும் தாராள மனப்பான்மை உடைய குழந்தையாக இருந்ததால் யார் எதைக் கேட்டாலும் அதைக் கொடுத்து விடுவார் ஜானகி மாதா. என்றாலும், நித்திய பூஜைகள் முடியும் வரை 'அவர் யாருக்கும் உணவளிக்கக் கூடாது' என்று அவரது தாய் ஒரு முறை அறிவுறுத்தி இருந்தார். அன்று அந்தச் சமயத்தில் பூஜை முடிந்திருக்கவில்லை. பூஜை நிறைவு பெறவில்லை என்பதைப் பற்றிச் சிறிதும் கவலைப்படாத அந்தச் சிறுமி, உள்ளே சென்று பகவானுக்குப் படைப்பதற்காக அன்று தயாரிக்கப்பட்டிருந்த பலவிதமான பணியாரங்களைத் தட்டுக்களில் ஏந்தி எடுத்து வந்து பசியோடிருந்த அந்த ஸாதுவிடம் கொடுத்தபோது அவர் அதை உண்பதைக் கண்டு பெருமகிழ்ச்சி அடைந்தாள். உணவருந்திய பின்னர் சிறுமியை நாக்கை நீட்டும்படியாகக் கூறி தனது விரலால் ஏதோ புனித மந்திரத்தை அவளது நாக்கில் எழுதினார் அந்த ஸாது. அடுத்த கணமே சிறுமி ஜானகி ஆனந்தப் பரவசத்தில் மூழ்கினாள். இந்த அனுபவம் அவரை இரண்டு விதத்தில் பாதித்தது. ஒரு பக்கம் அவருக்கு அமானுஷ்யமான சக்திகள் வந்து சேர்ந்தன. அது மட்டுமின்றி அவருடைய ஆன்மீக விழைவும் அதிகமானது. சித்திகள் (Siddhis) அவருக்கு அற்புதமான சக்திகளைத் தந்தது என்றால், ஆன்மீக விழைவு விளையாட்டுப் பெண்ணாக இருந்த அவரை அகமுகமாக்கி, ஆழ்ந்த சிந்தனையில் ஈடுபட வைத்தது. இதற்குப் பின்னர், அச்சிறுமி பிற குழந்தைகளுடன் விளையாடுவதில் நாட்டம் கொள்ளவில்லை. பதிலாக இறைவனிடம் தனது கவனத்தைத் திருப்புவதிலேயே விழைவு கொண்டாள்.

வெகு விரைவிலேயே அவரது தாராள மனப்பான்மையும் ஆன்மீகப் பண்புகளும், சக்திகளும் மக்களை அவரிடம் ஈர்த்தன. 'தங்கள் மகளைத் திருமணம் செய்விப்பதே தங்களது தலையாய கடமை', என்று நினைக்கும் சராசரி இந்து குடும்பத்தைச் சேர்ந்தவர் ஜானகி. தங்களது விருப்பத்திற்கு மாறாக மகள் மேன்மேலும் ஆன்மீக உலகை நோக்கியே செல்வதையும் எந்த விதமான உலகத் தொடர்பையும் ஏற்றுக் கொள்ளாமல் திருமணப் பேச்சுக்களையும் ஒரேயடியாக மறுத்து வந்தது

பெற்றோருக்கு மிகுந்த கவலையையும் துக்கத்தையும் தந்தது. இந்தச் சமயத்தில், குடும்பத்திற்குப் பரிச்சயமான ஒரு டாக்டரின் மனைவி இரண்டு குழந்தைகளை விட்டுவிட்டு திடீரென்று இறைவனடி சேர்ந்தார். இந்த மருத்துவரை திருமணம் செய்ய சம்மதம் கோரி ஜானகியை அணுகியபோது எந்த மறுப்புமின்றி அதற்கு அவர் இசைந்தார். அவர் எவ்வாறு சம்மதித்தார் என பின்னர் வினவியபோது அந்த இரு குழந்தைகளையும் நான் மிகவும் நேசித்தேன் என அவர் கூறினார். ஒரு ஆன்மீகப் பெண்மணி தாய்மையில் ஊறி இருப்பது என்பது இதுதானோ!

ஜானகியை விட பல வயது மூத்தவரான அவரது கணவர் டாக்டர் கணபதி ஐயர் மருத்துவத் தொழில் புரிந்து வந்தார். ஒரு ஊரிலிருந்து மற்றொரு ஊருக்கு அடிக்கடி மாற்றப்படுவார். 1935-ல் இறை ஸங்கல்பத்தால் திருவண்ணாமலைக்கு மாற்றப்பட்டார். தான் பெற்று வந்த தேவ தேவியரின் காட்சிகளால் நிறைவு பெறாததால் தன்னை வழி நடத்த ஒரு குரு வேண்டுமென்று ஜானகி ஏங்க ஆரம்பித்தார். ‘யார் ஒருவன் விருப்பமோ அல்லது எந்த உத்தேசமுமின்றியோ தனக்கு விதிக்கப்பட்ட கடமையை, ஸ்வதர்மத்திற்குத் தக்கவாறு செய்கிறானோ அவனுக்கு குருவின் அருள் மூலம் என்னை நான் வெளிப்படுத்துகிறேன்,’ என்று அர்ஜுனனுக்கு ஸ்ரீ கிருஷ்ணர் உறுதியளித்த இந்த ஸ்லோகம் ஜானகியின் நினைவிற்கு வந்தது.

கணவர் திருவண்ணாமலைக்கு மாற்றப்பட்டதால் ஜானகியின் குழம்பிய நிலைக்கு ஒரு முடிவு வந்தது. பகவான் ரமணரின் தரிசனம் கிடைத்த போது தான் தேடியதை அடைந்து விட்டோம் என உணர்ந்து கொண்டார். ஒரு நாள் காலை, பகவான் வழக்கம் போல் நடக்கச் செல்லும் பொழுது அவரைத் தொடர்ந்து சென்று ரமணாச்ரமத்தில் மாட்டுத் தொழுவத்தின் பின்புறம் அவரிடம் பேசினார். அங்கு ஜானகி தனது ஆழமான உள்ளக் கிடக்கைகளை வெளிப்படுத்தியபோது பகவான் மிகுந்த கருணையோடு அவரை நோக்கி, “ஒரு கிருஹிணி, பார்யாள் என்ற விதத்தில் முக்கியமாக உனது பர்த்தாவுக்கு ஆற்ற வேண்டிய கடமைகளை எல்லாம் பூர்ணமாக செய். உன்னுடைய ஆன்மீக நிறைவை என்னிடம் விட்டுவிடு. உடலின் மீது எந்தத் தவறுமில்லை. ‘தேஹமே நான்’ என்ற தேஹாத்ம புத்தியைத்தான் விட வேண்டும். நீ எப்போதுமே வரையறைக்குட்படாத ஆத்மாவே. நான் எப்போதும் உன்னுடன் இருக்கிறேன்”, என்று கூறினார். பகவானின் ஆன்மீக வழிகாட்டுதல் தனக்குக் கிடைக்குமென்பது இப்போது அவருக்கு உறுதி ஆயிற்று. தன்னை, ‘அவர் ஆசீர்வதித்துள்ளார்’ என்பதையும் அறிந்து கொண்டார். மிகுந்த திருப்தியோடு, ஆன்மீக ஸாதனைகளில் முழு மூச்சுடன் இறங்கினார். எப்போதும் தன் இதயத்தில் ஆழ்ந்து மூழ்கத் துவங்கினார். வாழ்க்கையையே மாற்றியமைத்த அந்த அனுபவத்திற்குப் பிறகு, ஜானகிக்கு உலக வாழ்க்கை வெறும் குழந்தையின் விளையாட்டாக ஆனது. துரதிருஷ்டவசமாக ஜானகி மாதாவின் கணவருக்கு மீண்டும் மாற்றல் வந்தது. பகவானை விட்டுப் பிரிய மனமின்றி, ஜானகி மாதா குமுறி அழுதார். பகவான் அவரைக் கருணையோடு நோக்கி, “நான் உன்னுடன் எப்போதும் இருப்பேன்” என்று கனிவோடு உறுதி அளித்தார்.

‘உலக வாழ்க்கையும் அநேகக் குழந்தைகளைப் பெற்றுக் கொண்டதும் தன்னை எவ்விதத்திலும் திசை திருப்பவில்லை’, என்று ஜானகி மாதா என்னிடம் கூறினார். உள்ளும் புறமும் அமைதியோடு இருந்ததால் நிறைவோடு இணக்கமான வாழ்க்கையைத் தொடர்ந்து வாழ்ந்தார். விரைவிலேயே அவர் ஜானகி மாதா என்று அழைக்கப்பட்டார். பகவானிடம் வருவதற்கு முன்னரே அவருக்குக் குண்டலினி அனுபவங்களும் அமானுஷ்ய சக்திகளும் இருந்தன. இருந்தபோதும் பகவான் அவரிடம் “நீ ஆத்மாவே தான்”, என்று எப்போது கூறினாரோ அப்போதே அந்த அனுபவங்களையும் சக்திகளையும் புறக்கணித்து, பதிலாக அகமுகமானார். பகவானுடைய



"நான் எப்போதும் உன்னுடன் இருக்கிறேன்"

நினைவை, ஜானகி மாதா, தன் இதயத்தில் இருத்தியதால், தன்னுடைய ஆத்மாவைக் கூர்ந்து கவனிக்கச் செய்தது. அத்தகைய கூர்ந்த கவனத்தால் எல்லா விதமான தடைகளையும் அவர் கடந்து சென்றார். வழி தவறிச் சென்றுவிட்ட பல ஸாதகர்களுக்கு, ஜானகி மாதா ஆன்மீகக் கலங்கரை விளக்கமாகத் திகழ்ந்தார். அவர்களுக்கு, 'எவ்வாறு சரணாகதி செய்ய வேண்டும்', என்பதையும் ஆத்ம விசாரத்தில் முழு கவனத்தையும் செலுத்தி இறுதியில், பேரொளியாக ஆவதற்கு என்ன செய்ய வேண்டும் என்பதையும் கற்பித்தார். பகவான், ஜானகி மாதாவுடனேயே இருந்தார் என்பதை நிரூபிப்பதற்குப் பல நிகழ்ச்சிகள் உள்ளன. ஜானகி மாதாவைப் போன்று ஆத்மாவிலேயே நிலை நின்றவர்களுக்கு எல்லா விதத்திலும் பகவான் உறுதுணையாக இருந்தார். பகவானின் மஹா நிர்வாணத்திற்குப் பிறகும் கூட ஆத்மாவில் நிலைத்து நின்றவர்களை, அடையாளம் கண்டு, வழிபடும் விதத்தில், பகவான் ஸாதகர்களுக்குத் தன்னுடைய ஸாந்நித்தியத்தால் வழி காட்டியுள்ளார். ஜானகி மாதா அப்படிப்பட்ட ஞானிக்கு ஓர் உதாரணம்.

பகவானை அடிக்கடி சென்று தரிசித்து வந்ததால் ஜானகி மாதாவின் ஆன்மீக முன்னேற்றம் விரைவாகவும் சீரான முறையிலும் நிகழ்ந்தது. பகவானுடன் எப்போதும் ஸத்சங்கத்தில் இருக்க ஏன் விரும்பினார், என்பதை அவரே என்னிடம் பகிர்ந்து கொண்டுள்ளார். "அவரது ஸாந்நித்தியம் என்னை மிக உயர்ந்த மெய்ப்பொருளின் அனுபவ நிலைக்கு அழைத்துச் சென்றது. அங்கு மனதில் எழும்பிய இருமைகள் அனைத்தும் உடனேயே பேரமைதியில் ஒடுங்கின. 'வெளி உலகம் மாயை' என்றும், வெறும் கனவு என்றும் தோன்றியதோடு, இதயத்தில் நீக்கமற நிறைந்திருக்கும் ஆத்மாவில்

உள்ள பேரமைதி மட்டுமே ஸத்தியம் என்பதையும் உணர்ந்தேன். தொடர்ந்து, சங்கிலித் தொடராக எழுந்த பூர்வ ஜன்ம வாசனைகள் முழுவதுமாக அழிக்கப்பட்டு இறுதியில் எப்பொழுதுமுள்ள ஏகாத்ம வஸ்துவின் மாறுபட்ட தோற்றங்கள் அனைத்தும் வெறுவெளியில் மறைந்தன". இவற்றையெல்லாம் கடந்த ஆத்ம ஸ்வரூபம் மட்டுமே பிரகாசித்தது. அகத்தில், இந்த மோன நிலையில் ஜானகி மாதா நிலைத்திருந்தார். பகவானுடைய ஸந்நிதியில் மூன்று நான்கு மணி நேரம் அவர் ஸமாதியில் மூழ்கியிருப்பார். தன் குருவிடம் இடையறா இணக்கம் கொண்டிருந்தார். ஒரு முறை அவர் வெள்ளிப் பிடி வைத்த கைத்தடியையும் பின்னர் வெள்ளியினால் அலங்கரிக்கப்பட்ட ஒரு ஜோடி மரப் பாதுகைகளையும், சாது ஓம் என்று பிற்காலத்தில் அறியப்பட்ட தனது சீடர் நடராஜன் மூலம் பகவானுக்கு அனுப்பி வைத்தார். பகவான் அவை இரண்டையும் பெற்றுக் கொண்டு தன் கையில் சிறிது நேரம் வைத்திருந்து, ஆராய்ந்து, நோக்கியப் பின்னர் "இவற்றை அவருக்கே திருப்பி அனுப்பி விடுங்கள். ஜானகி மாதா அவரது பூஜையில் இவற்றை வைத்துக் கொள்ளட்டும்" என்று கூறினார். அவை இரண்டையும் எல்லையில்லா பக்தியோடு ஜானகி மாதா தினமும் வழிபட்டு வந்தார். குருவின் புனித பாதங்கள், ஜானகி மாதாவின் உள்ளே உறையும் குருவாக, அவரது இதயத்தில் நிரந்தரமாகப் பதிந்து விட்டன.

'The Mountain Path' பத்திரிகை, மூன்று ஆண்டுகளை நிறைவு செய்து விட்ட 1966-ஆவது ஆண்டில், ஆஸ்போர்ன், விசேஷ ஜயந்தி மலர் ஒன்றை வெளியிட விரும்பினார். அவற்றில் மற்ற ஞானியர், மஹான்கள், ஆன்மீகப் பெரியோர், குருமார்கள் இவர்களைப் பற்றிய கட்டுரைகளை வெளியிடாமல், முற்றிலும் அது பகவானுக்கே அர்ப்பணிக்கப்பட வேண்டும் என்று தீர்மானித்தார். நிர்வாகப் பதிப்பாசிரியரான என்னிடம் கலந்தாலோசித்த போது நானும் ஒப்புதல் அளித்தேன். ஆனாலும், பகவானது திட்டம் வேறாக இருந்தது என்பது விரைவிலேயே தெளிவானது. ஜானகி மாதாவிற்கு அங்கீகாரம் அளிக்க விரும்பினார் பகவான். ஒரு நாள் ஆஸ்போர்ன் என்னை அழைத்து, ஜானகி மாதாவைப் பற்றிய ஒரு கட்டுரையை அந்தக் குறிப்பிட்ட மலரில் வெளியிட வேண்டும் என்று வற்புறுத்திய போது நான் திடுக்கிட்டேன். ஏனெனில், அவரைப் பற்றி ஆஸ்போர்னுக்குத் தெரியும் என்பதைக் கூட நான் அறிந்திருக்கவில்லை. அந்தக் கட்டுரைக்கு ஜானகி மாதாவைப் பற்றிய பல விஷயங்களைக் குறிப்பிட்டு, பொருத்தமான முகவுரை ஒன்றை அவர் எழுதியபோது நான் வியப்படைந்தேன். அதில் 'ஒவ்வொரு இதழிலும் யாராவது ஒரு ஸாது, மஹான், அல்லது குருவைப் பற்றி வெளியிடுவது நமது வழக்கம். பகவானுக்கு முற்றிலுமாக, அர்ப்பணமாக வெளிவரும் இந்த இதழில் அவ்வாறு செய்வது பொருத்தமாக இருக்காது என்று தீர்மானித்தோம். ஆனால் அச்சகத்திற்கு அதை அனுப்பு முன் இதுவரை வெளிவராத ஆனந்த பரவசத்தில் திளைக்கும் ஜானகி மாதா என்ற பெண்மணியின் வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புகள் எங்களுக்குக் கிடைத்தன. ஸ்ரீ பகவானிடம் இதய பூர்வமாகச் சரணடைந்து விட்ட பக்தரான ஜானகி மாதாவைப் பின்பற்றுபவர்கள் அநேகர் உள்ளனர். அதனால் கிடைத்த குறிப்புகளைத் தொகுத்து ஒரு கட்டுரையை வெளியிட முடிவு செய்தோம்' என்று குறிப்பிட்டிருந்தார்.

1967-ல் பகவானுடைய ஸமாதிக் கோயில் கும்பாபிஷேகத்தின் போது, இரண்டாவது முறையாக ஜானகி மாதாவிற்கு பகவான் முழு அங்கீகாரம் அளித்ததைக் காண முடிந்தது. இந்து மத சம்ப்ரதாயப்படி, இம்மாதிரியான வைபவங்களில் ஞானி ஒருவரை விழாவிற்கு அழைத்து அவர் அந்த இடத்தைத் தொட்டுப் புனிதப்படுத்தச் செய்வது வழக்கம். பகவானது காரியங்களை நிர்வகிக்க ஆச்ரமத்தில் அறங்காவலர்கள் குழு ஒன்று இருந்தது. எனது தந்தை அதன் தலைவராக இருந்தார். இந்தக் குழு என்னை அழைத்து, பகவானது ஸந்நிதியில் அமைந்துள்ள லிங்கத்தைப் புனிதப்படுத்த

ஜானகி மாதாவை அழைக்குமாறு கேட்டு கொண்டது. லிங்கத்தைத் தொட்டவுடனே பரவச நிலையை எய்தினார் ஜானகி மாதா. “ஜய் ரமணேச! ரமண குரு! ரமணப்பா! ரமண தேவா! குரு ரமணா!” என்றெல்லாம் அவர் உரக்க விளித்த பொழுது, அங்கிருந்த நூற்றுக்கணக்கான பக்தர்களும் விருந்தினர்களும் முற்றிலும் மாறுபட்ட ஒரு உலகிற்கு அழைத்துச் செல்லப்பட்டு, பேரானந்தத்தை அடைந்தனர். கும்பாபிஷேக விழாவில் அவரைச் சந்தித்த நான், அவரது பாதங்களில் என் தலையை வைத்து வணங்கி ‘ஓ மாதா! என்னை ஆசீர்வதியுங்கள்! என்னை வழி நடத்துங்கள்!’ என்று பிரார்த்தித்தேன். அவருடைய உபதேசங்கள் எனக்கு மிகவும் புனிதமானவை; பூஜிக்கத்தக்கவை; அவர் என்னிடம் “ஸத்குரு ரமணரின் திருப்பாதங்கள் இரண்டையும் இறுகப் பற்றிக் கொள். துன்பத்தில் உழலும் ஜீவன்களைக் காப்பாற்றுபவர் அவரே. அவருடைய உபதேசங்களைக் கடைப்பிடி; பகவானது இரண்டு பாதங்கள் என்று குறிப்பிடும் போது அது அவருடைய உபதேசங்களை அனுதினம் பழகுவதேயாகும் அத்திருப்பாதங்கள் உன் இதயத்தில் எப்பொழுதும் பதிந்திருக்க வேண்டும். இதயமே ரமணர்” என்று ஜானகி மாதா உபதேசித்தார்.



# 70 எலியனார் பாலின் நோயீ



எனக்கு மூன்று வயதாக இருந்த போது, ஒரு நாள், நான் பகவானை நமஸ்கரித்தேன். நான் எழுந்தவுடன் பகவான், “கணேசா! அங்கு போ! உன்னுடைய நோயீ உட்கார்ந்திருக்கிறாள். அங்கு சென்று அவளது மடியில் அமர்ந்து கொள்” என்று கூறியபோது நான் மகிழ்ச்சியோடு ஓடிச்சென்று, அந்த வயது முதிர்ந்த அமெரிக்க பெண்மணியின் மடியிலேறி அமர்ந்து கொண்டேன். அவர்தான் எலியனார் பாலின் நோயீ. பகவானின் அருள் என்னையும் அவரையும் இணைத்தது, இந்த ஒரு நிகழ்ச்சியின் மூலம் மட்டுமன்று. அதே ஆண்டில் பகவான் பக்தர்களோடு உணவருந்த அமர்ந்திருந்த போது ஒரு நாள் நான் உணவுக் கூடத்திற்குச் சென்றேன். நேராக எலியனார் பாலின் நோயீயிடம் சென்று, ‘அவருடைய இலையிலிருந்தே நானும் உண்பேன்’, என்று கூறி அடம் பிடித்தேன். மிகுந்த ஆசாரத்தில் மூழ்கியவர்களாக இருந்ததால், சமையல் செய்பவர்களும், அங்கு அமர்ந்திருந்த சில பக்தர்களும் நான் கூறியதைக் கேட்டு பதட்டமடைந்தனர். அவர்களைப் பொறுத்தவரையில், ஒரு பிராமணக் குழந்தை வெளிநாட்டவரின் இலையில் உண்பது, என்ற எண்ணமே ஏற்கமுடியாததாக இருந்தது. அதனால் அவர்கள் நான் செய்யவிருந்த நினைத்துக்கூட பார்க்க முடியாத அசுத்தியை ஏற்படுத்தக் கூடிய செயலிலிருந்து என்னைக் காப்பாற்ற ஓடி வந்தார்கள். நான் நினைத்ததை சாதிக்க விரும்பியதால் பிடிவாதம் பிடித்து, கோப வெறியில் பெரிய கலவரத்தை உண்டு பண்ணினேன். பகவானுடைய கவனம் எங்கள் பக்கம் திரும்பியது. ஒரே பார்வையில் என்ன நடக்கிறது என்பதைப் புரிந்து கொண்டார். சற்றும் அமைதியை இழக்காமல் ஆலோசனை கூறும் வகையில் “ஒரு தட்டில் சாப்பாட்டையும், ஒரு ஸ்பூனையும் வைத்து, குழந்தையிடம் காட்டுங்கள். அவன் உங்களோடு வந்து விடுவான். அவன் பிடிவாதம் பிடிப்பது அந்த அம்மாவின் இலையிலிருந்து உண்ண வேண்டும் என்பதற்காக இல்லை. இதுவரை, ஒருவரும் ஸ்பூனால் சாப்பிடுவதை கணேசன் பார்த்ததில்லையென்பதால், தானும் அவர்களைப் போல உண்ண வேண்டுமென ஆசைப்படுகிறான்,” என்று கூறினார். பகவானின் யோசனைப்படியே சமையல்காரர்களும் செய்த போது நான் ஒரு நாய்க்குட்டியைப் போன்று அவர்களைப் பின் தொடர்ந்தேன். பகவான் என் பக்கம் திரும்பி, “பார்த்தாயா! இப்பொழுது நீ விரும்பியபடி நடந்து விட்டது” என்று கூறிவிட்டு சமையல்காரர்களையும் மற்றுள்ளவர்களையும் நோக்கி “உங்களது பிரச்சனையும் தீர்ந்து விட்டது” என்றார்.

உலகெங்கிலுமிருந்து பலதரப்பட்ட ஸாதகர்களை பகவான் ஈர்த்தார். அநேகமாக நான் சந்தித்த பக்தர்கள் அனைவரிடமும் ‘உங்களை அருணாசலத்திடமும் பகவானிடமும் வரவழைத்தது எது?, என்ற ஒரே கேள்வியைத்தான் கேட்பேன். பொதுவாக, ‘பகவானைப் பற்றியும், அருணாசலத்தைப் பற்றியும் எழுதப்பட்டிருந்த கட்டுரையை யாரோ கொடுத்தார். அதனால் இங்கு வந்தேன்’ என்று கூறுவார்கள். ‘நீங்கள் பல இடங்களைப் பற்றிப் படித்திருப்பீர்கள். எந்தெந்த ஊர்களைப் பற்றிப் படித்தீர்களோ அந்த ஊர்களுக்கெல்லாம் நீங்கள் போவதுண்டா?, என்று நான் வற்புறுத்திக் கேட்டால் சற்று சிந்தித்துவிட்டோ அல்லது என்னுடைய தூண்டுதலினாலோ தங்களை ‘அருணாசலத்திற்கு ஈர்த்தது அச்சடிக்கப்பட்ட எழுத்துக்கள் அல்ல என்பதையும், அனைத்திற்கும் மேலான ஒரு சக்தியினால் என்றும், அதை பகவான் அல்லது வேறு எந்தப் பெயரால் அழைத்தாலும், அதனால் உந்தப்பட்டே தாங்கள் வந்ததை அவர்கள் உணர்வார்கள். 1896-ம் ஆண்டு பகவானை

எந்த உன்னதமான சக்தி அருணாசலத்திற்கு இழுத்து வந்ததோ அதே சக்திதான் பகவானால் வசீகரிக்கப்பட்ட ஒவ்வொரு பக்தரையும் அங்கு அழைத்து வந்தது.

இரட்டையரில் ஒருவராகப் பிறந்த திருமதி நோயீ தனது சகோதரியுடன் கலிஃபோர்னியாவில் வாழ்ந்து வரும்பொழுது 1939-ல் அவருக்கு ஒரு பெரிய நெருக்கடி ஏற்பட்டது. அது மிகுந்த மன உளைச்சலை ஏற்படுத்தியதால் அவரால் தூங்கக்கூட முடியவில்லை. அவர் அனுபவித்த துயரச் சுமையைத் தாங்க முடியாமல் பண வசதி இல்லாதிருந்த போதும் மன ஆறுதல் பெறுவதற்காக உலகைச் சுற்றிப் பயணம் மேற்கொள்ளத் தீர்மானித்தார். அவரது உடல் நலம் மிகவும் குன்றிய நிலையிலிருந்ததால் அவரது மருத்துவர்கள், 'பயணத்தை மேற்கொள்ள வேண்டாம்', என்று ஆலோசனை கூறியதோடு "நீங்கள் ஏன் இந்த உடல் நிலையில் பயணிக்க விரும்புகிறீர்கள்?" என்றும் கேட்டனர். அதற்கு நோயீ கூறிய பதில், "நான் என்னை அறிய விரும்புகிறேன்", என்பதாக இருந்தது. அவர் காண வந்த குருவின் முக்கிய போதனையே 'நீ யார்? என அறிந்து கொள்', என்பதை நோக்கும் பொழுது நோயீயின் சொற்கள், தீர்க்க தரிசனத்தோடு வந்தவையோ எனக் கூறும்படியாக உள்ளன.

அவருடைய பயண திட்டத்தின் படி கல்கத்தாவிற்குச் செல்ல வேண்டிய அவர் கப்பல் சென்னைக்கு வந்த போது, ஏதோ ஒரு உந்துதலினால், அங்கேயே இறங்கி விட வேண்டும் என்று அவருக்குத் தோன்றியதால், இறங்கி விட்டார். அங்கு ஒரு விடுதியில் அறை எடுத்துக் கொண்டு தங்க எண்ணியவர் மிகுந்த வெப்பத்தின் காரணமாக, அங்கு தங்க விரும்பவில்லை. விடுதி ஊழியர்கள், மலை வாசஸ்தலமான கொடைக்கானலுக்குச் செல்லுமாறு ஆலோசனை கூறினர். மறுதினம் அவருக்காக ஏற்பாடு செய்யப்பட்ட 'டாக்ஸி' ஒன்றில் அவர் அங்கு சென்றார். அங்கு, விடுதியில் சுகமாகத் தங்கியிருந்த பொழுது அங்கு பணியாற்றிய சிலரிடம் உங்களுக்குத் தெரிந்த ஞானியோ ஸந்நியாசியோ யாரேனும் அருகில் இருக்கிறார்களா?', என்று விசாரித்தார். அவர்களில் ஒருவர் உடனே "ஆம்! அருணாசலத்தில் ரமண மஹர்ஷி என்ற மஹான் இருக்கிறார். அவரே இந்தியாவில் மிகச் சிறந்த ஞானி" என்றும் கூறினார். அதில் அதிசயம் என்னவென்றால் அந்தப் பதிலைக் கூறியவர் விடுதியில் வேலை செய்து வந்த சாதாரணப் பணியாள் மட்டுமே. பெரிய பண்டிதரோ அல்லது ஸாதகரோ அல்ல. 1939-ல் பகவான் பிரபலமாகவில்லை என்ற நிலையிலும், பாமரர் ஒருவரால் 'இந்தியாவிலேயே சிறந்த ஞானி', எனக் குறிப்பிடப்பட்டிருக்கிறார்.

திருமதி நோயீ உடனே அருணாசலத்திற்குப் புறப்பட்டார். ரமணாச்ரமத்திற்கு வந்த போது சர்வாதிகாரி நிரஞ்ஜனானந்த ஸ்வாமி அவரை வரவேற்று நேராக பகவானிடம் அழைத்துச் சென்றார். அந்த அனுபவத்தைப் பற்றி நோயீ, "பகவானுடைய தூய்மையும் அருளும் அந்தச் சூழலில் நிரம்பியிருந்ததை நான் உணர்ந்தேன். அந்த ஞானியின் ஸந்நிதியில் தெய்வீகத்தை ஒருவரால் உணர முடியும். அவர் புன்னகை செய்த பொழுது இறைவனது சாம்ராஜ்யத்தின் தெய்வீகக் கதவுகள் திறக்கப்பட்டது போன்ற ஒரு உணர்வு ஏற்பட்டது. அவருடையதைப் போன்ற தெய்வீக ஒளி பொருந்திய கண்களை நான் அதுவரை கண்டதில்லை. பகவான் என்னை அன்புடன் வரவேற்று என்னைப் பற்றி விசாரித்த போது என் மனச்சுமை வெகுவாக இறங்கியதோடு அன்பும், கருணையும் ததும்பும் பார்வையினால் அவர் வெளிப்படுத்திய ஆசிகள் நேராக இதயத்தைத் தொட்டன. எனக்கு அவர் எத்துணை தேவையென்பதை அவர் உணர்ந்திருந்தார். நான் உடனே பகவானிடம் ஈர்க்கப்பட்டேன். அவரது பெருமையும் தயையும் அனைவரையும் தழுவி அணைத்தது. அவரது அமைதியான அன்பு, அறிவு இவற்றின் பாதிப்பு, வார்த்தைகளைவிட அதிக சக்தி வாய்ந்தவையாக இருந்தன. அவரிடம் வருபவர்கள் ஒவ்வொருவரும் ஆசீர்வதிக்கப்பட்டவர்களே! அவரது உள்ளத்தில் ஒளிவீசிய பேரமைதியை எல்லோராலும் உணர முடிந்தது," என்று கூறினார்.



**மலையில் ஸ்ரீ பகவானுக்குப் பின்னால் அமர்ந்திருப்பது திருமதி நோயீ**
**(லக்ஷ்மண் ஜீ ஸ்ரீ பகவானுக்கு இடப்புறம்)**

அந்த நொடியிலிருந்து ஓராண்டுக்குப்பின் பகவானிடம் விடை பெற்றுச் செல்லும் வரை நோயீயின் விழிகள் கண்ணீரைப் பெருக்கியவாறிருந்தன. பகவான் அவர் மீது செலுத்திய கவனம் இடைவெளியின்றித் தொடர்ந்து இருந்தது. நோயீ பகவானுடைய ஸந்நிதிக்கு வந்த அக்கணத்திலேயே பகவானது கவனம் நோயீயிடம் திரும்பிவிடும். பகவானுடைய வரலாற்றில் தனிச்சிறப்பு வாய்ந்த இந்த அற்புதமான உறவு நம்பத்தக்கதாக இல்லை. ஆனால் அது உண்மை. அந்த பெண்ணின் எளிமையும், உள்ளத்தை உருக்கும் கண்ணீரும், தூய்மையும் மூத்த பக்தர்களையும் அவரிடம் அன்பு கொள்ளச் செய்தது. ஆரம்பத்தில் அவர் பெருக்கிய கண்ணீருக்குக் காரணம் கவலை, துன்பம், வேதனை இவைகளாக இருந்தன. ஆனால் அவர் பின்னர் பெருக்கிய கண்ணீரோ அவரது விவரிக்க இயலாத ஆனந்தம், ஆன்மீக நிறைவு இவற்றின் இயல்பான வெளிப்பாடாக இருந்தது. பகவானைப் பார்த்த பிறகுதான், பல ஆண்டுகளாக உறங்காத அவர் ஆழ்ந்து உறங்கினார்.

அப்போதிருந்து தான் வழக்கமாக உட்கொண்டிருந்த தூக்க மாத்திரைகளை நிரந்தரமாக நிறுத்தி விட்டார். பகவானின் நேரடியான ஆசிகளே அதற்குக் காரணம் என்றும் அவர் கூறினார். அவரால் எப்படி அதை சமாளிக்க முடிந்தது?, என்று கேட்ட பொழுது மருந்துக்கெல்லாம் மருந்தான, எப்போதும் கைவிடாத, பகவானுடைய, அருளைப் பெற்றதுதான் இதற்குக் காரணம், என்று அவர் கூறியது பகவான் தனது பாடலில் அருணாசலத்தை மருந்திற்கெல்லாம் மருந்து எனப் பாடியிருப்பதை எதிரொலிப்பதாக உள்ளது.

சில மாதங்களுக்குப் பின் தனது தாயகம் திரும்பும் முன் நோயீ இந்தியாவில் சுற்றுப் பயணம் செய்ய விரும்பினார். நீண்ட நெடும் பயணத்துக்குப் பின், தான் கிளம்பிச் செல்ல வேண்டிய இடமான கல்கத்தாவை அடைந்த போது திடீரென பகவானும் அருணாசலமும் தன்னை வலுவாக இழுப்பதாக உணர்ந்தார். எவ்விதச் சிந்தனையுமின்றி அவர் மீண்டும் அருணாசலம் வந்தார். பகவான் அற்புதமான புன்னகையை வீசி அவரை வரவேற்றார். இரண்டாவது முறை, தான் ஆச்ரமத்திற்கு வந்த அனுபவத்தை விவரிக்கும்போது நோயீ, "என்னுடைய அன்பு ஆழ்ந்த பக்தியாக மலர்ந்தது. விவரிக்க இயலாத அமைதி என்னுள் நிறைந்தது. முன்னர் மிகவும் முக்கியமானவை எனத் தோன்றியவை அனைத்தும் தங்கள் முக்கியத்துவத்தை இழந்தன. அவற்றைச் சரியான கோணத்தில் என்னால் பார்க்க முடிந்தது. முன்னர் அனுபவித்த மனவேதனைகளும், நாளை பற்றிய சிந்தனைகளும் துச்சமாகத் தோன்றி, மங்கி, இறுதியில் முழுவதுமாக மறைந்து போயின", என்றார்.

ஒரு நாள் அழகான ஒரு ரோஜாப்பூவுடன் தோற்றமளித்த நோயீயிடம் ஒரு பக்தர், அந்தப் பூவைப் பற்றி வினவினார். அதைத், தான் பகவானுக்கு அர்ப்பணிக்க எடுத்து வந்துள்ளதாக நோயீ கூறினார். ஆனால் ஹாலுக்குள் நுழைந்த போது பகவானிடம் அந்தப் பூவை நேரடியாகச் சமர்ப்பிக்க அவருக்கு தைரியம் எழவில்லை. அதனால் பகவான் முன் வழக்கமாக வைக்கப்பட்டிருக்கும் ஒரு சிறிய 'ஸ்டூலின்' மீது அந்த மலரை வைத்தார். பகவான் நோயீயைப் பார்த்து 'அது என்ன?' என்று வினவியபோது "பகவானே! அது சாதாரண ரோஜாப்பூ தான்", என்று பதிலிறுத்தார். 'அதை என்னிடம் தருகிறாயா?' என்று அவர் கேட்கவும் நோயீ அதை எடுத்து பகவானிடம் அளித்த போது அவர் அந்த மலரால் தனது கண்கள், தலை, இதயம் இவற்றைத் தொட்டார். எளிமையும் அழகும் பொருந்திய அன்பு நிறைந்த பகவானின் அச்செயலைப் பார்த்த நோயீயின் இதயத்தில், "ஓ பகவான்! நீங்கள் எப்பொழுதும் என் தாயாகவும், தந்தையாகவும் இருக்க வேண்டும். எப்பொழுதும் எனது கடவுளாகவும் இருக்க வேண்டும். நான் எப்பொழுதும் உங்கள் அன்புக் குழந்தையாக இருக்க வேண்டும்" என்ற பிரார்த்தனை அவரது இதயத்திலிருந்து தானாக வெளி வந்தது.

எட்டு மாதங்கள் தங்கிய பிறகு நோயீ கலிஃபோர்னியாவிற்குத் திரும்ப வேண்டிய நாள் வந்தது. பகவான் முன் விடை பெறுவதற்காக வந்து நின்ற அவர் தாங்க முடியாமல் அழுதார். "நான் உங்களுடனேயே எப்பொழுதும் இருக்கிறேன்" என்று அவருக்கு பகவான் உறுதியளித்தார். தனது தாய்நாடான அமெரிக்கா சென்ற பின்னர் கடிதங்கள் மூலம் பகவானுடன் தொடர்பு வைத்துக் கொண்டிருந்தார். அவர் எழுதிய போதெல்லாம் நான்கு கடிதங்களை எழுதுவார் - ஒன்று பகவானுடைய விலாசமிட்டு; இரண்டாவது நிரஞ்ஜனானந்த ஸ்வாமிக்கு; மூன்றாவதாக அவரிடம் மிகவும் அன்பாகப் பழகிய பகவானது தொண்டர் கிருஷ்ண ஸ்வாமிக்கு; நான்காவது எனக்கும் எழுதுவார். ஒவ்வொரு முறையும் நோயீயின் கடிதத்தைப் படிக்கும் போது, அதில் "பகவானே! இக்கடிதத்தை உங்களுக்கு எழுதும் போது கன்னங்களில் கண்ணீர் வழிந்தோடுகிறது" என்று அவர் எழுதியிருப்பதைப் படிக்கும் போது பகவானும் மனம் நெகிழ்ந்து கண்ணீர் சிந்துவார். இவ்வாறு கூறும் போது அதை நம்புவது கடினமாக இருக்கலாம். அந்த நாட்களில் இந்தியர்கள் அபூர்வமாகவே

அமெரிக்காவிற்குப் பயணம் செய்வார்கள். ஆனால் எப்போதெல்லாம் ஒரு பக்தர் தான் அமெரிக்கப் பயணம் மேற்கொள்ளப் போவதாகத் தெரிவிக்கிறாரோ அப்போதெல்லாம் பகவான் அவரிடம், "நீங்கள் நோயீயைச் சந்தித்து வாருங்கள்", என்று கூறுவது வழக்கம்.

பகவானுடைய மஹாஸமாதிக்குப் பிறகு, நோயீ எழுதியிருந்த கடிதத்தில் "பகவானே! உங்களுடைய இதயத்தில் என்னை இருத்தி உள்ளீர்கள். உங்கள் இதயத்தில் நான் இருக்கிறேன்", என்று எழுதியிருந்தார். மிகுந்த கவலை, துயரம் வேதனை இவற்றுடன் பகவானிடம் வந்த இந்த அற்புதமான மாதரசி பகவானுடைய அன்பும் கருணையும் நிறைந்த அரவணைப்பினால், தனது ஆன்மீகப் பயணத்தை வெற்றிகரமாக நிறைவேற்றினார்.





# 71 சூரி நாகம்மா



ஜனவரி மாதம் மத்தியில் வரும் மாட்டுப் பொங்கலன்று இந்தியா முழுவதிலுமுள்ள மக்கள், காளை மாடுகளுக்கும், பசுக்களுக்கும் நன்றி கூறி வணங்கும் வகையாக, அவற்றிற்கு ஓய்வளித்து, குளிப்பாட்டி, மாலை அணிவித்து, மணிகளால் அலங்கரிப்பார்கள். அந்தக் குறிப்பிட்ட நாளில், ஒவ்வொரு ஆண்டும், நான் மலைக்கும் பகவானின் பழைய ஹாலுக்குமிடையேயுள்ள, பசு லக்ஷ்மியின் ஸமாதிக்குச் செல்வது வழக்கம். அப்போதெல்லாம் லக்ஷ்மியின் கடைசி நாள் என் மனக்கண் முன் தோன்றும். 1948-ல் அந்த சம்பவம் நிகழ்ந்த போது நானும் அங்கு இருந்தேன். பகவான் லக்ஷ்மியின் அருகில் அமர்ந்து தனது கைகளை அவள் மீது வைத்தபடி அவளை அமைதிப்படுத்தி சாந்தி அளித்து ஆசீர்வதித்தார். அவர் அங்கிருந்து சென்ற பின் லக்ஷ்மி அரைமணி நேரத்திற்கும் மேலாக கண்களை மூடியவாறு அசைவற்றிருந்தாள். பின்னர் சூரி நாகம்மா அன்போடு லக்ஷ்மியின் தலையைத் தன் கைகளால் தூக்கி தனது மடியில் வைத்துக் கொண்டார். அவள் இறுதி மூச்சை விட்டபின் நாகம்மா பகவானிடம் சென்று விஷயத்தைக் கூறினார்.

லக்ஷ்மி ஸமாதி அடைந்து ஒரு வருடம் நிறைவு பெறுவதற்குச் சில தினங்கள் முன்பு 1949-ல் சூரி நாகம்மா தனது கிராமத்திற்குத் திரும்பிச் செல்ல வேண்டி வந்தது. லக்ஷ்மியின் நினைவு நாளுக்கு முந்தைய தினம் “நாகம்மா வந்து விட்டார்களா? நாளை லக்ஷ்மியின் ஸமாதி தினம் என்பது அவளுக்குத் தெரிவிக்கப்பட்டதா?”, என்று பகவான் அவரது தொண்டர்களிடம் அடிக்கடி கேட்டுக் கொண்டிருந்தார். மறுதினமும் கூட, விடாமல் இந்த விஷயங்களை அறிய விரும்பினார். நாகம்மா வந்தார்; ஆனால் அவர் வருவதற்குச் சிறிது தாமதமாயிற்று; வந்தவுடனே நேராக லக்ஷ்மியின் ஸமாதிக்குச் சென்ற பின்னரே அவர் பகவானைக் காண வந்தார். சூரி நாகம்மாவைப் பார்த்த மாத்திரத்திலேயே, “நீங்கள் லக்ஷ்மியின் ஸமாதிக்குச் சென்று வந்தீர்களா?” என்று அவர் கேட்டார். பகவான், பசு லக்ஷ்மி, சூரி நாகம்மா என்ற இந்த முக்கோணம் என் இதயத்தில் நிரந்தரமாக வரையப்பட்டது.

நூறு ஆண்டுகளுக்கு முன்பு இந்தியாவில் பால்ய விவாஹம் நடைமுறையில் இருந்தது. ‘திருமணமான சிறுமி ஒருத்தி இறந்துவிட்டால் அவளது கணவன் மறுமணம் செய்து கொள்ள முடியும். ஆனால், திருமணமாகிய சிறுவன் இறந்து விட்டால், அவனது மனைவி குழந்தைப் பருவத்தில் இருந்தாலும் கூட, விதவைகளுக்குரிய தவ வாழ்க்கையை மேற்கொண்டு தனது வாழ்நாளைக் கழிக்க வேண்டும்’ என்ற கடுமையான விதி இருந்தது. அநேகமாக சிறுமியின் தலை மொட்டையடிக்கப்பட்டதோடு உடுத்துவதற்கு, பிறர் கவனத்தை ஈர்க்காத மிகச் சாதாரணமான ஆடைகளே வழங்கப்பட்டன. சமுதாயம் அவளை அநேகமாகப் புறக்கணித்தது என்றுகூடச் சொல்லலாம். ஏனென்றால் அவள் வீட்டை விட்டு வெளியே எங்கும் செல்ல முடியாது என்பதோடு, வெளியிலும், ஏன்! வீட்டிலும் கூட, சமூக நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ள அனுமதிக்கப்படவில்லை. இதனால் ஆன்மீக நாட்டமுடைய விதவைகளுக்கு, உலக வாழ்க்கையில் எழும்பக்கூடிய தகாத ஆசைகளில் விழாமல் தாங்கள் விரும்பிய ஆன்மீகப் பாதையில் செல்வது சுலபமாக இருந்தது. இதனால்தான் ‘அடுத்த பிறவியில் நான் பால்ய விதவையாக இருக்க விரும்புகிறேன்’ என்று

ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் கூறியுள்ளார். பால்ய விதவையாக இருந்தவர்கள், தகாத விருப்பங்களிலிருந்து காக்கப்பட்டார்கள். அங்கு, விருப்பு வெறுப்புகளுக்கு இடமில்லாத காரணத்தினால் ஒருவரின் மனதை ஆன்மீக ஸாதனையிலிருந்து திசை திருப்பவோ அல்லது நேரத்தை வீணடிப்பதற்கோ வழி இருக்கவில்லை.

சூரி நாகம்மாவின் வாழ்க்கை அத்தகையதாக இருந்தது. வசதி படைத்த குடும்பத்தில் பிறந்த அவர், இளம் வயதிலேயே தனது பெற்றோரை இழந்து விட்டார். மிகச் சிறிய வயதிலேயே திருமணம் செய்விக்கப்பட்ட சூரி நாகம்மா, கணவரையும் தனது பன்னிரெண்டாவது வயதிற்குள்ளேயே இழக்க நேர்ந்தது. ஸ்ரீ ராமரின், கடமை தவறாத மனைவி சீதையைப் போன்றே தானும் வாழ வேண்டுமென்ற கற்பனையோடு எப்பொழுதுமே நாகம்மா இருந்தார். அதனால், தன் மனமுடையச் செய்த இந்தப் பேரிடியை, அவரால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. இதன் காரணமாக, அவர், அடிக்கடி தனது அறையில் சென்று தாளிட்டுக் கொண்டு, யாரையும் காண மறுத்ததோடு உண்ணவும் மறுத்தார். அதன் விளைவாக சரியான போஷணையின்றி மிகவும் பலவீனமடைந்தார். இருந்த போதும் இத்துணை துர்ப்பாக்கியங்களுக்கிடையிலும் யாராவது, ஸாதுக்கள் ஸந்நியாசிகளைப் பற்றிப் பேசினாலோ அல்லது பாடினாலோ அது அவருக்கு மிகுந்த ஆறுதலை அளித்தது. அதனால், மஹான்களைப் பற்றிப் படிப்பதற்கு நாகம்மாவை ஊக்குவித்ததோடு அவர்களோடு தொடர்பு கொள்ள வேண்டுமென்ற ஏக்கத்தையும் பெருக்கியது. அவரது இதயத்தில் விதைக்கப்பட்ட இந்த ஆன்மீக விதை, விரைவிலேயே, வெறும் ஒற்றை மரமாக மட்டுமின்றி, அழகான பூந்தோட்டமாக மலர்ந்தது.

பள்ளிக்குச் செல்ல முடியாத காரணத்தால், தனது தாய் மொழியான தெலுங்கை நாகம்மா தானாகவே கற்றுக் கொண்டார். இந்திய இதிகாச புராணங்களான இராமாயணம், மஹாபாரதம், ஸ்ரீமத்பாகவதம் இவற்றை அவர் படித்தார். பாகவதத்தில் ஸ்ரீவிஷ்ணு, குழந்தை கபிலராகத் தோன்றி, தனது தாய் தேவஹூதிக்கு ஆத்ம ஸாக்ஷாத்காரம் பற்றி விவரித்துள்ள பகுதி, அவரை விசேஷமாக ஈர்த்தது. இதுவே அவருடைய வாழ்க்கையில் திருப்பு முனையாகவும் அமைந்தது. எல்லாவிதமான ஆன்மீக நூல்களுக்காக அவர் மனம் ஏங்கியதோடு, ஒரு மஹானைச் சந்தித்து அவருக்கு சேவை செய்ய வேண்டும் என்ற வேட்கையும் வளர்ந்தது. ஒரு நாள் இரவு, நாகம்மாவுக்கு வந்த அழகிய கனவில் தக்ஷிணாமூர்த்தியைப் போன்ற தோற்றம் கொண்ட ஒரு சித்த புருஷரைக் கண்டார். பேரொளி, சித்தரைச் சூழ்ந்திருந்தது. எழுந்து அவரை வணங்க வேண்டுமென்று நாகம்மா விரும்பினார். ஆனால், சட்டென அவருடைய கனவு கலைந்தது. மிகவும் ஏமாற்றமடைந்த நாகம்மாவிற்கு ‘புண்ணிய புருஷர் ஒருவரைக் கண்டு, அவருக்கு சேவை செய்தேயாக வேண்டும்’, என்ற கட்டாயம் மனதிலுண்டாயிற்று.

நாகம்மாவுக்கு மூன்று சகோதரர்கள் இருந்தனர். ஒருவர் வக்கீல். இன்னொருவர் ஒரு வங்கியில் பணியாளர். கடைசி சகோதரர், வேலை செய்ய முடியாத அளவிற்கு உடல் நலம் குன்றியவர். இந்த சகோதரரைக் கவனித்துக் கொள்ள வேண்டிய பொறுப்பு நாகம்மாவின் மீது விழுந்தது. 1923-ம் ஆண்டில் இந்தச் சகோதரர் இறக்கும் வரை அந்தப் பொறுப்பை அவர் ஏற்றிருந்தார். அப்போது அவருக்கு வயது 21. அந்தக் காலகட்டத்தில் ஆன்மீக ஸாதனையில் முழுமூச்சுடன் ஈடுபட விரும்பினாரென்றாலும் அவருடைய பொறுப்புக்கள் அவரைக் கட்டிப் போட்டிருந்தன. அந்த சகோதரரின் மரணத்திற்குப் பின்னர் நாகம்மா தனியாக வாழ்வதைக் குடும்பத்தினர் விரும்பவில்லையாதலால் அவர் கிராமத்தை விட்டு, விஜயவாடா நகரத்திற்குச் சென்று அவரது வக்கீல் அண்ணனுடன் வாழ வேண்டியதாயிற்று. இந்த மாற்றம் அவருக்கு மறைமுகமான வரப்பிரஸாதமாக அமைந்தது. ஏனெனில் ஸாதகர்களின் தொடர்பு அவருக்குக் கிடைத்ததுடன்

தெலுங்கில் ஆன்மீகப் புத்தகங்களையும் அவரால் எளிதில் பெற முடிந்தது. 1939-ல் நாகம்மாவின் மற்றொரு அண்ணனாகிய D. S. சாஸ்திரி, வேலை நிமித்தமாக மேற்கொண்ட பயணத்தின் போது அருணாசலத்திற்குத் தான் சென்று வந்தது பற்றிய விவரங்களை ஒரு கடிதத்தில் எழுதியிருந்தார். சிறந்த ஞானியான ரமண மஹர்ஷியைத் தான் சந்தித்த அனுபவத்தை விவரித்திருந்ததோடு அதன் பிறகு, எவ்வாறு தன் வாழ்க்கையே மாறி விட்டது என்றும் குறிப்பிட்டிருந்தார். ரமண மஹர்ஷியைச் சந்தித்து சில காலம் அருணாசலத்தில் தங்குமாறும் அவர் நாகம்மாவை வற்புறுத்தியிருந்தார். நாகம்மாவிற்குப் பக்கபலமாக இருந்து, பண உதவி செய்வதாகவும் வாக்களித்திருந்தார். இந்தச் சகோதரரே பிற்காலத்தில், நாகம்மாவின் தெலுங்குப் புத்தகங்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார்.

தனது சகோதரர் குறிப்பிட்டிருந்த விசித்திரமான ஸாதுவிடம் நாகம்மாவிற்கு நம்பிக்கை ஏற்படவில்லை. இருந்தாலும் சகோதரரின் விருப்பத்திற்கு மதிப்பளித்து 1941-ல் ஜலை மாதம் ரமணாச்ரமம் சென்றார். பகவானுடைய ஒரே பார்வையால் நாகம்மா வியப்பில் ஆழ்ந்து, மந்திரத்தால் கட்டுண்டவர் போல், வாயடைத்து நின்றார். பகவான் அவரைக் கூர்ந்து நோக்கிய போது விவரிக்க இயலாத சாந்தியை அனுபவித்தார். அதுமட்டுமின்றி ஆச்சர்யத்திலும் ஆச்சரியமாக முப்பது ஆண்டுகளுக்கு முன், தான் கனவில் கண்ட சித்த புருஷர், ரமண மஹர்ஷியே என்பதையும் உணர்ந்தார். நாகம்மாவின் ஆச்சரியத்திற்குக் காரணத்தை உணர்ந்து கொண்ட பகவான். அவரை நோக்கிப் புன்னகை பூத்தார். தான் இறைவனுக்கு முன், நேருக்கு நேராக நிற்கிறோம் என்பதில் அவருக்கு எள்ளளவும் சந்தேகம் இருக்கவில்லை. திருவண்ணாமலையிலேயே நிரந்தரமாகத் தங்கிவிடத் தீர்மானித்தார். அங்கு வரும்பொழுது அந்த உத்தேசத்தோடு வராததால் தனக்குத் தேவையானவற்றை எடுத்து வரும் பொருட்டு, அவர் தனது வீட்டிற்குத் திரும்பிச் செல்ல வேண்டியிருந்தது. பகவானை விட்டுப் பிரிய மனமில்லாததால், விடை பெறும் போது அவர் அழுதார். “நான் உங்களுடன் எப்போதும் இருக்கிறேன். நீங்கள் எங்கு சென்றாலும் என்ன செய்தாலும் நான் உங்களுடன் எப்போதும் இருக்கிறேன்,” என்று பகவான் கூறினார். பரவசத்தில் ஆழ்ந்த நாகம்மா அப்போது முதல்



**தொலைநோக்கியில் ஸ்ரீ பகவான் மலையைப் பார்க்கும் அரிய புகைப்படம்**

எதிலும் பகவானையே கண்டார். ஆனந்தத்தில் மூழ்கி இருந்தார். இத்தனை ஆண்டுகளாகத் துயரத்தில் மூழ்கியிருந்த நாகம்மா, இறுதியாகச் அமைதியையும், ஆனந்தத்தையும் கண்டு கொண்டார் என்பதை அவரது உறவினர்களும் உணர்ந்து கொண்டனர்.

பகவானை விட்டு இனிமேலும் பிரிந்திருப்பதைத் தாளாமல் சூரி நாகம்மா மூன்று மாதங்களுக்குள்ளேயே அருணாசலம் திரும்பினார். ஆச்ரமத்தில், சூரிய அஸ்தமனத்திற்குப் பின் பெண்கள் அனுமதிக்கப்படுவதில்லை என்பதாலும் ஆச்ரமத்தின் அருகில் தங்க வேறு வசதி இல்லாததாலும் அவர் ஊருக்குள் தங்குமாறு ஆயிற்று. பகவானுக்கு உணவளித்த பின்னரே உண்ணும் வழக்கமுள்ள எச்சம்மாளுடைய வீட்டினருகில், அதிருஷ்டவசமாக, வாடகைக்கு ஒரு வீடு கிடைத்தது. துறவுப் பண்புகளோடு கூடிய எச்சம்மாளுக்கு அருகிலேயே வாழ்ந்ததால் நாகம்மாவிற்கு அதுவே உயர்ந்த ஸத்ஸங்கமாயிற்று. பகவானிடம் எந்தத் தடையுமின்றி மனம் விட்டுப் பேசுமாறு எச்சம்மாள் நாகம்மாவுக்கு ஊக்கம் அளித்தார். உண்மையைச் சொன்னால் பகவானிடம், ஆத்மானுபூதியைத் தவிர வேறெதையும் கேட்கக் கூடாது என்று பிரத்தியேகமாக நாகம்மாவிடம் கூறியிருந்தார். ஒரு நாள் நாகம்மா பகவானை வணங்கிய போது நடுங்கிய குரலில், ''பகவானே! நான் முக்தியடைய வழி காட்ட வேண்டும்'' என்றார். கருணையே உருவான பகவான் திரும்பி அவரை நோக்கித் தலையை அசைத்து ஒப்புதல் அளித்தார். பகவானது இச்செயல் விசித்திரமானதாக இருந்தது. ஏனென்றால் இத்தகைய கேள்விக்கு எதிர்கேள்வியாக, 'யார் முக்தியை விரும்புகிறார்? யார் இந்தக் கேள்வியைக் கேட்கிறார்?' என்பதாகவோ அல்லது மௌனமாகவோதான் இருக்கும் அவரது பதில். இதுபற்றி நாகம்மா எச்சம்மாளிடம் கூறிய போது, ''நீ எத்தனை பாக்கியசாலி! பகவான் விரைவிலேயே உனக்கு அபயம் கொடுத்துள்ளார்,'' என்று எச்சம்மாள் கூறினார். அவர் கூறியதன் பொருளென்ன என்று நாகம்மா வினவிய போது ''இப்போதிருந்து உனக்குப் பிறப்பும் இறப்பும் இல்லை. பகவான் உன்னை ஏற்றுக் கொண்டு விட்டார். உனக்கு இனி பயமில்லை. அதுவே தான் முக்தி'' என்று விளக்கிக் கூறினார்.

பகவான் தன் முழு கவனத்தையும் நாகம்மாவின் மீது செலுத்தினார். ஒரு நல்ல மாணவியைப் போன்று அவரும் பகவானுடைய உபதேசமான ஆத்ம விசாரத்தில் மூழ்கினார். அவ்வப்போது அவரால் ஆழ்ந்த தியானத்தில் இருக்க முடிந்தது என்றாலும் இடையிடையே, அவரை எண்ணங்களும் திசை திருப்பின. ''குறிப்பாக, பகவான் முன் அமர்ந்து கண்களை மூடி தியானிக்கும் போது, இந்த எண்ணங்கள் என்னைச் சூழ்ந்து கொள்ளும். நான் கண்களைத் திறந்து பார்த்தால் பகவானுடைய கவனம் என் மீது பதிந்திருக்கும்,'' என்று கூறியதோடு ''எனது எண்ணங்களையெல்லாம் என்னிடமிருந்து பகவான் விரட்டினார்'' என்றும் தெரிவித்தார். நாகம்மா இயற்கையாகவே சிறந்த கவியாகவும் எழுத்தாளராகவும் இருந்தார். பகவான் தடைகள் ஏதும் பிறப்பிக்காத போதும் அந்த நாட்களில், பெண்கள், பகவானை அணுகி சகஜமாகப் பேசத் தயங்குவார்கள். கூட்டம் அதிகமாக இருக்கும் நாட்களில் அது மேலும் கடினமாக இருக்கும். அத்தகைய தினங்களில், தியானம் பற்றித் தனக்கு அவ்வப்போது எழும் சந்தேகங்களுக்கு விளக்கம் கோரி, நாகம்மா பகவானுக்கு ஒரு சீட்டு அனுப்பி வைப்பார். ''இந்தச் சந்தேகங்களையெல்லாம் நீங்கள் எதற்காக கவனிக்கிறீர்கள்? அவ்வாறு செய்வதால் நீங்களே அவற்றிற்கு சக்தி அளிக்கிறீர்கள். பதிலாக இதயத்தில் ஆழ்ந்து மூழ்குங்கள்'', என்று பகவான் அவரைக் கடிந்து கொள்வார். ''ஒவ்வொரு முறையும் என்னைப் பார்த்து என்னுடைய அக நோக்கை வலுப்படுத்தியபோது சுற்றி வளைக்காமல், நேரடியாக அதை நிலைப்படுத்தினார் பகவான். அது காய்ந்து போன நிலத்தில்

தண்ணீர் பாய்ந்து பூக்களை மலர்விப்பது போன்று இருந்தது. என்னுடைய ஆன்மீக வாழ்க்கை அத்தகையது'', என்று கவிதை நடையில் சூரி நாகம்மா கூறுவார்.

'அழிவற்ற நாடி', என்று யோக சாஸ்திரங்களில் விளக்கப்படுவதும் 'குண்டலினியை ஒத்தது', என்று வேறு சாஸ்திரங்கள் கூறுவதுமான 'அம்ருத நாடி' சம்பந்தப்பட்ட கீழ்க்காணும் நிகழ்ச்சியைச் சூரி நாகம்மாவே கூறியுள்ளார். "1942 ல், தமிழ் பண்டிதர் ஒருவர், 'ஆத்மானுபூதியோடு சம்பந்தப்பட்டது' என்று கருதப்படும் அம்ருத நாடி குறித்து பகவானுடன் நீண்ட விரிவான விவாதத்தில் ஈடுபட்டிருந்தார். பகவான் மிகுந்த ஆர்வத்தோடு விவாதத்தில் கலந்து கொண்டு, பண்டிதரின் கேள்விகளுக்குப் பதிலளித்து, அம்ருத நாடியின் செயல்பாடுகளை விரிவாக விளக்கினார். விவாதிக்கப்பட்ட விஷயம் குறித்து நாகம்மாவிற்கு எதுவும் தெரியாது. அதனால் தனக்கு எதுவும் புரியவில்லையே என்ற எண்ணத்தால் அவரது மனம் அமைதியின்றித் தவித்தது. பண்டிதர் சென்ற பிறகு பகவானை அணுகிய நாகம்மா அன்று விவாதிக்கப்பட்ட விஷயம் குறித்துக் கேட்க ஆரம்பித்தார். நாகம்மா வாக்கியத்தை முடிப்பதற்கு முன்னரே, "நீ எதற்காக இதைப் பற்றியெல்லாம் கவலைப்படுகிறாய்?'', என்று பகவான் கேட்ட போது, "பகவானே! நீங்கள் இந்த விஷயம் குறித்து நான்கு நாட்களாக விவாதித்துக் கொண்டிருக்கிறீர்கள். அதனால், அதைப் பற்றி, நானும் சிறிதாவது உங்களிடமிருந்து அறிந்து கொள்ள வேண்டும் என நினைத்தேன்'', என்று அவர் பதிலிறுத்தார். "அந்தப் பண்டிதர், 'சாஸ்திரங்களில் என்ன கூறப்பட்டிருக்கிறது?', என்று என்னிடம் கேட்டார். அதற்கேற்ற பதில்களை நானும் கூறிக் கொண்டிருந்தேன். நீங்கள் எதற்காக அதைப்



**ஸ்ரீ ரமணாச்ரமம் (1940–களில்)**

பற்றியெல்லாம் கவலைப்பட வேண்டும்? உங்களுக்குள்ளேயே திரும்பி 'நீங்கள் யார்?', என்று பார்த்தாலே போதும்'', என்று பகவான் கூறி, நாகம்மாவை கருணையோடுப் பார்த்தார் சிரித்தார். இரண்டு மூன்று நாட்களுக்குப் பிறகு, மீண்டும் அதே விஷயத்தைக் குறித்த சம்பாஷணை நடந்தது. இம்முறை பகவான், "அது வெறும் எண்ணம் - ஒரு அபிப்ராயம் தான்'', என்று கூறிய போது நாகம்மா குறுக்கிட்டு "அப்படியானால் அம்ருத நாடி பற்றிய எல்லாமே வெறும் கருத்துக்கள் மட்டும் தானா?'', என வினவினார். பகவான் அழுத்தந்திருத்தமாக "ஆமாம்! பின்னே வேறு என்ன? அது வெறும் எண்ணமல்லவா? உடம்பே ஒரு எண்ணம் எனும் போது அதுவும் ஒரு எண்ணமாகத் தானே இருக்க முடியும்?'', என்று கூறி நாகம்மாவை அன்போடு பார்த்தார். நாகம்மாவின் சந்தேகங்கள் எல்லாம் ஓய்ந்தன. இந்த நிகழ்ச்சி பற்றிக் கூறும் போது, 'ஆன்மீக விஷயங்களில் சந்தேகங்கள்

எழும் போது நமது பிறப்பிடமான இதயத்திற்குச் செல்வது மிகவும் முக்கியம்', என்பதை நாகம்மா தெரிவிக்க விரும்பினார்.

ஒவ்வொரு பக்தருக்கும் பிறவியிலேயே சிற்சில சிறப்புத் திறமைகள் இருக்கும் என்பதைப் புரிந்து கொண்டிருந்ததால், பகவான் அவர்களுக்கு ஆன்மீக வளர்ச்சியில் உதவும் போது அதை அனுசரித்தே செயல்படுவார். பிறவிக் குணம் ஒருவருடைய ஆன்மீக முன்னேற்றத்திற்குத் தடையில்லை — கணக்கற்ற எண்ணங்களே தடை. பிறவியிலேயே சூரி நாகம்மாவிற்கு இருந்தது, கவி பாடும் திறனும் எழுத்து வன்மையுமே. அதனால், அதை மனதில் கொண்டே பகவான் அவரை வழி நடத்தினார். பகவானைத் தனது குரு என நாகம்மா உணர்ந்து கொண்டபோது செய்யுட்களும் பாடல்களும் கவிதைகளும் அவரிடமிருந்து தானாகப் பெருக்கெடுத்து வந்தன. ஆரம்பத்தில் தனது படைப்புக்களை பகவானிடம் காட்டுவதற்கு நாகம்மா மிகவும் கூச்சப்பட்டதால் மற்றொரு தெலுங்குப் பெண்மணி, பகவானின் ஸந்நிதியில் அவற்றை இசைத்தார். பகவானும் பாடல்களை மிகவும் பாராட்டினார். தனது பாடல்களை பகவான் நல்ல முறையில் வரவேற்றார் என்பதை ஒரு தொண்டர் மூலம் அறிந்த பின்னர் மேலும் சிலவற்றை பகவான் முன் வைக்கத் துணிந்தார் நாகம்மா. அவற்றை வரவேற்கும் விதமாகப் புன்னகை பூத்த பகவான், "என்னிடம் பிரார்த்திப்பது போன்று நான்கு செய்யுட்கள் எழுதப்பட்டுள்ளன. இரண்டாவது செய்யுள், சற்று வேடிக்கையாக உள்ளது. நான் ஸ்கந்தாச்ரமத்தை விட்டு இங்கு வந்த பின், எனக்குத் தொண்டு புரியக் குரங்குகள் இருக்கவில்லை. அதை மனதில் கொண்டு 'குரங்கைப் போன்றுள்ள எனது மனதைத் தொண்டு செய்ய நீங்கள் ஏன் ஏற்றுக் கொள்ளக் கூடாது?. அதைக் கட்டிப் போடுங்கள். அல்லது தண்டித்துக் குறைகளை நீக்குங்கள். ஆனால் அது உங்களுக்குச் சேவை செய்கிறதா என்பதை மட்டும் கவனித்துக் கொள்ளுங்கள்', என நாகம்மா வேண்டிக் கொண்டிருக்கிறார். இதுவே அப்பாடலின் கருத்து. 'சிவானந்தலஹரி', என்ற ஸ்தோத்ரத்தில் ஆதிசங்கரரும் இதை ஒத்தக்கருத்தை வெளிப்படுத்தியுள்ளார். 'ஹே பரமேச்வரா! நீங்கள் ஒரு பிச்சைக்காரர். என் மனமாகிய குரங்கை ஒரு கழியில் கட்டி இழுத்துக்கொண்டு ஏன் பிச்சை எடுக்கச் செல்லக் கூடாது? அப்போது உங்களுக்குத் தாராளமாகப் பிச்சை கிடைக்கும்', என அதில் கூறப்பட்டுள்ளதாகத் தெரிவித்தார் பகவான். மேலும் தொடர்ந்து ஆச்ரமத்திற்கு, பெரிய தெலுங்குப் பண்டிதர் ஒருவர் வந்திருந்ததாகவும் அவர் பல தெலுங்கு பத்திரிகைகளில் வெளிவந்த நாகம்மாவின் ஆன்மீகக் கட்டுரைகள் பலவற்றைத் தான் படித்ததாகவும் தெரிவித்தது பற்றியும் கூறினார். பண்டிதரிடம், "பத்திரிக்கைகள், செய்தித்தாள்கள் இவற்றில் கட்டுரைகள் எழுதுவதன் மூலம் நாகம்மா பொது மக்களுக்கு ஆன்மீக அறிவைப் புகட்டி வருகிறார்" என பகவான் தெரிவித்திருக்கிறார். நாகம்மாவிற்கு பகவான் எத்துணை அற்புதமாக ஆதரவளித்துள்ளார்! ஒரு நாள் ஹாலில் 'தெலுங்கு கையெழுத்துப் பிரதிகளைக் கவனிப்பதற்கு யாருமில்லை' என ஒருவர் கூறியதைக் கேட்ட உடனே தெலுங்கு மொழியில் தேர்ச்சியுள்ள நாகம்மாவால் அதை எழுதித் தர முடியும், என ஆலோசனை அளித்தார் பகவான். 'பைண்ட்' செய்யப்பட்ட பெரிய நோட்டுப் புத்தகம் ஒன்று வரவழைக்கப்பட்ட போது, பகவானே அதை நாகம்மாவிடம் கொடுத்தார். அன்று முதல் தெலுங்கில் எழுதப்பட்டவை அனைத்திற்கும் அதிகாரபூர்வமான எழுத்தராகவும், படி எடுப்பவராகவும், பாதுகாவலராகவும் ஆனார் நாகம்மா.

காலப்போக்கில் பகவானுக்கு மிக நெருக்கமாக இருக்கும் பேறு பெற்ற நாகம்மா அவருக்கும் பகவானுக்குமிடையே நிகழும் சம்பாஷணைகள் அனைத்தையும் பதிவு செய்ய வேண்டுமென அவரது உறவினர்கள் முக்கியமாக அவரது தமையனார் D. S. சாஸ்திரி மற்றும் நண்பர்கள் ஆலோசனை வழங்கினர். நாகம்மா முதலில் தயங்கினாலும் இறுதியில் சம்மதம் தெரிவித்தார். ஆச்ரமத்திற்கு

ஒருமுறை வந்த அவரது சகோதரர் D. S. சாஸ்திரி பெரிய நோட்டுப் புத்தகத்தை அவருக்குப் பரிசாக அளித்து ஆச்ரமத்தில் பகவானைச் சுற்றி நிகழ்பவை அனைத்தையும் அதில் குறித்து வைத்துத் தனக்கு விவரமாகக் கடிதங்கள் எழுதுமாறு கூறிச் சென்றார். அந்த வலையில் விழுந்த நாகம்மா கடிதங்கள் எழுத ஆரம்பித்தார். நான்கு கடிதங்கள் எழுதிய பின், அவற்றை பகவானுக்குப் படித்துக் காட்ட வேண்டும் என்ற ஆசை எழுந்தது. அவற்றைப் பகவானும் வெகுவாகப் பாராட்டியதால் தொடர்ந்து கடிதங்களை எழுதியதோடு அவற்றை மீண்டும் நோட்டுப் புத்தகத்தில் எழுதி வைத்துப் பத்திரமாகப் பாதுகாத்து வந்தார். இக்கடிதங்கள் பின்னர் 'லெட்டர்ஸ் ஃப்ரம் ரமணாச்ரமம்' (ஸ்ரீரமணாச்ரமத்திலிருந்து கடிதங்கள்) என்ற பெயரில் புத்தகமாக வெளி வந்தன. பகவானை ஒரு மனிதராகவும், ஒப்பற்ற குருவாகவும் சித்திரிக்கப்பட்டுள்ள இப்புத்தகத்தைப் பக்தர்கள் தவறாமல் படிக்க வேண்டும். 'Letters from Sri Ramanasramam" என்ற இந்நூலின் முதல் பகுதியைத் தெலுங்கில் எழுதி முடித்து, இரண்டாம் பகுதியைத் துவங்கிய போது ஆச்ரம அலுவலக ஊழியர்களில் சிலர் நாகம்மாவிடம் எழுதுவதை நிறுத்துமாறு கூறியதோடு ஏற்கனவே எழுதியிருந்தவற்றையும் அவரிடமிருந்து வாங்கி நிர்வாகத்தினரிடம் ஒப்படைத்து விட்டனர். நாகம்மா மனமொடிந்து போனார் என்றாலும் நிர்வாகத்திற்குக் கட்டுப்பட வேண்டியிருந்தது. எஞ்சிய கையெழுத்துப் பிரதிகளை ஒப்படைக்குமுன் அவற்றை பகவான் முன் வைத்து கண்களில் நீர்மல்க, பகவான் தன்னிஷ்டம் போல் செய்து கொள்ளுமாறு கூறினார். பகவான் ராஜகோபாலய்யரை அழைத்து அவற்றை ஆச்ரம அலுவலகத்தில் சேர்த்து விடும்படி சொல்லியனுப்பினார். முருகனார், குஞ்சு ஸ்வாமி, விஸ்வநாத ஸ்வாமி போன்ற பக்தர்கள், நாகம்மா இனி தொடர்ந்து எழுதமாட்டாரே என்று வருந்தினர். எழுதுவதைத் தொடருமாறு நாகம்மாவை அவர்கள் உற்சாகப்படுத்தியபோதும், அவர் அதற்கு இசையவில்லை. ஒரு நாள் கடுமையாகத் தோன்றும் இத்தகையதொரு நிலைப்பாட்டை நிர்வாகத்தினர் மேற்கொண்டதற்கான காரணத்தை நாகம்மாவிடம் விளக்கிக் கூறுகையில் குஞ்சு ஸ்வாமி, "நாகம்மா! நீங்கள் எழுதுவதை நிறுத்தும்படி கூற, ஆச்ரம அதிகாரிகளுக்குப் போதிய அளவு, தக்க காரணங்கள் உள்ளன என்பதை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். சில காலம் முன் பால் பிரண்டன், முனகால வேங்கடராமையா இவர்களும் மற்றும் சிலரும் எழுதியவற்றை வேறு சிலர் நகல் எடுத்துத் தாங்கள் எழுதியதாகக் கூறி, வெளியிட்டுப் பணம் சம்பாதித்தனர். ஆனால் உங்களுக்கு அத்தகைய பணம் சம்பாதிக்கும் நோக்கம் எதுவுமில்லையே? அவ்வாறிருக்கும் போது நீங்கள் ஏன் தயங்க வேண்டும்? தாற்காலிகமாக அது தடை செய்யப்பட்டாலும் உங்களது கடிதங்கள், வருங்கால சந்ததியினருக்கு, விலை மதிப்பற்ற பொக்கிஷமாக விளங்கும். நற்பணிகளை மேற்கொள்ளும் போது இடையூறுகள் வருவது ஒன்றும் புதிதல்ல. இந்தத் தடைகள் காரணமாக மட்டும் நீங்கள் எழுதுவதை நிறுத்தக் கூடாது", என்று கூறினார்.

ஆனால் நாகம்மாவிற்குத் திருப்தி ஏற்படவில்லை. சிந்தா தீக்ஷிதுலு, சீதாராம சாஸ்திரி என்ற இரு புகழ்பெற்ற தெலுங்குப் பண்டிதர்களையும் கலந்தாலோசித்தார் நாகம்மா. குஞ்சு ஸ்வாமியைப் போன்றே அவர்களும், தொடர்ந்து எழுத அவரை உற்சாகப்படுத்தினர். பகவானின் வாக்குகளின் உள்ளர்த்தத்தைப் புரிந்து கொள்ளும் சிறப்பான சக்தி நாகம்மாவிடம் இயற்கையாகவே உள்ளது என்றும், இது சாதாரணமாக எல்லா பக்தர்களிடமும் காணப்படாதது என்றும், அதனால், ஆன்மீகத்தில் ஈடுபாடுடைய மக்களோடு இந்த அறிவைப் பகிர்ந்து கொள்வது அவரது கடமை என்றும் சீதாராம சாஸ்திரி சுட்டிக் காட்டினார். அவர் உரைத்த வார்த்தைகளால் நம்பிக்கையும், ஊக்கமும் பெற்ற சூரி நாகம்மா மீண்டும் எழுதத் துவங்கினார். இடையிடையே 'நீங்கள் இன்னும் எழுதிக் கொண்டிருக்கிறீர்களா?' என நிர்வாகத்தினர் கேட்ட போதெல்லாம் 'இல்லை' என பதில் கூறி அனுப்புவார். இச்செயல் அவரது மனதில் பெரியதொரு சுமையாக இருந்தது. குற்ற உணர்வு



**ஸ்ரீ பகவான் சூரி நாகம்மாவின் தெலுங்கு கட்டுரையைப் படிக்கிறார்**

மேலிடவே ஒருநாள் பகவானிடம் அனைத்தையும் கூறி தான் செய்யும் தவறான காரியத்தை ஒப்புக் கொள்ளச் சென்ற போது, பகவான் ஹாலில், சில பக்தர்களுக்கு மத்தியில் அமர்ந்திருந்ததைக் கண்டார். தனது குழந்தைப் பருவத்தில் மதுரையில் நடந்த ஒரு நிகழ்வைப் பற்றி பகவான் கூறிக் கொண்டிருந்தார். தான் வீட்டை விட்டு வெளியே வந்த போது தனது அத்தையிடம் கூறிய பொய்யைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார். இந்த கட்டத்தில் நாகம்மா எங்கு இருக்கிறார் என்று தேடி, தன் கவனத்தை அவரிடம் முழுமையாகத் திருப்பி, “நாமே பொய் பேசுவதாக அதைச் சொல்ல முடியாது. ஏதோ ஒரு சக்தி நம்மை அவ்வாறு செய்ய வைக்கிறது. ஆதி சங்கரரும் கூடப் பொய் சொன்னதால்தான் ஸந்நியாஸம் பெற முடிந்தது”, என்று பகவான் கூறினார். தனது பணியைத் தொடர்வதில் நாகம்மாவிற்கு இருந்த தயக்கம் மறைந்தது. அதன் விளைவாக ‘Letters from Sri Ramanasramam என்ற நூலின் அடுத்தடுத்த பகுதிகள் தெலுங்கில் வெளிவந்தன. தெலுங்கிலிருந்த இந்தப் பகுதிகளை அவரது தமையனார் D. S. சாஸ்திரி ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து, ஒரே புத்தகமாகப் பிரசுரித்தார்.

பகவானுடைய இறுதி ஆண்டுகளில், தெலுங்குப் புத்தாண்டான யுகாதிக்கு முந்தைய தினம் மாலையில் பகவானுக்குப் புதிய கௌபீனம் ஒன்றை அளிப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார் நாகம்மா. 1950ஆம் ஆண்டு, மார்ச் மாதம் வந்த யுகாதி பகவானுக்குக் கடைசி யுகாதியாக இருந்தது. மிகவும் பலவீனமாக இருந்ததுடன் மிகுந்த வேதனையையும் அனுபவித்துக் கொண்டிருந்த அவர் வழக்கமாகத் தான் அளிப்பது போல், கௌபீனத்தைக் காணிக்கையாகக் கொடுத்தால் ஏற்பாரா?, என்ற சந்தேகத்துடனேயே நாகம்மா அன்று சென்றார். பகவான் அதை ஏற்றுக் கொண்டதுடன் மறுதினம் காலையில் அணிந்து கொள்ளும் பொருட்டு அதைத் தனியாக வைக்கும்படியும் தொண்டரிடம் கூறினார். மறுநாள் காலையில் நாகம்மா பகவானைக் காணச் சென்ற போது, “இன்று யுகாதியா?

விக்ருதி வருடமா?", என்று வினவினார். பகவானுக்கும் அவருக்குமிடையே நிகழ்ந்த கடைசி உரையாடல் இதுதான். 1950-ம் ஆண்டு ஏப்ரல் பதினான்காம் தேதி பகவானின் மஹாஸமாதி தினத்தன்று நாகம்மா கடைசி தரிசனத்திற்காக மற்ற பக்தர்களைப் போன்று வரிசையில் நின்றார். தரிசிக்க அவரது முறை வந்த சமயத்தில் பகவான் கண்களை மூடியவாறிருந்தார். அவர் தனக்கு ஆசி வழங்க வேண்டுமென நாகம்மா ஏக்கத்துடன் இருந்ததால் கதறி அழுதுவிட்டார். பகவான் கண்ணைத் திறந்து நோக்கிய போது, "தயவு செய்து என்னைப் போக அனுமதியுங்கள். இந்த உடம்பு வேதனைப் பட்டுக் கொண்டிருக்கிறது", என்று அவர் கெஞ்சுவது போல் தோன்றியது. மனச்சுமையோடு தாங்கமுடியாமல் அழுது கொண்டு நாகம்மா சம்மதித்தார். பகவான் அவரைக் கருணையோடு நோக்கிப் புன்னகை புரிந்தார். பகவானுடைய ஸமாதிக்குப்பின் நாகம்மா தனது கிராமத்திற்குத் திரும்பிவிட்டார்.

1980-ல் ஆச்ரமத்தில் தங்கித் தனது நினைவுகளை எழுத்தில் வடிக்கும் விதமாக, அவரை மீண்டும் அழைத்து வரும் பேறு எனக்குக் கிட்டியது. நாகம்மா தெலுங்கில் எழுதியவற்றைப் பின்னர் அவரது சகோதரர், 'My Life at Ramanasramam' என்ற பெயரில் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். நாகம்மா நோய்வாய்ப்பட்ட போது அவரது உறவினர்கள் அவரை அழைத்துச் சென்று பின்னர் பெங்களூருவில் இருந்த ஒரு மருத்துவமனையில் சேர்த்தார்கள். பக்தர்களுள் மாணிக்கமாகத் திகழ்ந்த அந்த மாதரசியை அருகிலிருந்து கவனித்துக் கொள்ள என்னால் பெங்களூருவுக்குச் செல்ல இயலவில்லை. அதனால், எனது நெருங்கிய நண்பர் A. R நடராஜனிடம் அந்தப் பொறுப்பை அளித்திருந்தேன். அவர் அதை நிறைவாகச் செய்தார் என்று கூறத் தேவையில்லை. பெங்களூருவில் சூரி நாகம்மா இறைவனடி சேர்ந்த போது அவரது இறுதிச் சடங்குகளில் ரமணாச்ரமத்தின் பிரதிநிதியாக A. R. நடராஜனே கலந்து கொள்ள வேண்டுமென நான் விண்ணப்பித்துக் கொண்டபடி அவரும் நிறைவேற்றி வைத்தார். பகவானின் உத்தம பக்தையான நாகம்மாவை மயானத்திற்குத் தாங்கிச் சென்றவர்களில் அவரும் ஒருவர்.

நாகம்மாவின் புத்தகப் படைப்புக்களுக்காக, உலகிலுள்ள அனைத்து ஸாதகர்களுமே அவருக்கு நன்றிக்கடன்பட்டுள்ளனர். பசு லக்ஷ்மியின் இறுதி நேரத்தில் அவளைக் கவனித்துக் கொண்ட நாகம்மாவுக்கு, தனிப்பட்ட முறையில் என்றென்றும் நான் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன். விலங்கினத்தில், பகவானுடைய பிரத்தியேகமான அன்பிற்குப் பாத்திரமானது பசு லக்ஷ்மி என்றால் மனித குலத்தில் விசேஷமாக பகவானின் அன்பிற்குப் பாத்திரமானவர் நாகம்மாவோ என எண்ணத் தோன்றுகிறது. அதனால், நாகம்மாவைப் பற்றிப் பகிர்ந்து கொள்ளும் இத்தருணத்தில் பசு லக்ஷ்மியைப் பற்றியும் கூறாமல் இருக்க முடியாது. விலங்குகளின் உருவிலிருந்த



**பசு லக்ஷ்மியின் ஸமாதி**

அனைத்து ஜீவன்களிடமும் பகவான் ஒரே மாதிரியாக மென்மையோடு பழகி அன்பு, அருள் இவற்றைப் பொழிந்தார் என்றாலும், மனித குலத்திற்குள் அடங்காத பசு லக்ஷ்மி, பகவானது அருளை முழுமையாகப் பெற்று பூரண சமநிலையில் நின்று முக்தியடைந்தாள் என்றால் அது மிகையாகாது. பசு லக்ஷ்மி பாக்கியசாலியான ஒரு புண்யாத்மா என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை. ஏனெனில் அவளுடன் ஒன்றிவிட்ட பகவான் அவளது இறுதி நேரத்தில், தொடர்ந்து அவளைத் தொட்டு வருடியபடி இருந்து முக்தியளித்துள்ளார். பல ஆண்டுகளுக்கு முன்பு ஸ்கந்தாச்ரமத்தில் இவ்வாறு பகவான் நடந்து கொண்டது தனது தாய் அழகம்மாளுக்காக!



**சூரி நாகம்மா ஸ்ரீ பகவானிடம் சரணடைந்த ஆரம்பகால புகைப்படம்**

லக்ஷ்மி சம்பந்தமான இந்நிகழ்ச்சி குறித்து சூரி நாகம்மா எழுதி வைத்துள்ளார் : “லக்ஷ்மியின் மாட்டுத் தொழுவத்திற்கு அவளுடைய இறுதி நாளில் வந்தபோது பகவான் நேராக அவளிடம் சென்று அருகே வைக்கோலின் மீது அமர்ந்து கொண்டார். பின், அவளுடைய தலையைத் தன்னிரு கைகளிலும் தாங்கியபடி மென்மையாகத் தூக்கித் தனது தொடைகள் மீது வைத்துக் கொண்டார். பின்னர், மிருதுவாகவும் அன்போடும் ஒரு கையால் முகத்தைத் தடவி தொடர்ந்து கழுத்தைத் தடவிக் கொடுத்தார். அடுத்தபடி தனது இடது கையை அவள் தலைமீது வைத்து வலது கைவிரல்களால் கழுத்திலிருந்து இதயம் வரை அழுத்தத் துவங்கினார். லக்ஷ்மி உலக பந்தங்களிலிருந்தும் வேதனைகளிலிருந்தும் விடுபட்டு ஸமாதியில் இருப்பது போன்று அமைதியாக இருந்தாள். லக்ஷ்மி உடலை விட்டுவிட்டாள் என்ற செய்தியை நாகம்மா பகவானிடம் தெரிவித்த போது அவர் மாட்டுத் தொழுவத்திற்கு வந்து அவளுடைய தலையை இரு கைகளிலும் தூக்கிப் பிடித்தவாறு “லக்ஷ்மி! லக்ஷ்மி!” என அன்போடு அழைத்த பின், அங்கு கூடியிருந்த பக்தர்களைப் பார்த்தவாறு “இவளால்தான் நமது குடும்பம் இந்த அளவுக்குப் பெருகியுள்ளது” என்றார். லக்ஷ்மி, 1926-ல் கன்றுக் குட்டியாக இருந்த போது பகவானிடம் வந்தாள் என்பதாலேயே அவர் அம்மாதிரி கூறினார். லக்ஷ்மி எனப் பெயர் சூட்டியதும் பகவானே. அவள் பகவானிடம் மிகுந்த பாசத்துடன் இருந்தாள். அவள் வந்த பிறகுதான் மாட்டுத் தொழுவம் கட்டப்பட்டது. ஆச்ரமமும் வளர்ச்சி அடைந்தது. கடைசி நாளன்று லக்ஷ்மியைப் பார்த்தவாறே உணர்ச்சி வசப்பட்ட பகவான், அங்கிருந்தவர்களிடம், “வலது காது தூக்கி நிற்பது தெரிகிறதா?”, எனக் கேட்டார். அவர் அவ்வாறு சுட்டிக்காட்டிச் சொல்லக் காரணம் ‘காசியில் இறப்பவர்களின் வலது காதில், பரமேச்வரன் மந்திரம் ஓதி அவர்களுக்கு முக்தியளிக்கிறான்’, என்பதால் தான். லக்ஷ்மி நிச்சயமாக முக்தியடைந்து விட்டாள் என்பதே அவர் கூறியதன் பொருள். பின், பகவானது வழிகாட்டுதல் படியும் நேரடி மேற்பார்வையிலும் புராதன நூலான ‘திருமந்திரத்தில்’ கொடுக்கப்பட்ட விதி முறைகளின் படியுமே லக்ஷ்மியின் ஸமாதி எழுப்பப்பட்டது. முக்தியடைந்தவர்களின் உடல் எவ்வாறு அடக்கம் செய்யப்படவேண்டுமென்ற விவரம் அந்நூலில் கொடுக்கப்பட்டுள்ளது. லக்ஷ்மி முக்தியடைந்ததை உறுதி செய்யும் விதமாக பகவானே ஒரு வெண்பா எழுதியுள்ளார். அதில் ‘குறிப்பிட்ட ஒரு சொல் மரணத்தைப் பற்றிக் கூறுவதற்காக எழுதப்பட்டதா?’, என தேவராஜ

முதலியார் பகவானை வினவிய போது அவர் ‘‘அது அவளது முக்தியைப் பற்றித் தெரிவிக்கிறது’’ என உறுதிபட மொழிந்தார்.

இப்போது, சூரி நாகம்மாவும், பசு லக்ஷ்மியும் பகவான் ரமணருடன் இரண்டறக் கலந்து விட்டனர். ஒரு முறை ‘‘பகவானே! உங்கள் அருள் வேண்டும்’’ என ஒருவர் கேட்ட போது ‘‘இருப்பது அருள் ஒன்றே’’, என்று பகவான் அருளினார்.



# 72 ஆர்தர் ஆஸ்போர்ன்



என் தந்தை என்னைப் பற்றிக் கூறும் போது "கணேசன் யாரைச் சந்தித்தாலும் உடனே அவர்களை ஸாது என்றோ ஞானி என்றோ சித்த புருஷர் என்றோ கூறி விடுவான்" என்று சொல்வது வழக்கம். இது சற்று மிகைப்படுத்திக் கூறியதுதான். நாம் பகவானைப் போல் ஞானியாக இருந்தால் எல்லோரையும் ஞானியாகவோ, ஞானமாகவோ பார்ப்போம். நாம் அவரைப் போன்றில்லாததால் எல்லோரிடமும் உள்ள நல்லவற்றை மட்டும் காண வேண்டும். நம்மில் பலராலும் அதைக் கூடச் செய்ய இயலவில்லை. ஆனால் ஒருவரிடம் மஹானின் பண்புகள் சந்தேகத்துக்கு இடமின்றிக் காணப்பட்டால் அதை நாம் அங்கீகரிப்பது அவசியமில்லையா? ஆர்தர் ஆஸ்போர்ன், முருகனார், முனகால வேங்கடராமையா, சாட்விக், சூரி நாகம்மா போன்றவர்களிடமும் மற்றும் பல பக்தர்களிடமும் நான் அத்தகைய நற்பண்புகளைக் கண்டேன் என்பது மட்டுமல்லாமல் அவர்கள் என்னைப் பகவானிடம் மேலும் நெருக்கமாகக் கொண்டு வந்ததையும் உணர்ந்தேன். இவ்வாறு நான் கூறும் போது என் தந்தை அனைவரிடமும் மரியாதையோடு நடந்து கொண்டதுடன் வாழ்வில் யாருக்கும் அஞ்சியதில்லை, பகவான் எப்போதும் தன்னுடனும், சுற்றிலும் இருந்து கொண்டும் தன்னைப் பாதுகாப்பதையும் அவர் உணர்ந்திருந்தார், என்பதையும் கூற வேண்டும்.

1945-ம் ஆண்டில்தான் ஆர்தர் ஆஸ்போர்ன் ரமண மஹர்ஷியிடம் வந்தார். சிறு இடைவெளிகளோடு அவர் தனது குருவுடன் ஐந்து ஆண்டுகள் மட்டுமே தங்கியிருந்தார். ஆனாலும் அவை அவருடைய பக்தியும், குருவின் அருளும் நிறைந்தவையாக இருந்தன. ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸருக்கு ஸ்வாமி விவேகானந்தர் எவ்வாறோ, அவ்வாறே பகவானுக்கு ஆஸ்போர்ன் இருந்தார் என்று எனக்குத் தோன்றியது. பகவான் அளித்த ஆன்மீகச் செய்திகள் உலகனைத்திற்குமானது என்றாலும் அவரது நேரடி உபதேசமான ஆத்ம விசாரத்தை எடுத்துச் சென்று உலகெங்கும் பரப்பும் பொருட்டு பகவானின் ஆங்கிலக் குரலாக மேலை நாட்டுக் குரலாக — ஏன்? நவீன காலத்தின் குரலாகவும் ஒலித்தது ஆஸ்போர்னினுடையதே. இதில் அவர் மிகவும் முக்கியமான பங்காற்றியவர். இனி பகவான் அவரை எவ்வாறு தேர்ந்தெடுத்தார் என்பதையும் நேரடி உபதேசமான ஆத்ம விசாரத்தில் எப்படி விசேஷமாகப் பக்குவமடையச் செய்தார் என்பதையும் நாம் பகிர்ந்து கொள்வோம்.

பகவான் தான் வாழ்ந்த காலத்தில் தனது பார்வையாலும் ஸாந்நித்தியத்தாலும் மற்றும் பல வழிகளிலும் ஆஸ்போர்னை ஆன்மீகத்தில் பண்படச் செய்தார். பகவான் தன் உடலை நீத்த பிறகு, அவருடைய கனவில் தோன்றி இந்தப் பணியைத் தொடருமாறு செய்தார். ஆரம்பத்திலிருந்தே தனது நேரடி உபதேசங்களைப் பரப்பும் ஒரே நோக்கத்துடன் தனக்கே உரிய மிக நுட்பமானதும், ஆன்மீகமானதும், எளிமையும் இயற்கையுமான விதத்தில் ஆஸ்போர்னை தன்னிடம் ஈர்த்துக் கொண்டார். ஆறு ஆண்டுகள் ஆஸ்போர்னுடன் சேர்ந்து பணியாற்றும் பேறு எனக்குக் கிட்டியது. நான் அவரிடம் கற்றுக் கொண்ட விஷயங்கள் எத்தனை எத்தனையோ!

பகவானுடைய நேரடி உபதேசத்தின் மேன்மையை நிலை நிறுத்த வேண்டிய தனது பொறுப்பை ஆர்தர் ஆஸ்போர்ன் தனது வாழ்க்கையின் மூலமும் தெளிவான கட்டுரைகள் மூலமும் சிறப்பாகச் செய்து வந்தார். தெளிவான அறிவு, உள்ளுணர்வு, ஆங்கில மொழிப்புலமை இவை மூன்றும்

அவரிடம் இணைந்திருந்ததால் தனது அனுபவங்களை எடுத்துரைப்பதில் அவர் வல்லவராக இருந்தார். ஆஸ்போர்னின் புத்தகங்களை — அதிலும் 'Ramana Maharshi and the path of Self Knowledge' என்னும் ஆங்கிலப் புத்தகத்தைப் படித்தவர்கள் அவர் எவ்வளவு எளிமையாகவும் தெளிவாகவும் எழுதக் கூடிய எழுத்தாளர் என்பதை அறிந்து கொள்ள முடியும். மற்றும் பொருத்தமான சொற்கள் அகப்படாமல் தவிக்கக் கூடியதும், குழம்பக் கூடியதுமான இடங்களை அவர் எத்துணை சரளமாகக் கையாளுகிறார் என்பதையும் காண முடியும். பலர் பகவானுடைய உபதேசங்களைப் பற்றி அற்புதமாக எழுதியுள்ளனர் என்றாலும் ஆங்கிலத்தில் எழுதியவர்களில் - ஏன்?, அவர் மிகவும் பாராட்டிய பால் பிரண்டனை விடவும் கூடச் சிறப்பாக எழுதித் தனக்கென தனியிடம் அமைத்துக் கொண்டவர் ஆஸ்போர்ன். அவர் பகவானிடம் கொண்ட பக்தி பூரணமானது. தனது பலதரப்பட்ட திறமைகளையும், வாழ்க்கை முழுவதையுமே பகவானுக்கு அர்ப்பணித்த போது ஒளிவு மறைவின்றியும், தன்னைப் பற்றிய சிந்தனை ஏதுமின்றியும் அளித்தார்.

நான் 1960-ல் நிரந்தரமாக அருணாசலத்தில் தங்க வந்து விட்டேன். மூன்று மாதங்கள் உடல் நலமற்று இருந்து பின், பூரண குணமடைந்தபோது ரமணாச்ரமத்திற்கு என்னை முழுமையாக அர்ப்பணித்து விடுவதென்ற தீர்மானத்திற்கு வந்தேன். 1960-ல் ஆச்ரமத்தில் சுமார் பத்து நபர்கள்தான் தங்கியிருந்தனர். நான் அங்கு சென்ற போது ஆச்ரம நுழைவாயிலின் அருகேயுள்ள இலுப்பை மரத்தடியில் சிரித்தபடி என்னை வரவேற்கக் கைகளை விரித்தவாறு நின்று கொண்டிருந்தார் ஆஸ்போர்ன். பகவானே எனது முடிவை ஏற்றுக் கொண்டு பாராட்டும் வகையாகச் சிரித்தபடி என்னை வரவேற்பது போன்று எனக்குத் தோன்றியது. அவரது அந்த ஒரே பார்வையும் சிரிப்பும் ஆன்மீக வாழ்க்கைக்கு என்னை முழுமையாக அர்ப்பணிக்க வைத்து, என் வாழ்க்கையை மலரச் செய்தது. "கணேசன்! உன்னை அன்புடன் வரவேற்கிறேன். உன்னுடைய வீட்டிற்கு நீ திரும்பி வருவாய் என்று எங்களெல்லோருக்கும் தெரியும். அருணாசலமே நமது வீடு. பகவானே நம் தாய். அருணாசலத்திடமும் பகவானிடமும் எனக்கு ஆத்மானுபூதியைத் தாருங்கள் என்ற ஒரே ஒரு வரத்தை மட்டுமே கேட்க வேண்டும். இம்மைக்குரிய விஷயங்கள் எதையும் கேட்காதே. கேட்டால் அவர் நிச்சயமாகக் கேட்பதைக் கொடுப்பார். அவர் வாரி வழங்கும் வள்ளல். நீ எதைக் கேட்டாலும் - மனைவி, வீடு, சொத்து, சக்தி, பதவி இவையனைத்தையும் உனக்குத் தருவார் என்பது மட்டுமின்றி மிகவும் அதிகமாகவே கொடுப்பார். ஆனால் உன்னை அருணாசலத்திலிருந்து வெளியே அனுப்பிவிடுவார். நீ ஆத்ம ஸாக்ஷாத்காரத்தைத் தவிர வேறெதையும் கேட்கவில்லை என்றால் உன்னை இங்கேயே வைத்துக்கொண்டு தன்னையே உனக்குக் கொடுப்பார். அருணாசலமே ஆத்மானுபூதி — ஞானத்தின் சிகரம். முழுமனதுடன் வீட்டிற்கு உன்னை வரவேற்கிறேன். கணேசன்! ஆனந்தமாக இரு," என்று கூறி ஆஸ்போர்ன் வரவேற்றார். இச்சொற்களைக் கூறியது ஒரு சாதாரண மனிதரோ மேலைநாட்டவரோ அறிவாளியோ மட்டுமன்று. அருணாசலத்தைத் தன் இதயத்தில் தாங்கியவாறு அங்கிருந்து அசையாமல் நிரந்தரமாகத் தங்கிவிட்ட அவர், உரைத்தவை ஸத்தியமான வார்த்தைகள். பொன்னான இந்த வாக்கியங்களை நாம் இதயத்தில் பாதுகாக்க வேண்டும். மஹாத்மாக்களின் சொற்கள் எப்போதும் எல்லோருக்கும் எந்நிலையிலும் ஸத்தியமே.

யார் இந்த ஆஸ்போர்ன்? 1906-ம் ஆண்டு லண்டனில் பிறந்தவர். இவருடைய தந்தை பள்ளித் தலைமையாசிரியராக இருந்தார். தாய், ஒரு பக்தை, எளிமையானவள் என்பதோடு, கவிதைகளிலும், தோட்டக் கலையிலும் மிகுந்த ஈடுபாடுடையவர். இறுதியில் கூறப்பட்ட இரு பண்புகளும் ஆஸ்போர்னுக்கு தாயிடமிருந்து கிடைத்த சொத்து. வாழ்நாள் முழுவதையுமே தோட்டப் பராமரிப்பிலும் விவசாயத்திலும் கழிக்க விரும்பினார் ஆஸ்போர்ன். என்றபோதும், அவருடைய

தந்தை அவரை ஆக்ஸ்போர்டு கலாசாலையில் சேர்த்தார். பத்து தங்கப் பதக்கங்களுடன் சிறப்பாகத் தேர்வு பெற்று அவர் வெளியே வந்தார். தந்தையின் விருப்பத்தைப் பூர்த்தி செய்தாரென்றாலும் வாழ்நாள் முழுவதுமே கவிதையிலும் தோட்டக் கலையிலும் அவருக்கிருந்த ஈடுபாடு சிறிதும் குறையவில்லை. பகவானுடைய ஸாந்நித்தியத்தில் பெற்றவை தவிர அவர் பெற்ற எல்லா ஆன்மீக அனுபவங்களும் அவருக்குத் தோட்டத்திலேயேதான் கிடைத்தன. குழந்தைப் பிராயத்திலிருந்தே 'வாழ்க்கையின் பொருள் என்ன?' என்ற மிகவும் ஆழமான, உயர்ந்த லட்சியத்தை ஆராய்ந்தறிய முற்பட்டார். மிகச் சிறிய பிராயத்தில் மைதானத்தில் விளையாடிக் கொண்டிருக்கும் போதே உலகாயதமான வாழ்க்கை அர்த்தமற்றது எனத் தனக்குத் தோன்றியதாக என்னிடம் பகிர்ந்து கொண்டார். தன்னுடைய இந்த உணர்வை வேறு யாரிடமும் பகிர்ந்து கொள்ள அப்போது அவரால் முடியவில்லை. 'யார் தேடுகிறானோ, அவன் கண்டு கொள்வான்' என்ற இயேசுநாதரின் வாக்குகள் மட்டுமே அவருக்கு ஆதரவளித்தன. இதுவே வாழ்நாள் முழுவதும் உண்மையைத் தேடும் ஒரு ஸாதகராகத் தன்னை மாற்றியதென ஆஸ்போர்ன் என்னிடம் கூறியிருக்கிறார். அந்தக் காலகட்டத்தில் 'ரெனே கெனொ' (Rene Guenon) என்ற ஃப்ரான்ஸ் நாட்டு தத்துவ ஞானியின் கட்டுரைகளைக் அவர் படிக்க நேர்ந்தது. 'இருப்பது ஒரே ஒரு வஸ்துவே' என்ற அவருடைய போதனையைப் படித்த மாத்திரத்தில் இந்த உபதேசமே உண்மையானது என்று தோன்றவே, ஆஸ்போர்ன் புளகாங்கிதமடைந்தார். உலக வாழ்க்கைக்கும் பொருள் உள்ளதென்பதை உணர்ந்து கொண்டார். 'உலக வாழ்க்கை பயனற்றது' என்று இதுவரை அவர் கொண்டிருந்த எண்ணத்தால் விளைந்த அமைதியின்மையும் அதிருப்தியும் தானாகவே மறைந்தன. "இருப்பது ஒன்றே ஒன்றுதான். வேறு எதுவும் இல்லை எனக் கூறினால், நானும் அந்த வஸ்துவாகத்தான் இருக்க முடியும். அப்படியென்றால் ஒருவருடைய உண்மை இருப்பைப் பற்றி உணர வேண்டுமானால் தானும் அந்தப் பூரணப் பொருளும் ஒன்றே என்பதை உணர்ந்தாக வேண்டும் என்பது தெளிவாயிற்று. இதுவே என் ஆன்மீகத் தேடலின் ஆரம்பமாக இருந்தது. அதிலிருந்து நான் ஒரு போதும் திசை திரும்பவில்லை. அதைக் கைவிடவும் இல்லை," என்று அப்போது பகவானைப் பற்றி எதுவும் அறிந்திராத போதும் தனது நிலை இவ்வாறாக இருந்ததென ஆஸ்போர்ன் என்னிடம் தெரிவித்தார்.

இதன் பின்னர் லூஸியா என்ற பெண்ணைச் சந்தித்துக் காதலித்து மணந்து கொண்டார். அந்தப் பெண்ணும் ஸத்தியத்தைத் தேடுவதில் முனைந்திருந்ததால் வாழ்க்கையில் இருவருடைய லக்ஷ்யமும் ஒன்றாகவே அமைந்து விட்டது. ரெனே கெனொ மற்றொரு குருவிடம் அவர்களை அனுப்பி வைத்தார். அவர் இவர்களுக்கு மந்திர ஜப ஸாதனையைத் தீவிரமாகச் செய்யுமாறு உபதேசித்தார். ஆஸ்போர்ன் தம்பதியும் தீவிர கவனத்துடன் குருவின் உபதேசத்தைக் கடைபிடித்தனர். ஸாதகராக இருந்ததுடன் கூர்மையான புத்தியுடைய அறிவாளியாகவும் இருந்ததால் அந்தச் சமயத்தில் ஆஸ்போர்ன் சூஃபிஸம், பௌத்தம், கிறித்துவம், வேதாந்தம் இவற்றின் கொள்கைகளைக் கற்றதோடுகூட அப்பியாஸமும் செய்து வந்தார். அதன் பயனாக அவற்றில் கூறப்பட்டிருந்த பூடகமான விஷயங்களில் ஆழ்ந்த அறிவைப் பெற்றார். இவையனைத்தும் அவரை இறுதி கட்டத்திற்கு மிகச் சிறப்பாகத் தயார் செய்தன. பின்னர், தாய்லாந்தில் பாங்காக் பல்கலைக் கழகத்தில் வேலை ஒன்றை ஏற்று தன் மனைவி குழந்தைகளையும் அங்கு அழைத்துச் சென்றார். எங்கிருந்தாலும் ரெனே கெனொ குழுவில் அங்கத்தினர்களாக இருந்தவர்களுடன் எப்போதும் தொடர்பு வைத்துக் கொண்டிருந்தார். அந்த அங்கத்தினர்களில் ஒருவரான டேவிட் மெக்ஐவெர் ஆஸ்போர்ன் தம்பதியினருக்கு ரமண மஹர்ஷியின் புகைப்படம் ஒன்றையும் பகவானுடைய இரு புத்தகங்களையும் அனுப்பியிருந்தார். ரமண மஹர்ஷி ஒருவருக்கும் தீக்ஷையளிப்பதில்லை என்பதால் அவரைக் குரு எனக் கருத வேண்டாம் என்றும் யாரையும் அவர் சீடராக ஏற்பதில்லை என்றும் எச்சரித்திருந்தார்



டேவிட். ஆனால் பகவானின் படத்தால் வசீகரிக்கப்பட்ட ஆஸ்போர்னும், லூஸியாவும் இந்தியாவிற்கு வந்து ரமண மஹர்ஷியைச் சந்திக்க விரும்பினர்.

கோடை வெப்பம் மிக அதிகமாக இருந்ததால் முதலில் காஷ்மீர் சென்று அங்கு டேவிட் மெக்ஐவெரைச் சந்தித்தனர். அவருக்கு ரமணாச்ரமத்திற்கு எதிரில் சொந்த வீடு ஒன்று இருந்தது. காஷ்மீரில் சில வாரங்கள் தங்கிய பின் ஆஸ்போர்ன், பாங்காக் திரும்பிச் செல்ல வேண்டியிருந்தது. அதிருஷ்டவசமாக ஆஸ்போர்னின் மனைவியையும், குழந்தைகளையும் திருவண்ணாமலைக்கு வருமாறு அழைத்து அங்கு கூட்டிச் சென்றார் டேவிட். ஆஸ்போர்ன், பாங்காக் சென்ற உடனே இரண்டாவது உலக மஹாயுத்தம் தொடங்கியதால் ஜப்பானியர்கள் அவரைக் கைது செய்து சிறை செய்தனர். மூன்றரை ஆண்டுகள் அவர் சிறையில் கழிக்க வேண்டியதாயிற்று. அச்சமயத்தில் அவரிடமிருந்த பகவானுடைய படமும், இரண்டு புத்தகங்களும் மட்டுமே அவருக்கு ஆறுதலளித்தன. பல்கலைக்கழக வளாகத்திற்கு ஜப்பானியர் வந்து ஆஸ்போர்னைக் கைது செய்ய முற்பட்ட போது ஏதோ ஒரு உந்துதல் காரணமாக அவற்றைத் தன்னோடு எடுத்துச் சென்றார். சிறைச் சாலையில் இருந்த போதும், ஆஸ்போர்ன் அழகான தோட்டம் ஒன்றை அமைத்து அதைப் பராமரிக்கவும் செய்தார். அவரது கம்பீரமான தோற்றமும் பேச்சும் பலரையும் அவரிடம் ஈர்த்தன. அம்மாதிரி ஈர்க்கப்பட்டவர்களில் லூயி ஹர்ஸ்ட் (Louis Hurst) என்பவரும் ஒருவர். இவர் இரண்டாம் உலகப் போருக்குப் பின் ரமண பகவானிடம் வந்தார்.

பாங்காக்கிலிருந்து வெகு தொலைவிலிருந்த திருவண்ணாமலையில் ஸ்ரீமதி ஆஸ்போர்னுக்கு இதற்குள் பகவானுடைய தரிசனம் கிடைத்திருந்தது. பகவானின் கண்களை அவர் நோக்கியபோது

பகவான் அவர் மீது தனது இதயத்தில் பாயும் பார்வையைச் செலுத்தினார். மறுகணமே தான் முற்றிலும் மாறிவிட்டதாக அவர் உணர்ந்தார். ஸ்ரீமதி ஆஸ்போர்ன், குழந்தைகள் இவர்களிடம் பகவான் தனிப்பட்ட கவனம் செலுத்தினார். சிறையிலிருந்த தனது கணவர் ஆஸ்போர்னுக்கு பகவானுடைய கண்களைப் பற்றி எழுதும் போது 'கபடமற்ற சிறு குழந்தையினது போன்றிருந்த அவரது பார்வையில் ஆழம் காண முடியாத ஞானமும், ஞானியின் அபரிமிதமான அன்பும் வெளிப்பட்டன' என்று எழுதியிருந்தார். இதற்கிடையில், அவரது குழந்தைகள் "பகவானே! நாங்கள் எங்கள் தந்தைக்குக் கடிதம் எழுதுகிறோம். ஆனால் அவர் உயிரோடு இருக்கிறாரா என்பது கூட எங்களுக்குத் தெரியவில்லை. அவரை உயிரோடு காப்பாற்றி விரைவில் எங்களிடம் அழைத்து வாருங்கள்" எனப் பிரார்த்தித்தனர்.

முக்கியமான பிரிட்டிஷ் கைதிகளுக்குச் சில சமயங்களில் மரண தண்டனை வழங்கப் பட்டதென்று ஆஸ்போர்ன் என்னிடம் கூறியிருக்கிறார். ஒரு முறை தனிப்படை ஒன்று வந்து அவரை அழைத்துச் சென்ற போது ஆஸ்போர்ன் நிச்சயமாகச் சுட்டுக் கொல்லப்படுவார் என்றுதான் எல்லோரும் எண்ணினர். இந்நிகழ்வு பற்றி ஆஸ்போர்ன் என்னிடம் கூறியபோது, "இறுதியாக நான் பகவானது படத்தையும் அவரது இரு புத்தகங்களையும் நோக்கினேன். பின் என்னைத் துப்பாக்கியால் சுடும் குழுவின் முன் நிறுத்தியபோது நான் கண்களை இறுக மூடிக்கொண்டேன். நான் பகவானிடம் பிரார்த்திக்கவில்லை. ஆனால் பகவானது படம் என் மனக்கண் முன் தோன்றியது. முன் பின் தெரியாத காரணத்தால் விடுவிக்கப்பட்டு மிகக் கொடுமையாகச் சித்ரவதைச் சிறையில் (concentration camp) அடைக்கப்பட்டேன்," எனத் தெரிவித்தார்.

ஆஸ்போர்ன், இவ்வாறு மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த சமயத்தில் திருவண்ணாமலையில் இருந்த அவரது குழந்தைகள் தங்களது தந்தை பத்திரமாக மீண்டும் வந்து சேர வேண்டும் என்று பகவானிடம் தொடர்ந்து பிரார்த்தித்தபடி இருந்தனர். போர் முடியும் வரை பகவான் பதிலேதும் கூறவில்லை. முதல் தொகுப்பிலிருந்த நாற்பது கைதிகளுடன் ஆஸ்போர்னும் விடுவிக்கப்பட்ட அன்று பகவானிடம் பிரார்த்தித்த அவரது மகன் ஆடமின் (Adam) பிரார்த்தனைக்குப் பதில் கூறும் வகையாக, "ஆம். ஆடமின் தந்தை திரும்பி வரப் போகிறார்" என அவர் தெரிவித்தார். அருணாசலத்திற்கு அவர் திரும்பி வந்தபோது சிறையில் சித்ரவதைக்குள்ளான ஆஸ்போர்ன் மிகவும் பலவீனமான மனநிலையுடன் இருந்தார். அறிவாளிகள் மூளைச் சலவை (brainwash) செய்வதற்காக சித்ரவதைக்கு உட்படுத்தப்பட்டனர். வெகுவிரைவிலேயே ஆஸ்போர்ன் ரயிலில் வந்து சேர்ந்து விடுவார் என்ற விபரம் பகவானிடம் தெரிவிக்கப்பட்டபோது அவர் கவலையில் மூழ்கியதைக் கண்ட அவரது தொண்டர் T. P. ராமச்சந்திர ஐயர், "நானும் ரயில் நிலையத்திற்குச் செல்லட்டுமா?" என வினவினார். "ஆம் நீங்களும் சென்று வாருங்கள்" என பகவான் அனுமதியளிக்கவே ஆஸ்போர்னைத் திரும்பி அழைத்து வர பகவானின் பிரதிநிதியாக உடன் சென்றார். ஆஸ்போர்ன் இருந்த மிக மோசமான மனநிலையில் மனைவி லூஸியாவைத் தவிர வேறு ஒருவரையும் அவரால் அடையாளம் கண்டு கொள்ள இயலவில்லை. அவரது மனைவி அழுதுகொண்டே பகவானிடம் வந்தார். "ஆஸ்போர்னைக் காலையிலும், மாலையிலும் இங்கு அழைத்து வந்து என் கண்ணில் படும்படியாக அவரை உட்கார வையுங்கள்" என அவரிடம் பகவான் தெரிவித்தார். அவர் முற்றிலும் குணமடையும் வரையும் - அதற்குப் பின்னரும் கூட — அவ்வாறு அது தொடர்ந்து செய்யப்பட்டது. "பகவான் என்னைக் காணக்கூடிய இடத்தில் நான் அமர வேண்டுமென்பதில் அவர் மிகவும் கவனமாக இருந்தார். ஒரு நாள், எனக்கும் அவருக்குமிடையே இரண்டு மூன்று பேர் வந்து அமர்ந்து கொண்டபோது தான் என்னைக் காண வேண்டுமென்பதற்காக

அவர்களை வேறு இடத்தில் அமரும்படி பணித்தார் பகவான். பகவான் இம்மாதிரி என்றுமே செய்வது வழக்கமில்லை,'' என ஆஸ்போர்ன் என்னிடம் தெரிவித்தார்.

ஆனாலும் முதல் நாளே ஆஸ்போர்னுக்கு பகவான் தன்னை வெளிப்படுத்தவில்லை. சில தினங்களுக்குப் பின் ஒரு பண்டிகை நாளன்று, பகவான் தனது கவனத்தை முழுமையாக ஆஸ்போர்னிடம் செலுத்தியபோது மிகப் பெரிய அளவில் அவரிடம் மாற்றம் ஏற்பட்டது. அதைப் பற்றிப் புத்தகத்தில் விவரித்த போது ''பகவான் என்னைப் பார்த்தவாறு நிமிர்ந்து உட்கார்ந்தார். அவரது ஒளி பொருந்திய கண்கள் - என்னால் விவரிக்க முடியாத அளவு சக்தியுடன், அந்தரங்கமாகவும், ஆழமாகவும் ஊடுருவிச் சென்று பார்த்தன. அப்போது என்னுள் மிக ஆழமான பேரமைதி எழும்பிய நிலையில், மன அழுத்தமற்ற லேசான மனத்தோடு மௌனத்தையும், ஆனந்தத்தையும் அனுபவித்தேன்,'' என எழுதியுள்ளார் ஆஸ்போர்ன். என்னிடம் நேரடியாகப் பேசிய போது ''எல்லாத் திசைகளிலும் சுழன்று தேடக் கூடிய சக்தி வாய்ந்த பிரகாசமான இரு ஒளிக் கதிர்கள் என்னுள் பாய்ந்து உடலில் உள்ள ஒவ்வொரு அணுவையும் தெய்வீகமாக்கின. அதுவே எனக்களிக்கப்பட்ட முதல் தீக்ஷையும், முதல் அனுபூதியும்'' என்று உரைத்தார்.

இதற்குப்பின் குருவின் அருள் எந்த அளவுக்குச் செல்லும் சக்தியுடையது என்பதை ஆஸ்போர்ன் புரிந்து கொண்டார். புத்தி சாதுர்யமுள்ள ஒருவருக்கு முற்றிலும் பொருத்தமான ஒரு ஆன்மீகத் தேடல்முறையான பகவானின் உபதேசமாகிய - ஆத்ம விசாரத்தை அவர் பின்பற்றுவதற்கு அவருக்கு சுறுசுறுப்பையும், ஊக்கத்தையும் அளிக்க, இந்த நயன தீக்ஷையே காரணமாக அமைந்தது. பகவான் தனது அன்பையும் கவனத்தையும் அவர் மீது தொடர்ந்து பொழிந்தார். ஆஸ்போர்ன் தினமும் காலையிலும், மாலையிலும் பகவானிடம் தவறாமல் வந்ததுடன், உண்முகமாக மேன்மேலும் ஆழ்ந்து செல்வதில் மிகுந்த சிரத்தையுடனும் இருந்தார். வெளியில் உள்ள குருவின் நோக்கமே, உள்ளே இருக்கும் குருவை உதவிக்கு அழைப்பதுதான் என்பதை அவர் முழுமையாகப் புரிந்து கொண்டார். அவர் பகவானிடம் வந்த பின்னரும் கூட ரமணர் ஒரு குருவன்று என்றும், அவர் தீக்ஷை அளிக்கமாட்டாரென்றும், சீடர்களை ஏற்கமாட்டாரென்றும் டேவிட் மெக்ஐவர் மீண்டும் அறிவுறுத்தினார். பகவான் ஒரு குரு இல்லையென்றால் குரு என்னும் சொல்லுக்கே எந்தப் பொருளுமில்லை என இப்போது ஆஸ்போர்ன் எண்ணத் துவங்கினார். பகவான் அவருக்கு நயன தீக்ஷை அளித்து, அவரைத் தன் சீடராக்கிக் கொண்டிருந்தார். அதனால் பகவானுக்குச் சீடர்களில்லை என்னும் கூற்று அர்த்தமற்றதாகிவிட்டது.

வெளியிலிருந்து பகவானும் உள்ளிருந்து ஆத்மாவும் வழிகாட்ட ஆரம்பித்த பின் இடைவிடா ஆத்ம விசாரத்தின் காரணமாக அவருள் ஆத்ம விழிப்புணர்வு ஏற்பட்டது. ஸத்ய ஸ்வரூபமாக காட்சியளிக்கும் 'பகவான் குருவன்று' எனும் கருத்து, அவரது பூரண அருளுக்கு முன் காற்றோடு போய்விடுகிறது என்பதை ஆஸ்போர்ன் அறிந்து கொண்டார். இந்த தீக்ஷையும் அதன் விளைவுகளும் அவரது ஆன்மீக வாழ்க்கையைத் திசை திருப்பின. பழைய ஸாதனை முறைகளை அவரால் கடைப்பிடிக்க இயலவில்லை. இதனால் அமைதி குலையவே அவற்றைக் கைவிடுவதற்குப் பகவானின் அனுமதி கோரினார். பகவான் உடனே அனுமதியளித்ததுடன் ''ஆம்! மற்ற ஸாதனை முறைகளெல்லாம் ஆத்ம விசாரத்திற்கே அழைத்துச் செல்லும்'' என பதிலிறுத்தார்.

இறுதி முடிவெடுக்க வேண்டிய வேளை வந்துவிட்டது. போரில் கைதாகிச் சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டுள்ள ஆங்கிலேயர்களுக்குப் பிரிட்டனில் எல்லா வசதிகளோடும் தங்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது என்ற அறிவிப்பு ஆஸ்போர்ன் பகவானுடன் தங்கியிருந்த சமயத்தில் ஆங்கிலேய

அரசால் வெளியிடப்பட்டது. இந்த விபரத்தைத் தெரிவிக்கும் கடிதங்கள் ஒன்றின் பின் ஒன்றாக பிரிட்டிஷ் ஹைகமிஷனிலிருந்து அவருக்கு அனுப்பப்பட்டு வந்தன. ஆனால் ஆஸ்போர்ன் தம்பதி பகவானின் அபிப்பிராயத்தை அறிவதற்குக் கூட அக்கடிதங்களை அவரிடம் காட்டவில்லை. பகவானை விட்டு வேறு எங்கு செல்வதிலும் தங்களுக்கு விருப்பமில்லை என்பதில் அவர்களுக்குச் சிறிதும் சந்தேகமிருக்கவில்லை. பிரிட்டனுக்குக் கடைசியாகச் செல்ல வேண்டிய கப்பல் புறப்படப்போகும் சமயம் நெருங்கியபோது, பிரிட்டிஷ் ஹைகமிஷனர் அவர்களை எச்சரிக்கும் பொருட்டு தந்தி ஒன்றை அனுப்பியிருந்தார். 'எங்களுக்குப் பகவானுடன் தங்குவதை விட்டு வேறு உலக வாழ்க்கை இல்லை என்பது எங்களைப் பொறுத்தவரை ஏற்கனவே முடிவு செய்யப்பட்ட விஷயமென்பதால் அந்தத் தந்தியைப் பகவானிடம் எடுத்துச் செல்ல வேண்டுமென்ற எண்ணம் கூட எங்களுக்கு எழவில்லை' என்று ஸ்ரீமதி ஆஸ்போர்ன் என்னிடம் கூறினார்.

ஒரு குடும்பத்தின் தலைவனாக இருந்த ஆஸ்போர்ன், சிறிதளவாவது சம்பாதிக்க வேண்டிய அவசியம் இருந்ததால் சென்னையில் தினமும் வெளியான புகழ்பெற்ற செய்தித்தாள் ஒன்றில் பதிப்பாசிரியராக வேலை ஏற்றுக்கொண்டார். அவருக்குத் திருவண்ணாமலையை விட்டுச் செல்ல விருப்பமில்லை என்றபோதும் செல்ல வேண்டிய நிர்பந்தம் இருந்தது. சென்னைக்குச் செல்வதற்கு முன் அவரது நண்பர்களில் ஒருவர் பகவானுடைய வர்ணம் தீட்டிய சித்திரம் ஒன்றை அவருக்குப் பரிசாகத் தந்தார். அதை பகவானுக்குக் காட்ட எடுத்துச் சென்றபோது பகவான் அதைக் கையில் பிடித்துக் கொண்டு, ''ஆஸ்போர்ன் ஸ்வாமியைத் தன்னுடன் எடுத்துச் செல்லப் போகிறார்'' எனக் கூறினார். பகவானுடைய மற்றெல்லாப் படங்களையும் விட, குறிப்பிட்ட அந்தப் படம், குருவிற்கே உரிய அன்போடும் கருணையோடும் தன்னை நோக்கி ஆழமான கருத்துக்களைப் பேசியதாக அவருக்குத் தோன்றியது. அந்தச் சித்திரம் அவரது அறையை அலங்கரித்தது. தீர்மானம் ஏதாவது எடுக்க வேண்டியிருந்தால் அவர் முதலில் பகவானின் சித்திரத்தைப் பார்த்த பின்னரே முடிவெடுப்பார்.

வேலை இல்லாத ஓய்வு நாட்களிலும், விடுமுறை நாட்களிலும் குடும்பத்தோடும் பகவானோடும் இருப்பதற்காகத் திருவண்ணாமலைக்கு ஆஸ்போர்ன் ஓடி வந்துவிடுவார். அவர் வந்த போது பகவான் அவரிடம் பிரத்தியேக கவனம் செலுத்துவார். பகவானுக்குக் கையில் இரண்டாவது முறையாக அறுவை சிகிச்சை செய்யப்பட்டிருந்த சமயத்தில் ஆஸ்போர்ன் எதிர்பாராத விதமாகத் தனது நண்பரின் காரில் ஒரு நாள் வந்திருந்தார். மருத்துவசாலை வராந்தாவில் பகவான் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார். சாதாரணமாகத் தன் அருளை அத்துணை எளிதில் வெளிக்காட்டிக் கொள்ள மாட்டார் பகவான் என்றாலும் அம்முறை முன்னறிவிப்பேதும் இன்றி ஆஸ்போர்ன் வந்ததால் அவரது உணர்ச்சிகள் வெளிப்பட்டு விட்டன. அவரைக் கண்டபோது பகவானுடைய முகம் மகிழ்வாலும் அன்பினாலும் பிரகாசமாக ஒளிர்ந்தது. விவரிக்க இயலாத கனிவோடும், அருளோடும் வைத்த கண் வாங்காமல் அவர் ஆஸ்போர்னைச் சிறிது நேரத்திற்குப் பார்த்த வண்ணம் இருந்தார். ஆஸ்போர்னுக்குப் பின்னால், வெகு அருகில் நின்று கொண்டிருந்த அவரது மனைவிக்கும் அரவிந்த் போஸுக்கும் பகவான் இம்மாதிரி யாரையும் இதுவரை நோக்கியதில்லை என்று தோன்றியது. ஆஸ்போர்னுமே தனக்குள் மாற்றம் ஏற்பட்டதை உணர்ந்தார். தன்னை பகவான் வரவேற்ற விதத்தைக் கவனித்த அவரது இதயம் குற்ற உணர்வை எழுப்பிய அதே சமயம், மிகச் சிறிய முயற்சிக்கு பகவான் எத்துணை பெரிய பரிசைத் தந்துள்ளார் என்னும் நன்றி உணர்வு அவரது உள்ளத்தை உருக்கியது. தெய்வீகமான குருவிற்கும் அற்புதமான சீடருக்குமிடையே இருந்த பிணைப்பை அது மேலும் வலுப்படுத்தியது.

ஆஸ்போர்ன் உறுதியாகவும், ஆழமாகவும் இதயத்தில் நிலைத்து நிற்பதற்கு பகவான் தனது ஆசிகளைத் தொடர்ந்து அவர் மீது பொழிந்தார். வெளியில் இருக்கும் குருவின் லட்சியமே உள்ளேயிருக்கும் குருவை விழிப்படையச் செய்வதுதான். விதிவசத்தால் பகவான் உடலை உகுத்த அந்த நாளன்று ஆஸ்போர்ன் அங்கு இருந்தார். ஆனால் துயரத்தில் அவர் மூழ்கவில்லை. பதிலாக இதயத்தில் ஆழ்ந்து மூழ்கினார். பகவானுடைய அருள் முன்னை விட அபரிமிதமாகப் பெருகுவதையும் அவர் தனக்குச் சக்தி வாய்ந்த ஆதரவாக இருப்பதையும் அவரால் உணர முடிந்தது. மஹா நிர்வாணத்திற்குச் சில தினங்களுக்குப் பின் பகவான் ஆஸ்போர்னின் கனவில் தோன்றினார். அவருடைய கனவில் பழைய ஹாலில் அவர் இருந்தபோது பகவான் தனது ஸோஃபாவிற்கு அருகே வருமாறு அவரை அழைத்தார். அருகே வந்த அவர் பகவான் முன் மண்டியிட்டு அமர்ந்த போது, பகவான் ஆஸ்போர்னின் தலைமீது தனது கைகளை வைத்து ஆசீர்வதித்தார். பகவான் கைகளைத் தலையில் வைத்தபோது அவர் தனது நேர்மார்க்க உபதேசங்களைப் பற்றி எழுதும்படி கூறுவதாக ஆஸ்போர்னுக்குத் தோன்றியது. அதன் பின் அவர் ஏழு கட்டுரைகளை எழுதினார். அவை 'ரமண அருணாசலா' (Ramana Arunachala) என்ற பெயரில் பின்னர் வெளிவந்தன. நாம் ஒவ்வொருவரும் மட்டுமின்றி அனைத்து ஸாதகர்களும் அந்தப் புத்தகத்தைப் படிக்க வேண்டும். ஆஸ்போர்னின் படைப்புகளுக்கு இதுவே துவக்கமாக இருந்தது. விரைவிலேயே ஆஸ்போர்ன் எழுதிய புத்தங்கள் அருவியைப் போன்று வெளிவரத் துவங்கின: "Ramana Maharshi and the path of Self Knowledge, The collected works of Ramana Maharshi, The teachings of Ramana Maharshi in His own words, The incredible Sai Baba, Rhythm of History, Buddhism and Christianity in the Light of Hinduism, Gautama the Buddha, The question of Progress," போன்ற பல புத்தகங்களுக்கு, முதலில் எழுதப்பட்ட 'ரமண அருணாசலா' என்ற நூலே முன்னோடியாக அமைந்தது.

சில காலம் சென்னையில் பணியாற்றிய பிறகு 1952-ல் அவர் கொல்கத்தாவில் ஒரு வேலையை ஏற்றுக் கொள்ள வேண்டியிருந்தது. விடுமுறை நாட்களில் பகவானுடைய ஸமாதியில் இருக்க எண்ணி கொல்கத்தாவிலிருந்து அருணாசலத்திற்கு ஓடோடி வருவார். இரண்டாவது முறையாக கொல்கத்தாவில் ஆஸ்போர்ன் ஆன்மீக விழிப்புப் பெற்றார். அதைப் பற்றி அவர் விரிவாகக் கூறும் போது "நான் எனது கொல்கத்தா அறையில் தனியாக இருந்தபோது எழுந்து படுக்கையில் அமர்ந்திருந்தேன். அப்போது ஆரம்பமும் அழிவுமில்லாத ஆத்மாவாக, அதாவது - நான் நானாக - ஆத்மாவாக இருந்தேன். எதுவுமே மாறவில்லை என்று எனக்குத் தோன்றியது. அப்போது எவ்விதக் கிளர்ச்சியோ, சந்தோஷமோ பரவசமோ இருக்கவில்லை. 'இருப்பின்' நிறைவு காரணமாக எப்போதுமே சலிப்பு ஏற்பட வழியேயில்லை என்று எனக்குத் தோன்றியது. உணர்வை மறைத்திருந்த, கருந்திரையான மனது சுருட்டித் தள்ளப்பட்டது போன்று உணர்ந்தேன். செயலுக்காக தவிப்பதும், அது கிடைக்காத போது சலிப்படைவதும் மனமேதான். ஆத்மா செயலால் பாதிப்படையாமல், எப்போதுமே தன்னுடைய தூய, ஸஹஜ, ஆனந்த நிலையிலேயே நிலைத்து நிற்கிறது. இந்த அனுபவம் எவ்வளவு நேரம் நீடித்தது என்பது எனக்குத் தெரியவில்லை. எனினும் அந்நிலையில் நான் இருந்த போது அது காலம் கடந்த நித்தியமாயிருந்தது. மெதுவாக மனம் அதை மீண்டும் மறைத்தது என்றாலும் திரை மெல்லியதாக இருந்தது. ஏனெனில் பிரகாசமான ஆனந்தம் தொடர்ந்தது. அதன் பின்விளைவு பல வாரங்களுக்குப் பின்னர்தான் மெதுவாக மறைந்தது" என்று உரைத்தார்.

ஆஸ்போர்ன் கொல்கத்தாவில் இருந்தபோது ஒருமுறை அவருடைய நண்பர்கள் ஷீரடி சாய்பாபாவைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். அவரும் சாய்பாபாவைப் பற்றிய ஓரிரு

கட்டுரைகளைப் படித்திருந்தார். அவருடைய நண்பர்கள் சாய்பாபாவைப் பற்றிய கட்டுரை ஒன்றை ஆஸ்போர்ன் எழுத வேண்டும் என்று விரும்பிய போதும் அவருக்கு அதில் தயக்கமிருந்தது. அன்று இரவு பகவான் அவருடைய கனவில் தோன்றி, ஷீரடி சாய் பாபாவைப் பற்றி எழுதுமாறு பணித்தார். கனவிலேயே தனக்கு சாய்பாபாவைப் பற்றி எதுவும் தெரியாதென பகவானிடம் ஆஸ்போர்ன் ஒப்புக் கொண்டபோது ஷீரடிக்குச் செல்லுமாறு கூறி, அங்கு சாய்பாபாவே, தன்னைப் பற்றி என்ன எழுத வேண்டுமென்று தெரிவிப்பார் என பகவான் அறிவுறுத்தினார். "மேலை நாட்டுலகம் சாய்பாபாவைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டும் என்பதால் நீங்கள் எழுதியே ஆக வேண்டும்" என்று பகவான் பிரத்தியேகமாக தெளிவு செய்தார். ஷீரடி சென்று 'The Incredible Sai Baba' என்ற புத்தகத்தை எழுதுவதற்கு அவருக்கு ஊக்கமளித்தது இதுவே.

1958-ல் திருவண்ணாமலைக்குத் திரும்பி வந்தவர் பின்னர் எங்கும் செல்லவில்லை. 1960 முதல் ஆஸ்போர்னுடன் தொடர்ந்து இருக்கும் தனிச்சலுகை எனக்குக் கிடைத்தது. நாங்கள் இருவரும் இணைந்ததற்கு, பகவானே தான் காரணம். ஆஸ்போர்ன் என்னிடம் எப்போதுமே மிகவும் அன்போடு பழகினார். 1950-ல் அவர் 'Ramana Maharshi and the path of Self Knowledge' என்ற புத்தகத்தை எழுதிய சமயத்தில் ஆச்ரமத்தில் 17 அங்கத்தினர்களைக் கொண்ட செயற்குழு அதைப் பிரசுரிக்க ஒப்புக் கொண்டது. கடைசி நிமிடத்தில் அவர்கள் பின்வாங்கவே ஆஸ்போர்னுக்குப் பெருத்த ஏமாற்றமாகிவிட்டது. அந்தக் குழுவைச் சந்தித்துவிட்டு அவர் வெளியே வந்தபோது, நானும் T. K சுந்தரேச ஐயரும் அங்கிருந்தோம். ஆஸ்போர்னைத் தேற்றும் விதமாக அந்நூல் மேலும் பலரைச் சென்றடைய வேண்டும் என்பது பகவானுடைய விருப்பமாக இருப்பதால், அதை வெளி நாட்டில் பிரசுரிக்க வேண்டுமென எண்ணுகிறாரோ என்னவோ என்று நாங்கள் கூறினோம். அதன் பின்னர் அவர் கையெழுத்துப் பிரதியை லண்டனிலிருந்த ரைடர் & கம்பனி (Ryder & Co) என்ற நிறுவனத்திற்கு அனுப்ப அவர்களும் அதைப் பிரசுரித்தனர்.



**ஷீரடி சாய்பாபா**

பணப் பற்றாக்குறையினால் 1963-ல் ஆச்ரமம் கஷ்ட நிலையில் இருந்ததால் அதை நிர்வகிக்க சிரமப்பட வேண்டியிருந்தது. ஆச்ரமத் தபால்களை நானும் T. K. சுந்தரேச ஐயரும் கவனித்துக் கொண்டிருந்தோம். அப்போது வந்த பல கடிதங்களில் ஆச்ரமம் இப்போதும் செயல்பட்டு வருகிறதா என்றும், அங்கு பகவானது போதனைகள் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றனவா என்றும் கேள்விகள் எழுப்பப்பட்டிருந்தன. பத்திரிகையின் மூலம் கம்பெனிகளிலிருந்து விளம்பரங்களைப் பெற்று அதன் மூலம் பண வசூல் செய்ய முடியும் என்பது குறித்து, மும்பையில் நான் வேலை செய்து கொண்டிருந்த போதே அறிந்திருந்தேன். ஆச்ரமத்திலிருந்து ஆண்டறிக்கை ஒன்றை அனுப்பத் துவங்கினால் அதன் மூலம் ஆச்ரமத்தைப் பற்றிய தகவல்கள் அனுப்புவதோடு பகவானுடைய உபதேசத்தைப் பரப்பவும் விளம்பரங்கள் மூலம் பண வசூல் செய்யவும், பலவிதத்தில் அது உதவும் என்று தோன்றியது.

ஆஸ்போர்ன் என்னுடைய நண்பர் என்பதோடு சிறந்த எழுத்தாளரும் கூட என்பதால் அவரை மொழி திருத்தம் செய்யும்படிக் கூறி அறிக்கையை தயார் செய்யலாமென எண்ணினேன். இந்த எண்ணத்தோடு, நான் ஆஸ்போர்னின் வீட்டிற்குச் சென்று ஆண்டறிக்கை பற்றிய எனது கருத்தை விளக்கி, தற்போதைய ஆச்ரம வேலைப்பாடுகள் குறித்து, பக்தர்களுக்குத் தெரிவிப்பதோடு ஆச்ரம நிதி நிலைமையையும் சீராக்க முடியும் என எடுத்துரைத்தேன். இதற்கு அவருடைய ஆசிகளையும், ஒத்துழைப்பையும் நாடினேன். மிகுந்த கவனத்தோடு நான் கூறியவற்றைக் கேட்டு, இறுதியில் என் கைகளைப் பிடித்துக் கொண்டு அவர் ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார். இந்த அளவுக்கு அவர் ஆழமாக உணர்ச்சி வசப்படுவதை நான் கண்டதில்லையாதலால் வியப்படைந்தேன். “கணேசன்! இன்று எத்தகைய ஆசிகளை நீ எனக்கு எடுத்து வந்துள்ளாய் என்பது உனக்குத் தெரியாது. சில வாரங்களுக்கு முன்பு பகவான் ஒரு நாள் என் கனவில் தோன்றினார். கனவில், அவர் முன் நான் மண்டியிட்ட போது, ஒரு பத்திரிகையின் சில பிரதிகளைக் கொடுத்துப் பெற்றுக் கொள்ளுமாறு கூறினார். நான் ஒரு பதிப்பாசிரியராக இருக்க வேண்டும் என பகவான் விரும்புவதை நான் உணர்ந்து கொண்டதால் எனது குருவின் உத்தரவை சிரமேற்கொள்ள வேண்டியிருந்தது. ஆனால் எந்த இந்தியப் பத்திரிகைக்கு நான் பொருத்தமாக இருப்பேன் என்ற கேள்வியும் எழுந்தது. ‘The Economist” என்ற பிரபலமான ஆங்கிலப் பத்திரிகையில் எனது மூத்த சகோதரர், புகழ்பெற்ற பதிப்பாசிரியராக இருந்தார். நான் அவருக்குக் கீழ் பணியாற்றுவதாகக் கூற வேண்டுமா? அருணாசலத்தை விட்டுச் செல்ல வேண்டும் என்ற எண்ணமே எனக்கு வேதனையளித்தது. பகவானின் விருப்பம் அதுவானால் அருணாசலத்தை விட்டுச் செல்வதற்கும் நான் தயாராக இருந்தேன். பகவான் என்ன நினைத்தாரென்பதை இப்போது நான் உணர்கிறேன். என்ன ஒரு ஆனந்தம்!” என்று ஆஸ்போர்ன் மனந்திறந்து பேசினார்.

மிகுந்த உற்சாகத்துடன் தொடர்ந்த ஆஸ்போர்ன் “உனக்குத் தெரியுமா கணேசன்! பகவான் இருந்த போதும் அதற்குப் பின்னரும் ஆச்ரமத்திற்கென ஒரு பத்திரிகை நடத்துமாறு பலர் என்னிடம் கேட்டுக் கொண்டனர். பகவானின் உபதேசங்கள் பயிற்சி செய்வதற்காக மட்டுமே என்று கூறி நான் அந்த வேண்டுகோளை ஏற்க மறுத்து வந்தேன். மிகத் துல்லியமானதும் சுருக்கமுமான அந்த உபதேசங்களை மாதாமாதம் தொடர்ந்து ஒருவர் எழுதுவது என்பது சாத்தியமில்லை என்று கூறி மறுத்ததால், பல பக்தர்களை நான் ஏமாற்றத்திற்குள்ளாக்கினேன் என்று உணர்ந்த போதும் உறுதியாக இருந்தேன். இப்போது அவரது உபதேசமான ஆத்ம விசாரத்தை பத்திரிகையின் மூலம் பரப்புமாறு பகவானே ஆணையிட்டுள்ளார். அதனால் கணேசன்! நாம் அதை தொடங்கப் போகிறோம்” என்றபோது அவரது உற்சாகத்தைக் கண்டு நான் மெய்சிலிர்த்தேன். ஆச்ரமச் செய்திகளை உள்ளடக்கிய பத்திரிகைக்கு ‘The Mountain Path’ என்ற பெயரைக் கொடுத்ததும் ஆஸ்போர்னே! “Mountain (மலை) என்பது அருணாசலத்தையும் Path (வழி) என்பது பகவானுடைய நேர் பாதையான ஆத்ம விசாரத்தையும் குறிக்கும் என்று அவர் விளக்கினார். இதன் பிறகு பத்திரிகைக்கான சந்தா தொகையைத் தீர்மானிக்க வேண்டியிருந்தது. ஆனால் எங்களுக்கோ அது பற்றி எதுவும் தெரியாது. நம்ப முடியாத வகையில் கொல்கத்தாவிலிருந்து முன்பின் தெரியாத H. R. சட்டாவிடமிருந்து (H. R. Chaddha), மறுநாள் 5 ரூபாய்க்கான மணியார்டர் கிடைத்தது. அதில் “இது ஆச்ரம பத்திரிகைக்கான ஆண்டு சந்தா. மற்ற விபரங்கள் என் கடிதத்தில் எழுதப்படும் என்று குறிப்பிடப்பட்டிருந்தது. ஆம்! பகவான் ஆண்டுச் சந்தாவைத் தீர்மானித்துவிட்டார் என்று உணர்ந்து நாங்கள் மகிழ்ந்தோம். பத்திரிகை எந்த உருவில் வெளி வர வேண்டும் என்பது தீர்மானிக்கப்படாத நிலையில் சந்தா தீர்மானிக்கப்பட்டு விட்டது. சில நாட்களுக்குப் பின் சட்டாவின் கடிதம் வந்தது. அதில் “1930-களில் நான் சந்தித்த பகவான் எனது


ஆர்தர் ஆஸ்போர்ன், லூசியா ஆஸ்போர்ன்

குரு. இப்போதும் எல்லாமே எனக்கு அவர்தான். ஆச்ரமத்தோடு எனக்கிருந்த தொடர்பு விட்டுப் போயிருந்தது. சில தினங்களுக்கு முன் பகவான் என் கனவில் தோன்றி என்னிடம் காட்டிய பத்திரிகையின் அட்டையில், ரூபாய் ஐந்து என்று தெளிவாக அச்சிடப்பட்டிருந்தது என்பதால், ஆச்ரமத்திலிருந்து பத்திரிகை வெளிவருகிறது என்று நான் யூகிக்கிறேன். என்னை ஒரு சந்தாதாரராக ஏற்றுக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறேன்'' என எழுதியிருந்தார். பின்னர் T. N. கிருஷ்ணஸ்வாமி என்ற மற்றொரு பக்தர், முதல் ஆயுள் சந்தாவாக நூறு ரூபாய்க்கான காசோலையை அளித்தார். இப்படித்தான் 'The Mountain Path' என்ற பத்திரிகை துவங்கியது. அதில் இணைந்து பணியாற்றியதால், நானும் ஆஸ்போர்னும் மிகவும் நெருக்கமானோம். கட்டுரைகள் சேகரிப்பதற்குக் கடுமையாக உழைத்ததோடு, அவரும் பல கட்டுரைகள் எழுதினார். விளம்பரங்கள் மூலம் ஆச்ரமத்திற்கு நிதி திரட்ட நான் எடுத்த முயற்சியும் வெற்றியடைந்தது.

ஆர்தர் ஆஸ்போர்னுடன் எனக்குக் கிடைத்த ஸத்ஸங்கங்களின் நினைவுகள் பசுமையாக உள்ளன. வார்த்தைகளால் வழி காட்டியதை விட தனது மௌன இருப்பினால் என்னை வழி நடத்தினார். ஒரு நாள் எனது தனிப்பட்ட பிரச்சனையோடு நான் அவரை அணுகினேன். கனவில் கரிய ஒரு தோற்றம் இறங்கி வந்து, என் நெஞ்சில் அமர்ந்து கழுத்தை நெரிப்பது போன்ற உணர்வு என்னைத் துன்புறுத்தியது. மூச்சு விட முடியாமல் திணறிய அச்சமயத்தில் நான் தனியாகவும் இருந்ததால் என்ன செய்ய வேண்டுமென்பது எனக்குப் புரியவில்லை. நான் பயப்படவில்லையென்பதோடு, எது என்னைத் துன்புறுத்துகிறது என்பதையறியவும் நான் முற்படவில்லை. அதன் பிடிப்பு மேன்மேலும் இறுகிக் கொண்டே வந்தது. என்னால் மூச்சு விட முடியாத நிலையில் நான் இறக்கப் போகிறேன் என்று தோன்றிய போது திடீரென்று என் இதயத்தினுள்ளிருந்து தன்னிச்சையாக 'ஓம் நமோ பகவதே ஸ்ரீ ரமணாய' என்ற மந்திரம் எழும்பி தொடர்ந்து ஒலிக்கத் தொடங்கியது. எனக்கு அந்த நாட்களில் ஜபத்திலோ மந்திரங்களிலோ நம்பிக்கை இருக்கவில்லை என்பதுதான் உண்மை. ஓம் நமோ பகவதே ஸ்ரீ ரமணாய (பகவான் ஸ்ரீ ரமண மஹர்ஷிக்கு நமஸ்காரங்கள்) என்ற இம்மந்திரம் தானாகவே வந்தது. அந்தக் கரிய உருவமும் மறைந்தது. கனவு கலைந்ததும் நான் விழித்துக் கொண்டேன். நான் கண்ட காட்சி கனவா? என்னுடைய கற்பனையா? அல்லது உண்மையா? என்பதை என்னால் தீர்மானிக்க இயலவில்லை. நான் ஆஸ்போர்னிடம் ஓடிச் சென்று சிறிய விபரத்தைக் கூட விடாமல் என் அனுபவத்தை மிக நுணுக்கமாக விவரித்தேன். நான் கூறியதைக் கவனமாகக் கேட்ட ஆஸ்போர்ன் முதுகில் தட்டிக் கொடுத்து புன்னகையோடு, ''கணேசன்! இது ஒரு உண்மையான ஆன்மீக அனுபவம். 'ஓம் நமோ

பகவதே ஸ்ரீ ரமணாய' என்ற மந்திரத்தை நீ பெறுவதற்கு மிகவும் பாக்கியம் செய்துள்ளாய். இதுவேதான் அஜபா ஜபம் (தானாக எழும்பும் மந்திரம்) என்று அழைக்கப்படுகிறது. இப்போது உனக்கு என்னுடைய அனுபவத்தை கூறுகிறேன்'' என ஆஸ்போர்ன் கூறினார்.

''பகவான் வாழ்ந்து கொண்டிருந்த போது ரெனே கெனொனைப் (Rene Guenon) பின்பற்றிய நாங்கள் பலரும், சக்தியுடைய காந்தத்தால் இரும்புத் துகள்கள் ஈர்க்கப்படுவது போன்று, ஸ்ரீ பகவானால் கவரப்பட்டோம். இக்குழுவில் ஒருவரான டேவிட் மெக்ஐவர் பகவானுடன் தங்கி அவரது வழி காட்டுதலைப் பெறும் பேறு பெற்றிருந்ததோடு பகவானுடைய நூல்களையும் 'த்ரிபுரா ரஹஸ்யம்' 'அத்வைத போத தீபிகா' போன்று பகவானால் பரிந்துரைக்கப்பட்ட மற்ற நூல்களையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கும் பேற்றினையும் பெற்றிருந்தார். பின்னர் கேரளத்திலிருந்த ஒரு யோகியால் ஈர்க்கப்பட்டு அவரையே குருவாக ஏற்று அங்கு தங்கி விட்டார். என்னிடம் மிகுந்த அன்பு கொண்டிருந்த டேவிட், நானும், எனது மனைவியும் கூட அவரது குருவின் சீடர்களாக ஆக வேண்டுமென்று மிக வலுவாக எண்ணினார். ஆன்மீக நிறைவிற்கு ஆன்மீக குரு ஒருவர் மிகவும் அவசியம் என்பதே அவருடைய வாதம். பகவான் தன்னை ஒரு குரு என்று கூறாத நிலையில் நாங்கள் அவரை விட்டுவிட்டு எங்களைச் சீடர்களாக ஏற்கத் தயாராக இருக்கும் அவருடைய குருவை ஏற்றுக் கொள்ள வேண்டும் என டேவிட் வலியுறுத்தினார். இந்த விஷயமாக எனக்கும் டேவிட்டுக்கும் இடையே வெள்ளப் பெருக்கு போன்ற கடிதப் பரிமாற்றம் இருந்தது. டேவிடிடமிருந்து வந்த கடிதங்களும் எனது பதில்களும் ஒன்று விடாமல் பகவானிடம் காட்டப்பட்டன. என்னுடைய பதில்களில் பகவான் மட்டுமே எனது குரு என்றும் அவர் குரு இல்லை என்றால் குரு என்ற சொல்லுக்குப் பொருளே இல்லை என்றும் நான் எழுதிய அனைத்தையும் பகவான் தன் தலை அசைவினால் ஆமோதித்தார்,'' என ஆஸ்போர்ன் தெரிவித்தார்.

ஒரு நாள், ''ரமண மஹர்ஷியை உடனடியாக விட்டுவிட்டு தனது குருவை ஏற்காது போனால் கொடிய விளைவுகளைச் சந்திக்க வேண்டியிருக்கும் என எச்சரித்துத் தரக்குறைவான ஒரு கடிதம் டேவிடிடமிருந்து எனக்கு வந்தது. இக்கடிதத்தை பகவானிடம் நான் காட்டாத போதும் என் மன அமைதியை அது வெகுவாகக் குலைத்தது. மாலையில் பகவானிடம் அதைக் காட்ட எண்ணினேன். அன்று மதியம் நான் தோட்டத்தில் களையெடுத்துக் கொண்டிருந்த போது எனக்குப் பின்னால் திடீரென தொப்பென்ற சத்தம் கேட்டது. ஏதோ மிருகத்தைப் போன்ற ஒன்று, மரத்திலிருந்து குதித்து பின்புறமாக என்னை நெருங்கி வந்தது. கண்ணிமைக்கும் நேரத்தில் அது என் முதுகில் ஏறி அமர்ந்து கொண்டது. அதன் உடல் ரோமங்களால் நிறைக்கப்பட்டிருந்ததால் ஒரு கரடியைப் போன்று தோற்றமளித்தது. தனது பின்னங்கால்களால் என்னைப் பற்றிக் கொண்டு பின்புறத்திலிருந்து தனது கைகளால் எனது மார்பைச் சுற்றி இறுகப் பிடித்துக் கொண்டது. கணேசன்! அப்போது அது என்ன என்பதை நான் அறிய விரும்பவில்லை; பயமும் இருக்கவில்லை. பற்றற்ற அமைதி நிலவியது. பதட்டப்படாமல் களை எடுப்பதில் தொடர்ந்து ஈடுபட்டேன். நான் உதாசீனமாக இருப்பதைக் கண்டு அந்த மிருகம் தனது அளவையும் எடையையும் அதிகரித்துக் கொண்டது. விரைவிலேயே முதுகிலிருந்த பளு தாங்க முடியாமல் நான் குனிய வேண்டியிருந்தது. பாரம் மேலும் தாங்க முடியாத அளவுக்கு அதிகரித்த போதும் நான் பதற்றமடையவுமில்லை; பயப்படவுமில்லை. திடீரென ரோமங்கள் நிறைந்த தனது கையினால் என் கழுத்தைப் பற்றி நெரிக்கத் துவங்கியது. அதன் பிடி இறுக இறுக என்னால் மூச்சு விட இயலவில்லை. இதுவும் என்னிடம் சிறிது பயத்தைக் கூட ஏற்படுத்தவில்லை. நான் பூரண விழிப்போடும், அமைதியாகவும் இருந்தேன். என்னால் இனி மூச்சு விட முடியாது என்னுமளவுக்கு பிடி தொடர்ந்து இறுகிய போதும் பயமேதுமின்றி நான் இறக்கப் போகிறேன் என்பதை

உணர்ந்தேன். அப்போது தான் அந்த அதிசயம் நிகழ்ந்தது. மரணத்தைப் பற்றிய எண்ணம் எழுந்த போது 'அருணாசல சிவ', 'அருணாசல சிவ', 'அருணாசல சிவ', 'அருணாசல சிவ', என்ற ஒலியை என்னுள் நான் கேட்டேன். அந்த ஒலியை நான் எழுப்பாத போதும் என்னுள் இருந்த ஏதோ ஒன்று அதை ஒலிக்கச் செய்தது. ஜபம் தீவிரமாகவும் பலத்த ஓசையுடனும் வேகமாகவும் அதிகரித்துக் கொண்டே சென்றது. நான் மரணத்தின் பிடியில் உள்ளேன் என்று உணர்ந்து கொண்ட அதே சமயத்தில் உள்ளிருந்து தன்னிச்சையாக ஒலித்த ஜபத்தைக் கேட்பது ஒரு ஆனந்த அனுபவமாக இருந்தது. அஜபா ஜபம் தொடர்ந்த போது கழுத்திலிருந்த பிடி தளரத் துவங்கியது; அத்துடன் அந்த மிருகத்தின் அளவும் எடையும் மெதுவாகக் குறைந்து கொண்டே வந்தது. திடீரென முதுகிலிருந்து கீழே குதித்து மரத்தை நோக்கி திரும்பி ஓடியது. ஓடும் போது ஏற்பட்ட காலடி ஓசையை என்னால் கேட்க முடிந்தது. அது மீண்டும் மரத்திலேறி மறைந்தது. உடனே நான் எனது வழக்கமான நிலைக்குத் திரும்பினேன் என்றாலும், அஜபா ஜபம் இடைவெளியின்றித் தொடர்ந்தது. "

"மறுநாள் பகவான் மலைமீது நடந்து விட்டுத் திரும்பி வந்த போது நான் அவரைச் சந்தித்து அந்தக் கடிதத்தைக் காட்டி ஒளிவு மறைவின்றி முந்தைய தினம் மாலை நடந்தவற்றை எடுத்துரைத்தேன். பகவான் நான் கூறியவற்றைக் கேட்டுவிட்டு நான் முடித்தபின் அன்பான புன்னகையோடு, 'அவர்களால் இவ்வளவுதான் செய்யமுடியும். எல்லாமே சரியாக உள்ளது' என்று கூறினார். மாந்திரீகத்தில் கை தேர்ந்தவராக இருந்தவரும், டேவிடை பயமுறுத்தி எனக்கு எழுத வைத்தவருமான அவரது குருவையே 'அவர்கள்' என்னும் சொல்லினால் பகவான் குறிப்பிட்டிருக்க வேண்டும். பகவான் ஒரு பூரண ஞானி. அவரைப் போன்ற அப்பழுக்கற்ற ஸத்குருவின் பாதுகாப்பில் ஒருவர் வரும் போது, மாந்திரீகத்தினால் விளையக் கூடிய மிக மோசமான அனுபவமும் கூட மறைமுகமான அனுக்ரஹமாக மாறும். இவ்வாறு 'அருணாசல சிவ' என்ற அஜபா ஜபத்தின் தீக்ஷையைப் பெறும் பேறு எனக்குக் கிட்டியதென்றால் 'ஓம் நமோ பகவதே ஸ்ரீ ரமணாய' என்ற அஜபா ஜபத்தை தீக்ஷையாகப் பெறும் பாக்கியத்தை நீங்கள் பெற்றீர்கள்" என்று ஆஸ்போர்ன் கூறி முடித்தார்.

ஆஸ்போர்னுக்கும் எனக்கும் இடையே இருந்த நெருக்கம் மிக வலுவான ஒன்று. 'The Mountain Path' பத்திரிகைக்காகத் தொடர்ந்து நாங்கள் இருவரும் இணைந்து வெற்றிகரமாகச் செயல்பட்டோம். அது விரைவாக நல்ல ஆன்மீகப் பத்திரிகை என்று பிரசித்தி பெற்று வந்ததுடன் Douglas Harding, Robert Linssen, Joel Goldsmith, Wei Wu Wei, Thomas Merton போன்ற தீவிர ஸாதகர்களையும் உலகெங்கிலுமிருந்த மற்றும் பல எழுத்தாளர்களையும் ரமணாச்ரமத்தோடும், பகவானுடைய உபதேசங்களோடும் இணைத்தது. பகவானது உபதேசமான ஆத்ம விசாரத்தை எடுத்துரைப்பதில் ஆஸ்போர்னுக்கிருந்த விசேஷத் திறமையை அப்பத்திரிகையில் வெளிவந்த சிறந்த தலையங்கங்கள், -Sagittarius, Abdullah Kutbuddin, Sebastian Qubbins, Boddhicitta, Saidas, A. Rao ஆகிய புனைப் பெயர்களில் அவர் எழுதிய பல கட்டுரைகள் இவற்றின் மூலம் தெளிவாக அறிந்து கொள்ள முடியும். பத்திரிகையின் ஒவ்வொரு இதழிலும் கிறிஸ்தவம், புத்தமதம், இஸ்லாம் இவை குறித்து ஆஸ்போர்ன் எழுதினார். கிறிஸ்தவ இஸ்லாமிய மதங்களைப் பரப்புவதற்காக 'The Mountain Path' பத்திரிகையை உபயோகிப்பது குறித்து எழுந்த குற்றச்சாட்டுக்களை மறுத்துச் சொல்லும் விதமாக அவர் அமைதியாக, "கணேசன்! நான் ஒரு தீவிர கிறிஸ்தவன். இப்போதும் அவ்வாறே இருக்கிறேன். சில காலத்திற்கு நான் இஸ்லாம் மதத்தை நேசித்ததால் அம்மதத்தைத் தழுவி மற்ற இஸ்லாமியர்களோடு பள்ளி வாசலுக்கு (mosque) சென்றேன். நான் பௌத்த மதம் பற்றிப் படித்ததோடு புத்த விஹாரங்களில் தங்கி அம்மதத்தைக் குறித்து முழுமையாக அறிந்து கொண்டேன். அதனால்

பௌத்தர்கள், கிறிஸ்தவர்கள், இஸ்லாமியர்கள் இவர்களுக்கு பகவானது ஆத்ம விசாரத்தைப் பழகுவதில் உள்ள கஷ்டங்களை நான் நன்கு அறிவேன். மேற்கூறிய மதங்களையும் பகவானுடைய நேர்பாதையான ஆத்ம விசாரத்தையும் இணைக்கும் பாலமாக விளங்கும் எனது கட்டுரைகளின் மூலம், அவர்களும் பகவானுடைய வழிகாட்டுதலைப் பெற முடியும் என்பதற்காகவே மேற்கூறிய கட்டுரைகளை எழுதினேன்" என்று விளக்கினார். இந்நிலையில் 'The Mountain Path' பத்திரிகை நன்கு வேரூன்றியதோடு நல்ல மதிப்பையும் உலகெங்கிலுமிருந்து பாராட்டுக்களையும் பெற்றது. பத்திரிகை தொடங்கியதன் முக்கிய நோக்கம் எதிர்பார்த்ததைவிட நன்கு நிறைவேறியதோடு ஆன்மீக நாட்டமுள்ளவர்களும், முக்கியமாக இளம் ஸாதகர்களும் ஆச்ரமத்திற்கு நிலையாக வந்து கொண்டிருந்தனர். பகவானுடைய ஸமாதி கோயில் தியான மண்டபம், விருந்தினர் விடுதிகள் மற்றும் நூற்றாண்டு விழாக் கொண்டாட்டம் ஆகிய திட்டங்கள் சிறப்பாக நிறைவேறுவதற்கு முக்கிய காரணமாக இருந்தது, 'The Mountain Path' மூலம் பரப்பப்பட்ட நற்செய்திகளே.

1968-ல் ஆஸ்போர்னுடைய ஆன்மீகத்தின் புதிய கோணம் ஒன்று எனக்கு அறிமுகமானது. நான் ஆஸ்போர்னுடைய இல்லத்திற்கு எந்த நேரமானாலும் செல்வது வழக்கம் என்றபோதும், ஒரு வாரத்திற்கு நான் வெளியே சென்றிருந்தேன். நான் திரும்பி வந்தபின் அவரது இல்லத்திற்குச் சென்றபோது ஒரு வாரத்திற்குள்ளேயே எலும்பும் தோலுமாக மெலிந்து போய், அவர் படுக்கையில் கிடந்ததைப் பார்த்தேன். பின்னர் அவரது முகத்தில் ஏற்பட்டிருந்த மாற்றத்தைக் கண்டபோது நான் ஆச்சர்யத்தில் மூழ்கினேன். அவரது முகம் மிகப் பிரகாசமான ஒளியோடு அழகாக மிளிர்ந்தது. என் உள் உணர்வு "ஆஸ்போர்ன் ஆத்மானுபூதியைப் பெற்று விட்டார்" என உணர்த்தியது. இதுவே அவரது இறுதி அனுபூதியாகும். அவர் கண்களைத் திறந்து, ஒளி பொருந்திய பார்வையினால் என்னை அன்பாக வரவேற்றார். "கணேசன்! நான் காப்பாற்றப்பட்டு விட்டேன். 'The Mountain Path' பத்திரிகை வழக்கம் போல் வெளிவரும். நீங்கள் கவலைப்பட வேண்டியதில்லை" என்ற போது கரைபுரண்டோடிய மகிழ்ச்சியுடன் நான் அமர்ந்து கொண்டேன். அவர் கைகளைப் பற்றிக் கொண்டு அவருடைய ஒளிவீசும் முகத்தைக் கூர்ந்து நோக்கியபடி அரை மணி நேரம் அவரோடு அமர்ந்திருந்து, பின்னர் வீடு திரும்பியவுடனே என் தாயிடம் 'அம்மா! ஆஸ்போர்ன் ஆத்மஸாக்ஷாத்காரம் பெற்றுவிட்டார். தயவு செய்து அவரைப் போய் பாருங்கள். அவரது முகம் மிகப் பொலிவுடன் ஒளி வீசுகிறது' என்று கூறினேன். என் தாய், அன்று மாலை ஆஸ்போர்னின் இல்லத்திற்குச் சென்று திரும்பி வந்த போது நான் உரைத்தது சரி என்று உறுதி செய்தார். சில தினங்களுக்குப் பிறகு ஆஸ்போர்னின் உடல் நிலை தேறி வந்ததென்றாலும் அவர் யாரிடமும் பேசவில்லை. அவருடைய கவனம் முழுவதுமாக அகமுகமானதோடு 'பகவான் அல்லது அருணாசலம்' என்ற சொற்களைக் கேட்டபோது மட்டுமே, அவர் சிறிது அக்கறை காட்டினார். அவருக்குச் செல்லக் குழந்தை போன்றிருந்த 'The Mountain Path' பத்திரிகையும் கூட அவரது கவனத்தை ஈர்க்கவில்லை. 'ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஆன்மீக ஸாதகர் ஒருவரின் அனைத்து செயல்பாடுகளும் இறைவனால் நிறுத்தப்பட்டு, அவர் பூரணமாக உண்முகமாவார்' என்று St. John of the Cross என்ற கிறிஸ்தவ மஹான் கூறிய நிலையில் அவர் இருந்தார். ஆஸ்போர்னிடம் ஏற்பட்டுள்ள மாற்றத்தைப் பற்றி எனது நண்பர்களிடமெல்லாம் கூறத் துவங்கியதோடு, அவரைச் சென்று காணுமாறும் வற்புறுத்தினேன். சிலருக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. ஆனால் மற்றும் சிலர் மகிழ்ச்சியடைந்தனர். T. P. ராமச்சந்திர ஐயரையும், வேறு சிலரையும் நான் அழைத்துச் சென்றபோது, "கணேசன்! உனக்கு நன்றி! ஆர்தர் ஆஸ்போர்ன் ஆத்மானுபூதியை அடைந்து விட்டார் என்பதை சந்தேகத்துக்கிடமின்றி நிரூபித்து விட்டாய். நேர்மையோடு கபடமற்றிருக்கும் ஒருவரை பகவானுடைய அருள் இங்கேயே, இப்பொழுதே மாற்றிவிடும் என்பதை ஆஸ்போர்னின் நிலை நிரூபிக்கிறது. நான்



ஸ்ரீமதி ஆஸ்போர்னிடம் இது பற்றிக் கூறிய போது, “அப்படியா? அவருக்கு வந்திருப்பது வெப்பத்தினால் ஏற்பட்ட ஒரு தாக்கம் மட்டுமே” என்று கூறினார். அவருக்கு ஏற்பட்டது ஆழமான பூரணமான ஆத்மஸாக்ஷாத்காரம் என்பதை அவரது மனைவி உணரவில்லை. ஆஸ்போர்ன் அந்த நிலையை அடைவதற்கு முன், என்னை அழைத்து 1970-ஆம் ஆண்டு ஜூலை மாதம் வரை வெளி வர வேண்டிய ஆச்ரம பத்திரிகையின் ஒன்பது இதழ்களுக்குத் தேவையான கட்டுரைகளை என்னிடம் கொடுத்தார். தான் 1970ஆம் ஆண்டு மே மாதம் உடலை உகுக்கப் போவதை அறிந்ததாலோ என்னவோ, ஆத்மானுபூதியைப் பெறும்முன் ஒன்பது இதழ்களையும் சரி பார்த்து பிரசுரிப்பதற்குத் தயாராகவும் வைத்திருந்தார். ஞானியாக இருந்த போதும், தனது கர்மாவை முற்றிலுமாக ஏற்றுக் கொண்டிருந்தார். கர்மங்கள் நிறைவு பெற்ற போது ஞானத்தில் நிலைத்து விட்டார்.

ஆஸ்போர்னுடன் இருந்த போது மகிழ்ச்சியில் திளைக்கும் ஒரு குழந்தையாக நான் இருப்பது வழக்கம். “ஆஸ்போர்னை பெரிய மேதாவியாக நினைத்து அளவுக்கதிகமாக புகழ்வதை விட்டுவிடு” என்று எனது நண்பர்கள் பரிகசிப்பார்கள். அதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. ஏனெனில்

ஆஸ்போர்னுடைய உயர்ந்த நிலையை நான் எவ்வளவு அனுபவித்தேன் என்பது அவர்களுக்குத் தெரியாது. "இறுதியில் வாழ்க்கைக்கு ஒரு அர்த்தமும் லட்சியமும் உள்ளது. ஒன்றேயான ஆத்மாவைப் பற்றிய உண்மையை அறிந்து கொள்வது என்பது எத்துணை ஆனந்தத்தையும் உற்சாகத்தையும் தரும் விஷயம்" என்று ஆஸ்போர்ன் அடிக்கடி கூறுவது என் நினைவுக்கு வந்தது. அவர் கூறிய அந்தப் பேரானந்தத்தை தனது வாழ்க்கையில் அவர் உணர்ந்து விட்டார்; பகவானும் மூத்த பக்தர்களும் கூறிய ஒவ்வொரு வார்த்தையும் முற்றிலும் உண்மை என்பதைக் கண்கூடாகக் காணும் பேறு எனக்கும் கிட்டியது.

பகவான் தனது உடலை விடும் முன் தனது தொண்டர் ஒருவரிடம் 'நன்றி' என்று பொருள்படும் வகையில் சந்தோஷம் எனக் கூறினார். ஆஸ்போர்ன் அவரது முடிவு நெருங்கிய சமயத்தில் பேசவே முடியாத நிலையில் பெங்களூரில் இருந்தார். அவரை வழியனுப்பும் ஒரு சடங்காக ஸ்ரீமதி ஆஸ்போர்ன் படுத்துக் கிடந்த தனது கணவரைச் சுற்றி வலம் வந்தார். திடீரென அவரது குரல் தெளிவாக பகவான் கூறியதைப் போன்றே 'நன்றி' (Thank you) என ஒலித்தது. பின்னர் அவருடைய உடல் திருவண்ணாமலைக்கு எடுத்து வரப்பட்டு, அவரது இல்லத்திலேயே அடக்கம் செய்யப்பட்டது. மனமொடிந்த நிலையில் அப்போது அங்கு நானும் இருந்தேன். ஆஸ்போர்ன் இல்லாமல் நான் பிரசுரித்த முதல் இதழ் 1970ஆம் ஆண்டு ஜூலை மாதம் வெளி வந்தது. பிரசுரிக்கப்பட்ட ஒவ்வொரு இதழையும் பகவானுடைய ஸமாதியில் வைத்த பின்னரே அவர் அதைப் பிரித்து நோக்குவார் அல்லது என்னிடமோ மற்றவர்களிடமோ தருவார். 1970-ம் ஆண்டு ஜூலை மாத இதழை பகவானுடைய ஸமாதியின் முன் வைத்த போது நான் அழுது கொண்டுதான் இருந்தேன். அன்று இரவு என் கனவில் ஆஸ்போர்ன் தோன்றி, "கணேசன்! என்னுடைய பிரதியை எனக்குக் கொடு" என்று கேட்டுப் பெற்றுக் கொண்டு ஒவ்வொரு பக்கத்தையும் புரட்டிப் பார்த்து பாராட்டும் விதமாக என்னை முதுகில் தட்டிக் கொடுத்தார். அந்த அளவுக்கு நாங்கள் இருவரும் நெருக்கமாக இருந்து பணியாற்றினோம். குருவின் உபதேசப்படி வாழ்ந்து, இறுதி உண்மையான ஆத்மஸாக்ஷாத்காரத்தை அவர் அடைந்து விட்டார். 1960-ல் நான் ஆச்ரமத்திற்குத் திரும்பி வந்த போது அவர் என்னிடம் கூறிய முதல் வார்த்தைகள் "கேளு; ஆனால் ஆத்ம ஸாக்ஷாத்காரத்தை மட்டுமே கேளு. அதுதான் உன்னை அருணாசலத்தில் நிலைத்து நிற்கச் செய்யும். அருணாசலம் ஸ்தூலமானது மட்டுமன்று. இதயத்திலும் அதுவே தான் உள்ளது" என்பதாகும்.

ஆஸ்போர்ன் தனது புத்தகத்தில் கீழ்க்கண்டவாறு எழுதியுள்ளார்:

"ஒன்றேயான ஆத்மாவின் உண்மை பற்றியும், ஆத்மஸாக்ஷாத்காரத்தைப் பெறுவது சாத்தியமே என்றும், முதன் முதலாக அறிந்து கொள்ளும் போது, அது எல்லையற்ற உற்சாகத்தை அளிக்கிறது. இறுதியில் வாழ்க்கைக்கு ஒரு அர்த்தமும், குறிக்கோளும் இருப்பதைப் புரிந்து கொண்டேன். 'உங்களை விடுத்துத் தனியாக ஒரு கடவுள் இருக்கிறாரா என்பது கேள்வி அன்று. கடவுள் இல்லாமல் நீங்கள் தனியாக இருக்கிறீர்களா?' என்றுதான் ஆராயவேண்டும். 'நான் யார்?' என நாம் கேட்டுக் கொள்கிறோம். ஆனால் 'நான்' என ஒன்று உண்மையிலுள்ளதா? முதலில் 'நான்' என ஒன்று இருப்பதாகத்தான் நாம் நினைத்துக் கொள்கிறோம். பின்னர், அது யார் என்றோ அல்லது என்னவென்றோ கேட்கிறோம். 'இருப்பு' மட்டுமேதான் உள்ளது. நானோ அவனோ அதுவோ அல்லது மற்றவையோ எதுவும் இல்லை. இருப்பு ஒன்று மட்டுமே இருக்கிறது. தனித்து இருக்கும் அந்த இருப்பை நான், நீ, அவன் என்றும், இது, அது என்றும் நாம்தான் வெவ்வேறாகப் பிரிக்க முயற்சி செய்கிறோம். ஆனால் அந்த இருப்பைப் பிரிப்பது சாத்தியமா? நான் இருப்பதை நான் உணர்கிறேன். அதை வெளிப்படுத்த 'நான்' என்ற ஒரு சொல்லை உபயோகப்படுத்துகிறேன். அவ்வாறு செய்வதால்

வேறுபட்டவை உள்ளன என்று அர்த்தமில்லை. நான் இருப்பதை உணர்த்த ‘நான்’ என்ற சொல்லை உபயோகிப்பதைப் போன்று நீ இருப்பதை அறிவிக்க நீயும் ‘நான்’ என்ற அதே சொல்லையே பயன்படுத்துகிறாய். ஏனென்றால், இருப்பது ஒரு ‘நான்’ மட்டுமே. நான் சொல்லும் நானும், நீ கூறும் நானும் தனித்தனி வஸ்துக்களல்ல. அவ்வாறென்றால் தேடுதல் என்பதே அவசியமில்லையே? மனிதன் தனது இயல்பான நிலைக்குக் குதிரை அல்லது ஒரு மரத்தைப் போன்று தானாகவே ஏன் வளரக் கூடாது? தனது உண்மையான பரிமாணத்தையும், ஸ்வரூபத்தையும் பெறுவதற்காக மற்ற ஜீவராசிகளைப் போலல்லாமல் மனிதன் மட்டும் தனக்களிக்கப்பட்ட சக்திகளை, ஏன் தவறான முறையில் பயன்படுத்தத் தூண்டப்பட வேண்டும்? அனைத்து ஜீவராசிகளிலும், மனிதன் மட்டும் எதற்காக தனது ஆசைகளை அடக்குவதால் மட்டுமே தன் இயல்பு நிலைக்கு வரவேண்டும் என்பதை ஆராய்ந்தால், ‘மனிதனுக்கும், மற்ற ஜீவராசிகளுக்கும் உள்ள வேறுபாடு என்ன?’ என்ற கேள்வி எழுகிறது. படைப்பில் ஒரு விதத்தில் இல்லாவிட்டால் மற்றொரு விதத்தில், மனிதனை விட அதிகமாக சக்திகள் உள்ள ஜீவராசிகள் உள்ளன. அவற்றிலிருந்து எவ்வாறு மனிதன் வேறுபட்டு நிற்கிறான் என்றால் ‘நான் இருக்கிறேன்’ என்ற உணர்வு உள்ள அதே நேரத்தில் ‘தான் மனிதன்’ என்பதையும் அறிகிறான். ‘தான் மனிதன்’ என்ற உணர்வும் அவனுக்குள்ளது. (மனிதன் உணர்வாகவும், அறிவாகவும் இருக்கிறான்) சில சமயங்களில் ஒருவருக்கு, தூய இருப்பாக, தான் இருக்கும் அனுபவம் உண்டாகும். அவர் இருப்பாக இருப்பதோடு, அந்த உண்மையை உணரவும் செய்கிறார். இதுவே சுத்த சைதன்யம் என்றும், பிறகு அதை அறிந்து கொள்ளவும் செய்கிறார். எண்ணங்களை நிறுத்தி வைக்க முடியும். ஆனால் எண்ணங்கள் எழும் போதும், மெய்ப் பொருளின் இருப்பை அவை தடை செய்யாது. அந்நிலையில், சில சமயங்களில் அவன் ஆனந்தத்தை அனுபவிப்பதில்லை. இது அவனுக்கு ஒரு குறையாகத் தோன்றுகிறது. அவன் தன்னிடமோ அல்லது உபதேசங்களிலோ ஏதோ தவறு உள்ளது என்று எண்ண முற்படுகிறான். இதற்கு விளக்கம் தர வேண்டுமானால் மனம் ஒட்டுக் கேட்கிறது என்பதுதான் பொருள். யாருக்கு சந்தோஷம் இல்லை? எனக்கு! ஆனால் எனக்கு என்று கூறும் அந்த நான் (மனம்) அங்கு இருக்கத் தேவையேயில்லை. அழியக்கூடிய அது (மனம்) கடவுளை உளவு பார்க்கிறது. ‘இருப்பு’ ஆனந்தத்தை அனுபவிக்கிறது என்பது மட்டுமின்றி ஆனந்த ஸ்வரூபமாகவே உள்ளது. ஆனால் ஆனந்தமாகவே இருப்பதற்கு நிகழ்வதை வியாக்கியானம் செய்யும் ‘நான்’ அங்கு இல்லாமல் இருக்க வேண்டும் என்பது தான் முக்கியமான நிபந்தனை. வாழ்க்கையில் பற்றற்ற பணிகளும்கூட அஹங்காரத்தை அழிப்பதற்குப் போதுமானதாக இருக்காது. பற்றற்ற தன்மையை பலப்படுத்த வலுவான அதிக சக்தி வாய்ந்த செயல்பாடுகள் தேவை. இது சரணாகதியாகவோ விசாரமாகவோ இருக்கலாம். பகவத் கீதையில் பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் சரணாகதியையும், யோக வாசிஷ்டத்தில் வசிஷ்டமஹர்ஷி ஆத்ம விசாரத்தையும் பழகுமாறு அறிவுறுத்துகின்றனர். ரமணபகவானிடம் இது பற்றி வினவியபோது அவர் “இரண்டு வழிகள் உள்ளன. ஒன்று ‘நான் யார்’ என்று ஆராய்ந்து நோக்குங்கள் அல்லது இறைவனிடம் உங்களையே ஒப்படைத்து, சரணாகதி செய்யுங்கள்,” என்று கூறியுள்ளார். மனம், தன்னிடம் உள்ள சக்திகள் அனைத்திற்கும் தானே தலைவன் என்றோ, உரிமையாளர் என்றோ எண்ணிச் செயல்படுகிறது. தானே தலைவன் என்ற எண்ணத்தைத் துறந்து, தனது சக்திகளை ஆத்மாவிடம் அர்ப்பணித்துத் தானும் அந்தத் தூய இருப்பைச் சரணடைய வேண்டும் அல்லது உண்முகமாகி உண்மையான ஆத்மா அல்லது இருப்பு என்பது யாது என்று ஆராய வேண்டும்,”

பகவானுடைய விசாரப் பாதையைக் கடைப்பிடித்த போதும் அதனுடன் உண்மையான பக்தியையும், பற்றற்ற சேவையையும் ஆஸ்போர்ன் இணைத்துக் கொண்டார் - ஞானம், பக்தி, நிஷ்காம்ய கர்மம் இவற்றோடு கை கோர்த்துச் சென்றது. காலையிலும், மாலையிலும் பகவானுடைய

ஸமாதியின் முன் ஓதப்பட்ட வேதங்களைக் கேட்க அவர் தவறாது சென்று விடுவார். அவ்வாறு கேட்பது தியானத்திற்கு உதவியாக இருந்தது என்று உறுதியாகச் சொல்வார். ஒரு குடும்பஸ்தர் துறவு வாழ்க்கை வாழ்கிறார் என்றால், அதற்கு மிகச் சிறந்த உதாரணமாக ஆஸ்போர்னைக் கூறலாம். நான் அவரோடு இருந்த பல வருஷங்களிலும் அவர் ஒரு போதும் எந்தச் சூழ்நிலையிலும் கோபப்பட்டதில்லை. இது எளிதில் நம்பக்கூடியதில்லை. பதிப்பாசிரியர் என்னும் முறையில் எந்தவித விசேஷ சலுகைகளையும் ஒரு போதும் அவர் எதிர்பார்க்கவில்லை — ஏன் எதையுமே அவர் எதிர்பார்க்கவில்லை. அச்சடிக்கப்பட்ட புதிய பத்திரிகை இதழை நான் அவரிடம் கொடுத்த போதெல்லாம், அடுத்த இதழுக்கான கையெழுத்துப் பிரதியை என்னிடம் அவர் உடனே கொடுத்து விடுவார். பத்திரிகையின் பிரசுரம் தொடங்குவதற்கு முன்பே தனது குடும்பத்திற்காக மூன்று சந்தாக்களை அவர் கட்டியிருந்தார் என்பதோடு பதிப்பாசிரியராக இருக்கும் அவர் சந்தா கட்டத் தேவையில்லை என்று நான் கெஞ்சிக் கேட்டுக் கொண்ட போதும் அவர் வற்புறுத்திச் சந்தாவைக் கட்டி விடுவார்.

ஆஸ்போர்னுக்குப் பலவிதத்தில் எதிர்ப்பு இருந்தது. அவருடைய வாழ்க்கை முழுதும் மலர் தூவிய பாதையாக இருக்கவில்லை. முட்கள் பல இருந்தன. ஸம்ஸ்க்ருதம், இந்து பாரம்பர்யம் இவற்றை அறியாத மேலை நாட்டவர் அவர். ஆச்ரமச் சூழலிலோ அதுவே நிரம்பியிருந்தது. அவர் பத்திரிகை பதிப்பாசிரியராக இருப்பதை பலர் ஏற்கவில்லை. இவ்விஷயத்தில் பகவான் என்னை வழி நடத்தியதோடு என் தந்தையையும் ஒப்புக் கொள்ளும்படிச் செய்தார். ஆஸ்போர்னைப் பதிப்பாசிரியராகக் கொண்டு வரக்கூடாது என்பதற்காக என் தந்தை பல தொந்திரவுகளுக்கு உட்பட்டார். ஒவ்வொரு கட்டத்திலும் ஆஸ்போர்னும், நானும் பல பிரச்சனைகளை எதிர் கொள்ள வேண்டியிருந்தது. ஒரு முறை பத்திரிகைப் பிரசுரத்திலிருந்து நான் விலக விரும்புவதாகக் கூறியபோது அவர், ‘‘அன்புடைய கணேசன்! பத்திரிகை அச்சடிக்கும் பணி சென்னையில் நன்கு நடந்து வருகிறது என்பதை அறிந்து மகிழ்ச்சியடைகிறேன். மக்களின் விமர்சனத்தைக் குறித்து நாம் அதிகம் கவலைப்படத் தேவையில்லை. ஆனால் அதே சமயத்தில், அந்த விமர்சனத்தை ஆராய்ந்து, அதில் ஏதாவது நியாயம் உள்ளதா என்பதைக் கவனித்து, அவ்வாறு இருந்தால் நம்மைத் திருத்திக் கொள்ள முயல வேண்டும். மக்கள் உதவி செய்கிறார்களோ இல்லையோ, நமது பகவானுக்கு நாம் செய்யும் சேவையாக இப்பணி செய்யப்படுமானால் அதைத் தொடர்ந்து செய்யலாம். பத்திரிகைப் பதிப்பிற்காக எத்துணை வேலைகள் செய்ய வேண்டி இருக்கின்றன என்பதை விமர்சிப்பவர்கள் ஒரு வேளை அறியாமல் இருக்கலாம். பத்திரிகைக்காக நான் மேற்கொள்ளும் பணியை விமர்சிப்பவர்கள் நமது ஆச்ரமத்தினுள்ளேயே இருக்கிறார்கள் என்பது உனக்குத் தெரியும். பார்க்கப் போனால் அலுவலக மேலாளர், விளம்பரப் பதிப்பாசிரியர், முக்கிய துணை பதிப்பாளர் என்ற மூன்று பதவிகளையும் நீ வகிக்கிறாய். இவ்வளவு உற்சாகத்தோடும், திறமையோடும் ஒரே சமயத்தில் இம்மூன்றையும் கவனிக்கக் கூடிய ஒருவரைப் பற்றி என்னால் சிந்திக்கக் கூட முடியவில்லை. அதனால் மக்கள் விமர்சித்தாலும் இல்லாவிட்டாலும், பகவானுடைய அந்தப் பணிகளை நீயே தான் செய்தாக வேண்டும். நம்மைப் பொறுத்தவரையில் நமது குறிக்கோளை இடைவிடாது ஆராய்வது மிகவும் தேவையான ஒன்று. எனது அதிகாரத்தை உபயோகிக்க விரும்புகிறேனா அல்லது பகவானுக்கு சேவை செய்ய விரும்புகிறேனா? அவர்களிடமிருந்தும் இவர்களிடமிருந்தும் நற்பெயரைப் பெற விரும்புகிறேனா? அல்லது பகவானுக்கு சேவை செய்கிறேனா? நான் புகழை விரும்புகிறேனா? அல்லது பகவானுக்குப் பணி புரிகிறேனா? என்பதில் தீவிர கவனம் இருப்பது அவசியம். நீ செய்து கொண்டிருக்கும் இப்பணிக்கு எனது நல்வாழ்த்துக்கள்’’, என்று என் கடிதத்திற்குப் பதில் எழுதியிருந்தார். எனது மற்றொரு கடிதத்திற்குப் பதில் எழுதியபோது, ‘‘சிலர் பொறாமைப்படுவதாக நீ

எழுதியிருக்கிறாய். நான் இதை எதிர்பார்த்தேன். பொறாமையைக் கிளப்பி விடாமல் எதுவுமே வெற்றி பெற முடியாது. மனித இயல்பு அத்தகையது. உனக்கும் எனக்குமிடையே விரோதத்தை உண்டு பண்ணுவதற்குக் கூட அவர்கள் முயலலாம். நாம் பகவானுடைய வேலையில் முழு கவனத்தையும் செலுத்த வேண்டுமே தவிர, இம்மாதிரியான விஷயங்களில் நமது கவனத்தை விடாமல் இருப்பதே, நமது கொள்கையாக இருக்க வேண்டும். மக்கள் விமர்சிக்காத முறையில் நமது திறமைகளுக்கேற்ப இயன்றவரை சிறப்பாக உழைத்து எல்லா விதத்திலும் பத்திரிகையின் தரம் குறையாமல் கவனித்துக் கொள்ள வேண்டும். உனது முயற்சிக்கு பகவானுடைய அருள் துணையாக நிற்கட்டும். நல் வாழ்த்துக்களுடன்'' என்று ஆஸ்போர்ன் குறிப்பிட்டிருந்தார்.



**ஆர்தர் ஆஸ்போர்னுடன் வி.கணேசன்**

உடல், மனம், ஆன்மீக அளவுகளில் இவ்வளவு உன்னதர அனுபவங்கள் பெற்று பகவானுடைய அருளையும் பூரணமாகப் பெற்றிருந்த ஆஸ்போர்னைப் போன்று ரமணாச்ரமத்தில் நான் வேறு எவரையும் சந்தித்ததில்லை. நான் அவரைப் புகழ்ந்த போதெல்லாம் 'வாழ்க பகவான் நாமம் ! இவை அனைத்துமே அவர் செயல்!' என்று கூறிவிடுவார். தான் எழுதிய கட்டுரை ஒன்றைக் காட்டிவிட்டுப் பின்னர் 'இதற்கு பகவானேதான் காரணம்' என்று கூறுவார். 'இதை நான் எழுதவில்லை. பேனா பிடித்தேன். அவ்வளவுதான். எழுதியது பகவானே' என்பார். மற்றவர்களுடன் ஒப்பிட முடியாத ஆன்மீகப் பண்புகளோடு விளங்கிய சிறந்த மனிதர் ஆஸ்போர்ன். அவர் முழு மனதோடு ஆத்மானுபூதியைப் பெற உழைத்தார். பகவான் அருளால் அதைப் பெறவும் செய்தார். அவருடைய வாழ்க்கை, செயல், இவற்றின் மூலம், தான் உயர்ந்த நிலையில் முழுமையாக இருப்பதை எனக்கும், மற்ற பக்தர்களுக்கும் நிரூபித்துக் காட்டினார். அந்நிலையை அடைவது சாத்தியமானதே என்பதை அறிந்த போது, அது எங்களுக்கு மிகுந்த உற்சாகத்தைத் தந்தது. நான் ஆச்ரமத்தில் இருந்த மற்றொரு பழைய பக்தரிடம் ஆஸ்போர்னுடைய வாழ்க்கை ஆத்மஸாக்ஷாத்காரம் பெறுவது சாத்தியமே என்பதை உணர்த்துகிறது எனத் தெரிவித்த போது அவர் அதை மறுத்து ''சாத்தியம் என்று நீங்கள் உபயோகித்த அந்தச் சொல் மிகவும் பலவீனமானது. ஆத்மானுபூதி என்பது நிச்சயமாக நிகழக்கூடிய ஒன்று'' என்று உறுதி படக் கூறினார். ஆம்! ஆத்மானுபூதி நிச்சயமே!



# 73 பப்பாஜீ



எல்லோருக்குமே ரோஜா என்றால் என்னவென்று தெரியும். அதை ரசிப்பதற்கு ரோஜாவைப் பற்றிய விரிவான வர்ணனை எதுவும் தரவேண்டிய அவசியமில்லை. அதன் புத்துணர்ச்சிக்காகவும், நறுமணத்திற்காகவும் ரோஜா மதிக்கப்படுகிறது. அதேபோன்று பப்பாஜீயைப் பற்றி எல்லோருக்குமே தெரியும். நான் அவரைப் பற்றிக் கூறப்போவது எதுவும் புதிதல்ல. எத்துணை முறை ரோஜாவைப் பார்த்தாலும், அது தரும் புத்துணர்ச்சி எவ்வாறு ஒருபோதும் குறைவதில்லையோ, அதே போன்று பப்பாஜீயைப் பற்றி எத்தனை முறை யாகிலும் சரி ஆர்வம் குறையாமல் படிக்க முடியும்.

அருணாசலத்தைப் பற்றிய உண்மையும் ‘நான் இருக்கிறேன்’ என்பதன் உண்மையும் உலகெங்கும் பரவ வேண்டியதாக இருந்தது. ஏனென்றால், தந்தை அருணாசலம் தனயன் ரமண மஹர்ஷிக்கு இட்ட கட்டளை அது. 1896-ம் ஆண்டு செப்டம்பர் முதல் தேதி - மகன் அருணாசலத்திற்கு வந்து சேர்ந்த அந்த நொடியிலிருந்து தந்தை மகனை மார்போடு இறுக அணைத்துக் கொண்டுவிட்டார். மௌனம் காப்பதுடன், தான் வாழும் இடத்தை விட்டு அசையாதிருக்க வேண்டுமென்பதே அருணாசலம் தனக்களித்த ஆன்மீக அறிவுரை என்பதை ரமண பகவான் புரிந்து கொண்டுவிட்டதால் 1950-ம் ஆண்டு ஏப்ரல் பதினான்காம் தேதி தான் உடலை விடும் வரை ஐம்பத்து நான்கு வருடங்கள் அவர்அருணாசலத்தை விட்டு நகரவில்லை. அவர் இவ்வாறு அசைவின்றி இருந்த நிலையில், அருணாசலத்தின் ஆணையை அவரால் எவ்வாறு நிறைவேற்ற இயலும்? தெய்வீகச் செய்தியை - ஞானத்தை உலகெங்கும் பரப்புவது எப்படி சாத்தியமாகும்?

அதனால் உலகமே பகவானிடம் வந்தது. அவரது பக்தர்கள் நேரடியாகவோ அல்லது அவர்களின் எழுத்தின் மூலமோ ‘நான் இருக்கிறேன்’ என்ற ஸத்தியத்தை உலகம் முழுவதும் பரப்பினர். பகவான் உடலை நீத்த பின்னர் உலக மக்களோடு இந்த உண்மையைப் பகிர்ந்து கொள்ளும் குறிக்கோளுடன் அவரது சிறந்த பக்தர்கள் மூவர் செயல்பட முற்பட்டனர். மதி நுட்பம், பூரண பக்தி, அற்புதமான சொல்வளம் இவற்றுடன் எழுதப்பட்ட தனது கட்டுரைகள் மூலம் ஆத்மஸாக்ஷாத்காரம் பெறுவதற்கு ஆத்ம விசாரம் வழி வகுக்கும் என்ற உண்மையை ஆர்தர் ஆஸ்போர்ன் பரப்பினார் என்றால் ராபர்ட் ஆடம்ஸ், பப்பாஜீ என்ற மற்ற இரு பக்தர்கள் தங்கள் ஸத்ஸங்கங்களின் மூலம் பகவானது போதனையான அந்த உண்மையைப் பரப்பினார்கள். இந்த பக்தர்கள் பகவானது உபதேசங்களை எடுத்துரைப்பதோடு மட்டுமின்றி அதை அனுபவபூர்வமாக உணர்ந்து கொள்வதற்கும் உதவினர். ‘நான் இருக்கிறேன்’ என்பதன் உண்மையை — தாங்களே மெய்ப்பொருள் என்ற ஸத்தியத்தை பப்பாஜீ, ராபர்ட் ஆடம்ஸ் மற்றும் பகவானின் பக்தர்கள் முன்னிலையிலும் எண்ணிலடங்காத ஸாதகர்கள் அனுபவித்துள்ளனர்.

பேரொளியாகவே விளங்கும் இறைவனுடன் தன்னை இணைத்துக் கொள்ள வழியறியாது இருட்டில் திணறிக் கொண்டிருக்கும் மனிதனுக்கு ஒரு இணைப்பு தேவைப்படுகிறது. அந்த இணைப்பே குரு. அவர் ஞானியின் உருவிலோ அல்லது ஒரு மஹானாகவோ உருவெடுத்து வருவது மனிதகுலம் தெய்வீகத் தன்மையை துய்த்து மட்டிலா மகிழ்வு பெற வேண்டும் என்பதற்காகவே. அவ்வாறு அவதரித்த குருமார்களில் சிலரே இயேசுநாதர், ஆதி சங்கரர், ஸ்ரீ ராமகிருஷ்ண

பரமஹம்ஸர், பகவான் ரமணர் முதலியோர். இறைவனை எளிதில் அடைய மனிதனுக்கு உதவும் வகையில் மேற்கூறப்பட்ட குருமார்கள் சீடர்களை உருவாக்கி இணைப்பைப் பலப்படுத்தினர். இயேசுநாதருக்கு செயின்ட் பீட்டர், செயின்ட் ஜான் போன்ற சீடர்கள் இருந்தது போன்று பரமஹம்ஸருக்கும், பகவான் ரமணருக்கும் பல சீடர்கள் இருந்தார்கள். ரமண பகவானின் சீடர்கள் 'நான் இருக்கிறேன்' என்பதன் உண்மையைப் பரப்பியதோடு 'அருணாசலத்தின் மகனே பகவான்' என்பதையும் நிலைநாட்டினர். 'எவன் ஆத்மாவால் தேர்ந்தெடுக்கப்படுகிறானோ அவனாலேயே ஆத்மா அடையப்படும். அவனுக்கு ஆத்மா தனது உண்மை ஸ்வரூபத்தை வெளிப்படுத்தும்' என்று கடோபநிஷதம் கூறுகிறது. ஆத்மா ஒருவரைத் தேர்ந்தெடுத்துத்தான் தன்னை வெளிப்படுத்திக் கொள்ள முடியும். காவ்யகண்ட முனி, சூரி நாகம்மா, ஆர்தர் ஆஸ்போர்ன் போன்ற பக்தர்களெல்லாம் இவ்வாறு சிறுவயதிலேயே தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்.

இதே போன்று ஆத்மாவே தேர்ந்தெடுத்துத் தன்னை வெளிப்படுத்திக் கொண்ட மற்றொரு பக்தர் பப்பாஜீ என்றழைக்கப்பட்ட H. W. L பூஞ்ஜா. எட்டு வயதிலேயே பூடகமான அனுபவங்களை அவர் பெற்றிருந்தார். அந்த அனுபவங்களைப் பற்றி பப்பாஜீ கூற முற்பட்டபோது, "ஒரு நாள் மாலையில் நான் என் தாயாருடனும் சில உறவினர்களுடனும் அமர்ந்திருந்தேன். திடீரென்று ஏதோ ஒன்று என்னை எல்லையில்லா சந்தோஷத்திலும், சாந்தியிலும் ஆழ்த்தியது. கண்கள் மூடிக் கொண்டதோடு, உடலும் அசைவற்றுப் போனது. ஆனால் என்னைச் சுற்றி நிகழ்பவற்றை நான் உணர்ந்து கொண்டதுடன் சுற்றிலுமிருந்து வந்த ஓசைகளையும் என்னால் கேட்க முடிந்தது. அங்கு இருந்தவர்கள் இயல்பு நிலைக்கு என்னைக் கொண்டு வர முயல்வது புரிந்தது. அந்த அனுபவம் என்னை முற்றிலுமாக விழுங்கிவிட்டதால், நான் மேலும் இரு தினங்கள் அந்த ஆனந்த நிலையிலேயே இருந்தேன். என் சுற்றுச் சூழலை நான் நன்றாக உணர்ந்து கொண்டபோதும், என்னால் யாரோடும் தொடர்பு கொள்ள முடியவில்லை. உள்ளம் மட்டும் ஆனந்தத்தில் திளைத்தது" என்று கூறினார். தனது மகனின் நிலையைப் பப்பாஜீயின் தாய் உணர்ந்து கொண்டு அவனுக்கு உதவ விரும்பி ஆனந்த நிலையிலிருந்து இயல்பு நிலைக்கு வந்த பின்னர், ஸ்ரீ கிருஷ்ணரின் படம் ஒன்றை மகனிடம் தந்தார். பப்பாஜீயின் மனதை அப்படம் உடனேயே வெகுவாக ஈர்த்தது என்பதுடன் தாயும் அதற்கு வழிபாடு செய்யுமாறு ஊக்குவிக்கவே விரைவிலேயே அவர் கிருஷ்ண பக்தரானார். தீவிரமான பக்தியுடன் வழிபட்டதால் அவருக்குக் கிருஷ்ண தரிசனங்கள் உண்டாயின. பல முறை தான் கிருஷ்ணருடன் விளையாடிக் கொண்டிருப்பதை உணர்ந்தார். பப்பாஜீ விரும்பிய போதெல்லாம் படத்திலிருந்த அதே உருவத்தில் கிருஷ்ணன் அவர் முன் காட்சியளிப்பான். வீட்டிலுள்ளவர்கள் அவர் விளையாடுவதைக் காண்பார்களே தவிர ஒரு போதும் யாருடன் அவர் விளையாடுகிறார் என்பதை அறிந்து கொள்ள இயலவில்லை.

பள்ளியில் புத்தருடைய படம் ஒன்று பப்பாஜீயை மிகவும் வசீகரித்தது. ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெற்ற நிலையில் காணப்பட்ட மிகவும் மெலிந்த தோற்றத்தை அது வெளிப்படுத்தியது. புத்தரின் வாழ்க்கையை விரிவாகப் படித்தறிந்து கொண்டார் பப்பாஜீ. ஆத்மாவால் தேர்ந்தெடுக்கப்பட்ட பின் என்ன செய்ய வேண்டுமென்பது அதற்கு நன்றாகவே தெரியுமென்பதால் பப்பாஜீக்கு அவரது இளம்வயதிலேயே ஆன்மீக அனுபவங்கள் கைகூடின. இறைக்காட்சிகளைக் கண்டு பரவசமடைந்தார். ஆயினும் எட்டு வயதில் தான் அனுபவித்த சாந்தியையும், அமைதியையும் மீண்டும் அனுபவிக்க ஏங்கினார்.

இந்துக் குடும்பங்களில் அக்காலத்தில் ஸஹஜமாக இருந்த வழக்கத்தின்படி பப்பாஜீயின் பதினாறாவது வயதிலேயே அவரது பெற்றோர் அவருக்குத் திருமணம் செய்து வைத்தனர். திருமணம்




**பழைய ஹாலில் ஸ்ரீ பகவான்**

ஆன உடனே அவரது குடும்பத்தைக் கவனிக்க வேண்டிய பொறுப்பு வந்து சேர்ந்தது. அவரது தந்தை சம்பாதிக்க வேண்டுமென வற்புறுத்தியதால் ராணுவ பயிற்சி மையத்தில் சேர்ந்து அதில் அதிகாரியாவதற்குத் தேவையான பயிற்சியைப் பெற விழைந்தார். எனினும் அடிக்கடி கிடைத்த கிருஷ்ண தரிசனங்களால் மந்திரத்தால் கட்டுண்டவர் போன்று வசீகரிக்கப்பட்டு படிப்பிலிருந்து திசை திருப்பப்பட்டதால் பப்பாஜீ கிருஷ்ணனுடன் விளையாடுவதும், பூஜை செய்வதுமாக இருந்தார். அவ்வப்போது சிறிது நேரத்திற்கு மட்டுமே கிடைத்து வந்த இந்த சந்தோஷத்தால் திருப்தியடையாத அவர் இறைவனுடன் நித்தியமாக ஆனந்தத்தை அனுபவிக்க விரும்பினார். இந்தப் பேராவல் எப்போதும் தொடர்ந்து இருந்து வந்ததால் குடும்பத்தைத் தனது தந்தையோடு விட்டுவிட்டு, தான் நிரந்தரமாக இறைவனுடன் வாழ வழிகாட்டக் கூடியவரைத் தேடிச் செல்ல வேண்டிய நிலைக்குள்ளானார். இந்தியா முழுவதும் பயணம் செய்து ஸாதுக்களையும், ஸந்நியாசிகளையும் ஆச்ரமங்களில் சென்று சந்தித்தார். அவர் சிறிதும் மாற்றமின்றிக் கேட்ட கேள்வி “நீங்கள் கடவுளைப் பார்த்திருக்கிறீர்களா? எனக்கு இறைவனைக் காட்டித்தர முடியுமா?” என்பதுதான். ஆனால் அவர்கள் அளித்த பதில்கள் அவருக்குத் திருப்தியைத் தரவில்லை.

நம்பிக்கை இழந்த நிலையில் அவர் வீடு திரும்பினார். ஆனால் அவருக்குள் இறைநாட்டம் கொழுந்து விட்டெரிந்து கொண்டே இருந்தது. தனது வீட்டிற்கு வந்த ஸாதுக்களுக்கெல்லாம் உணவளித்து தன்னைச் சுட்டெரித்த அக்கேள்விகளை விடாமல் கேட்டுக் கொண்டிருந்தார். ஒரு

நாள் ஸாது ஒருவர் வீட்டின் கதவைத் தட்டவே பப்பாஜீ மிகுந்த மரியாதையுடன் அவரை வரவேற்று, உபசரித்து உணவளித்தார். தனது வழக்கமான கேள்விகளை அவரிடம் கேட்ட போது அவர் புன்னகை செய்தவாறு, "உங்கள் கேள்விகளுக்கு விடையளிக்கக் கூடிய ஒரு ஸ்வாமியை உங்களுக்கு என்னால் காட்ட முடியும்" என்று பதிலிறுத்தார். பப்பாஜீ உடனே "அவர் எங்கிருக்கிறார்? அவருடைய பெயர் என்ன?" என்று வினவினார். அந்த ஸாது "அவர் பெயர் ரமண மஹர்ஷி. அருணாசலத்தில் ரமணாச்ரமம் என்னும் ஒரு ஆச்ரமத்தில் அவர் இருக்கிறார்" என்று கூறியதோடு அங்கு செல்வதெப்படி என்றும் விளக்கிக் கூறினார். கடைசியாக இறைவனை அடையும் வழியைத் தனக்குக் காட்டப்போகும் ஒரு ஸ்வாமியைத் தான் சந்திக்கப் போகிறோம் என்ற பேரானந்தத்தில் மூழ்கினார் பப்பாஜீ. அப்போது மிகுந்த ஏழ்மையில் இருந்த அவர், செய்தித்தாள் ஒன்றைப் புரட்டிப் பார்த்துக் கொண்டிருந்த போது சென்னையிலுள்ள ராணுவ சிற்றுண்டி சாலை ஒன்றை நிர்வகிக்கும் வேலைக்கான விளம்பரம் அவர் கண்ணில்பட்டது. அந்த வேலைக்கான தகுதிகளனைத்தும் பப்பாஜீயிடம் பொருந்தியிருந்தன. அவர் நேர் காணலுக்காகச் சென்ற போது, "நீங்கள் உடனே வேலையில் சேர வேண்டிய அவசியமில்லை. ஒரு மாதத்திற்குப் பின் சேர்ந்து கொண்டால் போதுமானது. ஆனால் தற்போது தங்களுக்கான செலவுத் தொகையை ஈடுகட்டி விடுகிறோம்" என அவர்கள் கூறினர். ஆத்மா ஒருவரைத் தேர்ந்தெடுத்ததென்றால் தேவையானவற்றிற்கு அதுவே வழி வகுக்கிறது.

1944-ல் பப்பாஜீ சென்னையை அடைந்த போதே, அவருக்கு வயது முப்பத்து நான்கு. தன்னை வாட்டிக் கொண்டிருக்கும் கேள்விகளுக்குப் பதிலளித்து, இறைவனை தனக்குக் காட்டப்போகும் ஸ்வாமியைக் காண மிகுந்த ஆர்வத்தோடும் எழுச்சியோடும் உணர்ச்சி வசப்பட்ட நிலையில் பப்பாஜீ இருந்தார். ரமணாச்ரமம் சென்றதும் பலரும் தங்கக்கூடிய ஒரு பெரிய அறையில் தனது மூட்டை முடிச்சுக்களை வைத்துவிட்டு ஸ்வாமி அமர்ந்திருப்பதாகக் கூறப்பட்ட பழைய ஹாலுக்குப் பப்பாஜீ சென்றார். ஜன்னல் வழியாக உள்ளே எட்டிப் பார்த்த போது அவர் கண்ட காட்சி அவருக்குப் பெருத்த ஏமாற்றத்தைத் தந்ததுடன் கசப்பூட்டுவதாகவும் இருந்தது. "அன்று பஞ்சாப்பில் எனது இல்லத்திற்கு வந்த அதே ஸாதுதான் இங்கு அமர்ந்திருக்கிறார். என்னிடம் தனது பெயரையும் விலாசத்தையுமே கொடுத்துவிட்டு இப்போது இங்கு வந்து சோபாவில் உட்கார்ந்திருக்கிறார். இவர் ஒரு ஏமாற்றுப் பேர்வழி. இங்கு நான் ஒரு நிமிஷம் கூடத் தங்கமாட்டேன்," என்று தனக்குள்ளேயே கூறிக் கொண்டார். கொதித்தெழுந்து சீற்றத்துடனும், ஏமாற்றத்துடனும் பொதுஅறைக்கு ஓடிச் சென்று அங்கு தான் வைத்திருந்த பொருட்களையெல்லாம் மிகவும் வேகமாக எடுத்துக் கொண்டு புறப்படத் தயாரானார். இருந்த போதும் பழைய பக்தரான ஃப்ராம்ஜீ தோரப்ஜீ அவரிடம், "நீங்கள் இங்கு ஒரு மணி நேரம் கூடத் தங்கவில்லை. மிகத் தொலைவிலிருந்து வந்துள்ள நீங்கள் எதற்காக இவ்வளவு அவசரமாகத் திரும்பிச் செல்கிறீர்கள்?" என்று வினவினார். தான் கண்ட காட்சியைப் பற்றிக் கூறி "இந்த ஸ்வாமி ஒரு ஏமாற்றுக்காரர். தன் பெயரையும் விலாசத்தையுமே தந்து கடவுளைக் காட்டுபவர் என என்னிடம் கூறியவர் இவரேதான். இவர் ஏமாற்றுப் பேர்வழி என்பதில் சந்தேகமில்லை. எனக்கு நன்றாகவே புரிந்து விட்டது" என பப்பாஜீ உரைத்தபோது ஃப்ராம்ஜீ வேதனை தோய்ந்த குரலில் "ஏதோ தவறு நேர்ந்துள்ளது. பகவான் நாற்பத்தெட்டு வருடங்களாக அருணாசலத்தை விட்டு வெளியில் எங்குமே சென்றதில்லை" என்று கூறினார். அப்போதும் கோபத்தால் கொதித்துக் கொண்டிருந்த பப்பாஜீயை ஆச்ரமத்தில் உணவு உண்டு பகவானது பிரசாதத்தை ஏற்குமாறு ஃப்ராம்ஜீ தூண்டிப் பணிவோடு வேண்டினார். மதிய உணவிற்குப் பின் பகவான் பழைய ஹாலில் சற்று ஓய்வெடுப்பது வழக்கமாதலால் விருந்தினர்கள் மதியம் பன்னிரண்டு மணி முதல் இரண்டு மணி வரை அவரைத் தொந்தரவு செய்ய வேண்டாமென அறிவுறுத்தப்பட்டிருந்தனர். பப்பாஜீ மஹர்ஷியை பின்

தொடர்ந்து ஹாலுக்குள் செல்ல முனைந்தபோது பகவானது தொண்டர் கிருஷ்ணஸ்வாமி அவரைத் தடுக்க முற்பட்டார். ஏற்கனவே ஹாலுக்குள் சென்றுவிட்ட பகவான் கிருஷ்ண ஸ்வாமியை அழைத்து, "அவரை உள்ளே விடு" என்றுரைத்தார்.

இதன் பிறகு என்ன நடந்தது என்பதை பப்பாஜீயே கூறக்கேட்போம். "ஸ்வாமியுடன் சண்டையிடும் நோக்கத்துடன் அவரை அணுகி 'பஞ்சாப்பில் எனது இல்லத்தில் என்னைக் காண வந்தது நீங்கள் தானே?' என்றேன். மஹர்ஷி மௌனமாக இருந்தார். நான் மீண்டும் 'நீங்கள் என் வீட்டிற்கு வந்து என்னை இங்கு வருமாறு கூறவில்லையா?' என்றேன். அப்போதும் அவர் பதில் எதுவும் கூறவில்லை. பதில் சொல்ல விருப்பமில்லை என்பதால் அங்கு வந்த காரியத்தில் இறங்கி நான் கேட்க எண்ணிய கேள்விகளை அவரிடம் கேட்டேன். 'நீங்கள் கடவுளைக் கண்டதுண்டா? உண்டென்றால் நானும் அவரைக் காண உதவ முடியுமா? இக்கேள்விகளுக்கு நீங்கள் விடையளித்தால் அதற்கீடாக எதை வேண்டுமானாலும், என் உயிரையும் கொடுக்கத் தயாராக இருக்கிறேன். ஆனால் ஒப்பந்தப்படி நீங்கள் கடவுளை எனக்குக் காட்டிக் கொடுத்தே ஆக வேண்டும்' என்று கூறியபோது ஸ்வாமி 'முடியாது. என்னால் கடவுளை உங்களுக்குக் காட்ட முடியாது. கடவுளைக் காண என்னால் உதவி செய்ய முடியாது ஏனென்றால் அவர் காணக்கூடிய ஒரு பொருளன்று. கடவுள் என்பது 'தன்மை'. காண்பவன் அவனே! காணப்படும் பொருட்களில் உங்கள் கவனத்தைச் செலுத்த வேண்டாம். 'காண்பவன் யார்?' என அறிந்து கொள்ள முயற்சி செய்யுங்கள். நீங்களேதான் கடவுள்' என்று கூறிவிட்டு 'கடவுளைக் காண மிகுந்த ஆர்வத்துடன் இருக்கும் அந்த 'நானை'ப் பற்றித் தெரிந்து கொள்ளுங்கள்' என்று கூறி முடித்தார். பின் அவர் என் கண்களை மிக ஆழமாகக் கூர்ந்து நோக்கியதன் விளைவாக என் உடல் முழுவதும் நடுங்க ஆரம்பித்து விட்டது. உடலில் ஒவ்வோர் அணுவும் நடுங்குவதை என்னால் உணர முடிந்தது. உடலில் ரோமங்கள் குத்திட்டு நிற்கும் அளவுக்கு அது வலுவாக இருந்தது. நம்புங்கள்! நான் என் ஆன்மீக இதயத்தை அவர் முன்னிலையில் உணர்ந்து கொண்டேன். நான் கூறுவது மார்பில் துடிக்கும் அந்த இதயமன்று. ஆனால் அனைத்து ஜீவராசிகளுக்கும் ஆதாரமாகவும் மூலமாகவும் விளங்கும் இதயத்தைப் பற்றிக் கூறுகிறேன். மஹர்ஷியின் ஸந்நிதியில் அந்த இதயம் மலர்ந்து விரிந்தது. அத்தகைய அசாதாரண அனுபவத்தை நான் அதுவரை பெற்றதில்லை. எந்த அனுபவத்தையும் எதிர்பார்த்து நான் வராததால் அது நிகழ்ந்தபோது சற்றும் எதிர்பாராமல், முற்றிலுமாக என்னை வியப்பிலாழ்த்தியது" என்று பப்பாஜீ கூறினார்.

ஆயினும் இந்த அனுபவம் பப்பாஜீக்கு நீடித்த திருப்தியை அளிக்கவில்லை. இந்த ஆன்மீக அனுபவத்திற்குப் பின்னும், கடவுளைத் தேகத்தோடு கூடிய ஒருவராகக் காண வேண்டும் என்ற தீராத்தாகம் அவருக்கு இருந்தது. "நான் தேனாக இருக்க விரும்பவில்லை. தேனை ருசிக்கத்தான் விரும்பினேன்" என்று அவர் கூறுவார். அதனால், அவர் ரமணாச்ரமத்தை விட்டு மலைக்கு மறுபக்கம் இருக்கும் அடி அண்ணாமலைக்குச் சென்றார். சென்னையில் பணியில் சேர்வதற்கு முன்வரை, அங்கு ஸ்ரீ கிருஷ்ணனோடு விளையாடியபடி தன் பொழுதைக் கழித்தார். வயதானவருக்கு மரியாதை செலுத்த வேண்டும் என்பதற்காகச் சென்னை செல்லுமுன் விடை பெறுவதற்காக ரமணாச்ரமத்திற்குச் சென்றார். இங்கு குருவுக்கும் சீடனுக்கும் இருந்த அழகான உறவை நாம் கவனிக்க வேண்டும். பப்பாஜீ பகவான் முன் சென்ற போது, "நீங்கள் எங்கே போயிருந்தீர்கள்? எங்கே தங்கியிருந்தீர்கள்?" என்று பகவான் அவரிடம் கேட்டார். சாதாரணமாக இத்தகைய கேள்விகளை பகவான் கேட்பதில்லை. பப்பாஜீ "நான் மலைக்கு மறுபக்கம் இருந்தேன்" என்று கூறியதும் "அங்கு என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?" என்று தொடர்ந்து கேட்டார் பகவான். தன்னைத்தானே

மெச்சியபடி “என் இஷ்ட தெய்வமான ஸ்ரீ கிருஷ்ணனுடன் விளையாடிக் கொண்டிருந்தேன்” என்று பப்பாஜீ கம்பீரமாக பதிலளித்தார். தன் முன்னால் அமர்ந்திருக்கும் அந்த மனிதர், இம்மாதிரியான அனுபவங்களை நிச்சயமாகப் பெற்றிருக்க மாட்டார் என்று முழுமையாக நம்பியதால் மிகுந்த பெருமையோடும், உயர்வு மனப்பான்மையோடும் தைரியமாகப் பதில் கூறினார். மிகுந்த ஆச்சரியத்தோடும் அக்கறையோடும் “அப்படியா? ரொம்ப நல்லது! அவனை இப்போது பார்க்கிறீர்களா?” என்று விளக்கம் கேட்டார் பகவான். “இல்லை ஸ்வாமி! இப்போது பார்க்கவில்லை. எனக்குத் தெய்வீகக் காட்சிகள் கிடைக்கும்போது மட்டுமே அவனைக் காண்கிறேன்” என்று பப்பாஜீ பதில் கூறினார். மஹர்ஷிக்குத் திவ்யதரிசனங்கள் கிடைத்திருக்காது என்பதில் அவருக்கு எள்ளளவும் சந்தேகம் இருக்கவில்லை என்பதால் பதில் கூறியபோது தன்மீது தனக்கிருந்த திருப்தியை வெளிபடுத்தும் விதத்திலேயே பதில் வந்தது. “ஓஹோ! அப்போது கிருஷ்ணன் உங்களோடு வந்து விளையாடி விட்டுப் போய்விடுகிறான். அப்படித்தானே!” என்று மொழிந்த பகவான், பின் ஆழமான ஒரு கருத்தை வெளிப்படுத்தினார். “வந்து பின் மறைந்து போகக் கூடிய ஒரு தெய்வத்தால் என்ன பிரயோஜனம்? அவன் உண்மையான கடவுளாக இருந்தால் உங்களுடனேயே எப்போதும் இருக்க வேண்டுமல்லவா?” என்று பகவான் கூறினார். அவரது ஆழமான இந்தக் கருத்தும்கூட பப்பாஜீக்கு நம்பிக்கையைத் தரவில்லை.

பப்பாஜீ, சென்னைக்கு வந்து மீண்டும் பணியில் சேர்ந்தார். வெளியில் காணக் கூடிய கடவுளிடமே அவருக்கு ஈர்ப்பு இருந்ததால், தன் கிருஷ்ணனோடு தொடர்ந்து விளையாடியபடி இருந்தார். வேலையை முடித்துக் கொண்டு வீடு திரும்பிய பின் தன்னந்தனியாக அமர்ந்து கொண்டு ஸ்ரீ கிருஷ்ணனுடைய நாமத்தை இருபத்தையாயிரம் முறை ஜபித்தார். பின் இதை இரண்டு மடங்காக்கினார். ஒரு நாள் அதிகாலையில், கதவை யாரோ தட்டுவதுபோல் தோன்றிய போது, அதைத் திறந்து நோக்கினார். அப்போது ஸ்ரீ ராமர், சீதா, லக்ஷ்மணர், அனுமான் ஸமேதராக திவ்யதரிசனம் தந்து பின் வெகு விரைவிலேயே மறைந்து விட்டனர். அப்போது முதல், தினமும், வழக்கமாகச் செய்து வந்த ஜபத்தில், தன் முழுமையான கவனத்தை அவரால் செலுத்த முடியவில்லை என்பதை உணர்ந்தார். உண்மையைச் சொல்லப் போனால் அவர் வழக்கமாகப் படிக்கும் ஆன்மீக புத்தகங்களையும் அவரால் படிக்க முடியவில்லை. ஏனென்றால், அவருடைய மனம், எண்ணங்களற்ற நிலையில் இருந்தது. இந்த நிலை, அவருக்கு ஒரு புரியாத புதிராக இருந்தது. இதன் பிறகு அவரது பூஜை அறையில் ரமண மஹர்ஷி சிரித்தவாறு காட்சியளித்தார். மஹர்ஷியின் ஸந்நிதியில் இந்த அமைதியான நிலையையே, தான் அனுபவித்தது அவருக்கு அப்போது நினைவுக்கு வந்தது. “நான் ரமணாச்ரமம் சென்று எனக்கு என்ன ஆயிற்று என்றும் எல்லாம் ஸ்தம்பித்து விட்டன என்றும், ஆன்மீக ஸாதனைகள் எதையும் என்னால் பழக முடியவில்லை என்றும் கூறி பகவானிடமிருந்தே காரணத்தைத் தெரிந்து கொண்டு வரலாம்” எனத் தனக்குள் எண்ணினார்.

பப்பாஜீ அருணாசலத்திற்குச் சென்ற போது, முன் நிகழ்ந்தது போன்றே, உணவுக்குப் பின் ஹாலுக்குச் சென்ற மஹர்ஷியைப் பின் தொடர்ந்து போன அவரைக் கிருஷ்ணஸ்வாமி தடுத்து நிறுத்தினார். பகவான் அவரை உள்ளே அனுமதிக்கும்படி கூறவும் அவர் பகவான் முன் அமர்ந்தபோது, இதுதான் நிகழ்ந்தது என்றார் பப்பாஜீ. “நான் மஹர்ஷியின் முன் அமர்ந்து என் வாழ்க்கையில் நிகழ்ந்தவற்றைக் கூறத் துவங்கினேன். ‘இருபத்தைந்து ஆண்டுகளாக நான் ஸாதனைகளைப் பழகி வருகிறேன். கிருஷ்ண நாமத்தை ஒரு நாளைக்கு ஐம்பதாயிரம் முறை ஜபித்துக் கொண்டிருந்தேன். பல ஆன்மீகப் புத்தகங்களையும் படித்து வந்தேன். சீதா, லக்ஷ்மணர், அனுமார் இவர்களுடன் ஸ்ரீ ராமர் தரிசனம் தந்தருளியபின் மேற்கூறியவற்றில் எதையும் என்னால்



**நீ எங்கிருந்தாலும் நான் உன்னுடன் இருக்கிறேன்**

செய்ய முடியவில்லை. தியானம் செய்வதும், புத்தகங்கள் படிப்பதும்கூட என்னால் செய்ய இயலவில்லை. மனதில் ஆழ்ந்த அமைதி உள்ளதென்றாலும் கடவுளைக் காண வேண்டும் என்ற ஆசை இப்போது இல்லை. கடவுளைப் பற்றி நினைக்கவே என் மனம் மறுக்கிறது. எனக்கு என்ன ஆகிவிட்டது? நான் என்ன செய்ய வேண்டும்?' என்று மஹர்ஷியிடம் கேட்டேன். மஹர்ஷி என்னை நோக்கி, 'நீங்கள் சென்னையிலிருந்து எப்படி வந்தீர்கள்?' என்று கேட்ட போது, அவர் ஏன் இந்தக் கேள்வியைக் கேட்க வேண்டும் என்பது புரியாதபோதும் மரியாதையோடு 'நான் ரயிலில் வந்தேன்' என்று பதில் கூறினேன். 'நீங்கள் திருவண்ணாமலை ரயில் நிலையத்திற்கு வந்த போது என்ன நடந்தது?' என்று அவர் தொடர்ந்தபோது 'நான் ரயிலில் இருந்து இறங்கி, டிக்கெட்டைக் கொடுத்துவிட்டு ஆச்ரமத்திற்கு அழைத்துச் செல்ல ஒரு மாட்டு வண்டியை அமர்த்திக் கொண்டேன்' எனக் கூறினேன். உடனே அவர் 'நீங்கள் ஆச்ரமத்திற்கு வந்து சேர்ந்தபின் வண்டிக்காரருக்குப் பணம் கொடுத்த பிறகு வண்டி என்ன ஆயிற்று?' என வினவினார். 'அது மீண்டும் ஊருக்குள்



...அவரது காலடியில் எடுத்த புனித மண்ணை நினைவுச்சின்னமாக என் பாக்கெட்டில் வைத்தேன்

சென்றிருக்கலாம்' என நான் பதில் கூறியபோதும் இந்தக் கேள்விகள் அனைத்தும் எங்கு கொண்டு செல்கின்றன என்பதை அறியாமல் வியப்பில் ஆழ்ந்திருந்தேன். தொடர்ந்து தான் என்ன கூற வருகிறார் என்பதை மஹர்ஷி விளக்கினார். ''நீங்கள் அடைய வேண்டிய இடத்திற்கு ரயில் உங்களைக் கொண்டு சேர்த்தது. அதற்கு மேலும் ரயில் தேவையில்லை என்பதால் ரயிலிலிருந்து இறங்கி விட்டீர்கள். அதேபோன்று, ஆச்ரமத்திற்கு மாட்டுவண்டி உங்களை அழைத்து வந்த பின்னர், அதிலிருந்தும் இறங்கி விட்டீர்கள். இங்கு வந்து சேர்ந்து விட்டதால் மாட்டுவண்டி, ரயில் இரண்டுமே உங்களுக்குத் தேவை இல்லாது போய் விட்டன. உங்களை இங்கு அழைத்து வருவதற்கு உபயோகப்பட்ட ஸாதனங்களே அவை. உங்களுடைய ஸாதனை, தியானம், ஜபம் ஆகியவற்றுக்கும் இதேதான் நடந்துள்ளது. அவை உங்களுக்கு இனி தேவையில்லை. நீங்களாக அவற்றை விடவில்லை. அவைகள் தாமாகவே உங்களை விட்டுவிட்டன. ஏனென்றால், அவற்றின் உத்தேசம் நிறைவேறிவிட்டது. நீங்கள் வந்து சேர்ந்து விட்டீர்கள்'' என பகவான் கூறியதாகப் பப்பாஜீ தெரிவித்தார்.

பப்பாஜீ தொடர்ந்து ''பகவான் என்னைக் கூர்ந்து நோக்கினார். என் உடலும் மனமும் நன்கு கழுவப்பட்டு தூய்மைப்படுத்தப் படுவதை நான் உணர்ந்தேன். அவர் என் இதயத்தை ஊடுருவிப் பார்ப்பதையும், மந்திர சக்தி கொண்டது போன்ற அவரது பார்வையினால் உடலில் ஒவ்வொரு அணுவும் சுத்தம் செய்யப்பட்டதையும் உணர்ந்தேன். எனது சரீரத்தில் மாற்றம் ஏற்பட்டுக் கொண்டிருந்தது. பழைய உடலில் இருந்த அணுக்கள் ஒவ்வொன்றாக இறந்ததுடன் பதிலாக புதியதொரு சரீரம் படைக்கப்பட்டது. நான் ஏற்கனவே எதுவாக இருந்தேனோ எப்போதும் எதுவாக இருக்கிறேனோ என்னிடம் பேசிய இந்த மனிதரும் உண்மையில் அதுவேதான் என்பதை நான் புரிந்து கொண்டேன். எதிர்பார்க்காத நிலையில் யதேச்சையாக, நான் ஆத்மாவை உணர்ந்து கொண்ட போது, சட்டென்று அதை அடையாளம் கண்டு கொண்டேன். அந்த அனுபவம் ஏற்பட்டதும், லாஹூரில் எட்டு வயதில் இயற்கையாக ஏற்பட்ட ஆனந்த நிலையே அது என்பதை நான் புரிந்து கொண்டேன்.

அதனால்தான், அதை நான் அடையாளம் கண்டு கொண்டதாகக் கூறினேன். மஹர்ஷியிடமிருந்து வெளிப்பட்ட மௌன அலைகள் என்னை மீண்டும் எனது ஸ்வரூபத்தில் இம்முறை நிரந்தரமாக நிலைக்கச் செய்து விட்டன.

மஹர்ஷி எனக்குக் கொடுத்த நேரடி ஞானத்தாலும் ஆத்மானுபவத்தாலும் எந்த ‘நான்’, குழந்தைப் பருவத்தில், தான் அனுபவித்த நிலைக்குத் திரும்பிச் செல்ல விரும்பி, இதுவரை தன்னை விட்டு, வெளியில் ஒரு கடவுளைத் தேடிக் கொண்டிருந்ததோ, அந்த ‘நான்’ முற்றிலும் அழிந்து விட்டது. இந்த அனுபவத்தை வார்த்தைகளால் வர்ணிக்க இயலாது என எல்லாப் புத்தகங்களும் எவ்வாறு கூறுகின்றனவோ, அதேபோன்று என்னாலும் இந்த அனுபவத்தைத் துல்லியமாக விளக்க முடியாது. மேலெழுந்தவாரியாக மட்டுமேதான் அதைக் கூற முடியும். என்னுள் இருந்த ஒவ்வொரு உயிரணுவும் அவற்றைத் தாங்கும் மெய்ப் பொருளை உணர்ந்து அனுபவித்ததும், என்னுடைய ஆன்மீகத் தேடல் முடிவுற்றது என்பதை நான் அறிந்தேன் என்று மட்டுமே என்னால் கூற முடியும்” என்றார் பப்பாஜீ. இருப்பினும் அந்த ஞானத்திற்கு எது மூலமாக உள்ளதோ, அது எப்போதுமே வர்ணனைக்கு அப்பாற்பட்டதாகத்தான் இருக்கும். இதுதான் பப்பாஜீயின் உண்மையான இறுதி முக்தி நிலை. அந்த அனுபவ நிலையில் கடவுளின் தரிசனத்தைப் பொருட்படுத்தாமல், பதிலாக யாருக்குக் கடவுளைத் தரிசிக்க வேண்டுமென்ற ஆர்வமிருந்ததோ அந்த நபரின் இயல்பையும் மூலத்தையும் தேடிக் கண்டு பிடிக்கும்படி மஹர்ஷி அவருக்கு அறிவுறுத்தினார். இதன்பிறகு தனக்கு அந்நியமான ஒரு கடவுளை வெளியில் காணும் ஆசை அவருக்குத் தானாகவே அற்றுப் போனது.

பப்பாஜீ மிகுந்த கருணையுடன் ஸாதகர்களாகிய எங்களுடன் இந்த அனுபவத்தைப் பகிர்ந்து கொண்டார். “பின்னோக்கிப் பார்க்கும் போது ‘நான் யார்?’ என்னும் ஒரே கேள்வியை நான் பல ஆண்டுகளுக்கு முன்னரே என்னைக் கேட்டுக் கொண்டிருக்க வேண்டுமென்பதை இப்போது உணர்ந்து கொள்கிறேன். எனது எட்டாவது வயதிலேயே ஆத்மாவை நேரடியாக அனுபவித்துவிட்டு அதன்பின் என் வாழ்நாள் முழுவதையும் அந்த நிலையை மீண்டும் அடைவதற்கான முயற்சியிலேயேதான் செலவிட்டுக் கொண்டிருந்தேன் என்பதை உணர்ந்தேன். ஸ்ரீ கிருஷ்ணனிடம் பக்தி பூண்டால் அது என்னை மீண்டும் அந்நிலைக்கு அழைத்துச் செல்ல உதவி செய்யுமென்று என் தாய் கருதினார். நான் எந்த நிலையை அடைய ஏங்கினேனோ, அந்த நிலையைக் கிருஷ்ணரால் அளிக்க முடியமென்றுதான் அவர் எண்ணினார். ஆனால் எப்படியோ என் மனம் வெளியில் ஒரு கடவுளைத் தேடும் நிலைக்குச் சென்று விட்டது. நான் நூற்றுக்கணக்கான ஸாதுக்கள், ஸந்நியாசிகள், குருமார்கள் இவர்களைச் சந்தித்திருந்தேன் எனினும் அவர்களில் ஒருவர் கூட மஹர்ஷியைப் போன்று அந்த எளிய உண்மையை எனக்குத் தெளிவுபடுத்தவில்லை. “கடவுள் உங்களுக்குள்ளேயே இருக்கிறார். உங்களிலிருந்து வேறுபட்டவரன்று இறைவன். நீங்களேதான் கடவுள். ‘நான் யார்?’ என்ற கேள்வியை விடாமல் உங்களுக்குள் கேட்டு மனதின் பிறப்பிடம் எதுவென ஆராய்ந்தறிந்தால் உங்களது இதயமே ஆத்மா என்னும் அனுபவத்தைப் பெறுவீர்கள்” என்னும் விஷயத்தை அவர்கள் யாருமே கூறவில்லை. மஹர்ஷியை இளமையிலேயே சந்தித்து அவரது உபதேசங்களைக் கேட்டு அவற்றைப் பயிற்சி செய்திருந்தால் பயனற்ற வெளித்தேடலில் பல வருடங்களை நான் வீணாக்கியிருக்க மாட்டேன்” என்ற பப்பாஜீயின் கூற்று, நம் அனைவருக்குமே கூடப் பொருந்தும். ‘நான் யார்?’ என்னும் கேள்வியை எழுப்பி, உடனடியாக ஆத்ம விசாரத்தில் நம்முள் ஆழ்ந்து மூழ்குவதே நாம் செய்ய வேண்டியது.

பப்பாஜீயின் ஸத்குருவானார் பகவான் ரமண மஹர்ஷி. சென்னையிலும் வேறு இடங்களிலும் பணியாற்றி வந்த பப்பாஜீ, பகவானுடைய ஸாந்நித்தியம் ஸந்நிதி விசேஷம் இவற்றின் பயனைப்



**கணேசனின் பேச்சை ரசித்துக் கேட்கும் பப்பாஜீ**

பெறும் பொருட்டு, விடுமுறை நாட்களில், ஆச்ரமத்திற்கு வருவார். ஸத்குருவின் ஸந்நிதி மகிமையை இப்போது அவர் அறிந்து கொண்டு விட்டதால் மாட்டுக் கொட்டிலுக்கோ அல்லது மலைக்கோ — பகவான் எங்கு சென்றாலும் அங்கு அவர் பின் சென்றார். ஒரு பக்தருக்கும், மஹர்ஷிக்கும் இடையே நிகழ்ந்த சம்பாஷணையைக் கேட்டதன் மூலம் தனது குருவின் ஸந்நிதி மகிமையை எவ்வாறு உணர்ந்து கொண்டார் என்பதை என்னுடன் பகிர்ந்து கொண்டார் பப்பாஜீ. "ஆத்மாவை அறிந்து கொள்வதற்கு உதவி செய்ய எவற்றை ஒருவர் நாடலாம்?" என பக்தர் ஒருவர் கேட்டார். 'சாஸ்திரங்கள் கூறும் உபதேசங்களையும் ஆத்மஸாக்ஷாத்காரம் பெற்றவர்களின் உபதேசங்களையும்,' என பகவான் பதில் கூறியவுடன், பக்தர் தொடர்ந்து 'அவை விவாதங்கள், சொற்பொழிவுகள், தியானம் ஆகிய உருவில் இருக்கலாமா?' என வினவினார். இவை அனைத்துமே இரண்டாம் பட்சம்தான். குருவின் அருளே முக்கியமான அடிப்படை உதவியாகும்' என பகவான் பதிலிறுத்தார். இதை முழுமையாகப் புரிந்து கொண்டதனால் பகவானுடைய ஸந்நிதியை நான் பூரணமாகப் பயன்படுத்திக் கொண்டேன்" என பப்பாஜீ கூறி முடித்தார்.

1947-ல் இந்தியா விடுதலை பெற்று போது இந்தியா பாகிஸ்தானென பிரிந்தது. பிரிவினைக்கு ஒரு மாதம் முன்னர் பப்பாஜீ தனது நண்பர் தேவராஜ முதலியாரை ஆச்ரமத்தில் சந்தித்தார். எதிர்பார்த்தபடி இந்தியா இரண்டாகப் பிரிக்கப்பட்டால் பப்பாஜீயின் குடும்பம் வாழ்ந்து வந்த பஞ்சாப், பாகிஸ்தானின் ஒரு பகுதியாகிவிடும் என்பதால் அவர்களது உயிருக்கே ஆபத்து விளையலாம் என்றும் குடும்பத்தை அழைத்து வந்து விடுமாறும் ஆலோசனை கூறினார் முதலியார். "நான் என் குடும்பத்திடம் வைத்துள்ள பற்று கனவைப் போன்றது. நான் அங்கு திரும்பிச் செல்வதாக இல்லை. மஹர்ஷியின் ஸந்நிதியை விட்டு நான் எங்கும் செல்லப் போவதில்லை" என்று பப்பாஜீ கூறிய பதிலை

எடுத்த காரியத்தை முடிக்கும் வழக்கமுள்ள வக்கீலான முதலியார் பகவானிடம் தெரிவித்தார். பகவானும், பப்பாஜீயை அழைத்து அவரிடம் பேசினார்.

மேற்கூறிய விஷயம் பற்றி பப்பாஜீ தெரிவித்த விபரங்களைக் கீழே காணலாம். “1947-ல் இந்தியா சுதந்திரம் பெறுவதற்கு ஒரு மாதத்திற்கு முன் தேவராஜ முதலியார் என் குடும்பத்தினர் வாழ்ந்த பஞ்சாபின் பகுதி விரைவிலேயே பாகிஸ்தானுக்குச் சொந்தமாகிவிடும் எனத் தெரிவித்து, “நீங்கள் ஏன் அவர்களை அழைத்துவந்து விடக்கூடாது?” என்று கேட்டார். என் ஸத்குருவான பகவானை விட்டு என்னால் செல்ல முடியாதென நான் கூறியபோது அவர் அதை பகவானிடம் தெரிவித்தார். பின், பகவான் என்னைக் கூப்பிட்டு, “நீங்கள் எங்கிருந்து வருகிறீர்களோ, அங்கு அதிக அளவில் கலவரங்கள் ஏற்பட வாய்ப்பு உள்ளது. அதனால் நீங்கள் உடனடியாகக் குடும்பத்தினரைக் கூட்டி வருவதுதானே நல்லது?” என்று கூறினார். நான் மிகுந்த நம்பிக்கையுடன் ‘பகவானே! கடந்து போன என் வாழ்க்கை, வெறும் கனவு மட்டுமே. எனக்கு ஒரு மனைவியும் குடும்பமும் உள்ளதென நான் கனவு கண்டு கொண்டிருந்தேன். உங்களைப் பார்த்த போது நீங்கள் அந்தக் கனவைக் கலைத்து விட்டீர்கள். இனி எனக்குக் குடும்பம் எதுவுமில்லை. நீங்கள் மட்டுமே உள்ளீர்கள்’ எனக் கூறினேன். நான் கூறியதை எதிர்த்து ‘குடும்பம் ஒரு கனவே என நீங்கள் புரிந்து கொண்ட பின் அக்கனவிலேயே இருந்து கொண்டு, உங்களது கடமையைச் செய்வதால் என்ன வித்தியாசம் வந்து விடப் போகிறது? கனவு என்று கூறியபின் நீங்கள் எதற்காக அஞ்சுகிறீர்கள்?’ என பகவான் வினவினார். நான் செல்லத் தயங்குவதன் உண்மையான காரணத்தைக் கூற முன் வந்து, ‘பகவானே! உங்களுடைய சரீரத்தின் மீது அளவிலாப் பற்றுக் கொண்டுள்ள என்னால் அதை விட்டு அகலமுடியாது. எல்லையற்ற அன்பின் காரணமாக உங்களிடமிருந்து என் கண்களைக் கூட என்னால் அகற்ற முடியவில்லை என்னும்போது, நான் உங்களை விட்டுச் செல்வது எவ்வாறு சாத்தியம்?’ என்றேன். பகவான் என்னைக் கூர்ந்து நோக்கியபின், ‘நீங்கள் எங்கு இருந்தாலும், நான் உங்களுடன் இருக்கிறேன்’ என்று அவர் கூறிய விதத்திலிருந்து நான் செல்ல வேண்டுமென்பதில் அவர் உறுதியாக இருப்பதாகத் தோன்றியது. நான் மேற்கொள்ள வேண்டிய அப்பயணத்திற்கும் பொதுவாக என் எதிர்காலத்திற்கும் அவர் கூறிய இறுதி வார்த்தைகளே ஆசிகளாக அமைந்தன. எனது குருவின் உண்மை இயல்பான அந்த ‘நானே’ என்னுடைய உண்மையும் கூட. அவ்வாறிருக்கும் போது, நான் அவரிடமிருந்து எவ்வாறு விலகி இருக்க முடியும்? அவருடைய முடிவை ஏற்றுக் கொண்டு அவரது பாதங்களில் விழுந்து வணங்கினேன். முதல் முறையாகவும் ஒரே தடவையாகவும் பக்தியையும் அன்பையும் மரியாதையையும் வெளிப்படுத்தும் செயலாக, எனது குருநாதனின் புனித பாதங்களைத் தொட்டேன். சாதாரணமாக அவருடைய பாதங்களைத் தொட அவர் யாரையும் அனுமதிப்பதில்லை. ஆனால் இது எப்போதோ நிகழக்கூடிய பிரத்தியேகமான ஒரு சந்தர்ப்பம் என்பதால், பகவானும் மறுப்பு தெரிவிக்கவில்லை. வணங்கி எழுந்திருப்பதற்கு முன் பகவானுடைய கால்களின் கீழேயிருந்து பாத தூளிகளைச் சிறிது சேகரித்துக் கொண்டு அவரது புனித நினைவுச் சின்னமாக என் சட்டைப்பையில் வைத்துக் கொண்டேன்” என்றார் பப்பாஜீ.

பப்பாஜீ பெஷாவருக்குத் திரும்பினார். அந்தப் பயணம் மிகவும் ஆச்சரியமானதாக இருந்தது. அவரது சட்டைப்பையில் இதயத்திற்கு வெகு அருகில் இருந்த பிரசாதம் தன்னைக் காப்பாற்றியதுடன் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும், தன்னை வழி நடத்தியதாகவும் அவர் என்னிடம் கூறினார். பாகிஸ்தானில் அதற்குள் அமைதியின்மையும், கலவரத்திற்கு முன்னோடியான குமுறல்களும் துவங்கியிருந்தன. ரயில்களில் கூட்டம் நிரம்பி வழிந்தது. இந்துக்களும் இஸ்லாமியர்களும் பிரிக்கப்பட்டு வெவ்வேறு ரயில் பெட்டிகளில் அடைக்கப்பட்டனர். இந்துக்களுக்கான பெட்டியில்

பப்பாஜீ அமர்ந்திருந்தார். இஸ்லாமியருக்கான பெட்டியில் அமரும்படி பகவான் ஏதோ விதத்தில் அவரைத் தூண்டினார். குறிப்பிட்ட அந்தப் பெட்டியில் அதிகக் கூட்டம் இருக்கவில்லை. மற்றோர் ரயில் நிலையத்தை அடைந்த போது, இந்துக்களுக்கு ஒதுக்கப்பட்ட பெட்டியிலிருந்த அனைவரும் கொடூரமாக வெட்டிக் கொல்லப்பட்டனர். பப்பாஜீ பத்திரமாக இருந்தார். அவர் தனது ஊரை அடைந்து முப்பத்தைந்து பெண்களைக் கொண்ட அவரது குடும்பத்தினரை அழைத்துக் கொண்டு வந்தார். இந்திய எல்லைக்குள் அவர்கள் வந்து சேர்ந்த பின்னர் அவர்கள் வந்த ரயிலே பாகிஸ்தானை விட்டுக் கிளம்பிய கடைசி ரயில் என்ற விபரம் பப்பாஜீக்குத் தெரிந்தது. ரயில் தண்டவாளங்கள் சேதப்படுத்தப்பட்டதால் ரயில்கள் தொடராது எனவும் அறிந்தார். இந்த அதிசயம் நிகழ்வதற்கும், பகவானுடைய பிரசாதமே காரணம் என அவர் உரைத்தார். குடும்பத்தோடு லக்னோவை அடைந்த பப்பாஜீ ஒரு நண்பரின் உதவியோடு வீடு ஒன்றை அமர்த்திக் கொண்டு குடும்பத்தைப் பராமரிக்கும் பொருட்டு, 1966 வரை கடுமையாக உழைத்தார். ஆத்மாவில் நிலைத்து நின்ற அவர் வெளிப்பார்வைக்கு குடும்பத்தைக் காப்பாற்றுவதற்காக இரவு பகலாகத் தொடர்ந்து உழைத்தார். இந்து சாஸ்திரங்களின் கூற்றுப்படி பூரண ஞானி ஒருவரால் மட்டுமே உண்மையான கர்ம யோகியாக இருக்க முடியும். பப்பாஜீயும் ஆத்மாவில் நிலை நிற்பது ஒன்றே ஸத்தியம் என்றும், மற்றவை அனைத்தும் கனவே என்பதையும் நன்கு உணர்ந்திருந்தார்.

பப்பாஜீ ஆன்மீக ரீதியில் தனிமையை நாடி கங்கைக்குச் செல்வதுண்டு. இல்லத்தில் இருந்தபோது ஸத்ஸங்கங்கள் நிகழ்த்துவார். சிறிய அளவில் நிகழ்ந்தது காலக்கிரமத்தில் பெரிதாக வளர்ந்தது. அறிவு, தவவாழ்க்கை அல்லது ஆன்மீக ஸாதனைகள் இவற்றின் மூலம் ஆத்மாவை அனுபவிப்பது சாத்தியமன்று என வேதங்கள் உரைக்கின்றன. நேரடியான அனுபவம் ஒன்றினால் மட்டுமே அது நிகழக்கூடும். பகவானிடமிருந்து அந்த அனுபவத்தைப் பெரும் பேறு பெற்ற அவர் தன்னிடம் வந்தவர்களுக்கெல்லாம் அதை வழங்கத் துவங்கினார். வேறு விதமாகச் சொன்னால் குருவிடமிருந்து தான் பெற்றதைப் பப்பாஜீ பிறருக்கு அளித்தார். இக்காரணத்தால் தான் குரு என்று ஒரு போதும் அவர் சொல்லிக் கொள்ளாத போதும் அவர் ஒரு சிறந்த குருவாகத் திகழ்ந்தார். அவருக்கென ஸ்தாபனங்கள் ஏதுமில்லை; அவர் பணவசூலும் செய்யவில்லை. மாறாக தானே உழைத்துச் சம்பாதித்த பணத்தை ஏழைகளுக்கு அன்னதானமளிக்க உபயோகித்தார்.

1993-ல் ‘தி மௌண்டன் பாத்’ (The Mountain Path) பத்திரிகையின் பதிப்பாசிரியராக நான் இருந்த சமயம் பகவானிடமிருந்து நேரிலேயே ஆத்மானுபூதியைப் பெற்றவர்களிடமிருந்து கட்டுரைகளைச் சேகரிப்பதில் ஆர்வத்துடன் இருந்தேன். ராமகிருஷ்ண மிஷனைச் சேர்ந்த ஸ்வாமி ஏகாத்மானந்தரும், இதில் என்னை ஊக்குவித்ததோடு தொடர்ச்சியாகப் பத்திரிகையில் அவற்றை வெளியிடுமாறும் கூறினார். இருந்தாலும் ஆச்ரமத்தில் சிலர் எனது கருத்தை ஆர்வத்துடன் வரவேற்கவில்லை. முக்கியமாக பப்பாஜீயைப் பற்றிக் கட்டுரை வெளியிடுவதை அவர்கள் விரும்பவில்லை. எனது சினேகிதி அனுராதாவே எனது முயற்சி குறித்துக் கேள்வி எழுப்பினாள். அச்சமயத்தில் டேவிட் காட்மன் மற்றும் நாதியா ஸுதாரா ஆகிய இருவரும் இப்பணியில் எனக்கு உதவி புரிந்து வந்தனர். “உங்களுக்கு நேரடியாகத் தொடர்புள்ள குஞ்சு ஸ்வாமி அல்லது அண்ணாமலை ஸ்வாமி இவர்களைப் பற்றி நீங்கள் எழுதலாம். பப்பாஜீயுடன்; உங்களுக்கு அம்மாதிரி அனுபவங்கள் உண்டா என்ன? இம்மாதிரியான சந்தேகங்கள் இருக்கும் போது, நீங்கள் கட்டுரையை வெளியிடப் போகிறீர்களா?” என அனுராதா கேட்டாள்.

‘நீயே நேரில் சென்று பப்பாஜீயைப் பற்றி அறிந்து வரலாமே?’ என்று நான் கூறினேன். மிகுந்த தைரியசாலியான அனுராதா உடனே பப்பாஜீயை நேரில் காணத் தானே புறப்பட்டாள். ஏழு நாட்கள்

அவருடன் தங்கத் தீர்மானித்து திரும்பி வருவதற்கான டிக்கெட்டுக்கும் ஏற்பாடு செய்து விட்டாள். பப்பாஜீயின் இல்லத்தில் நிகழ்ந்த ஆடல் பாடல்களையும், பஜனைகளையும் அவள் ரசித்த போதும் தனக்கு, அவர் மீது ஈர்ப்பு இருப்பதாக அனுராதா உணரவில்லை. ஊருக்குக் கிளம்ப வேண்டிய நாள் வந்து விட்டபோதும், அவள் மனநிலைமையில் எந்த மாறுபாடும் இருக்கவில்லை. புறப்படுமுன் பப்பாஜீயின் மீராவான அல்மீரா என்ற பெண்மணியை அனுராதா சந்தித்த போது அவர் அனுராதாவிடம் மிக்க அன்போடு பழகினார். பப்பாஜீயைப் பற்றிய தனது கருத்தை அவருடன் அனுராதா பகிர்ந்து கொண்டபோது "ஒரு ஞானியுடன் இருபத்தோரு நாட்களாவது தங்காமல் அவரைப் பற்றிப் புரிந்து கொள்வது கடினம். நீங்கள் இன்னும் சில தினங்கள் தங்கிப் பிறகு செல்லலாமே?" என தனது அபிப்பிராயத்தைத் தெரிவித்தார் அல்மீரா.



பப்பாஜீ – ஸ்ரீ பகவான் ஜெயந்தி கொண்டாடும் போது

என்றாலும், அனுராதா ரயில் நிலையத்திற்குப் புறப்பட்டார். கடவுள் எப்படிச் செயல்படுகிறார் என்பதை நாம் கவனிக்க வேண்டும். உறுதியான டிக்கெட் அனுராதாவிடம் இருந்த போதும், ரயிலில் இருந்த 'கார்டு' (Guard) அவரை ரயிலில் ஏறவிடவில்லை. அதன் காரணமாக, பப்பாஜீயின் ஸத்ஸங்க இல்லத்திற்கு அவள் திரும்பி வந்தபோது, அங்கு ஸத்ஸங்கம் நடந்து கொண்டிருந்தது. "அனுராதா எனக்கு மிகவும் பிடித்த பாடலான 'ரமண ஸத்குரு' என்னும் பாடலைத் தினமும் பாடினாள். அப்போதும் உங்களில் ஒருவரும் அதை ஏன் கற்றுக் கொள்ளவில்லை?" என்று அங்கு பாடக் கூடியவர்களை எல்லாம் கடிந்து கொண்டிருந்தார் பப்பாஜீ. அன்றும் 'ரமண ஸத்குரு' என்ற பாடலைப் பாடியபின் அனுராதா பப்பாஜீயை வணங்கினார். அவரை விருந்தினர் அறையில் தங்குமாறு கூறி பப்பாஜீ அனுப்பி வைத்தார். சிறிது நேரத்திற்குப் பின் பப்பாஜீயும், டாக்டர் யமுனாவும் அந்த அறைக்கு வந்தனர். பப்பாஜீ படுக்கையில் அமர்ந்து கொண்டார். அனுராதாவும், யமுனாவும் தரையில் அமர்ந்தனர். அனுராதாவைக் கருணையுடன் நோக்கிய பப்பாஜீ "அனுராதா! பகவான் தனது கனவுகளைப் பற்றி என்ன கூறியிருக்கிறார்?" என வினவியபோது "பப்பாஜீ! பகவானுக்கு எப்போதாவதுதான் கனவுகள் வரும். அது ஏதாவது கோயிலுக்குச் செல்வது போன்றோ அல்லது அருணாசலத்திற்குள் நுழைவது போன்றோதான் இருக்கும்" என்று கூறினாள் அவள். பப்பாஜீ அவள் பக்கமாகக் குனிந்து கன்னத்தில் தட்டிக் கொடுத்து "உனக்கு வெளியில் நீ காண்பவையும், அனுபவிப்பவையும் எல்லாமே கனவு என்று அவர் கூறவில்லையா?" என்று கேட்டவுடன் அனுராதாவின் மனம் உண்முகமாகி எண்ணங்களற்று அமைதியான நிலைக்குச் சென்றது. பப்பாஜீயும், யமுனாவும் அறையிலிருந்து சென்று விட்டதையும் உணராது மூன்று மணி நேரம் அவள் அந்நிலையிலேயே தொடர்ந்து இருந்திருக்கிறாள். ரமணாச்ரமத்திற்குத் திரும்பி வந்த பின், பப்பாஜீயைப் பற்றிய கட்டுரையை வெளியிடும் என் முடிவை அவள் மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொண்டாள்.

1995ஆம் ஆண்டு எனக்கு குழப்பங்களும், அமைதியின்மையும் நிறைந்த வருடமாக இருந்தது. ஆச்ரம நிர்வாகத்திலிருந்து விலகிக் கொள்வதென நான் முடிவு செய்த பின்னர் மூத்த பக்தர்கள் ஒவ்வொருவரிடமும் ஆலோசனையை நாடிச் சென்றேன். அண்ணாமலை ஸ்வாமி, யோகி ராம்சூரத்குமார், லக்ஷ்மண ஸ்வாமி இவர்களும் மற்றும் சிலரும் ஆச்ரமப் பணியைத் துறந்து அகமுகமாகி, ஆன்மீகப் பயணத்தை மேற்கொள்ளுமாறு அறிவுரை வழங்கினர். எனக்குப் பப்பாஜீயிடமும் ஆலோசனை கேட்க வேண்டும் என்ற விருப்பம் இருந்தது. அதனால் அச்சமயத்தில் ஆன்மீக நாட்டமுடையவர்களுக்குப் பாதுகாப்பான இடமாக இருந்த லக்னோவிற்குச் சென்றேன். பப்பாஜீ எப்போதும் கருணை பொழிந்த வண்ணமாக இருந்தார். இந்தக் கருணையில் கடிந்து கொள்வது, அதட்டுவது கண்டிப்பது எல்லாம் அடங்கும். ஏனெனில், அவற்றின் நோக்கம் ஸாதகர்களை விழிப்படையச் செய்வதே. அதைவிட மேலும் கருணையுண்டா? நான் பப்பாஜீயை வணங்கி 'மிகுந்த எதிர்ப்புக்கள் உள்ளன' என்று என் குறைகளைச் சற்று அழுத்தமாகவே வெளியிட்டேன். அவர் என்னை அன்போடு நோக்கியபோதும் அழுத்தம் திருத்தமாக "கணேசன்! உலகனைத்தும் உன்னை எதிர்த்தாலும் முன்னேறிச் செல். இந்த ஆன்மீக முடிவிற்கு நீ அழைத்து வரப்பட்டுள்ளாய். நாங்கள் அனைவரும் உன்னுடன் இருப்போம். ஆழமாக உள்ளே மூழ்கி மௌனத்தில் ஆழ்ந்து 'நான் இருக்கிறேன்' என்னும் அந்த நிலையில் நிலைத்து நில்" என அவர் கூறவும், எனக்கிருந்த மிக வலுவான ஒரே பற்றான ரமணாச்ரம நிர்வாகம் என்பது உடலிலிருந்து சட்டை கழன்று விடுவது போன்று அக்கணமே அவிழ்ந்து விழுந்தது. செல்லுமிடமெல்லாம் அருணாசலமே உள்ளதென்பதை, நான் இப்போது உணர்கிறேன். நான் எந்த நாட்டில் இருந்தாலும் எந்த மனநிலையில் இருந்தாலும், மகிழ்ச்சியுடன் இருந்தாலும் வருத்தத்துடன் இருந்தாலும், - என்னுள்ளே அந்த ஆழ்ந்த அமைதி எப்போதும் நிலவுவதை நான் உணர்கிறேன். உண்முகமாவதற்கு எவ்விதத் தகுதிகளோ பக்குவமோ தேவையில்லை. உள்ளே திரும்பி 'நான் யார்' என்ற கேள்வியை நீங்கள் கேட்க முற்பட்டால், அருணாசலமே உங்கள் பொறுப்பை முற்றிலுமாக ஏற்றுக் கொண்டுவிடும்.

1990ஆம் ஆண்டு முதல், நான் உலகெங்கும் பயணிக்க விழைந்த போது ஆச்ரமத்தில் பார்த்திராத பல பக்தர்களைச் சந்தித்து அவர்களுடன் தங்கினேன். அவர்கள் பலருடைய இல்லங்களில் முக்கியமாக அருணாசலம், பகவான், பப்பாஜீ இவர்கள் மூவரின் படங்கள் காணப்பட்டன. உள்ளே விளங்கும் 'நான் இருக்கிறேன்' என்ற அனுபவத்தைத் தங்களுக்கு பப்பாஜீ அளித்ததாக அவர்களில் பலரும் தெரிவித்தனர். 'நான் இருக்கிறேன்' என்பதன் உண்மையை உலகம் அறியவேண்டும் என்ற அருணாசலத்தின் கட்டளை பற்றி நான் ஏற்கனவே கூறியிருக்கிறேனல்லவா? மனிதகுலத்திற்கும் தெய்வீகத்திற்குமிடையே உள்ள பாலம் ரமண பகவான் என்ற ஸத்குருவே. உண்மை மேலும் பலரைச் சென்றடைய இப்பாலத்திற்கு மற்றுமொரு இணைப்புத் தேவைப்பட்டதால், பப்பாஜீ அந்த உருவில் வந்தமைந்தார். ஆர்தர் ஆஸ்போர்னும் மற்றும் பலரும் மேற்கொண்ட அதே பணியை, அதாவது தெய்வத்தன்மையுடன் இணைக்கும் பணியைப் பப்பாஜீயும் செய்தார் என்பது மறுக்க முடியாத உண்மை.

எனது நட்பிற்குரியவரான லதாஜீயைப் பற்றியும் சில விஷயங்களை நான் பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன். அவர் தனது தந்தையின் நண்பர் ஒருவருடைய தூண்டுதலின் பேரில் பப்பாஜீயிடம் வந்தார். லதாஜீயின் விருப்பத்திற்கு மாறாக அவர் மருத்துவத் தொழிலில் இறங்க வேண்டுமென அவரது தந்தை வற்புறுத்தியதால் அவருக்கு தந்தையுடன் சிறு மனஸ்தாபம் ஏற்பட்டது. பப்பாஜீயின் அறிவுரையை நாடி லதாஜீ அவருக்கு நீண்ட ஒரு கடிதம் எழுதினார். அன்றைய ஸத்ஸங்கத்தில் லதாஜீயின் கடிதம் தேர்ந்தெடுக்கப்பட்டது. யாருடைய கடிதம் தேர்வு செய்யப்பட்டதோ, அவர்



பப்பாஜீ கணேசனை மாலை அணிவித்து வரவேற்கிறார்

பப்பாஜீயின் முன் அமர வேண்டும் என்பது வழக்கமாக இருந்தது. 'அசைவற்றிரு' என்பது போன்ற பப்பாஜீயின் போதனைகள் பல, ஸத்ஸங்க அறையின் சுவர்களில் எழுதி மாட்டப்பட்டிருந்தன. ஏனெனில், அவைகளே அவரது உபதேசங்களின் ஸாரம். தனது விஷயம் குறித்து பப்பாஜீ ஏதாவது கேட்பார் என்ற எதிர்பார்வையுடன் லதாஜீ அமர்ந்திருந்தார். ஆனால் அவர் கடிதத்தைப் பப்பாஜீ பக்கத்தில் வைத்துவிட்டு 'என்னை ஏதாவது கேள்' என்று அவரிடம் கூறவும் தன்னை இக்கட்டான ஒரு நிலைக்கு அவர் தள்ளிவிட்டதாக லதாஜீக்குத் தோன்றியது. எதைக் கேட்பதென முடிவு செய்ய இயலாமல் சுற்று முற்றும் பார்த்த போது 'அசைவற்றிரு' என்ற வார்த்தை அவர் கண்ணில் பட்டது. கேட்க வேண்டுமென நினைக்காத போதும் "எப்படி அசைவற்றிருப்பது?" என்று வினவினார். பப்பாஜீயின் பார்வையே அந்தக் கேள்வியை அவர் எழுப்புமாறு செய்தது. லதாஜீயை நோக்கியபடி 'எப்படி? என்ற கேள்வியை விட்டுவிடுங்கள்' என பப்பாஜீ பதிலளித்தார். சற்றும் எதிர்பாராத சமயத்தில் அவரையும் அங்கிருந்த பலரையும் உண்முகமான அமைதியிலும் அசைவற்ற நிலையிலும் பப்பாஜீயின் கூற்று ஆழ்த்தியது.

மிகப்பெரிய செல்வந்தர் ஒருவர் பப்பாஜீக்கு ஒருமுறை பத்துலட்சம் டாலர்கள் நன்கொடையளிக்க விரும்பினார். நேர்மையான அன்புடன் பப்பாஜீயை அணுகிய அவர், "நான் தங்களுக்கு நன்கொடையளிக்க விரும்புகிறேன். தயவு செய்து அதை ஏற்றுக் கொண்டு என்னை ஆசீர்வதிக்க வேண்டும்" எனக் கேட்டுக் கொண்டார். பப்பாஜீயும் "சரி. ஏற்றுக் கொள்கிறேன்" எனக் கூறியபோது அங்கிருந்தவர்கள் அனைவரும் சிரித்தனர். ஏனெனில், அந்த பக்தர் அளிக்க விரும்பியது மிகப் பெரிய தொகை. புன்னகையால் மலர்ந்த முகத்துடன் பப்பாஜீ, அக்காசோலையைக் கையில் பெற்றுக்கொண்டு உடனே அதைச் சுக்குநூறாகக் கிழித்தெறிந்தார். நன்கொடையளித்தவரிடம் "இதுவே எனது ஆசிகள்" என்றும் கூறினார்.

பகவான் ரமணரின் சந்ததியைச் சேர்ந்தவர்கள் என்பதால் சின்ன ஸ்வாமியிடமும் எனது தந்தையிடமும் பப்பாஜீ அன்போடு இருந்தார். ஒரு முறை சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனில் எனது தந்தையை யதேச்சையாகக் காண நேர்ந்த போது பப்பாஜீ அவரிடம் ஓடிச் சென்று பாதங்களில் வீழ்ந்து நமஸ்கரித்துக் காணிக்கையாக இருநூறு ரூபாய்களையும் தந்தார். பப்பாஜீ அவ்வளவு எளிமையான மனிதர். நான் லக்னோவிற்குச் சென்றபோது என்னை மிக அன்புடன் வரவேற்றதுடன் ஸத்ஸங்கத்தில் "இப்போது கணேசன் பேசுவார்" எனக் கூறி என்னைப் பேச வைத்தார். அன்பும் தயையுமே உருவானவர் பப்பாஜீ. 'அசைவற்றிரு' (Be still) என்னும் புத்தகத்தில் வெளிவந்த இக்கவிதை அருணாசலத்தின் பரந்த இதயத்தை நன்கு விளக்குகிறது:

“கலியுகமாம் குழப்பும் இந்நாடக லீலையில்,
சத்வகுண மண்டலத்தில் தெளிவுமயமான
மோனமும், ஞானமும், ஆத்ம விசாரமும் அருளி
ஸ்ரீ ரமணர் மஹர்ஷி என துதிக்கப்படுகிறார்
ஸ்ரீ பூஞ்ஜாஜீ குருவின் மோனத் தீச்சுடரை
நாற்சந்தியில் வைத்து
ஆன்மநிட்டை என்னும் அகத்தீயை மூட்டி,
செயலுலகில் பரவ விட்டார்.
உலகை அந்தத் தீ மெல்ல விழுங்குவது காணீர்
ஆகவே தான் அவரை பப்பாஜீ, தந்தை
என அனைவரும் கூறுவர். “





"என்னிடம் வர இவ்வளவு நேரமா? "

# 74 ராபர்ட் ஆடம்ஸ்



1992-ம் ஆண்டு — நான் 'ஸான் டியாகோ'விலிருந்து 'லாஸ் ஏஞ்ஜலஸ்' வழியாக 'ஃபீனிக்ஸ்' சென்று கொண்டிருந்தேன். நான் விமானம் மாற்ற வேண்டிய லாஸ் ஏஞ்ஜலஸ் விமான நிலையத்தில் கூட்டம் அதிகமாக இருந்தது. ஒரு வயதான அமெரிக்க பெண்மணி என்னை அணுகி "நீங்கள் இந்தியாவிலிருந்து வருகிறீர்களா?" என்று கேட்டார். நான் 'ஆம்' என்று பதில் கூறிய போது அவர் அன்போடு "இன்று மாலை எனது நண்பர் ஒருவர் இல்லத்தில், இந்து ஆன்மீகத்தைப் பற்றி மிகுந்த தெய்வ பக்தியுடைய ஒருவர் சொற்பொழிவாற்றுகிறார். நான் அங்கு செல்கிறேன்; நீங்களும் வருகிறீர்களா" என்று கேட்டார். அங்கு பேசப்போகும் பக்தரின் பெயரென்ன என்று நான் வினவியபோது 'ராபர்ட் ஆடம்ஸ்' என்று அவர் பதிலளித்தார். 'இன்று மாலை நான் ஃபீனிக்ஸில் பேசப்போகிறேன். அதனால் என்னால் அங்கு வரமுடியாது. மன்னிக்கவும். 'என்று நான் கூறினேன். அந்தப் பெண்மணி ஏமாற்றம் அடைந்த போதும் எளிதில் விடாத சுபாவம் உடைய அவர் "நீங்கள் வரமுடியாதது குறித்து வருந்துகிறேன். அவருடைய சொற்பொழிவுகளின் சில நகல்களை நான் உங்களுக்குத் தருகிறேன். நீங்கள் அவற்றைப் படித்துப் பாருங்கள்" என்று கூறி ஒரு கற்றை அச்சிட்ட காகிதங்களை என்னிடம் கொடுத்தார். நான் அவற்றை விமானத்தில் பிரயாணம் செய்யும் பொழுதே படிக்கத் தொடங்கினேன். முதல் பக்கமே எனது முழு கவனத்தையும் வெகுவாக ஈர்த்ததால் படிப்பதை நிறுத்த முடியாமல், பரவச நிலையில் அவற்றை நான் படித்து முடித்தேன்.

அப்போது நான் 'The Mountain Path' என்னும் பத்திரிகையின் பதிப்பாசிரியராக இருந்தேன். பகவானுடைய ஸந்நிதியிலேயே ஆத்மானுபூதியைப் பெற்ற பக்தர்களிடம், பதிப்பாசிரியர்கள் குழு, அச்சமயம் மிகுந்த கவனத்தைச் செலுத்திக் கொண்டிருந்தது. 1993, 1994-களில் வெளிவர இருக்கும் இதழ்கள் அனைத்திலுமே பகவான் பக்தர்களைப் பற்றி எழுத வேண்டும் எனத் திட்டமிட்டிருந்தோம். இக்குறிக்கோளுடன் குழுவினர் அனைவருமே சிலரின் எதிர்ப்பையும் பொருட்படுத்தாமல், பல கட்டுரைகளைச் சேகரித்திருந்தோம். ஞான மார்க்கம் மிகக் கடினமானது என்றும் ஒரு சிலருக்கே உகந்தது என்றும் மக்கள் எண்ணியதால் இம்மாதிரியான கட்டுரைகள் ஆத்ம விசாரம் பழகும் இளம் ஸாதகர்களுக்குப் பெரும் உந்துதலாக இருக்கும் என நான் எண்ணினேன். உண்மையில் அது எளிமையான, ஸஹஜமான அனைவருக்கும் உகந்த நேர் பாதையாகும். ராபர்ட் ஆடம்ஸின் முகவரி அந்த நகல்களில் இருந்ததால் பகவான் முன்னிலையில் அவர் எவ்வாறு ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெற்றார் என்னும் விவரங்களைக் கேட்டு அவருக்கு எழுதினேன். அவரிடமிருந்து வந்த நீண்ட கடிதத்தில் "என் பெயர் ராபர்ட் ஆடம்ஸ். 1928ஆம் ஆண்டு நியூயார்க்கில் பிறந்தேன். எனக்கு நினைவு தெரிந்த வரையில் நான் தொட்டிலில் இருந்த போதே வெள்ளைத் தலைமுடியும் பாதி நரைத்த தாடியும் உடைய இரண்டு அடி உயரமுள்ள ஒரு மனிதர், தொட்டிலின் அருகே தோன்றிப் புரியாத பாஷையில் பேசுவார். நான் குழந்தையாக இருந்ததால் அவர் கூறியது எதுவுமே எனக்குப் புரியவில்லை. இதைப் பற்றி, எனது ஐந்து அல்லது ஆறாவது வயதில் என் பெற்றோரிடம் கூறியபோது நான் ஏதோ விளையாடுகிறேன் என எண்ணி விட்டனர். நண்பர்களிடம் கூறியபோது அவர்களும் நகைத்தனர். அதனால் நான் அந்த விஷயம் குறித்துப் பேசுவதை நிறுத்திவிட்டேன். எனக்கு ஏழு வயதான போது அந்தக் குள்ளமான மனிதர் வருவதும் நின்று போய் விட்டது' என்று எழுதியிருந்தார்.

தனக்கு என்ன செய்வதென்று புரியவில்லை என்றும் ராபர்ட் எழுதியிருந்தார். நடந்த விஷயத்தை யாரோடும் அவரால் பகிர்ந்து கொள்ள இயலவில்லை. பின்னர் விசித்திரமான ஒரு நிகழ்ச்சி நடந்தது. அவர் மூன்று முறை 'கடவுள்(God)' என்ற வார்த்தையைக் கூறினால், அவர் விரும்பிய பொருள் — பென்ஸிலோ, சாக்லெட்டோ அல்லது வயலினோ எதுவானாலும் யார் மூலமாவது அவருக்குக் கிடைத்துவிடும். வகுப்பில் எந்த மாணவனுக்காவது பென்சில் தேவையாக இருந்தால் அவர் மூன்று முறை 'கடவுள்' என உரைத்தால் அது வந்துவிடும். உடனே அதை அவனுக்குத் தந்து விடுவார் ராபர்ட். பரீட்சை சமயத்திலும் இவ்வாறு நிகழ்ந்தது. படிப்பதில் அவருக்கு ஆர்வமே இருக்கவில்லை. பரீட்சை சமயங்களில், அவர் மும்முறை 'கடவுள்' என்று கூறியதும் விடைகள் அவர் கண் முன் தோன்றும். அவரும் அதைப் பார்த்து எழுதிவிடுவார். பரீட்சைகளில் அவர் தேர்ச்சி பெற்றது இவ்வாறுதான்.

ஒருமுறை கணிதப் பரீட்சைக்குத் தன்னைத் தயார் செய்து கொள்ளாமல் சென்ற போதும், ராபர்ட் இம்மாதிரியேதான் செய்தார். வினாத்தாளைக் கையில் பிடித்தவாறு மூன்று முறை 'கடவுள்' எனக் கூறவும் விடைகள் கண்முன் தோன்றும் என அவர் எதிர்பார்த்தார். ஆனால் முற்றிலும் மாறுபட்ட ஒன்று நிகழ்ந்தது. "சூரிய ஒளியைவிட ஆயிரம் மடங்கு பிரகாசமான ஒளி அறை முழுவதையும் நிறைத்தது. அது அழகாகவும் இதமாகவும் 'பள பள' வென ஒளிர்வதாகவும் இருந்தது. அறையில் இருந்த எல்லாப் பொருட்களும் அனைவரும் அந்த ஒளி வெள்ளத்தில் மூழ்கினர். சிறுவர்கள் அனைவருமே ஒளித் துகள்களாகக் காட்சியளித்தனர். 'நானும் அந்தப் பேரொளியில் கரைந்து ஒளிபொருந்திய உணர்வாக இருப்பதை உணர்ந்தேன். பின்னர் அந்த உணர்வுடன் நான் இரண்டறக் கலந்தேன். இது உடலுக்கு வெளியே நடந்த நிகழ்வன்று. ஆனால் முற்றிலும் வேறுபட்ட ஒரு அனுபவமாக இருந்தது அது. நான் எனது உடல் அன்று என்றும் என் உடலாகத் தோன்றும் வஸ்து உண்மையானதன்று என்றும் உணர்ந்தேன். வெளியே தோன்றிய ஒளியைக் கடந்து சென்று ஒளி வீசும் தூய உணர்வினுள் பிரவேசித்தேன். உணர்வாகவே மாறிவிட்ட எனது தனித்தன்மை தூய, பூரண ஆனந்தத்துடன் ஒன்றியது. நான் விரிவடைந்து கொண்டே வந்து, பிரம்மாண்டமாக மாறி விட்டேன். அந்த உணர்வு விவரிக்க இயலாததாக இருந்ததுடன், பேரானந்தமாகவும் முழுமையான இன்பமாகவும் இருந்தது" என்றார் ராபர்ட்.

இந்த அனுபவத்திற்குப் பின் ஆடம்ஸால் தனது பணிகளில் வழக்கம் போல் ஈடுபட இயலவில்லை. அவர் இளைஞராக இருந்ததால், தனக்கு வழிகாட்ட ஒருவர் தேவையென அவருக்குத் தோன்றியது. அந்தச் சமயத்தில் ஜோயல் கோல்ட் ஸ்மித் என்பவர் ஆன்மீக ரஹஸ்யங்களறிந்த ஒரு உண்மையான கிறிஸ்தவ ஸாதுவாக மதிக்கப்பட்டார். அவரிடம் செல்லுமாறு பலரும் யோசனை கூறியதால் ராபர்ட் அவரிடம் சென்றார். (பல ஆண்டுகளுக்குப் பின், ஜோயல் கோல்ட் ஸ்மித் என்னோடும் ஆர்தர் ஆஸ்போர்னோடும் இடையறாத் தொடர்பு கொண்டிருந்தார். 'The Mountain Path' பத்திரிகையில் அநேகமாக எல்லா இதழ்களுக்கும் அவர் சுயமாக எழுதிய சிறந்த கட்டுரைகளைத் தந்து உதவினார். )"என்ஸினிடாஸில் (Encinitas) இருக்கும் பரமஹம்ஸ யோகானந்தரிடம் செல்லுங்கள். அவர் உங்களுக்கு வழிகாட்டுவார்" என ராபர்ட்டுக்கு ஜோயல் ஸ்மித் அறிவுறுத்தவே அவர் மிகுந்த உத்வேகத்தோடும், பரவசத்தோடும் அங்கு சென்றார். அங்கு விசித்திரமான ஒன்று நிகழ்ந்தது. பரமஹம்ஸ யோகானந்தர் முன்னிலையில் பலரும் அமர்ந்திருந்தனர் என்றாலும், ராபர்ட் வெளியில் நின்று கொண்டிருந்தார். பரமஹம்ஸர் தனது செயலாளரை அழைத்து "வெளியில் ஒரு இளைஞன் நின்று கொண்டிருக்கிறான். அவனை உள்ளே வரச் சொல்லுங்கள்" எனக் கூறியனுப்பினார். உள்ளே சென்ற ராபர்ட் அந்த மஹானை வணங்கி "நீங்களே எனது குரு"



"மஹர்ஷி என்னை ஒரு குடிலுக்கு வழிநடத்தினார்..."

எனக் கூறியதும் அவர் “இல்லை. நான் உங்கள் குருவன்று. ரமண மஹர்ஷியே உங்கள் குரு. அவர் உடல் நலம் குன்றிய நிலையிலுள்ளார். நீங்கள் உடனே அவரிடம் செல்லுங்கள்” என உரைத்தார். வெளியே வந்த ராபர்ட், ஏதாவது புத்தகம் படிக்கும் நோக்கத்துடன் புத்தக சாலைக்கு உள்ளே சென்று தத்துவ சாஸ்திரப் பகுதிக்குப் போன போது, ‘நான் யார்?’ என்னும் புத்தகம் அவரது கவனத்தை ஈர்த்தது. புத்தகத்தில் ரமண மஹர்ஷியின் படத்தைப் பார்த்தவுடனே ராபர்ட் மெய் சிலிர்த்துப் போனார். ஏனெனில் ராபர்ட்டின் தொட்டிலருகே தோன்றி அவரிடம் பேசியது, இதே ரமண மஹர்ஷிதான். அதனால் பரமஹம்ஸ யோகானந்தரின் வலுவான சிபாரிசுடன் அவர் 1947-ல் அருணாசலத்தை வந்தடைந்தார்.

ரமண மஹர்ஷியின் முன்னிலையில் என்ன நடந்ததென இனி காண்போம். “நான் எனது பதினெட்டாவது வயதில் அருணாசலத்திற்கு வந்து சேர்ந்தேன். பகவானுடைய பாதங்களில் அர்ப்பணிக்கும் பொருட்டு சிறிது புஷ்பங்களும், ஒரு பை நிறையப் பழங்களையும் எடுத்து வந்திருந்தேன். அவர் என்னைப் பார்த்துச் சிரித்த போது நானும் பதிலுக்குச் சிரித்தேன். மஹர்ஷியின் முதல் பார்வை என் மீது விழுந்த உடனே, என்னை ஒளி வெள்ளமும் அமைதியும் சாந்தியும் பேரானந்தமும் சூழ்ந்து கொண்டன. என் அகக்கண் திறந்தது. மறுகணமே எனக்கேற்பட்ட அனுபவங்களின் நோக்கத்தையும், பொருளையும் நான் அடையாளம் கண்டு கொண்டேன். நான் ஒருபோதுமே உடலாக இருந்ததில்லை என்பதையும் பிறப்பற்ற ஆத்மாவாகவும் நித்திய மௌனமாகவும்தான் எப்போதும் இருந்தேன் என்பதையும் அறிந்தேன். முதல் நாளே மஹர்ஷியிடமிருந்து கருணையும் அன்பும் பேரானந்தமும் வெளிப்பட்டன. ‘நான் காலைச் சிற்றுண்டி அருந்தினேனா?’ என விசாரித்த அவரிடம் இல்லையென நான் பதிலுரைத்த உடனேயே தொண்டர்கள் மூலம் சிறிது பழங்களையும் கஞ்சியையும் தருவித்து என்னை அருந்துமாறு கூறினார். பழைய ஹாலிலேயே நான் படுத்து உறங்கி விட்டேன். நான் எழுந்தவுடன் மஹர்ஷி என்னை ஒரு குடிலுக்கு அழைத்துச் சென்று ஓய்வெடுக்குமாறு பணித்தார். மாலையிலும் எனக்கு ஆகாரம் தந்தார். அதை உண்டு மீண்டும் உறங்கச் சென்று விட்டேன். என்னை இளைப்பாறச் செய்து, என் உடலுக்குத் தேவையான ஓய்வைத் தருவதில் மஹர்ஷி, தானே மிகுந்த அக்கறை எடுத்துக் கொண்டார்” என்றார் ராபர்ட்.

மறுதினம் காலையில் பகவானைக் காணும் பொருட்டு, ராபர்ட் பழைய ஹாலுக்குச் சென்றார். பகவான் முன்னிலையில் நிகழ்ந்தவை ராபர்ட்டை உண்முகமாக, ஆழ்ந்து செல்ல வழிகாட்டிய அதே சமயத்தில் பகவானது மௌனமும் சாந்தியும் அவரைச் சூழ்ந்து கொண்டன. பகவானுடைய தொண்டர் கிருஷ்ண ஸ்வாமி சிலரைப் பற்றிய குறைகளை எடுத்துரைப்பதற்காக மீண்டும் மீண்டும் பகவானை நெருங்கி வந்து கொண்டிருந்தார். சிறிது நேரம் சென்ற பின், பகவான் கிருஷ்ண ஸ்வாமியைக் கடுமையாக நோக்கி "நீ எந்தக் கார்யத்திற்காக இங்கு வந்திருக்கிறாய் என்பதை நினைவில் வைத்துக் கொள். அதை கவனித்துக் கொண்டு அமைதியாக இரு" என்று பகவான் கூறியதைக் கேட்ட ராபர்ட் அதை கிருஷ்ண ஸ்வாமிக்குக் கொடுத்த அறிவுரையாகக் கொள்ளாமல் பகவான் தனக்களித்த முதல் உபதேசமாக எடுத்துக் கொண்டார். அப்போதிருந்து அவர் ஆச்ரமத்திலிருந்த மூன்று ஆண்டு காலத்தில் ஒவ்வொரு நொடியும் அவருக்கு விலைமதிக்க முடியாததாக இருந்தது. ராபர்ட் உள்ளே ஆழ்ந்து மூழ்கி மௌனத்தில் எப்போதும் நிலைத்து நின்றார். மற்றவர்களின் தனிப்பட்ட விவகாரங்களிலோ அல்லது ஆச்ரம நிர்வாகத்திலோ அவர் தலையிடவே இல்லை. வெளிப்பார்வைக்குத் துறவியாக இருந்த ராபர்ட் அகத்தே மெய்ப்பொருளில் நிலைத்து நின்றார். அவருக்கு யாரிடமும் - ஏன் பகவானிடம் கூட — பேச வேண்டிய அவசியம் இருக்கவில்லை. அருணாசலத்தில் அவர் மூன்றாண்டு காலம் தங்கியிருந்தபோதும் அவரை யாருக்குமே தெரியாததற்கு இது ஒரு காரணம். பின்னர் நான் விசாரித்தபோது ஓரிரு பக்தர்கள் ஒரு இளைஞர் இருந்ததாகவும் அவர் சித்த ஸ்வாதீனமில்லாதவராகக் கூட இருந்திருக்கலாம் எனவும் தெரிவித்தனர். "அவருடைய பெயர் ராபர்ட் ஆடம்ஸ் என்றுதான் தோன்றுகிறது. அவர் எப்போதும் தானுண்டு, தனது வேலையுண்டு என்று இருப்பாரே தவிரப் பிறருடன் ஸஹஜமாகப் பழகமாட்டார். எப்போதும் ஸாதனைகளில் ஈடுபட்டிருப்பாரென்பதால் அவர் பேசுவதே கிடையாது" என்றும் அவர்கள் கூறக் கேட்டேன். பகவானை ஆத்மாவாக மட்டுமே ராபர்ட் பார்த்ததால் பகவான் உடலை விட்ட போதுகூட அது தன்னைப் பாதிக்கவில்லை என ராபர்ட் என்னிடம் கூறினார். பகவான் உடலுடன் வாழ்ந்த காலத்திலும் கூட, அவர் பகவானை ஆத்மாவாக மட்டுமே அனுபவித்திருக்கிறார். மேன்மேலும் ஆத்மாவில் ஆழ்ந்து மூழ்கினார் ராபர்ட் என்பதால், பகவானின் மஹாஸமாதிக்குப் பின்னரும் எவ்வித இழப்பையோ அல்லது துயரத்தையோ அவர் உணரவில்லை என்று என்னிடம் கூறினார்.

ஒரு முறை பகவான், ராபர்ட்டின் கனவில் தோன்றி "நீங்கள் காசிக்குச் சென்று அங்கிருக்கும் வயதான ஸ்வாமி ஒருவருடன் தங்கியிருங்கள்" எனக் கூறினார். காசிக்குச் சென்ற ராபர்ட் தொண்ணூறு வயது நிரம்பிய அந்த ஸாதுவின் முன், தினமும் அமர்ந்து கொள்வார். எவ்வித சம்பாஷணையும் அவருக்குத் தேவையாக இருக்கவில்லை. ஒரு நாள் அந்த ஸ்வாமி தன் முன் கூடியிருந்த மக்களிடம் "இன்னும் மூன்று தினங்களில் என் முடிவு வந்துவிடும். எனது பணிகளை நான் முடிக்கவில்லை. அதனால் நான் இறந்த மறுகணமே தெருவில் செல்லும் ஒரு இளைஞன் காரணமேதுமின்றி மரணமடைவான். அவனது உடலில் நான் வாழ்ந்து, என் பணிகளைத் தொடருவேன்" என்று கூறினார். மூன்றாவது நாள் ஸாது கூறியபடியே அவர் உடலை விட்ட உடனே பதினான்கு அல்லது பதினைந்து வயதுச் சிறுவன் தெருவைக் கடந்து செல்லும்போது வலிப்பு வந்து கீழே விழுந்தான். சுமார் இருபது நிமிடங்களில் அசைவற்றிருந்த அவனது உடல் எழுந்து காட்டிற்குள் சென்று மறைந்தது. ஆத்மாவின் மீது ராபர்ட் வைத்திருந்த நம்பிக்கையை இந்நிகழ்ச்சி பலப்படுத்திப் பொருளுள்ளதாக்கியது. உடலின் தோற்றம் மறைவு இவை குறித்து அவர் கவலைப் படவில்லை.

ஞானிகளையும், மஹான்களையும் சந்தித்தவாறு ராபர்ட் இந்தியாவில் அலைந்து கொண்டிருந்தார். மீண்டும் அவரது கனவில் தோன்றிய பகவான் "நீங்கள் உங்களது நாட்டிற்குத்


ராபர்ட் ஆடம்ஸூடன் அனுராதா மற்றும் கணேசன்

திரும்பிச் சென்று அமெரிக்க ஸாதகர்களுக்கு ஆத்மானுபூதியைப் பெறுவது எவ்வாறு என்றும் ‘நான் இருக்கிறேன்’ என்ற அந்த நிலையில் எப்படி நிற்பது என்றும் போதித்து ஆத்ம விசாரத்தைப் பரப்புங்கள்” எனக் கூறினார். “எந்த ஸ்தாபனத்தையும் துவக்க வேண்டாம். குருவாக இருக்க வேண்டியதில்லை. நிச்சயமாக விளம்பரம் எதுவும் வேண்டாம். பதினைந்து பேருக்கு மேல் மக்கள் உங்களைச் சூழ்ந்து கொண்டால் அந்த இடத்தை விட்டகன்று வேறு ஒரு ஊரில் உங்கள் உபதேசத்தைப் பரப்புங்கள்” என்று பிரத்தியேகமாகக் கூறியிருந்தார் பகவான். ராபர்ட் ஆடம்ஸ் இவ்வாறு பயணம் மேற்கொண்டார் எனினும் அவரைப் பற்றிய கட்டுரைகளோ அல்லது விளம்பரங்களோ எதுவும் வெளி வரவில்லை. குறிப்பிட்ட சிலர் மட்டுமே அவரை அறிந்து கொண்டிருந்தார்கள். ‘ஹாலிவுட்’ என்னும் ஊருக்கு அவர் சென்ற போது ‘பார்க்கின்ஸன்’ என்னும் நோயால் பாதிக்கப்பட்டு அங்கேயே தங்கிவிட நேர்ந்தது. மேரி என்ற சிறந்த குணங்களுள்ள பெண்மணியும் அவரது நண்பர்களும் ராபர்ட்டைக் கவனித்துக் கொண்டனர். பகவானுடைய ஆத்ம விசாரத்தைப் பரப்பவும் அவர்கள் உதவி செய்தனர். சிறு கூட்டங்களையும் ஸத்ஸங்கங்களையும் ராபர்ட் நிகழ்த்தினார். அவரது ஸாந்நித்தியம் சக்தி வாய்ந்ததாக இருந்தது. ஹாலில் சுமார் இருபது நிமிடங்களுக்கு அவர் மௌனமாக அமர்ந்திருப்பார். அவரைச் சுற்றியுள்ளவர்களும் பூரண அமைதியில் ஆழ்ந்து விடுவார்கள். எத்தனை பேர் அங்கு கூடியுள்ளனர் என்பது குறித்தோ யார் யார் வந்துள்ளனர் என்பது குறித்தோ எந்தப் பிரச்சனையும் எழவில்லை. குறிப்பிட்ட நேரத்திற்கு அமைதி காத்தபின் ராபர்ட் சில நிமிடங்களுக்கு உரையாற்றுவார்.

நான் ராபர்ட்டைச் சந்திக்க அனுமதி கோரிக் கடிதம் எழுதிய போது “என்னை நீங்கள் ‘லாஸ் ஏஞ்சலஸ்ஸி’ல் சந்திக்கலாமெனப் பதிலெழுதியிருந்தார். அச்சமயம் ‘Course of Miracles’ (அற்புதங்களின் பயிற்சி மையம்) என்ற ஸ்தாபனத்தின் தலைவரான டாக்டர் தாரா சிங் ரமணாச்ரமத்தில் இருந்தார். லாஸ் ஏஞ்சலஸ்ஸில் இருந்த தங்களது தலைமை அலுவலகத்திற்கு என்னையும், அனுராதாவையும் அழைத்ததுடன், “ராபர்ட் ஆடம்ஸை நீங்கள் சந்திக்க நான் ஏற்பாடு செய்கிறேன்” என்றும் கூறியிருந்தார். ஒரு உணவு விடுதியில் நாங்கள் ராபர்ட்டைச் சந்திக்க ஏற்பாடும் செய்தார். தன்னுடையதெனக் கூறுவதற்கு, அந்த மஹானுக்கு சொந்த வீடோ ஸ்தாபனமோ இருக்கவில்லை. அன்று அவருடன் உணவருந்தி அளவளாவும் விதத்தில் சந்திப்பு ஏற்பாடு செய்யப்பட்டிருந்ததால் நான் மிக்க மகிழ்ச்சி கலந்த பேரார்வத்துடன் இருந்தேன். ஆச்ரமத்திற்கு வந்த அனைவருக்கும் ஞானம் வழங்கப்பட்ட அதே சமயத்தில் உணவும் அளித்த பகவானை நான் அப்போது நினைவு கூர்ந்தேன். சாப்பாட்டு மேஜையை அணுகியபோது ராபர்ட்டின் பின் பாகம் மட்டுமே கண்ணில்பட்டது என்றாலும், அதுவே போதுமானதாக இருந்தது. சற்றுத் தொலைவிலிருந்தே

அங்கு நிலவிய ஆன்மீக நறுமணம், அமைதி, நட்பு இவற்றின் தாக்கத்தை எங்களால் உணர முடிந்தது. ராபர்ட் நல்ல நகைச்சுவை உடையவராகவும் இருந்தார். அவர் வாய் மொழியாகவே கேட்க விரும்பியதால் அவரிடம் மீண்டும் மீண்டும் பகவானைப் பற்றிக் கூறுமாறு வேண்டிக் கொண்டேன். ஏற்கனவே அவர் எழுதியிருந்த தொட்டிலின் அருகில் பகவானைப் பார்த்த நிகழ்ச்சியில் துவங்கி எல்லாவற்றையும் கூறி இறுதியில் ''இன்று மாலை மேரியின் இல்லத்தில் ஸத்ஸங்கம் நடக்கவுள்ளது. தயவு செய்து அங்கு வாருங்கள்'' எனக் கூறினார்.

அங்கு நாங்கள் சென்ற போது ஏற்கனவே எழுபது பேர் கூடியிருந்தனர். அந்த அறையில் மிக ஆழமானதும் சாந்தமுமான மௌனம் நிலவியது. 'பார்க்கின்ஸன்' நோயால் பாதிக்கப்பட்டிருந்ததால் ராபர்ட்டிற்கு விசேஷமான ஒரு இருக்கை ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அவருக்குப் பின்னால் பகவானுடைய படம் வைக்கப்பட்டிருந்தது. எனக்குக் கூட தனிப்பட்ட ஒரு நாற்காலி போடப்பட்டிருந்தது. ராபர்ட் அமர்ந்து கொண்ட பின் எல்லோரையும் சுமார் இருபது நிமிடங்களுக்கு நோக்கினார். அந்த நேரத்திற்குள் அனைவரது மனதையும் அமைதியுறச் செய்து அவர்களை உண்முகப்படுத்தி இருந்தார் அவர். பின்னர் கையில் ஒலி பெருக்கியை எடுத்து ''எனது குரு ஸ்ரீ ரமண மஹர்ஷியின் தம்பியின் பேரனான கணேசனையும், அவரது செயலாளர் அனுராதாவையும் நான் வரவேற்கிறேன். கணேசன் பேச வேண்டும் என நான் விரும்புகிறேன்'' என அறிவித்தார். நான் ஏறத்தாழ அரை மணி நேரம் பேசிய பின் இறுதியில் ''இன்று கணேசன் கூறிய ஒவ்வொரு சொல்லையும் நான் முற்றிலும் ஆமோதிக்கிறேன்'' என ராபர்ட் மகிழ்ச்சியுடன் கூறினார்.

நான் அங்கு இருந்தபோது நிகழ்ந்த மிக முக்கியமான ஒரு சம்பவத்தை உங்களுடன் பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன். சொற்பொழிவுகள் நிறைவேறியபின் நான் ராபர்ட்டின் காலடியில் அமர்ந்து கொண்டேன். இருபது ஆண்டுகளுக்கு மேலாக ராபர்ட்டின் நண்பராக இருந்த ஜான் வில்கின்ஸ்



**மஹர்ஷியின் கருணை, அன்பு ....**

என்ற மற்றொருவரும் உடனிருந்தார். எதிர்பாராத விதமாகத் திடீரென "ராபர்ட்! எது ஸத்தியம் எது பொய் என்பதை நீங்கள் எனக்குக் கூற வேண்டும். உண்மையென்றால் என்ன? அஸத்தியம் என்றால் என்ன? சாஸ்திரங்களில் கூறப்பட்டவற்றையோ அல்லது தத்துவ சாஸ்திர பரிபாஷையிலோ கூறி விளக்க வேண்டாம். உங்கள் காலடியில், இப்போதே நான் அந்த அனுபவத்தைப் பெறும்படி செய்யுங்கள்" என ஜான் கூறவும் நான் மெய் சிலிர்த்தேன். ஏனெனில், இந்தக் கஷ்டமான கேள்விகளுக்கு ராபர்ட் எவ்வாறு விடையளிக்கப் போகிறார் என்றறிய நான் ஆவலுடன் இருந்தேன். சிறிது நேரம் மகிழ்ச்சியுடன் இருந்த அவர், பின் ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கினார். "நீங்கள் யார்?" என தன் நண்பரைப் பார்த்து ராபர்ட் கேட்கவும் நோயின் காரணமாகத் தன்னை ராபர்ட் மறந்து போய் விட்டதாக அவர் எண்ணி விட்டார். "நான் ஜான் வில்கின்ஸ்" என அவர் பதிலளித்தபோது இதுவரை இல்லாத விதத்தில் ஜானைப் பார்த்து அருள் பொங்க புன்னகை பூத்து "'நான் இருக்கிறேன்' என்பதுதான் ஸத்தியம். ஜான் வில்கின்ஸ் என்பது அஸத்தியம். 'நான் இருக்கிறேன்' என்பது உண்மை. ஜான் வில்கின்ஸ் என்பது பொய்" என்று அவர் கூறியவுடன் அனைவருமே உள்ளே ஆழ்ந்து அசைவற்ற நிலையை அடைந்தனர். அவர் கூறியது சாதாரணமான பதிலன்று. சொல்லப்பட்ட ஆழ்ந்த கருத்து எல்லோருடைய மனதையும் ஆழமான அமைதி நிலைக்குக் கொண்டு சென்றது.

ராபர்ட் ஆடம்ஸ் என்னை அடுத்த ஆண்டும் வருமாறு அழைத்தார் என்றாலும் பகவான் தேர்ந்தெடுத்த இடம் ஸெடோனா என்பதால், தான் அங்கு இடம் பெயரவும் வாய்ப்புள்ளது என்றும் கூறினார். எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டுவிட்டதாகக் கூறி மீண்டும் அழைப்பு விடுத்தார். நானும் அனுராதாவும் ஒரு தம்பதியின் இல்லத்தில் தங்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. நான் அவருடைய ஸத்ஸங்கங்களுக்கெல்லாம் சென்றேன். எப்போதும் என்னையும் அவர் பேசச் சொல்லுவார். நான் என் அனுபவங்களைப் பகிர்ந்து கொண்ட போது அவற்றை ரசித்துக் கேட்டதுடன், பாராட்டவும் செய்வார். ஒரு நாள் மிகுந்த நன்றிப் பெருக்குடன் அனுராதா, ராபர்ட்டின் கைகளைப் பற்றியவாறு "நான் உங்களுக்கு ஏதாவது செய்ய வேண்டும். எவ்விதத்தில் நான் சேவை செய்ய வேண்டும் எனக் கூறுங்கள்" என்று ராபர்ட்டிடம் வினவியபோது "ஆம். நீங்கள் எனக்காக ரமணாச்ரமச் சாப்பாட்டைத் தரலாம். எனக்கு அந்தச் சாப்பாடு மிகவும் விருப்பமானது. நீங்கள் தயார் செய்து கொடுத்தால் சந்தோஷமாக உண்பேன்" என அவர் தெரிவித்தார். அனுராதாவும் மகிழ்ச்சியுடன் சம்மதித்தார். தென்னிந்திய உணவு தயாரிக்கத் தேவையான அளவு பாத்திரங்கள் அங்கு இல்லாததால் அவற்றைச் சேகரிக்க வேண்டியிருந்தது. ஒருவர் தேவையான பாத்திரம் தர இசைந்து நாங்களும் உணவருந்த வருகிறோம் என்று தெரிவித்தார். மொத்தமாக ஆறு பேருக்குத்தானே அழைப்பு என்று ராபர்ட் முதலில் கூறினார். ஆனால் இரண்டு மணி நேரத்திற்கொரு முறை மேலும் ஆறு நபர்கள் வருவதாகச் சொல்லியனுப்புவார். இறுதியில் உணவருந்த வருபவர்களின் எண்ணிக்கை அறுபதாகிவிட்டது! அன்று அதிகாலையிலிருந்தே அனுராதாவும் மற்றும் சிலரும் உணவு தயாரிப்பதில் ஈடுபட்டனர். ஏனென்றால் ரமணாச்ரம உணவு என்றால் அதில் சாம்பார், ரசம், காய்கறிகள், தயிர், பப்படம், பாயஸம் இவையனைத்துமே அடங்கும். சிலர் ராபர்ட்டுக்குத் தேவையான அளவு மட்டும் சமைத்தால் போதுமென்றும் ஏனையோர் பிரசாதமாகச் சிறிதளவு எடுத்துக் கொள்ளலாமென்றும் அபிப்பிராயம் தெரிவித்தனர். இருந்தாலும் அனைவருக்கும் உணவளிக்க வேண்டுமென்பதில் அனுராதா உறுதியாக இருந்தாள். ஏனெனில், பகவான் தனது வாழ்நாளில் அனைவருக்கும் வயிறார உணவளித்த பின்னர் தனக்குக் கடைசியாகப் பரிமாறப் பட வேண்டுமென்று கூறியது அவள் நினைவிற்கு வந்தது. மறுநாள் சுவையான விருந்து அனைவருக்கும் பரிமாறப்பட்டது. ராபர்ட்டுக்கு அனுராதாவே உணவு பரிமாறினாள். மற்றவர்கள் அவரவருக்குத் தேவையான விதத்தில் உணவு ஏற்றுக் கொண்டனர்.

ஒவ்வொரு வகை உணவையும் ராபர்ட் மூன்று அல்லது நான்கு முறை கேட்டு வாங்கி, விரும்பி உண்டதால் அனுராதா மகிழ்ச்சியில் மூழ்கினாள். ராபர்ட் ருசித்து உணவருந்தியது எங்களையும் சந்தோஷத்தில் ஆழ்த்தியது. உணவருந்திய பின்னர் "ராபர்ட்! இன்று ரமணாச்ரமம் உணவைப் போன்றிருந்ததா? அல்லது ஏதாவது குறையாக இருந்ததா?" என அனுராதா கபடமற்று வினவியபோது ராபர்ட் "எல்லாமே மிகவும் ருசியாக இருந்தன. ஆனால் ஆச்ரமத்தில் உணவு பரிமாறப்படும் வாழை இலை இல்லாதது மட்டும்தான் குறை" என்று கூறினார்.

விருந்திற்குப் பின் ஸத்ஸங்கம் வேண்டுமென அனைவரும் விரும்பினர். உடனே ராபர்ட், "இன்று நான் பேசப் போவதில்லை. கணேசன்தான் பேசுவார்; அதுவும் நான் தேர்ந்தெடுக்கும் தலைப்பிலேயே பேசுவார்" என்று கூறி என்னை நோக்கி "கணேசன்! இன்று உங்களது விஷயம் 'பகவானும் குரங்குகளும்' என்பதே" எனத் தெரிவித்தார். நான் சுமார் இருபது நிமிடங்களுக்குப் பேசினேன். நான் கூறியவற்றை நன்கு ரசித்துக் கேட்டு அனைவரும் சிரித்து மகிழ்ந்தனர். பின் அங்கிருந்தவர்களில் ஒருவர் "பகவானைப் பற்றிக் கணேசனிடமிருந்து கேட்டோம். இனி கணேசனைப் பற்றி உங்களிடமிருந்து தெரிந்து கொள்கிறோம்" என அனுராதாவிடம் கேட்டுக் கொண்டபோது, ராபர்ட் குறுக்கிட்டு "அனுராதா! நான் உங்களுக்கும் ஒரு தலைப்புத் தருகிறேன். 'பகவானும் கணேசனும்' என்ற விஷயம் பற்றிப் பேசுங்கள்" என்றார். அனுராதா எனது குழந்தைப் பருவத்தைப் பற்றிக் கூறி பகவானுக்கும் எனக்குமிருந்த உறவை எடுத்துரைத்து உப்புப் பரிமாறுவது எப்படி என அவர் எனக்குக் கற்பித்ததையும் வேறு சில நிகழ்வுகளையும் பற்றிப் பேசினாள். "பகவான் தொட்டவை அனைத்துமே செழித்துக் கொழிக்கும் என்பதால் அவரது கையைத் 'தங்கக்கை' என்று பெருமைபடக் கூறுவர். கணேசனுடைய கைக்கு ரமண நகரில் 'கொள்ளிக்கை' என்ற பெயருண்டு. ஏனென்றால் ரமணாச்ரமத்திலும் ரமண நகரிலும் மரணத்தைத் தழுவும் பழைய பக்தர்களின் சிதைக்குக் கணேசனே எரியூட்டுவார்" என அவள் கூறிய உடன் அனைவரும் வாய்விட்டுக் 'கொல்'லென்று சிரித்தனர். சிந்தனையில் மூழ்கியவரைப் போன்று நடித்த ராபர்ட் "மரணத்தைக் கண்டு அஞ்சுபவர்கள் இங்கிருந்து ஓடிவிடுங்கள். ஏனெனில் இங்கு கொள்ளிக்கைகள் உள்ளன" எனக் கூறினார். நான் அப்போது அவரது காலடியில் அமர்ந்திருந்தேன். என் பக்கமாகக் குனிந்து "கணேசன்! உங்கள் கையை நீட்டுங்கள். நான் தயாராக இருக்கிறேன்" என ராபர்ட் கூறியதை அந்த சமயத்தில் நாங்கள் அனைவருமே விளையாட்டாகச் சொல்கிறார் என்றுதான் எண்ணினோம். ராபர்ட் கிளம்பத் தயாரான போது நல்ல பக்தையும் பாடகியுமான ஷர்மிளா பாடத் துவங்கினாள். அனைவரும் கூடச் சேர்ந்து பாடினர். ராபர்ட் எழுந்து 'Hit the road, Jack.



அனுராதா: "ராபர்ட், நான் என்ன சேவை செய்ய முடியும் ? "

Don’t come back no more, no more, no more’ என்ற பாடலின் இசைக்கேற்ப நடனமாடத் துவங்கினார். சாதாரணமாக ராபர்ட் எளிமையான உடைகளையே அணிவது வழக்கம். அன்றும் ஜீன்ஸ், டீ ஷர்ட் இவற்றுடன் பின்புறம் திருப்பிய தொப்பியும் அணிந்திருந்தார். எளிமையாகவும் இயல்பாகவும் நகைச் சுவையோடும் - அநேகமாகத் தன்னையே கேலி செய்தபடி இருப்பார். அன்று நாங்கள் அனைவருமே மகிழ்ச்சியோடிருந்தோம்.

ராபர்ட்டின் முன்னிலையில் அடிக்கடி நிகழ்ந்த ஒரு முக்கியமான விஷயத்தை நான் உங்களுடன் பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன். ஹாலிவுட்டோ அல்லது ஸெடோனாவோ எந்த ஊராக இருந்த போதும் நான் அவரைச் சந்தித்த மறுகணமே அவர் தன் கையை நீட்டுவார். பகவானுடைய ஸமாதிக் கோயிலிலிருந்து விபூதி குங்குமப் பொட்டலங்களைப் பிரசாதமாக எப்போதும் என்னோடு வைத்திருப்பேன் - ஏன் இப்போதும்கூட என்னிடமுள்ளது. நான் முதன் முதலாக ராபர்ட்டை ஹாலிவுட்டில் சந்தித்த போது நான் எதற்காக நெற்றியில் மத அடையாளங்களான விபூதி, குங்குமம் இவற்றை அணிந்துள்ளேன் என அவர் என்னிடம் கேட்டார். எனக்கு விஸ்வநாத ஸ்வாமி மூலம் ஏற்பட்ட அனுபவத்தை நான் அவரிடம் அப்போது கூறினேன்: ‘ஒரு முறை பக்தரும் நெருங்கிய நண்பருமான ஒருவருடன் நான் சென்று கொண்டிருந்த போது விஸ்வநாத ஸ்வாமி என் நண்பனை நோக்கி “உங்களுக்கு நல்ல பெரிய நெற்றியாக உள்ளது. விபூதியும் குங்குமமும் அணிந்து கொண்டால் அழகாக இருக்குமே” எனக் கூறினார். சில தினங்களுக்குப்பின் மீண்டும் அந்த நண்பரைச் சந்திக்க நேர்ந்த போது விஸ்வநாத ஸ்வாமி, அவர் விபூதி, குங்குமம் அணியவில்லையென்பதைக் கண்டார். விஸ்வநாத ஸ்வாமி, அவரிடம் எதுவும் கூறாமல் என் பக்கம் திரும்பி என் நண்பன் முன்னாலேயே “விபூதி குங்குமத்தை எனக்காக இட்டுக் கொள்ள ஆரம்பி” என்று உத்தரவிட்டார். எனக்குச் சடங்குகளைக் கடைப்பிடிப்பதில் ஆர்வமில்லை என்பது அவருக்கு நன்றாகவே தெரியும். இருந்தபோதும் சக்தி வாய்ந்த கட்டளையாக அவரிடமிருந்து அது வெளிப்பட்டதால், அன்று முதல், பகவானின் பிரசாதமாக மட்டுமின்றி விஸ்வநாத ஸ்வாமியின் ஆசிகளாகவும் எண்ணி அவற்றை அணியத் துவங்கினேன்’ என்றேன். நான் கூறி முடித்த உடனே “என்னைச் சந்திக்கும் போதெல்லாம் பகவானுடைய பிரசாதத்தை என் நெற்றியிலும் இடுங்கள்” என ராபர்ட் கூறியபடியே செய்து அமெரிக்க சித்த புருஷரான ராபர்ட் ஆடம்ஸின் ஆசிகளையும் அதிகப்படியாகப் பெற்றேன்.

விரைவிலேயே நாங்கள் இந்தியாவிற்குத் திரும்பி வந்து காசியில் ராஜ்காட்டில் இருந்த கிருஷ்ணமூர்த்தி ஃபௌண்டேஷனில் தங்கினோம். அங்கு வெளி நாட்டிலிருந்து யாரோ தொலைபேசியில் அழைப்பதாகத் தெரிவித்தனர். ராபர்ட் ஆடம்ஸ்தான் அழைத்திருந்தார். என் பெயரைக் கூறிய அவருக்கு அதற்கு மேல் பேச இயலவில்லை. அவருடைய உதவியாளர் ரிச்சர்ட் தான் என்னிடம் பேசினார். “நீங்கள் இளவேனிற் காலத்தில் மூன்று மாதங்கள் வந்து அவருடன் தங்க வேண்டும் என மிகவும் விரும்புகிறார் ராபர்ட். நீங்கள் தனியாக வர இயலாதென்பது அவருக்குத் தெரியுமாதலால், அனுராதாவையும் உடன் அழைத்து வருமாறு தெரிவித்தார். அவரே எல்லா ஏற்பாடுகளையும் செய்து விடுவார். ஷர்மிளா உங்களை வரவேற்று அழைத்துச் செல்வார். மற்ற பக்தர்கள் உங்களது தேவைகளைக் கவனித்துக் கொள்வார்கள். தயவுசெய்து இளவேனிற் காலத்தில் வந்து விடுங்கள்” என ரிச்சர்ட் தெரிவித்தார். நான் ஆச்ரமத்திற்குத் திரும்பிய போது ராபர்ட் தன் கைப்பட எழுதிய கடிதம் ஒன்று எனக்காகக் காத்திருந்தது. “கணேசன்! தயவு செய்து இங்கு வந்து வஸந்த காலம் முழுவதுமே என்னுடன் தங்குங்கள்” என எழுதியிருந்தார். அவருடைய அழைப்பு என்னை நெகிழச் செய்தது. நானும் அனுராதாவும் ஸான் ஃப்ரான்ஸிஸ்கோவில் இறங்கிய அதே சமயத்தில் ஸெடோனாவில் ராபர்ட் தனதுடலை விட்டிருந்தார். இதுவும் அவரது விளையாட்டுக்களில்

ஒன்றா? முன்பொரு சமயம் விளையாட்டாகக் கூறுவது போல் ''உங்கள் கொள்ளிக்கைகளில் என்னை ஏற்றுக் கொள்ளுங்கள்'' என்று ராபர்ட் கூறியது நினைவிற்கு வந்தது. இப்போது அது உண்மையானது. ராபர்ட் என்னிடம் ஏதோ ஒரு செய்தியைக் கூற வேண்டுமென நிச்சயமாக எண்ணியிருக்க வேண்டும். நானும், அனுராதாவும் எங்கள் பயணத்தைத் தொடர்ந்து ஸெடோனாவை அடைந்தோம். அங்கு ஷர்மிளா என்ற அருமையான பெண்மணி எங்களைச் சந்தித்தார். அவருக்கென சொந்த வீடு இல்லாததால் அவருடன் மூன்று நான்கு வெவ்வேறு வீடுகளில் தங்க நேர்ந்தது. ராபர்ட்டின் பழைய பக்தர்கள் அவர்களுடைய ஸத்ஸங்கத்தில் நான் கலந்து கொள்ள வேண்டுமென விரும்பினர். நான் அவர்களிடையே ஆத்ம விசாரம் பற்றிப் பேசியதோடு அதைப் பயிற்சி செய்வதால் பகவான் ராபர்ட்டுக்கு அளித்ததும் ராபர்ட் தனது பக்தர்களுக்குக் கொடுத்ததுமான மௌனம், சாந்தி ஆகிய நிலைகளை எவ்வாறு பெற முடியுமென்பதையும் எடுத்துரைத்தேன். இந்த ஸத்ஸங்கங்கள் தொடர வேண்டுமென்பதற்காகவே ராபர்ட் என்னை மூன்று மாதங்கள் தங்குமாறு கூறியிருக்க வேண்டும். நானும் ராபர்ட்டிடம் இருந்து ஒரு பாடம் கற்றேன். ஒருவர் தனக்கு வெளியே நிகழும் அனைத்தையுமே கனவாகக் காண வேண்டுமென்பதை நான் புரிந்து கொண்டேன். இந்த ஞானத்தை நேராகவும் மறைமுகமாகவும் ராபர்ட் எனக்குப் போதித்திருந்தார்.

இறுதி நாட்களிலும் கூடத் தனது நகைச்சுவையை ராபர்ட் விடவில்லை. அவர் படுத்த படுக்கையாக இருந்த சமயத்தில் ஜான் என்ற ஒரு இளைஞன் அவரைக் கவனித்துக் கொண்டிருந்தார். ஆத்மானுபூதி பெற்ற ஒரு மஹானுக்குத் தான் சேவை செய்கிறோம் என்பதை ஜான் உணர்ந்திருந்தார். தனது கணவருக்கு ஜான் பணிவிடை செய்வதை ராபர்ட்டின் மனைவி விரும்பவில்லை. அதனால் ஜானை அடிக்கடி வெளியில் அனுப்பி விடுவார். படுத்த படுக்கையாக இருந்த ராபர்ட்டுக்கோ ஜானுடைய உதவி மிகவும் அவசியமாக இருந்தது. ஒரு நாள் ராபர்ட்டுக்கு வெந்நீர் தேவைப்பட்டது. அதை எடுத்து வர ஜான் சமையலறைக்குச் செல்ல வேண்டி வந்தது. அந்தச் சமயத்தில் பெரிய வாணலியில் ராபர்ட்டின் மனைவி எதையோ வறுத்துக் கொண்டிருந்தாள். மிகவும் கோபத்துடன் இருந்த ராபர்ட்டின் மனைவி வாணலியை ஜான் மீது எறியத் தயாராக இருந்தாள். பயந்து போன ஜான் உதவியை நாடி, ''ராபர்ட்! ராபர்ட்! அவள் என்னை வாணலியால் தாக்க முயற்சி செய்கிறாள். நான் என்ன செய்ய வேண்டும்? தயவு செய்து உதவி செய்யுங்கள்'' என்று அலறினார். ''குனிந்து கொள்'' என தனக்கே உரிய பாணியில் பாதி நிஜமாகவும், பாதி சிரித்துக்கொண்டும் படுத்துக் கிடந்த ராபர்ட் பதிலளித்தார்.

ராபர்ட்டுக்கு அஞ்சலி செலுத்தும் வகையாக அவரது உபதேசங்களில் சிலவற்றை நான் எடுத்துரைக்கிறேன் :

''உலகில் மிக உயர்ந்த உபதேசம் மௌனமே. அதை விடப் பெரியது எதுவுமில்லை. ஒரு ஞானியின் முன் அமர்ந்திருப்பவரின் மனம், அவருடன் இருப்பதாலேயே தூய்மையடைகிறது. மனம் தானாகவே அமைதியடைகிறது. அங்கு வார்த்தைகள் தேவையில்லை. இறுதி உண்மை மௌனமே. உலகிலுள்ள அனைத்துமே மௌனத்தினால் மட்டுமே நிலை நிற்கின்றன. இவ்வாறு கூறும் போது உங்களுக்குள் ஆழ்ந்து மூழ்கி எதுவுமே நிகழாத கால தேசங்களுக்கு அப்பாற்பட்ட அந்த இடத்தை அடைவது என்றே பொருள். சூன்யம் என்பதன் புத்தம் புதுப் பரிமாணமாகும் இது. அதுவே நமது உண்மையான வீடு. நாம் உண்மையில் அதைச் சேர்ந்தவர்கள். இந்த நிலையில் ஆழமான அமைதி மட்டுமே உள்ளது. நல்லது கெட்டது என்றோ எதையாவது அடைவது என்றோ அங்கு எதுவுமில்லை. அங்கு இருப்பது பரிசுத்தமான 'இருப்பு' மட்டுமே. உங்கள் உடம்பு, விவகாரங்கள், இந்தப் பிரம்மாண்டம் இவையனைத்திற்கும் அப்பாற்பட்ட அந்த ஆழ்ந்த மௌனத்தை அடைவதே

உண்மையான சுதந்திரம். நீங்கள் மட்டுமே உண்மை என்ற மற்றொரு பாடத்தையும் படிக்க வேண்டும். நீங்கள் எதுவாகக் காணப்படுகிறீர்களோ அது பொய்த் தோற்றமே. மெய்யாய், நிரந்தரமாயுள்ள உங்களுடன் இணைத்துக் கொள்ளுங்கள். பொய்யான உங்கள் தோற்றத்துடன் இணைத்துக் கொள்ளாதீர்கள். காண்பதெல்லாம் உண்மையெனக் கொள்ளாதீர்கள். உங்களுக்கு இருக்கும் ஒரே சுதந்திரம் அகமுகமாவது மட்டுமே. இதுவும் கனவே. அதிலிருந்தும் நீங்கள் ஒரு நாள் விழித்துக் கொண்டு விடுதலை பெறுவீர்கள். பிறப்பு இறப்பு என்று எதுவும் இல்லை. யாரும் பிறக்கவில்லை; யாரும் இறக்கவுமில்லை. இடையில் வாழ்பவர் என்றும் யாருமில்லை. காணப்படுவதெல்லாமே இருப்பில்லாதவை. இருப்பது ஆத்மா ஒன்றே. அனைத்தும் ஆத்மாவே. நானும் அதுவேதான். பூரணமான மெய்ப்பொருள் நீயே. நீயே உணர்வு; நீயே சூன்யம்; ஸத், சித், ஆனந்தமும் நீயே — அதாவது நீயே இருப்பு, சைதன்யம், ஆனந்தம் இவை அனைத்தும்; உன் உண்மை இயல்பே அதுதான். அதிலேயே நிலைத்து நின்று ஏன் சுதந்திரமாக இருக்கக் கூடாது? மனதை எண்ணங்களின்றிச் செய்து அசைவற்றிரு; எல்லாம் தானாகவே நடக்கும். நீ செய்ய வேண்டியது எதுவுமே இல்லை — சும்மா இரு. அசைவற்றிருந்து, 'நான் இருக்கிறேன்' என்ற உணர்வே கடவுள் என்பதை அறிந்து கொள். 'நான் இருக்கிறேன்' என்பதே ஆத்மா. இதை ஏற்றுக்கொண்டு சுதந்திரமாக இரு'' எனப் பல உபதேசங்களை ராபர்ட் கொடுத்துள்ளார்.

பகவானிடம் சரணடைந்த பக்தரும் ஆனந்தத்தில் திளைத்தவருமான ராபர்ட் ஆடம்ஸிற்கு எனது வணக்கங்கள்.



**"கணேசன், கைகளை நீட்டு. நான் தயார்."**

**(ராபர்ட்டின் நெற்றியில் விபூதி மற்றும் குங்குமம் இருப்பதைக் கவனியுங்கள்)**







'புது ஹாலில்' ஸ்ரீ பகவான் தரிசனம் .
(வலது புறம், முன்னால், கணேசனைக் காணலாம்)



# 75 லக்ஷ்மண ஸ்வாமி



பகவான் ரமணரிடமிருந்து நேர்முகமாக ஆத்மானுபூதியைப் பெற்ற மற்றொரு மஹான் லக்ஷ்மண ஸ்வாமி. அருணாசலத்தில் வாழ்ந்து வந்த அவர் சில மாதங்களுக்கு முன் அருணாசலத்தில் ஒன்றினார். இளம்பருவத்திலேயே ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெற வேண்டும் என்று விரும்பியவர் லக்ஷ்மண ஸ்வாமி. மத சம்பந்தமான புத்தகங்களையும் ஆன்மீக நூல்களையும் படித்தகோடு இடைவிடாது பிராணாயாமத்தையும் தீவிரமாகப் பழகி வந்தார். கல்லூரியில் படிக்கும் போதே ஒரு நாள் ராபர்ட் ஆடம்ஸ்க்கு ஏற்பட்டது போன்ற அற்புதமான ஆன்மீக அனுபவம் அவருக்குக் கிடைத்தது. “ஒரு முறை நான் வயல் வெளியில் தனிமையில் இருந்த போது எங்கும் ஒளி பரவியது; திடீரென மனம் ஒருமுகப்பட்டு நிலைத்து நின்றது. உள்ளேயும் எதிர்பாராத விதமாக ஒளி வெள்ளம் தோன்றி அந்தத் தெய்வீக ஒளி, என்னைச் சுற்றி வளைத்து விழுங்கி பிரகாசமாக ஒளிர்ந்தது. உடல் உணர்வு முற்றிலுமாக அற்றுப் போனது. அசாதாரணமான அந்த அமைதியில் என்னுள்ளேயும் அனைத்தும் ஸ்தம்பித்து நின்றன. உடலாகிய கோயிலுள் இருக்கும் ‘நானே’ கடவுள் என்பதை அந்த ஒளி சந்தேகத்துக்கிடமின்றித் தெளிவு படுத்தியது. ஆத்மாவே என் குருவாக விளங்கியதில் எல்லையில்லா மகிழ்ச்சி அடைந்தேன்” என்று லக்ஷ்மண ஸ்வாமி தனது அனுபவத்தைப் பற்றிக் கூறியுள்ளார். இருந்த போதும் அந்த ஆன்மீக அனுபவம் மெதுவாக மறையத் துவங்கியது. அந்த நிலையிலேயே நிலைத்து நிற்பதற்கு ஒரு குரு தேவை என்பதை லக்ஷ்மண ஸ்வாமி உணர்ந்தார். ஒரு நாள் கல்லூரியில் அவரது பேராசிரியர் ரமண மஹர்ஷியின் பெயரைக் கூறியபோது அந்தப் பெயரே அவருக்கு மகிழ்ச்சியை ஊட்டியது. மற்றொரு சந்தர்ப்பத்தில் முக்கியமான பிரசங்கங்கள் நிகழும் ஹாலைத் தாண்டிச் செல்லும் போது அவருடைய ஆங்கில பேராசிரியர் G. V. சுப்பராமையா ரமண மஹர்ஷி பற்றிப் பேசிக் கொண்டிருப்பதைக் கண்டார். ஹாலில் ரமண மஹர்ஷியின் பெரிய படம் ஒன்றும் வைக்கப்பட்டிருந்ததை அவர் கண்டார். லக்ஷ்மண ஸ்வாமி நின்ற இடத்திலிருந்து அவரால் பிரசங்கத்தைக் கேட்க முடியவில்லை என்பதோடு, பிரசங்க அறையும் முழுவதுமாக நிரம்பி இருந்தது. இருந்தபோதும் பேராசிரியர் ரமண மஹர்ஷியின் பெயரைக் கூறிய போதெல்லாம் லக்ஷ்மண ஸ்வாமியால் அதைக் கேட்க முடிந்தது. பகவானுடைய அந்த நாமமும் ரூபமும் அவருக்கு உறுதியைத் தந்தது. ‘தூய ஆத்மாவில் நிலைத்து நிற்பதற்கானத் தெளிவைத் தர இங்கு ஒருவர் இருக்கிறார்’ என்பதை லக்ஷ்மண ஸ்வாமி உணர்ந்தார்.

1949-ம் ஆண்டு அன்னையின் ஸமாதிக் கோயில் கும்பாபிஷேகம் நடைபெற்றுக் கொண்டிருந்த போது லக்ஷ்மண ஸ்வாமி திருவண்ணாமலைக்கு வந்தார். கூட்ட நெரிசலுக்கிடையே ரமண மஹர்ஷியை எப்போதாவது கண நேரம் மட்டுமே அவரால் காண முடிந்தது. அவரை நேரில் சந்திக்க முடியவில்லை. சில நாட்கள் அங்கு தங்கிய அவர் தனது தாய் மொழியான தெலுங்கில் ‘நான் யார்?’ என்னும் புத்தகத்தை வாங்கினார். அந்தப் புத்தகத்தைப் படிக்கப் படிக்க அவருடைய மனம் மேலும் மேலும் ஆழ்ந்து உள்ளே சென்று எண்ணங்களற்ற நிலையை அடைவதை அவர் உணர்ந்தார். ஆயினும் ஆத்ம விசாரத்தில் அவருக்கு அத்துணை ஈடுபாடு இருக்கவில்லை. உடலளவில் பகவான் வெகு தொலைவிலிருந்த போதும் திடீரென எங்கிருந்தோ ‘ஹரே ரமண!’ என்ற மந்திரம், ஜபமாக அவருள் எழுந்தது. அந்த மந்திர ஒலி — அந்தப் பெயர் உள்ளிருந்து ஒலித்ததால் அவர் அதைத் தொடர்ந்து ஜபித்துக் கொண்டிருந்தார். சில நாட்களுக்குப் பின் தனது கிராமத்திற்குத்

திரும்பிய போது தனிமை, மௌனம், தியானம் இவற்றோடு பிராணாயாமமும் சேர்ந்தால், தன்னால் ஆத்மாவில் நிலை நிற்க முடியுமென அவருக்குத் தோன்றியது.

தன் கிராமத்தை விட்டுக் கடற்கரைப் பக்கமாகச் சென்று ஒரு குடிசையில் தங்கி, தொடர்ந்து ஐந்து மாதங்களுக்குத் தீவிரமாகத் தனது ஸாதனைகளைப் பயின்றார் என்றாலும் உடல் நலம் குன்றியதால் அவர் மீண்டும் கிராமத்திற்கே அழைத்து வரப்பட்டார். விசேஷமான மருத்துவ சிகிச்சைகள் அளிக்கப்பட்ட போதும் அவர் முழுமையாகக் குணம் பெறவில்லை. இந்தக் காலகட்டத்தில் அவரிடமிருந்த பகவானுடைய படம் எப்போதுமே அவரை நோக்கிச் சிரிப்பதாக அவருக்குத் தோன்றியது. ஒரு நாள் அந்தப் படத்தைக் கவனித்துக் கொண்டிருந்த போது "மருந்துகள் கொண்டு இந்த உடம்பைக் குணப்படுத்தலாம். ஆனால் உன்னை விழுங்கிக் கொண்டிருக்கும் புலி வாய்க்கு ஒப்பான அஹங்காரத்திலிருந்து உன்னைக் காத்துக் கொள்ள நீ என்ன செய்யப் போகிறாய்?" என்ற ஒரு கேள்வி பகவானிடமிருந்து அவருக்கு வந்தது. தனது குருவான ரமண மஹர்ஷியிடம் திரும்பிச் சென்றே ஆக வேண்டும் என்பதை லக்ஷ்மண ஸ்வாமி உணர்ந்து கொண்டார்.

1949 செப்டம்பரில் லக்ஷ்மண ஸ்வாமி ரமணாச்ரமத்திற்குத் திரும்பி வந்த போதும் நவராத்திரி விழா காரணமாக ஆச்ரமத்தில் கூட்டம் அதிகமாக இருந்தது. இதற்குள் பகவானுடைய உடல் நிலையும் மிகவும் மோசமாகி இருந்ததால் நிர்வாண அறையிலிருந்து, அன்னையின் கோயிலுக்கு எதிரேயிருந்த புதிய ஹாலுக்கு மதிய வேளையில், மூன்று மணியிலிருந்து, இரண்டு அல்லது மூன்று மணி நேரங்களுக்கு மட்டுமே, அவர் அழைத்து வரப்படுவார். அன்று நவராத்திரி கடைசி தினம். மணி ஓசைகளுக்கிடையே மந்திரங்கள் ஓதப்படுவதன் ஒலியும் சேர்ந்து வெளிப்பட்டது. அச்சமயத்தில் பகவான் நிர்வாண அறையிலிருந்து புதிய ஹாலுக்கு வந்தார். அப்போது லக்ஷ்மண ஸ்வாமி வெளியே நின்று கொண்டிருந்தார். மிகுந்த சிரமத்துடன் நடந்து வந்த பகவான், தலையை நிமிர்த்தி லக்ஷ்மண ஸ்வாமியை நோக்கிய போது, லக்ஷ்மண ஸ்வாமி பரவச நிலைக்குச் சென்று விட்டார். கீழே அமர்ந்து கண்களை மூடிக் கொண்ட போது ஆனந்தமயமான முழு ஆத்மானுபூதியை அவர் பெற்றார். அது பற்றி விரிவாகக் கூறும் போது "எதிர்பாராத விதமாக எனது எண்ணங்கள் அனைத்தும் - நான் என்னும் முதல் எண்ணத்தைத் தவிர மற்றவையனைத்தும் மறைந்து விட்டதை நான் உணர்ந்தேன். உடனே நான் யார்? என்ற கேள்வியோடு சிரித்த முகத்தோடு பகவானுடைய அருள் பொழியும் முகமும் என்னுள்ளே தோன்றியது. எனது மார்பின் வலது பாகத்தில் ஒளி வெள்ளம் பாய்வதையும் உள்ளும் புறமும் தெய்வீக ஒளி பிரகாசிப்பதையும் நான் உணர்ந்தேன். எண்ணற்ற மின்னல் ஒளிக் கீற்றுகளின் பிரகாசத்தை விட அதிகமான பொலிவுடன் பகவானுடைய சிரித்த முகம் ஒளி வீசியது. தொடர்ந்த அந்தப் பேரானந்த நிலையில் ஆனந்தக் கண்ணீர் தவிர்க்க முடியாதபடி பொங்கி வழிந்தது" என்று கூறிய லக்ஷ்மண ஸ்வாமியால் தான் நின்றிருந்த இடத்திலிருந்து ஆறு மணி நேரத்திற்கு அசைய முடியவில்லை. அன்னையின் கோயிலிலிருந்து தேவியின் திருவுருவம் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டதால் மக்கள் பரபரப்போடு இடித்துத் தள்ளிக் கொண்டு முன்னேறிச் சென்றனர். அந்தச் சூழ்நிலையிலும் லக்ஷ்மண ஸ்வாமி அமைதியான நிலையில் வேரூன்றி நின்றார். அன்று இரவு முழுவதும் அவர் மௌனத்தில் ஆழ்ந்திருந்தார். மறுதினம் புதிய ஹாலுக்குச் சென்று தெலுங்கில் "உங்களது ஸாந்நித்தியத்தாலும் 'நான் யார்' என்னும் விசாரத்தாலும் நான் என்னை அறிந்து கொண்டேன். என்னை ஆசீர்வதியுங்கள்" என ஒரு சீட்டில் எழுதி பகவானிடம் சேர்த்தார். பகவான் சீட்டைக் கையில் எடுத்துப் பார்த்து, அவரை நோக்கிச் சிரித்துத் தலையசைத்து இரண்டு வாக்கியங்களை மட்டுமே பேசினார். எங்கிருந்து வருகிறீர்கள்? என்று லக்ஷ்மண ஸ்வாமியிடம் பகவான் கேட்க அவர் கூடூரிலிருந்து என பதிலளித்தார். "அது நெல்லூர்

மாவட்டத்தில் இருக்கிறது அல்லவா?" என்று பகவான் வினவிய போது அவர் ஆம் என்று தலையசைத்தார். ஏற்கனவே ஆத்மாவில் நிலைத்து விட்ட லக்ஷ்மண ஸ்வாமியை அவரது குரு தனது பேச்சால் மேலும் உறுதியாக நிலை நிறுத்தினார். குருவுடன் நிகழ்ந்த இந்த சம்பாஷணைக்குப் பிறகு பதின்மூன்று ஆண்டுகள் மௌனமாகவே இருந்த லக்ஷ்மண ஸ்வாமி, பலாக்கொத்தில் ஒரு குடிசையில் தங்கியிருந்தார். லக்ஷ்மண ஸ்வாமி தந்த சீட்டைத் தனது தொண்டர் வேங்கடரத்தினத்திடம் கொடுத்த பகவான் அதை பத்திரமாக வைத்திருக்கும் படியும் கூறினார்.



**கார்த்திகை தீபத்திருநாள்**

பகவான் உடலை உகுத்த அன்று ஆச்ரமத்திற்கு அருகிலேயே இருந்த தனது அறையை லக்ஷ்மண ஸ்வாமி சுத்தம் செய்து கொண்டிருந்தார். அப்போது கீழே விழுந்துவிட்ட பகவானுடைய படத்தை எடுத்துத் துடைத்து, மிகுந்த மரியாதையுடன் மீண்டும் அதன் இடத்திலேயே வைத்தார். திரும்பவும் அந்தப் படம் விழுந்த போது, பகவானுடைய உடம்புக்கு ஏதோ நிகழ்ந்து விட்டது என்பதை மறுகணமே உணர்ந்து கொண்டார். உடனே ஸமாதியில் மூழ்கி உடலுணர்வற்ற நிலையில் ஆத்மாவில் லயித்து மூன்று மணி நேரம் இருந்தார். ஸமாதி கலைந்து எழுந்ததும் ரமணாச்ரமம் சென்று நிர்வாண அறையில் பகவான் உடலை நீத்த செய்தியை அறிந்தார். மக்கள் தரிசிப்பதற்காக பகவானுடைய உடல் ஹாலில் வைக்கப்பட்டிருந்தது. பகவான் உடலை உகுத்ததில் லக்ஷ்மண ஸ்வாமிக்கு வருத்தம் இருந்த போதும் இதயத்தில் வேதனை இருக்கவில்லை. ஆத்மாவில்

நிலைத்திருந்ததால் அவர் கண்ணீர் சிந்தவும் இல்லை. பகவானை ஆத்மாவாகவே பார்த்த ராபர்ட் ஆடம்ஸிற்கு பகவானின் மஹா ஸமாதியினால் எவ்வித பாதிப்பும் நேராதது போன்றே பகவான் உடலை விட்டதால் லக்ஷ்மண ஸ்வாமியும் பாதிக்கப்படவில்லை. மீண்டும் தனது கிராமத்திற்குச் சென்ற அவர் மௌனம், தனிமை, தியானம், பிராணாயாமம் இவற்றில் மூழ்கி யாரிடமும் பேசாமல் ஆத்மாவில் ஆழ்ந்து நிலைத்து நின்றார்.

1970-ல் தனது குருவின் உபதேசங்களைப் பரப்ப வேண்டுமென அவர் எண்ணியதால், கூடூரில் சொந்தமாக ஒரு ஆச்ரமத்தை நிறுவி சாரதாவைப் போன்ற தீவிர ஆன்மீக நாட்டம் உள்ள ஸாதகர்களுக்கு ஆத்ம விசாரத்தைப் போதித்தார். 1990 முதல் அருணாசலத்தில் இருந்த அவரது ஆச்ரமத்தில் எவருடனும் தொடர்பு கொள்ளாமல் மௌனத்திலும், தனிமையிலும் நாட்களைக் கழித்தார். ‘No mind, I am the self’ என்னும் தனது நூலில் டேவிட் காட்மன், லக்ஷ்மண ஸ்வாமியின் வாழ்க்கை வரலாற்றையும் உபதேசங்களையும் அழகாக எடுத்துரைத்துள்ளார்.

வாழ்க்கையின் ஒரே குறிக்கோள் ஆத்மாவை அறிவது மட்டுமே என்றும், மற்றச் செயல்கள் அனைத்துமே நேரம் கழிப்பதே” என்று பகவான் ரமண மஹர்ஷி கூறியுள்ளார். ஒருமுகப்பட்டு ஆழ்ந்து மூழ்கி நாமும் ஆத்மாவை அறிந்து கொள்வோம். லக்ஷ்மண ஸ்வாமி கூறுவது போன்று ‘மௌனமாக இருங்கள். அது மட்டுமே போதும். மற்றவற்றை பகவான் கவனித்துக் கொள்வார்’.



# 76 யோகி ராம் சுரத் குமார்



பிறப்பு இறப்பு என்னும் சுழற்சியிலிருந்து விடுபட்டு முக்தியைப் பெறுவதில் ஆர்வமுள்ள எல்லா இந்துக்களுக்குமே மிக முக்கியமாகவும் புனித தீர்த்த யாத்திரை ஸ்தலமாகவும் விளங்குவது வாரணாசி எனப்படும் காசி. இமயத்தின் சிகரங்களிலிருந்து உற்பத்தியாகி மிகுந்த உத்வேகத்துடன் சமவெளிகளில் பாய்ந்து புனித கங்கை நதி காசியில் தான்பிறந்த திசையான வடக்கு நோக்கித் திரும்புகிறது. எண்ணிறந்த காலம் தொட்டு உயிர்த்துடிப்போடு கூடிய இந்த சக்திவாய்ந்த நகரினால் இந்துக்கள் ஈர்க்கப்பட்டுள்ளனர். இங்குதான் ஸ்ரீ ரமண மஹர்ஷியின் பக்தரும் இறைவனை அறிய விழைந்த மஹானுமான ஒருவரின் கதை துவங்குகிறது.

காசி க்ஷேத்திரத்தினருகில் உள்ளது நர்தரா என்னும் சிறிய கிராமம். கங்கா மாதாவை வலம் வர விரும்பும் (கங்கா பரிக்ரமம்) யாத்திரிகர்கள் கங்கைக் கரையிலுள்ள சிறு கிராமங்களில் அநேகமாக ஓய்வெடுத்துக் கொள்வார்கள். இம்மாதிரியான ஸாதுக்கள், ஸந்நியாசிகள், யாத்திரிகர்கள் இவர்களிடம் கிராம மக்கள் விசேஷ கவனம் செலுத்துவார்கள். யோகி ராம் சுரத் குமாரும் அவரது குடும்பத்தினரும் சிறப்பாக இந்த சேவையைச் செய்து வந்தனர். இந்தச் சூழ்நிலையும் புனித கங்கா நதி தீரத்தில் ஸாதுக்களோடும் தீர்த்த யாத்திரை செய்பவர்களோடும் கொண்டிருந்த இடையறாத் தொடர்பும் அந்தச் சிறுவனின் மனதில் ஆழமான ஆன்மீக தாக்கத்தை ஏற்படுத்தின. இரவு நேரங்களில் அச்சிறுவன் ‘துனி’ எனப்படும் அக்னியைச் சுற்றி அமர்ந்திருக்கும் ஸாதுக்கள், மஹான்கள் இவர்களோடு அமர்ந்து அவர்கள் கூறும் கதைகளையும் இராமாயணம், மஹாபாரதம் போன்ற புராணங்களையும் மிகுந்த கவனத்தோடு கேட்பான்.

‘கபாடியா பாபா’ என்ற ஒரு ஸாது இளம் ராம் சுரத் குமார் வாழ்க்கையில் ஒரு திருப்பு முனையாக இருந்ததோடு முக்கிய பங்கும் வகித்தார். நல்ல உயரமும் கம்பீரமான தோற்றமும் உள்ள கபாடியா பாபா ஸந்நியாசம் மேற்கொள்வதற்கு முன்பு ஆழ்ந்த நூலறிவும், புலமையும் நிறைந்த நீதிபதியாக இருந்தார். தனது ஒரே மருமகன் செய்த கொலை காரணமாகத் தொடரப்பட்ட வழக்கில் நீதிபதி என்னும் முறையில் அவர் தீர்ப்பளிக்க வேண்டி வந்தது. தனது மருமகன் குற்றவாளி என்பதை உறுதி செய்த பின்னர் சிறிதும் தயக்கமின்றி அவருக்கு மரண தண்டனை விதித்தார். உலக வாழ்க்கையின் பயனற்ற தன்மையை உணர்ந்து கொண்ட போது அவர் ஸந்நியாச வாழ்க்கையை மேற்கொண்டு கங்கையை பரிக்ரமம் (வலம்) செய்து வரத் துவங்கினார். இந்தப் பிரயாணத்தின் நடுவே ஓரிரு தினங்களை நர்தராவில் இளம் ராம் சுரத் குமாருடன் அவர் கழித்தார்.

ராம் சுரத் குமாரின் இளவயதில் நிகழ்ந்த ஒரு சம்பவம் குறிப்பிடத்தக்க வகையில் அவரின் வாழ்வையே மாற்றியமைத்தது. நீண்ட கயிறு ஒன்றை உபயோகித்து கிணற்றிலிருந்து தண்ணீரை இழுத்துத் தன் தாய்க்கு உதவுவது என்னும் வீட்டுவேலை அவர் மிக சந்தோஷமாகச் செய்த ஒன்று. ஒரு நாள் கிணற்றிலிருந்து தண்ணீர் இறைத்துக் கொண்டிருந்த பொழுது கிணற்றின் மறு பக்கத்திலிருந்து அழகிய சிறு குருவி ஒன்று தன்னையே உற்று நோக்குவதைக் கண்ட அவர் கயிற்றின் ஒரு முனையை அதன் மீது விளையாட்டாக விட்டெறிந்த போது அது குருவியின் மீது படவே பறவை கீழே விழுந்தது. ஆழ்ந்த அதிர்ச்சிக்குள்ளான ராம் சுரத் குமார் ஓடிச் சென்று தன்

கையில் அதை எடுத்துக் கொண்டு அழுதவாறே குருவியிடம், ‘தயவு செய்து இறந்து விடாதே! தயவு செய்து இறந்து விடாதே!’ எனக் கூறினார். பின்னர் கங்கைக்கு அதை எடுத்துச் சென்று பறவைக்குப் புத்துணர்ச்சி ஊட்டுவதற்காகப் புனித நீரை அதன் மீது தெளித்தார். அதுவும் பலனளிக்காமல் போகவே குருவி இறந்து போனது. மன அதிர்ச்சிக்கு அவரை உள்ளாக்கிய இச்சம்பவம் பிறப்பு இறப்பு இவற்றைக் குறித்து அவரை ஆழ்ந்து சிந்திக்கத் தூண்டியது. பறவையின் அழகு எங்கே போயிற்று? பறக்கும் அதன் தன்மை என்னவாயிற்று? சிறகுகள் இருந்தும் பறக்கும் தன்மையை அது இழந்து விட்டதே? ஒரு நிமிடத்திற்கு முன் வரை உயிரற்ற இந்த உடலின் உள்ளிருந்து அதை சுறுசுறுப்பாகப் பறக்க வைத்த அந்த சக்தி யாது? என்ற இத்தகைய கேள்விகள் எழவும் அவர் கங்கைக் கரையில் அழுதபடி சிந்தனையில் மூழ்கினார். தனது வாழ்க்கையில் அவர் பெற்ற முதல் அதிர்ச்சியான இப்பறவையின் சாவு, படைப்பு, பிறப்பு, இறப்பு என்பவை குறித்த அவரது சிந்தனையை வலுப்படுத்தியது.

குற்ற உணர்வும் ஆழ்ந்த சோகமும் மனதை அழுத்த சமாதானத்தை நாடி கபாடியா பாபாவைத் தேடிச் சென்றார் ராம் சுரத் குமார். பாபாவைப் பார்த்த போது ‘நான் செய்த தவறை என்னால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை’ என்று அவர் கதறவும் 16 வயது இளைஞனான ராம் சுரத் குமாரைக் காசிக்குச் செல்லுமாறு அவர் பணித்தார். அங்கு பகவான் விஸ்வநாதர் முன் நின்ற பொழுது மிகுந்த பிரகாசத்துடன் கூடிய மின்னல் போன்ற ஒளிக் கீற்றை அவர் அனுபவித்தார். தனது மனச்சுமை, உடல், இவ்வுலகம், காலம், இடம் இவையனைத்தையும் மறக்கும்படிச் செய்த அவரது முதல் தெய்வீக பரவச நிலை இதுவே. இறைவனின் சக்தி அவரை முற்றிலுமாக விழுங்கியது. கங்கைக் கரையிலிருந்த மயான கட்டங்களில் அலைந்து கொண்டிருந்த அவருக்கு தனது இறந்த உடலே எடுத்து வரப்பட்டு, எரிக்கப்பட்டு, புனித கங்கையில் அந்த சாம்பல் கரைக்கப்படுவதாக ஒரு அனுபவம் ஏற்பட்டது. தான் உடலன்று என்ற உண்மையை அவர் அனுபவத்தில் உணர்ந்தார். இந்நிலையில் கபாடியா பாபாவிடம் சென்ற அந்த இளைஞனது கவனத்தை அவர் திருப்பி துளசி ராமாயணம், பகவத் கீதை இவற்றை நன்கு கற்குமாறு அறிவுறுத்தினார். தனது வாழ்நாள் முழுவதுமே இந்நூல்களிலிருந்து யோகி ராம் சுரத் குமார் மேற்கோள்களைச் சரளமாக எடுத்துக் கூறுவது வழக்கம். உலக வாழ்க்கையில் எவ்வித சிரத்தையும் இன்றியிருந்த அவரது போக்கைக் கவனித்த பெற்றோர்களும் உறவினர்களும் அவருடைய வாழ்க்கையைச் சீரமைக்கும் வகையில் இளம் ராம் சுரத் குமாருக்குத் திருமணம் செய்வித்தனர். குடும்ப வாழ்க்கையை மேற்கொண்ட அவர் பணம் சம்பாதித்துத் தனது குடும்பத்தைக் காப்பதற்காக பள்ளித் தலைமையாசிரியராகப் பணியில் அமர்ந்த பொழுதும் இறைவனை அறிவதில் இருந்த உள் நாட்டமும் வாழ்க்கையின் உண்மை யாது என அறியும் ஆர்வமும் அவருக்குச் சிறிதும் குறையவில்லை.

ராம் சுரத் குமாரின் வாழ்க்கையில் முக்கியமான இந்தக் கட்டத்தில், திரும்பி வந்த கபாடியா பாபா ஒரு குருவை தேடிக் கொள்ளுமாறு பணித்தார். கபாடியா பாபாவே தனது குரு என்று இதுவரை எண்ணிக் கொண்டிருந்த ராம் சுரத் குமாருக்கு பாபாவின் கூற்று வியப்பை அளித்தது. ஆனால் கபாடியா பாபா தெற்கு நோக்கிப் பயணிக்கும்படி கூறியதோடு ஸ்ரீ அரவிந்தர், ஸ்ரீ ரமண மஹர்ஷி இவர்களின் பெயர்களைப் பிரத்தியேகமாகக் கூறி அனுப்பினார். பாபாவின் அறிவுரைப்படி பாண்டிச்சேரிக்கு முதலில் சென்ற ராம் சுரத் குமார் அங்கு ஸ்ரீ அரவிந்தரைச் சந்திக்க முடியாமல் போகவே அருணாசலத்திற்கு வந்து சேர்ந்தார். வந்தவுடனே அவரை வரவேற்ற புனித மலையின் தரிசனம் அவரை சந்தோஷத்தில் ஆழ்த்தியது. இனம் புரியாத மகிழ்ச்சி ததும்பிய நிலையில் அவர் ரமணாச்ரமத்திற்குச் சென்றார். அங்கு அமைதியும் ஆனந்தமுமே உருவாக பகவான் மேடை மீது



**யோகி ராம்சுரத்குமார் ஆச்ரம வாசலில் உள்ள 'இலுப்பை மரத்தின்' கீழ் அமர்ந்திருக்கும் காட்சி**

அமர்ந்திருந்தார். பகவான் முன் சென்று அமர்ந்த ராம் சுரத் குமாரை அவரது பார்வை ஆழ்ந்த தியானத்தில் மூழ்கடித்தது. நீண்ட நேரத்திற்குப் பின் கண் விழித்த அவர், பகவான் கருணையோடும் அன்போடும் புன்னகை பூத்தவாறு அவரது அருட் பார்வையைத் தன்மீது செலுத்துவதை உணர்ந்தார்.

ரமண மஹர்ஷியின் ஆத்ம விசாரப் பாதையில் அவர் தீவிரமாக இறங்கினார். இது அவரைத் தொடர்ந்து ஸமாதியில் ஆழ்த்தியது. தனது கிராமத்திற்குத் திரும்ப வேண்டிய நிலையில் பகவானை வணங்கி மௌனமாகப் பிரார்த்தித்தவாறு, “பகவானே! உங்களது புனித பாதங்களை நான் அடையுமாறு தயவு செய்து அருள் புரிய வேண்டும். என்னை உங்களுடையவனாக ஆக்கிக் கொண்டு எப்பொழுதும் உங்கள் காலடியில் நானிருக்குமாறு செய்யவும்” என்று வேண்டிக் கொண்டார். தனது பிரார்த்தனையை வார்த்தைகளால் தெரிவிக்காத போதும் அந்த மௌனமான வேண்டுகோளைக் கேட்ட பகவான் தலையசைத்து ‘சரி’ என்று கூறினார். தான் கற்ற முதல் தமிழ் வார்த்தை அதுவே என யோகி என்னிடம் கூறியிருக்கிறார். அப்போது முதல் அந்தச் சொல்லை அவரது வாழ்க்கையில் அடிக்கடி அவர் உபயோகித்தார். சாதாரணமாக ‘சரி’ என்றால் ஆம் என்று பொருள்படும். ராம் சுரத் குமார் குருவிடம் சரணடைந்த இந்த சந்தர்ப்பத்தில் “ஆம். நான் உன்னை ஏற்றுக் கொண்டு விட்டேன்” என்ற பொருளை அது தந்தது.

1949ஆம் ஆண்டு கோடையில் மீண்டும் பகவானைக் காண அவர் வந்தார். அப்போது பகவான் புற்றுநோயால் பாதிக்கப்பட்டிருந்ததால் ஒரு நாளைக்குச் சில மணி நேரங்களே அவரைக்

காண முடிந்தது. இது அவரை மிகவும் வருத்தத்தில் ஆழ்த்தியது. ஒரு நாள் பக்தர் ஒருவர், "பகவானே! நீங்கள் நோயினால் துன்புறுவதைக் காண மிகவும் வேதனையாக உள்ளது" என்று பகவானிடம் கூறும் போது ராம் சுரத் குமாரும் அங்கிருந்தார். பகவான் சிரித்தவாறே பக்தரிடம், "நான் உடம்பு இல்லை என்று அழுத்தமாகக் கூறும் என் உபதேசத்தை இந்த பக்தர் பல ஆண்டுகளாகக் கேட்டுக் கொண்டிருக்கிறார். அவ்வாறிருந்தும் நான் வலியினால் அவதிப்படுவதாகக் கூறுகிறார். உபதேசத்தைப் புரிந்து கொள்ளும் விதம் இதுதானா? நான் என்ன உடம்பா?" என்று பதிலிறுத்தார். இந்தப் பதில் ராம் சுரத் குமாரின் இதயத்தில் ஆழமாகப் பதிந்து வாரணாசியில் அவருக்கு ஏற்பட்ட தெய்வீக அனுபவத்தை மேலும் உறுதி செய்தது.

தனது அனுபவத்தை நிரந்தரமாக நிலைநிறுத்தும் பொருட்டு தனது கிராமத்திற்குச் சென்ற ராம் சுரத் குமார் பின் விரைவிலேயே இமாலயம் சென்றார். ஒரு விளக்கிலிருந்து விலகிச் செல்லச் செல்ல ஒளி எவ்வாறு குறைகின்றதோ அதே போன்று பகவானுடைய ஸாந்நித்தியத்தில் அவர் அனுபவித்த தெளிவு, நாட்கள் செல்லச் செல்லக் குறைந்து கொண்டே வந்தது. அதனால் மீண்டும் அவர் தென்னிந்தியாவிற்கு வரத் தீர்மானித்தார். அப்போதுதான் தனது குருமார்களான ஸ்ரீ அரவிந்தரும், பகவானும் தங்களது உடலை நீத்துவிட்டதை அவர் அறிந்தார்.

ஆச்ரமத்திற்கு வந்த பொழுது அங்கு பகவானின் திருவுருவத்தைக் காண முடியாதது அவருக்குப் பெருங்குறையாக இருந்தது. இதை உணர்ந்து கொண்ட T. K. சுந்தரேச ஐயர் கேரளாவில் காஞ்சங்காடில் இருந்த மஹான் ஸ்வாமி ராம்தாஸிடம் செல்லுமாறு அவருக்கு ஆலோசனை கூறினார். ஆயினும் அவர் முதன்முதலில் அங்கு சென்ற போது ஏமாற்றமடைந்து தனது கிராமத்திற்குத் திரும்பி விட்டார். பின்னர் ஸ்வாமி ராம்தாஸின் 'In Quest of God' என்னும் புத்தகத்தைப் படித்தபோது அவர் மனம் நெகிழ்ந்து போனார். மெல்ல மெல்ல மேன்மேலும் ஸ்வாமி ராம்தாஸால் ஈர்க்கப்பட்ட போது அவர் ஆனந்தாச்ரமத்திற்குத் திரும்பி வந்தார். மூன்றாவது முறையாக அவர் ஸ்வாமி ராம்தாஸிடம் சென்ற சமயம் மலர்ந்த முகத்தோடு அவர் யோகியை வரவேற்ற பொழுது இருவரும் மனம் விட்டுச் சிரித்து மகிழ்ந்தனர். ராம் சுரத் குமார் ஸ்வாமி ராம்தாஸைப் பின் தொடர்ந்தே சென்று கொண்டிருந்ததால் ஒரு நாள் ஸ்வாமி அவரைத் திரும்பிப் பார்த்து, "என்னிடமிருந்து உங்களுக்கு என்ன வேண்டும்?" என்று கேட்க தனக்கு தீக்ஷையளிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். 24 மணி நேரமும் இடைவிடாமல் மந்திரத்தை ஜபிக்க வேண்டும் என்ற நிபந்தனையோடு தீக்ஷையளிக்க ஸ்வாமி ராம்தாஸ் ஒப்புதல் அளித்தார். யோகியை அமரச் செய்து 'ஓம் ஸ்ரீ ராம் ஜய ராம் ஜய ஜய ராம்' என்ற புனித மந்திரத்தை மூன்று முறை உச்சரித்த போது ராம் சுரத் குமார் பரவச நிலையை எய்தியதோடு அவருள் தெய்வீக சக்தி பாய்ந்தது. தொடர்ந்து 3 தினங்களுக்கு இடைவெளியின்றி ஜபம் நடந்து கொண்டே இருந்தது. அவர் மந்திரத்தோடு ஒன்றிப் போனதால் உடலையும் மனதையும் கடந்த நிலையான இறுதியான பேரமைதியில் நிலை நிறுத்தப்பட்டார். இந்த நிகழ்ச்சியை நினைவு கூர்ந்த பொழுது "1952-ம் ஆண்டு ஸ்வாமி ராம்தாஸின் புனிதப் பாதங்களில் இந்தப் பிச்சைக்காரன் இறந்து விட்டான். அன்றிலிருந்து இவனுக்குக் கடவுள் மட்டுமே இருக்கிறார்" என்று யோகி கூறினார்.

இதன் பிறகு ராம் சுரத் குமார் சிறிது காலம் ஆனந்தாச்ரமத்திலேயே தங்கியிருந்தார். ஆனால் அவர் அனுபவித்த பேரானந்த நிலை மற்ற ஆச்ரமவாசிகளின் கவனத்தைத் திசை திருப்புவதாக இருந்தது. அவர்கள் ஸ்வாமி ராம்தாஸிடம் புகார் செய்ததால் அவர் யோகியை ஆச்ரமத்தை விட்டு வெளியில் வேறு எங்காவது செல்லுமாறு கேட்டுக் கொண்டார். "நான் எங்கு செல்வேன்? இந்த உலகத்தில் எனக்கு வாழத் தெரியாது. நான் பிச்சை எடுக்கவா?" என்று யோகி கேட்ட போது

பட்டென்று “ஆம்! பிச்சைக்காரனாக இருங்கள்” என்று கருணையோடு ஸ்வாமி ராம்தாஸ் பதில் அளித்துத் தொடர்ந்து “பெரிய ஆலமரத்தினடியில் புதர்களும் முட்களும் மட்டுமே வளர முடியும். மற்றொரு பெரிய மரத்திற்கு அங்கு இடம் இருக்காது. அதனால் இங்கிருந்து சென்று விடுங்கள்” என்று கூறிய பின் “ஆனால் எங்கு செல்வீர்கள்?” என்று ஸ்வாமி ராம்தாஸ் வினவிய போது ராம் சுரத் குமார் “அருணாசலத்திற்கு” என பளிச்சென்று பதிலளித்தார். ஸ்வாமி ராம்தாஸ் மிக்க மகிழ்ச்சியடைந்து அவர் போர்த்திக் கொள்வதற்கு ஒரு கம்பளி சால்வையையும் கொடுத்தார். அன்றிலிருந்து திருவண்ணாமலையில் கடும் கோடைக் காலத்திலும் கூட இந்தக் கம்பளி சால்வை ராம் சுரத் குமாரின் உடையில் அவரது தனி அடையாளமாகத் திகழ்ந்தது.

திருவண்ணாமலைக்கு நிரந்தரமாக வருவதற்கு முன்னர் 1952-ம் ஆண்டு முதல் 1959-ம் ஆண்டு வரை ராம் சுரத் குமார் பரவச நிலையில் இந்தியா முழுவதும் பயணம் செய்தார். இடைவிடாத ஸமாதி நிலையினின்று சிறிதும் இறங்காமல் ஆத்மானுபூதி பெற்ற மஹான்களின் ஸமாதிக் கோயில்களை தரிசித்தவாறே அந்த ஏழு ஆண்டுகளையும் அவர் கழித்தார். அருணாசலத்தின் புனித பூமியில் கால் வைத்த மாத்திரத்தில் அவர் தனது பழைய உணர்வு நிலைக்குத் திரும்பினார். இந்த இயல்பான நிலையில்தான் 1959-ம் ஆண்டு ரமணாச்ரமத்திற்கு வந்த அவரை நான் முதன் முதலாகச் சந்தித்தேன். நான் எனது ஆசிரியர் T. K. சுந்தரேச ஐயருடன் இருந்த சமயத்தில் பரட்டைத் தலையும் அழுக்கு உடையுமாக பைத்தியக்காரனைப் போன்று இருந்த யோகியை என் முன் கண்டேன். இந்த எண்ணம் என் மனதில் எழுந்த உடனே T. K. சுந்தரேச ஐயர் என் பக்கம் திரும்பி, “கணேசா! அவர் ஒரு பைத்தியக்காரன் அன்று. யோகியும் சித்த புருஷனுமாவார். பசியோடு இருக்கும் அவருக்கு உள்ளே சென்று சிறிது உணவு கொண்டு வந்து கொடு!” என்று கூறினார். ஆச்ரமத்தில் அந்த நாட்களில் உணவுத் தட்டுப்பாடு இருந்த போதிலும் ராம் சுரத் குமாருக்கு இயன்ற போதெல்லாம் உணவளிப்பது என்பதில் உறுதியாக இருந்தேன். பின்னர் யோகி என்னிடம் தனக்கு யோகி ராம் சுரத் குமார் என்ற பெயரைச் சூட்டியதே T. K. சுந்தரேச ஐயர்தான் என்றும் அதுவே தனக்கு நிலைத்து விட்டது என்றும் கூறினார். ஆச்ரமத்திற்கு அருகில் ரமண நகரில் ஒரு சிறிய குடிசையில் வாழ்ந்து வந்த அவர் தனது குருவான ரமண மஹர்ஷியைப் போன்றே மலையின் மீது சஞ்சரித்துக் கொண்டேயிருப்பார். அவ்வாறு மலையைச் சுற்றும் பொழுது மயானத்தில் ஒரு கல்லறையிலிருந்து மற்றொன்றுக்கு “ஓம் ஸ்ரீ ராம் ஜய ராம் ஜய ஜய ராம்” என்ற மந்திரத்தை ஓதியபடி தாண்டிச் செல்லும் யோகியை நான் அடிக்கடி பார்த்திருக்கிறேன். அந்த நாட்களில் யோகி ராம் சுரத் குமாரைத் தொடர்பு கொள்ள எனக்குப் பல வாய்ப்புக்கள் கிடைத்தன. நானும் யோகியும் ஒரு ஆன்மீகக் கயிற்றால் பிணைக்கப்பட்டிருந்தோம் என்பதை நான் அப்போது அறியவில்லை. பின்னர் 1962-ல் அவர் கோயிலிலோ அல்லது இரயில் நிலையத்தின் அருகில் இருந்த புன்னை மரத்தடியிலோ தங்கத் துவங்கினார்.

ஆச்ரமப் பணிகளிலும் ‘The Mountain Path’ பத்திரிகை சம்பந்தமான வேலைகளிலும் மும்முரமாக ஈடுபட்டிருந்த என்னால் யோகியை அதற்குப் பின் சந்திக்க இயலாமல் போய்விட்டது. இருந்தபோதும் சென்னைக்குச் செல்லும்போதெல்லாம் திருவண்ணாமலை பேருந்து நிலையத்தில் சில சமயங்களில் அவரைக் காண்பதுண்டு. திடீரென்று என் முன் தோன்றி ஒரு பூவை என்னிடம் கொடுத்து விட்டு, “கணேசா! தயவு செய்து எனக்கு ஒரு ரூபாய் கொடு!” என்று கேட்பார். ஏழு வருட இடைவெளிக்குப் பின் 1980-ம் ஆண்டுதான் நான் அவரோடு மீண்டும் தொடர்பு கொள்ள முடிந்தது. பகவானுடைய நூறாவது ஜயந்தி விழாவைப் பல கொண்டாட்டங்களோடும் பூஜைகளோடும் பெரிய அளவில் மிகச் சிறப்பாக நடத்துவதற்கான ஏற்பாடுகள் ஆச்ரமத்தில் நடந்து கொண்டிருந்தன. ஒரு



**யோகி ராம்சுரத்குமாரின் 'ஆன்மீக புகலிடம்' அருணாசலம் : மலை மற்றும் கோவில்**

குழுவினர் பகவானுடைய பாடல்களைப் பாடியவாறு பூலோகப் பயணம் கூட மேற்கொண்டனர். ஒரு நாள் யோகி ராம் சுரத் குமார் என்னைச் சந்தித்து "கணேசா! ரமணாச்ரமத்தில் நிகழ்பவற்றை திருவண்ணாமலைவாசிகள் அவ்வளவாக வரவேற்கவில்லை. அது பிராம்மண ஸ்தாபனம் என்றும் ஸம்ஸ்க்ருத ஸ்லோகங்கள் மட்டுமே அங்கு ஓதப்படுகின்றன என்றும் குறை கூறுகிறார்கள். பகவான் வாழ்ந்த காலத்தில் அவருடைய நூல் திரட்டிலிருந்து தமிழ்ப் பாடல்களும் பாராயணம் செய்யப்பட்டன. அதை மீண்டும் துவங்க வேண்டும்" என்று என்னிடம் அவர் கூறியபோது நானும் அதற்கு முயற்சி செய்தேன். ஆனால் இரண்டு மூன்று பழைய பக்தர்களைத் தவிர யாருக்குமே நூல் திரட்டிலிருந்த பாடல்கள் முழுவதும் தெரியவில்லை. இதனால் நான் யோகியைச் சந்திப்பதைத் தவிர்த்தேன். ஏனெனில் இந்த விஷயத்தில் அவர் சற்றுப் பிடிவாதமாக என்னைத் தொடர்ந்து வற்புறுத்தி வந்தார்.

தமிழ்ப் பாராயணத்தை எவ்வாறு துவக்குவது என்ற பிரச்சனையை யோகி அவருக்கே உரிய பாணியில் தீர்த்து வைத்தார். 1983-ல் என் சிநேகிதி அனுராதா அருணாசலத்தில் நிரந்தரமாக வாழ முற்பட்டாள். எனது தம்பி மணியும் தனது வேலையை ராஜினாமா செய்து விட்டு ஆச்ரமப் பணிகளில் உதவி செய்யும் பொருட்டு அருணாசலத்திற்கே நிரந்தரமாக வந்து விட்டார். ஆச்ரமப் பணிகள் நன்கு வளர்ந்து விட்ட நிலையில் அவர்கள் இருவரும் எனக்கு நிர்வாகத்தில் உதவி செய்தனர். 1983-ல் கனகம்மாள் என்ற பகவானின் பக்தை, அனுராதா இவர்களுடன் நானும் கார்த்திகைத் திருவிழா சமயத்தில் கோயிலின் அருகே நின்றவாறு பெரிய தேர் பவனி வருவதைப் பார்த்துக் கொண்டிருந்தோம். திடீரென எங்கிருந்தோ வந்த யோகி ராம் சுரத் குமார் என் கையைப் பற்றிக்

கொண்டு, ‘‘கணேசா! தமிழ் பாராயணம் ஆரம்பிக்கும் விஷயமாக உன்னைச் சந்திக்க வேண்டும் என்று நான் சொல்லியனுப்பிக் கொண்டே இருக்கிறேன். நீயோ என்னைச் சந்திப்பதைத் தவிர்த்த வண்ணமிருக்கிறாய்’’ என்றுரைத்தார். தேங்காய் திருவோடு, கம்புகள், பெரிய விசிறி இவற்றை ஏந்தியபடி பல சால்வைகளை போர்த்திய கோலத்தில் யோகி காட்சியளித்தார். அனுராதா முதன் முதலாக யோகியைப் பார்க்கிறார் என்பதால் ஒரு பைத்தியக்காரனைப் போன்று காட்சியளித்த ஒருவர் என்னைத் திடீரென அழைக்கவும் அவர் பயந்து விட்டார். பகவானின் நூல் திரட்டிலுள்ள பாடல்களைத் தானும் கற்றுக் கொண்டு பாராயணம் செய்யும் படியாகப் பிறருக்கும் கற்றுக் கொடுக்கக்கூடிய ஒருவரைக் கண்டுபிடிப்பதில் இருந்த கஷ்டத்தை அவரிடம் எடுத்துக் கூறி நான் அவரைத் தவிர்த்தது உண்மையென ஒப்புக் கொண்டேன். அவர் உடனே அனுராதாவின் பக்கம் திரும்பி ‘‘இவர் அந்த வேலையைச் செய்து விடுவார்’’ என்று கூறிவிட்டு எப்படித் தோன்றினாரோ அதே போன்று சட்டென கூட்டத்தில் மறைந்து விட்டார். யோகி ராம் சுரத் குமாரின் பரட்டைத் தலையுடன் கூடிய தோற்றத்தாலும் மிகவும் பழக்கமானவர் போன்று அவர் என்னிடம் பேசிய விதத்தையும் கண்டு ஸ்தம்பித்துப் போயிருந்த அனுராதா என்னை நோக்கி, ‘‘உங்களை அழைத்து உத்தரவிடும் இந்தப் பைத்தியக்கார மனிதர் யார்? எதை அவர் தமிழ் பாராயணம் என்கிறார்?’’ என வினவினார்.

யோகியிடமிருந்து ஏதோ ஒரு சக்தி அனுராதாவிற்குக் கிடைத்திருக்க வேண்டும். ஏனெனில் அவர் நூல் திரட்டிலுள்ள பாடல்களைக் கனகம்மாள், குஞ்சு ஸ்வாமி இவர்களிடமிருந்து கற்றுக் கொண்டு அவற்றைப் பகவானது ஸமாதிக் கோயிலில் பாட ஆரம்பித்தார். பகவானுடைய நூல் திரட்டுப் பாடல்களைச் சமீப காலத்தில் கேட்டிராத பல பெண்மணிகள் அவற்றால் ஈர்க்கப்பட்டனர். அனுராதாவிற்குப் பாடல்களைக் கற்பித்த குஞ்சு ஸ்வாமி ‘‘நீ அவற்றை மனப்பாடம் செய்யாவிட்டால் நான் உனக்குக் கற்பிக்க மாட்டேன்’’ என்று கூறவே அவர் பாடல்களை ஒன்று கூட விடாமல் மனப்பாடம் செய்ததுடன் ஆர்வமுள்ள பெண்களுக்கு அவற்றைச் சொல்லியும் தந்தார். என் தம்பியின் மனைவி ரமணி அவற்றைக் கற்பதில் பிரத்தியேகமான ஆர்வம் காட்டினார். தமிழ் பாராயணம் எவ்வளவு தூரம் முன்னேறியுள்ளதென்ற விபரத்தை யோகி அவ்வப்போது கேட்டறிந்து கொண்டார். சில ஆண்டுகளுக்குப் பின் அனுராதா ஆறு நாட்களுக்குத் தேவையான பாடல்களைப் பாராயணத்திற்குத் தயார் செய்து வைத்திருந்த சமயம் யோகி ராம் சுரத் குமார் ‘‘எத்தனை நாட்களுக்குப் பாராயணம் தயாராக உள்ளது?’’ என்று கேட்க அனுராதா ‘‘ஆறு’’ எனப் பதிலளித்தாள். ‘‘அப்படியானால் ஞாயிற்றுக்கிழமை என்னவாயிற்று?’’ என்று அவர் கேட்கவும் துணிச்சலும் சமயோசித புத்தியுமுள்ள அனுராதா ‘‘ஞாயிறன்று விடுமுறை’’ எனப் பளிச்சென பதிலுரைத்தார். யோகி குலுங்கக் குலுங்கச் சிரித்து ‘‘ஓஹோ அப்போது ஞாயிற்றுக்கிழமை ஓய்வு நாளா?’’ என்றார்.



**குஞ்சு ஸ்வாமி தமிழ் பாராயணம்–'நூல் திரட்டு'–அனுராதாவுக்குக் கற்றுக்கொடுக்கிறார்**

அந்த சந்திப்பிற்குப் பின்னர் நான் யோகியை 1986-ல் தான் மீண்டும் தொடர்பு கொள்ளும் வாய்ப்புக் கிட்டியது. ரமண மஹர்ஷியின் பக்தர்களுடைய நினைவுகளைப் பற்றிய கட்டுரைகளை ‘The Mountain Path’ பத்திரிகைக்காக நான் அப்போது சேகரித்துக் கொண்டிருந்தேன். இந்த விஷயமாக அனுராதா, ஆச்ரம நூல் நிலைய அதிகாரி J. ஜெயராமன், இவர்களுடன் நான் யோகியைச் சந்திக்கச் சென்றேன். அவர் கூறுவதைக் குறிப்புக்கள் எடுப்பதற்குப் பதிலாக ஒலி நாடாவில் யோகிக்குத் தெரியாமல் பதிவு செய்யத் தீர்மானித்திருந்ததால் அவரது இல்லத்திற்கு வெளியிலேயே ‘டேப் ரிகார்டர்’ சரியாக வேலை செய்கிறதா என ஜெயராமன் சோதித்துப் பார்த்துக் கொண்டார். ஆயினும் அறைக்குள் சென்று பதிவு செய்ய முற்பட்ட போது அது வேலை செய்யவில்லை. அன்று யோகியின் அனுமதியைப் பெறாமல் யாரோ ஒருவர் அவரைப் புகைப்படம் எடுக்க முயற்சி செய்தது குறித்து அவர் மிகுந்த கோபத்துடன் கூற ஆரம்பித்து, “கணேசா! இப்போதெல்லாம் மக்களுக்கு மரியாதை என்பதே என்னவென்று தெரியவில்லை. இந்தப் பிச்சைக்காரனிடம் அனுமதிகூடக் கேட்காமல் அவனைப் படம் பிடிக்கவும், பேசுவதை நாடாவில் பதிவு செய்யவும் முற்படுகிறார்கள்” என்று யோகி கூறியதும் நானும் ஜெயராமனும் அர்த்தத்துடன் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டோம். செய்த தவறை உடனே உணர்ந்து கொண்டு யோசனையின்றி செய்த காரியத்திற்காக நான் மானஸீகமாக யோகியிடம் மன்னிப்புக் கோரவும் அவரது கோபம் மாறியது. தொடர்ந்து மிக்க மகிழ்ச்சியுடன் பகவான் மூலம் தான் பெற்ற அனுபவங்களை எங்களுடன் பகிர்ந்து கொள்ளத் துவங்கினார்.

“ஒருமுறை நான் பகவான் முன்னிலையில் அமர்ந்திருந்தபோது வசீகரிக்கத்தக்க ஒரு கதையை மனதில் பதியும் வண்ணம் அவர் கூறினார். அது அர்த்தபுஷ்டி உள்ளதாகவும் இருந்தது. ‘கடற்கரையில் இரண்டு பக்ஷிகள் வாழ்ந்து வந்தன. முட்டைகளைக் கூட்டில் வைத்துவிட்டு இரை தேடும் பொருட்டு அவை வெகு தூரம் பறந்து சென்றுவிடும். ஒரு நாள் அவை போய்த்திரும்பி வந்தபோது கூட்டோடு முட்டைகளையும்கூட கடல் அலைகள் அடித்துச் சென்றிருந்தன. கடலின் மீது மிகுந்த சீற்றம் கொண்ட அப்பறவைகள் தங்கள் முட்டைகளை மீட்டெடுக்க அவசியமானால் கடல் நீர் முழுவதையும் இறைத்து விட விரதம் பூண்டன. உடனே தங்கள் அலகினால் தண்ணீரை மொண்டு மொண்டு வெகு தூரத்தில் கொட்டி கடலை இறைக்கும் பணியில் மும்முரமாக ஈடுபட்டன. ஓய்வின்றி கண்ணும் கருத்துமாக விழிப்புடன் இப்பணியில் முடிவில்லாமல் உழைத்தன. நாட்கள் உருண்டோடின. ஆனால் பறவைகள் தண்ணீரை அலகில் எடுத்துப் பறந்து சென்று தூரத்தில் கொட்டும் பணி தொடர்ந்தது. ஒரு நாள் அவ்வழியே வந்த சக்தி வாய்ந்த ஒரு மஹான் பக்ஷிகளின் அயரா உழைப்பைக் கண்டு அவை என்ன செய்கின்றன? என வினவியபோது தங்கள் முட்டைகளைக் கடல் அலை அடித்துச் சென்றதைப் பற்றி உரைத்து எவ்வாறேனும் அவற்றை மீட்டெடுக்கப் போவதாகவும் அவை கூறின. “என்ன! அது சாத்தியமான காரியம் அல்லவே! சிறு பறவைகளான நீங்கள் எவ்வளவுதான் உழைத்தாலும் உங்களால் கடலை வற்ற வைப்பது முடியாது” என அவர் கூறினார். ஆனால் பறவைகள் மிகுந்த உறுதியுடன் “ஏன்? அதில் என்ன சந்தேகமுள்ளது? நாங்கள் கடலை முழுவதும் வற்ற வைத்து எங்கள் முட்டைகளை மீட்டெடுப்போம்” என்று கூறின. அவற்றின் தீவிர நம்பிக்கையையும் சிரத்தையையும் கண்டு வியந்த அந்த மஹான் கருணையோடு கடலினுள் கையை விட்டு முட்டைகளை எடுத்து மிக்க மகிழ்ச்சியடைந்த பக்ஷிகளிடம் சேர்த்தார். இறைவனை அறிவது என்பதைக் கடல் நீரை வற்ற வைப்பதற்கு ஒப்பிடலாம். அருளின்றி அதைச் சாதிப்பது என்பது இயலாத காரியம். ஆனால் அசைக்க முடியாத நம்பிக்கையும் கதையில் கூறப்பட்ட பக்ஷிகளுடையதைப் போன்ற விடா முயற்சியும் சிரத்தையும் இருந்தால் ஸத்குரு தானாக முன்வந்து ஆன்மீக ஸாதகனுடைய விருப்பத்தை நிச்சயமாக நிறைவேற்றி வைப்பார்” என யோகி கூறினார்.



**யோகி ராம்சுரத்குமாருடன் நீதிபதி அருணாசலம், கணேசன், அனுராதா**

யோகி கூறிய மற்றுமொரு சம்பவம்: "இன்னொரு முறை பகவானுடைய கருணையைக் கண்டு நான் மெய் சிலிர்த்துப் போனேன். ஏகநாத ராவ் என்ற பக்தர் ஒரு முறை பெரிய கிண்ணத்தில் பழத்துண்டுகளை நிரப்பி ஹாலுக்கு எடுத்து வந்து பகவான் முன்னால் வைத்தார். அந்தப் பெரிய கிண்ணத்தினுள் பகவானுக்கென பிரத்தியேகமாகச் சிறிய கிண்ணத்தில் பழத்துண்டுகள் வைக்கப்பட்டிருந்தன. பகவான் சமத்துவத்தை முழுமையாகக் கடைப்பிடிப்பவர். பக்தர்களிடம் பொறுமையோடு நடந்து கொள்வார் என்றாலும் தனக்கென பிரத்தியேகமாகச் செய்யப்படுவது எதையும் அவர் அனுமதிக்கமாட்டார். தனக்கெனத் தனியாக ஒரு கிண்ணம் வைக்கப்பட்டிருந்ததைக் கண்டவுடன் கோபம் கொண்ட பகவான் சற்று வேகமாகப் பெரிய கிண்ணத்தைத் தள்ளி விடவும், அதிலிருந்து சில பழத்துண்டுகள் சிதறிக் கீழே விழுந்து தரையிலேயே கிடந்தன. அந்த பக்தர் ஹாலில் இருந்தவர்களுக்குப் பழத்துண்டுகளை விநியோகித்தார். அனைவர் கையிலும் பழத்துண்டுகள் இருந்தது என்றாலும் பகவான் எதுவும் எடுத்துக் கொள்ளாதபோது அவற்றை உண்ண விரும்பாமல் பேசாமல் இருந்தனர். நிலைமையைப் புரிந்து கொண்ட பகவான் பக்தர்களிடம் கருணை கொண்டு உடனே கீழே கிடந்த பழத்துண்டுகளைப் பொறுக்கி உட்கொண்டார். மற்ற பக்தர்களும் அவரைத் தொடர்ந்து உட்கொண்டனர்".

யோகி ராம் சுரத் குமார் தொடர்ந்து தனது அனுபவங்களை எடுத்துரைத்தார். ஒரு முறை "ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெறாத ஒரு சீடர் தனது குருவின் மரணத்திற்குப் பின் வேறு ஒருவரைக் குருவாக ஏற்கலாமா?" என ஒருவர் பகவானிடம் வினவியபோது 'தேவையில்லை. ஏனெனில் குரு உடலை நீத்த பிறகும் அவரது அருளும் ஆசிகளும் தொடர்ந்து இருக்கும்' என பகவான் பதிலளித்தார். "அவ்வாறென்றால் பகவானின் மஹா ஸமாதிக்குப் பின்னர் நீங்கள் ஏன் ஸ்வாமி ராம்தாஸிடம் சென்றீர்கள்?" எனப் பளிச்சென யோகியிடம் கேள்வி எழுப்பினார் அனுராதா. அவரை அன்பான புன்னகையுடன் நோக்கிய யோகி, "பகவான் முன்னிலையில் எனக்கு இருந்த இறை நாட்டத்தில் அவரைப் பிரிந்த நிலையில் சற்றுத் தொய்வு ஏற்பட்டதால் நான் இமயத்தை நாடிச் சென்றேன். இருந்தபோதும் என்னை ஒரு கருவியாக்கி ஏதோ ஒரு உன்னத சக்தி தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறது என்பது எனக்குப் புரிந்தது. இந்தப் பிச்சைக்காரனின் தற்போதைய நிலைக்குப் பகவான் ரமணரின் சக்தியே முக்கிய காரணம் என்றாலும் அவரது மறைவுக்குப் பின் இந்தப் பிச்சைக்காரனுக்கு வாழ்ந்து கொண்டிருக்கும் ஒரு குருவின் உதவி தேவைப்பட்டது. அதனால் ஸ்வாமி ராம்தாஸிடம் செல்வதில் முரண்பாடு எதையும் நான் காணவில்லை. இந்தப் பிச்சைக்காரனுக்குத் தீக்ஷையளித்து தெய்வீகப் பித்தனாக்கியது ஸ்வாமி ராம்தாஸ்தான். ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர், பகவான் ரமணர், ஸ்ரீ அரவிந்தர், J. கிருஷ்ணமூர்த்தி, ஸ்வாமி ராம்தாஸ் போன்ற மஹான்களின் புற வாழ்க்கையின் மூலம் நாம் அறிந்து கொள்வதற்கும், அவர்களது



**கணேசன் இல்லம் ஆனந்த ரமணாவில் – "அப்பாவின் ஆசிகள், கணேசா."**

அகவாழ்க்கைக்கும் மிகுந்த வேறுபாடுகள் உள்ளன. நித்தியமாக உள்ளதும் எளிதில் அறிய முடியாததுமான மெய்ப்பொருளில் வேரூன்றி நின்றவாறு அவர்கள் செயல்படுகிறார்கள். வேறுபாடுகளை எடுத்துரைக்கக் கூடிய தனி மனிதர் ஒருவர் அந்த நிலையில் இல்லை" என விளக்கினார் யோகி.

இதன் பிறகு யோகி ராம் சுரத் குமாருடன் பழக எனக்கு நிறைய வாய்ப்புகள் கிடைத்தது எனது பாக்கியமே. என் வாழ்க்கையில் மிக இயல்பாக மிக முக்கியமான பங்கை அவர் வகித்தார் என்றால் மிகையாகாது. மிகவும் இக்கட்டான ஒரு நிலையில் அவர் எவ்வாறு குறுக்கிட்டு எனது பிரச்சனைக்குத் தீர்வு கண்டார் என்பதற்கு உதாரணமாக உள்ளது கீழ்க்காணும் நிகழ்ச்சி. 1987-ல் ஒரு அச்சகம் சம்பந்தமான பிரச்சனையில் நான் சிக்கிக் கொண்டிருந்தேன். உள்ளூர் அச்சகத்தில் ஆச்ரம வெளியீடுகளை அச்சிட்டால் ஆச்ரம புத்தக சாலையில் அவற்றைக் குறைந்த விலைக்கு விற்க முடியுமென்பதால் நான் அதற்கான முயற்சியில் இறங்கியிருந்தேன். தனக்கு அச்சகம் ஒன்றை வாங்க உதவி செய்தால் இப்பணியை மேற்கொள்ளத் தயார் என உள்ளூர் அச்சக உரிமையாளர் ஒருவர் என்னிடம் கூறினார். நான் உத்தரவாதம் தருவதாக இருந்தால் அவருக்குக் கடன் தருவதாக ஒப்புக் கொண்டு ஒரு வங்கி கடனளிக்க முன் வந்த போது, இதன் பின்விளைவுகளை முற்றிலுமாகப் புரிந்து கொள்ளாமல் நானும் இசைந்தேன். துரதிருஷ்டவசமாக அச்சக உரிமையாளர் கடன் தொகையைச் செலுத்தத் தவறியதால் அதைச் செலுத்தும் பொறுப்பு என்னுடையது என வங்கி மேலாளர் கூறிவிட்டார். அந்த நிலையில் நான் செய்வதறியாது திகைத்து நின்றேன். வங்கியின் வற்புறுத்தல் மேலும் மேலும் அதிகமாகவே நான் தற்கொலை செய்து கொண்டு விடலாமா என்றுகூட எண்ணத் துவங்கினேன். எனது பரிதவிப்பையும் மன அழுத்தத்தையும் கண்டு வருந்திய அனுராதா அச்சுத் தொழிலில் ஈடுபட்டிருந்த பல பக்தர்களைக் கொண்ட யோகி ராம் சுரத் குமாரிடம் இந்தப் பிரச்சனையை எடுத்துச் செல்லலாமென ஆலோசனை அளித்தார்.

நானும் அனுராதாவும் யோகியின் இல்லத்திற்குச் சென்றோம். அனுராதா எனது பிரச்சனையை யோகியிடம் தெரிவித்தார். "அச்சகம் தொடர்பாகப் பல சிக்கல்களில் மாட்டிக்கொண்டு மிகுந்த மன உளைச்சலுக்கு ஆளாவதால் தற்கொலை செய்து கொள்கிறேன் என்று கணேசன் கூறுகிறார்" என்றார். உடனே யோகி சட்டென "கணேசா! நமது பகவான் ரமணர் நமக்குக் கற்பித்தது என்ன? எண்ணங்களின் பிறப்பிடத்தை ஆராய்ந்து மனதைக் கொல்ல வேண்டுமே தவிர உடம்பையன்று. உடல் உனக்கு இத்தனை ஆண்டுகளாக நன்றாகவே சேவை செய்துள்ளது. எதற்காக அதைப் பழிவாங்க நினைக்கிறாய்?" என கூறியபோது தர்ம சங்கடமான ஒரு நிலைக்கு என்னை அவர் தள்ளி விட்டதை உணர்ந்து "நான் அருணாசலத்தை விட்டு எங்காவது ஓடி விடுகிறேன்" என உளறினேன். கண்களில் கேள்விக்குறியுடன் "அருணாசலத்தை விட்டு வேறெங்கு செல்வாய்?" என யோகி கேட்கவும் தன்னிச்சையாக "காசிக்குப் போகிறேன் ஸ்வாமி" எனக் கூறினேன். அந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ள எண்ணி மிகுந்த ஆர்வத்துடன் "இந்தப் பிரச்சனை தீர்ந்து விட்டால் நீ நிச்சயமாகக் காசிக்குச் செல்வாயா?" என யோகி வினவினார். நான் என் பூரண சம்மதத்தைத் தெரிவித்தவுடன் அவர் அனுராதாவைப் பார்த்து "கணேசன் இல்லாத சமயத்தில் உன்னால் பத்திரிகைப் பணிகளைக் கவனித்துக் கொள்ள முடியுமல்லவா?" எனக் கேட்கவும் அவரும் ஒப்புக் கொண்டார். பின் அவர் என்னை நோக்கி "என்ன பிரச்சனை என என்னிடம் சொல்" என்றவுடன் அனுராதா எல்லா விவரங்களையும் விரிவாக எடுத்துரைத்தார்.

எந்தப் பிரச்சனையானாலும் அதில் தீவிரமாகவும் முழுமையாகவும் தன்னை ஈடுபடுத்திக் கொள்வது யோகி ராம் சுரத் குமாரின் குணம். எல்லா விபரங்களையும் முழுவதுமாகக் கேட்டறிந்து நன்கு புரிந்து கொண்ட பின்னர் ஒரு நிமிடம் மௌனமாக இருந்து பிறகு தனது சிகரெட் பெட்டியை எடுத்து அதில் 'ஓம்' என எழுதி என்னிடம் தந்தார். "உனக்கு உதவி செய்யப்போகும் நபரின் பெயர் S. P. ஜனார்த்தனன். அவர் எனது பக்தர். அவருடைய முகவரி இது" எனக்கூறி சிகரெட் சுற்றப்பட்டிருந்த தாளின் எழுதப்படாத பக்கத்தில் அதைக் குறித்துக் கொள்ளும் படி கூறினார் யோகி. குறிப்பிட்ட அந்த பக்தரை நான் தொடர்பு கொண்டபோது அவர் அச்சகத்தைக் கூடப் பார்க்காமல் "எனது குருநாதர் யோகி ராம் சுரத் குமார் உங்களிடமிருந்து இந்த அச்சகத்தை விலைக்கு வாங்கிக் கொள்ளுமாறு கூறியுள்ளார். அதனால் அதற்கான மொத்தப் பணத்தையும் உங்களுக்குத் தந்து விடுகிறேன்" என்று கூறியவுடனேயே என் மனதை அழுத்திய சுமை அகன்றது. ஆனால் அவரது பங்குதாரர்கள் அவருடைய கருத்தை ஏற்காததால் என் மன நிம்மதி வெகு நேரம் நீடிக்கவில்லை. ஏழு மாதங்களுக்குப் பிறகே அவரால் கடன் தொகை முழுவதையும் செலுத்தி அச்சகத்தை எடுத்துக் கொள்ள முடிந்தது. அந்தச் சமயத்தில் நான் பட்ட துன்பங்களுக்கு அளவே இல்லை. யோகி ராம் சுரத் குமார் மட்டுமே எனக்கு உறுதுணையாகவும் ஆதரவாகவும் இருந்தார். இறுதியாக அச்சகப் பிரச்சனை ஒரு முடிவிற்கு வந்தது. நான் ஏற்கனவே கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றத் தயாரானேன். யோகியின் ஆசிகளுடனும் J. கிருஷ்ணமூர்த்தியின் அண்ணன் மகன் G. நாராயணனுடைய உதவியோடும் காசியில் ஓராண்டு காலம் தனிமையில் வாழ்ந்தேன். அங்கு நான் தங்குவதற்கான ஏற்பாடுகளிலும் யோகியின் கைகள் மறைமுகமாக உதவி செய்ததை என்னால் உணர முடிந்தது. கங்கைக் கரையிலேயே இருந்த குடிலில் அமைதியாகவும் பற்றற்றும் ஒரு வருடம் கழித்தேன். ஆச்ரம நிர்வாகப் பணியில் ஓய்வின்றி உழன்று கொண்டிருந்த என்னை விடுவித்து, எனக்குச் சுதந்திரம் அளித்து யோகி என்னை வழி நடத்துவதை நான் உணர்ந்தேன். சுமார் முப்பது ஆண்டுகளுக்குப் பின் முதன் முதலாக ஆன்மீக விடுதலையை அப்போது நான் அனுபவித்தேன். ஆச்ரம சேவை என்னும் கர்மத்தின் பிடியிலிருந்து நான் மெதுவாக வெளியே கொண்டு வரப்பட்டுள்ளதை என்னால் உணர முடிந்தது.


கணேசன் யோகியை வரவேற்கும் போது

நான் திருவண்ணாமலைக்குத் திரும்பி வந்த பின்னர் "அன்னை கிருஷ்ணாபாய் மரணப்படுக்கையில் இருக்கிறார். அவரைப் போய்ப் பார்" என யோகி என்னிடம் தெரிவித்தார். 1960-ல் பகவானுடைய மூத்த பக்தர்களை ஆச்ரமத்திற்கு மீண்டும் அழைத்து வந்து அவர்களைக் கவனித்துக் கொள்ளுமாறு கூறி எனக்கு ஆன்மீகத்தில் வழிகாட்டியது அன்னை கிருஷ்ணாபாய்தான். அவர் இட்ட பணியை இருபத்தேழாண்டுகள் செய்து முடித்த பின் நான் எனது முன்னேற்றம் குறித்துத் தெரிவிப்பதற்காக மீண்டும் அவரிடம் சென்றேன். அவருடன் இரண்டு மாதங்கள் தங்கியிருந்த அச்சமயத்தில் காசியில் நான் பெற்ற அனுபவங்களை அடிப்படையாகக் கொண்டு வாழ்க்கையில் இனிமேலும் வரக்கூடிய பொறுப்புக்களிலிருந்து என்னை விடுவிக்குமாறு அவரிடம் பிரார்த்தித்துக் கொண்டேன். ஆச்ரமத்தில் பழைய பக்தர்கள் இன்னும் எத்தனை பேர் உள்ளனர் என்று அவர் வினவினார். ஐம்பதுக்கும் அதிகமான பக்தர்களை அழைத்து வந்து அவர்களைப் பேணிக்காத்து இறைவனடி சேர்ந்த பின் அவர்களுடைய ஈமக்கடன்களையும் செய்து முடித்த விபரங்களைக் கூறி மேலும் குஞ்சு ஸ்வாமி, ராமஸ்வாமி பிள்ளை என்ற இரு பக்தர்கள் மட்டுமே ஆச்ரமத்தில் இருக்கிறார்கள் என்பதையும் அன்னையிடம் தெரிவித்தேன். நான் இவ்வாறு கூறி முடித்ததும் "கணேசா! உனக்கு மேலும் சில பணிகள் நிறைவேற்றுவதற்கு உள்ளன. ஆயினும் அடையாளம் அற்றவனாக மௌனத்தில் நிலைத்து நிற்க வேண்டுமென்ற உனது பிரார்த்தனையை நான் உறுதியாக நிறைவேற்றி வைக்கிறேன்" என அன்னை ஆசீர்வதித்தார்.

1989-ல் நான் ரமணாச்ரமத்திற்குத் திரும்பி வந்தேன். மூன்றாண்டுகளுக்குப் பின் குஞ்சு ஸ்வாமியும், 1994-ம் ஆண்டின் இறுதியில் ராமஸ்வாமி பிள்ளையும் அருணாசலத்துடன் ஒன்றி விட்டனர். மறுதினமே நான் ஆச்ரமக் கடமைகளிலிருந்து விடுவிக்கப்பட்டேன். ஆச்ரமப் பொறுப்புக்களைத் துறக்கப் போவது குறித்து 'The Mountain Path' பத்திரிகையில் நான் ஏற்கனவே அறிவித்திருந்தேன். குறிப்பிட்ட அந்த இதழை யோகி ராம் சுரத் குமாரிடம் நான் எடுத்துச் சென்ற போது அவர் அதைப் படித்துப் பார்த்து விட்டு, "கணேசா! எனக்கு நீ ஒரு உதவி செய்ய வேண்டும்" என்று கூறி என் கையைப்பற்றி ரமணாச்ரமத்திற்கு அழைத்துச் சென்று ஏற்கனவே அதன் தலைவராகப் பதவி ஏற்றிருந்த என் தமையனார் சுந்தரத்திடம் கூட்டிப் போனார். அவரிடம் "சுந்தரம்! கவலைப்பட வேண்டாம். இந்த ஆச்ரமத்தைப் பகவான்தான் நிர்வகித்துக் கொண்டிருக்கிறார். எல்லோரும் உனக்கு உதவி செய்வார்கள். ஆச்ரம நடவடிக்கைகள் தடங்கலின்று நடைபெறும் என்பதால் நீ அச்சம் கொள்ள வேண்டாம். தைரியமாக இரு" என சுந்தரத்திற்கு ஊக்கமளித்துப் பின் என்னைப் போக அனுமதித்தார் யோகி.



வெகு விரைவிலேயே தனக்கென ஒரு ஆச்ரமத்தைக் கட்டத் துவங்கிய யோகி அவரது சுபாவத்திற்கேற்ப அதில் மும்முரமாக ஈடுபட்டிருந்தார். இதற்குப் பின் நான் அவர் முன் சென்ற போதெல்லாம், ‘‘கணேசா! நீயும் நானும் நிறைய நேரம் ஒன்றாக இருந்துள்ளோம். இனி நீ உன் வீடான ஆனந்தரமணாவிற்குச் சென்று பகவானுடைய உபதேசங்களை இடைவிடாமல் பழகு’’ என அறிவுறுத்தினார். ஒருவருடைய ஆன்மீகத் தேடலின் இறுதி லட்சியத்தை அவர் எனக்குத் தொடர்ந்து நினைவுறுத்தியவாறிருந்தார். எப்பொழுதும் பகவானுடைய உபதேசங்களைப் பகிர்ந்து கொண்டதுடன் அவற்றைத் தொடர்ந்து பயிற்சி செய்யத் தேவையான ஊக்கத்தையும் யோகி அளித்ததால்தான் எனது ஆன்மீக வாழ்வு உரிய முறையில் மாற்றியமைக்கப்பட்டது. பகவானது அருளும் அவரது மூத்த பக்தர்களின் ஆசிகளும் எப்போதுமே எனக்கிருந்தது என்றாலும் பல விதங்களில் என் வாழ்க்கையை உருவமைத்தது யோகி ராம் சுரத் குமார்தான். அமெரிக்காவிற்கும் மற்றும் பல நாடுகளுக்கும் சென்று பகவானுடைய உபதேசங்ளை அங்குள்ளவர்களோடு பகிர்ந்து கொண்டேன் என்றால் அதற்குக் காரணம் யோகியின் அறிவுரைகளே.

2001-ல் யோகி உடலை உகுத்தபோது அவரது இறுதி நாட்களில் நான் அவருடன் இருந்தேன். சற்றுத் தொலைவிலிருந்தே நான் அவரிடம் மானஸீகமாகப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தேன். என்றாலும் எனக்குத் தக்கவாறு பதிலளிப்பது போன்று தனது கையை உயர்த்தி என்னை ஆசீர்வதித்தார். அவர் உடலை நீத்த பின்னர் மற்றவர்களுடன் சேர்ந்து நானும் அவரது உடலை அடக்கம் செய்யச் சுமந்து சென்றேன். இறுதியில் அவர் அடக்கம் செய்யப்படும் சமயத்தில் அவருக்கு ஏதாவது செய்யக்கூடிய வாய்ப்பு கிடைக்க வேண்டுமெனப் பிரார்த்தித்தேன். மறுகணமே யோகியின் நெருங்கிய பக்தையான தேவகி அம்மா என்னை அழைத்து அவருடைய தேங்காய் கொப்பரை, விசிறி, கம்புகள் இவற்றை அவருடன் அடக்கம் செய்யுமாறு கேட்டுக் கொண்டார். யோகி ராம் சுரத் குமார் ஸமாதியான பின்னும் என் விருப்பங்களை நிறைவேற்றி வைத்தார்.

இன்றும் என் கண்களில் கண்ணீர் ததும்பச் செய்யும் ஒரு சம்பவத்தைக் கூறி இந்த அத்தியாயத்தை நிறைவு செய்கிறேன். அன்று ஹிந்தியில் ‘குருவார்’ என்றழைக்கப்படும் வியாழக்கிழமை. ‘‘இன்று குருவார்’’ எனக் கூறி யோகியை நான் வணங்கினேன். உடனே அவர் என்னைத் தூக்கி நிறுத்தி ‘‘கணேசா! உனது குரு ரமண மஹர்ஷி’’ என்றபின் கண்களில் ஆனந்தக் கண்ணீர் பொங்க ‘‘இந்தப் பிச்சைக்காரனின் குருவும் பகவான் ரமண மஹர்ஷியே தான் கணேசா’’ என்றார் யோகி ராம் சுரத் குமார். ‘நான் இருக்கிறேன்’ என்ற ஸத்தியத்தில் எப்போதும் நிலைநின்ற பகவானின் சிறந்த பக்தர் என்பதால் அருணாசலத்தின் மிகப்பெரிய பாறையுமாவார். அவருக்கு நமது அஞ்சலிகள்.



# 77 வோல்டர் கீர்ஸ்



ஸ்ரீ பகவானின் போற்றத்தக்க பக்தர்களுள் ஒருவர் ஹாலந்து நாட்டைச் சேர்ந்த வோல்டர் கீர்ஸ். தனது மரணம் வெகு விரைவிலேயே நிகழும் என தனது நண்பர்களிடம் அவர் கூறி வந்தபோதும் பகவானின் பக்தர்கள் வியந்து தமக்காக ஆசைப்படக்கூடிய விதத்திலும் பொறாமைப் படக்கூடிய வகையிலும் 1985-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் ஏழாம் நாள் திடீரென அவர் மரணத்தைத் தழுவினார். அவருடைய இறுதி நாட்களில் அவரது நண்பர் மென்னோ ப்ளேசர் என்பவரும் பின்னர் மற்றொரு நண்பரும் அவருடன் இருந்தனர். வோல்டருக்கு வாக்களித்திருந்த படி காட்டில் பெய்த பனிப்பொழிவை ப்ளேசர் சில புகைப்படங்கள் எடுத்திருந்தார். 25 ஆண்டுகளில் மிகவும் குளிராக இருந்த காலம் அது. ப்ளேசர் தனது பணிக்குச் செல்ல வேண்டியிருந்ததால் வோல்டர் ஜனவரி ஏழாம் தேதி காலை அவரை ரயில் நிலையத்திற்குக் காரில் அழைத்துச் சென்றார். இரண்டு மணி நேரத்திற்குப் பின் வோல்டருடன் இருந்த மற்றொரு நண்பர் ப்ளேசருக்கு போன் செய்து வோல்டர் இறந்து விட்டதாகவும் உடனே வரும்படியும் தெரிவித்தார். நண்பரை ரயில் நிலையத்தில் இறக்கி விட்டு வீடு திரும்பிய வோல்டர் தான் ஏற்பாடு செய்திருந்த ஒரு சந்திப்பை ரத்து செய்தார். பின்னர் அவருடைய முக்கிய அறையில் இருந்த பகவான் ரமணரின் படத்துக்கு முன்னால் தரையில் ஒரு திண்டை வைத்து தனது கையை வலது மார்பில் வைத்தவாறு படுத்துக் கொண்ட அவர் நொடியில் மரணத்தைத் தழுவினார். அவரது உடல் தகனம் செய்யப்பட்ட பொழுது அவருக்கு மிகவும் பிடித்தமான க்ஷுப்ரட்டின் (Schubert) 'பனிக்கால பயணம்' (Die Winterreise) என்னும் பாடல் இசைக்கப்பட்டது.

விதேஹமுக்தரைப் போன்று தன் உடலை நொடியில் உகுத்த வோல்டர் தான் விரும்பியவாறே சென்றார். ஜீவன்முக்திக்கும் விதேஹமுக்திக்கும் உள்ள வேறுபாட்டை இந்து சமய நூல்கள் குறிப்பிடுகின்றன. ஜீவன்முக்தி நிலையிலுள்ள ஒருவர் தான் வாழும் பொழுதே இறைவனோடு ஒன்றி விடுதலை பெற்றவராக இருக்கிறார். அவர் ஒரு அனுபூதிமான் என்பதை அவரைக் காண்பவர்களின் உள்ளுணர்வே தெளிவுபடுத்தும். விதேஹமுக்தன் என்பவர், தான் உடலை விடும் பொழுதில் பூரணமான பேரானந்தத்தில் நிலை நிற்பவர்.

'The Mountain Path' பத்திரிகையின் நிர்வாகப் பதிப்பாசிரியர் என்னும் வகையில் வோல்டருடன் நான் நெருங்கிய கடிதத் தொடர்பு கொண்டிருந்தேன். 1970-ல் அதன் பதிப்பாசிரியர் ஆர்தர் ஆஸ்போர்னின் மறைவிற்குப் பின் மற்ற அறிஞர்களான பக்தர்கள் அப்பணியை மேற்கொண்டனர். இதழ்களுக்குத் தேவையான கட்டுரைகளைச் சேகரிக்கும் பொறுப்பை நான் ஏற்றுக் கொண்டேன். இவ்வாறுதான் எனக்கும் வோல்டருக்கும் இருந்த தொடர்பு வளர்ச்சி அடைந்தது. எப்போதுமே குறித்த காலத்தில் தனது பணியை முடித்து அவர் எனக்கு உதவியாக இருந்தார். 'நான் இருக்கிறேன்' என்ற அவரது தனிப்பட்ட அனுபவத்தில் தோய்த்து எடுக்கப்பட்டவைகளாக அவருடைய ஒவ்வொரு கட்டுரையும் விளங்கியது. இந்தக் கட்டுரைகளிலிருந்தே வோல்டர் கீர்ஸைப் பற்றிய விவரங்கள் நமக்குத் தெரிய வருகின்றன. அவற்றைச் சரி பார்த்துத் தொகுத்துக் கொடுத்த டேவிட் காட்மன்னுக்கு நாம் மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம்.

இறைவன், ஆத்மா, குரு இவை மூன்றுமே ஒரே மெய்ப்பொருளைக் குறிக்கும் சொற்கள் என்றே பகவான் உபதேசித்துள்ளார். இறைவன் அல்லது ஆத்மா ஒரு பாத்திரத்தைத் தேர்ந்தெடுத்து அதைத் தெய்வீகஞானத்தால் நிறைக்கிறது. பக்தனின் குழந்தைப் பருவத்திலிருந்தே இச்செயல் தொடர்கிறது என்பதை முன் கூறிய அத்தியாயங்களின் மூலம் நீங்கள் அறிந்து கொண்டிருப்பீர்கள். நாம் ஏற்கனவே பார்த்த பக்தர்களில் அநேகமாக எல்லோருமே ஏதாவது ஒரு விதத்தில் மெய்ப்பொருள் அல்லது இறைவனால் ஈர்க்கப்பட்டிருக்கிறார்கள் அல்லது மனதையும் உடலையும் கடந்த அனுபவத்தைப் பெற்றிருந்தார்கள் என்பதை நாம் காண்கிறோம். ஆத்மாவினால் தேர்ந்தெடுக்கப்பட்ட இத்தகையவர்களில் வோல்டர் கீர்ஸும் ஒருவரென்பதில் ஐயமில்லை.

வோல்டர் கீர்ஸ் ஹாலந்தில் ஒரு பாதிரியாரின் குடும்பத்தில் பிறந்தவர். அவர்கள் தீவிர பக்தி கொண்டிருந்த உண்மையான கிறிஸ்தவர்கள். அத்தகைய குடும்பங்களைக் காண்பது அரிது என வோல்டரே கூறியுள்ளார். தனது ஐந்தாவது வயதில் வோல்டருக்கு ஏற்பட்ட குறிப்பிட்ட அனுபவம் ஆன்மீகமானது என்பதை அவர் வயது வந்த பின்னரே புரிந்து கொண்டார். ஒரு முறை வீட்டிற்கு வந்திருந்த குடும்ப நண்பர் ஒருவரோடு அனைவரும் உரையாடிக் கொண்டிருந்தனர். சிறு குழந்தையாக இருந்த வோல்டருக்கு அவர்களது உரையாடலில் எவ்வித ஈடுபாடும் இருக்கவில்லை. அவ்வாறிருந்த போதும் 'பிரிட்டிஷ் இந்தியா' என்ற சொற்களைக் கேட்ட போது அவரது கவனம் உரையாடலில் திரும்பியது. ஏதோ ஒரு காரணத்தால் மெய்சிலிர்த்துப் போன அக்குழந்தைக்கு அவ்வார்த்தைகளில் அசாதாரணமான அரிதான ஏதோ ஒன்று புதைந்திருப்பதாகத் தோன்றியது. அவ்வார்த்தையின் பொருளை குழந்தை புரிந்து கொள்ளாத போதும் அது ஒருவித ஆன்மீக அனுபவமே.

அதே ஐந்து வயதில் ஒரு முறை வெளியில் மணற்குவியலில் வோல்டர் விளையாடிக் கொண்டிருந்தார். அங்கு வேலியில் மலர்ந்திருந்த பஞ்சு போன்ற உருண்டையான இளஞ்சிவப்பு நிற மலர்களை அவர் காண நேர்ந்தது. வேலி மலர்கள், அவருடைய உடல் இவை அனைத்துமே திடீரென தோன்றிய ஒளியில் மறைந்து போனதாக உணர்ந்தார். அவரைச் சுற்றிலும் பிரகாசமான ஒளி சூழ்ந்து கொண்டது. மதச் சார்புள்ள குடும்பத்தை சேர்ந்தவராக இருந்த போதும் தனது குடும்ப அங்கத்தினர்கள் ஒருவரிடமும் இந்த அனுபவத்தைப் பற்றிப் பேசி விளக்கம் கேட்க முடியாத நிலையில் அவர் இருந்தார். இருபத்தி ஒன்று வயது வரை இவை ஆன்மீக அனுபவங்கள் என்பதையே அவர் புரிந்து கொள்ளவில்லை. ஒரு நாள் வயது முதிர்ந்த ஒரு மனிதரோடு அவர் பெஞ்சில் அமர்ந்திருந்தார். புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்த முதியவர் திடீரெனக் காரணமேதுமின்றி அதிலிருந்து ஒரு பகுதியை உரக்கப் படிக்கலானார். அவர் படித்த வார்த்தைகளில் கவனம் செலுத்தாத போதும் முன்னர் ஐந்து வயதில் நிகழ்ந்தது போன்றே ஒளி வெள்ளத்தில் அனைத்தும் கலந்து மறைவதை வோல்டர் உணர்ந்தார்.

உலகையும் மற்றவற்றையும் கடந்த இந்நிலையை நிர்விகல்ப ஸமாதி என்று இந்து சாஸ்திரங்கள் கூறுகின்றன. தனது 21ஆவது வயதிற்குள் வோல்டர் இந்நிலையை மூன்று முறை அனுபவித்து விட்டார். இந்த முறை அதைப் பற்றிய விளக்கத்தைத் தனது குடும்பத்தாரிடம் கேட்கும் துணிவு அவரிடமிருந்தது. தனது அனுபவத்தைக் கூறி இத்தகைய அனுபவங்கள் எனக்கு அடிக்கடி வந்து கொண்டிருக்கின்றன என குடும்பத்தாரிடம் அவர் தெரிவித்ததும் அவர்கள் அதற்கு எந்த முக்கியத்துவமும் கொடுக்காமல் 'இதெல்லாம் அசாதாரணமான அனுபவங்கள் அவற்றைக் கவனிக்க வேண்டாம்' என்று உதாசீனமாக கூறினார்கள். தனது மனப்பூர்வமான கேள்விகளுக்கு அவர்கள் அளித்த பதில் வோல்டருக்கு ஏமாற்றத்தையே அளித்தது. பிறகு தன் அனுபவத்தை நண்பர்களோடு



பகிர்ந்து கொண்டார். ஆனால் அவர்களில் ஒருவர் கூட வோல்டர் கூறியதைப் புரிந்து கொள்ளவில்லை என்பது மட்டுமின்றி அவ்வனுபவத்தைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டும் என்று அவருக்கிருந்த தாகம் கூட அவர்கள் யாருக்கும் இருக்கவில்லை. இதனால் தன் நிலையை புரிந்து கொள்வதற்காகப் பல புத்தகங்களை அவர் படித்தாரென்றாலும் அவை எதுவுமே ஏற்றுக் கொள்ளக் கூடிய பதிலை அவருக்கு அளிக்கவில்லை. ஆனால் வோல்டருக்கோ தனது அனுபவம் உண்மையானது என்ற உணர்வு இருந்ததோடு அது ஒருவரது இருப்பிற்கும், உடலுக்கும் காரணமானது என்றும் தோன்றியது. இருப்பவை அனைத்திற்கும், உலகிற்கும், அதிலுள்ள அனைத்திற்கும் அதுவே அடித்தளம் - ஆதாரம் என்றும், அந்த சக்தியே மௌனத்தின் ஒளி என்பதும் வோல்டருக்குப் புரிந்தது.

தனது கேள்விகளுக்கு விடைகளைப் பெறும் முயற்சியில் வோல்டர் தோல்வியையே சந்தித்தார். இந்நிலையில் அவர் இதயத்திலிருந்து ‘உனக்கு உதவி செய்யக்கூடிய ஒரு குருவை நீ தேடிச் செல்ல வேண்டுமோ என்னவோ?’ என்று ஒரு குரல் ஒலித்ததுடன் ‘குரு தத்துவம்’ செயல்படவும் தொடங்கியது. அவருக்கு இம்மாதிரி தோன்றிய சில தினங்களுக்குள்ளேயே ஒரு வயதான பெண்மணி அவரது இல்லத்திற்கு வந்து ‘வோல்டர்! இந்தப் புத்தகங்களைப் படி’ எனக் கூறி இரு புத்தகங்களைக் கொடுத்துச் சென்றார். அதுவரை படித்த புத்தகங்கள் அவருக்கு ஏமாற்றத்தையே அளித்தன என்பதை நாம் ஏற்கனவே பார்த்தோம். இருந்தும் அந்தப் பெண்மணியின் மீதிருந்த மதிப்பு காரணமாக ஸ்வாமி விவேகானந்தரின் ‘ஞான யோகம்’ மற்றும் பால் பிரண்டனின் ‘The Secret Path’ என்ற அந்த இரு நூல்களையும் எடுத்துப் படிக்க ஆரம்பித்தார். முதல் புத்தகத்தைப் படிக்கும் பொழுது அவர் பரவச நிலைக்குச் சென்றார். ஏனெனில் ஒரு இந்து ஸந்நியாசியால் எழுதப்பட்டது என்றாலும் அவரது ஆன்மீக அனுபவங்கள் உண்மையானவை என்பதை அதிலிருந்து முதல் முறையாக உறுதியாக அறிந்து கொண்டார். தனது அனுபவம் உண்மை என்று கூறியதோடு அதை உறுதியும் செய்ததால் மிகுந்த ஆர்வத்தோடு அப்புத்தகத்தில் மூழ்கிப் போனார். அவருடைய உறவினர்களாலோ நண்பர்களாலோ இத்தகைய உணர்வை அவருக்கு அளிக்க இயலவில்லை. அதுமட்டுமின்றி ‘இத்தகைய ஆன்மீகதாகம் ஆன்மீக ஸாதகர் ஒருவருக்கு குழந்தைப் பருவத்திலேயே சாதாரணமாக ஏற்படக்கூடும்’ என்பதும் அந்தப் புத்தகத்தில் கூறப்பட்டிருந்தது. இந்த பாரம்பரியம் இந்தியாவில் இப்பொழுதும் தொடர்கிறது என்றும் ஸ்வாமி விவேகானந்தர் உறுதியாகக் கூறியிருந்தச் செய்தி வோல்டருக்கு எல்லையில்லா மகிழ்ச்சியை அளித்தது. ‘என்னுடைய குரு இந்தியாவில்தான்

இருக்கிறார் என்பதை நான் அறிந்து கொண்டு விட்டேன். வேறு எங்கும் நான் செல்லத் தேவையில்லை' என உடனேயே வோல்டர் உணர்ந்து கொண்டார்.

இந்தப் பரவச நிலையில் அவர் 'The Secret Path' என்ற இரண்டாவது புத்தகத்தைப் படிக்க ஆரம்பித்த போது அதில் பகவான் ரமணரின் படத்தைக் கண்டார். சில பக்கங்கள் படித்த பின்னர் தனது ஸத்குரு ஸ்ரீ ரமணபகவானே என்பது அவருக்கு உறுதியாயிற்று. பகவானது படத்தைக் கண்ணில் படும்படியான ஒரு இடத்தில் வைத்து தான் பழகி வந்த தியானப் பயிற்சிகளை அதன் முன் செய்யத் துவங்கிய போது அருளும் சக்தியும் அப்படத்திலிருந்து பெருகுவதை உணர்ந்தார். ஒருவரது ஆன்மீக மையம் - ஆன்மீக இதயம் - அவரது மார்பின் வலது புறத்தில் உள்ளது என்றும் மனதை அங்குதான் குவிக்க வேண்டும் என்றும் அந்தப் புத்தகத்தில் கூறப்பட்டிருந்தது. இவ்வாறு ஸாதனை செய்த பொழுது பயனுள்ள அதிர்வுகளையும் அலைகளையும் அவர் அனுபவித்ததால் ரமண மஹர்ஷியே தனது குரு என்பது அவருக்கு உறுதியாயிற்று. இருந்தாலும் புத்தகம் பல வருடங்களுக்கு முன் எழுதப் பட்டிருந்ததால் தனது குரு இப்போதும் உயிருடன் இருப்பாரா? என்ற கவலை அவருள் எழுந்தது. பகவானை உடலோடு காண வேண்டும் என்ற பேரவா ஒன்று மட்டுமே அவருக்கிருந்தது. ஆன்மீக மையமான தனது இதயத்தில் மனதை நிறுத்தி தியானித்த பொழுது பகவானுடைய படத்திலிருந்து அறிவுக்கெட்டாத வகையில் "நான் இங்கு இருக்கிறேன். நீ என்னிடம் வருவாய்! கவலை வேண்டாம்" என்று அவர் கூறுவதாக வோல்டருக்குத் தோன்றியது.

இரண்டாவது உலக மஹாயுத்தம், ஜெர்மானியர்களின் ஆக்ரமிப்பு, பணமின்மை ஆகிய பல காரணங்களால் வோல்டரால் உடனே இந்தியாவிற்கு வர இயலவில்லை. 1950ஆம் ஆண்டு துவக்கத்தில் இந்திய பூமியில் கால் பதித்த மறு கணமே அருணாசலத்தை நோக்கிச் சென்றார். அவரை வரவேற்ற ரோடா மெக்ஐவர் பகவானிடம் அவரை அழைத்துச் சென்றார். இறைவனை நேரில் காண்பதற்கு இருந்த தீவிர ஏக்கத்தோடும் மரியாதையுடன் கூடிய பணிவோடும் வோல்டர் ஆச்ரமத்துள் நுழைந்தார். பகவான் முன் மெய்சிலிர்த்து நின்ற அவருள் நன்றி உணர்வு பெருக்கெடுத்து ஓடியது. "பகவானே! உங்களுக்கு நன்றி! என்னுடைய பிரார்த்தனைகள் அனைத்திற்கும் நீங்கள் செவி சாய்த்துள்ளீர்கள். உங்களை நேரில் காண வேண்டும் என்னும் பேரவா என்னுள் இருந்தது" என்று பகவானிடம் அப்போதே தெரிவித்தார்.

பின்னர் பகவானை முதன் முதலில் தரிசித்த தனது அனுபவத்தை விளக்கிக் கூறும் பொழுது, "தனது அறையையும் ஹாலையும் இணைக்கும் பாதையில் பகவான் நாற்காலியில் அமர்ந்திருந்த போது நான் பகவானைக் கண்டேன். பக்தர்களையும் விருந்தினர்களையும் சாதாரணமாக பகவான் அங்குதான் சந்திப்பார். அவரைக் கண்டவுடனே என் உடல் முழுவதுமே நடுங்கத் துவங்கியது. நரம்புக் கோளாறோ அல்லது மன சஞ்சலமோ இந்த நடுக்கத்திற்குக் காரணம் அன்று. தெய்வசக்தியின் முன் நேருக்கு நேர் நின்று அதை உணர்ந்து கொண்டதன் பயனாக என்னையும் மீறி எனது உடல் வெகுவாக நடுங்கியது. பல ஆண்டுகளுக்கு முன்னிருந்து எனது கற்பனைகள், கனவுகள், எதிர்பார்வைகள் இவற்றின் மையமாக விளங்கிய சக்தி வாய்ந்த அந்தப் பேரிருப்பை - தெய்வீக புருஷரை நான் நேரில் கண்டேன். வெகு தொலைவிலிருந்து வந்திருந்த நான் 'இந்தச் சாதாரண மனிதனைக் காண்பதற்கா அவ்வளவு தூரத்திலிருந்து வந்தேன்?' என ஏமாற்றம் அடைவதற்கான வாய்ப்பு இருந்தது என்றாலும் அம்மாதிரி நிகழவில்லை. பகவானை உற்று நோக்கிய பொழுது அங்கு இறைவனே அமர்ந்திருக்கிறான் என என்னால் உணர முடிந்தது. அன்று காலை பேரொளி ஒன்று மனித உருவெடுத்து வந்திருப்பதாகவே நான் உணர்ந்தேன். நான் அதுவரை பார்த்த ஒளி அனைத்தையும் விட மிகவும் பிரகாசமாக அது இருந்தது" என்று வோல்டர் கூறினார்.

பகவான் வோல்டர் மீது தனது கவனத்தைத் திருப்பிப் புன்னகை பூத்தார். ''ஹாலந்தில் உனது வீட்டிலிருக்கும் எனது படத்தின் மூலம் உன்னை நான் வழி நடத்திக் கொண்டிருந்தேன். இறுதியாக நீ நேரிலேயே இங்கு வந்துவிட்டாய்'' என்று பொருள்படும்படியாக வோல்டருக்கு இருந்தது அந்தப் புன்னகை. ''பேரானந்த அலைகளில் நான் மூழ்கினேன். பகவானுடைய உருவம் என் கண்களுக்குப் பெரும் விருந்தாக இருந்தது. அவரிடமிருந்து வெளிப்பட்ட பேரொளியில் நனைந்த வண்ணம் அவரைப் பார்த்துக் கொண்டே இருந்தேன். பல ஆண்டுகளுக்கு முன் என் குழந்தைப் பருவத்தில் பிரகாசமான ஒளியையும் நல்லுணர்வையும் வெளிப்படுத்தும் மனித உருவில் உன்னத புருஷராக இறைவன் இருப்பாரென்ற நம்பிக்கை எனக்கு இருந்தது. ஆனால் எதையும் நம்பக் கூடிய சிறு குழந்தைகளுக்காகச் சொல்லப்பட்ட கட்டுக்கதை அது என்று அந்தக் குழந்தைக்கால நம்பிக்கையை நான் எப்பொழுதோ தூக்கியெறிந்து விட்டேன். ஆனால் இப்பொழுது அந்தக் குழந்தைக்கால நம்பிக்கை உண்மையானது என்பதை என் முன் இருந்த ஒளியினாலான மனித உருவம் உறுதி செய்தது. முதல் நாள் காலையில் நான் பெற்ற அனுபவத்தை என்னால் எவ்வாறு வர்ணிக்க முடியும்? மிகுந்த பிரகாசத்துடன் ஒரு X- Ray ஐப் போன்று என்னை ஊடுருவிச் சென்ற அந்தப் பேரொளியாக என் கண் முன் தோன்றி 'நான் இருக்கிறேன்' என்ற தனது இருப்பை இறைவன் வெளிப்படுத்தினான்'' என்று வோல்டர் தன் அனுபவத்தைப் பற்றிக் கூறியுள்ளார்.

தெய்வீகமான அக்னியின் உருவமே புனித அருணாசல மலை என்பது தெரியாமலே அந்தப் பேரொளியைப் பற்றியும் தனது அனுபவத்தைப் பற்றியும் வோல்டர் கூறியுள்ள விளக்கம் தனிச் சிறப்புப் பெற்றது. ஞானத்தின் உருவமே அருணாசலம் என்பது பாரம்பரியக் கூற்று. ''அதுவே ஆத்மா. 'நான் இருக்கிறேன்' என்னும் அது அக்னியின் உருவில் உள்ளது'' என்பதை பகவானும் உறுதி செய்து கூறியுள்ளார். தூய ஞானமும் மெய்யறிவும் ஆனதால் அதை மோஸஸூம் இயேசுநாதரும் கூட அக்னி என்று குறிப்பிட்டுள்ளனர். அக்னிமலையாக விளங்கும் அருணாசலமும்கூட ஞானமே. மனித குலம் 'நான் இருக்கிறேன்' என்ற அந்த ஞானத்தை - அந்த உண்மையை மறந்துவிட்டதால் அதை உலகெங்கிலும் பரப்புவதற்காக அருணாசலமே பகவானாக மனித உருவில் தோன்றியது.

ஞான ஒளியைப் பரப்புவதில் உதவி செய்யவே தான் வந்திருப்பதை வோல்டர் அப்போது அறியவில்லை. மேற்கு ஐரோப்பாவில் பகவானுடைய பெயர் பரவுவதற்கு வோல்டர் காரணமாக இருந்தார் என்றாலும் இதுவே விதியினால் தனக்கு ஒதுக்கப்பட்ட பணி என்பதை அறியாமலே பரப்பும் பணியை அவர் செய்து வந்தார். சாதாரணமாக எழுத்தாளராகவோ பதிப்பாளராகவோ இருப்பவர்கள் தங்களது குருவைப் பற்றி எழுதும்போது இனிமையும் கவர்ச்சியும் நிறைந்த விதத்தில் எழுதக் கூடிய சக்தியைப் பெற்றிருப்பார்கள். ஆனால் வோல்டர் ''நான் கூறும் ஒவ்வொரு வார்த்தையும் எனது உண்மையான ஆன்மீக அனுபவமே. கவிதை எழுதும் திறன் எனக்கில்லை. அனைத்துமே கலப்படமற்ற உண்மை; ஸத்திய வாக்கு'' என்று கூறியுள்ளார். வோல்டரைத் தவிர வேறு யாராலும் இம்மாதிரி எழுத முடியாது.

தான் தெய்வத்தின் முன் இருக்கிறோம் என்பதை நன்கு உணர்ந்த நிலையில் பகவானுடன் வோல்டர் தங்கியிருந்தார். தனது அனுபவத்தைக் கூறும் போது ''நான் எதையெல்லாம் எதிர்பார்த்து இருந்தேனோ அவை அனைத்தும் முதல் சில நாட்களிலேயே நிறைவு பெற்றன. சொல்லப் போனால் சற்று அதிகமாகவே நான் பெற்றேன் என்றுதான் கூற வேண்டும். முன்பு ஸாதனைக் காலங்களில் பிரகாசமும் தெளிவும் கூடிய நிலைகளை அனுபவித்துள்ளேன் என்றாலும் இப்போது நான் அனுபவிக்கும் பேரொளியில் ஒரு பகுதியைக் கூட அனுபவிப்பதற்கு அவை என்னைத் தயார் செய்யவில்லை. இத்தகைய ஒரு அனுபவம் சாத்தியமானது என்பதை நான் நினைத்துக் கூடப்

பார்க்கவில்லை. பகவானுடைய ஸாந்நித்தியம் என்ற ஒளி பொருந்திய சக்தி எனது மனம், உடல் இவற்றைச் சிறிதும் முயற்சியின்றி துடைத்துத் தள்ளிவிட்டது. அவருடைய அருள் என் மனதை மௌனத்தில் ஆழ்த்தி, இதயத்தை நிறைத்து, இந்த தோற்ற உலகத்திற்கு அப்பால் எங்கோ கொண்டு சென்றது. அவரது சக்தி பொருந்திய ஸந்நிதியில் நான் உடம்போ அஹங்காரமோ இல்லையென்பது இயற்கையாகவே தெளிவாக உணரப்பட்டதால் அவற்றைப் பற்றிய விசாரம் எதுவும் தேவைப்படவேயில்லை. பகவானிடமிருந்து வெளிப்பட்ட ஒளி என்னை முழுமையாக நிறைத்து என்னிடமிருந்த அஞ்ஞானத்தை ஒரு நொடியில் போக்கி விட்டது" என்று வோல்டர் உரைத்துள்ளார். பல வாரங்கள் பகவான் முன்னிலையில் அமர்ந்து இந்தப் பேரானந்த அலைகளை அவர் அனுபவித்தார். பகவான் முன்னிலையில் பிரகாசமாக இருந்த அந்த ஒளி அவர் தன்னுடைய குடிலுக்குச் செல்லும் பொழுது மெதுவாகக் குறைவதையும் உணர்ந்தார். அதிகமாகிக் குறையும் இந்த அனுபவத்தை ஏற்றத் தாழ்வின்றி நிலையாக என்னுள் வேரூன்றச் செய்ய வேண்டுமென பகவானிடம் வேண்டிக் கொள்ள வேண்டுமென்று வோல்டர் தீவிரமாக எண்ணினார்.

அதனால் ஒரு நாள் பகவானை விட்டுச் சற்று தூரத்தில் அமர்ந்திருந்தார் என்றபோதும் அவரைக் காணக்கூடிய விதத்தில் அமர்ந்திருந்தார். பின்னர் தனது எண்ண அலைகளால் அவரைத் தாக்க முற்பட்டார். "பகவானே! தங்களின் ஒளி பொருந்திய இருப்பை உங்கள் ஸாந்நித்தியத்தில் மட்டும் அனுபவித்து உங்களை விட்டு அகன்றவுடன் மறுநிமிடமே அது மறையுமென்றால் அதனால் எனக்கென்ன பிரயோஜனம்? கூறுங்கள்!" என எண்ணினார். வோல்டரின் மிரட்டல்களுக்கு பகவான் எளிதில் மசியவில்லை. பகவானுடன் சொற்போர் நிகழ்த்தாமல் இதயத்தால் போரிட முற்பட்ட வோல்டர் குழந்தைப் பிராயத்திலிருந்தே அவருடைய சுபாவமாக இருந்த விடா முயற்சியோடு தீவிரமாகப் போரிட்டார். (இந்த விஷயத்தை நாம் வோல்டரிடம் கற்றுக் கொள்ள வேண்டும். விடாமுயற்சி நம் அனைவருக்கும் தேவையானது. ஆன்மீக அனுபவம் சில நாட்களுக்கு மட்டும் நிலைத்தால் போதாது. )சிறிது நேரத்திற்குப் பிறகு பகவான் வோல்டர் மீது கவனத்தைத் திருப்பி 'உங்களுக்கு என்ன வேண்டும்?' என்று கேட்பது போன்று நகைத்தார். வோல்டரின் பிரார்த்தனை மனப் பூர்வமானதாகவும் உண்மையானதாகவும் இருந்ததால் அவரது விழிகளில் கண்ணீர் ததும்பியது. அதன் பிறகு அவரை மீண்டும் பார்த்த பகவான் சக்தி வாய்ந்த தனது கவனத்தை அவர் மீது செலுத்தவே பகவானுடைய ஆசிகளும் அருளும் வோல்டரின் இதயத்தைத் தொட்டன. "வோல்டர்! உங்களது கண்ணாடியை மூக்கிலேயே வைத்துக் கொண்டு நீங்கள் அதைத் தேடிக் கொண்டிருக்கிறீர்கள்!" என்று பகவான் கூறுவதாக அவருக்குத் தோன்றியது. இந்த அனுபவம் அவரை மெய்சிலிர்க்க வைத்து அலைமேல் அலையாகப் பரவசத்தை அனுபவிக்கச் செய்தது. "வெளி உலகிலிருந்து நித்தியமான எதையும் பெற முடியாது. வெளியில் காணப்படுபவை அனைத்துமே நிலையற்றவை. அவை வந்து போகக் கூடியவை. 'நீ தேடும் கண்ணாடி உன் மூக்கிலேயே உள்ளது' என்று அன்றாட அனுபவத்தைக் கூறி 'நீ தேடும் நித்திய அனுபவமும் அத்தகையதே' என்பதை உனது குரு ரமண பகவான் உறுதி செய்கிறார்" என்ற பதில் உள்ளே உறையும் குருவிடமிருந்து வந்ததாக வோல்டருக்குத் தோன்றிய அதே சமயத்தில் வெளியிலிருந்த குரு ரமண பகவானும் அவரைக் கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தார்.

அச்சமயத்தில் வோல்டருக்கு இருந்த உணர்வுகளைப் பற்றி அவர் இவ்வாறு கூறுகிறார்:- "திடீரென்று பகவானது கண்களிலிருந்து ஒளியும் நெருப்பும் கிளம்பி என்னைத் தாக்கின. அவரது பார்வையிலிருந்து வெடித்துச் சிதறிய அபரிமிதமான சக்தியை — ஆற்றலை என்னால் ஒரு விதத்திலும் விளக்க முடியவில்லை. அந்த ஆற்றல் மிகுந்த பார்வை நேராக எனக்குள் பாய்ந்து நான்



பகவானிலிருந்து வேறுபட்டவன் என்று என்னை எண்ண வைத்த அனைத்தையும் எரித்துச் சாம்பலாக்கியது. என் வலது பக்கத்தில் இருந்த இதய மையம் சூடாக ஆரம்பித்தது. தொடர்ந்த அவரது பார்வையினால் இதய மையத்தில் வெப்பம் கொஞ்சம் கொஞ்சமாக அதிகரித்து மிகுந்த உஷ்ணத்தை வெளிப்படுத்தும் நெருப்புப் பந்தாக மாறி என்னுள் ஒளி வீசத் துவங்கியது. பகவானுடைய பார்வை என் மீது தொடர்ந்து விழுந்த பொழுது மிகவும் சக்தி வாய்ந்த ஆன்மீக மின் அலைகளால் என் இதய மையத்தை மேன்மேலும் ஊக்குவித்து ஒளி சக்தி இவற்றின் துகள்களை ஆன்மீக 'டைனமோ' (Spiritual Dynamo) போன்று வெளிப்படச் செய்ததை நான் உணர்ந்தேன். திடீரென்று எனது மார்பில் அளவற்ற ஆற்றலுடன் கூடிய மின் சாதனம் ஒன்று பொருத்தப்பட்டதாகத் தோன்றியது. நான் விறைப்பாக நிமிர்ந்து அமர்ந்தேன். எனது கண்களும் அவரது கண்களும் ஒன்றாகி நிலைத்து நின்றன. ஒளி வீசும் அவரது கண்களிலிருந்து வெளிப்பட்ட அக்னி ஜ்வாலை எனது இருப்பின் மையத்துள் பாய்ந்தது. இந்தப் பரிமாற்றம் எவ்வளவு நேரம் நிகழ்ந்தது என்பதை என்னால் கூற இயலவில்லை. எதை நாடி நான் வந்தேனோ அது மிகவும் அழகாக எனக்கு அளிக்கப்பட்டது. என்னில் உள்ளும் புறமும் முழுவதுமாக ஏற்பட்ட அந்த மாற்றம், வாக்குப் பரிவர்த்தனை எதுவுமேயில்லாமல் நிறைவேறியது. வாக்குகளால் விவரிக்கப்பட வேண்டிய அவசியமேதுமின்றி மிகத் தெளிவாகவும் நேரடியாகவும் இந்தப் பூரணத்துவம் மௌனத்தின் மூலமே நிகழ்ந்தது. எந்த நிலைக்கு நான் தயாராக இருந்தேனோ அதன் எல்லைக்கே பகவான் என்னை அழைத்துச் சென்று விட்டார். அன்று பகவான் என்னுள் செலுத்திய அருட்சக்தி உரிய காலத்தில் தனது பணியை நிச்சயமாகச் செய்து முடிக்கும் என்று நான் உணர்ந்தேன். நான் விடைபெற்றுச் செல்லுமுன் எனக்களிக்க வேண்டிய பரிசை அவர் தந்து விட்டார். இதைவிட மதிப்புடைய எதையுமே நான் அவரிடம் கேட்டுப் பெற்றிருக்க முடியாது" என்று வோல்டர் கூறி முடித்தார்.

பகவான் தனது உடலை விடப் போகிறார் என்ற விபரம் அறிந்த பின்னரும் வோல்டர் தனது நாட்டிற்குத் திரும்பிச் சென்றார். பகவான் உடலன்று என்பதை அவர் நன்கு அறிந்திருந்ததாலேயே இங்கு தங்கவில்லை. பகவான் எப்பொழுதுமே இதயத்தினின்று வெளிப்படும் இருப்பெனும் ஒளியாகவே திகழ்ந்தார். சிறிது காலத்திற்குப் பிறகு மீண்டும் இந்தியாவிற்கு வந்த வோல்டர் கேரளாவில் இருந்த ஒரு குருவிடம் சென்று அவரோடு சில ஆண்டுகளைக் கழித்தார். ஆயினும் அவருக்கு உறுதுணையாக நின்ற பகவானை மையமாகக் கொண்டே வோல்டரின் எல்லாச் செயல்களும் வெளிப்பட்டன. 1970—80களில் நிஸர்க்கதத்த மஹராஜைத் தவறாமல் சென்று

கண்டதோடு அவருடைய அத்வைத உபதேசங்களையும் கேட்டார். அவ்வாறிருந்தும் தன் இதயத்தில் ஒளி உருவில் வீற்றிருந்த தனது ஸத்குரு பகவானை விடாமல் பற்றிக் கொண்டிருந்தார். ஐரோப்பாவில் பயணம் செய்து அநேக சொற்பொழிவுகளை நிகழ்த்தியதோடு நடைமுறைக்கு ஒத்து வரும் வகையில் ஆன்மீக உபதேசங்களை வெளியிடும் பல பத்திரிகைகளுக்கு பதிப்பாளராகவுமிருந்து அவற்றை வெளியிட்டுள்ளார். அகமுகமாகி நமது உண்மை ஸ்வரூபமான ஆத்மாவில் நிலை நிற்பதற்கு வெளியில் செய்யப்படும் பணிகள் எதுவுமே தடையில்லை என்ற உண்மையை எடுத்துக் கூறுவதில் வோல்டர் கீர்ஸ் மிகச் சிறந்த உதாரணமாக இருந்தார்.

இத்தகைய சிறந்த பக்தரோடு கடிதப்போக்குவரத்து கொள்ளும் பேறு எனக்குக் கிட்டியிருந்தது. ஒரு முறை நான் அவரிடம் "வோல்டர்! நீங்கள் பகவானுக்கு எத்தகைய மதிப்பு அளித்திருந்தீர்கள்?" என்று வினவியபோது அவர் "நான் அவரை எவ்வாறு மதிக்கிறேன் என்பது குறித்து என்னையே நான் கேள்வி கேட்டுக் கொண்டிருக்கிறேன்" என்று பதில் எழுதியிருந்தார். "அவரை நான் எவ்வாறு மதித்திருந்தேன் என்றோ இப்பொழுதும் அவரை நான் எவ்வாறு மதிக்கிறேன் என்னும் கேள்விக்கோ தெளிவான பதில் கூறுவது என்பது இயலாத காரியம். விஷயம் இதுதான். ரமண மஹர்ஷி எப்படிப்பட்டவர் என்பதை ஒருவரால் அன்றும் - ஏன் இன்றும்கூட கற்பனைகூடச் செய்து பார்க்க முடியாது. அதனால் அவரைப் பற்றி விளக்கவும் முடியாது. சோபாவில் சாய்ந்தவாறு அமர்ந்து, சாவை எதிர் நோக்கியிருந்த பலஹீனமான உடம்பன்று பகவான். அவர் கற்பனைக்கு எட்டாதவர். அஹங்காரமற்ற தூய ஒளி. அவரது உடம்பை எவ்வளவுதான் நாம் நேசித்த போதிலும் ஒளியைப் பிரதிபலித்த ஒரு வைரக்கல்லாக மட்டுமே அது இருந்தது. ஆரம்ப காலத்தில் நான் இதையெல்லாம் புரிந்து கொள்ள இயலவில்லை. அப்பொழுது எனக்கு அவர் ஒரு தெய்வீக புருஷர் என்றும் புத்தர், இயேசுகிறிஸ்து இவர்களோடு ஒப்பிடத்தக்கவர் என்றும் மட்டுமே தோன்றியது. ஆனால் நான் கேட்டிருந்த கதைகளையும் எனது அடிப்படை நம்பிக்கைகளையும் ஆதாரமாகக் கொண்டு என் மனதில் எழுந்த கற்பனை உருவங்களாகவே இயேசுநாதரும் புத்தரும் விளங்கினார்கள். ஆனால் ரமண மஹர்ஷியோ நான் அவரைப் பார்த்த முதல் நொடியிலிருந்தே உருவம் என்ற நிலைக்கு வெகு தூரத்திலிருந்தார். என்னுடைய வாழ்க்கை என்னும் கட்டுக்கதையைச் சொற்களேயின்றிச் சில நிமிடங்களில் வெடி வைத்துத் தகர்த்தவர் அவர். 'நான் யார்' என்ற அவரது பிரபலமான கேள்வி முற்றிலும் மாறுபட்ட ஒரு கருத்தை வெளிப்படுத்தியது. அவருடைய மௌனம் வெளிப்படுத்திய கருத்தின் முழுப் பரிமாணத்தையும் நான் புரிந்து கொள்வதற்கு மூன்று நான்கு வருடங்கள் பிடித்தன. 'எனக்கு, என்னுடையவை' என்ற இந்த இரண்டு வார்த்தைகளும் ஒருவேளை வாழ்க்கையின் சிக்கலை உணர்த்துகின்றன என்று கூறலாம். தன்னை ஒரு மனிதன் என்று கருதிக் கொண்டிருக்கும் ஒருவனால் மெய்ப்பொருளை அறிந்து கொள்ள முடியாது என்பதுதான் உண்மை. அதனாலேயே 'தான் ஒரு மனிதன்' என்ற அந்தக் கருத்தைக் கொள்வதற்கு பகவான் யாருக்குமே இடம் கொடுக்கவில்லை. ஸாதனையில் முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டியது - யார் கேள்விகளைக் கேட்கிறார்? யார் பகவானைக் காண வந்திருக்கிறார்? யார் ஆத்மஸாக்ஷாத்காரம் வேண்டும் என விரும்புகிறார்? அந்த நான் யார்? என்பதுதான். இதையே மீண்டும் மீண்டும் விசாரிக்குமாறு பகவான் நம்மை வற்புறுத்துகிறார்" என்று பகவானுடைய உபதேசங்களை வோல்டர் தெளிவாக எழுதியுள்ளார்.

இது பற்றி மேலும் தொடர்ந்த வோல்டர் "'எனக்கு ஆத்மஸாக்ஷாத்காரம் கிடைக்கவில்லை' என்று கூறிய ஒருவருக்கு பகவான் விடுத்த எதிர்கேள்வி 'நீங்கள் ஆத்மஸாக்ஷாத்காரம் பெறவில்லை என்பது உங்களுக்கு எப்படித் தெரிந்தது?' என்பதாகும். நீங்கள் ஸாக்ஷாத்காரம் பெறவில்லையென்பது எவ்வாறு தெரிந்தது என்ற அந்தக் கேள்வியைச் சற்று சிந்திக்க முற்பட்டால் அதற்கு விடையாக ஒரு

பூகம்பமே எழும். யார் அவ்வாறு கூறுகிறார்? என ஆழ்ந்து சிந்திக்கும்பொழுது ஆத்மா ஏற்கனவே உன்னால் அறியப்பட்ட உண்மை என்று பகவான் சுற்றி வளைக்காமல் நேரடியாக நமக்குக் கூறிய அந்த முடிவிற்கே நாமும் வந்து சேருவோம். புலன்களாலோ அல்லது மனதாலோ காணப்படும் அனைத்தும் ஒளியில் உணர்வின் ஒரு அசைவு மட்டுமே. இதை உணர்ந்து கொண்டு விட்டால் பின்னர் ஒவ்வொரு நொடியும் கடலில் ஒன்றன் பின் ஒன்றாக எழும் அலைகள் அனைத்தும் அது இசைக்கும் பாடலே என்பதை நமக்கு உணர்த்தும். இதே போன்று காணப்படும் அனைத்தும் உணர்வின் களியாட்டமே என்பதை இவ்வுலகம் தெளிவாகப் பறைசாற்றும். எனது வாழ்க்கையில் பலமுறை சரியான சமயத்தில் உண்மையே உருவான சரியான நபரை சந்திக்கும் பேறு பெற்றதால் மட்டுமே நான் கற்றவைகள் அனைத்தையும் என்னால் இப்போது புரிந்து கொள்ள முடிகிறது. அவற்றிற்குப் பதிலாக நான் சல்லிக்காசு கூட கொடுத்ததில்லை. அனைத்துமே இலவசமாக எனக்குக் கிடைத்தன. உண்மையான உபதேசம் எப்பொழுதுமே விலையின்றி கிடைக்கும். ஆனால் நீங்கள் உங்களது அஹங்காரத்தையே அதற்கு விலையாகத் தந்தாக வேண்டும். எதையெல்லாம் 'நீங்கள் என்று இதுவரை எண்ணியிருந்தீர்களோ அவற்றையெல்லாம் துறக்க வேண்டும் என்பதுதான் இதன் பொருள்'' என வோல்டர் சந்தேகத்துக்கிடமின்றி உரைத்தார்.

''பகவான் எனக்கு எதுவுமே கொடுத்ததில்லை. உதவி தேவைப்படும் ஒரு ஏழை மனிதனாக என்னைக் கருதிக் கொண்டு நான் பகவானிடம் சென்ற போது அனைத்து ஜீவராசிகளுக்கும் பிறப்பிடமான 'நான்' ஒரு கோடீஸ்வரனை விடப் பணக்காரன் என்பதை எனக்கு அவர் தெளிவுபடுத்தினார். என்னிடமிருந்து எதையுமே — ஏன் அன்பையும் மதிப்பையும்கூட அவர் எதிர்பார்த்ததில்லை. அவருடைய வெறும் ஸாந்நித்தியமே என்னிடமிருந்து வெளிக் கொண்டு வந்த உணர்வை அன்பு, மரியாதை என்ற வார்த்தைகளால் விவரிக்க முடியாது. மிக ஆழமான உணர்வை விட அது மிகவும் ஆழமாக இருந்தது. எங்கள் சந்திப்பின் மூலம் கொடுக்கல் வாங்கல் என்பது எதுவும் இருக்கவில்லை. நீண்ட நாட்களுக்கு அவர் என்னிடம் அன்பு செலுத்தியதாகவும் நான் என் இதயத்தையே அவருக்குக் கொடுத்திருந்ததாகவும் எண்ணியிருந்தேன். ஆனால் அது உண்மைக்கும் மாயைக்கும் ஏற்பட்ட மோதல் என்று உணர்ந்த போது அங்கு மாயை நிற்க முடியவில்லை. அது அடியோடு அழிக்கப்பட்டது. அவர் அழிக்க வேண்டும் என எண்ணியதால் அது அழிக்கப்படவில்லை. அவர் எதையும் வேண்டவில்லை. நான் இருந்தவாறே என்னை ஏற்றுக் கொண்டார். என்னை எவ்விதத்திலும் மாற்ற அவர் விரும்பவில்லை. பெரிய ஒளிக்கடலில் சிறிய ஒளிச்சுழலாகவே என்னை அவர் பார்த்தார். அவருக்கு இருந்த உண்மை பற்றிய உறுதியான கருத்தின் காரணமாகவே என்னால் அச்சம் ஆசையாவையும் உடைத்தெறிய முடிந்தது. எனது கற்பனையான அஹங்காரத்திற்கு ஊட்டமளிக்கும் ஆசையைக் கைவிடவும் முடிந்தது. பகவான் உண்மையில் யாரோ அவராகவும் எதாக இருக்கிறாரோ அதுவாகவும் இருந்ததால்தான் எதாக நான் இருக்கிறேனோ அதுவாகவே நான் இப்போது இருக்கிறேன் என்பதை என்னால் நிச்சயமாகக் கூற முடியும். அப்படியென்றால் பகவான் இருப்பாகவே இருந்ததால் தான் எண்ணங்களுக்கும் கற்பனைகளுக்கும் அப்பாற்பட்ட காலத்தைக் கடந்த 'நான் இருக்கிறேன்' என்ற உண்மையை அனுபவிக்கும்படியாகச் செய்தார் என்பதல்லவா பொருள்? பகவானே அசைவின்மை. அவரே மௌனம். இந்தக் கடைசி வாக்கியங்களே ஒவ்வொருவருடைய வாழ்க்கையாகவும் அமைய வேண்டும். நம் ஒவ்வொருவருள்ளும் அந்த ஒளி நிறைந்துள்ளது என்பதை ஒவ்வொரு நொடியும் நாம் நினைவில் கொள்ள வேண்டும்'' என வோல்டர் தனது அனுபவங்களைப் பற்றிக் கூறியுள்ளார்.

பெருமை மிக்க முக்தபுருஷரான இந்த வோல்டர் கீர்ஸ் தனது குழந்தைப் பிராயத்திலிருந்தே உண்மைக்காகத் தன்னுடைய வாழ்வை அர்ப்பணித்தவர். அதற்காக அவர் உழைத்தார். அவர் தேடியதால் குருவும் கிடைத்தார். சீடன் பக்குவமானால் குரு தோன்றுவார் என்று “The Secret Path” புத்தகத்தில் கூறப்பட்டுள்ள இந்த வாக்கியம் உறுதி செய்யப்பட்டுள்ளது. வோல்டரைப் போன்று நாமும் உண்முகமாவோம். இதயத்தில் இருக்கும் ஒளி ஒருவரின் வலது மார்பில் உள்ளது. கண்களை மூடிக் கொண்டு அந்தப் பிரகாசத்தைக் காண முற்படுவோம். அதுவே ஆத்மாவிலிருந்து வெளிப்படும் ஒளியாகும்.



**ஸ்ரீ ரமணாச்ரமம் – மலையிலிருந்து ஒரு பார்வை**



# நாகலக்ஷ்மி



எனது தாயார் நாகலக்ஷ்மி அருணாசலத்திலிருந்து தொலைவிலிருந்த கிராமத்தில் வாழ்ந்த சூதுவாதற்ற எளிமையான சுபாவமுடைய பெண். குழந்தைத்தனமாக இருந்துவிட்ட அவர், மூன்று அல்லது நான்காம் வகுப்பு வரைதான் படித்திருப்பார். பகவானின் தம்பியின் மகனான எனது தந்தை T. N. வேங்கடராமனைத் தனது பதின்மூன்றாவது வயதில் மணந்து கொண்டார். எனது தாய்வழிப் பாட்டனார், பகவானுக்கு மாமா என்ற முறையில் உறவுதான் என்றாலும் என் தாய் நாகலக்ஷ்மிக்கு, அது பற்றி எல்லாம் அப்போது தெரியாது. பகவானுடைய சகோதரியும் என் தந்தையின் வளர்ப்புத் தாயுமான அலமேலு அம்மாள்தான் பகவானுடைய அருமை பெருமைகளை எல்லாம் எனது தாய்க்கு எடுத்துரைத்துள்ளார். தனக்குத் திருமணமான போது தானும் பகவானைக் காண விரும்புவதாக நாகலக்ஷ்மி, அலமேலு அம்மாளிடம் தெரிவித்தார். அக்காலத்தில் பகவானின் தமிழ் நூல் திரட்டில் குறைவான பாடல்களே இடம் பெற்றிருந்தன. அந்தப் புத்தகத்தை நாகலக்ஷ்மியிடம் கொடுத்து, “இவையனைத்தையும் நீ மனப்பாடம் செய்து முடித்த பின்னர் பகவானைப் பார்க்க நான் உன்னை அருணாசலத்திற்கு அழைத்துச் செல்கிறேன்,” என அலமேலு அம்மாள் கூறினார்.

அலமேலு அம்மாளின் சொற்களை நன்கு மனதில் பதிய வைத்துக் கொண்ட என் தாய், சில வாரங்களுக்குள்ளேயே நூல் திரட்டிலிருந்த பாடல்கள் அனைத்தையும் மனப்பாடம் செய்து விட்டார். பாடல்களில் கூறப்பட்ட தத்துவங்கள் எதையும் அப்போது அவரால் புரிந்து கொள்ள முடியவில்லை, என்றபோதும் அவை நாகலக்ஷ்மியின் இதய வீணையை மீட்டி ஆன்மீக அலைகளை எழுப்பின. தனக்குத் திருமணமாகி ஓராண்டிற்குப் பின்னர் 1930-ல் தனது பதினான்காவது வயதில் பகவானைத் தரிசிக்கும் பேறு அவருக்கு வாய்த்தது. பகவான் நீண்ட நேரம் நாகலக்ஷ்மியை நோக்கியபடியே இருந்தார். பின்னாளில் அவர் என்னிடம் “பகவான் பார்த்த பார்வை ‘உனக்கு இங்கு வர இத்தனை காலம் தேவைப்பட்டதா?’ எனக் கேட்பது போல இருந்தது,” என்று கூறினார். பகவானால் தேர்ந்தெடுக்கப்பட்ட மற்ற பக்தர்களுக்கும் இதே போன்ற அனுபவம் அவர் முன் நிற்கும்போது ஏற்பட்டது - இது அவர்கள் அனைவரும் பகவானுடைய அருள் வளையத்திற்கு உட்பட்டவர்கள் என்பதை உறுதிபடுத்தியது. ஆனால், பகவானோ, அனைவருமே தனக்கு உறவினர் என்பது போன்ற சமநோக்குடனேயே ஒவ்வொருவருடனும் பழகினார். ஆன்மீக நிலையில் தனித்தன்மையுடன் விளங்கிய அவர், ஒவ்வொருவருடனும் கனிவோடு பழகிய விதத்தில் தனித்து நின்றார் என்றால் மிகையாகாது. பகவான், தனது தங்கையிடம் ஆழமான சகோதர பாசத்தை வெளிப்படுத்திய அதே சமயத்தில் தனது தாயிடம் மிகுந்த மரியாதையைக் காட்டினார். பேரக் குழந்தைகளாகிய எங்களிடம் பகவான் என்னும் விதத்திலோ அல்லது ஆசிரியர் என்ற முறையிலோ பழகாமல் சாதாரணமான பாட்டனார்களைப் போன்றே மென்மையாக ஆனால் அதிகார தோரணையில் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டுமெனக் கற்றுத் தந்தார். அடிக்கடி எங்களை அழைத்து, “இங்கே வந்து என்னுடன் அமர்ந்து கொள்ளுங்கள்” எனக் கூறுவார். அந்த நாட்களில் மாமனார் மருமகள் இருவருமே ஒருவரோடொருவர் கலகலப்பாக சகஜமாகப் பழகும் வழக்கம் இருக்கவில்லை. அதனால் அம்முறையிலேயே பகவான் என் தாயாரிடம் பழகினார் என்றபோதும் தனது பார்வையின் மூலமும்



ஸாந்நித்தியத்தாலும் ஆன்மீக ஆனந்தத்தை அவருக்கு அளித்து வந்தார். பகவானுடைய அருள் வலைக்குள் என் தாயும் நிச்சயமாக இருந்தார் என்பதில் ஐயமில்லை.

தெற்கே சற்று தூரத்தில் என் தந்தைக்கு வேலை கிடைத்த போது என் தாயும் அவரோடு செல்ல நேர்ந்தது. பகவானுடைய ஆன்மீக ஸாந்நித்தியத்தில் தான் எப்போதும் இருக்க வேண்டும் என்று நாகலக்ஷ்மி இடைவிடாது பிரார்த்தித்து வந்தார். அவருடைய அனுக்ரஹமே நாம் அவரது ஆன்மீக ஸாந்நித்தியத்தில் இருக்கிறோம் என்பதற்கான அறிகுறி. அவருடைய ஏழு குழந்தைகளில் 1934-ல் முதன் முதலாகப் பிறந்த மகனைப் பகவானிடம் எடுத்துச் சென்ற போது அவனுக்குச் சுந்தரம் எனப் பெயர் வைத்தார் அவர். இந்த சுந்தரம், தன் உடலை விடும் வரை, அதாவது 21 ஜூலை 2020

வரை ரமணாச்ரமத் தலைவராக இருந்தார். 1936-ல் நான் அடுத்தபடியாகப் பிறந்தேன். என்னைப் பகவானிடம் கொண்டு சென்ற போது “இவன் பெயர் வைக்கும் சிரமத்தை எனக்குத் தராமல் பெயருடனேயே பிறந்திருக்கிறான்,” என்று பகவான் கூறியதற்குக் காரணம் நான் கணேசரின் பிறந்த நாளான கணேச சதுர்த்தியன்று பிறந்ததுதான். இவ்வாறு எனக்குக் கணேசன் என்ற பெயர் சூட்டப்பட்டது. என் உடன் பிறப்புக்கள் அனைவருக்குமே பகவான்தான் பெயர் சூட்டினார். ஸ்ரீ கணேச பகவானின் இளைய சகோதரனுடைய பெயரான சுப்ரமண்யன் என்ற பெயரை என் தம்பிக்கு வைத்தார். எனது சகோதரிகள் நால்வருக்கும் லக்ஷ்மி, அழகம்மாள், மங்களம், ஸரஸ்வதி என்ற பெயர்கள் சூட்டப்பட்டன.

எனக்கு இரண்டு வயதாகயிருந்த போது 1938-ல் எங்கள் குடும்பம் முழுவதுமே அருணாசலத்திற்கு இடம் பெயர்ந்தது. நாங்கள் ஊருக்குள் வீடு எடுத்துக் கொண்டோம். எனது தாய், வீட்டு வேலைகள் என்ற சூழலில் அகப்பட்டுக் கொண்டு குடும்பப் பராமரிப்பிலும் ஈடுபட்டிருந்தார் எனினும் ஆன்மீக ஸாதனைகள் பயில எப்படியோ நேரத்தை ஒதுக்கிக் கொள்வார். பகவானைக் கடவுளாகவே பார்ப்பதற்கும் எங்களால் இயன்ற வரை அவரது ஆற்றல் மிக்க ஸாந்நித்தியத்தின் சக்தியை உள்வாங்கிக் கொள்வதற்கும் அவர் எங்களைப் பயிற்றுவித்தார். அந்தச் சமயத்தில் அவர் கூறியதன் உட்பொருளை முழுமையாக எங்களால் உணர்ந்து கொள்ள முடியவில்லை. ஹாலில் அமர்ந்திருந்த சமயங்களில் பகவான் என் தாயாரைக் கவனிக்க மாட்டார் என்பதோடு சற்றுக் கண்டிப்பாகவும் இருப்பார்.

ஆச்ரமத்தில் சமையல் செய்து வந்த பெண்மணிகள் பகவானுடைய ஆசிகளைப் பெற ஆவலோடு இருப்பார்கள். அவர்கள் காலை ஐந்து மணிக்கு ஊருக்குள்ளிருந்து, ஆச்ரமத்திற்கு வந்து விடுவார்கள். அன்றாடப் பணிகளை முடித்துவிட்டு வீடு திரும்ப மாலை ஆறு மணியாகிவிடும் என்பதால் பகவானை ஹாலில் பார்ப்பதற்கோ அல்லது அவரது உபதேசங்களைக் கேட்பதற்கோ எதற்கும் அவர்களுக்கு நேரமிருக்காது. அதனால் மதியம் பன்னிரண்டு மணியிலிருந்து இரண்டு மணிக்குள் பகவானே சமையலறைக்கு வருவார். இரவுக்குத் தேவையான உணவைத் தயாரிக்க ஆலோசனை அளிப்பதற்காக அவர் வந்தாலும் உண்மையில் அப்பெண்மணிகளுடன் ஆன்மீக உபதேசங்களைப் பகிர்ந்து கொள்ளும் நேரமே அது. அதன் பயன் என் தாய்க்கும் கிடைக்க வேண்டுமென்பதற்காக அவர்கள் சில சமயங்களில் என் தாயாரையும் அவர்களுடன் தங்க வைத்துக் கொள்வார்கள். பகவான் உள்ளே வந்தவுடன் அவரை வணங்குமாறு அப்பெண்கள் என் அன்னையைத் தூண்டுவார்கள். பகவான் தனக்கு அளித்ததும் வாழ்க்கையில் நடைமுறையில் கடைப்பிடிக்க வேண்டியதுமான மூன்று உபதேசங்களைப் பல வருடங்களுக்குப் பின், என் தாயார் என்னோடு பகிர்ந்து கொண்டார்.

குடும்பத்தோடு ரமணாச்ரமத்திற்கு வருபவர்களில் பெண்களும் குழந்தைகளும் பொழுது சாய்ந்த பின் ஆச்ரமத்தில் தங்க அனுமதியில்லை என்பதால் அவர்கள் எங்கள் இல்லத்தில் தங்குவார்கள். என் தாயார் அவர்களைக் கவனித்துக் கொள்வார். (சில பெண்கள் எச்சம்மாள் இல்லத்திலும் தங்குவதுண்டு). ஒரு சமயம் என் தாயின் இளமைப் பருவத்தில் ஒரு இளம்பெண் தனது பெற்றோருடன் எங்கள் வீட்டிற்கு வந்திருந்தாள். இந்தப் பெண்ணுக்கு அப்போது பத்தொன்பது வயதிருக்கும் எனது தாய்க்கும் ஏறத்தாழ அதே வயதுதான். இளமையிலேயே தனது கணவனைப் பறி கொடுத்திருந்தாள் அந்தப் பெண். நெருங்கிய நண்பர்களாகிவிட்ட அப்பெண்ணும் என் தாயும் ஒரு நாள் ஆச்ரம குளத்தில் குளிக்கச் சென்றனர். குளித்த பின் அந்தப் பெண் அணிந்து கொண்ட

புடவை மிகவும் அழகாக இருப்பதாகத் தோன்றவே என் தாய் புடவையைப் புகழ்ந்து யதார்த்தமாக அவளிடம் தன் அபிப்பிராயத்தைக் கூறினார்.

ஆனால் அந்தப் பெண், தான் ஊருக்குத் திரும்பியவுடன் எனது தாயின் முகவரிக்கு அதைப் போன்ற இரண்டு புடவைகளைத் தனது பரிசாக 'பார்ஸலில்' அனுப்பியிருந்தார். தபாலில் வருபவை அனைத்துமே தனிப்பட்டவர்களுக்கானது என்றாலும் பகவானிடம் கொடுக்கப்படுவது அன்றைய வழக்கமாக இருந்தது. பின்னர் பகவானிடமிருந்து பிரசாதமாக உரியவர்கள் அவற்றை பக்தியுடன் பெற்றுக் கொள்வர்.

அன்று மதியம் பகவான் சமையலறைக்கு வந்தபோது வழக்கம் போலில்லாமல் சற்றுக் கடுமையாக இருப்பது போன்று தோற்றமளித்தார். எனது தாயார் அவரை வணங்க முற்பட்ட போது, "நாம் ஆச்ரமத்தில் வாழும் பொருட்டு இங்கு வந்துள்ளோம். நம்மிடம் இருப்பதை வைத்துக் கொண்டு திருப்தியுடன் இருக்க வேண்டும். விலையுயர்ந்த ஆடை அணிகலன்களுடன் பல பணக்காரர்கள் ஆச்ரமத்திற்கு வருவார்கள். அந்த ஆடம்பரங்களில் நாம் மதி மயங்கிவிடக்கூடாது. மற்றவர்கள்



**(இடம் – வலம்) நாகலக்ஷ்மி, கணேசன், ஸ்வாமி சாந்தானந்தா, T.N. வேங்கடராமன்**

அணிந்திருப்பதைப் பார்த்து நாமே அவற்றை அணிந்து கொண்டது போன்ற திருப்தியைப் பெற வேண்டும். இங்கு வாழ்வதற்கு ஆசைகளற்ற மனநிலையே மிகவும் உகந்தது. அப்போதுதான் புறவுலகிலிருந்து நாம் பெறக் கூடியவைகளும், இழக்கக் கூடியவைகளும், விருப்பு வெறுப்புக்களும் நம்மைப் பாதிக்காமல் இருக்கும். திருப்தியுடன் இருக்க வேண்டும். உன்னுடையதல்லாத எதற்கும் ஆசைப்படாதே,'' எனப் பகவான் அறிவுரை வழங்கினார். அவரது சொற்களைக் கேட்ட என் தாயார் மனமுடைந்து போய் அழத் துவங்கிய நிலையில் சமையல் செய்யும் பெண்மணிகள் அவருக்குப் பரிந்து பேசும் விதமாக, ''நாகுவின் மீது தவறேதும் இல்லை. புடவைகள் வேண்டுமென அவள் கேட்காதபோதும் அவர்களாகவே அனுப்பியுள்ளனர். பகவானே! நாகலக்ஷ்மி அழுத வண்ணமிருக்கிறாள்!'' என உரைத்தனர். பின் பகவான் என் தாயை நோக்கி ''போகட்டும் போ. உன்னுடைய நன்மைக்காகவே நான் கூறினேன்,'' என்றார். இந்த உபதேசத்தை என் தாயார் தனது வாழ்நாள் முழுவதும் மறக்கவில்லை என்பதுடன் எங்களுக்கும் கற்றுத் தந்தார். நடைமுறைப்படுத்த வேண்டிய இத்தகைய அறிவுரைகளையே பகவான் அடுக்களையில் தந்தார்.

ஆச்ரமத்துக்கு வரும்போதெல்லாம் என் தாயார் சமையற்கட்டுக்குச் சென்று ஆச்ரம சமையலுக்கு உதவுவாள். புடவை பார்ஸல் வந்த மறுநாள் வழக்கம் போல சமையலறைப் பக்கம் விஜயம் செய்த பகவான், என் தாயாரைக் கண்டதும் அவருக்கே உரித்தான பாணியில் மெல்லக் கூறினாராம்: ''பிறத்தியார் நல்ல நகை நட்டு போட்டுண்டிருந்தா அதை நாமே போட்டுண்டிருக்கறதா நினைச்சுக்கணும். இன்னொருத்தி புடவை அழகா இருப்பதைப் பார்த்தா, நீயே அதை அணிஞ்ச மாதிரி பாவிக்கணும்''. என் தாயார் கண் கலங்கி, ''நான் புடவை வேணும்னு கேட்கலை. நன்னா இருக்குன்னு மட்டும் தான் சொன்னேன்'' என தழுதழுத்தாராம். அக்கணமே என் தாயாருக்கு பகவானின் அச்சின்னஞ்சிறு உரை ஓர் மகா உபதேசமாகிவிட்டது.

கணவனைக் கவனித்துக் கொண்டு குழந்தைகளைப் பேணி வளர்த்து வீட்டிற்கு வந்த விருந்தினர்களையும் உபசரித்து வந்தார் என் அன்னை. இருந்தபோதும் பகவானது உபதேசங்களிலிருந்து விலகாமல் அவற்றைக் கவனமாகக் கடைப்பிடித்தார். உடலும் மனமும் உலகக் கடமைகளில் ஈடுபட்டிருந்த போதும், அவரது இதயம் பகவானுடன் பிணைக்கப்பட்டிருந்தது. எனது தாயின் மனநிலை அப்படிப்பட்டது என்று பகவானின் பழம்பெரும் பக்தர்களான கனகம்மாளும் குஞ்சு ஸ்வாமியும் கூட உறுதிபடக் கூறியுள்ளனர்.

ஒரு நாள் என் தாயாரிடம் ''சிறந்த தபஸ்விகளும், ஸாதுக்களும், மஹான்களும் கிரிவலம் செய்வதற்கு அருணாசலத்திற்கு அடிக்கடி வருகிறார்கள். அவர்களுடைய ஆன்மீக தேஜஸ் மக்களை எப்போதும் ஈர்க்கவல்ல சக்தி கொண்டது. பொது ஜனங்களால் தங்களுக்கு எவ்விதத் தொந்தரவும் நேராமல் கிரிவலம் செய்யும் பொருட்டு அவர்கள் பிச்சைக்காரனைப் போன்றோ பைத்தியக்காரனைப் போன்றோ உருமாறி வருவார்கள். அதனால் யாராவது வாசலில் வந்து நின்று உணவு யாசித்துக் கையைத் தட்டினார்களென்றால் தயக்கமோ தாமதமோயின்றி என்ன இருக்கிறதோ அதை அவர்களுக்குக் கொடு. அவர்களை எடை போட்டு மதிப்பிட முயற்சி செய்யாதே,'' என்று பகவான் அறிவுறுத்தியிருந்தார். இந்த உபதேசத்தை என் அன்னை மிகுந்த ஆர்வத்துடன் கடைப்பிடித்து வந்தார். ஸாதுக்களும் பிச்சைக்காரர்களும் எங்கள் இல்லத்திலிருந்து ஒருபோதுமே வெறும் கையோடு அனுப்பப்பட மாட்டார்கள்.

மேற் கூறியவற்றையெல்லாம்விட மூன்றாவது உபதேசம் மிக முக்கியமானது. ஏனெனில் அது என் தாயாருக்காகவே தனிப்பட்ட முறையில் கொடுக்கப்பட்டது. ஒரு நாள் சிந்தனையில்

ஆழ்ந்திருந்த நிலையில் பகவான் சமையலறைக்குள் வந்தார். இம்மாதிரியாக அவர் அகமுகமாக உள்ளபோது பகவானை அணுகுவதே மிகவும் கடினம் என பழைய பக்தர்கள் கூறக் கேட்டிருக்கிறேன். அன்று சமையல் செய்யும் பெண்கள் மிகுந்த தயக்கத்துடன் அவர் முன் வராமல் ஒதுங்கியிருந்தனர். மிகவும் பயங்கரமான நரஸிம்மாவதாரத்தைப் பகவான் விஷ்ணு எடுத்த சமயத்தில் அச்சத்தால் அவர் முன் வரப் பயந்து ஒதுங்கிய தேவர்கள், பிரஹலாதனை அவர் முன்னே தள்ளி விட்டதைப் போன்று சமையலறையில் இருந்த பெண்கள் எனது அன்னையைப் பகவான் முன்னர் தள்ளி விட்டனர். அவர் வழக்கம் போல் பகவானை வணங்கி நின்ற போது பகவான், "மயக்கத்தில் இருக்கும்போது ஒருவர் இறக்க நேர்ந்தால் நிச்சயமாக அவர் மீண்டும் வேறு உடலெடுத்துப் பிறப்பார் என்பதற்கான அறிகுறியாகும் அது. ஆனால் உணர்வோடு இருக்கும்போது ஒருவர் மரணத்தைத் தழுவ நேரிட்டால் அவருக்கு மறுபிறவி இல்லாமல் போவதற்கும் வாய்ப்பு உள்ளது. இதனால் உணர்வோடு இறப்பவர்கள் அனைவருமே மறுபிறவி எடுக்கமாட்டார்கள் என்று அர்த்தமில்லை. உணர்வோடு வாழ்ந்து கொண்டிருக்கும் போதே ஒருவர் உணர்வுடன் இறக்க வேண்டுமென்பதை எப்போதும் நினைவில் கொள்ள வேண்டும். அத்தகைய நிலை ஒருவருக்கு அமைய வேண்டுமானால் தீவிரமான சரணாகதியை ஒருவர் பழக வேண்டும். பூரணமாகத் தன்னைச் சரணடைந்து விட்ட ஒருவரை குரு ஒருபோதும் கைவிடமாட்டார்," எனக் கூறினார்.

பகவானிடமிருந்து எனது தாயார் பெற்ற மூன்று உபதேசங்களில் முதலாவது எவ்வாறு வாழ்வது என்பது பற்றியும் இரண்டாவது நடைமுறையில் அதை எப்படிக் கொண்டு வர முடியும்



**பேரக்குழந்தைகளுடன்**

என்பது குறித்தும் மூன்றாவது மரணத்தை எவ்வாறு வரவேற்க வேண்டும் என்பது பற்றியுமாகும். இம்மூன்று உபதேசங்களுமே பொதுவாக எல்லா ஸாதகர்களுக்கும் விலைமதிப்பற்றதும் இன்றியமையாததுமாகும். பகவானுடைய அந்த ஒப்பற்ற ஞானத்தைப் பெற்ற சமையல் பெண்கள் எல்லையில்லா மகிழ்வெய்தினர். அவர்கள் என் தாயிடம், "உன்னால்தான் எங்களுக்கும் இந்தச் சிறப்பான உபதேசம் கிடைத்துள்ளது. பகவான் இதுவரை இவ்விஷயம் பற்றி யாரிடமும் கூறியதில்லை. இது உனக்காகப் பிரத்தியேகமாகத் தரப்பட்ட உபதேசம். அதை இதயத்தில் பத்திரமாகப் பாதுகாத்துக் கொள்," என்று கூறித் தங்கள் சந்தோஷத்தை வெளிப்படுத்தினர். வாழ்க்கையின் இறுதி நொடி வரையில் பகவானின் இந்த உபதேசங்களை என் தாய் உறுதியுடன் பற்றியிருந்தார். பகவானுடைய உபதேசங்களை இரண்டு பரிமாணங்களில் அவர் புரிந்து கொண்டிருந்தார். பகவானிடமிருந்து வெளிப்பட்ட புனித சொற்களின் ஆற்றலை அவர் உணர்ந்து கொண்டதால் அவரது நூல் திரட்டில் இருந்த அனைத்துப் பாடல்களையும் மனப்பாடம் செய்ததுடன் எங்களையும் ஊக்குவித்துப் படிக்கும்படி செய்தார். இரண்டாவதாக கிரி பிரதக்ஷிணம் செய்வதன் முக்கியத்துவத்தை அவர் புரிந்து கொண்டிருந்தார். உடலில் ஆரோக்யம் மிகவும் குன்றிப் போன நிலையில் படுத்த படுக்கையாகும் வரை அவர் ஊக்கத்துடன் கிரிவலம் செய்து வந்தார்.

1960-ல் நான் ரமணாச்ரமம் வந்த பின்னர் இரவு எட்டு மணிவரை அங்கு வேலைகளைப் பார்த்துவிட்டு பிறகு வீடு திரும்பி, எனது தாய் அளித்த உணவை உண்ட பின் கிரிவலம் வரும் வழக்கத்தைப் பல ஆண்டுகளாக நான் தனியாகவே கடைப்பிடித்து வந்தேன். என் தாய் எனது உபகுரு, ஏனெனில் நான் தொட்டிலில் கிடந்த நாள் முதல் ரமண ஸ்துதி பஞ்சகத்திலுள்ள கீழ்க்காணும் தாலாட்டைப் பாடி எனக்குப் பகவானை அறிமுகம் செய்து வைத்தவர் அவர்.

ரமண ஸ்துதி பஞ்சகம் - 3 ஆவது பாடல்

பொன்னொளிர் வடிவினானே பூரண வதனத் தானே
தன்னருஞ் சுவாறு பூதி தரையெலா மணக்க வேழை
உன்னரும் புகழைக் கேட்டிவ் வுலகெலாந் தேடி வந்தேன்
என்னரு ளிறையே ஞான ரமணனே ஜோதிக் குன்றே (1)

ஜோதியே வடிவாய் நின்ற சோணமா சைலந் தன்னில்
வேதிய வுருவி னோடு விருபாக்ஷ குகையின் மேவும்
ஆதியே யனாதி வைப்பே யமலனே ரமணா வென்னைச்
சோதியா தாண்டு கொள்வாய் சிற்பர சொரூப நீயே (2)

தந்திடாய் தளிர் பொற் பாதந் தமியனேன் சிரத்திற் சூடி
நொந்திடா வாழ்வ தெய்தி நொடியதிற் பவநோய் போக்க
அந்தணா வமரர் காணா வருணைவாழ் ரமணா மோனா
எந்தநா ளடைவ னுன்னை யிருவிழி மணியே சொல்லாய் (4)

தேவனே ரமணா பாதந் தேடினேன் றெவிட்டா ஞான
பாவனா தீத மோனப் பரம்பொரு ளுருவி னானே
ஜீவனுஞ் சிவமு மொன்றாய்த் தேக்கிய வுளத்தி னானே
சாவதும் பிறப்பு மில்லாத் தத்துவ முடிவாய் நின்றோய் (9)



**ஸ்ரீ பகவானின் சகோதரி அலமேலுவுடன்**

அந்தக் காலத்தில் பகவான், குரு அல்லது ஆத்மா இவை ஒன்றும் எனக்குப் புரியவில்லை. பகவானைப் புகழ்ந்து பாடும் இத்தாலாட்டு அவருடைய உணர்வின் விதையை என்னுள் விதைத்து எனது குருவின் தாமரைப் பாதங்களில் நிலைத்து நிற்க இறுதியில் எனக்கு வழி காட்டியது.

எனக்கு ஒன்றரை வயதாக இருக்கும் போது ஹாலில் இருந்த சமயங்களில் என் தாய் தனது மடியில் என்னை வைத்துக் கொண்டிருப்பார். பின்னர் நான் பகவானிடம் தவழ்ந்து செல்லும் பொருட்டு அவருடைய சோஃபா இருக்கும் திசையை நோக்கி என்னை மெதுவாகத் தள்ளி விடுவார். நான் முயற்சி செய்து சோபாவின் மீது ஏறப் பார்ப்பேன். ஆனால் பகவானுடைய தொண்டர் என்னைத் தூக்கி மீண்டும் என் தாயின் மடியில் வைத்து விடுவார். இது தினமும் நடக்கும் ஒரு விஷயம். ஒரு நாள் சோஃபாவை நெருங்கி ஏறி விட்டதையும் பார்த்துக் கொண்டே இருந்த பகவான், தனது இடது காலால் என்னைத் தாங்கிப் பிடித்துக் கீழே விழாதபடி கவனித்துக் கொண்டார். பின் தனது வலது காலை என் தலைமீது அழுத்தியவாறு “இதைச் சாதிப்பதற்கு இவன் தினமும் முயற்சி செய்து கொண்டிருந்தான். இன்று தடை எதுவும் இல்லாமல் போகவே வெற்றியும் பெற்றுவிட்டான்,” என என்னை மெச்சி உரைத்தார். என் அன்னையினால் பகவானுடைய பிரசாதமாக அவரது திருப்பாதம் என் தலைமீது படும்படியான பாக்கியம் எனக்குக் கிடைத்தது. பகவான் உண்மையில் யார் என்பதை எனக்குச் சுட்டிக் காட்டிய என் தாயார்,

“உன் உடம்பை மட்டுமே நான் பெற்றெடுத்தேன். உனது உண்மையான தாயார் பகவான்தான்,” எனக் கூறுவார். இவ்வாறு பகவானைப் பற்றிய உண்மையை - ‘அவர் உணர்வே’ என்பதை நான் உணருமாறு செய்ய என்னைப் பயிற்றுவித்தவர் அவரே.

எனது தந்தைக்கு 1965-ல் பக்க வாதம் வந்து, வலது பாகம் லேசாகச் செயலிழந்து விட்டது. சென்னையிலிருந்து அவருக்குச் சிகிச்சையளிக்க வந்த டாக்டர் T. N. கிருஷ்ண ஸ்வாமி என்னைத் தனியே அழைத்து, “இது உன் தந்தைக்கு இரண்டாவது முறையாக வந்துள்ளது. முதல் முறை இவ்வாறு நேர்ந்த விஷயத்தை நான் உன்னிடம் கூறவில்லை. மூன்றாவது முறை இதே போன்று வந்தால் அது ஆபத்தில் முடிய வாய்ப்புண்டு. அதனால் அவரை ஜாக்கிரதையாகக் கவனித்துக் கொள்ளுங்கள்,” என்று அவர் கூறியபோது இடியினால் தாக்கப்பட்டது போன்று ஓடிச் சென்று என்

தாயிடம் விஷயத்தைக் கூறினேன். அவர் சிறிதும் பதற்றமின்றி மிக அமைதியாக, “பகவானுடைய ஸமாதிக்குச் சென்று பிரார்த்தித்து வா,” என்று கூறினார். அவர் அறிவுரைப்படி நானும் பகவானிடம் நடந்ததைக் கூறிப் பிரார்த்தித்தேன். அந்த நாட்களில் பகவானுடைய ஸமாதி திறந்த வெளியின் நடுவே இருந்த ஒரு சிறிய கூரை வேய்ந்த குடிசையில் இருந்தது. நான் அதற்கு முன்னால் தலையணையோ போர்வையோயின்றி வெறும் பாயில்தான் படுத்திருப்பேன். இந்த அனுபவம் எனக்குப் பிடித்ததாகவும் இருந்தது. முன்பு பகவான் மூன்று நான்கு முறை என் கனவில் தோன்றியிருந்தார். விழிப்பு நிலையில் இருப்பதைப் போன்றே அக்கனவுகளும் மிகத் தெளிவாக இருந்தன. இம்முறையும் கனவு தெள்ளத் தெளிவாக இருந்தது. “கணேசா! எதற்காக அழுது கொண்டிருக்கிறாய்?” என பகவான் கனவில் கேட்டபோது ‘என் தந்தை ஒருவேளை இறந்துவிடக்கூடும். அதை என்னால் தாங்கிக் கொள்ள இயலாது’ என நான் பதிலிறுத்தேன். உடனே பகவான் “கவலைப் படுவதற்கு எதுவுமில்லை,” எனக் கூறித் தன் கையில் வைத்திருந்த மூன்று பேரிக்காய்களில் ஒன்றை என்னிடம் தந்து “இதை வெங்கிட்டுவிடம் (என் தந்தையின் செல்லப்பெயர்) கொடுத்து உண்ணச் சொல்” என்று கூறினார். தொடர்ந்து “இதை நாகுவிடம் (என் தாயின் செல்லப்பெயர்) கொடுத்துச் சாப்பிடும்படி கூறு” எனத் தெரிவித்து இரண்டாவது பேரிக்காயை அளித்த பின்னர் மூன்றாவதாக ஒன்றைத் தந்து, “இதை நீயே சாப்பிடு. எல்லாம் சரியாகிவிடும்,” எனத் தைரியம் அளித்தார். என் கனவு கலைந்த போது அதிகாலை மணி இரண்டு. இருந்தும் நான் என் வீட்டிற்கு ஓடிச் சென்று என் தாயிடம் கனவைப் பற்றித் தெரிவித்தேன். மறுதினம் பேரிக்காய்களை வாங்க முயற்சி செய்தோம். ஆனால் வெற்றி கிடைக்கவில்லை. சில நாட்களுக்குப் பின் அவை கிடைத்தபோது பகவானின் அறிவுரைப்படியே செய்தோம். என் தந்தை பூரண நலம் பெற்றதுடன் மூன்றாம் முறையாக எவ்வித பாதிப்பும் ஏற்படவில்லை. -

இருப்பு, உடலையும் மனதையும் கடந்தது. எப்போதும் சுதந்திரமாக இருக்கும் அதனுடன் உன்னை இணைத்துக் கொண்டு மரணத்தைத் தழுவியே ஆக வேண்டுமென்ற நிலையிலுள்ள உடம்பையும் மனதையும் இயற்கை நியதிப்படி அழிந்து போக அனுமதி கொடு. அவற்றை அளவுக்கு மேல் சீராட்டாமல் இருந்தால் அவை உனக்கு அடிமையாக இருக்கும். உனது இருப்பின் மீது மட்டுமே உன் முழு கவனத்தையும் செலுத்தினால் நீ எஜமானனாக இருப்பாய். உனக்கு எனது ஆசிகள்,” எனக் கூறி மேலும் என்னை ஆசீர்வதிக்கும் விதமாக, “பகவானது ஆசிகள் உனக்கு நிச்சயமாக உண்டு. நான் உனக்கு உடம்பைத் தந்தேனே தவிர அவர்தான் உன் உண்மையான தாய்,” என உரைத்தார். மூன்றாவது முறையாக ஆசீர்வதித்தபோது, “பகவானது உபதேசங்களைக் கடைப்பிடிப்பதன் மூலம் அவருக்குத் தொண்டு செய். அவரது உபதேசங்களே அவருடைய அருள்,” என அவர் கூறி முடித்த போது நான் கட்டுப்படுத்த முடியாமல் அழுதேன். அப்போது என்னைச் சமாதானம் செய்து, “கணேசா! பகவானுடைய புனித ஸாந்நித்தியத்தை நான் இடைவிடாமல் அனுபவிக்கிறேன். அது ஒன்றே எனக்குப் போதும்,” என்று கூறிய அவர் முழு உணர்வுடன் அருணாசலத்தின் அடியில் உறவினர்கள் மத்தியில் உடலை நீத்தார். என் தாயின் உடலைச் சுமந்து செல்ல உதவினேன். ஆத்மானுபூதி பெற்ற உண்மையான பக்தையாகிய என் தாயின் சடலத்திற்குரிய இறுதிச் சடங்குகளை நாங்கள் செய்து முடித்தோம்.

மூத்த பக்தர்களில் ஒருவரான குஞ்சு ஸ்வாமி என் தாயாரைப் பற்றிக் கூறும் போது, “எந்த வயதினரானாலும் ஆச்ரமத்திலுள்ளவர்கள் அனைவருமே அவரைத் தாயாகவே மதித்தனர். சொல்லப் போனால் நாகலக்ஷ்மி 1939-ல் ஆச்ரமத்திற்கு வந்த பின்னரே அதன் செல்வச் செழிப்பு மேலும் சிறந்து விளங்கியது. ‘நமது மஹாலக்ஷ்மி அவரே’” என்று கூறியுள்ளார். அந்நாட்களில்

மலைமீது ஆன்மீக ஸாதனைகளில் ஈடுபட்டிருந்த தெரேஸா ரெகோஸ் என்ற பிரெஞ்ச் நாட்டுப் பெண்மணி பின்னர் என்னிடம், "உங்கள் தாய் உடலை விட்ட அன்று நான் மலை மீது இருந்தேன். அன்று பட்டப்பகலில் பிரகாசமான ஒளிக்கீற்று ஒன்று கோயிலின் மேல் பாய்ந்து செல்வதைக் கண்டேன். அப்போது எனக்குத் திடீரென உங்கள் தாய் நாகலக்ஷ்மியின் நினைவு வந்தது. அவர் அருணாசலத்துடன் ஒன்றியிருக்க வேண்டுமென எனக்குத் தோன்றியது. ஆம். மெய்ப்பொருளான ஆத்மாவோடு — அருணாசலத்தோடு நாகலக்ஷ்மி கலந்து விட்டார்," என அவர் கூறினார்.



# ஸமர்ப்பணம்

எனக்குள் உயிர்த் துடிப்பாக இன்றும், என்றும் விளங்கும் எழுபதுக்கும் மேற்பட்ட பகவானின் அணுக்கத் தொண்டர்களுக்காக, ஹ்ருதயம் நன்றியால் நிறைந்துள்ளது.

அந்த பக்தர்கள் அவர்களைப் பற்றியே என்னிடம் பேசினால் கூட, அதில் ஸத்குரு பகவான் ரமணரிடம் அவர்களுக்கு இருந்த பக்தி, அர்ப்பணிப்பு மற்றும் முழு சரணாகதியே முக்கியமாக இழையோடும்.

அன்பான வாசகர்களே, இந்த திவ்யமான நேருக்கு நேர் உரையாடல்களை இந்தப் புத்தகத்தால் உங்களுடன் பகிர்ந்து கொள்வதை எனக்குக் கிடைத்த பெரும் பேறாகக் கருதுகிறேன்.

குருவின் திவ்ய சரணத்தைத் தீவிர விழைவோடு நாடிய இந்தச் சிறப்பான பக்தர்களுக்கு (அவர்களில் பலர் என்னுடன் நெருங்கிய இணக்கமுள்ளவர்கள்) என் ஹ்ருதயம் ஆழ்ந்த நன்றியை எப்போதும் சொல்லிக்கொண்டே இருக்கும்.

அதே போல, இந்தப் புத்தகத்தில் நான் குறிப்பிடாத அணுக்கத் தொண்டர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி. அவர்கள், நான் எழுத்தில் குறிப்பிட்டுள்ளவர்களை விட உண்மையில், எந்த வகையிலும் சிறப்பு குறைந்தவர்கள் இல்லை. இந்த 'எழுத்தில் வராத' பக்தர்களின் பட்டியல் மிக நீளமானது.

கிராண்ட் டஃப், டாவிட் மெக்ஐவர், டாக்டர். மீஸ், டங்கன் கிரீன்லீஸ், மிஸ் மெர்ஸ்டன், திருமதி. ரோடா மெக்ஐவர், திருமதி. எப். தலையார்கான், ராணி பிரபாவதி ராஜே, ராணி பத்மாவதி தேவி, சுஜாதா சென், அரவிந்த் போஸ், திலீப் குமார் ராய், ஹரீந்திரநாத் சட்டோபாத்யாயா, கும்பகோணம் ரெங்கஸ்வாமி ஐயங்கார், வாசுதேவ சாஸ்திரி, ராஜு சாஸ்திரி, கபாலி சாஸ்திரி, ரமணபாதானந்தா, மாதவ சுவாமி, கிருஷ்ணசுவாமி, குமார சுவாமி, ரெங்கசாமி, வடிவுடையார் சுவாமி, சந்தானம் ஐயங்கார், 'ஹால்' நடேச ஐயர், 'பார்பர்' நடேசன், 'பறையன்' வீரன், போளூர் ரங்கா ராவ், கோபால ராவ், சேசு ஐயர், என்.என். ராஜன், கிர்தலூர் சுப்பா ராவ், கிர்தலூர் சத்தியநாராயண ராவ், கிர்தலூர் சாம்பசிவ ராவ், ஜி.எல்.நரசிம்மராவ், சுவாமி ராஜேஸ்வரானந்தா, டாக்டர் டி.எம்.பி. மகாதேவன், பேராசிரியர் கே. சுவாமிநாதன், பி.வி. சோமசுந்தரம், சாது ஓம், டாக்டர் எஸ்.நாத், மிருணாளினி சாராபாய், டாக்டர் எஸ். ஸ்ரீநிவாச ராவ், குடிபட்டி வெங்கடாசலம், சோரிஸ், டாக்டர் கே. சுப்ரமணியம் மற்றும் பலர்.

சமீப காலத்தில் வாழ்ந்த சிறந்த பக்தை ஸ்ரீமதி கனகம்மாள். ஸ்ரீ பகவானின் ஜெயந்தி நாளில், ஜனவரி 1, 2010 அன்று பகவானின் ஸமாதி கோயில் வடக்கு வாசல் வழியாக உள்ளே நுழைந்த அவர், பகவானின் ஸந்நிதியிலேயே தனது சரீரத்தை விட்டார். எனக்குத் தெரிந்து, பகவானின் திவ்ய ஸந்நிதியில், அருணாசலத்தோடு ஐக்கியமாகும் அனுக்ரஹம் வேறு யாருக்கும் கிடைக்கவில்லை.

இந்தப் புத்தகத்தில் எழுத்தில் கொண்டு வராவிட்டாலும் என்னை அனுக்ரஹித்த அணுக்கத் தொண்டர்கள் அனைவருக்கும் என் ஹ்ருதயத்திலிருந்து ஆழ்ந்த நன்றியைத் தெரிவிக்கிறேன்.

பகவான் அருளால், பின்னர் வர இருக்கும் தொகுதியில் அவர்களைப் பற்றி எழுத என்னை அனுக்ரஹிப்பார்கள் என்று நம்புகிறேன்.

**ரமணார்ப்பணமஸ்து**







ஸ்ரீ பகவானின் ஆசிகள்




கணேசன் மற்றும் ரமண மஹர்ஷி

1936-ஆம் ஆண்டு பிறந்த கணேசன், தனது 14 வயது வரை அவரது பெரிய தாத்தாவான பகவான் ஸ்ரீ ரமண மஹர்ஷியின் ஸாந்நித்யத்தில், அவருடைய ஸந்நிதியிலேயே வளரும் பெரும்பேறு பெற்றவர். பகவானின் திவ்ய நினைவால் நிறைந்திருந்தார். அந்த இளம் வயதிலேயே அவரால், ஸ்ரீ ரமணரை காருண்ய ரூபமாக பார்க்க முடிந்தது. 1950, ஏப்ரல் 14 அன்று, பகவான் படுத்திருந்த நிர்வாணஅறை வாசலில் கணேசன் நின்றிருந்தார். பகவான் சரீரத்தை உகுத்த அன்று, பிரகாசமான ஒளி தெய்வீக மலை அருணாசலத்தின் உச்சியை நோக்கி நகர்ந்த அற்புதக் காட்சியைக் காணும் அனுக்ரஹம் அவருக்குக் கிடைத்தது.

தத்துவப்பாடத்தில் முதுகலைப் பட்டம் பெற்ற கணேசன், எல்லாவற்றையும் துறந்து ஸ்ரீ ரமணாச்ரமம் வந்தடைந்தார். பகவானின் மூத்த பக்தர்களை (அணுக்கத் தொண்டர்களை) கவனித்துக்கொள்வதை தனது அத்யாத்ம ஸாதனையாகக் கொண்டார். அதனால், அந்த அணுக்கத் தொண்டர்களிடமிருந்து இதுவரை பதிவு செய்யப்படாத பகவானின் நினைவுகளை அவரால் சேகரிக்க முடிந்தது.

ஜே. கிருஷ்ணமூர்த்தி, நிஸர்க்கதத்த மஹராஜ் மற்றும் யோகி ராம்சூரத்குமார் போன்ற பல மஹாத்மாக்களுடன் அவர் மிக அணுக்கமாக இருந்தார். அவர்களது இணக்கத்தால், பகவான் உபதேசத்தின் சாரம் மற்றும் தத்துவத்தைப் பற்றிய அவரது புரிதல் மேலும் ஆழ்ந்து அகன்று விரிந்தது. இருப்பினும், அவர் பகவான் ரமணரின் சரணங்களில் தன்னை சிறு தூசியாகவே நினைக்கிறார்.

முப்பத்தைந்து ஆண்டுகளாக, ஸ்ரீ ரமணாச்ரமத்தின் மேலாளராக இருந்த கணேசன், ஆச்ரம பத்திரிகையின் (மவுண்டன் பாத்) நிர்வாக ஆசிரியராகவும் இருந்தார்; மேலும் ஆறு ஆண்டுகள் (1994 வரை), அதன் தலைமை ஆசிரியராகவும் இருந்தார்.

கிடைப்பதற்கு அரிய இந்த அனுபவங்கள், அணுக்கத் தொண்டர்களுக்கு பகவானிடம் இருந்த தெய்வீக உறவை, நம் கண் முன் கொண்டு வரும் இந்த ரமண பெரிய புராணம் என்னும் புத்தகத்தை எழுதும், விசேஷ சக்தியை அவருக்கு அனுக்ரஹித்துள்ளது. கணேசன், ஏற்கனவே "Be the Self, Moments Remembered, Purushottamma Ramana, The Direct teaching of Bhagavan Ramana, Drops from the Ocean,"ஆகிய புத்தகங்களை எழுதியுள்ளார்.


ஸ்ரீ பகவானின் தாமரை பாதம்

